**Reprint 15-9-1937.**

ஸ்ரீ:

# முகவுரை.



ஐந்தாவது வேதமென்று சிறப்பித்துக் கூறப்படுகிற ஸ்ரீ மஹாபாரதத்தில் ஐந்தாவது பர்வமாகிய உத்தியோகபர்வம், ஸ்ரீ கண்ணபிரானுடைய திருவருளால், பூர்த்தியாகி வெளிவந்ததைப் பெருமகிழ்ச்சியுடன் மகாபாரதாபிமானிகளுக்குத் தெரிவிக்கிறேன். இதில், அவர்களுக்கு என்னிலும் பலமடங்கு அதிகமான மகிழ்ச்சி உண்டாகுமென்பது நிச்சயம். 'ஸ்ரீ மஹாபாரதத்தால் தூதுபோனவன் ஏற்றம் சொல்லுகிறது' என்று பூர்வாசாரியர்கள் சொல்லுதற்கேற்ப, அவனுடைய அரியதிருவிளையாடல்களை மிகுதியும் நிரம்பித் தனிச்சிறப்பு வாய்ந்தது இந்த உத்தியோகபர்வம். எல்லாவற்றையும் தன் வசத்திலுடையவனும் ஸர்வேஶ்வரனும் ஆதியந்தமற்றவனும் ஸ்வதந்திரனுமானபகவான் தான் அடியார்களுக்குவசப்பட்டவனென்பதைத் தூதுசென்றும் அனுஷ்டித்துக் காட்டியது இந்தப் பர்வத்திலேதான். 'ஸ்ரீ மஹாபாரதமாகிய மரத்திற்கு விராடபர்வமும் உத்யோகபர்வமும் ஸாரம்' என்று ஸௌதபுராணிகரே கூறியிருந்ததலால், இந்தப் பர்வத்தின் சிறப்புக் கூறவேண்டாவன்றோ?

இந்தப் பர்வத்தில் பல அரியவிஷயங்கள் அடங்கியுள்ளன. இந்திரவிஜயமென்னும் விருத்ரவதம், விதுரப்ரஜாகரம், ஸநத்ஸுஜாதீயம், கிருஷ்ணன்தூது, தம்போத்பவன் கதை, மாதலி தன்பெண்ணுக்கு வரன்தேடியது, மாதவியின்கதை, விதுலோபாக்கியானம், அம்போபாக்கியானமுதலிய பல கதைகள் படிப்பவர்மனத்தைக் கவரும் தன்மையன. இந்தப் பர்வத்திலடங்கிய விஷயங்களின் சுருக்கத்தை ஆதிபர்வத்திலுள்ள ஸௌதபாரதமென்னும் பர்வஸங்கிரக அத்யாயத்தில் காண்க.

சென்னை மயிலாப்பூர் ஸம்ஸ்கிருத காலேஜ் பிரின்ஸிபல், வேதாந்த விபூஷணம், மஹோபதேசகர், சாஸ்திர ரத்நாகரம், *மஹாமஹோபாத்யாய, ப்ரம்மஸ்ரீ, கருங்குளம் கிருஷ்ணசாஸ்திரிகளவர்கள், சாந்திபர்வ மோக்ஷதர்மத்தை மொழிபெயர்த்து உதவியது

* இது இப்பால் அளிக்கப்பட்டது.

போலவே இந்த உத்தியோகபர்வத்தையும் மொழிபெயர்த்து உதவினார்கள். வேதாந்த விஷயங்களும் தர்மங்களும் நீதிகளும் நிரம்பியவையும் மிக்க கடினமுமான பாகங்களே இவர்களால் மொழிபெயர்க்கப்பட்டன. இவைகளை மொழிபெயர்ப்பதில் இவர்களுடைய புத்திக்கு மிக்க ச்ரமமுண்டாயிருக்கவேண்டும். ஆனாலும், இவர்களுடைய ஞானமும் சாஸ்திர பரிச்ரமமும் உலகுள்ள அளவும் நின்று பயன் அளிக்கும்படி இந்தப் பர்வங்கள் பூர்த்தியாகிப் புஸ்தகரூபமாக வெளிவந்ததில் இவர்களுக்குப் பரம திருப்தியுண்டாகுமென்பது நிச்சயம். தாம் ஒப்புக்கொண்ட பாகத்தைப் பரம திருப்தியோடு ஒழுங்காகச் செய்துகொடுத்த இந்தப் பெரியார்விஷயத்தில் நானும் தமிழுலகமும் என்றும் நன்றிபாராட்டும் கடப்பாடுடையோம்.

சில வருஷங்களுக்குமுன், நான் கும்பகோணம் காலேஜ் வேலையிலிருந்து பென்ஷன்பெற்றுக்கொண்டு விலகியவுடன், ஸ்ரீ மஹாபாரத கைங்கர்யத்தை விரைவில்பூர்த்திசெய்யும்விருப்பத்தோடு சில காலம் சென்னையில் வந்து வஸித்ததும், பிறகு, சொந்த ஊராகிய மணலூருக்குப் போய் வஸித்ததும் நான் அப்போதப்போது வெளியிட்டிருக்கிற பிரகடனபத்திரிகைகளாலும் முன்வெளிவந்த பர்வங்களின் முகவுரைகளாலும் நன்கு விளங்கும். நான் மணலூரில்போய் வஸித்த நாலரைவருஷங்களில் அந்தியபஞ்சகமென்னும் ஐந்து சிறு பர்வங்களடங்கிய மூன்றரை ஸஞ்சிகைகள்கொண்ட ஒரு புஸ்தகமே வெளிவந்தது. அவ்வூர் இப்பொழுதிருக்கும் நிலைமை, அங்கு வஸித்தால் இந்த நற்காரியம் இனிது நடைபெறுமோ, அல்லது, நின்றேபோகுமோஎன்று கவலைப்படும்படியிருந்தது. பல வருஷங்களாக ஸஞ்சிகைகள் காலத்தில் வெளிவராமல் செலவுமாத்திரம் நடந்துகொண்டேவந்தமையால், ச்ரமம் அதிகரித்தது. ஆனாலும், நான் செய்கிற இந்தக்காரியம் கடவுள் திருவுளத்திற்கு உவப்பாயிருக்குமானால், 'அவன் எப்படியும் நிறைவேறச்செய்வான்' என்ற எண்ணம் மனத்தில் உறுதியாயிருந்தது. மேற்கொண்ட நற்காரியத்தை எப்படியாவது பூர்த்திசெய்யவேண்டுமென்னும் விருப்பம் மிகுதியாயிருந்ததே அல்லாமல் அதற்கு வேண்டிய வழி ஒன்றும் தோன்றவில்லை. இதற்குமுன் வெளிவந்த பர்வங்கள் வெளிவருதற்கு உதவிசெய்த பரமோபகாரிகளையே திரும்பவும் உதவிசெய்யும்படி கேட்பதற்கு மனம் துணியவில்லை. இந்த நிலைமையில், திரும்பச் சென்னைக்கே வருகிறதென்று நிச்சயித்து இங்கே வந்துவிட்டேன். இங்குவந்து சில வாரங்களும் சென்றன. 'பாண்டவர்

ஸகாயனான ஸ்ரீபார்த்தஸாரதிப்பெருமான், 'இந்த மஹாபாரத கைங்கர்யம் தன் ஸந்நிதியில் பூர்த்தியாகவேண்டும்' என்று திருவுள்ளமாகி இங்கே வருவித்துக்கொண்டான்போலும்' என்று அவனுடைய திருவடிகளையே தியானித்துக்கொண்டிருந்தேன்.

இப்படியிருக்கையில், ஸ்ரீமஹாபாரத கைங்கர்யத்தைப் பூர்த்தி செய்விப்பதில் மிக்க ஊக்கமுள்ளவர்களும் இப்பொழுது பரோடா ஸம்ஸ்தானத்தில் திவானாக இருப்பவர்களுமான ஸ்ரீமான், ராவ் பகதூர், * Sir V. T. கிருஷ்ணமாசாரியர். K. C. I. E. அவர்கள், நான் வேலையை நடத்த இயலாமல் தளர்ச்சியடைந்திருக்கிறேன் என்பதைக் குறிப்பால் அறிந்து, இதனை நடத்துதற்கு வேண்டும் உதவி விஷயமாக எனக்குச் சில லிகிதங்கள் எழுதினார்கள். அவற்றுள் முக்கியமான சில லிகிதங்களை ஸ்ரீமஹாபாரத ஸம்பந்தமாக நான் பதிப்பித்திருக்கிற அபிப்பிராய பத்திரிகைகளில் தெரிவித்திருக்கிறேன். அந்த லிகிதங்களால் இப்பெருந்தகையாளருக்கு ஸ்ரீமஹாபாரத கைங்கர்யத்தைப் பூர்த்தி செய்விப்பதிலுள்ள ஊக்கம் நன்கு விளங்கும். 1923-ம் வருஷத்தில் நான் இந்தக் கைங்கர்யத்தை நடத்த இயலாமல் தளர்ச்சியுற்று இதனை நிறுத்திவிட நிச்சயித்தபொழுது, இவர்கள் எனக்குத் தைரியம் சொல்லி ஊக்கமளித்து அதுமுதல் தொடர்ச்சியாக ஆதரித்து வருகிறார்கள். கலியின் ஆட்சிமிக்கு நல்லது கெட்டது பாகுபாடறியாமல் உலகம் தலைதடுமாறி நிற்கும் இந்தக் கொடிய காலத்தில், இப்படித் தாமே முன்வந்து விசாரித்து வேண்டிய உதவிகளைப்புரிந்து ஆதரித்துவருகிற இந்த மஹா புருஷர்களுடைய பெருந்தகைமையை நான் என்னவென்று பாராட்டுவேன்! இவர்கள் ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய பெருமையையே உள்ளீடாகக்கொண்ட ஸ்ரீமஹாபாரதகைங்கர்யத்தை உண்மையாக ஆதரித்துவருகிற பெரும்புண்யமே, ஸ்ரீகண்ணபிரானுடைய ராஜதானியான துவாரகையைத் தன்னகத்துக்கொண்ட பரோடாஸம்ஸ்தானத்தின் மந்திரிஸ்தானத்தை இவர்களுக்கு அளித்ததென்பது உண்மையேயாகும்; புனைந்துரையாகாது. அடியார்களுக்கு அருள்சுரப்பவனான ஸ்ரீகண்ணபிரான் இந்தப்பரமோபகாரிகளுக்கு எல்லாநன்மைகளையும் மேன்மேலும் பொழிந்தருளுக.

இன்னும் இந்த மஹாபாரத விஷயமாக ஆதரித்துவருபவர்களான ஸ்ரீமான், ராவ்ஸாகிப் Sir, M.C.T.முத்தையசெட்டியாரவர்கள் முதலான மஹோபகாரிகளின் பேருதவிகளை முன்வெளிவந்த பர்வங்

* இது இப்பால் அளிக்கப்பட்டது.

களின் முகவுரைகளில் அப்போதப்போது தெரிவித்திருக்கிறேன். வனபர்வமும் வெளிவந்து ஸ்ரீமஹாபாரதமும் பூர்த்தியாகும்போது எழுதும் முகவுரையில் எல்லாவற்றையும் சேர்த்து விவரமாகத் தெரிவித்துக்கொள்வேன்.

ஸ்ரீமஹாபாரதத்தில் மிக முக்கியமானதும் அற்புதமான அனேக கிளைக்கதைகளையுடையதுமான ஆரண்யபர்வம் தொடங்கப்பெற்று வேலைநடந்துவருகிறது. இது வரையில் அது பெரும்பாலும் வெளிவந்திருக்கவேண்டும். நான் இவ்வூருக்கு வந்தவுடன் சிலநாள் மஹாபாரதவேலை நடைபெறுமலிருந்தபொழுது, பல வருஷங்களுக்குமுன் ஸித்தம் செய்து வைத்திருந்ததும் பல ஆப்தர்கள் பலவருஷங்களாக விரும்பிக் கேட்டுக்கொண்டிருந்ததுமான ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்ய மொழிபெயர்ப்பைப் பதிப்பிக்கத் தொடங்கினேன். இது தொடங்கிய சில நாள்களுக்குள், ஸ்ரீமஹாபாரத வேலையை நடத்துதற்கு வேண்டும் ஸௌகர்யத்தை அமைத்துக்கொடுத்திருப்பதாக ஸ்ரீமான், Sir, V. T. கிருஷ்ணமாசாரியார் K. C. I. E. அவர்களிடமிருந்து நற்செய்தி கிடைத்தது. அப்பொழுது எனக்கு உண்டான மகிழ்ச்சியை என்னவென்று கூறுவேன்! அசோக வனத்திலிருந்த பிராட்டி, பெருமாளுடைய மோதிரத்தைக் கண்டபோது அடைந்த தன்மையை அடைந்தேன். தக்க காலத்தில் இப்பேருதவி கிடைத்ததை, ஸ்ரீகண்ணபிரான் நேரிலிருந்து கேட்டருளிய விஷ்ணுஸஹஸ்ர நாம ஆராய்ச்சியின் பயனென்றே நினைத்து அவனுடைய திருவடிகளைத் தியானம்செய்துகொண்டு ஸ்ரீமஹாபாரத வேலையையும் தொடங்கிவிட்டேன். தொடங்கிய வேலையை நிறுத்தக் கூடாமையால், ஸ்ரீமஹாபாரத வேலையோடு, ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ரநாமபாஷ்யப் பதிப்பையும் சேர்த்து நடத்திவந்ததால் ஆரண்ய பர்வஸஞ்சிகை எதிர்பார்த்தகாலத்தில் வெளிவராமல் சிறிது தாமதித்து வெளிவந்தது. இப்பொழுது உத்யோகபர்வமும் ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ரநாமபாஷ்யமும் பூர்த்தியாகிவிட்டமையாலும், ஆரண்ய பர்வம் ஒன்றே நடக்கிறபடியாலும், ஆரண்யபர்வம் சில மாதங்களில் பூர்த்தியாகுமென்று உறுதியாக நம்புகிறேன்; எல்லாம் வல்ல ஸர்வேஶ்வரனுடைய பரமகிருபையாலும் பெரியோர்களுடைய பரமானுக்ரகத்தாலும் விரைவில் பூர்த்தியாகவேண்டும்.

ஆருடம் சொல்லுவதில் மிக்கபிரஸித்திபெற்றிருந்த கும்பகோணம்தாலுகா வலங்கைமான் கோவிந்தசெட்டியாரைப் பலரும் அறிவார். அவருடைய திறமையைக்கேட்டு ஐரோப்பா அமெரிக்காமுத

ளிய இடங்களிலிருந்தும் பலர் அவரைப் பார்க்க வந்ததுண்டு. அவர் ஒருஸமயம் என்னிடம் வந்திருந்தபோது, 'ஸ்ரீமஹாபாரதவேலை பூர்த்தியாகுங்கால், சிலநிகழ்ச்சிகள் உண்டாகும்' என்று ஒரு காகிதத்தில் எழுதி என்னிடம் கொடுத்திருக்கிறார். அதில் எழுதியிருப்பது, அவருக்கும் எனக்கும் ஸர்வஸாக்ஷியான கடவுளுக்குமே தெரியும். அதனை, அவருக்கு எதிரிலேயே ஒரு காகிதஉறையில்வைத்து அரக்குமுத்திரையிட்டு ஜாக்ரதையாக வைத்திருக்கிறேன். அந்தக் காகிதஉறையில் அரக்குமுத்திரைவைத்தவர், என்னுடன் பலவருஷங்களாகக் கூடவே இருப்பவரும் இந்த ஸ்ரீமஹாபாரதப்பதிப்புவேலையில் எனக்குப் பல உதவியையும் செய்துவருபவரும் இப்பொழுது மயிலாப்பூர் ராமகிருஷ்ண ரெஸிடென்ஷியல்ஹைஸ்கூலில் தமிழ்ப் பண்டிதராயிருப்பவருமான மகா-ள-ள-ஸ்ரீ C. N. துரைசாமி ஐயரவர்கள். இப்படி ஒரு காகிதம் வைக்கப்பட்டிருக்கிறதென்பது, எனக்குப் பரமஆப்தர்களும் இந்த மஹாபாரதம் பூர்த்தியாகிப் பார்ப்பதில் மிக்க ஆவல்கொண்டு அதற்காக எப்பொழுதும் *கடவுளை ப்ரார்த்தித்துக்கொண்டுவருபவர்களும் ஸதாசாரஸம்பன்னர்களும் ஸத்தர்ம பரிபாலகர்களுமான ப்ரம்மஸ்ரீ Prof K. சுந்தரராமஐயரவர்களுக்கும், அவர்களுக்கும் எனக்கும் மிக்க நண்பர்களான குடவாயில் ஸ்ரீமான், V. ரங்கசாமி ஐயங்கார் அவர்களுக்கும் தெரியும். இந்த மஹாபாரதப்பதிப்புவேலை முற்றுப்பெறுமோ பெறாதோ என்று எனக்கே ஸந்தேகமாயிருந்தமையால், இதைப்பற்றிமுன்னமே வெளியிடாமலிருந்தேன். இப்பொழுது, கடவுளருளால் பூர்த்தியாகுமென்று நம்பிக்கையுண்டானமையால், இந்த விஷயத்தை வெளியிடத் துணிந்தேன். ஆரண்யபர்வம் பூர்த்தி

* இவர்கள் இதுவிஷயமாகப் பலலிகிதங்கள் எனக்கு எழுதியிருக்கிறார்கள். இப்பொழுது, சிலநாள்முன் எழுதிய ஒருலிகிதத்தில், 'வனபர்வம் மாதம் ஒன்றுக்கு ஒரு ஸஞ்சிகையாவது வெளிவரும்படி அருள் செய்ய வேண்டுமென்று தினமும் த்ரிகாலங்களிலும் என்னால் செய்யப்படும் ஜபமானது முடிந்தவுடன், ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்மமூர்த்தியை ப்ரார்த்தித்து வருகிறேன்' என்று எழுதியிருக்கிறார்கள். இவர்கள், ஒரு ஸமயம், சரீர ஆரோக்கியமில்லாமல் படுத்துக்கொண்டிருந்தபொழுது, இவர்களோடு நெருங்கிப் பழகுபவர்களான ஒரு நண்பரிடம், 'ஸ்ரீமஹாபாரதம் பூர்த்தியாகிப் பார்க்கவேண்டுமென்னும் விருப்பம் மிகுதியாயிருக்கிறது' என்று சொன்னார்களாம். இவைகளால், இவர்களுக்கு இந்தமஹாபாரதவிஷயத்திலிருக்கிற மிக்க ஆவல் நன்குவிளங்கும். இவர்கள் செய்துவருகிற பொருளுதவி மிகஅதிகம். அதனைப் பின்னர் விவரமாகத் தெரிவிப்பேன்.

யாகும்போது, அந்தக்கடிதத்தை ஆப்தர்கள் பலர்முன்னிலையில் திறந்து அதிலுள்ள விஷயத்தை அந்தப்பர்வத்தின் முகவுரையில் வெளியிடுவேன். மஹாபாரதாபிமானிகள் பலருக்கும் அந்தக்கடிதத்தி லுள்ள விஷயத்தைத் தெரிந்துகொள்ளுதலில் மிக்க விருப்பமுண்டாகு மென்பது நிச்சயம். எல்லாம்வல்ல கடவுள், அவர்களுடைய விருப் பத்தை நிறைவேற்றி அருள்க.

நன்கொடையளித்தும், கையொப்பஞ்செய்தும், கையொப்பங்கள் சேர்த்துக்கொடுத்தும், இந்த அரிய பெரிய நற்காரியத்தை இதுவரை யில் ஆதரித்துவருகிற ஆப்தர்கள், தயைகூர்ந்து, மற்றப்பகுதியும் விரைவில் பூர்த்தியாகும்வண்ணம் தம்மாலியன்ற உதவிகளைச்செய்து ஆதரிக்கவேண்டுமென்று அவர்களை நிரம்பப் பிரார்த்திக்கிறேன். லோகோபகாரமான இந்த ஸத்காரியத்தை எல்லாம்வல்ல ஸர்வேச் வரன், பரமக்ருபையால், இனிது நிறைவேற்றியருளவேண்டும்.

மயிலாப்பூர், சென்னை.
10-12-1928

இங்ஙனம்,
ம. வீ. இராமானுஜாசார்யன்.

---

ஸ்ரீ:

# விஷயஸூசிகை.



## ஸ்ரீமஹாபாரதம்

## உத்யோகபர்வம்.

அத்யாயம். பக்கம்.

ஸேநோத்யோகபர்வம்.

அத்யாயம். பக்கம்

அத்யாயம். பக்கம்.

அத்யாயம். பக்கம்.

அத்யாயம். பக்கம்.

அத்யாயம். பக்கம்.



## பகவத்யான பர்வம்

அத்யாயம். பக்கம்.

அத்யாயம். பக்கம்.

அத்யாயம். பக்கம்.

## ஸைந்யநிர்யாணபர்வம்

|த்யாயம். பக்கம்.

உலூகதூதாகமனபர்வம்



ரதாதிரதஸங்கியானபர்வம்



அம்போபாக்யானபர்வம்

உத்தியோக பர்வ விஷயஸூசிகை முற்றிற்று.



ஸ்ரீ:

ஸ்ரீக்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம: ||

ஸ்ரீக்ருஷ்ணத்வைபாயனாய நம: ||

# ஸ்ரீ மஹாபாரதம்.

## உத்யோக பர்வம்.

### முதலாவது அத்யாயம்.

### ஸேநோத்யோகபர்வம்.

[1] நாராயணம் நமஸ்க்ருத்ய நரஞ்சைவ நரோத்தமம் |
தேவீம் ஸரஸ்வதீம் வ்யாஸம் ததோ ஜயமுதீரயேத் ||

**(அரசர்கள் விராட ஸபையில் வந்ததும், வாஸுதேவர் பாண்டவர் வரலாறு கூறித் திருதராஷ்டிரனுக்குத் தூது அனுப்ப நிச்சயித்ததும்.)**

வைசம்பாயனர், ஜனமேஜயரை நோக்கிச் சொல்லலானார். "அப்பொழுது, கௌரவர்களிற் சிறந்த வீரர்களான பாண்டவர்கள், தங்களைச் சேர்ந்தவர்களுடன் அபிமன்யுவுக்கு விவாஹத்தை நடத்தி விட்டு மகிழ்ச்சியுற்று ராத்ரியில் இளைப்பாறி விடியற்காலத்தில் விழித்துக்கொண்டு, பிறகு, விராடராஜனுடைய ஸபையைக்குறித்துச் சென்றார்கள். மத்ஸ்ய தேசாதிபதியினுடைய அந்த ஸபையோ, எல்லா வளங்களும் நிரம்பியதும், சிறந்த மணிகளாலும் உத்தம ரத்நங்களாலும் பல நிறங்கள் கொண்டதும், ஆஸனங்கள் போடப்பட்டதும், நன் மணம் கமழ்வதுமாயிருந்தது. அரசர்களிற் சிறந்தவர்களான அவர்கள் அந்த ஸபையை அடைந்தனர். பிறகு, முன்னதாக, முதியவர்களும் அரசர்களாலே வெகுமானிக்கத் தக்கவர்களுமான விராடன் த்ருபதன் என்

1 இதன் உரை விசேஷங்களை ஆதிபர்வம் முதற்பக்கம் குறிப்பிற் காண்க.

கிற இரண்டு அரசர்களும், (வஸுதேவரென்கிறதங்கள்) பிதாவுடன் பலராம கிருஷ்ணர்களும் ஆஸனங்களில் உட்கார்ந்தார்கள். பாஞ்சால தேசாதிபதியான த்ருபதனுடைய ஸமீபத்தில் சினிகளில் உத்தமவீரனை ஸாத்யகியும் பலராமனும் இருந்தார்கள். விராடனுடைய ஸமீபத்திலோ கிருஷ்ணனும் யுதிஷ்டிரரும் மிகவும் நெருங்கியிருந்தார்கள். த்ருபதராஜனுடைய புத்ரர்களெல்லோரும் பீமார்ஜுனர்களும் நகுல ஸஹதேவர்களும் யுத்தத்தில் மிகவும் வீரர்களான ப்ரத்யும்னன் ஸாம்பன் இருவர்களும் அபிமன்யுவும், எல்லாரும் சூரர்களும் பராக்ரமத்தினாலும் ரூபத்தினாலும் பலத்தினாலும் (தங்கள்) தந்தைகளுக்குச்சமானர்களுமான த்ரௌபதியின் குமாரர்களும் விராடனுடைய புத்ரர்களுடன் கூட ஸ்வர்ணகசிதமான சிறந்த ஆஸனங்களில்உட்கார்ந்தார்கள். ஆடைகளாலும் ஆபரணங்களாலும் விளங்குகின்ற அந்தமஹாரதர்கள் அவ்விதம் உட்கார்ந்தபொழுது, சிறந்தஅரசர்கள் நிறைந்த அந்தஸபையானது நிர்மலமான க்ரஹங்களோடு கூடின ஆகாயம்போல விளங்கிற்று. அதன் பிறகு, புருஷர்களிற் சிறந்த வீரர்களான அந்த அரசர்கள், கூட்டமாகச்சேர்ந்து பல பேச்சுக்களைப் பேசி, ஒரு முகூர்த்த காலம் பரியாலோசனை செய்கிறவர்களும் கிருஷ்ணனை நிமிர்ந்து பார்க்கிறவர்களுமாயிருந்தார்கள். பேச்சுக்கள் முடிந்து கிருஷ்ணனால் பாண்டவர்களின் காரிய நிமித்தம் தூண்டப்பட்ட அந்தச் சிறந்த அரசர்கள் ஒன்று சேர்ந்து ஸாரமான அர்த்தமுள்ளதும் மிகவும் சிறந்த பயனுள்ளதுமான கிருஷ்ணனுடைய வார்த்தையைக் கேட்டார்கள். வாஸுதேவர், (அவர்களைநோக்கி,) "இந்த யுதிஷ்டிரர் சகுனியால் சூதாட்டத்தில் வஞ்சனையாக ஜயிக்கப்பட்டதும், ராஜ்யமும் அபகரிக்கப்பட்டதும், வனவாஸ விஷயத்தில் ப்ரதிஜ்ஞை செய்யப்பட்டதும், பூமிமுழுமையும் நொடிப்பொழுதில் வெல்ல வல்லவர்களாயிருந்தும் ஸத்தியத்திலிருந்து ஸத்தியத்தை ரதமாகக் கொண்டு சிறப்புற்றவர்களான பாண்டுவின் புத்ரர்கள் பதின்மூன்று வருஷங்கள் மிகவும் கடுமையான அந்த விரதத்தை உள்ளபடி அனுஷ்டித்ததும், மிகவும் தாண்டமுடியாததான இந்தப் பதின்மூன்றாவது வருஷத்தை உங்களுடைய ஸமீபத்தில் (ஒருவராலும்) அறியப்படாமல் ஸகிக்கமுடியாத பலவித துன்பங்களை ஸகித்துக் கொண்டு செலுத்தியதும், மஹாத்மாக்களாயிருந்தும் இவர்கள் தங்கள் குலக்ரமமாக வந்த ராஜ்யத்தை விரும்பிப் பிறருக்கு அடிமைப்பட்டவர்களுக்குரிய ஏவல்களுடன் வனத்திற் புகுந்ததும் உங்களெல்லோருக்கும் தெரிந்தவிஷயமே. இப்படியிருக்க, தர்மபுத்திரருக்கும் அரசனை

துர்யோதனனுக்கும் எது ஹிதமாகவும் கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் உசிதமும் புகழைத்தருவதும் தர்மத்திலிருந்துவிலகாததுமாகுமோ அதனை ஆலோசியுங்கள். தர்மராஜரானவர் தேவராஜ்யமாயிருந்தாலும் அதர்மத்துடன் கூடினதை விரும்பமாட்டார். இவர் ஒரே கிராமத்திலானாலும் தர்மார்த்தங்களுடன்கூடின ராஜத்தன்மையை அடைய விரும்புவார். திருதராஷ்டிரபுத்ரர்கள், இவருடைய பிதாவின் ராஜ்யத்தைப் 1பொய்யான உபசாரத்தால் எவ்விதம் கவர்ந்து கொண்டார்களென்பதும், இவர்கள் மிகவும் ஸகிக்கமுடியாத பெரிதான கஷ்டத்தை எவ்விதம் அடைந்தாரென்பதும் அரசர்கள் அறிந்தவைகளே. த்ருதராஷ்டிரரின் புத்ரர்களானஅவர்கள் குந்திபுத்ரரைத் தங்கள்வலிமையினால் யுத்தத்தில் ஜயிக்கவுமில்லை. ஆனாலும், தர்மராஜர் நண்பர்களுடன்கூடி அவர்களுக்கு க்ஷேமத்தையே விரும்புகிறார். புருஷர்களில் மிகவும் வீரர்களும் குந்தீபுத்ரர்களும் மாத்ரியின் புத்ரர்களுமான பாண்டவர்கள், அரசர்களை வருத்தி வென்று தங்களாலேயே ஸம்பாதிக்கப்பட்டது எதுவோ அதையே அபேக்ஷிக்கின்றார்கள். பலத்துடன்கூடினவர்களும் ராஜ்யத்தைக் கவர்ந்துகொள்ள விருப்பமுடையவர்களும் அஸத்துக்களும் கொடியவர்களுமான அந்தப் பகைவர்கூட்டங்கள் இவர்களைப் பலவிதமான உபாயங்களாலே கொல்லுவதற்கு மிகவும்விருப்பங்கொண்டன; உங்களுக்கு அவையெல்லாம் உள்ளபடி தெரியும். அவர்களுடைய அதிகமான லோபத்தையும் யுதிஷ்டிரருடைய தர்மபுத்தியையும் நன்றாக ஆலோசித்து அவர்களுடைய உறவின்முறையையும் ஆலோசித்து, சேர்ந்தும் தனித்தும் உறுதியைச் செய்யுங்கள். எப்பொழுதுமே ஸத்யத்தில் பற்றுள்ளவர்களான இவர்களோ, அப்படிப்பட்ட பந்தயத்தை ஏற்பட்டபடி காப்பாற்றியபின்னும் திருதராஷ்டிர புத்ரர்களாலே பாதிராஜ்யத்தைக் கொடுப்பதைவிட்டு வேறுவிதமாக உபசரிக்கப்படுவார்களேயானால், கூட்டமாகக்கூடின அவர்களைக் கொல்லுவார்கள். பாதிராஜ்யம் கொடுப்பதினிமித்தம் அவர்களால் செய்யப்பட்ட அபகாரத்தைக் கேட்டும் நட்பினர்களான ஜனங்கள் அவர்களைச்சூழ்வார்கள். அப்படியே, யுத்தத்தால் இவர்களை வருத்தப்படுத்தவும் செய்வார்கள். இவ்விதம் அவர்களால் துன்புறுத்தப்பட்ட இவர்கள் அவர்களையும் கொல்வார்கள். ஆனாலும், இவர்கள் குறைவாயிருப்பதால் அவர்களை ஜயிப்பதற்கு அசக்தர்களென்று உங்களுக்கு எண்ணம் உண்டாகவேண்டாம்.

1 ஸபாப்ரவேசத்திற்கு அழைத்தது.

எல்லாரும்சேர்ந்து நண்பர்களுடன் கூடிக்கொண்டு அவர்களைக் கொல்வதற்கு யத்தனிக்கவே செய்வார்கள். துரியோதனனுடைய எண்ணமும் என்னசெய்யப்போகிருனென்று உள்ளபடி தெரியவில்லை. பிறனுடைய அபிப்ராயம் அறியப்படாமலிருக்கையில், ஆலோசனையின் முடிவை எப்படி அடைவோம்? ஆகையால், தர்மசீலனும் சுத்தனும் நல்ல குலத்திற் பிறந்தவனும் அஜாக்ரதைபில்லாதவனும் ஸமர்த்தனுமான ஒருவன் அவர்களைச் சமாதானஞ்செய்து யுதிஷ்டிரருக்குப் பாதி ராஜ்யத்தை கொடுக்கச் செய்வதற்கு இங்கிருந்து தூதனுகப் போக வேண்டும்' என்று சொல்லினர். ஓ! அரசரே! அப்பொழுது, தர்மார்த்தங்களுடன் கூடினதும் இனியதும் பொதுவுமாயிருக்கிற கிருஷ்ணருடைய வாக்கியத்தைக்கேட்டு, உடனே, அவருக்கு மூத்தவரான பலதேவர் அந்த வார்த்தையை மிகவும் ஸ்லாகித்துவிட்டு ஒரு வார்த்தை சொல்லலானுர்.

## இரண்டாவது அத்யாயம்.

## ஸேநோத்யோகபர்வம். (தொடர்ச்சி.)

(பலராமர், கிருஷ்ணர் சொல்லியதைச் சிலாகித்துக்கூறித் தமக்குத் துரியோதனனிடம் மிக்க அன்பிருப்பதை வெளியிட்டது.)

பலதேவர், 'தர்மத்துடன்கூடியதும் அர்த்தத்துடன் கூடியதும் அஜாதசத்ருவான தர்மபுத்திரருக்கும் அப்படியே அரசனுன துர்யோதனனுக்கும் நன்மையும் உசிதமுமான கிருஷ்ணனுடைய வார்த்தையை நீங்கள் கேட்டீர்கள். வீரர்களான குந்திபுத்திரர்கள் ராஜ்யத்தின் பாதியை விட்டுவிட்டு அதனைத் திருப்பியடைய முயல்கின்ருர்கள். திருதராஷ்டிர புத்திரனும், ராஜ்யத்தின் பாதியைக் கொடுத்துவிட்டால் ஸுகியாகிய நம்மோடு மிக்க ஸந்தோஷத்தை அடைவான். புருஷர்களிற் சிறந்த வீரர்களான இந்தப் பாண்டவர்கள் ராஜ்யத்தை அடைந்து, பகைவர்களும் நல்ல வழியில் செல்லும்பொழுது, இப்பாண்டவர்கள் மிகவும் மன அமைதியுள்ளவர்களாகி உறுதியான ஸுகத்தை அடைவார்கள். அந்தத் துரியோதனுதியர்களுக்கும் மிக்கமனவமைதியும் பிரஜைகளுக்கு நன்மையும் உண்டாகும். ஆனுல், துரியோதனனுடைய கருத்தை அறிவதற்கும் யுதிஷ்டிரருடைய வார்த்தைகளைச் சொல்லுவதற்கும் கௌரவர்களையும் பாண்டவர்களையும் ஸமாதானம்

செய்வதற்கும் அவ்விடத்திற்கு ஒருவன் போவானுனல் எனக்கும் பிரியம் உண்டாகும். அப்படிப்போகிறவன், கௌரவர்களிற் சிறந்தவரான பீஷ்மரையும் மஹானுபாவனுன திருதராஷ்டிரனையும் துரோணரையும் அஸ்வத்தாமாவையும் விதுரரையும் க்ருபரையும் சகுனியையும் கர்ணனையும் கலந்து ஆலோசித்துக்கொண்டு, இவர்களும், மற்றுமுள்ள எல்லாத் திருதராஷ்டிர புத்திரர்களும், சேனையைப் பிரதானமாகவுடையவர்களும் நீதிசாஸ்திரத்தைப் பிரதானமாகவுடையவர்களும் உள்ளபடி தங்கள் தர்மங்களிலிருக்கின்றவர்களும் சாஸ்திரத்தாலும் ஒழுக்கத்தாலும் பெரியோர்களுமான உலகத்திலுள்ள வீரர்களுமாகிய இவர்களெல்லாரும் வந்து பட்டணத்திலுள்ள பெரியோர்களும் சேர்ந்திருக்கையில், குந்தீபுத்ரரான யுதிஷ்டிரருக்கு நன்மையைச் செய்யும்படி நமஸ்காரபூர்வகமாக வார்த்தையைச் சொல்லவேண்டும். எவ்வித அவஸ்தைகளிலும் அவர்களைக் கோபிக்கக்கூடாது. ஸஹாயத்தை அடைந்தவர்களான அவர்களாலே யுதிஷ்டிரருடைய அந்தச் செல்வமானது கவர்ந்துகொள்ளப்பட்டுவிட்டது. தவிரவும், இந்த யுதிஷ்டிரர் ப்ரியத்துடன் அவர்களை அடைந்து சூதாட்டத்தில் சிக்கிக்கொண்டபொழுது ராஜ்யம் அபகரிக்கப்பட்டது. கௌரவர்களிற் சிறந்தவரான இவர் சூதாட்டத்தை அறியாதவராயிருந்தும் எல்லா நண்பர்களாலும் தடுக்கப்பட்டும் சூதாடினர். அப்படி தடுத்தும் சூதாடுகிற இவர், சூதில் தேர்ச்சிபெற்ற காந்தாரராஜபுத்ரனுன சகுனியோடு எதிர்த்துச் சூதாடினர். அஜமீடவம்சத்தில் பிறந்த யுதிஷ்டிரர், கர்ணனையும் துரியோதனனையும் விட்டு, (சகுனியைச்) சூதாட அழைத்தாரல்லவா ? அந்த ஸபையில் யுதிஷ்டிரரால் ஜயிக்கப்படக் கூடிய மற்றுமுள்ள சூதாட்டக்காரர்கள் ஆயிரக்கணக்காக இருந்தும் இவர் அவர்களையெல்லாம் விட்டுவிட்டுச் சகுனியையே அழைதது அவனுல் சூதாட்டத்தில் ஜயிக்கப்பட்டார். அப்படி எதிர்த்து விளையாடுகிறபொழுது, (எல்லா ஆட்டங்களிலும்) காய்கள் தமக்கு விபரீதமாக இருந்தும் பிடிவாதமாகத் தாமே வலிய ஆடி ஜயிக்கப்பட்டார். அதில், சகுனியினிடம் ஒரு குற்றமும் இல்லை. ஆகையால், திருதராஷ்டிரரை வணங்கியே பலவிதமான ஸமாதான வார்த்தையைச் சொல்லவேண்டும். அப்படியானுலன்றோ, போகிறவனுன அந்த மனிதனுலே திருதராஷ்டிரபுத்ரன் தன் கார்யத்தில் பிரவ்ருத்திக்கச் செய்வதற்குக் கூடியவனுவான். குருவமிசத்தரசர்களுக்கு யுத்தமில்லாமலிருக்க விரும்புங்கள். துர்யோதனனை நல்வார்த்தையினுலேயே ஸமாதானம் செய்யுங்கள். இன்சொல்லினுல் ஸம்பாதிக்கப்பட்ட

பொருளானது பயனளிப்பதாகும். யுத்தத்தில் அநீதியானது ஏற்படும். இந்த யுத்தத்தில் அந்தப் பொருளும் இல்லை' என்றார். இவ்விதம் பலதேவர் சொல்லுகையில், சினிகளிற் சிறந்த வீரனான ஸாத்யகி விரைவாக எழுந்தான். அவருடைய அந்தவார்த்தையைத் தூஷித்துவிட்டுக் கோபத்துடன் பின்வரும் வார்த்தையைச் சொல்லத் தொடங்கினான்.

---

## மூன்றாவது அத்யாயம்.

## ஸேநோத்யோகபர்வம். (தொடர்ச்சி.)

(ஸாத்யகி பலராமர் சொல்லை மறுத்துத் துரியோதனனை அடக்க வேண்டுமென்றது.)

**ஸா**த்யகி, 'ஒருவனுடைய மனமானது எவ்விதமிருக்கின்றதோ அவ்விதம் அவன் செவ்வையாகப் பேசுவான். ஆகையால், உம்முடைய அந்தக்கரணமானது எவ்விதம் இருக்கிறதோ அவ்விதம் அழுத்தமாகப் பேசுகிறீர். சூரர்களான மனிதர்களும் இருக்கின்றார்கள். அப்படியே இழிந்தவர்களான மனிதர்களும் இருக்கின்றார்கள். மனிதர்கள் விஷயத்தில் பலமான இந்த இரண்டுவகைகளும் காணப்படுகின்றன. எப்படி ஒரேமரத்தில் பழமுள்ளதும் பழமில்லாததுமான கிளைகளிருக்கின்றனவோ அப்படியே ஒரே குலத்திலேயே வலிமையற்ற அலியும் மிக்க வலிமையமைந்தவனும் உண்டாகின்றார்கள். ஓ! கலப்பையை த்வஜமாகவுடையவரே! நீர் சொல்லுகிற வார்த்தையில் நான் பொறுமைப்படவில்லை. ஓ! மாதவரே! எவர்கள் உம்முடைய வார்த்தையைக் கேட்டுக்கொண்டிருக்கின்றார்களோ அவர்களிடம் அஸூயைப்படுகின்றேன். தர்மராஜரிடம் சிறிது குற்றத்தையாவது சொல்லுகிறவன் எப்படி ஸபையின்நடுவில் ஒருவரிடமிருந்தும் பயமில்லாதவனைச் சொல்வதற்குத் தக்கவனாவான்? சூதாட்டத்தில் வல்லவர்களான அவர்கள் சூதாட்டத்தை அறியாதவரும் 1 ப்ரத்தைக்குத்தக்கபடியிருப்பவரும் மஹாத்மாவுமான யுதிஷ்டிரரை வருந்தி அழைத்து ஜயித்தார்கள். அவர்களிடத்தில் தர்மமான ஜயமானது எது? ஸஹோதரர்களோடு வீட்டில் விளையாடிக்கொண்டிருக்கிற குந்தீபுத்ரரை எதிர்த்து யுத்தஞ்செய்து அவர்கள் ஜயிப்

1 'யதாப்ரத்தம்' என்பதுமூலம்; 'ப்ரத்தையில்லாமைக்குத் தக்கபடி யிருப்பவரும்' என்றும் கொள்ளலாம்.

பார்களேயானால், (அப்பொழுது) அவர்களுடைய ஜயமானது தர்மத்தால் ஏற்பட்டதாகும். எப்பொழுதும் க்ஷத்ரியனுக்குரிய தர்மத்தில் பற்றுள்ளவரான அரசரை அழைத்து அவர்கள் வஞ்சனையால் ஜயித்தார்கள். அவர்கள் செய்தது மேலான நல்லசெய்கையாமோ? இந்தவிஷயத்தில் பெரிதான பந்தயத்தைச் செய்து வனவாஸத்திலிருந்தும் விடுபட்டுப் பிதாமஹருடைய ஸ்தானத்தை அடைந்தவரான இவர் ஏன் நமஸ்கரிப்பார்? இந்த யுதிஷ்டிரர் பிறருடைய தனங்களை விரும்புகிறவராயிருந்தாலும் பிறர்களை அதிகமாக யாசிக்கிறவரில்லை. வனவாஸத்தை முடித்தவர்களான இந்தப் பாண்டவர்களை, '(முன்னமே) அறியப்பட்டு விட்டார்கள்' என்று சொல்லுகிற அவர்கள் எப்படி தர்மவான்களாவார்கள்? ஏன் ராஜ்யத்தைக் கவர்ந்துகொள்ள ஆசையுள்ளவர்களாகமாட்டார்கள்? பீஷ்மராலும் துரோணராலும் விதுரராலும் நற்புத்தி சொல்லப்பட்டும், அவர்கள் பாண்டவர்களுக்குப் பிதாவைச் சேர்ந்ததான தனத்தைக்கொடுப்பதற்கு நிச்சயிக்கவில்லையல்லவா? நான் அவர்களை யுத்தத்தில் பலத்தினால் கூர்மையான பாணங்களால் நல்வார்த்தை கூறி மஹாத்மாவான குந்தீ புத்ரருடைய பாதங்களில் விழச் செய்வேன். அல்லது, அவர்கள் புத்திமானான யுதிஷ்டிரரை வணங்குவதில் முயற்சி செய்யாமலிருப்பார்களாகில், மந்திரிகளுடன் யமனுடைய வீட்டை நோக்கிச் செல்லுவார்கள். அவர்கள் யுத்தம்செய்ய விருப்பமுள்ளவனும் கோபங்கொண்டவனுமான யுயுதானனுடைய வேகத்தை மலைகள் வஜ்ராயுதத்தின் வேகத்தைத் தாங்கமாட்டாததுபோலத் தாங்க ஸமர்த்தர்களாகார்கள். எவன்தான் காண்டீவத்தை வில்லாகவுடையவரான அர்ஜுனரையும் சக்ராயுதரான கிருஷ்ணரையும் நெருங்கமுடியாதவரான பீமஸேனரையும் கோபத்தை அடைந்தவனான என்னையும் யுத்தத்தில் ஸகிப்பான்? உயிரோடிருக்க விருப்பமுள்ளவனான எவன் உறுதியானவில்லையுடையவர்களும் யமனுக்குச் சமானர்களும் பெரிதான பராக்ரமமுடையவர்களுமான நகுல ஸஹதேவர்களையும், வீரர்களும் யமனுக்கும் காலனுக்கும் நிகரானபராக்ரமமுடையவர்களுமான விராடத்ருபதர்களையும், த்ருபதபுத்ரனான த்ருஷ்டத்யும்னனையும், த்ரௌபதிக்குக் கீர்த்தியை விருத்திசெய்கிறவர்களும் பாண்டவர்களுக்கு நிகரான வடிவமும் வீர்யமுமுடையவர்களும் மிகுந்த மதமுடையவர்களும் பாண்டவர்களின் புத்ரர்களுமான உபபாண்டவர்கள் ஐவர்களையும், தேவர்களாலும் தாங்கமுடியாதவனும் பெரியவில்லுடையவனுமான அபிமன்யுவையும், காலனுக்கும் ஸூரியனுக்கும்

அக்நிக்கும் நிகரான கதன் ப்ரத்யும்னன் ஸாம்பன் இவர்களேயும் எதிர்ப்பான்? அப்படிப்பட்ட நாங்கள் சகுனியுடன் திருதராஷ்டிர புத்ரனையும் கர்ணனையும் யுத்தத்தில் கொன்று பாண்டவருக்கு அபிஷேகம் செய்வோம். ஆததாயிகளான சத்ருக்களைக் கொன்றதனால் ஓர் அதர்மமுமில்லை. சத்ருக்களிடம் யாசிப்பது அதர்மமுடையது; இகழ்ச்சிக்கும் காரணமானது. அந்தத் துரியோதனனுடைய மனத்தில் எந்த விருப்பமிருக்கின்றதோ அதனைச் சோம்பலில்லாதவர்களாகிச் செய்யுங்கள். யுத்தமில்லாமல் திருதராஷ்டிரனுடைய மகன் ராஜ்யத்தைக் கொடுப்பதற்கு விரும்பவில்லை. இப்பொழுது, பாண்டு புத்ரரான யுதிஷ்டிரர் ராஜ்யத்தையாவது அடையவேண்டும்; அல்லது, யுத்தத்தில் எல்லாரும் கொல்லப்பட்டுப் பூதலத்தில் நித்திரையாவது செய்யவேண்டும்' என்றான்.

நான்காவது அத்யாயம்.

## ஸேநோத்யோகபர்வம். (தொடர்ச்சி.)

(த்ருபதராஜன் ஸாத்யகியின் சொல்லைப் புகழ்ந்து அரசர்களை அழைப்பதற்குத் தூதர்களை அனுப்பவும் த்ருதராஷ்டிர மஹாராஜனிடம் தன் புரோஹிதரை அனுப்பவும் நிச்சயித்தது.)

த்ருபதராஜன், அப்பொழுது ஸாத்யகியை நோக்கி, 'ஓ! புஜபலமுடையவனே! இது இவ்விதமே ஏற்படப்போகிறது; ஸந்தேகமில்லை. துரியோதனன் இனிய வார்த்தையினால் ராஜ்யத்தைக் கொடுக்கப் போகிறதில்லை. புத்ரனிடம் ப்ரியத்தினால் திருதராஷ்டிரனும், ஏழைத் தன்மையால் பீஷ்மத்ரோணர்களும், மூர்க்கத்தனத்தால் கர்ண சகுனிகளும், அவனை அனுசரிப்பார்கள். பலதேவருடைய வார்த்தையோ என்புத்திக்குப் பொருத்தமாயில்லை. நல்ல நீதியை விரும்புகிற மனிதன் முதலில் இதனையல்லவா செய்யவேண்டும்? திருதராஷ்டிர புத்ரனானவன் ஒரு விதத்தாலும் இனியவார்த்தை சொல்லத் தக்கவனில்லை. பாவபுத்தியுடைய அவன் மிருதுத்தன்மையால் ஸாதிக்கக்கூடியவனல்லனென்று நான் நினைக்கிறேன். கெட்டநினைவுள்ள துரியோதனனிடம் மிருதுவான வார்த்தையைச் சொல்லுகிறவன், கழுதையினிடம் மிருதுத்தன்மையையும் பசுக்களிடம் குரூரத்தன்மையையும் செய்பவனாவான். பாவியான துரியோதனன் இன்சொற் சொல்லுகிறவனைச்

சக்தியற்றவனாக நினைக்கிறான். புத்தியில்லாத அவன் மிருதுத்தன்மை ஏற்பட்டால் அதன் நன்மையை அறியமாட்டான். இதனையே செய்வோம். இந்தவிஷயத்தில் முயற்சிசெய்யவேண்டும். நண்பர்களுக்காக (த்தூதர்களை) அனுப்புவோம். நமக்காக அவர்கள் சேனைகளைச் சேர்க்கட்டும். ஓ! அரசனே! சல்யனுக்கும் த்ருஷ்டகேதுவுக்கும் ஜயத்ஸேனனுக்கும் கேகயதேசத்தரசர்கள் அனைவருக்கும் வேகமாகச் செல்லுகின்ற தூதர்கள் செல்லவேண்டும். அந்தத் துர்யோதனனும் நிச்சயமாக எங்கும் (தூதர்களை) அனுப்புவான். ஸத்துக்களும், முந்தி அனுப்பப்பட்டால், முந்திக் கேட்டுக் கொண்டவனையே அடைகிறார்கள். ஆகையால், முன்னதாகவே அரசர்களை அழைப்பதற்கு விரைவுபடுங்கள். பெரிதான காரியமன்றோ நிர்வகிக்கவேண்டியிருக்கிறதென்று எனக்கு எண்ணமுண்டாயிருக்கிறது. சல்லியனுக்கும் அவனை அடுத்த அரசர்களுக்கும் விரைவாகத் தூதன் அனுப்பப்படவேண்டும். ஓ! அரசனே! கீழ்கடற்கரைவாஸியும் அளவற்ற பராக்ரமமுடையவனுமான பகதத்தனென்கிற அரசனுக்கும் அப்படியே உக்ரனுக்கும் கிருதவர்மாவுக்கும் அந்தகனுக்கும் தீர்க்கப்ரஜ்ஞனுக்கும் சூரனுக்கும் ரோசமானனுக்கும் அனுப்பப்படவேண்டும். ப்ருஹந்தனும் ஸேனாபிந்துவென்கிற அரசனும் ஸேனஜித்தும் பிரதிவிந்தியனும் சித்ரவர்மாவும் ஸுவாஸ்துகனும் பாஹ்லீகனும் முஞ்சகேசனும் சேதிதேசத்தரசனும் ஸுபார்ஶ்வனும் ஸுபாஹுவும் மகாரதனான பௌரவனும் [1] சகர்களும் பல்லவஅரசர்களும் தரதஅரசர்களும் ஸுராரியும் நதீஜனும் கர்ணவேஷ்டனென்கிற அரசனும் நீலனும் வீரதர்மாவும் பலசாலியான பூமிபாலனும் துர்ஜயனும் தந்தவக்த்ரனும் ருக்மியும் [2] ஜனமேஜயனும் ஆஷாடனும் வாயுவேகனும் பூர்வபாலி என்கிற அரசனும் பூரிதேஜனும் தேவகனும் புத்ரர்களோடு ஏகலவ்யனும் காரூஷர்களென்கிற அரசர்களும் பலசாலியான க்ஷேமதூர்த்தியும் காம்போஜர்களும் ரிஷிகர்களும் மேற்குக்கடலோரத்திலுள்ள அரசர்களும் ஜயத்ஸேனனும் காசிராஜனும் பஞ்சாப்தேசத்தரசர்களும் நெருங்கமுடியாதவனான க்ராதபுத்திரனும் மலைநாட்டரசர்களும் ஜனகவம்சத்தவனும் ஸுசர்மாவும் மணிமானும் அதிமத்ஸகனும் பாம்சுதேசாதிபதியும் பலசாலியான திருஷ்டகேதுவும் துண்டனும் தண்டதாரனும் பலசாலியான ப்ருஹத்ஸேனனும் அபராஜிதனும் நிஷாத

1 'சகர்களுக்கரசனான ஸுராரியும், பல்லவர்களுக்கு அரசனான நதீஜனும், தரதர்களுக்கு அரசனான கர்ணவேஷ்டனென்கிற அரசனும்' என்றும் கொள்ளலாம். 2 இவன் வேறு.

னும் ஸ்ரேணிமானும் வஸுமானும் ப்ருஹத்பலனும் மஹௌஜஸும் பாஹுவும் பரபுரஞ்சயனும் புத்ரனோடுகூடின பலசாலியான ஸமுத்ர ஸேனனென்கிற அரசனும் உத்பவனும் க்ஷேமகனும் வாடதானனென் கிற அரசனும் ஸ்ருதாயுவும் த்ருடாயுவும் பலசாலியான ஸால்வபுத்ர னும் கலிங்கர்களுக்கு அரசனும் யுத்தத்தில் கொடிய மதத்தையுடைய வனுமான குமாரனும் வரவழைக்கப்படவேண்டும். இவர்களுக்கு விரைவாகத் தூதன் அனுப்பப்படவேண்டும். இது எனக்கு விருப்ப மானது. ஓ! அரசனே! வித்வானும் என்னுடைய புரோஹிதரு மான இந்த வேதியரை திருதராஷ்டிரனிடம் அனுப்பலாம். இவ ரிடம் அவனுக்குச் சொல்லவேண்டிய வார்த்தையைச் சொல்லலாம். துரியோதனனிடம் எவ்விதம் சொல்லவேண்டு மென்பதையும் பீஷ்மராஜரிடம் எவ்விதம் சொல்லவேண்டுமென்பதையும் த்ருதராஷ் டிரனிடம் எவ்விதம் சொல்லவேண்டுமென்பதையும் தோராளிகளில் சிறந்தவரான துரோணரிடம் எவ்விதம் சொல்லவேண்டுமென்பதை யும் சொல்லி அனுப்பலாம்' என்று சொன்னான்.

## ஐந்தாவது அத்யாயம்.

## ஸேநோத்யோகபர்வம். (தொடர்ச்சி.)

(கிருஷ்ணர் த்ருபதன்சொல்லைப் புகழ்ந்து தூதர்களை அனுப்பச் சொல்லி த்வாரகை சென்றதும், விராடத்ருபதர்களாலும் துரியோதனனாலும் அழைக்கப்பட்ட அரசர்கள் அவ்வவ்விடம் வந்ததும்.)

வைசம்பாயனர், (ஜனமேஜயரை நோக்கி), "துருபதன் இவ் விதமான வார்த்தையைச் சொன்னபொழுது, வார்த்தையை அறிந்தவர் களிற் சிறந்தவரும் விருஷ்ணிகளுள் ஸ்ரேஷ்டருமான வாஸு தேவர், அந்த ஸபையில், (த்ருபதனை நோக்கி,) 'ஸோமகர்களிற் சிறந்தவரான (உம்மிடத்தில்), அளவற்ற பராக்ரமமுடையவரும் பாண்டுவின் புத்ரருமான அரசருக்கு விருப்பத்தை நிறைவேறச் செய்கிறதான இந்த வார்த்தையானது உசிதமாயிருக்கிறது. நல்ல நீதியை விரும்புகிறவர்களான நமக்கு இது முதலில் செய்யத்தக் கது. இதற்கு வேறுவிதமான கார்யத்தைச் செய்கிறவன் மிகவும் அறி வற்றவனாவான். ஆனால், எங்களுக்குக் கௌரவர்களிடத்திலும் பாண் டவர்களிடத்திலும் ஸம்பந்தம் ஸமமானது. பாண்டவர்களும் அவர்

களும் இஷ்டப்படி இருக்கும்பொழுது, அப்படிப்பட்ட நாங்களெல்லாரும் விவாகத்திற்காக வரவழைக்கப்பட்டோம். நீரும் அப்படியே. விவாகம் செய்யப்பட்டவுடன், ஸந்தோஷத்தோடு க்ருஹங்களைக் குறித்துச் செல்வோம். நீர் பிராயத்தினாலும் சாஸ்த்ரத்தினாலும் அரசர்களில் மிகவும் பெரியவர். நாங்களெல்லாரும் இந்த விஷயத்தில் உமக்குச் சிஷ்யர்கள் போல இருப்போம். ஸந்தேகமில்லை. திருதராஷ்டிரரும் உம்மை எப்பொழுதும் வெகுமானிக்கிறார்; துரோணாசாரியருக்கும் கிருபாசாரியருக்கும் ஸகாவாகவும் இருக்கிறீர். அப்படிப்பட்ட நீர் இப்பொழுது பாண்டவர்களுக்குப் பயனைக் கூட்டுவிக்கிற வார்த்தையைச் சொல்லி அனுப்பும். நீர் எந்தவார்த்தையைச் சொல்லிஅனுப்புகிறீரோ அதுவே எங்களெல்லாருடையநிச்சயமும். குருபுங்கவனான துரியோதனன் நியாயமாக விரோதசமனத்தைச் செய்வானாகில், கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் உண்டான நல்ல ஸஹோதரஸ்நேகத்தால் பெரிதான நாசம் ஏற்படாமலிருக்கும்; அல்லது, திருதராஷ்டிரபுத்ரனானவன், அறியாமையால் செருக்கோடுகூடி அப்படிச்செய்யாவிட்டால், மற்றவர்களுக்கும் தூதர்களை அனுப்பிவிட்டு, பிறகு, எங்களை அழையும். அப்பொழுது, காண்டீவத்தை வில்லாகவுடைய அர்ஜுனன் சினம்அடைய, மந்தனும் மூடனுமான துரியோதனன் மந்திரிகளோடும் உறவினர்களோடும் நாசத்தை அடைவான்' என்று இந்த வார்த்தையைச் சொன்னார். அப்பொழுது, விராடராஜன், பரிவாரங்களோடும் உறவினர்களோடும் கூடின கிருஷ்ணபகவானுக்கு மரியாதைகள் செய்து அவரை த்வாரகைக்கு அனுப்பினான்.

வாஸுதேவர் த்வாரகையை அடைந்த பிறகு, யுதிஷ்டிரர் முதலானவர்களும் விராடராஜனும் யுத்தத்திற்கு வேண்டிய எல்லாவற்றையும் செய்தார்கள். பிறகு, பந்துக்களோடுசேர்ந்து விராடனும் த்ருபதராஜனும் எல்லா அரசர்களுக்கும் தூதர்களை அனுப்பினார்கள். கௌரவஸ்ரேஷ்டர்களான பாண்டவர்களுடைய வசனத்தினாலும் விராடனுடைய வசனத்தினாலும் பாஞ்சாலர்களுடைய வசனத்தினாலும் மிக்க பலசாலிகளான அந்த அரசர்கள் மிகவும் ஸந்தோஷம்அடைந்து வந்துசேர்ந்தார்கள். அதைக் கேட்டுப் பாண்டவர்களுடைய பெரிதான சேனையும் வந்து சேர்ந்தது. திருதராஷ்டிர புத்ரர்களும் அரசர்களை வரவழைத்தார்கள். ஓ! அரசனே! அப்பொழுது, கௌரவர்களுக்காகவும் பாண்டவர்களுக்காகவும் அரசர்களுடைய பிரயாணத்தில் பூமிமுழுதும் நெருங்கியதாயிற்று. அப்பொழுது, பூமியானது

நால்வகைச் சேனையோடுகூடினதாகி எங்கும் நிரம்பியதாயிற்று. அந்த வீரர்களுடைய சேனைகள் பர்வதங்களோடும் வனங்களோடுங்கூடிய இந்தப் பூமிதேவியைச் சலிக்கச் செய்வதுபோல அங்கங்கிருந்தும் வந்தன. உடனே, பாஞ்சாலராஜன், யுதிஷ்டிரருடைய அபிப்பிராயப்படி, அறிவினாலும் பிராயத்தினாலும் பெரியவரான தனது புரோஹிதரைக் கௌரவர்களிடம் அனுப்பினான்.

## ஆறுவது அத்யாயம்.

## ஸேனோத்யோகபர்வம். (தொடர்ச்சி.)

(த்ருபதன் தன் புரோஹிதரைத் திருதராஷ்டிரனிடம் தூதனுப்பியதும், புரோஹிதர் அஸ்தினபுரம் அடைந்ததும்.)

த்ருபதன், (தனது புரோஹிதரை நோக்கி), 'உலகில் உண்டான சராசரங்களுள் மூச்சுவிடுபவை சிறந்தவை. அந்த ப்ராணிகளில் புத்தியால் ஜீவிக்கின்றவைகள் சிறந்தவைகள். புத்தியுள்ளவைகளில், மனிதர்கள் சிறந்தவர்கள். மனிதர்களில் ப்ராம்மணர்கள் சிறந்தவர்கள். ப்ராம்மணர்களில் வித்வான்கள் சிறந்தவர்கள். வித்வான்களில் ஸித்தாந்தத்தை அறிந்தவர்கள் சிறந்தவர்கள். ஸித்தாந்தத்தை அறிந்தவர்களில் அறிந்தபடி செய்கின்றவர்கள் சிறந்தவர்கள். செய்கிறவர்களில் ப்ரம்மத்தைப்பற்றிப் பேசுகின்றவர்கள் சிறந்தவர்கள். அப்படிப்பட்ட நீர் கார்யங்களின்நிச்சயத்தைஅறிந்தவர்களில் பிரதானராயிருப்பவரென்பது என்னுடைய எண்ணம். நீர் குலத்தினாலும் பிராயத்தினாலும் சாஸ்திரத்தினாலும் சிறந்தவராயிருக்கிறீர்; அறிவினால் சுக்ராசாரியருக்கும் ப்ருஹஸ்பதிக்கும் நிகரானவர். அந்தத் துரியோதனன் எவ்வித நடையுடையவனென்பதும் பாண்டவரும் குந்திபுத்ரருமான யுதிஷ்டிரர் எவ்வித நடையுடையவரென்பதும் முழுதும் உமக்குத் தெரியும். திருதராஷ்டிரனுக்குத் தெரிந்தே பகைவர்களால் பாண்டவர்கள் வஞ்சிக்கப்பட்டார்கள். அவன் விதுரரால் நல்வார்த்தைசொல்லப்பட்டும் புத்ரனையே அநுஸரிக்கிறான். சூதாட்டத்தை அறிந்தவனான சகுனி, சூதாட்டத்தை அறியாதவரும் க்ஷத்ரியதர்மத்தில் இருப்பவரும் சுசியுள்ளவருமான குந்திபுத்ரரைப் புத்திபூர்வமாக அழைத்தானல்லவா? அவர்கள் தர்மராஜரான யுதிஷ்டிரரை அவ்விதம் வஞ்சித்துவிட்டு எந்த நிலைமையிலும் தாங்களாக ராஜ்யத்

தைக் கொடுக்கப்போகிறதில்லை. நீரோ, திருதராஷ்டிரனிடம் தர்மமுள்ள வார்த்தையைச் சொல்லி அவனுடைய யுத்தவீரர்களுடைய மனத்தை நிச்சயமாய்த் திருப்பப்போகிறீர். விதுரரும் உம்முடைய அந்த வார்த்தையை ஸித்திக்கும்படி செய்வார்; பீஷ்மர் துரோணர் கிருபர் முதலானவர்களுக்கும் பேதத்தை உண்டாகச் செய்வார். மந்திரிகள் பேதத்தை அடைந்து யுத்தவீரர்களும் பராமுகர்களாயிருக்கும்பொழுது, அவர்களுக்கு மறுபடியும் அவர்களை ஒன்று சேர்க்கவேண்டிய காரியம் ஏற்படும். இந்த ஸமயத்தில் பாண்டவர்கள் புத்திக்குக் கவலையில்லாதவர்களாக ஸுகமாகச் சேனைகளைச் சேர்க்கின்ற காரியத்தையும் பொருள் சேர்ப்பதையுமே செய்வார்கள். தன்னைச் சேர்ந்தவர்கள் வேறுபடுத்தப்பட்டு அப்படி நீரும் அவ்விடத்தில் தாமதிக்கிறவராயிருக்கையில், அவர்கள் அவ்விதம் சேனைகளைச் சேர்ப்பதைச் செய்யமாட்டார்கள்; ஸந்தேகமில்லை. இதில் முக்கியமாக இந்தப் பயனும் அகப்படுகிறது. த்ருதராஷ்டிரனும் தர்மத்துடன் கூடின உம்முடைய வார்த்தையை ஒற்றுமையோடு செய்வான். தர்மத்துடன் கூடின அப்படிப்பட்ட நீர், அவர்களிடம் தர்மமான காரியத்தைச் செய்கிறவரும் தயாசாலிகளிடம் பாண்டவர்களுடைய துன்பங்களை எடுத்து உரைப்பவரும் பெரியோர்களிடம் முன்னோர்களால் அனுஷ்டிக்கப்பட்ட குலதர்மத்தைச் சொல்லுகிறவருமாகி, அவர்களுடைய மனங்களைப் பேதிக்கச் செய்வீரென்பதில் எனக்குச் சந்தேகமில்லை. உமக்கு அவர்களிடமிருந்து பயமுமில்லை. ஏனென்றால், வேதவித்தான ப்ராம்மணராயிருக்கிறீரல்லவா? தூதகார்யத்தில் ஏற்பட்டவரும் மிக்க முதியவருமாயிருக்கிறீர். அப்படிப்பட்ட நீர், புஷ்ய நக்ஷத்திரம்கூடின ஜயமுகூர்த்தத்தில் குந்தீபுத்ரருடைய கார்யஸித்திக்காகக் கௌரவர்களைக்குறித்துச் சீக்கிரம் பிரயாணம் செய்யவேண்டும்' என்று சொன்னான். மகாத்மாவான த்ருபதனாலே அவ்விதம் சொல்லப்பட்டு, சீலத்தோடுகூடிய புரோஹிதர் ஹஸ்திநபுரமென்னும் பெயரையுடைய நகரத்தைக் குறித்துப் புறப்பட்டார். வித்வானும் நீதிசாஸ்த்ரத்தில் ஸமர்த்தருமான அவர் சிஷ்யர்களால் சூழப்பட்டுப் பாண்டவர்களுடைய நன்மைக்காகக் கௌரவர்களைக் குறித்துச் சென்றார்.

---

ஏழாவது அத்யாயம்.

## ஸேநோத்யோகபர்வம். (தொடர்ச்சி.)

(துரியோதனனும் அர்ஜுனனும் தற்செயலாக ஒரேஸமயத்தில் த்வாரகைக்குச் சென்றதும், அர்ஜுனன் கண்ணபிரானை ஸாரதியாகப் பெற்றும் துரியோதனன் நாராயணர்களையும் கிருதவர்மாவையும் பெற்றும் மீண்டதும்.)

[1] அவர்கள், ஹஸ்திநுபட்டணத்தைக்குறித்துப் புரோஹிதரை அனுப்பிவிட்டு, அரசர்களுக்கு ஆங்காங்கு தூதர்களை அனுப்பினார்கள். மற்றவிடங்களுக்கும் தூதர்களை அனுப்பிவிட்டுப் புருஷர்களிற் சிறந்தவனும் குருவம்சத்தில் பிறந்தவனும் குந்தீபுத்ரனுமான தனஞ்சயன், த்வாரகையைக்குறித்துத் தானே சென்றான். மாதவரான கிருஷ்ணரும் பலதேவரும், கூட்டங் கூட்டமான அந்தகர்கள் போஜர்கள் முதலான எல்லாரோடும் த்வாரகையை அடைந்தபொழுது துரியோதனராஜன் மாறுவேஷத்துடன் அனுப்பப்பட்ட ஒற்றர்களாலே பாண்டவர்களுடைய எல்லாச் செய்கையையும் தெரிந்துகொண்டான். அவன் வாஸுதேவர் ஊருக்குச் சென்றுவிட்டாரென்பதைக் கேட்டு, வாயுவுக்கு நிகரான நல்ல குதிரைகளால் சில சேனையுடன் துவாரகா நகரத்தை அடைந்தான். அந்தத் தினத்திலேயே, குந்தீபுத்ரனும் பாண்டு நந்தனனுமான தனஞ்சயனும் அழகான த்வாரகா நகரத்தை வேகமாக அடைந்தான். புருஷஸ்ரேஷ்டர்களும் குருநந்தனர்களுமான அவ்விருவர்களும், துவாரகையை அடைந்து, நித்திரை செய்கிறவரான கிருஷ்ணரைக் கண்டார்கள்; சயனித்திருப்பவரான அவருக்கு நேராகவும் சென்றார்கள்.

துரியோதனனே, முதலில் கிருஷ்ணருடைய ஸமீபத்தை அடைந்து அவருடைய தலைப்பக்கத்தில் சிறந்ததான ஓர் ஆஸனத்தில் உட்கார்ந்தான். பிறகு, அவனுக்குப் பின்னால், பெரிதான மனமுடைய கிரீடியானவன் பிரவேசித்தான். அவனே, கிருஷ்ணருடைய காற்பக்கத்தில் வணக்கத்துடன் அஞ்சலிசெய்துகொண்டு நின்றான். நித்திரை தெளிந்தவரான அந்த மாதவர் முந்திக் கிரீடியைப் பார்த்தார். பிறகு, திரும்பி, ஸிம்மாஸனத்திலிருக்கிற துரியோதனனைப் பார்த்தார். அந்த மதுஸூதனர் அவர்களுடைய நல்வரவைக் கேட்டு அவர்களை உசிதப்படி மரியாதை செய்து அவர்களுடைய வரவின் காரணத்தை

1 விராடதுருபதர்களும் பாண்டவர்களும்.

வினவினர். அப்பொழுது, துரியோதனன், அவரை நோக்கிச் சிரித்துக்கொண்டு, 'இப்பொழுது நீர் இந்த யுத்தத்தில் எனக்கு உதவி செய்யவேண்டும். ஓ! மாதவரே! உமக்குச் சிநேகமானது என்னிடத்திலும் அர்ஜுனனிடத்திலும் ஸமானம். அப்படியே, எங்களுக்கும் உம்மிடத்தில் ஸம்பந்தமும் ஸமானம். ஓ! மதுஸூதனரே! நானும் இப்பொழுது உம்மை முந்தி அடைந்தவனாயிருக்கிறேன். முன் வழக்கத்தை அனுஸரிக்கின்றவர்களான பெரியோர்கள் முந்தி வந்தவனை ஆதரிக்கின்றார்கள். ஓ! ஜனார்த்தனரே! நீரும் இப்பொழுது உலகத்தில் பெரியோர்களுக்கெல்லாம் மிகவும் ச்ரேஷ்டராகவும் எப்பொழுதும் ஒப்புக்கொள்ளப்பட்டவராகவும் இருக்கிறீர். ஆகையால், பெரியோர்களுடைய நடக்கையைக் காப்பாற்றும்' என்று சொன்னான். கேசவர், (அப்பொழுது, அவனை நோக்கி), 'நீ முன்னமே வந்தவன். இதில் எனக்கு ஸந்தேகமில்லை. ஓ! அரசனே! குந்திபுத்ரனான அர்ஜுனனோ என்னால் முந்திப் பார்க்கப்பட்டான். ஓ! துரியோதனா! நீ முந்திவந்ததனாலும் அர்ஜுனன் முந்திப் பார்க்கப்பட்டதினாலும் இரண்டுபேர்களுக்குமே ஸகாயத்தைச் செய்வேன். முதலிலே பாலர்களுக்கு இஷ்டதானத்தைச் செய்யவேண்டுமென்று கேள்வி. ஆகையால், பார்த்தனான தனஞ்சயன் முந்தி இஷ்டதானத்திற்கு உரியவன். என்னுடைய வடிவம்போன்ற வடிவமுள்ள கோபாலர்கள் கோடிக்கணக்காக இருக்கிறார்கள்; நாராயணர்களென்று கியாதிபெற்றவர்கள்; எல்லாரும் யுத்தத்திற் போர்புரிவார்கள். யுத்தத்தில் அணுகமுடியாதவர்களான அவர்களாவது ஒருவனுக்குச் சேனைகளாவார்கள். ஆயுதத்தைத்தள்ளினவனும் யுத்தத்தில் போர் புரியாதவனுமான நானாவது ஒருபக்கத்துக்கு இருப்பேன்' என்று சொல்லிவிட்டு, அர்ஜுனனை நோக்கி. 'ஓ! பார்த்த! இந்த இரண்டில் உனக்கு எது மிகவும் விருப்பமாகத் தோன்றுகிறதோ அந்த ஒன்றை நீ கேட்டுக்கொள்ளலாம். தர்மத்தால் நீ முதலில் அபீஷ்டதானத்திற்கு உரியவனல்லவா? ஓ! குந்திபுத்ர! இதைத்தெரிந்துகொண்டு அடிக்கடி ஆலோசித்து ஸஹாய நிமித்தம் அவர்களையாவது வரி; அல்லது, என்னையாவது ஸஹாயத்திற்காக வரி' என்று சொன்னார்.

வாஸுதேவர் இவ்விதம் சொல்லக்கேட்டுக் குந்திபுத்ரனான தனஞ்சயன் யுத்தத்தில் போர்செய்யாதவரும் சத்துருக்களைக் கொல்லுகிறவரும் தம் இச்சையால் மனிதர்களில் ஜனித்தவரும் ஜனனமற்றவரும் நாராயணருமான வாஸுதேவரை எல்லா க்ஷத்ரியர்களுக்கும் எதிரிலும் தேவாஸுரர்களுக்கு எதிரிலும் வரித்தான். அப்

பொழுது, துரியோதனனே அவருடைய எல்லாச் சேனையையும் வரித்தான். ஓ! பாரதரே! அவன் பத்துலக்ஷம் வீரர்களையும் அடைந்தும், கிருஷ்ணர் சேனையில்லாமல்செய்யப்பட்டிருப்பதை அறிந்தும், மிகுந்த ஸந்தோஷத்தை அடைந்தான். பிறகு, பயங்கரமான பலத்தையுடைய துரியோதனராஜன் அவருடைய எல்லாச் சேனையையும் பெற்றுக்கொண்டு மிக்க பலசாலியான பலராமரை அடைந்தான். அவன் அவரிடம் தன் வரவிலுண்டான எல்லாக் காரணத்தையும் நன்றாகத் தெரிவிக்கவும் செய்தான். அப்பொழுது, பலராமர் துரியோதனனை நோக்கி இவ்விதம் ஒரு மறுமொழி கூறினார்.

'ஓ! புருஷஶ்ரேஷ்டனே! முன் விராடனுடைய விவாக காரியம் நடந்தபொழுது என்னால் சொல்லப்பட்டவையெல்லாம் உனக்குத் தெரிந்திருக்கத் தக்கவைகளே. ஓ! குருநந்தன! அரசனே! என்னாலே உன்னிமித்தம் கிருஷ்ணனனவன், 'நமக்கு ஸம்பந்தமானது ஸமானமாயுள்ளது' என்று அடிக்கடி அடக்கிச் சொல்லப்பட்டான். என்னால் சொல்லப்பட்ட அந்த வார்த்தையானது கிருஷ்ணனுக்கு ஏற்கவே இல்லை. நான் கிருஷ்ணனில்லாமல் ஒரு க்ஷணங்கூட இருப்பதற்கு விரும்புகிறதுமில்லை. நான் பார்த்தனுக்கு உதவியாகமாட்டேன். வாஸுதேவனை நோக்கி இவ்விதம் என்னுடைய புத்தியானது உறுதி செய்யப்பட்டிருக்கிறது. ஓ! புருஷஶ்ரேஷ்டனே! எல்லா அரசர்களாலும் பூஜிக்கப்பட்ட பரதவமிசத்தில் பிறந்தவனாயிருக்கிறாய். ஆகையால், போ; க்ஷத்ரிய தர்மத்துடன் யுத்தம்செய்' என்று சொன்னார்.

இவ்விதம் சொல்லப்பட்ட திருதராஷ்டிரனின் புத்திரனான அந்தத் துரியோதனராஜன், அப்பொழுது பலராமரை ஆலிங்கனம்செய்து நீண்ட புஜங்களோடுகூடிய கிருஷ்ணரிடத்திலும் விடைபெற்றுக்கொண்டு கிருதவர்மாவை அடைந்தான். அப்பொழுது, கிருதவர்மா ஓர் 1 அக்ஷௌஹிணி ஸைன்யத்தை அவனுக்குக் கொடுத்தான். அந்தக் குருநந்தனன், பயங்கரமான அந்தச் சேனையினால் சூழப்பட்டு ஸந்தோஷத்தை அடைந்து ஸுஹ்ருத்துக்களை ஸந்தோஷிப்பிக்கிறவனாகிச் சென்றான். துரியோதனன் சென்றபிறகு, பீதாம்பரதாரியும் உலகங்களைப் படைத்தவரும் ஜனங்களென்கிற அஸுரர்களைக் கொன்றவருமான கேசவர், கிரீடியை நோக்கி, 'எந்தப் புத்தியைக்கொண்டு யுத்தம் செய்யாதவனான நான் உன்னால் வரிக்கப்பட்டேன்?' என்று கேட்டார். அப்பொழுது, அர்ஜுனன், அவரை நோக்கி, 'ஓ! புருஷஶ்ரே

1 ஆதிபர்வம் 31-ம் பக்கம் பார்க்க.

ஷ்டரே! நீர் அவர்களெல்லாரையும் கொல்லுவதற்கு ஸமர்த்தர். இந்த விஷயத்தில் ஸந்தேகமில்லை. நானும் ஒருவனைக் கொல்வதற்கு ஸமர்த்தன். நீரோ உலகத்தில் கீர்த்திபெற்றவர். அந்தக் கீர்த்தியானது உம்மை அடையும். நானும் புகழ்ச்சிகளை விரும்புகிறவன். ஆகையால், என்னால் வரிக்கப்பட்டீர். ஸாரத்யமோ உம்மால் செய்யத்தக்கதென்பது எப்பொழுதும் என் கருத்து. ஆகையால், வெகுநாளாக விரும்பப்பட்ட இஷ்டத்தை நீர் செய்யக்கடமையுடையவர்' என்று சொன்னான்.

அப்பொழுது, வாஸுதேவர், அவனை நோக்கி, 'ஓ! பார்த்த! என்னுடன் போட்டி போடுகிறாய் என்னும் இது உசிதம். உனக்கு ஸாரத்யத்தைச் செய்வேன். உன் இஷ்டம் நிறைவேறட்டும்' என்று சொன்னார். உடனே, அர்ஜுனன் இவ்விதம் ஸந்தோஷம் அடைவிக்கப்பட்டும் கிருஷ்ணனாலும் தாசார்ஹஸ்ரேஷ்டர்களாலும் சூழப்பெற்றும் மறுபடியும் யுதிஷ்டிரரை அடைந்தான்.

---

எட்டாவது அத்யாயம்.

## ஸேநோத்யோகபர்வம். (தொடர்ச்சி.)

**(பாண்டவர்களிடம் வரும் சல்யனைத் துரியோதனன் மறைந்து உபசரித்துப் போர்த்துணை வேண்டினதும், சல்யன் உடன்பட்டு யுதிஷ்டிரரைக் காணச் சென்றதும், யுதிஷ்டிரர் கர்ணனது தேஜோவதத்தை வேண்டச் சல்யன் ஸம்மதித்ததும்.)**

அரசரே! (அப்பொழுது), சல்யன் தூதர்களுடைய (வார்த்தையைக்) கேட்டுப் பெரிதான சேனையால் சூழப்பட்டு மஹாரதர்களான புத்ரர்களுடன் பாண்டவர்களைக்குறித்துப் புறப்பட்டான். அவனுடைய சேனை தங்கியிருக்கும் இடமானது ஒன்றரையோஜனை நீளம் இருந்தது. ஓ! அரசரே! மனிதர்களிற் சிறந்தவனும் பெரிய வீரிய பராக்ரமங்களையுடையவனும் அக்ஷௌஹிணிகளுக்குப் பதியுமான அவன் அவ்விதம் விஸ்தாரமான சேனையைப் போஷிக்கிறானல்லவா? எல்லாரும் விசித்ரமான கவசமுடையவர்களும் சூரர்களும் விசித்ரமான கொடிகளும் விற்களுமுடையவர்களும் விசித்ரமான ஆபரணங்கள் அணிந்தவர்களும் விசித்ரமான தேர்களும் வாகனங்களுமுடையவர்களும் எல்லாரும் விசித்ரமான மலர்மாலைகளைத் தரிக்கின்றவர்

களும் விசித்ரமான ஆடை ஆபரணங்களையுடையவர்களும் தங்கள் தேசத்திலுண்டான வேஷத்தையும் ஆபரணங்களையுமுடையவர்களும் வீரர்களும் நூறுயிரக்கணக்குள்ளவர்களுமான க்ஷத்திரியஸ்ரேஷ்டர்கள் அந்தச்சல்யனுக்குப் படைத்தலைவர்களாக இருந்தார்கள். அவன் பிராணிகளை வருத்துகின்றவன் போலவும் பூமியைச் சலிக்கச் செய்கிறவன்போலவும் சேனையை மெல்ல மெல்ல இளைப்பாறச் செய்து கொண்டு பாண்டவரிருக்குமிடத்தை நோக்கிச் சென்றான். ஓ! பாரதரே! அப்பொழுது, துரியோதனன் கேட்டு மஹாத்மாவும் மஹாரதனும் ஸமீபத்தில் வருகின்றவனுமான சல்யனைத் தான் விரைவாக எதிர்கொண்டு சென்று பூஜித்தான். துரியோதனன் அவனுடைய பூஜைக்காக அழகான இடங்களில் ரத்னங்களால், பல நிறங்களுள்ளவைகளும் நன்றாக அலங்கரிக்கப்பட்டவைகளுமான ஸபைகளை அமைத்தான். அவைகளில், பலவகையான சில்பிகளாலே விளையாட்டுக்கள் செய்விக்கப்பட்டிருந்தன. அந்த மண்டபங்களில் மாலைகளும் மாம்ஸங்களும் தின்பண்டங்களும் குடிக்கத்தக்கவைகளும் வழங்கப்பட்டன. பலவித ரூபங்களுடையவைகளும் மனத்திற்குச் சந்தோஷத்தை விருத்திசெய்கின்றவைகளுமான பலவிதஉருவமுள்ள கிணறுகளும் அனேகவித உருவமுள்ள ஓடைகளும் தண்ணீர்ப் பந்தல்களும் அமைக்கப்பட்டிருந்தன. அந்தச் சல்யன் அந்த ஸபைகளை அடைந்து இடங்கள்தோறும் நாலு பக்கத்திலுமுள்ள துரியோதனனுடைய மந்திரிகளாலே தேவன்போலப் பூஜிக்கப்பட்டு ஸுதர்மைக்கு நிகரான காந்தியுடைய வேறொரு ஸபையை அடைந்தான். அவன், அந்த ஸபையில் சேர்ந்தவைகளும் சுபமானவைகளும் மானிடத்தன்மைக்கு மேற்பட்டவைகளுமான விஷயங்களாலே தன்னை மேலானவனாக நினைத்தான்; இந்திரனையும் அவமதித்தான். பிறகு, அந்த க்ஷத்ரிய ஸ்ரேஷ்டன் மிகுந்த ஸந்தோஷத்தை அடைந்து வேலைக்காரர்களை நோக்கி, 'யுதிஷ்டிரனுடைய எந்த மனிதர்கள் இங்கே இச்சபைகளைச் செய்தார்கள்? ஸபையை நிர்மாணம் செய்தவர்களை அழையுங்கள். அவர்கள் பரிசு பெறுதற்கு உரியவர்களென்று நான் நினைத்திருக்கிறேன். அவர்களுக்கு வெகுமதிகளைக் கொடுப்பேன். குந்தீ புத்ரன் ஸம்மதிக்கவேண்டும்' என்று கேட்டான். அதன் பிறகு, அந்த மந்திரிகள், அரசனை மிக்க சந்தோஷமடைந்தவனாக அறிந்து உடனே ஆச்சரியம் அடைந்து துரியோதனனிடம் அவ்விதனைத்தையும் சொன்னார்கள். எப்பொழுது சல்யன் மிகவும் ஸந்தோஷத்தை அடைந்து உயிரையும் கொடுக்க விருப்பமுள்ளவனாயிருந்தானோ, அப்பொழுது,

அவ்விடத்தில் மறைவாயிருந்த துரியோதனன், அம்மானுன சல்யன் பார்க்க எதிரேவந்தான். மத்ரதேசாதிபதியான சல்லியனும் அவனைப் பார்த்து, அந்த முயற்சியை அவனுடையதாக அறிந்து ப்ரீதியடைந்து ஆலிங்கனம் செய்து, 'இஷ்டமான கார்யத்தைக் கேட்டுக்கொள்' என்று சொன்னுன். துரியோதனன், 'ஓ! கல்யாணகுணமுடையவரே! ஸத்தியமான வாக்கையுடையவராகக் கடவீர். எனக்கு வரத்தைக் கொடுக்கக் கடவீர். நீர் எல்லாச் சேனைகளுக்கும் நாயகராக இருக்கவேண்டும். உமக்குப் பாண்டவர்கள் எப்படியோ நானும் உமக்கு அப்படியே. ஓ! பிரபுவே! கௌரவிக்கத் தக்கவனும் ரக்ஷிக்கத் தக்கவனும் பக்தனுமான என்னை அடையக்கடவீர்' என்று சொன்னுன். அப்பொழுது, சல்லியன், 'செய்யப்பட்டது' என்றும், 'வேறு என்ன செய்யவேண்டும்?' என்றும் வினவினுன். துரியோதனனும், 'போதும்' என்றே அடிக்கடி மறுமொழி சொன்னுன். அப்பொழுது, சல்லியன், 'புருஷஶ்ரேஷ்டா! துரியோதனு! நீ உன்பட்டணத்திற்குச் செல்லு. நான் பகைவர்களைச் சிக்ஷிக்கிறவனுன யுதிஷ்டிரனைப் பார்ப்பதற்குப்போகிறேன். அரசனே! மனிதர்களுக்கெல்லாம் அதிபதியாயிருப்பவனே! யுதிஷ்டிரனைப் பார்த்துவிட்டுச் சீக்கிரம் வருவேன். தவிரவும், புருஷஶ்ரேஷ்டனுன பாண்டவனை அவஶ்யம் பார்க்கவேண்டும்' என்று சொன்னுன். துரியோதனன், 'ஓ! அரசரே! பாண்டவரைப் பார்த்துவிட்டுச் சீக்கிரம்வரவேண்டும். ராஜஶ்ரேஷ்டரே! நாங்கள் உம்முடைய அதீனமாயிருக்கிறோம். எங்களுக்குக் கொடுத்த வரத்தை நினைக்கக் கடவீர்' என்று சொன்னுன். சல்யனும், அவனை நோக்கி, 'ராஜனே! உனக்கு மங்களம். உன் நகரம்செல். பாண்டவரைப் பார்த்துவிட்டுச் சீக்கிரம் வருகிறேன். ராஜனே! பொய்யாக்கத் துணியேன்' என்று சொன்னுன். சல்லியன் துரியோதன் இருவர்களும் ஒருவரை ஒருவர் ஆலிங்கனம் செய்துகொண்டார்கள். அந்தத் துரியோதனன், அப்படியே சல்யனிடம் சொல்லிக்கொண்டு, மறுபடியும் தன்னுடைய பட்டணத்தை அடைந்தான். சல்யனும் அந்தத் துரியோதனனுடைய அந்தச்செய்கையைச் சொல்லுவதற்குப் பாண்டவர்களை அடைந்தான். அந்தச் சல்யன் உபப்லாவ்ய (மென்கிற விராடனுடைய) நகரத்தை அடைந்து சேனைகளிருக்குமிடத்திலும் ப்ரவேசித்து உடனே அவ்விடத்தில் அந்தப் பாண்டவர்களெல்லாரையும் கண்டான். யுதிஷ்டிரரோடுகூடின எல்லாரும், பலநாளுக்குப்பிறகு, மாதுலனும் யுத்தத்தில் ஜயத்தையே அடைகிறவனுமான அரசனைக்கண்டு, ஆஸனங்களிலிருந்

தும் எழுந்திருந்தார்கள். ஓ பாரதரே! அப்படியே, பீமனும் அர்ஜுன னும் ஸஹோதரியின் புத்ரர்களான நகுல ஸஹதேவர்களிருவரும் த்ரௌபதியும் ஸுபத்ரையும் அபிமன்யுவும் ஸந்தோஷத்தை அடைந் தார்கள். உடனே, உதாரமான மனமும் தர்மபுத்தியுமுடைய யுதிஷ்டி ரர் புஜபலமிக்க சல்லியனை அடைந்து புரோகிதர் மூலமாகப் பாத்யத் தையும் அர்க்யத்தையும் கோவையும் கிரஹிக்கும்படி செய்து அஞ்சலி பந்தம் செய்துகொண்டு, அவனை நோக்கி, 'ஓ! அரசரே! உமக்கு நல் வரவு. இந்த ஆஸனத்தில் இருக்கவேண்டும்' என்று சொன்னார். அப்பொழுது, சல்யனும் ஸுவர்ணமயமான சிறந்த ஆஸனத்தில் உட் கார்ந்தான். தர்மபுத்ரர் அவனிடம் பாத்யத்தையும் அர்க்கியத்தை யும் தெரிவித்தார். சல்யன், தர்மராஜரை நோக்கி, 'ஓ! ராஜனே! சத் ருக்களைத் தபிக்கச் செய்கிறவனே! துரியோதனனால் செய்யப்பட்ட பெரிதான இந்தத் துக்கத்திற்குச் சத்ருக்களைக் கொன்று நல்ல பயனை அடையப்போகிறாய். ஓ! மஹாராஜனே! உலகத்தின் தன்மை உனக் குத்தெரிந்ததே. ஆகையால், உனக்கு உலகத்தால் செய்யப்பட்டது ஒன்றுமில்லை' என்றுசொன்னான்.

ஓ பாரதரே! பாண்டவர், மத்ரராஜனுக்கு விதிப்படி அர்க்கியத் தைக் கொடுத்துவிட்டு, எல்லாருக்கும் ஸுகத்தை அளிக்கிறவனான அவனைநோக்கிக் குசலப்ரச்னம்செய்தார். பிறகு, தர்மதகில் நடக் கின்ற அந்த எல்லாப் பாண்டவர்களாலும் சூழப்பட்டவனும் ஆஸனத் திலிருப்பவனுமான அந்தச் சல்யன் குந்தீபுத்ரரை நோக்கி, 'ஓ! ராஜ ச்ரேஷ்டனே! குருநந்தன! எல்லா விஷயத்திலும் க்ஷேமமா? ஜய சாலிகளிற் சிறந்தவனே! தெய்வானுகூலத்தால் வனவாஸத்திலிருந் தும் விடுபட்டாய். ராஜனே! குற்றமற்றவனே! குந்தீபுத்ரா! தம்பிக ளோடும் இந்தத்ரௌபதியோடும் உன்னால் நிர்ஜனமும் ப்ரவேசிக்க முடியாததுமான வனத்தில் செய்யமுடியாத காரியமானது செய்யப்பட் டது. கோரமான அஜ்ஞாத வாஸத்தையும் செய்த உன்னால், செய்ய முடியாத காரியம் செய்யப்பட்டது. ஓ! பாரத! ராஜ்யமிழந்தவனுக்குத் துக்கமே தவிர, ஸுகம் ஏது? ஓ! யுதிஷ்டிரா! உன்னுடைய புத்தி யானது ஸத்யத்திலும் தவத்திலும் தானத்திலும் இருக்கிறது. ஓ! யுதிஷ்டிரா! பொறுமையும் அடக்கமும் அஹிம்ஸையும் ஸத்யமுமே உன்னிடமிருக்கின்றன. ஓ! அரசனே! அத்புதமான உலகமோ உன் னிடம் நிலைபெற்றிருக்கிறது. நீ மிருதுவானவனும் [1] மிக்ககொடை யாளியும் ப்ராம்மணர்களுக்கு ஹிதனும் அடக்கமுள்ளவனும் தர்மத்

1 'வதாந்ய:' என்பது மூலம்; 'இன்சொல்லன்' என்பது பழையவுரை.

தையே முக்யமாக உடையவனுமாக இருப்பவன். ஓ! ராஜனே! உல கத்தை ஸாக்ஷியாகவுடைய பலதர்மங்கள் உன்னால் அறியப்பட்டன. ஓ! ஐய! சத்ருக்களைத் தபிக்கச் செய்பவனே! இந்த உலகமெல்லாம் உன்னால் அறியப்பட்டிருக்கிறது. ராஜனே! நீ ராஜ்யத்தில் ஸ்தாபிக் கப்பட்டால் மறுபடியும் உலகம் ஸந்தோஷத்தை அடைந்ததாகும். அரசனே! பரதஸ்ரேஷ்ட! தெய்வானுகூலத்தால் இந்தக் கஷ்ட மானது தாண்டப்பட்டது. ஓ! ராஜஸ்ரேஷ்ட! ப்ரபுவே! தெய்வானு கூலத்தால் நீ தர்மசித்தமுள்ளவனும் பரிவாரங்களோடு கூடினவனும் அரிய கஷ்டத்தைத் தாண்டினவனும் தர்மங்களுடைய மிருதியை உடையவனுமாயிருப்பதைப் பார்க்கிறேன்' என்று சொன்னான்.

ஓ! பாரதரே! பிறகு, சல்யராஜன் துரியோதனனுடைய சேர்க் கையையும் (அவனுடைய) அந்த எல்லா உபசாரத்தையும் வரதானத் தையும் யுதிஷ்டிரரிடம் சொன்னான். அவர், (அப்பொழுது சல்லி யனை நோக்கி), 'ஓ! ராஜரே! வீரரே! நீர் மனமகிழ்ச்சியடைந்து துரி யோதனனுக்கு வாக்கினால் ப்ரதிஜ்ஞைசெய்த காரியமானது நல்ல கார் யமே. ஓ! பூபதியே! உமக்கு மங்களம் உண்டாகுக. ஆனால், நீர் ஒரு கார்யம் செய்யவேண்டுமென்று விரும்புகிறேன். ஓ! ராஜரே! ஸத்துக் களில் சிறந்தவரே! அது செய்யக்கூடாதது. ஆனாலும், என்னை விரும்பி நீர் அதைச் செய்யவேண்டும். ஓ! வீரரே! கேளும். உமக்கு விண் ணப்பம் செய்கிறேன். ஓ! மஹாராஜரே! நீர் இவ்வுலகில் யுத்தத்தில் வாஸுதேவருக்கு நிகரானவர். ஓ! ராஜஸ்ரேஷ்டரே! கர்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஏற்படும் த்வந்த்வ யுத்தத்தில் உம்மால் கர்ணனுக்கு ஸாரத்யம் செய்யவேண்டிவரும்; இதில் ஸந்தேகமில்லை. ஓ! அரசரே! என்னுடைய ப்ரியத்தை விரும்புகிறீரேயானால் அந்த யுத்தத்தில் உம்மால் அர்ஜுனன் ரக்ஷிக்கப்படத்தக்கவன். நீர் எங்களுக்கு ஜயத் தைக் கொடுக்கும்படி ஸூதபுத்ரனுடைய பராக்ரமத்தைப் பங்கம் செய்யவேண்டும். ஓ! மாதுலரே! செய்யக் கூடாததாயினும், நீர் இதைச் செய்யவேண்டும்' என்று சொன்னார். சல்யன் 'ஓ! பாண்டவ! உனக்கு மங்களமுண்டாகுக. யுத்தத்தில் மிக்க பலசாலியான ஸூத புத்ரனுடைய பராக்ரமத்தைக் கெடுப்பதினிமித்தம் என்னிடம் நீர் கேட்டுக்கொண்ட விஷயத்தைப்பற்றிச் சொல்லுகிறேன்; கேள். அவன் என்னை எப்பொழுதும் வாஸுதேவனுக்கு நிகராக நினைக்கின் றான். ஆகையால், நான் அவனுக்கு யுத்தத்தில் ஸாரதியாவேன்; நிச்ச யம். ஓ! பாண்டவ! குருஸ்ரேஷ்டனே! அவன் கர்வத்தை அடக்கிப் பராக்ரமத்தை அபஹரித்து எளிதில் கொல்லத்தக்கவனாகும்படி, யுத்

தத்தில் யுத்தம்செய்ய விருப்பமுள்ளவனான அவனுக்கு விபரீதமாயும் நலமில்லாததாயுமிருக்கிற வார்த்தையைச் சொல்லுவேன்; நிச்சயம். இதை ஸத்யமாக உனக்குச் சொல்லுகின்றேன். ஓ! ஐய! நீ என்னிடம் சொல்லியபடி இதைச்செய்வேன். வேறு எந்தவிருப்பத்தையும் செய்யத்தக்கவனாவேனே அதனையும் உனக்குச் செய்வேன். ஓ! பெரிய பலத்தையுடையவனே! வீர! சூதாட்டத்தில் த்ரௌபதியோடு உன்னால் அடையப்பட்ட துக்கமும், ஸூதபுத்ரனால் சொல்லப்பட்ட கடுமையான வார்த்தைகளும், ஜடாஸுரனிடமிருந்தும் கீசகனிடமிருந்தும் உண்டான பெரிய துயரமும், தமயந்தியினால் அடையப்பட்ட துக்கம் போலத் துரௌபதியினால் அடையப்பட்ட இந்த எல்லாத்துக்கமும் முடிவில் ஸுகத்தைக் கொடுக்கின்றனவாகும். இந்த விஷயத்தில் நீ கோபத்தை அடையக்கூடாது. தெய்வம் மிகவும் வலிமையுள்ளதன்றோ! ஓ! யுதிஷ்டிர! மஹாத்மாக்கள் துக்கங்களை அடைகிறார்களல்லவா? ஓ! உலகத்துக்குப் பதியாயிருப்பவனே! தேவர்களாலும் துக்கங்கள் அடையப்பட்டனவல்லவா? ஓ! அரசனே! பாரத! மஹாத்மாவும் தேவர்களுக்கு அரசனுமான இந்திரனாலே பத்னியோடு பெரிதான துக்கமானது அனுபவிக்கப் பட்டதாகக் கேட்கப்படுகிறது' என்று சொன்னான்.

## ஒன்பதாவது அத்யாயம்.

## ஸேநோத்யோகபர்வம். (தொடர்ச்சி.)

(சல்யன், இந்திரனுக்குத் துக்கம் நேர்ந்ததையும் அதை நீக்கிக் கொள்வதற்கு அவன் தேவர்களுடன் திருமாலினிடம் சென்றதையும் யுதிஷ்டிரருக்குக் கூறினது.)

யுதிஷ்டிரர், 'ஓ! ராஜஶ்ரேஷ்டரே! மஹாத்மாவான இந்திரனால் பத்னியோடு எவ்விதம் பெரிதும் கோரமுமான துக்கமானது அடையப்பட்டது? இதைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்' என்று சொன்னார். சல்யன், 'ஓ! ராஜனே! பாரத! எவ்விதம் பத்னியுடன் இந்திரனால் துக்கமானது அடையப்பட்டதென்பதில் முன்னடந்த பழமையான சரித்திரத்தைக் கேள். தேவர்களிற் சிறந்தவனும் பெரிய தவமுடையவனுமான த்வஷ்டா என்கிற ஸ்ருஷ்டிகர்த்தன் இருந்தானன்றோ? அவன் இந்திரனிடம் துரோகத்தினால் மூன்று சிரமுடைய

விஸ்வரூபன் என்னும்புத்ரனை உண்டுபண்ணினனும். மிக்க காந்தியுள்ள அவன் இந்திரனுடைய ஸ்தானத்தில் விருப்பங்கொண்டு கோரமும் ஸூரியன் சந்திரன் அக்கினி இவர்களுக்குச் சமமுமான மூன்று சிரங்களில் ஒரு முகத்தால் வேதங்களை அத்தியயனம் செய்தான்; ஒன்றினால் ஸுரையைப் பானம் செய்தான்; மற்றொன்றினால் எல்லாத் திக்குக்களையும் விழுங்குகிறவன்போலப் பார்த்தான். அவன் இரக்கப்படத்தக்கவனும் மென்மையுடையவனும் அடக்கமுடையவனுமாகத் தர்மத்திலும் தவத்திலும் முயற்சிசெய்தான். ஓ! சத்ருக்களைச்சிக்ஷிக்கிறவனே! அவனுடைய தவமானது பெரிதும் தீவ்ரமும் (ஒருவராலும்) அனுஷ்டிக்கமுடியாததுமாக இருந்தது. அளவற்ற தேஜஸுள்ள அவனுடைய தவத்தின் வீரியத்தையும் ஸத்யத்தையும் பார்த்துவிட்டு இந்திரன், 'இவன் இந்திரனுகாமலிருக்கவேண்டுமே!' என்று வருத்தமுற்றான். ஓ! பரதஸ்ரேஷ்ட! பிறகு, புத்திமானை அந்த இந்திரன், 'விருத்தியடைகிறவனை இந்தத் திரிசிரன் எல்லா உலகத்தையும் விழுங்கிவிடுவானல்லவா? எவ்விதமானல் இவன் போகங்களில் அழுந்துவான்? பெரிய தவத்தைச் செய்யாமலிருப்பான்?' என்று பலவிதமாக ஆலோசித்து, த்வஷ்டாவின் புத்ரனை ஏமாற்ற அப்ஸரஸுகளை நோக்கி, 'நீங்கள், அந்த த்ரிசிரஸானவன் காமபோகங்களில் மிகவும் அழுந்தும்படி சீக்கிரம் செய்யுங்கள்; செல்லுங்கள்; ஏமாற்றுங்கள். தாமதம் வேண்டாம். அழகிய இடையுடையவர்களே! எல்லாரும் ஶ்ருங்காரவேஷத்தையுடையவர்களும் மனத்தைக் கவரும் மாலைகளை அணிந்தவர்களும் சிருங்காரச் செய்கைகளையும் சந்தோஷ முதலான மனத்தின் விகாரங்களையும் உடையவர்களும் ஸௌந்தரியத்தினல் சோபிக்கின்றவர்களுமாகி மோகிக்கும்படி செய்யுங்கள். உங்களுக்கு க்ஷேமமுண்டாகட்டும். என் பயத்தைப் போக்குங்கள். ஓ! சிறந்தவர்களான ஸ்திரீகளே! என்னை நானே ஸ்வஸ்தமில்லாதவனுக மனத்தினல் அறிகிறேன். ஓ! ஸ்திரீகளே! பெரிதும் கோரமுமான என்னுடைய அந்தப் பயத்தைச் சீக்கிரம் நிவ்ருத்தி செய்யுங்கள்' என்று கட்டளையிட்டான்.

அப்ஸரஸுகள், அவனை நோக்கி, 'ஓ! இந்திரரே! வலாஸுரனைக் கொன்றவரே! நீர் அந்த த்ரிசிரஸினிடமிருந்து பயத்தை அடையாமலிருக்கும்படி அவனை வஞ்சிக்கிற நிமித்தத்தில் முயற்சியைச் செய்வோம். ஓ! தேவரே! தவத்தின் நிதியான இவன் கண்களாலே எரிக்கிறவன்போலிருக்கிறன். அவனை வஞ்சிப்பதற்கு நாங்கள் சேர்ந்து செல்லுகின்றோம். அவனை வசம்பண்ணுவதற்கும் உம்

முடைய பயத்தை நீக்குவதற்கும் முயற்சி செய்வோம்' என்று சொன்னார்கள். பிறகு, அவர்கள் இந்திரனாலே அனுமதி கொடுக்கப் பெற்று த்ரிசிரஸின் ஸமீபத்தை அடைந்தார்கள். அவ்விடத்தில் சிறந்தவர்களான அந்த ஸ்திரீகள் பலவிதமான ச்ருங்கார சேஷ்டைகளாலே (அவனை) மோகிக்கும்படி செய்துகொண்டு நடனத்தைக் காண்பித்தார்கள்; அப்படியே, அவயவங்களிலிருக்கிற ஸௌந்தர்யத்தையும் காணபித்தார்கள். மிகவும் பெரிய தவத்தையுடையவனும் பூர்ணமான கடலுக்கு நிகரானவனுமான அவன் அவர்களைப் பார்த்தும் இந்திரியங்களை ஸ்வாதீனம்செய்துகொண்டு [1] ஸந்தோஷத்தை அடையவில்லை. பிறகு, அவர்களெல்லோரும், அதிகமான முயற்சியைச் செய்துவிட்டு, மறுபடியும் இந்திரனை, அடைந்து அஞ்சலி செய்துகொண்டு, அவனை நோக்கி, 'ஓ! பிரபுவே! நெருங்க முடியாதவனாயிருக்கிற அவனுடைய தைரியத்தைச் சலிக்கச்செய்வதற்கு முடியாது. ஓ! மஹாபாக்யவானே! பிறகு, உமக்கு எது செய்யவேண்டுமோ அதைச் செய்யலாம்' என்று சொன்னார்கள். ஓ! யுதிஷ்டிரா! (அப்பொழுது) மஹாபுத்திமானான இந்திரன் அப்ஸரஸுகளை மரியாதைசெய்து அனுப்பிவிட்டு, அவனுடைய வதத்தின் உபாயத்தைத் தானே ஆலோசித்தான்.

வீரனும் பிரதாபமுடையவனும் புத்திசாலியுமான அந்தத் தேவராஜன் மௌனமாக ஆலோசித்துத் திரிசிரனுடைய வதத்தை மனத்தில் நிச்சயம் செய்துகொண்டான். 'அவன்பொருட்டு இப்பொழுது வஜ்ராயுதத்தை எறிகிறேன். சீக்கிரத்தில் அவன் இல்லாமல் போய் விடுவான். சத்ரு துர்ப்பலனாயிருந்தாலும் விருத்தியடைந்தால் பலமுடையவனாவான். அவனை உபேக்ஷிக்கக்கூடாது' என்று சாஸ்திர ஸித்தாந்தப்படி நிச்சயித்து (அவனுடைய) வதத்தில் உறுதியான புததியைச்செய்து உடனே கோபமடைந்தவனாகித் த்ரிசிரனைக்குறித்து அக்னிக்கு நிகராயும் கோபரூபமுடையதாயும் பயத்தைக் கொடுப்பதாயுமிருக்கிற வஜ்ராயுதத்தை விடுத்தான். அவன் அந்த வஜ்ராயுதத்தால் பலமாக அடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டுக் (கீழே) விழுந்தான். வஜ்ராயுதத்தாற் கொல்லப்பட்டுப் பூதலத்தில் பர்வதத்தின் கொடுமுடிபோலத் தள்ளப்பட்டவனும் பர்வதம்போலப் படுத்திருப்பவனுமான அவனைப்பார்த்து, தேவராஜன் அவனுடைய தேஜஸினால் எரிக்கப்பட்டவனாகி, ஸுகத்தை அடையவில்லை. கொல்லப்பட்டவனாயிருந்தாலும் பிரகாசிக்கின்ற தேஜஸை உடையவனான

1 'மனங்கலங்காமல் இருந்துவிட்டான்' என்பது கருத்து.

அவன் ஜீவிக்கிறவனாகவே காணப்பட்டான். கொல்லப்பட்ட அவனு டைய சிரங்கள் யுத்தஸ்தலத்தில் உயிருள்ளவைகள்போல ஆச்சரிய கரமாயிருந்தன. அவனுடைய மூன்று சிரங்களுமே மூன்று பக்ஷிக ளாயின. ஓ! பாரத! விச்வரூபனுடைய அந்தச் சிரங்கள் தித்திரிப் பக்ஷியும் கலவிங்கப்பக்ஷியும் கபிஞ்சலபக்ஷியும் ஆயின. பிறகு, இந்திரனோ, மிகவும் உடல்நடுங்கி ஆலோசித்துக்கொண்டிருந்தான். ஓ! மஹாராஜனே! உடனே, தச்சன் ஒருவன், தோளில் கோடாலியை வைத்துக்கொண்டு, அந்த த்ரிசிரன் விழுந்து கிடக்கின்ற வனம் வந்து சேர்ந்தான். பயத்தை அடைந்தவனும் இந்திராணிக்கு நாயகனு மான அந்த இந்திரன், அவ்விடம் தற்செயலாகவந்த அந்தத் தச்சனைப் பார்த்து, 'நீ சீக்கிரம் இவனுடைய தலைகளை வெட்டு. நான் சொன்ன தைச் செய்' என்று பரபரப்புடன் சொன்னான்.

தச்சன், (அவனை நோக்கி), 'இவன் மிகவும் பெரிய தோளுடைய வனாயிருக்கிறானல்லவா? கோடாலி தெறித்துவிடும். ஸத்துக்களால் நிந்திக்கப்பட்ட காரியத்தை நானும் செய்யத் திறமையில்லாதவன்' என்று சொன்னான். இந்திரன், 'நீ பயப்படவேண்டாம். என்னால் சொல்லப்பட்ட இதை விரைவாகச் செய்யக்கடவாய். என்னுடைய அநுக்ரஹத்தால் உன்னுடைய ஆயுதம் வஜ்ராயுதத்திற்குச் சமமாகும்' என்று சொன்னான். தச்சன், 'இப்பொழுது, கோரமான இந்தக் காரி யத்தைச் செய்த உம்மை நான் யாரென்று அறிவேன்? இதைக் கேட்க விரும்புகிறேன். என்னிடம் உண்மையாகச் சொல்லும்' என்று கேட் டான். இந்திரன், 'ஓ! தச்சனே! நான் தேவர்களுக்கு அரசனான இந் திரனென்று நீ அறிந்துகொள். ஓ! தச்சனே! என்னால் சொல்லப் பட்டபடி இதைச் செய்யக்கடவாய். இந்த விஷயத்தில் ஆலோசனை செய்யாதே. திரிசிரனானவன் என்னால் கொல்லப்பட்டுப் படுத்துக் கிடக்கிறானென்றும் நீ அறிந்துகொள்' என்று சொன்னான். அந்தத் தச்சன் வணங்கி அஞ்சலி செய்துகொண்டு, 'ஓ! இந்திரரே! இவன் விஷயத்தில் குரூரமான கார்யத்தைச் செய்து ஏன் லஜ்ஜை அடைய வில்லை? ரிஷிபுத்ரனான இவனைக் கொன்றுவிட்டு உமக்குப் பிரம்ம ஹத்தியிலிருந்து பயமில்லையா?' என்று கேட்டான். இந்திரன், 'பின் னால் (பாவத்தின்) பரிசுத்திக்காக மிகவும் கடுமையான தர்மத்தை அநுஷ்டிப்பேன். பெரிதான வீர்யத்தையுடைய இந்தச் சத்ருவான வன் என்னால் வஜ்ராயுதத்தால் கொல்லப்பட்டான். ஓ! தச்சனே! இப்பொழுது, நான் நடுக்கமுற்று இவனிடமிருந்து பயப்படுகிறேன். சீக்கிரமாக நீ இவன் தலைகளைக் கொய்வாய். உனக்கு நான் அநுக்ரஹத்

தைச் செய்வேன். மனிதர்கள் யாகங்களில் உனக்குப் பசுவின் சிரத்தைப் பாகமாகக் கொடுப்பார்கள். தச்சனே! இது உனக்கு என்னுடைய அனுக்ரஹம். சீக்கிரம் என்னுடைய இஷ்டத்தைச் செய்' என்று சொன்னான். அப்பொழுது, அந்தத் தச்சன் இதைக்கேட்டு இந்திரனுடைய வசனத்தினால் உடனே கோடாலியால் திரிசிரனுடைய தலைகளை வெட்டினான். வெட்டப்பட்டபொழுது அவைகளிலிருந்து உடனே எங்கும் கபிஞ்சலங்கள் தித்திரிகள் கலவிங்கங்கள் என்கிற பக்ஷிகள் வெளியில் வந்தன. எதனால் வேதங்களை அத்யயனம் செய்தானோ ஸோமரஸத்தையும் பானம்செய்தானோ அவனுடைய அந்த முகத்திலிருந்தும் சீக்கிரமாகக் கபிஞ்சலங்கள் வெளிவந்தன. ஓ! அரசனே! எதனால் எல்லாத் திக்குக்களையும் விழுங்குகிறவன்போலப் பார்த்தானோ, அவனுடைய அந்த முகத்திலிருந்தும் தித்திரிகளென்கிற பக்ஷிகள் வெளிவந்தன. அந்த த்ரிசிரனுடைய எந்த முகமானது ஸுராபானம் செய்ததோ அதிலிருந்தும் கலவிங்கமென்னும் குருவிகளும் பருந்துகளும் உயரக்கிளம்பின. அந்தச் சிரங்கள் அறுக்கப்பட்ட பிறகு, அந்தக்ஷணமே மகவானும் தேவர்களுக்கு ஈச்வரனுமான தேவன் கவலையில்லாதவனாகித் தச்சனுக்கு அப்படியே வரத்தை அளித்துவிட்டு மிகுந்த ஸந்தோஷத்துடன் ஸ்வர்க்கம் சென்றான். தச்சனும் தன் வீடு சேர்ந்தான்.

தேவசத்ருக்களை நாசம்செய்பவனான இந்திரன் சத்ருவைக் கொன்றுவிட்டுத் தன்னைக் கிருதார்த்தனாக நினைத்தான். தச்சனும் தன் வீடு சென்று ஒருவனிடமும் சொல்லவே இல்லை. அவ்விதம் [1] போனவனான விச்வரூபனை ஒருவருஷம் வரையில் ஒருவரும் அறியவில்லை. [2] [ஓ! பிரபுவே! ஒருவருஷம் சென்ற பிறகு, பசுபதியினுடைய பூதங்கள் 'எங்களுடைய பிரபுவான இந்திரன் ப்ரம்மஹத்தி செய்தவன்' என்று அவனை நிந்தித்தன. அப்பொழுது, பாகசாஸனனான இந்திரன் கோரமான வ்ரதத்தை அனுஷ்டித்துத் தவத்தையுடையவனாகித் தேவர்களோடும்மருத்துக்களுடைய ஸமூகங்களோடும் ஸமுத்திரங்களிடத்திலும் பூமியினிடத்திலும் விருக்ஷங்களிடத்திலும் ஸ்திரீகளிடத்திலும் பிரம்மஹத்தியைப் பிரித்துக்கொடுத்து அவைகளுக்கு வரங்களையும் கொடுத்தான். வரத்தை அளிப்பவனான இந்திரன் கடலுக்கும் பூமிக்கும் மரங்களுக்கும் மாதர்களுக்கும் வரத்தையளித்து அந்தப் பிரம்மஹத்தியைத் தள்ளினான். பிறகு, பகவானான இந்திரன் சுத்தனாகத்

1 'ஆகதம்' என்று பாடங்கொண்டு, 'வந்தவனான இந்திரனை' என்றும் கொள்ளலாம். 2 [ ] இது அதிக பாடம்.

தேவர்களாலும் உலகத்து ஜனங்களாலும் பூஜிக்கப்பட்டு மஹரிஷிகளால் பூஜிக்கப்படுகிறவனுகி இந்திரஸ்தானத்தை அடைந்தான்.]

பிறகு, த்வஷ்டாவென்கிற ஸ்ருஷ்டிகர்த்தன், இந்திரனுல் புத்ரன் கொல்லப்பட்டதைக் கேட்டுக் கோபத்தால் கண்கள் சிவந்து, 'தவம் செய்பவனும் எப்பொழுதும் பொறுமையுடையவனும் அடக்கமுடையவனும் இந்திரியங்களை ஜயித்தவனுமான எனது புத்ரனைக் குற்றமில்லாமலிருக்கையில் கொன்றமையால் இந்திரனுடைய நாசத்தின்பொருட்டு நான் விருத்திரனை உண்டுபண்ணுகிறேன். உலகத்தார்கள் எனது வீர்யத்தையும் தவத்தின் மிக்க பலத்தையும் பார்க்கட்டும். துராத்மாவும் பாவபுத்தியுள்ளவனுமான அந்தத் தேவேந்திரனும் பார்க்கட்டும்' என்று சொல்லிவிட்டு, உடனே, தவமுடையவனும் மிகப் பெரிதான புகழுடையவனுமான த்வஷ்டாவானவன் ஸ்நானஞ்செய்து கோபமுடையவனுகி அக்நியில் ஆஹுதி செய்து கோரனுன விருத்ரனை உண்டு பண்ணி, 'ஓ! இந்த்ரசத்ருவே! என் தவத்தின் பெருமையினுல் விருத்தியடையக் கடவாய்' என்று சொன்னுன். அவன் ஆதித்யனுக்கும் அக்னிக்கும் ஸமானமாக ஸ்வர்க்கத்தை அளாவிக்கொண்டு விருத்தியடைந்தான். பிரளயகால ஸூரியன்போலக் கிளம்பினவனுன அவன், 'நான் என்ன செய்யவேண்டும்?' என்று வினவினுன். 'இந்திரனைக் கொல்' என்று (த்வஷ்டா) சொல்லக்கேட்டு, உடனே ஸுவர்க்கத்தையும் அடைந்தான்.

பிறகு, ஓ! குருஸ்ரேஷ்டா! மிகவும் கோபத்தை அடைந்தவர்களான விருத்ரனுக்கும் இந்திரனுக்கும் பெரிதும் மிக்க கோரமுமான யுத்தமானது தொடர்ச்சியாக நேரிட்டது. அப்பொழுது, வீரனுன விருத்ராஸுரன் நூறு அஸ்வமேதயாகஞ் செய்தவனும் சக்ரனுமான தேவேந்திரனைப் பிடித்துக் கோபத்தோடு வாயைத்திறந்து அதில் போட்டுக்கொண்டான். இந்திரன் விருத்ரனுல் விழுங்கப்படும்பொழுது மிக்க பலத்தையுடைய அந்தத் தேவஸ்ரேஷ்டர்கள் பரபரப்புடையவர்களாகி விருத்ராஸுரனை நாசஞ்செய்கிறதான கொட்டாவியை உண்டு பண்ணினுர்கள். உடனே, விருத்ரன் கொட்டாவிவிட்டு வாயைத் திறக்கவே, வலனைக்கொன்ற இந்திரன் தன் அங்கங்களைச் சுருக்கிக்கொண்டு வெளியில் வந்தான். அதுமுதல் கொட்டாவியானது உலகத்திலுள்ள பிராணிகளை அடைந்தது. தேவர்களெல்லாரும், இந்திரன் வெளியில் வந்ததைப்பார்த்து ஸந்தோஷத்தை அடைந்தனர். ஓ! பரதஸ்ரேஷ்டனே! பிறகு, மறுபடியும் பரபரப்போடுகூடி விருத்ரனும் வாஸவனுமாகிய இருவர்களுக்கும் அப்

பொழுதே நீண்டகாலம் கோரமான யுத்தமானது நேரிட்டது. பலிஷ்டனும் த்வஷ்டாவினுடைய தேஜோ பலத்தோடுகூடினவனுமான விருத்திரன் யுத்தத்தில் விருத்தி அடைந்தபொழுது இந்திரன் பின்னடைந்தான். இந்திரன் திரும்பிவர, தேவர்கள் மிகவும் வருத்தத்தை அடைந்தார்கள். ஓ! பாரத! அவர்களெல்லாரும் இந்திரனோடுகூடி த்வஷ்டாவினுடைய தேஜஸினால் மோகத்தை அடைந்தவர்களாகி முனிவர்களோடு சேர்ந்து ஆலோசனை செய்தார்கள். ஓ! அரசனே! இதற்கு என்ன செய்யத்தக்கதென்று ஆலோசித்து எல்லாரும் பயத்தால் மோகமுற்றவர்களாகி மஹாத்மாவும் அழிவற்றவருமான விஷ்ணுவை மனத்தால் அடைந்தார்கள். எல்லாரும் விருத்ரா ஸுரனுடைய வதத்தை விரும்பி மந்தரபர்வதத்தின் உச்சியில் இருந்தார்கள்.

## பத்தாவது அத்யாயம்.

## ஸேநோத்யோகபர்வம். (தொடர்ச்சி.)

**(மஹாவிஷ்ணுவின் கட்டளையினால் மஹரிஷிகள் இந்திரனுக்கும் வ்ருத்ரனுக்கும் ஸமாதானம் செய்வித்ததும், இந்திரனால் விருத்ரன் கொல்லப்பட்டதும், பிரம்மஹத்தி இந்திரனைப் பற்றிக்கொண்டதும், அவன் ஓடி ஒளிந்ததும்.)**

இந்திரன், (தேவர்களை நோக்கி), 'ஓ! தேவர்களே! அழிவற்றதான இந்த ஜகம் முழுவதும் விருத்ரனால் வியாபிக்கப்பட்டது. அவனை எதிர்த்து அடிப்பதற்குத் தக்கதாக ஒன்றுமில்லையல்லவா? நான் முன்பு ஸமர்த்தனாயிருந்தேன்; இப்பொழுது அசக்தனாயிருக்கிறேன். ஆகையால், எவ்விதம் செய்யத்தக்கது? உங்களுக்கு க்ஷேமமுண்டாகுக. அவனை அணுகமுடியாதவனென்பது என்னுடைய கருத்து. பலமும் பெரிய சரீரமும் யுத்தத்தில் அளவற்ற பராக்ரமமும் உடையவனான அவன், தேவர்கள் அஸுரர்கள் மனிதர்கள் இவர்களுடன் கூடின மூவுலகமாகிய அனைத்தையும் கபளீகரிப்பான். ஆகையால், தேவர்களே! இந்த நிச்சயத்தைக் கேளுங்கள். விஷ்ணுவினுடைய ஸ்தானத்தை அடைந்து மஹாத்மாவான அவருடன் சேர்ந்து ஆலோ

சித்துத் துர்ப்புத்தியுள்ள அஸுரனுடைய வதத்தின் உபாயத்தை அறிவோம்' என்று சொன்னான்.

இவ்விதம் இந்திரன் சொன்னவுடன், வ்ருத்ரனிடமிருந்துமுண்டான பயத்தால் வருத்தமுற்ற ரிஷிகணங்களும் தேவர்களுமான எல்லாரும் சரணமடைவதற்குத்தகுந்தவரும் மிக்க பலமுடையவருமான மஹாவிஷ்ணுவைச் சரணமடைந்து, தேவர்களுக்குத் தலைவரான அவரைநோக்கி, 'ஓ! பகவானே! முன்காலத்தில் நீர் மூன்று காலடிகளால் மூன்று உலகங்களையும் வியாபித்தீர்; அமிருதத்தையும் அஸுரர்களிடமிருந்து அபகரித்தீர். அஸுரர்களையும் யுத்தத்தில் கொன்றீர்; பலியென்கிற பெரிய அஸுரனைக் கட்டி இந்திரனைத் தேவர்களுக்கு அதிபதியாகச் செய்தீர். நீர் எல்லாத்தேவர்களுக்கும் பிரபு. உம்மால் இவ்வுலக முழுதும் வியாபிக்கப்பட்டிருக்கிறது. ஓ! மஹாதேவரே! எல்லா உலகங்களாலும் வணங்கப்பட்ட தேவர் நீரே. ஓ! தேவஶ்ரேஷ்டரே! இந்திரனோடு கூடின தேவர்களுக்கு நீர் கதியாகக் கடவீர். ஓ! அஸுரர்களை நாசம் செய்பவரே! விருத்ராஸுரனால் இந்த எல்லா உலகமும் வியாபிக்கப்பட்டது' என்று சொன்னார்கள்.

விஷ்ணுவானவர், (அவர்களை நோக்கி), 'உங்களுக்கு உத்தமமான நன்மையானது என்னால் அவஶ்யம் செய்யத்தக்கது. ஆகையால், இவன் நசிக்கக்கூடிய உபாயத்தைச் சொல்லுகிறேன். எந்த இடத்தில் விஶ்வரூபத்தைத் தரிக்கிறவனான இவனிருக்கிறானோ அந்த இடத்தில் ரிஷிகளோடும் கந்தர்வர்களோடும் செல்லுங்கள். அவனுக்கு ஸமாதானத்தைப் பிரயோகியுங்கள். அதனால், அவனை ஜயிப்பீர்கள். ஓ! தேவர்களே! என்னுடைய ஆற்றலால் இந்திரனுக்கு ஜயமானது ஏற்படப்போகின்றது. நானும் காணப்படாமல் இவனுடைய சிறந்த வஜ்ராயுதத்தில் பிரவேசிப்பேன். ஓ! தேவஶ்ரேஷ்டர்களே! ரிஷிகளோடும் கந்தர்வர்களோடும் செல்லுங்கள். விருத்ரனுக்கு இந்திரனோடு நட்பைச்செய்யுங்கள். தாமதம் வேண்டாம்' என்று சொன்னார்.

தேவரால் இவ்விதம் சொல்லப்பட்டபொழுது, ரிஷிகளும் தேவர்களும் சேர்ந்து இந்திரனை முன்னிட்டுக்கொண்டு சென்றார்கள். மிக்க காந்தியுடையவர்களும் இந்திரன் முதலான தேவதைகளுடன் கூடினவர்களுமான எல்லாருமே, ஸமீபத்தைஅடைந்து, அவ்விடத்தில் (விருத்திரன்) ஸூரிய சந்திரர்கள் போலத் தேஜஸால் ஜ்வலிக்கிறவனும் பத்துத் திக்குக்களையும் தபிக்கச் செய்கிறவனும் மூன்று உலகங்களையும் விழுங்குகின்றவனுமாயிருப்பதைப் பார்த்தார்கள். முனி

வர்கள், பிறகு, அருகிற்சென்று அவனை நோக்கி, 'ஓ! வெல்லப் படாதவனே! உன்னுடைய தேஜஸால் இந்த உலகம் முழுதும் வியாபிக்கப்பட்டது. பலசாலிகளில் சிறந்தவனே! நீயும் இந்திரனை ஜயிக்கச் சக்தனுயில்லை. இவ்விடத்தில் யுத்தம் செய்கிறவர்களான உங்களுக்கு மிகவும் நீண்டதான காலமும் சென்றுவிட்டது. தேவர்கள் அஸுரர்கள் மனுஷ்யர்களோடுகூடின எல்லாப் பிரஜைகளும் பீடிக்கப்படுகின்றன. ஆகையால், விருத்திரா! உனக்கு இந்திரனோடு எப்பொழுதும் ஸ்நேகமானது இருக்கட்டும். நீயும் ஸுகத்தையும் அழிவற்றவையான இந்திரனுடைய உலகங்களையும் அடைவாய்' என்று ப்ரியமான வார்த்தையைச் சொன்னார்கள். மிக்க பலசாலியான விருத்ராஸுரனோ, ரிஷிகளுடைய வார்த்தையைக்கேட்டு, உடனே அந்த முனிவர்களெல்லாரையும் தலையால் வணங்கி, 'ஓ! மஹாபாக்யவான்களே! நீங்களெல்லாரும் கந்தர்வர்களெல்லாரும் சொல்லியவற்றை எல்லாம் கேட்டேன். ஓ! குற்றமற்றவர்களே! என்னுடைய வார்த்தையையும் கேளுங்கள். நானும் இந்திரனுமாகிய எங்கள் இருவர்களுக்கும் சேர்க்கையானது எப்படி ஏற்படும்? ஓ! தேவர்களே! [1] இரண்டு தேஜஸுகளுக்கு ஸ்நேகமானது எப்படி ஏற்படும்?' என்று சொன்னான்.

முனிவர்கள், (அவனை நோக்கி), 'ஒருகால் நல்லோர்களுடைய சேர்க்கையை அடைய விரும்பவேண்டும். அதன் பிறகு, க்ஷேமமே உண்டாகும். நல்ல மனிதனுடன் சேர்க்கையைத் தள்ளக்கூடாது. ஆகையால், நல்லவர்களுடைய சேர்க்கையை அடைய விரும்பவேண்டும். நல்லோர்களுடைய சேர்க்கை எப்பொழுதும் உறுதியாகவே இருக்கும். அறிவுள்ளவன், காரியங்களுக்குச் சங்கடம் நேர்ந்திருக்கையில், காரியங்களைச் சொல்லவும் வேண்டும். நல்லவர்களுடன் நட்பானது பெரும்பயனுள்ளது. ஆகையால், தீரனானவன் நல்லவனைக் கொல்ல விரும்பக்கூடாது. இந்திரன், பெரியோர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டவனும் நிந்திக்கத்தகாதவனும் மஹாத்மாக்களுக்குப் புகலிடமும் ஸத்யத்தை உரைப்பவனும் தர்மத்தை உணர்ந்தவனும் ஸூக்ஷ்மமான நிச்சயத்தை யுடையவனுமானவன். அப்படிப்பட்ட இந்திரனுடன் உனக்கு எப்பொழுதும் நட்பு ஏற்படட்டும். இவ்விதம் நம்பிக்கையை அடையக்கடவாய். உனக்கு வேறுவிதமான எண்ணம் வேண்டாம்' என்று சொன்னார்கள்.

1 பலம் ஸமமாயிருந்தால் நட்பு உண்டாகாதென்பது.

மிக்க காந்தியுடைய விருத்ரன், மஹரிஷிகளுடைய வார்த்தையைக் கேட்டு, 'ஓ! தவமுடையவர்களே! ஸர்வஜ்ஞர்களான நீங்கள் நிச்சயம் எனக்குப் பூஜ்யர்களாயிருப்பவர்கள். ஓ! தேவர்களே! நான் எதைச் சொல்லுகிறேனோ அதெல்லாம் செய்யப்படுமேயானல், அப்பொழுது, தேவர்கள் என்னைநோக்கி என்னசொன்னார்களோ அவையெல்லாவற்றையும் செய்வேன். ஓ! வேதியர்களிற் சிறந்தவர்களே! நான், தேவர்களுக்கும் இந்திரனுக்கும் உலர்ந்ததினாலும் ஈரமுள்ளதினாலும் கல்லினாலும் மரத்தினாலும் சஸ்த்ரத்தினாலும் அஸ்திரத்தினாலும் பகலிலும் ராத்ரியிலும் கொல்லத்தகாதவன் ஆகவேண்டும். இவ்விதமானல் எனக்கு இந்திரனோடு எந்நாளும் சேர்க்கையானது விருப்பமாயிருக்கிறது', என்று சொன்னான்.

ஓ! பரதஸ்ரேஷ்டா! ரிஷிகள் அவனை நோக்கி, 'ஸரி' என்றே சொன்னார்கள். இவ்விதம் சேர்க்கையானது உண்டானபொழுது, விருத்ரன் மிக்க ஸந்தோஷத்தை அடைந்தவனானன். பிறகு, பிரகாசிக்கின்ற தேஜஸோடுகூடின ரிஷிகள் இந்திரனுக்கும் விருத்ரனுக்கும் ஒருவரோடொருவர்க்கு ஸமாதானத்தைச் செய்துவிட்டு மறுபடியும் வந்தபடியே சென்றார்கள். விருத்ரனோடுகூடின இந்திரனும் எப்பொழுதும் ஸந்தோஷமுள்ளவனாயிருந்தான்; (ஆனாலும்), விருத்ரனுடைய வதத்திற்குப் பொருந்தினவைகளான உபாயங்களை ஆலோசித்தான். தேவராஜனான அவன், தனக்கு நட்புச்செய்கையில் செய்யப்பட்ட கட்டுப்பாட்டையும் ரிஷிகளால் சொல்லப்பட்டதையும் எப்பொழுதும் நினைக்கிறவனும் ஸமயத்தைத் தேடுகிறவனும் மிக்க வருத்தமுற்றவனுமாகி வஸித்தான். அவன் ஒருஸமயம் கடற்கரையில் பெரிய அஸுரனான விருத்ரனைக் கண்டான். ஸந்தியாகாலம் நேரிட்டு மிகவும் பயங்கரமான வேளையும் வந்தவுடன், பகவானான இந்திரன் மஹாத்மாவான விஷ்ணுவினுடைய வரதானத்தை நினைத்து, 'இப்பொழுது பயங்கரமான ஸந்தியாகாலமானது ஏற்பட்டிருக்கிறது. இரவும் அன்று; பகலும் அன்று. எல்லாவற்றையும் அபஹரித்தவனும் பகைவனுமான இந்த விருத்ரனும் என்னால் அவஸ்யம் கொல்லப்பட வேண்டியவன். மஹாஸுரனும் மஹாபலசாலியும் பெரிதான சரீரத்தையுடையவனுமான விருத்ரனை வஞ்சித்துக் கொல்லாமலிருந்தால் எனக்கு நன்மை உண்டாகாது' என்று ஆலோசித்தான். இவ்விதம் ஆலோசிக்கிறவனான இந்திரன் மஹாவிஷ்ணுவை நினைக்க, உடனே, சமுத்திரத்தில் மலைபோன்ற நுரையைக் கண்டான். 'இது உலர்ந்ததும் அன்று; ஈரமானதும் அன்று; அப்படியே, இது சஸ்திரமும் அன்று. இதை

விருத்ரனைக்குறித்து எறிவேன். அவன் க்ஷணப்பொழுதிலே நசித்து விடுவான்' என்று நிச்சயித்து, உடனே [1] வஜ்ரத்துடன் சீக்கிரமாக அந்த நுரையை விருத்ரனிடத்தில் பிரயோகித்தான். அப்பொழுது விஷ்ணுவானவர் அந்த நுரையிற் புகுந்து விருத்ராஸுரனை நாசம் செய்தார்.

விருத்ரன் கொல்லப்பட்டவுடனே, திக்குக்கள் இருளில்லாதவைகளாயின. மங்களகரமான காற்றும் வீசிற்று. அப்படியே, பிரஜைகளும் ஸந்தோஷத்தை அடைந்தன. உடனே, தேவர்களும் கந்தர்வர்களும் யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் பெரிய உரகர்களும் ரிஷிகளும் அந்த மஹேந்திரனைப் பலவிதமான ஸ்தோத்ரங்களாலே துதித்தார்கள். எல்லாப் பிராணிகளாலும் நமஸ்கரிக்கப்பட்டு எல்லாப் பிராணிகளையும் ஸமாதானம் செய்தான். பகைவனைக் கொன்று மிக்க ஸந்தோஷத்தை அடைந்த மனத்தோடு கூடியவனும் தர்மத்தை உணர்ந்தவனுமான இந்திரன் தேவர்களோடு மூன்று உலகங்களிலும் சிறந்தவரான விஷ்ணுவைப் பூஜித்தான். மிக்க வீர்யமுடையவனும் தேவர்களுக்குப்பயத்தைச் செய்கிறவனுமான விருத்திரன் கொல்லப்பட்டவுடனே, இந்திரனானவன் அஸத்யத்தினால் அவமதிக்கப்பட்டவனும் மிகவும் கவலையுள்ள மனமுள்ளவனுமானான். அவன் முன்னும் திரிசிரனைக் கொன்றதனாலுண்டான பிரம்மஹத்தியினால் அவமதிக்கப்பட்டிருந்தான். [2] [வலனையும் விருத்ரனையும் கொன்றவனான அவன் பயமற்றவையான மஹாதேவருடைய பூதங்களால் மறுபடியும் பிரம்மஹத்திக்காரனென்று நிந்திக்கப்பட்டு லஜ்ஜை அடைந்தான்.] அந்தத் தேவேந்திரன் உலகங்களின் கோடியை அடைந்து தன் செய்கைகளால் அவமதிக்கப்பட்டவனும் பெயரிழந்தவனும் அறிவிழந்தவனுமாகி ஒருவராலும் அறியப்படவில்லை. ஜலத்தில் மறைந்து நீர்ப்பாம்புபோலச் சஞ்சரித்துக்கொண்டு வஸித்தான். பிரம்மஹத்தியினிடமிருந்தும் உண்டான பயத்தால் பீடை அடைந்த தேவேந்திரன் ஒளிந்தவுடனே, பூமியானது விருக்ஷங்களற்றுக் காய்ந்த காடுகளையுடையதாகி நாசம் அடைந்ததுபோல ஆயிற்று. ஆறுகள் வெள்ளமற்றன. ஏரிகள் ஜலமற்றன. பிராணிகளுக்கு மழையில்லாமையாலுண்டாகும் பெரிதான கலக்கமுமுண்டாயிற்று. தேவர்களும் அப்படியே எல்லா மஹரிஷிகளும் மிக்க நடுக்கத்தை அடைந்தார்கள். உலகமெல்லாம் அரசனில்லாததாகி உபத்ரவங்களால் பீடிக்கப்பட்டது. அப்பொழுது, தேவலோகத்

1 வஜ்ரத்தின் சக்தி கலந்திருந்தது என்பது.
2 [ ] இது அதிக பாடம்.

தில் தேவர்களும் தேவரிஷிகளும் தேவராஜனை இழந்தவர்களாகி, "நமக்கு யார் அரசனுவான்?" என்று பயமடைந்தவர்களானார்கள். தேவர்களில் ஒருவரும் தேவராஜ்யத்தில் எண்ணங்கொள்ளவில்லை.

---

பதினோராவது அத்யாயம்.

## ஸேநோத்யோகபர்வம். (தொடர்ச்சி.)

(நஹுஷன் இந்திரப்பட்டம் பெற்றதும், அவனால் விரும்பப்பட்ட இந்திராணிக்குப் பிருஹஸ்பதி அபயம் கொடுத்ததும்.)

பிறகு, அந்த ரிஷிகளும் ஸ்வர்க்கத்திற்குத் தலைவர்களான எல்லாத் தேவர்களும், 'ஸ்ரீமானும் சிறந்த பராக்ரமமும் புகழும் பொருந்தியவனும் எப்பொழுதும் தர்மசீலனுமாயிருக்கிற நகுஷனைவன் தேவராஜ்யத்தில் அபிஷேகம் செய்யப்படவேண்டும்' என்று சொல்லிக்கொண்டு சென்று, 'ஓ! பூபதியே! நீர் எங்களுக்கு அரசராயிருக்கவேண்டும்' என்று சொன்னார்கள். ஓ! அரசனே! அந்த நகுஷன், தேவர்களையும் பித்ருக்களோடுகூடின முனிகணங்களையும் நோக்கித் தனக்கு நன்மையை அடைய விருப்பமுள்ளவனாகி, 'நான் வலிமையற்றவன். உங்களை ரக்ஷிப்பதில் எனக்குச் சக்தியில்லை. பலவானான ஒருவனை விசாரித்து அறியுங்கள். இந்திரனிடத்தில் எப்பொழுதும் பலமிருந்ததன்றோ?' என்று சொன்னான். மறுபடியும், ரிஷிகளை முன்னிட்ட எல்லாத் தேவர்களும் அவனை நோக்கி, 'எங்களுடைய தவத்தையும் அடைந்து ஸ்வர்க்கத்தில் அரசாட்சிசெய்யும். எங்களுக்கோ, ஒருவரிடத்தில் ஒருவருக்குக் கோரமான பயமுண்டாயிருக்கிறது; ஸந்தேகமில்லை. ஓ! ராஜஸ்ரேஷ்டரே! அபிஷேகம் செய்துகொள்ளும். ஸ்வர்க்கத்தில் அரசராயிரும். உம்முடைய நேத்ரங்களிற் புலப்பட்ட தேவர்கள் அஸுரர்கள் யக்ஷர்கள் ரிஷிகள் ராக்ஷஸர்கள் பித்ருக்கள் கந்தர்வர்கள் பூதங்கள் இவர்களுடைய தேஜஸை கிரகித்துவிடுவீர்; பலவானுமாவீர். எப்பொழுதும், தர்மத்தை முன்னிட்டு எல்லா உலகங்களுக்கும் அதிபதியாக இருக்கக் கடவீர். ஸ்வர்க்கத்தில் பிரம்மரிஷிகளையும் தேவர்களையும் ரக்ஷிக்கக் கடவீர்' என்று சொன்னார்கள்.

ஓ! ராஜஸ்ரேஷ்டனே! உடனே, அவன் அபிஷேகம் செய்யப்பெற்று ஸுவர்க்கத்தில் அரசனாயிருந்துகொண்டு எப்பொழுதும் தர்மத்தை முன்னிட்டு எல்லா உலகங்களுக்கும் அதிபதியானான். மிக

வும் அரிதான வரத்தை அடைந்து ஸுவர்க்கத்தில் ராஜ்யத்தைப் பெற்று எப்பொழுதும் தர்ம சித்தமுள்ளவனாயிருந்து, (பிறகு) காம சித்தமுள்ளவனானான். பிறகு, தேவராஜனான நகுஷன் தேவர்களுடைய எல்லா உத்யானங்களிலும் நந்தனவனத்தின் பக்கத்துத் தோட்டங்களிலும் கைலாசத்திலும் இமயமலையின் உச்சியிலும் மந்தர பர்வதத்திலும் ச்வேதபர்வதத்திலும் ஸஹ்யபர்வதத்திலும் மஹேந்திரபர்வதத்திலும் மலயபர்வதத்திலும் ஸமுத்திரங்களிலும் நதிகளிலும் அப்ஸரஸுகளாலும் தேவகன்னிகைகளாலும் சூழப்பட்டவனாகிப் பலவிதமாக க்ரீடை செய்கிறவனும் கேட்க மனோஹரமான சிறந்த பல கதைகளையும் எல்லா வாத்யங்களையும் இன்பமான ஸ்வரத்தோடு கூடின கானத்தையும் கேட்கிறவனாகவும் இருந்தான். விச்வாவஸுவும் நாரதரும், கந்தர்வர்கள் அப்ஸரஸுகள் இவர்களுடைய கூட்டங்களும், உருவங்கொண்டவைகளான ஆறு ருதுக்களும் தேவேந்திரனைச் சூழ்ந்திருந்தார்கள். வாஸனையுடையதும் மனத்திற்கு இனியதும் இயற்கையில் குளிர்ந்ததுமான காற்றானது வீசிற்று.

துஷ்டசித்தமுடையவனான அந்த நகுஷன் இவ்விதம் விளையாடிக்கொண்டிருக்கும்பொழுது, இந்திரனுக்கு இஷ்டமஹிஷியான தேவியானவள் அவன் கண்ணிற்கு எதிர்ப்பட்டாள். துஷ்டசித்தமுடையவனான அவன், அவளைக்கண்டு ஸபையிலுள்ள எல்லாரையும் நோக்கி, ‘இந்திரனுக்கு மஹிஷியான தேவியானவள் என்னை ஏன் அடையவில்லை? நான் தேவர்களுக்கு இந்திரனாயிருக்கிறேன். அப்படியே, உலகங்களுக்குத் தலைவனாயிருக்கிறேன். இந்த்ராணியானவள் இப்பொழுது சீக்கிரம் என்னுடைய இருப்பிடம் வரவேண்டும்’ என்று சொன்னான். அதைக்கேட்டுத் தேவியானவள் மனத்தில் வருத்தமுற்று ப்ருஹஸ்பதியை நோக்கி, ‘ஓ! பிராம்மணரே! நகுஷனிடமிருந்தும் என்னைக் காப்பாற்றும். உம்மை நான் சரணமடைந்தேன். ஓ! பிராம்மணரே! நீர் என்னை எல்லா லக்ஷணமும் பொருந்தியவளென்று நன்கு உரைக்கின்றீர். தேவராஜனுக்கு ப்ரியையும் மிக்க ஸுகத்தைஅடைகிறவளும் வைதவ்யத்தை அடையாதவளும் ஒரேபதியையுடையவளும் பதிவ்ரதையுமாகச் சொல்லியிருக்கிறீர். அந்த வார்த்தையை ஸத்யமாகச் செய்யும். ஓ! பகவானே! ஈச்வரரே! நீர் இதுவரையில் சிறிதும் பொய்சொன்னதில்லை. ஓ! பிராம்மணச்ரேஷ்டரே! ஆகையால், உம்மால் சொல்லப்பட்ட இது ஸத்தியமாகட்டும்’ என்று சொன்னாள்.

அப்பொழுது, பிருஹஸ்பதி, பயத்தால் மயக்கத்தை அடைந்தவளான இந்திராணியை நோக்கி, 'தேவி! நான் உன் விஷயத்தில் சொன்னது ஸத்தியமே ஆகும்; இது நிச்சயம். சீக்கிரத்தில் தேவராஜனான இந்திரன் இவ்விடம் வருவான். அவனைப் பார்ப்பாய். நகுஷனிடம் பயப்படவேண்டாம். இதனை உனக்கு ஸத்தியமாகச் சொல்லுகிறேன். சீக்கிரத்தில் உன்னை நான் இந்திரனோடு சேர்த்துவைப்பேன்' என்று சொன்னார். பிறகு, அந்த நகுஷராஜன், இந்திராணி அங்கிரஸின் புத்ரரான பிருஹஸ்பதியினுடைய வீட்டை அடைந்ததைக் கேட்டு, உடனே கோபத்தை அடைந்தான்.

## பன்னிரண்டாவது அத்யாயம்.

## ஸேநோத்யோகபர்வம். (தொடர்ச்சி.)

(நகுஷனை மகிழ்வித்தற்காகத் தேவர் முதலியோர் வேண்டியும் பிருஹஸ்பதி இந்திராணியை விடாதிருந்ததும், பிருஹஸ்பதியின் அனுமதியின் மேல் நகுஷனை வஞ்சிப்பதற்காக இந்திராணி ஸமயத்தை ஏற்படுத்திக்கொள்ள அவனிடம் சென்றதும்.)

நகுஷன் கோபங்கொண்டதைப் பார்த்து, தேவர்கள், ரிஷிகளை முன்னிட்டுக்கொண்டு, தேவராஜனும் கோரமான பார்வையுடையவனுமான அவனை நோக்கி, 'ஓ! தேவராஜரே! கோபத்தை விடும். ஓ! விபுவே! நீர் கோபித்தால் அஸுரர்கள், கந்தர்வர்கள், கின்னரர்கள், மஹாநாகர்கள் இவர்களோடு கூடின உலகம் நடுங்கும். ஓ! ஸாதுவே! இந்தக் கோபத்தைவிடும். உம்மைப் போன்றவர்கள் கோபத்தை அடையார்கள். அந்தத் தேவியானவள் பிறனுடைய மனைவி. ஓ! தேவராஜரே! மனம் தெளியக்கடவீர். பரதாரத்தைக் கருதிச் சேரும் பாவத்திலிருந்து மனத்தைத் திருப்பும். தேவராஜராக இருக்கிறீர். உமக்கு க்ஷேமமுண்டாக வேண்டும். பிரஜைகளைத் தர்மத்துடன் காப்பாற்றும்' என்று சொன்னார்கள்.

இவ்விதம் சொல்லப்பட்டும், காமத்தால் மதிமயக்கங் கொண்ட அவன் அந்த வார்த்தையை ஏற்றுக்கொள்ளவில்லை. உடனே, தேவர்களுக்கு அதிபதியான நகுஷன், தேவர்களை நோக்கி, இந்திரன் விஷயமாய் இவ்விதம் சொன்னான். 'முன்காலத்தில் பதி உயிருடனிருக்கையில் ரிஷிபத்நியும் புகழ்பெற்றவளுமான அகலியையை இந்திரன் ஆக்ரமித்

தானே; அவனை நீங்கள் ஏன் தடுக்கவில்லை? முன் காலத்தில், அநேகம் கொடிய செய்கைகளும் தர்ம விரோதமான த்ரிசிரவதம் முதலியவைகளும் விருத்திரவத முதலியவற்றில் வஞ்சனைகளும் இந்திரனால் செய்யப்பட்டனவே; அவன் உங்களால் ஏன் தடுக்கப்படவில்லை? தேவியானவள் என்னை வந்தடையட்டும். இது இவளுக்கு மேலான நலம். ஓ! தேவர்களே! இப்படியானால் உங்களுக்கும் எப்பொழுதும் க்ஷேமம் உண்டாகும்' என்று சொன்னான். அப்பொழுது, தேவர்கள், 'ஓ! ஸ்வர்க்கலோகாதிபதியே! நீர் விரும்புகிறபடி இந்திராணியை அழைத்து வருகிறோம். ஓ! வீரரே! இந்தக் கோபத்தை விடும். ஓ! தேவர்களுக்குத் தலைவரே! ப்ரீதி அடைந்தவராகக்கடவீர்' என்று சொன்னார்கள்.

ஓ! பாரத! தேவர்கள் ரிஷிகளோடுகூடி அவனைநோக்கி இவ்விதம் சொல்லிவிட்டு, இந்திராணியைக்குறித்து நல்லதல்லாத வார்த்தையைச் சொல்லுவதற்கு ப்ருகஸ்பதியை அடைந்தார்கள். (அவரை நோக்கி), 'ஓ! பிராம்மணஶ்ரேஷ்டரே! தேவரிஷிகளிற் சிறந்தவரே! இந்திராணியானவள் உம்முடைய கிருஹத்தில் சரணமடைந்ததாகவும் உம்மால் அபயப்ரதானம் செய்யப்பட்டதாகவும் அறிகிறோம். ஓ! மிக்க காந்தியுடையவரே! அவ்விதம் அறிந்த தேவர்களும் கந்தர்வர்களும் ரிஷிகளும் உம்மை அருள்செய்யும்படி வேண்டுகிறார்கள். இந்திராணியானவள் நகுஷனுக்குக் கொடுக்கப்படட்டும். தேவர்களுக்கு அரசனும் பெரிய காந்தியுடையவனுமான நகுஷன் இந்திரனைக் காட்டிலும் மேலானவன். சிறந்த நிறமுடையவளும் சிறந்த இடையுடையவளுமான இவள், இவனைப் பதியாக வரிக்கவேண்டும்' என்று சொல்ல, உடனே அந்தத் தேவியானவள், கண்ணீர் சொரிந்து வாய்விட்டழுது எளிமையுற்றவளாகி ப்ருஹஸ்பதியை நோக்கி, 'ஓ! தேவரிஷிகளிற் சிறந்தவரே! நான் நகுஷனைப் பதியாக விரும்பேன். ஓ! பிராம்மணரே! உம்மைச் சரணமடைந்தவளாயிருக்கிறேன். பெரிய பயத்திலிருந்தும் காப்பாற்றும்' என்று சொன்னாள்.

ப்ருஹஸ்பதி, 'ஏ! இந்திராணி! சரணமடைந்த உன்னைக் கைவிடேன். இது என்னுடைய உறுதி. குற்றமற்றவளே! தர்மத்தை உணர்ந்தவளும் ஸத்யத்தைச் சீலமாகவுடையவளுமான உன்னைக் கைவிடேன். மேலும், பிராம்மணனாயிருந்துகொண்டு அகாரியத்தைச் செய்யவிரும்பேன்' என்று சொல்லிவிட்டு, தேவர்களை நோக்கி, 'ஓ! தேவஶ்ரேஷ்டர்களே! தர்மத்தைக் கேட்டவனும் ஸத்யத்தைச்சீலமாகவுடையவனும் தர்மத்தின்விதியை அறிந்தவனுமான நான் இந்தக் காரி

யத்தைச் செய்யேன்; போங்கள். இந்த விஷயத்தில் முன்காலத்தில் பரம்மாவினால் சொல்லப்பட்ட இதைக் கேளுங்கள். அது, 'பயத்தினால் சரணமடைந்தவனை எவன் சத்ருவினிடம் கொடுக்கிறானோ, அவன் விதைத்த விதை முளைக்கவேண்டியகாலத்தில் முளைக்கிறதில்லை. அவனுக்கு மழை பெய்யவேண்டியகாலத்தில் பெய்கிறதில்லை. அவன், தன்னை ரக்ஷிக்க விரும்பின காலத்தில் ரக்ஷிக்கிறவன் அகப்படமாட்டான். எவன் பயந்து சரணமடைந்தவனைக் கொடுப்பனோ அவன் துர்ப்பலமான சித்தத்தையுடையவனாகி அன்னத்தை வீணாக அடைவான்; அங்கங்கள் அசைவற்று ஸுவர்க்கலோகத்திலிருந்தும் நழுவி விழுவான். அவனுடைய ஹவிஸைத் தேவர்கள் ஏற்கமாட்டார்கள். பயத்தால் சரணமடைந்தவனை எவன் பகைவனிடம் கொடுக்கிறானோ அவனுடைய ஸந்ததி அகாலத்தில் மரிக்கும். அவனுடைய மாதாபிதாக்கள் எப்பொழுதும் பரதேசவாஸத்தைச் செய்வார்கள். இந்திரனோடு கூடின தேவர்கள் அவன்மேல் வஜ்ராயுதத்தால் அடிக்கின்றார்கள்' என்பது. இவ்விதம் இதை அறிகின்ற நான், உலகத்தில் இந்திராணி என்று பிரஸித்தியடைந்தவளும் இந்திரனுக்குப் பிரியமான மஹிஷியுமான இந்தச் சசீதேவியைக் கொடுக்கமாட்டேன். ஓ! தேவச்ரேஷ்டர்களே! இவளுக்கும் எனக்கும் ஹிதத்தைச் செய்யுங்கள். நான் சசீதேவியைக் கொடுக்கமாட்டேன்' என்று சொன்னார். (அப்பொழுது), கந்தர்வர்களுடன் கூடின தேவர்கள் குருவை நோக்கி, 'ஓ! பிருஹஸ்பதியே! எப்படி நல்ல நீதி ஏற்படுமென்று ஆலோசியும்?' என்று சொன்னார்கள்.

பிருஹஸ்பதி, 'மங்கள குணமுள்ள தேவியானவள் நகுஷனிடம் சிறிதுகாலந் தாமதித்தலை வேண்டக் கடவள். இதுவோ இந்திராணிக்கும் நமக்கும் நன்மையாகும். ஓ! தேவர்களே! காலமானது பல விக்னங்களை உடையது. (தேவி கேட்கும்) காலம் (நகுஷன் குறித்த) காலத்தைக் கடத்தும். நகுஷன் வரத்தை அடைந்ததனால் பலவானாகவும் கர்வம் கொண்டவனாகவுமிருக்கிறான்' என்று சொன்னார். அவரால் அவ்விதம் சொல்லப்பட்டவுடனே, அப்படியே தேவர்கள் பிரீதியடைந்து (அவரை நோக்கி), 'ஓ! பிராம்மணரே! உம்மால் இது நன்றாகச் சொல்லப்பட்டது. எல்லாம் தேவர்களுக்கு நன்மையாயுள்ளன. ஓ! பிராம்மணச்ரேஷ்டரே! இது சரியே. இந்தத் தேவியும் பிரஸாதத்தை அடையும்படி செய்யப்படட்டும்' என்று சொல்லிவிட்டு, உடனே, அக்நி முதலான எல்லாத் தேவர்களும் ஒற்றுமையுடன் உலகங்களுடைய நன்மையை விரும்பி இந்திராணியை நோக்கி, 'தேவி! சராசரமான இந்த உலக முழுதும் உன்னால் தரிக்கப்பட்டிருக்கிறது.

ஒரே பதியுடையவளும் ஸத்யமுடையவளுமாயிருக்கிறாய். நகுஷனைக் குறித்துச் செல். உன்னை விரும்புகிறவனும் பாவத்தைச் செய்கிற வனுமான நகுஷன் சீக்கிரம் நசிக்கப் போகிறான். இந்திரனும் தேவ ராஜ்யத்தை அடையப்போகிறான்' என்று சொன்னார்கள். இவ் விதம் உறுதிசெய்துகொண்டு இந்திராணியானவள் காரியசித்தியின் பொருட்டு, லஜ்ஜையுடன், கோரமான பார்வையுடைய நகுஷனை அடைந்தாள். தருணவயதும் ரூபமுமுடையவளான அவளைப் பார்த்து, துஷ்டமனமுடையவனும் காமத்தால் அறிவுகெட்டவனு மான நகுஷனும் ஸந்தோஷித்தான்.

பதின்மூன்றாவது அத்யாயம்.

## ஸேநோத்யோகபர்வம். (தொடர்ச்சி.)

(இந்திராணி நகுஷனிடம் நியமம் செய்து கொண்டதும், இந்திரன் அச்வ மேதம் செய்து பாவம் நீங்கியும் பயந்து ஒளிந்ததும், இந்திராணி உபச்ருதி தேவியைப் பூஜித்ததும்.)

பிறகு, தேவராஜனாயிருக்கிற நகுஷன், அவளைப் பார்த்து அப் பொழுது, 'சுத்தமான புன்னகையுள்ளவளே! நான் மூன்று உலகங் களுக்கும் இந்திரன். சிறந்த தொடையும் சிறந்த மேனியுமுடைய வளே! என்னைப் பதியாக அடையக் கடவாய்' என்று சொன்னான்.

நகுஷனால் இவ்விதம் சொல்லப்பட்ட பதிவ்ரதையான அந்தத் தேவியானவள், பயத்தால் கலக்கமுற்றுப் பெருங் காற்றில் வாழை நடுங்குவதுபோல நடுங்கினாள். பிறகு, அவளோ, சிரத்தால் ப்ரம்மாவை வணங்கி அஞ்சலிசெய்துகொண்டு, தேவராஜனும் பார்க் கப் பயங்கரனுமான நகுஷனை நோக்கி, 'ஓ! தேவராஜரே! நான் உம்மிடமிருந்தும் காலத்தின் அவகாசத்தை அடைய விரும்புகிறேன். இந்திரன் எதை அடைந்தானோ, எங்கேதான் சென்றானோ, தெரிய வில்லை. ஓ! பிரபுவே! இந்த உண்மையைத் தெரிந்துகொண்டு, (அவன்) அறியப்படாமலிருந்தால், பிறகு, நான் உம்மை அடைவேன். உமக்கு இதனை ஸத்யமாகச் சொல்லுகிறேன்' என்று சொன்னாள்.

இந்திராணியினால் இவ்விதம் சொல்லப்பட்டவனான அந்த நகுஷன், ப்ரீதியுடன் (அவளை நோக்கி), 'ஓ! அழகான இடையுடையவளே!

இப்பொழுது என்னை நோக்கி எவ்விதம் சொல்லுகிறாயோ அவ்விதமே ஆகட்டும். தெரிந்துகொண்டு, அவசியம் வரவேண்டும். இந்த ஸத்யத்தை நினைக்கக்கடவாய்' என்று சொன்னான்.

மங்களகுணமுள்ளவளும் புகழுடையவளுமான அவள், நகுஷனால் விடப்பட்டு, உடனே வெளியில் வந்து பிருஹஸ்பதியின் கிருஹத்தையும் அடைந்தாள். ஓ! ராஜஸ்ரேஷ்டனே! அக்நி முதலான தேவர்களும் அவளுடைய வார்த்தையைக் கேட்டு ஒரே மனமாய்த் தேவதேவரும் ஸமர்த்தருமான விஷ்ணுவினுடன் சேர்ந்து இந்திரன் விஷயத்தைச் சிந்தித்தார்கள். பேசுந்திறமையுள்ளவர்களான அவர்கள், மிகவும் வருத்தமுற்றுத் திருமாலைநோக்கி, 'ஓ! தேவரே! தேவகணங்களுக்கு ஈஸ்வரனான இந்திரன் பிரம்மஹத்தியினால் அவமதிக்கப்பட்டான். (எல்லாருக்கும்) முன் உண்டானவரும் உலகத்திற்குப் பிரபுவுமான நீரே எங்களுக்குக் கதி. எல்லாப் பிராணிகளையும் காப்பதற்காக வியாபகராயிருக்கும் தன்மையை அடைந்தீர். ஓ! தேவகணங்களுக்கெல்லாம் தலைவரே! விருத்ரன் உம்முடைய வீரியத்தால் கொல்லப்பட, இந்திரன் பிரம்மஹத்தியால் வியாபிக்கப்பட்டான். அவனுக்கு விமோசனத்தைச் சொல்லும்' என்று சொன்னார்கள்.

விஷ்ணுவானவர், அவர்களுடைய அந்த வார்த்தையைக் கேட்டு, 'இந்திரன் என்னையே ஆராதிக்கட்டும். நான் இந்திரனைப் பரிசுத்தம் செய்வேன். இந்திரன் புண்ணியமான அஸ்வமேதத்தால் என்னை ஆராதித்து ஓரிடத்திலிருந்தும் பயமில்லாதவனாகி மறுபடியும் தேவர்களுக்கு இந்திரனாவான். துஷ்ட புத்தியுடைய நகுஷனும் தன் செய்கைகளால் நாசத்தை அடைவான். ஓ! தேவர்களே! சோர்வில்லாதவர்களாகச் சிலகாலம் இதைப் பொறுத்துக்கொள்ளுங்கள்' என்று சொன்னார்.

மங்களகரமாயும் ஸத்யமாயும் அமிருதத்திற்கு ஒப்பாயுமிருக்கிற திருமாலினுடைய அந்த வார்த்தையைக்கேட்டு, உடனே, உபாத்தியாயருடன் கூடின எல்லாத் தேவர்களும், ரிஷிகளும், இந்திரன் பயத்தால் வருத்தமுற்று எவ்விடமிருக்கிறானோ அவ்விடத்தை அடைந்தார்கள். ஓ! அரசனே! அவ்விடத்தில் மஹாத்மாவான மஹேந்திரனுடைய பரிசுத்திக்காக ப்ரம்மஹத்தியை நிவ்ருத்திசெய்வதும் மிகப் பெரிதுமான அஸ்வமேதமானது நடந்தது. ஓ! யுதிஷ்டிர! தேவேஸ்வரனான இந்திரனோ, ப்ரம்மஹத்தியைப் பிரித்து விருக்ஷங்களிலும் நதிகளிலும் பர்வதங்களிலும் பூமியிலும் ஸ்திரீகளிடத்திலும் பிராணிகளிடத்திலும் கொடுத்துவிட்டுக் கவலை நீங்கினவனும் பாவத்தை நீக்கினவனும் நல்ல மனமுடையவனுமானான். பிறகு, வலாஸுரனைக்

கொன்றவனும் சசிதேவிக்குப்பதியுமான தேவனுனவன், ஸ்தானத்திலி ருந்தும் அசைக்கமுடியாதவனும் வரதானத்தால் ஸஹிக்க முடியாதவ னும் எல்லா ப்ராணிகளுடைய பலத்தையும் நாசம் செய்பவனுமான நகுஷனைப் பார்த்துவிட்டு மறுபடியுமே ஒளிந்தான். எல்லாப் பிராணி களுக்கும் காணமுடியாதவனுகக் காலத்தை எதிர்பார்த்துக்கொண்டு ஸஞ்சரித்தான். இந்திரன் ஒளிந்தவுடனே, இந்திராணியானவள் சோகத்தை அடைந்தாள். மிக்கதுக்கத்துடன்கூடினவளான தேவியா னவள், அப்பொழுது, 'ஆ! இந்திர!' என்று புலம்பினுள். 'நான் தானத்தையும் ஹோமத்தையும் செய்தும் குருக்களை ஸந்தோஷிக்கச் செய்துமிருப்பேனேயானுல், என்னிடம் ஸத்யமிருக்குமேயானுல், ஒரு பர்த்தாவையே உடையவளாகக் கடவேன். நான், பரிசுத்தமானவளும் தேவர்களுக்கு நன்மையானவளும் உத்தராயணத்தில் தொடங்கியிருப் பவளுமான இந்த ராத்ரிதேவியை வணங்குகிறேன். என்னுடைய மனோரதமானது கைகூடட்டும்' என்று அவ்விடத்தில் அவள் பரிசுத் தையாய் ராத்ரிதேவியை உபாஸித்தாள். அந்த ராத்ரிதேவியானவள் (இந்திராணியினுடைய) பாதிவ்ரத்யத்தினுலும் ஸத்யத்தினுலும் [1] உபஶ்ருதியை அழைத்தாள். அப்பொழுது, இந்திராணி, 'எந்த விடத்தில் இந்தத் தேவராஜன் இருக்கிறுனே அந்த இடத்தை எனக் குக் காட்டு. [2] ஸத்யம் [3] ஸத்யத்தால் காணப்படட்டும்' என்று உபஶ்ருதிதேவியை நோக்கிச் சொன்னுள்.

பதினுன்காவது அத்யாயம்.

## ஸேநோத்யோகபர்வம். (தொடர்ச்சி.)

(இந்திராணி உபஶ்ருதியுடன் சென்று தாமரைத் தண்டினுள்ளிருந்த இந்திரனைக்கண்டு நகுஷன் வரலாற்றைக் கூறியது.)

பிறகு, உபஶ்ருதியானவள் ரூபத்தோடுகூடிப் பதிவ்ரதையான இந்திராணியை வந்தடைந்தாள். பருவமும் ரூபமுமுடையவளும் ஸமீ பத்தில் வந்தவளுமான அந்த உபஶ்ருதிதேவியைப் பார்த்து இந்தி

---

1 'ஸந்தேகத்தைத் தெளிவிக்கிற தேவி' என்பது பழைய வுரை.

2 இந்திரனிருப்பு. 3 இந்திராணியின் கற்பினுல்.

ராணியானவள் மனத்தில் மிக்க ஸந்தோஷத்தை அடைந்து அவளைப் பூஜித்து, பிறகு, 'ஓ! சிறந்த முகத்தையுடையவளே! நான் உன்னை அறிய விரும்புகிறேன். நீ யார்? சொல்' என்று சொன்னாள். உபஸ்ருதி, 'ஓ! லாவண்யமுள்ளவளே! தேவியே! நான் உபஸ்ருதி. உன்னுடைய ஸமீபத்தை அடைந்தேன். உன்னுடைய ஸத்யத்தால் உனக்கு நேரில் தோன்றினேன். நீ பதிவ்ரதை; யமத்தோடும் நியமத்தோடும் கூடினவள். தேவனும் வ்ருத்திரசத்ருவுமான இந்திரனை உனக்குக் காண்பிப்பேன். சீக்கிரம் பின்தொடர்ந்துவா. உனக்கு மங்களமுண்டாகுக. தேவஸ்ரேஷ்டனான பதியைப் பார்ப்பாய்' என்று சொன்னாள்.

உடனே, புறப்பட்டவளான அந்தத் தேவியை அந்த இந்திராணியானவள் பின்தொடர்ந்தாள். அவள், தேவவனங்களையும் அனேக பர்வதங்களையும் தாண்டி அப்பால் இமயமலையையும் தாண்டி, வடபாகத்தை அடைந்தாள். ஸமுத்திரத்தையும் அடைந்து அனேக யோஜனை விஸ்தாரத்தோடு கூடியதும் பலவிதமான விருக்ஷங்களாலும் கொடிகளாலும் சூழப்பட்டதுமான ஒரு பெரிய தீவை அடைந்தாள். அவ்விடத்தில் திவ்யமானதும் பலவித பக்ஷிகளால் வியாபிக்கப்பட்டதும் நூறு யோஜனை அகலமும் அவ்வளவு நீளமும் உள்ளதும் மங்களகரமுமான தடாகத்தைப் பார்த்தாள். ஓ! பாரத! அந்தத் தடாகத்தில் திவ்யமானவைகளும் பஞ்சவர்ணங்களையுடையவைகளும் வண்டுகளால் சப்திக்கப்பட்டவைகளும் நன்றாக மலர்ந்தவைகளும் ஆயிரக்கணக்குமான தாமரைமலர்கள் இருந்தன. அந்தத் தடாகத்தின் மத்தியில் பெரிதும் சுபமாயுள்ளதுமான ஒரு தாமரைக்கொடியானது வெண்மையானதும் உயர்ந்த தண்டோடு கூடினதும் பெரிதுமான தாமரை மலரினால் வியாபிக்கப்பட்டிருந்தது. (தேவி) தாமரைப் பூவினுடைய தண்டைப் பேதித்துக்கொண்டு அந்த இந்திராணியோடு பிரவேசித்தாள்; அதில் தாமரைத் தண்டின் நூலில் புகுந்திருந்த இந்திரனையும் பார்த்தாள். மிக்க ஸூக்ஷ்மமான ரூபத்தோடிருப்பவனும் பிரபுவுமான அவனைப் பார்த்து, தேவியும் அந்த உபஸ்ருதியும் ஸூக்ஷ்மரூபத்தைத் தரிக்கிறவர்களானார்கள். அப்பொழுது, இந்திராணி இந்திரனை ப்ரஸித்தமான முன் செய்கைகளால் துதித்தாள். துதிக்கப்பட்டவனும் சத்ருக்களுடைய பட்டணத்தைப் பேதிக்கிறவனுமான தேவன், அப்பொழுது இந்திராணியை நோக்கி, 'எதற்காக வந்தாய்? எப்படி என்னை அறிந்தாய்?' என்று கேட்டான்.

அப்பொழுது, அவள் அவனிடத்தில் நகுஷனுடைய சேஷ்டையைக்குறித்துச் சொன்னதாவது: 'ஓ! நூறு அஸ்வமேதம் செய்

தவரே! நகுஷனென்பவன் மூன்று உலகங்களிலும் இந்திரத்தன்மையை அடைந்து வீரியத்தையுடையவனும் கொழுப்பையுடையவனும் கெட்ட எண்ணத்தையுடையவனுமாகி என்னைத் தன்னிடம் வரச் சொன்னான். குரூரனான அவன் எனக்குக் காலத்தையும் குறிப்பிட்டிருக்கிறான். ஓ! பிரபுவே! நீர் ரக்ஷியாமற்போனால் அவன் என்னைத் தன்வசம் செய்வான். இதனால், நான் உம்முடைய ஸமீபம் விரைந்து வந்தேன். ஓ! பெரிய புஜங்களையுடையவரே! குரூரனும் பாவத்தில் உறுதியுடையவனுமான நகுஷனைக் கொல்லும். திதியின் புத்ரர்களையும் தனுவின் புத்ரர்களையும் கொன்றவரே! உம்முடைய ஸ்வரூபத்தை வெளியிடும். ஓ! விபுவே! தேஜஸை அடையும். தேவராஜ்யத்தையும் ஆளும்' என்று சொன்னாள்.

---

பதினைந்தாவது அத்யாயம்.

## ஸேநோத்யோகபர்வம். (தொடர்ச்சி.)

(இந்திராணி நகுஷனை ஸப்த ரிஷிகள் சுமக்கும் பல்லக்கில் வரச் சொல்லியதும், பிருஹஸ்பதியின் விருப்பப்படி அக்னிதேவன் ஜலம் தவிர மற்றவிடங்களில் தேடிக் காணாமல் மீண்டதும்.)

சசீதேவியினால் இவ்விதம் சொல்லப்பட்ட அந்தப் பகவான், மறுபடியும் அவளை நோக்கி, 'ஓ! காந்திபொருந்தியவளே! இது பராக்ரமத்திற்கு ஸமயமன்று. நகுஷன் மிக்க பலசாலி. ரிஷிகளாலே ஹவ்யங்களாலும் கவ்யங்களாலும் விருத்தி செய்யப்பட்டும் இருக்கிறான். ஓ! தேவி! இந்த விஷயத்தில் ஒரு நீதியை ஏற்படுத்துவேன். அதனைச்செய்யக் கடவாய். நீ அதனை ரகஸ்யமாகவும் செய்யவேண்டும். மங்கள குணமுடையவளே! ஒருவரிடத்திலும் சொல்லக் கூடாது. அழகான இடையுடையவளே! நீ ஏகாந்தத்தில் நகுஷனை அடைந்து சொல்லு. (அதாவது):—'ஓ! ஜகத்திற்குப் பதியாயுள்ளவரே! திவ்யமான ரிஷிவாகனத்தால் என்னை அடையக் கடவீர். இவ்விதம் செய்தால், நான் ப்ரீதியடைந்து உம்முடைய வசமாவேன்' என்று அவனுக்குச் சொல்' என்று சொன்னான். கமலங்கள்போன்ற கண்களையுடையவளான பத்நியானவள், தேவராஜன் இவ்விதம் சொல்லியதைக் கேட்டு, உடனே, 'அப்படியே ஆகட்டும்' என்று சொல்லிவிட்டு நகுஷனைக் குறித்துச் சென்றாள்.

அப்பொழுது, நகுஷன், புன்னகையுடன் அவளை நோக்கி, 'சிறந்த இடையுடையவளே! சுத்தமான புன்னகை உடையவளே! உனக்கு நல்வரவா? நான் என்ன செய்யவேண்டும்? கல்யாணி! பக்தனான என்னை அடையக் கடவாய். நல்ல மனமுள்ளவளே! எதை விரும்புகிறாய்? கல்யாணி! அழகான இடையுடையவளே! உனக்கு எது செய்யவேண்டுமோ அதைச் செய்வேன்.' 'நீ லஜ்ஜை அடையவேண்டாம். சிறந்த இடையுள்ளவளே! என்னிடம் நம்பிக்கை வை. தேவி! ஸத்தியத்தோடு ப்ரதிஜ்ஞை செய்கிறேன். நீ சொன்னதைச் செய்வேன்' என்று சொன்னான்.

இந்திராணி, (அவனைநோக்கி) 'ஓ! ஜகத்திற்குப் பதியாயிருப்பவரே! உம்மால் எனக்கு ஏற்படுத்தப்பட்ட காலத்தை எதிர்பார்க்கிறேன். தேவ நாயகரே! பிறகு, நீரே எனக்குப் பதியாகப் போகிறீர். ஓ! தேவராஜரே! மனத்திலுள்ள காரியத்தைச் சொல்லுவேன். உறுதி செய்துகொள்ளக் கடவீர். ஓ! அரசரே! எனக்குப் பிரியமான இந்த வார்த்தையை அன்புடன்செய்வீராகில் சொல்லுவேன். பிறகு, உம்முடைய வசத்தை அடைந்தவளாவேன். இந்திரனுக்குக் குதிரைகளும் யானைகளும் தேர்களும் வாகனங்களாயிருந்தன. ஓ! தேவர்நாயகரே! இப்பொழுது, உமக்கு, விஷ்ணுவுக்கும் ருத்ரருக்கும் தேவர்களுக்கும் ராக்ஷஸர்களுக்குமில்லாத புதிதான வாகனத்தை விரும்புகிறேன். ஓ! விபுவே! ராஜரே! மஹாபாக்யவான்களான எல்லா ரிஷிகளும் சேர்ந்து பல்லக்கினால் உம்மைத் தாங்கவேண்டும். இதுவே எனக்கு விருப்பமாயிருக்கிறது. அஸுரர்களுக்கும் தேவர்களுக்கும்ஸமானராக இருக்கத்தக்கவர் அல்லீர். பார்வையினாலேயே உமது வீர்யத்தால் எல்லாருடைய தேஜஸையும் கிரஹிக்கிறீர். வீர்யவானான ஒருவனும் உமக்கு எதிராக நிற்பதற்குச் சக்தனில்லை' என்று சொன்னாள்.

இவ்விதம் சொல்லப்பட்டவனான நகுஷன் அப்பொழுது மிக்க ஸந்தோஷத்தை அடைந்தான். தேவேந்திரனான அவன், குற்றமற்றவளான அவளை நோக்கி, 'ஓ! சிறந்த நிறமுடையவளே! உன்னால் சொல்லப்பட்ட இந்த வாகனமானது அபூர்வமாயுள்ளது. தேவியே! எனக்கு நன்கு ருசித்திருக்கிறது. சிறந்த முகத்தையுடையவளே! உனக்கு வசமாயிருக்கிறேன். எவன் முனிவர்களை வாகனங்களாகச் செய்கிறானோ அவன் அற்பமான பராக்ரமத்தை உடையவனாக இருக்கமாட்டான். நான் தவமுடையவனும் பலமுடையவனும் சென்றது வருவது இருக்கிறது இவைகளுக்கும் ப்ரபுவுமாயிருக்கிறேன். நான் கோபத்தை அடைந்தால் உலகமிராது. என்னிடம் எல்லாம் ஸ்தாபிக்

கப்பட்டிருக்கின்றன. சுத்தமான புன்னகையுடையவளே! நான் கோபத்தை அடைந்தால், தேவர்களும் தானவர்களும் கந்தர்வர்களும் கின்னரர்களும் உரகர்களும் ராக்ஷஸர்களும் எல்லா உலகங்களும் (என்னை எதிர்க்கப்) போதியவைகளாகா. நான் கண்ணால் யாரைப் பார்க்கிறேனோ அவனது பலத்தை அபகரிக்கிறேன். நான் தேவர்களுக்கு இந்திரனாக இருக்கிறேன்; உலகங்களுக்குப் பெரிய ஈஸ்வரனுமாயிருக்கிறேன். ஹவ்யமும் கவ்யமும் அனாதியான உலகங்களும் என்னிடத்திலேயே உள்ளன. ஆகையால், தேவியே! உன்னுடைய வார்த்தையைச் செய்வேன். ஸந்தேகமில்லை. என்னை ஸப்தரிஷிகளும் அப்படியே எல்லாப் பிரம்மரிஷிகளும் வகிப்பார்கள். ஓ! சிறந்த நிறமுள்ளவளே! என்னுடைய மாகாத்மியத்தின் சேர்க்கையையும் செழிப்பையும் பார்' என்று சொன்னான். ஓ! பாரத! இவ்விதம் சொல்லிவிட்டு, சிறந்த முகத்தையுடைய அந்தத் தேவியை விட்டுவிட்டு, பிறகு, அந்த நகுஷனே பலத்தின் வீர்யத்தால் நன்றாக ஆலோசித்து ஸுப்ரதீகமென்கிற கஜத்தையும் ஐராவதத்தையும் ஹம்ஸங்கள் பூண்ட விமானத்தையும் குதிரைகள் பூண்ட தேரையும் விட்டுவிட்டு, மிக்க கொழுப்பினால் மஹாமுனிவர்களை அவமதித்துத் தவத்தில் நிலைத்திருப்பவர்களான அவர்களை விமானத்தில் சேர்ப்பித்தான். பிராம்மணர்களுக்கு அஹிதனும் பலத்தோடுகூடினவனும் மதத்தின் பலத்தினால் வெறிகொண்டவனும் காமத்திற்குரிய செய்கையுள்ளவனும் துஷ்ட புத்தியுடையவனுமான அவன் அந்த ரிஷிகளைச் சுமக்கச் செய்தான்.

நகுஷனால் விடப்பட்ட தேவியும், உடனே பிருஹஸ்பதியை நோக்கி, 'எனக்கு நகுஷனால் செய்யப்பட்டிருக்கிற கால எல்லையானது சிறிதுதான் மிச்சமிருக்கிறது. (ஆகையால்), நீர் சீக்கிரம் இந்திரனைத் தேடும். பக்தையான எனக்குத் தயைசெய்யும்' என்று சொன்னாள். பகவானான பிருஹஸ்பதி, 'அப்படியே ஆகட்டும்' என்று சொல்லி, அவளை நோக்கி, 'ஓ! தேவியே! துஷ்டசித்தமுடையவனான நகுஷனிடமிருந்தும் நீ பயப்படவேண்டாம். இவன் நெடுநாள் நிலைக்கமாட்டான். இழிந்த மனிதனாகிய இவன் போய்விட்டான். மங்களகுணமுள்ளவளே! தர்மத்தை அறியாதவனான இவன் மஹரிஷிகளைச் சுமக்கச் செய்வதனாலும் கெட்டான். இந்த மதிகெட்டவனுடைய நாசத்திற்காக நானும் யாகத்தைச் செய்கிறேன். இந்திரனையும் தெரிந்து கொள்ளுகிறேன். நீ பயப்படாதே. உனக்கு மங்களமுண்டாகுக' என்று சொன்னார்.

பிறகு, மிக்க தேஜஸுள்ள பிருஹஸ்பதியானவர், இந்திரனைத் தெரிந்துகொள்வதின்பொருட்டு, அக்னியை ஜ்வலிக்கச்செய்து சிறந்ததான ஹவிஸை விதிப்படி ஹோமம் செய்தார். ஓ! ராஜனே! அவர், ஹோமம் செய்துவிட்டு அக்னியை நோக்கி, 'இந்திரனைத் தேடும்' என்று சொன்னார். அதனால், பகவானும் தேவருமான அக்னியானவர் தாமே அத்புதமாய் ஸ்திரீவேஷத்தைச் செய்துகொண்டு அவ்விடத்திலேயே மறைந்தார். அவர் திசைகளையும் மூலைத்திசைகளையும் மலைகளையும் காடுகளையும் பூமியையும் அந்தரிக்ஷத்தையும் தேடிப்பார்த்து, உடனே மனோவேகமாக நொடிக்குள் பிருஹஸ்பதியை வந்தடைந்தார். பிருஹஸ்பதியைநோக்கி, 'ஓ! பிருஹஸ்பதியே! தேவராஜனை இப்பொழுது ஓரிடத்திலும் காணவில்லை. ஜலங்கள் பார்க்கப்படாமல் மீதியிருக்கின்றன. எப்பொழுதும் ஜலங்களில் ப்ரவேசிக்க எனக்கு உத்ஸாஹமில்லை. ஓ! பிராம்மணரே! எனக்கு அவைகளில் செல்லுகை கிடையாது. உமக்கு வேறென்ன செய்யவேண்டும்?' என்று சொன்னார்.

தேவகுருவானவர், அவரை நோக்கி, 'ஓ! மிக்கதேஜஸையுடையவரே! ஜலத்தில் போம்' என்று சொன்னார். அக்கினியும் அவரை நோக்கி, 'ஓ! மிக்க தேஜஸையுடையவரே! ஜலத்தில் பிரவேசிக்கச் சக்தியில்லாதவனாக இருக்கிறேன். இந்த ஜலத்தில் எனக்கு நாசம் ஏற்பட்டுவிடும். உம்மைச் சரணமடைந்தேன். உமக்கு க்ஷேமமுண்டாகுக. அப்புக்களிலிருந்து அக்கினியும் ப்ராம்மண ஜாதியிலிருந்து க்ஷத்ரியஜாதியும் கருங்கல்லிலிருந்து இரும்பும் உண்டாயின. ஆகையால், எங்கும் செல்லுகிற அவைகளுடைய சக்திகள் அவற்றின் காரணங்களில் அடங்குகின்றன' என்று சொன்னார்.

## பதினாறுவது அத்யாயம்.

# ஸேநோத்யோகபர்வம். (தொடர்ச்சி.)

(பிருஹஸ்பதியால் பலப்படுத்தப்பட்ட அக்னி இந்திரனைத் தேடித் தெரிவித்ததும், பிருஹஸ்பதி இந்திரனிடம் சென்று அவனைத் துதித்ததும்; குபேரன்முதலியோர் அங்குவந்ததும், இந்திரன் அக்னிக்குப் பாகம்கொடுத்துக் குபேரன்முதலியோரைத் திக்குப்பாலகராக்கியதும்.)

ப்ருஹஸ்பதி, 'ஓ! அக்னியே! நீர் எல்லாத்தேவர்களுக்கும் முகமாயிருக்கிறீர். நீர் ஹவிஸைத் தாங்குகிறவராயிருக்கிறீர். நீர் எல்லா ப்ராணிகளுள்ளும் ஸாக்ஷிபோல மறைந்து ஸஞ்சரிக்கிறீர். கவிகளானவர்கள் உம்மை ஒருவராகச் சொல்லுகிறார்கள். உம்மை மறுபடியும் (கார்ஹபத்ய ஆஹவநீய தக்ஷிணாக்னி என்று) மூன்று விதமாகவும் சொல்லுகிறார்கள். ஓ! ஹவிஸைப் புஜிக்கிறவரே! உம்மால் விடப்பட்டால் இந்த உலகம் உடனே நசிக்கும். வேதியர்கள் உம்மை வணங்கித் தங்கள் கர்மங்களால் ஸம்பாதிக்கப்பட்ட சாஸ்வதமான கதியைப் பத்னிகளோடும் புத்ரர்களோடும் அடைகின்றார்கள். ஓ! அக்னியே! நீர்தாம் ஹவிஸை வஹிக்கிறீர். நீரே சிறந்ததான ஹவிஸ். [1] ஸத்ரங்களாலும் [2] யஜ்ஞங்களாலும் சிறந்தவைகளான அஸ்வமேதாதியாகங்களாலும் உம்மையே ஆராதிக்கிறார்கள். ஓ! ஹவ்யவாஹரே! நீர் இந்த மூன்று உலகங்களையும் படைத்து முடிவுக்காலமேற்பட்டபொழுது விருத்திஅடைந்து மறுபடியும் தகித்துவிடுகிறீர். ஓ! அக்னியே! நீர் எல்லா உலகத்திற்கும் உற்பத்திகாரணம். ஓ! அக்னியே! நீரே மறுபடியும் [3] ஆதாரமாகவும் இருக்கிறீர். ஓ! அக்னியே! வித்வான்கள் உம்மை மேகங்களாகவும் மின்னல்களாகவும் சொல்லுகிறார்கள். உம்மிடமிருந்தும் ஜ்வாலைகள் வெளிக்கிளம்பி எல்லாப்ராணிகளையும் பொசுக்கின்றன. உம்மிடத்தில் எல்லா ஜலங்களும் வைக்கப்பட்டிருக்கின்றன. உம்மிடத்தில் இந்த எல்லா உலகமும் வைக்கப்பட்டிருக்கின்றன. பரிசுத்தம் செய்பவரே! மூன்று உலகங்களிலும் உம்மால் அறியப்படாதது ஒன்றும் இல்லை. எல்லாம் தம் காரணத்தில்

---

1 பல யஜமானர்களால் பல வருஷங்கள் செய்யப்படுவது.

2 ஒரு யஜமானனால் செய்யப்படுவது.

3 லயஸ்தானம் என்பது பழைய உரை.

பிரவேசிக்கின்றன. ஸந்தேகமில்லாமல் அப்புக்களில் பிரவேசியும் நான் உண்மை ப்ரம்மத்தைச் சேர்ந்தவைகளும் ஸநாதனமுமான மந்திரங்களால் விருத்திஅடையச் செய்கிறேன்' என்று சொன்னார்.

பகவானும் தீர்க்கதரிசியும் சிறந்தவருமான அந்த அக்னி இவ்விதம் துதிக்கப்பட்டு ப்ரீதியுடன் உடனே பிருஹஸ்பதியை நோக்கி, 'உமக்கு இந்திரனைக் காண்பிக்கிறேன். உமக்கு இதனை ஸத்யமாகச் சொல்லுகிறேன்' என்ற உத்தமமான வார்த்தையைச் சொன்னார். உடனே, அக்னி, ஸமுத்திரங்களிலும் சிறுகுளங்களிலுமிருக்கிற அப்புக்களில் பிரவேசித்து எந்த ஸரஸில் இந்திரன் ஒளிந்திருக்கிறானோ அதனை அடைந்தார். ஓ! பரதஸ்ரேஷ்டனே! அவர் அந்தத் தடாகத்திலும் தாமரைமலர்களில் தேடி உடனே தாமரைத்தண்டில் மத்தியிலிருக்கிற தேவேந்திரனைக் கண்டார்; உடனே, வேகமாக வந்து பிருஹஸ்பதியினிடம் பிரபுவான இந்திரன் அணு அளவாயிருக்கிற சரீரத்தோடு தாமரை நூலை அடுத்திருப்பதாகவும் சொன்னார்.

உடனே, பிருஹஸ்பதி தேவர்களோடும் முனிவர்களோடும் கந்தர்வர்களோடும் சென்று, வலாஸுரனைக் கொன்றவனான இந்திரனை அவன் முன்செய்த செய்கைகளால் துதிக்கலானார். 'ஓ! இந்திரா! உன்னாலே க்ரூரனான நமுசியென்கிற மஹாஸுரன் கொல்லப்பட்டான். அப்படியே, கோரமான பராக்ரமமுடையவர்களான சம்பரனும் வலாஸுரனும் கொல்லப்பட்டார்கள். ஓ! சதமகனே! வ்ருத்தி அடையக்கடவாய். எல்லாச் சத்ருக்களையும் நாசம் செய்வாய். ஓ! இந்திர! எழுந்திரு. வந்திருக்கிற தேவர்களையும் ரிஷிகளையும் பார். ஓ! விபுவே! மஹேந்திர! அஸுரர்களைக் கொன்று உன்னால் உலகங்கள் காக்கப்பட்டன. ஓ! தேவராஜனே! ஜகத்திற்குப் பதியாயிருப்பவனே! விஷ்ணுவினுடைய தேஜஸால் விருத்திசெய்யப்பட்ட ஜலத்தின் நுரையை எடுத்து விருத்ராஸுரன் உன்னால் முன்பு கொல்லப்பட்டான். எல்லா ப்ராணிகளிலும் நீயே ரக்ஷகனும் துதிக்கத்தக்கவனுமாயிருக்கிறவன். இவ்வுலகில் உனக்கு நிகரான ப்ராணியானது இல்லை. ஓ! இந்திரா! உன்னால் எல்லா ப்ராணிகளும் தரிக்கப்படுகின்றன. நீ தேவர்களுக்குக் கௌரவத்தைச் செய்தாய். ஓ! மஹேந்திர! எல்லா உலகங்களையும் காப்பாற்று; பலத்தை அடை' என்று இவ்விதம் நன்குதுதிக்க, இந்திரன் மெள்ள மெள்ள விருத்தியடைந்தான். தனது சரீரத்தை அடைந்து, அவன் பலத்துடன் கூடினவனுமானான். தேவனான அவன், நிற்கிறவரும் குருவுமான பிருஹஸ்பதியை நோக்கி, 'த்வஷ்டாவின் புத்ரனான பெரிய அஸுரனும் உலகங்களை நாசம் செய்தவனும் மிகவும்

பெரிதானசரீரத்தையுடையவனுமான விருத்ரனும் கொல்லப்பட்டான்- உங்களுக்கு என்ன காரியம் மீதியிருக்கிறது?' என்று கேட்டான். பிருஹஸ்பதி, 'மனுஷ்யனான நகுஷன் என்கிற அரசன் தேவர்கள் ரிஷிகள் இவர்களின் கணங்களுடைய தேஜஸினால் தேவராஜ்யத்தை அடைந்து எங்களெல்லாரையும் மிகவும் துன்பஞ்செய்கிறான்' என்று சொன்னார்.

இந்திரன், 'ஓ! பிருஹஸ்பதியே! நகுஷனானவன் அடைய முடியாத தேவராஜ்யத்தை எப்படி அடைந்தான்? என்ன தவத்தோடு கூடினவன்? எவ்வித வீர்யத்தை உடையவன்? அவன் இந்திரத்தன்மையை அடைந்த வரலாற்றையெல்லாம் எனக்குச் சொல்லும்' என்று கேட்டான். பிருஹஸ்பதி, 'ஓ! தேவர்களுக்கு ஈசனே! நீ ஒளிந்து கொண்டபொழுது, எல்லா உலகமும் அரசனில்லாததாகித் துன்பத்தை அடைந்ததும் ஒன்றனிடத்திலொன்று பயத்தால் நடுக்கமுடையதும் பீடை அடைந்ததும் ஆயிற்று. பிறகு, கந்தர்வர்களோடும் ரிஷிக்கூட்டங்களோடும் அக்னியோடும், தேவர்கள், மனுஷ்யராஜனான நகுஷனைத் தேவராஜ்யத்தில் அபிஷேகம் செய்தார்கள். ஓ! இந்திர! தேவர்கள் பயந்தவர்களாகி இந்திரனை விரும்பினார்கள். பெரிதான அந்த இந்திர பதமானது உன்னால் விடப்பட்டபொழுது, தேவர்களும் பித்ருக்களும் ரிஷிகளும் கந்தர்வஶ்ரேஷ்டர்களுமாகிய எல்லாரும் சேர்ந்து நகுஷனை அடைந்து, 'நீ எங்களுக்கு அரசனும் உலகத்திற்கு ரக்ஷகனுமாக வேண்டும்' என்று சொன்னார்கள். நகுஷனும் அவர்களை நோக்கி, 'நான் சக்தனாகவில்லை. என்னைத் [1]தவத்தினாலும் [2]பலத்தினாலும் விருத்தியடையச் செய்யுங்கள்' என்று சொன்னான். இவ்விதம் சொல்லப்பட்ட தேவர்களாலே நகுஷன் விருத்தி செய்யப்பட்டுக் கோரமான வீர்யத்தையுடையவனாகி அரசனுமானான். துஷ்ட புத்தியுள்ள அவன், மூன்று உலகங்களுக்கும் அரசனாகி மகரிஷிகளை வாகனமாகச் செய்துகொண்டு உலகங்களில் ஸஞ்சரிக்கிறான். நீ தேஜஸை அபகரிக்கிறவனும் கண்களில் விஷமுள்ளவனும் மிகவும் கோரனுமான நகுஷனை ஒருகாலும் பாராதே. தேவர்களெல்லாரும் மிகவும் பீடை அடைந்தவர்களாகியும் ஸ்வரூபத்தை மறைத்துச் சஞ்சரிக்கிறவர்களாகியும் நகுஷனைப் பார்க்கிறார்களில்லை' என்று சொன்னார்.

இவ்விதம் அங்கிரஸின் குலத்தவர்களில் சிறந்தவரானபிருகஸ்பதி சொல்லுகின்றபொழுது, லோகபாலனான குபேரனும் ஸூரியபுத்தி

1 இது ரிஷிகளுடையது. 2 இது தேவர்களுடையது.

ரனும் பலநாளாயிருப்பவனுமான யமனும் தேவனுன ஸோமனும் வருணனும் வந்தார்கள். அவர்கள் வந்து இந்திரனை நோக்கி, 'தெய்வானுகூலத்தால், துவஷ்டாவின் புத்திரனும் விருத்திரனும் கொல்லப்பட்டார்கள். ஓ! இந்திரா! தெய்வானுகூலத்தால், க்ஷேமத்தையுடையவனும் காயமில்லாதவனும் சத்துருக்களைக் கொன்றவனுமாயிருக்கிற உன்னையும் பார்க்கிறோம்' என்று சொன்னுர்கள். ஸமர்த்தனுன அந்த மகேந்திரனும் உசிதப்படி லோகபாலர்களான அவர்களை அடுத்து, மனத்தில் ப்ரீதியடைந்து அவர்களை நோக்கி, மறுமொழி சொல்லிவிட்டு, நகுஷன்விஷயத்தில் தேவர்களுக்குள்ள புத்தியை மாற்றுவதற்காக ஏவுகிறவனுகி, 'நகுஷன் தேவர்களுக்கு அரசனும் கோரமான ரூபமுடையவனுமாயிருக்கிறுன். அவன்விஷயத்தில் உங்களால் எனக்கு ஸஹாயம் செய்யப்படவேண்டும்' என்று சொன்னுன். அவர்களும், அவனை நோக்கி, 'ஓ! ஈசா! நகுஷன் கோரமானரூபமுடையவனும் கண்களில் விஷமுடையவனுமாயிருக்கிறுன். அவனுக்கு நாங்கள் பயப்படுகிறோம். ஓ! சக்ரனே! நீ நகுஷ ராஜனை ஜயிப்பாயானுல் அப்பொழுது நாங்கள் (வரும் நன்மையில்) பாகத்தை அடையவேண்டியவர்களாகிறோம்' என்று சொன்னுர்கள்.

அப்பொழுது, இந்திரன் (வருணனை நோக்கி), 'ஆகட்டும். அபபுக்களுக்குப்* பதியான நீயும் யமனும் குபேரனும் என்னுல் அபிஷேகத்தை அடையக்கடவீர்கள். இப்பொழுது, சத்துருவும் கோரமான பார்வையுடையவனுமான அந்தநகுஷனைத் தேவர்களுடன் ஜயிப்போம்' என்று சொன்னுன். பிறகு, அக்னியும், இந்திரனை நோக்கி, 'எனக்குப் பாகம் கொடு; உனக்கு உதவி செய்கிறேன்' என்று சொன்னுன். இந்திரன், அவனை நோக்கி, 'ஓ! அக்னியே! உனக்கும் ஏற்படும். இந்திரன் அக்னி இருவர்களுக்கும் பெரிதான யாகத்தில் ஒன்றுன பாகமானது ஏற்படப்போகின்றது' என்று சொன்னுன். பகவானும் பாகசாஸனனும் வரம் அளிப்பவனுமான மஹேந்திரன் இவ்விதம் ஆலோசித்துக் குபேரனை எல்லா யக்ஷர்களுக்கும் தனங்களுக்கும் பதியாகவும், யமனைப் பித்ருக்களுக்குப் பதியாகவும் வருணனை அப்புக்களுக்குப் பதியாகவும், (ஏற்படுத்திப்) பூஜித்து ஆதிபத்தியத்தை அளித்தான்.

## பதினேழாவது அத்யாயம்.

# ஸேநோத்யோகபர்வம். (தொடர்ச்சி.)

(அகஸ்தியர் இந்திரனிடம் வந்து நகுஷன் தேவராஜ்யத்திலிருந்து நழுவியதைச் சொல்லியது.)

பிறகு, புத்திமானான தேவராஜன் நகுஷனைக் கொல்லும் உபாயத்தை லோகபாலர்களோடும் தேவர்களோடும் ஆலோசித்துக்கொண்டிருக்கையில், அவ்விடத்தில் சிறந்த தவமுடையவரான அகஸ்தியபகவான் காணப்பட்டார். அவர், இந்திரனை உபசரித்து, 'நீ, தெய்வானுகூலத்தால், விஶ்வரூபனையும் விருத்திரனையும் வதைத்து விருத்தி அடைகிறாய். ஓ! புரந்தரனே! இப்பொழுது, தெய்வானுகூலத்தால், நகுஷன் தேவராஜ்யத்திலிருந்தும் நழுவிவிட்டான். 'ஓ! வலாஸுரனைக் கொன்றவனே! தெய்வவசத்தால், பகைவர்களை மடித்தவனான உன்னைப் பார்க்கிறேன்' என்று சொன்னார். இந்திரன், 'ஓ! மகாமுனிவரே! உமக்கு நல்வரவு. உம்முடைய தரிசனத்தால் நான் மகிழ்ச்சி அடைந்தேன். என்னால் கொடுக்கப்பட்ட பாத்யத்தையும் ஆசமனீயத்தையும் கோவையும் அர்க்கியத்தையும் ஏற்றுக்கொள்ளும்' என்று சொன்னான். பூஜிக்கப்பட்டவரும் ஆஸனத்திலிருப்பவரும் முனிவர்களில் சிறந்தவரும் பிராம்மணஶ்ரேஷ்டருமான அந்த அகஸ்தியரை நோக்கி, மிகவும் ஸந்தோஷத்தை அடைந்தவனான தேவராஜன், 'ஓ! பகவானே! பிராம்மணஶ்ரேஷ்டரே! பாவத்தில் உறுதியுள்ள நஹுஷன் எவ்வாறு ஸ்வர்க்கத்திலிருந்து நழுவினான்? இதனை நீர் சொல்லக் கேட்க விரும்புகிறேன்' என்றான்.

அகஸ்தியர், 'ஓ! சக்ரனே! துஷ்டபுத்தியுடையவனும் தீயஒழுக்கமுடையவனும் பலத்தால் கொழுத்தவனுமான நகுஷன் ஸ்வர்க்கத்திலிருந்து நழுவின பிரியவார்த்தையைக் கேள். ஜயசாலிகளிற் சிறந்தவனே! ஓ! தேவனே! வாஸவனே! பெரிய பாக்கியம் பெற்றவர்களான தேவரிஷிகளும் களங்கமற்றவர்களான பிரம்மரிஷிகளும் பாவத்தைச் செய்கிறவனான அந்த நகுஷனைச் சுமந்து சிரமத்தால் பீடை அடைந்தவர்களாகி நகுஷனை நோக்கி, 'கோக்களுடைய [1]ப்ரோக்ஷணத்தில் சொல்லப்பட்ட பிராம்மணங்களும் மந்திரங்களும் உனக்குப் பிரமாணமா? அல்லது, இல்லையா?' என்று ஸந்தேகத்தைக் கேட்டார்

---

1 யாகத்தில் வதம்; ஆஶ்வமேதிக பர்வம், 371-ம் பக்கம் குறிப்பில் காண்க.

கள். தமோகுணத்தால் அறிவு மழுங்கிய நகுஷன், அவர்களை நோக்கி, 'இல்லை' என்று சொன்னான். ரிஷிகள், 'அதர்மத்தில் அதிகமாகப் பிரவிருத்தித்தவனான நீ தர்மத்தை அறியவில்லை. முன் எங்களுக்கு மஹாரிஷிகளால் இது பிரமாணமாகச் சொல்லப்பட்டது' என்று சொன்னார்கள். ஓ! வாஸவனே! பிறகு, அவன் முனிவர்களோடு விவாதம் செய்து, உடனே, அதர்மத்தால் பீடிக்கப்பட்டவனாகப் பாதத்தால் என்னைத் தலையில் இடித்தான். அதனால், பூபதியானவன் பராக்கிரமம் கெட்டு ஒளியும் இழிந்தவனானான். பிறகு, தமோகுணத்தால் மூடப்பட்டவனும் மிகவும் பீடை அடைந்தவனுமான அவனை நோக்கி, நான், 'அரசனே! மூடா! பாவி! நீ முன்னோர்களால் செய்யப்பட்டதும் பிரம்மரிஷிகளால் அனுஷ்டிக்கப்பட்டதுமான புண்ணியத்தைத் தூஷித்ததாலும், என்னுடைய தலையில் உதைத்ததாலும், பிரம்மாவுக்கு ஸமானர்களும் நெருங்கமுடியாதவர்களுமான முனிவர்களை வாகனங்களாகச் செய்து சுமக்கச்செய்ததாலும் ஒளிகெட்டுப் புண்ணியம் நசித்து, ஸ்வர்க்கத்திலிருந்தும் பூதலத்தில் நழுவி நசிக்கக்கடவாய். பதினாயிரம் வருஷங்கள் பெரிய ஸர்ப்பத்தின் உருவத்தைத் தரித்து ஸஞ்சரிப்பாய். (அந்த வருஷங்கள்) பூர்ணமான பிறகு, மறுபடியும், ஸ்வர்க்கத்தை அடைவாய். பிராம்மணசாபத்தால் கெடுக்கப்பட்ட நீ உன்னுடைய வம்சத்திலுண்டாகும் யுதிஷ்டிரனென்பவனைப் பார்த்தபின் ஸ்வர்க்கத்தை அடைவாய்' என்று சொன்னேன். ஓ! சத்துருக்களைச் சிக்ஷிக்கிறவனே! அந்தத் துராத்மாவானவன் இவ்விதம் தேவராஜ்யத்திலிருந்தும் நழுவினான். ஓ! இந்திரனே! தெய்வாதீனத்தால் விருத்தி அடைகிறோம். பிரம்மரிஷிகளுக்குத் தீங்கு செய்பவனான அவன் கெடுக்கப்பட்டான். ஓ! இந்திராணீவல்லப! ஸ்வர்க்கத்தை அடை; இந்திரியங்களை ஜயித்தவனும் பகைவர்களை வென்றவனும் மஹாரிஷிகளால் துதிக்கப்படுகிறவனுமாகி உலகங்களைக் காப்பாற்று' என்று சொன்னார்.

ஓ! அரசனே! பிறகு, மகரிஷிகணங்களால் சூழப்பட்ட தேவர்களும் பிதிருக்களும் யக்ஷர்களும் நாகர்களும் ராக்ஷஸர்களும் கந்தர்வர்களும் தேவகன்னிகைகளும் அப்ஸரஸ்திரீகளுடைய கூட்டங்களும் குளங்களும் ஆறுகளும் மலைகளும் கடல்களும் எல்லாரும் மிகவும் ஸந்தோஷத்தை அடைந்தவர்களாகி ஸமீபம் வந்து, (இந்திரனை நோக்கி), 'ஓ! சத்துருக்களை ஸம்ஹரிக்கின்றவனே! தெய்வவசத்தால் விருத்தி அடைகிறாய். தெய்வாதீனத்தால், பாபியான நகுஷன் புத்திமானான அகஸ்திய முனிவரால் கெடுக்கப்பட்டான். தெய்வாதீனத்தால், பாவ

மான நடையுள்ளவனை அவன் பூதலத்தில் ஸர்ப்பமாகச் செய்யப்பட்டான்' என்று சொன்னார்கள்.

## பதினெட்டாவது அத்யாயம்.

## ஸேநோத்யோகபர்வம். (தொடர்ச்சி.)

(இந்திரன் மறுபடியும் தேவலோகம் வந்து மூவுலகையும் ஆண்டதும், சல்யன் இந்திரன் வரலாற்றால் யுதிஷ்டிரர் முதலியோரைத் தேற்றித் துரியோதனனிடம் வந்ததும்.)

பிறகு, கந்தர்வக் கூட்டங்களாலும் அப்ஸரஸுகளின் கூட்டங்களாலும் துதிக்கப்பட்டவனும் விருத்திரனைக் கொன்றவனும் ஸமர்த்தனுமான இந்திரன், லக்ஷணங்கள் பொருந்தியதும் கஜங்களில் சிறந்ததுமான ஐராவதத்திலேறி, பெரிதான தேஜஸையுடைய அக்னி, மகரிஷியான பிருஹஸ்பதி, யமன், வருணன், தனபதியான குபேரன் ஆகிய எல்லாத் தேவர்களாலும் கந்தர்வர்களாலும் அப்ஸரஸுகளாலும் சூழப்பட்டு ஸ்வர்க்கத்தை அடைந்தான். நூறு அச்வமேதங்கள் செய்தவனை அந்தத் தேவராஜன் இந்திராணியுடன்கூடிச் சிறந்த மகிழ்ச்சியுடன் தேவராஜாவாகிப் பரிபாலனம் செய்தான். அப்பொழுது அவ்விடத்தில் பகவானை அங்கிரஸ்மகரிஷியானவர் காணப்பட்டார். அவர், அதர்வவேதத்தின் மந்திரங்களால் தேவேந்திரனை நன்றாகத் துதித்தார். அதனால், பகவானை இந்திரன் மிகவும் ஸந்தோஷமடைந்தவனானன். அப்பொழுது (அதர்வவேதத்தால் துதித்தவரான) அந்த அதர்வாங்கிரஸின்பொருட்டு, 'இந்த (அதர்வ) வேதத்தில் அதர்வாங்கிரஸமென்கிற பெயர் ஏற்படப்போகிறது. இதுதான், (நீர் அதற்கு ரிஷி என்பதற்கு) உதாரணம். யஜ்ஞத்தில் பாகத்தையும் அடையப்போகிறீர்' என்று வரத்தையும் அளித்தான். அப்பொழுது, பகவானும் சதக்ரதுவுமான தேவராஜன் இவ்விதம் அதர்வாங்கிரஸமகரிஷியைப் பூஜித்து அனுப்பினான். ஓ! அரசனே! இந்திரன் மிக மகிழ்ந்து எல்லாத் தேவர்களையும் தவத்தையே தனமாகக்கொண்ட ரிஷிகளையும் நன்றாகப் பூஜித்துத் தர்மத்துடன் பிரஜைகளைப் பாதுகாத்துவந்தான்.

இவ்விதம், இந்திரனால் பத்னியோடு துக்கமானது அடையப்பட்டது. பகைவர்களுடைய வதத்தில் விருப்பத்தால் அஜ்ஞாதவாஸமும் செய்யப்பட்டது. ஓ! ராஜச்ரேஷ்டனே! த்ரௌபதியோ

டும் மகாத்மாக்களான பிராதாக்களோடும் பெரிய வனத்தில் கிலேசத்தை அடைந்த இந்தவிஷயத்தில் நீ கோபம் அடையக்கூடாது.ஓ! ராஜஸ்ரேஷ்டனே! பாரத! கௌரவ நந்தன! இந்திரன் விருத்திரனைக் கொன்று ராஜ்யத்தை அடைந்ததுபோல நீயும் ராஜ்யத்தை அடையப் போகிறாய். கெட்ட ஆசாரமுடையவனும் பிரம்மத்வேஷியும் பாவ புத்தியுடையவனுமான நகுஷன் அகஸ்தியருடைய சாபத்தால் அடிக்கப்பட்டுப் பல வருஷங்கள் கேட்டைஅடைந்தான். பகைவர்களைக் கொல்லுகிறவனே! இவ்விதம், துஷ்டபுத்தியையுடையவர்களான கர்ணன் துரியோதனன்முதலிய உன்னுடைய பகைவர்களும் சீக்கிரத்தில் நாசத்தை அடையப்போகிறார்கள். வீரனே! பிறகு, பிராதாக்களோடும் இந்தத் திரௌபதியோடும் ஸமுத்திரத்தை எல்லையாகவுடைய இந்தப் பூமியை அனுபவிக்கப்போகிறாய். வேதத்திற்கு நிகரான இந்திரவிஜயமென்கிற இந்தச்சரித்திரமானது, சேனையைச்சேகரிக்கிற காலத்தில் ஜயத்தைவிரும்புகிற அரசனால்கேட்கப்படத்தக்கது. ஆகையால், ஜயசாலிகளில் சிறந்தவனே! உன்னை ஜயத்தைக் கேட்கச் செய்தேன். ஓ! யுதிஷ்டிரா! மகாத்மாக்களானவர்கள் துதிக்கப்பட்டால் விருத்தி அடைகின்றார்கள். யுதிஷ்டிரா! துரியோதனனுடைய அபராதத்தாலும் பீமார்ஜுனர்களுடைய பலத்தாலும் யுத்தத்தில் மகாத்மாக்களான க்ஷத்திரியர்களை இல்லாமற்செய்கிற கோரமான இந்தக்ஷயமானது சீக்கிரத்தில் உண்டாகப்போகிறது. எவன் நியமத்துடன் இந்திரவிஜயமென்கிற இந்தச் சரித்திரத்தைப் படிப்பானோ அவன் பாவங்களை நீக்கினவனும் ஸ்வர்க்கத்தை ஜயித்தவனுமாக இகத்திலும் பரத்திலும் சந்தோஷத்தை அடைவான். அவனுக்குச் சத்துருவிடமிருந்து உண்டாகும் பயம் இல்லை. அந்த மனிதன் புத்திரனில்லாதவனாகான்; ஓர் ஆபத்தையும் அடையமாட்டான்; நீண்ட ஆயுளையும் அடைவான்; எங்கும் ஜயத்தை அடைவான்; ஒருபோதும் அபஜயத்தை அடையமாட்டான்' என்று சொன்னான்.

ஓ! பரதஸ்ரேஷ்டரே! இவ்விதம் தர்மத்தைத் தரிப்பவர்களில் சிறந்தவரான தர்மராஜர் சல்லியனால் தேற்றப்பட்டு அவனை விதிப்படி பூஜித்தார். நீண்ட புஜங்களையுடையவரும் குந்திபுத்திரருமான யுதிஷ்டிரர், சல்லியனுடைய வார்த்தையைக் கேட்டு, மத்திரதேசத்து அரசனை அவனை நோக்கி, 'நீர் கர்ணனுக்கு ஸாரத்தியம் செய்யப்போகிறீர்; ஸந்தேகமில்லை. அந்த ஸமயத்தில் அர்ஜுனனுடைய ஸ்தோத்திரங்களால் கர்ணனுக்குப் பலக்குறைவைச் செய்யவேண்டும்' என்று சொன்னார். சல்லியன், 'நீ என்னை நோக்கி வற்புறுத்திச் சொல்லுகிற

படியே இதைச் செய்வேன். வேறு நான் செய்யக்கூடியதையும் உனக்குச் செய்வேன்' என்று சொன்னான். பகைவர்களை அடக்குபவரே! பிறகு, மத்திரதேசாதிபனும் செல்வவானுமான சல்லியன் குந்திபுத்திரர்களிடம் விடைபெற்றுக்கொண்டு சேனையுடன் துரியோதனனை அடைந்தான்.

---

பத்தொன்பதாவது அத்யாயம்.

## ஸேநோத்யோகபர்வம். (தொடர்ச்சி.)

(ஸாத்யகிமுதலியோர் யுதிஷ்டிரரிடமும் பகதத்தன்முதலியோர் துரியோதனனிடமும் தம் தம் சேனையுடன் வந்தது.)

அதன் பிறகு, வீரனும் ஸாத்வதர்களுள் மகாரதனுமான ஸாத்யகி பெரிதான நால்வகைச் சேனையுடன் யுதிஷ்டிரரை அடைந்தான். மிக்க வீரியத்தையுடையவர்களும் பற்பல தேசங்களிலிருந்தும் வந்தவர்களும் பலவிதமான ஆயுதங்களை உடையவர்களும் வீரர்களுமான அவனுடைய யுத்தவீரர்கள் சேனையை விளக்கமடையச் செய்தார்கள். எண்ணெயிட்டுத் தீட்டப்பட்டவைகளும் பிரகாசிக்கின்றவைகளுமான பரசுகளாலும் பிண்டிபாலங்களாலும் சூலாயுதங்களாலும் தோமரங்களாலும் இருப்புலக்கைகளாலும் பரிகங்களாலும் தடிகளாலும் பாசங்களாலும் நிர்மலமான கைவாள்களாலும் பட்டாக்கத்திகளாலும் விற்களாலும் நிர்யூகங்களாலும் பலவிதமான பாணங்களாலும் அந்தச் சேனை சோபித்தது. மேகத்தினுடைய பிரகாசமுடையதும் ஸ்வர்ணாபரணங்களால் சோபையடைந்ததுமான அந்தப்படையினுடைய ரூபமானது மின்னல்களோடுகூடிய மேகத்தினுடைய ரூபம்போல் இருந்தது. ஓ! அரசரே! ஓர் அக்ஷௌஹிணியான அந்தச் சேனையானது அப்பொழுது யுதிஷ்டிரருடைய சேனையில் புகுந்து ஸமுத்திரத்தை அடைந்த சிற்றாறுபோல மறைந்தது. அப்படியே, சேதி தேசத்தவர்களில் சிறந்தவனும் பலசாலியுமான திருஷ்டகேது ஓர் அக்ஷௌஹிணி சேனையைச் சேர்த்துக்கொண்டு அளவற்ற பராக்கிரமமுடைய பாண்டவர்களை அடைந்தான். மகத தேசாதிபதியும் ஜராஸந்தனின் புத்திரனும் மிக்க வலிமையுடையவனுமான ஜயத்ஸேனனும் ஓர் அக்ஷௌஹிணி சேனையுடனே தர்மராஜரை அடைந்தான். ஓ! ராஜஶ்ரேஷ்டரே! அப்படியே, பாண்டியராஜனும் கடற்கரையிலுள்ள நீர்வளம் பொருந்திய நாட்டிலுள்ளவர்களும் அநேகவிதமானவர்களுமான படர்

களால் சூழப்பட்டவனாக யுதிஷ்டிரரை அடைந்தான். அப்பொழுது, அழகான வேஷமுடையதும் நல்லபலமுடையதுமான அவனுடைய சேனை அங்குள்ள சேனையில் வந்து சேரும்போது பார்க்க இனிமையாயிருந்தது. கேகய தேசத்ததிபர்களும் புருஷர்களில் சிறந்தவர்களும் ஒருவர்க்கொருவர் ஸகோதரர்களுமான ஐந்துஅரசர்கள் குந்திபுத்ரர்களை ஸந்தோஷிக்கச் செய்கிறவர்களாக ஓர் அக்ஷௌஹிணியுடன் வந்தார்கள். பல தேசங்களிலிருந்தும் வந்தவர்களும் சூரர்களுமான மனிதர்களாலும் மகாரதர்களான தன்னுடைய புத்திரர்களாலும் சோபிக்கும்படி செய்யப்பட்ட துருபதனுடைய சேனையும் ஏற்பட்டது. அப்படியே, மத்ஸ்ய தேசத்தரசனும் சேனைக்குப் பதியுமான விராடனும் மலைநாட்டிலுள்ள அரசர்களுடன் பாண்டவர்களை அடைந்தான். மகாத்மாக்களான பாண்டவர்களுக்கு இங்குமங்குமிருந்தும் பலவிதமான துவஜங்களால் வியாபிக்கப்பட்டவைகளான ஏழு அக்ஷௌஹிணிகள் தாமே வந்தன; கௌரவர்களுடன் யுத்தம் செய்ய விருப்பமுள்ளவைகளாகப் பாண்டவர்களை ஸந்தோஷிக்கவும் செய்தன.

அப்படியே, துரியோதனனுக்கு மகிழ்ச்சியைப் பெருக்கிக்கொண்டு பகதத்தனென்கிற அரசன் ஓர் அக்ஷௌஹிணி சேனையைக் கொடுத்தான். பொன்னிறமுள்ள சீன தேசத்தார்களாலும் வேடர்களாலும் சூழப்பட்டதும் நெருங்கமுடியாததுமான அவனுடைய படையானது கோங்குவனம்போல விளங்கிற்று. ஓ! குருநந்தனரே! அப்படியே, சூரனான பூரிஶ்ரவஸும் சல்லியனும் தனித்தனி ஒவ்வோர் அக்ஷௌஹிணியுடன் துரியோதனனை அடைந்தார்கள். ஹார்த்திக்யனான கிருதவர்மாவும் போஜர்களோடும் அந்தகர்களோடும் குகுரர்களோடும் ஓர் அக்ஷௌஹிணி சேனையுடனே துரியோதனனை அடைந்தான்.[1] வனமாலை தரிக்கிறவர்களான அந்தப் புருஷஶ்ரேஷ்டர்களாலே அவனுடைய சேனையானது, விளையாடுகின்ற மதயானைகளால் வனம் விளங்குவதுபோல விளங்கியது. ஸிந்து தேசத்திலும் ஸௌவீர தேசத்திலும் வசிப்பவர்களும் ஜயத்ரதன்முதலானவர்களுமான மற்ற அரசர்களும் மலைகளை அசைக்கின்றவர்கள்போல வந்தார்கள். அப்பொழுது, பலவிதமான அவர்களுடைய அக்ஷௌஹிணி சேனையானது, காற்றினால் அலைக்கப்பட்டதும் அனேக ரூபமுடையதுமான மேகம் போல விளங்கியது. ஓ! அரசனே! அப்படியே, காம்போஜ தேசத்தரசனான ஸுதக்ஷிணனும் யவனர்களோடும் சகர்களோடும் ஓர் அக்ஷௌஹிணியுடன் துரியோதனனை அடைந்தான். அவனுடைய

1 பாதம் வரையில் தொங்குகிற மாலை.

சேனைகளின் கூட்டமானது மின்மினிப் பூச்சிகளின் கூட்டம்போல விளங்கிற்று. அவனும் துரியோதனனை அடைந்து, உடனே, அந்தச் சேனையிலேயே மறைந்தான். அப்படியே, மாஹிஷ்மதீநகரவாஸியான நீலனென்கிற அரசனும், நீல நிறமுள்ள ஆயுதங்களுடையவர்களும் மிக்க வீரியமுடையவர்களும் தென் மார்க்கத்தில் வஸிப்பவர்களுமான வீரர்களுடன் துரியோதனனை வந்தடைந்தான். பெரிதான சேனைகளால் சூழப்பட்ட அவந்திதேசத்தரசர்களிருவர்களும் தனித்தனி ஒவ்வோர் அக்ஷௌஹிணியுடன் துரியோதனனை அடைந்தார்கள். ஓ! பரதச்ரேஷ்டரே! அங்கங்கிருந்தும் மகாத்மாக்களான (மற்ற) எல்லா அரசர்களுடைய வேறு மூன்று அக்ஷௌஹிணிசேனைகளும் வந்து சேர்ந்தன. இவ்விதம் பதினோர் அக்ஷௌஹிணிகளாகச் சேர்ந்த துரியோதனனுடைய அந்தச் சேனைகள் பலவிதமான துவஜங்களால் சூழப்பட்டுக் குந்திபுத்ரர்களுடன் யுத்தம்செய்ய விருப்பமுடையவைகளாயிருந்தன.

ஓ! அரசரே! பாரதரே! அப்பொழுது, ஹஸ்திநபட்டணத்தில் முக்கியமாகத் தங்கள் படைகளின் முக்கியர்களுக்கும் அரசர்களுக்கும்கூட இடம் கிடைக்கவில்லை. அதனால், பஞ்சாப்புத் தேசமும் குருஜாங்கல தேசமும் ரோஹிதகமென்கிற வனமும், கேவலமான மருப்பிரதேசமும் அஹிச்சத்ரம் காலகூடம் கங்காகூலம் வாரணம் வாடதானம் யமுனையைஅடுத்த பர்வதம் ஆகிய இவை அடங்கிய மிகவும் விஸ்தாரமுடையதும் அதிகமான தன தான்யங்களையுடையதுமான இவ்வளவு இடமும் கௌரவர்களுடைய சேனையால் மிகவும் நிரம்பப்பட்டதாயிற்று. பாஞ்சாலராஜனால் கௌரவர்களைக்குறித்து அனுப்பப்பட்ட அந்தப்புரோகிதர் அவ்விடத்தில் அவ்விதம் சேர்ந்ததான படையைப் பார்த்தார்.

ஸேநோத்யோகபர்வம் முற்றிற்று.

## இருபதாவது அத்யாயம்.

## ஸஞ்சயயானபர்வம்.

(புரோகிதர் துருபதன்சொல்லைத் திருதராஷ்டிரன் ஸபையில் சொல்லியது.)

அந்தத் துருபதனுடைய புரோஹிதரோ, திருதராஷ்டிரனை அடைந்து, திருதராஷ்டிரனாலும் பீஷ்மராலும் விதுரராலும் பூஜிக்கப் பட்டு, முதலில் எல்லாருடைய க்ஷேமத்தையும் சொல்லிவிட்டு, இவ் விதம் ஆரோக்கியத்தையும் கேட்டு, சேனைத்தலைவர் எல்லாருடைய மத்தியிலும் ஒருவசனத்தைச் சொல்லலானார்.

"அநாதியாயிருக்கிற ராஜதர்மமானது உங்களெல்லாராலும் அறியப்பட்டதே; அறியப்பட்டிருந்தும், வார்த்தையைத தொடங் குவதினிமித்தமாகச் சொல்லப்போகிறேன். திருதராஷ்டிரரும் பாண் டுவும் ஒருவருடைய புத்திரர்களென்பது பிரஸித்தம். பித்ருஸம்பந்த மான தனமானது அவர்களுக்குப் பொது. இந்தவிஷயத்தில் ஸந் தேகமில்லை. (அப்படியிருக்கையில்) திருதராஷ்டிரருடைய புத்திரர் கள் பித்ருதனத்தையடைய, பாண்டுவின் புத்திரர்கள் பித்ருஸம்பந்த மான தனத்தை ஏன் அடையவில்லை? பாண்டவர்கள், முன்பு வனத்தை அடைந்திருந்ததால், பித்ருதனத்தை அடையவில்லையென் பதும் அது திருதராஷ்டிரரால் ஆளப்பட்டதென்பதும் உங்களுக்குத் தெரியும். (இந்தக்கௌரவர்கள்) அனேக முறை பிராணஹானியைச் செய்கின்ற உபாயங்களாலே முயற்சிசெய்தும், ஆயுளில் மிச்சமுடைய அந்தப்பாண்டவர்களை யமன்வீட்டையடையும்படி செய்யமுடிய வில்லை. மகாத்மாக்களான அவர்களால் தங்கள்பலத்தினால் மறுபடியும் ராஜ்யமானது விருத்திசெய்யப்பட்டது. அற்பர்களான திருதராஷ் டிர புத்திரர்கள் சகுனியைக்கொண்டு கபடமாக அதையும் அபகரித் தனர். இவரால் அந்தச்செய்கையும் உசிதமானகாரியம்போலச் சம்ம திக்கப்பட்டது. இவ்வுலகில் பெரிதான காட்டிலும் பதின்மூன்று வரு ஷங்கள் வஸிக்கும்படிசெய்யப்பட்டார்கள். அப்படியே, ஸபையில் பத் தினியோடு மிக்கக்லேசத்தை உண்டுபண்ணப்பட்டவர்களான அந்த வீரர்களாலே காட்டில் மிகவும் குரூரமான பலவித துன்பங்கள் அடை யப்பட்டன. அப்படியே, [1] விராடநகரத்திலும் மகாத்மாக்களான அவர்களால், வேறு பிறப்பை அடைந்தவர்களாலும் பாபிகளாலும்

[1] ஒருசொல் விடப்பட்டது.

அடையப்படுவதுபோல, மிக்க துன்பம் அடையப்பட்டது. குரு வம்சத்தில் சிறந்தவர்களான அவர்கள் முன்னுண்டான அந்தக் கொடுஞ்செயல்கள் எல்லாவற்றையும் பின்னே தள்ளிவிட்டு ஸமாதானத்தினாலேயே கௌரவர்களுடன் சேர்க்கையை விரும்புகின்றார்கள். அவர்களுடைய நடையையும் துரியோதனனுடைய நடையையும் அறிந்து இங்குள்ள நண்பர்கள் துரியோதனனை ஒத்து வரும்படி செய்வதற்குக் கடமைப்பட்டிருக்கிறார்கள். வீரர்களான அந்தப் பாண்டவர்கள் உலகத்திற்கு நாசம் ஏற்படாமலிருப்பதற்காகக் கௌரவர்களுடன் போர்செய்யாமல் தங்கள் தனத்தை விரும்புகின்றார்கள். யுத்தவிஷயத்தில் துரியோதனனுக்கு (ச்சேனை அதிகமாக இருப்பதென்னும்) அந்தக் காரணத்தையும் காரணமாக நினைக்க வேண்டாம். அவ்விதம் அவர்கள் பலசாலிகளல்லவா? தருமபுத்திரருக்குச் சேர்ந்த சேனைகளும் ஏழு அக்ஷௌஹிணிகளுள்ளன. அவை கௌரவர்களுடன் போர்புரிய விருப்பமுடையவைகளாகி இந்தத் தருமபுத்திரருடைய கட்டளையை எதிர்பார்க்கின்றன. (ஆயினும்), ஸாத்யகி பீமஸேனன் மகாபலசாலிகளான நகுலஸஹதேவர்கள் ஆகிய புருஷச்ரேஷ்டர்களான மற்றவர்கள் ஆயிரம் அக்ஷௌஹிணிக்குச் சமானமாயிருக்கின்றனர். ஒன்றுசேர்ந்தவைகளான இந்தப் பதினோர் அக்ஷௌஹிணிகளும் ஒருபக்கம்; மகாபாகுவும் அனேகரூபமுடையவனுமான தனஞ்சயன் ஒருபக்கம். எப்படி கிரீடியானவன் எல்லாச்சேனைகளையுங்காட்டிலும் அதிகரித்தவனோ அப்படியே பெரிய புஜங்களுடையவரும் மிக்க ஒளியுள்ளவருமான வாஸுதேவரும் அதிகரித்தவர். [1] ச்சேனைகளின அதிகததையும தனஞ்சயனுடைய பராக்கிரமத்தையும் கிருஷ்ணனுடைய புத்திசாலித்தனத்தையும் அறிந்து எந்தமனிதன் யுத்தம்செய்வான்? ஆகையால், அப்படிப்பட்ட நீங்கள் தர்மத்தையும் காலத்தையும் அனுஸரித்துக் கொடுக்க வேண்டியதைக் கொடுங்கள். உங்களுக்கு இந்த ஸமயம் தவறவேண்டாம்" என்று சொன்னார்.

1 ஆயிரம் அக்ஷௌஹிணிக்கு நிகரான ஸாத்யகிமுதலானவர்கள் இருப்பதால் சேனைகள் அதிகம் என்பது கருத்து.

## இருபத்தோராவது அத்யாயம்.

## ஸஞ்சயயானபர்வம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர் த்ருபதபுரோகிதர்சொல் தக்கதென்றதும், கர்ணன் பாண்டவர் வனவாஸமுதலியவற்றைச் சரியாக நிறைவேற்றினால் நாட்டைப் பெறலாமென்றதும், பீஷ்மர் கர்ணனை நிந்தித்ததும், திருதராஷ்டிரன் தான் ஸஞ்சயனைப் பாண்டவரிடம் அனுப்புவதாகச்சொல்லி த்ருபதபுரோஹிதரைத் திருப்பி அனுப்பியதும்.)

அவருடைய அந்தவார்த்தையைக்கேட்டு ஞானத்தால் பெரியவரும் மிக்கபலமுடையவருமான பீஷ்மர் அவரைப் பூஜித்துக் காலத்தை அனுஸரித்து ஒருவார்த்தை சொன்னார். "தெய்வானுகூலத்தால் கிருஷ்ணனுடன் அவர்களெல்லாரும் க்ஷேமமாக இருக்கிறார்கள். அவர்கள் தெய்வானுகூலத்தால் ஸஹாயம்பெற்றவர்களாயும் தெய்வானுகூலத்தால் தர்மத்தில் பற்றுள்ளவர்களாயுமிருக்கிறார்கள். தெய்வானுகூலத்தால் பிராதாக்களான அந்தக் குருநந்தனர்கள் ஸமாதானத்தை விரும்புகிறார்கள். தெய்வானுகூலத்தால் பாண்டவர்கள் பந்துக்களுடன் போர்புரிவதில் மனமில்லாதவர்களாயிருக்கிறார்கள். உம்மாலேயோ இவையெல்லாம் ஸத்தியமாக உரைக்கப்பட்டன; ஸந்தேகமில்லை. ஆனால், பிராம்மணராயிருப்பதால், உம்முடைய வாக்கியம் மிக்க கடுமையாயிருக்கிறதென்பது என்னெண்ணம். அந்தப் பாண்டவர்கள் வனத்திலும் இவ்விடத்திலும் துன்பத்தை அடையும்படி செய்யப்பட்டார்கள்; ஸந்தேகமில்லை. அவர்கள் தர்மமாகப் பிதாவின் தனமெல்லாவற்றையும் ஐயமற அடைய உரிமையுள்ளவர்கள். பிருதாபுத்ரனான அர்ஜுனன், பலசாலியும் அஸ்திரத்தில் சிரமப்பட்டவனும் மகாரதனுமானவன். ஸாக்ஷாத் வஜ்ராயுதம்தரித்த இந்திரனாயிருந்தாலும் எவன்தான் யுத்தத்தில் பாண்டுபுத்ரனான தனஞ்சயனைப் பொறுப்பான்? மற்ற வில்லாளிகளைச் சொல்லவும் வேண்டுமா? அவன் மூன்று உலகங்களுக்கும் ஸமர்த்தனென்பது என் எண்ணம்" என்று சொன்னார்.

இவ்விதம் பீஷ்மர் சொல்லிக்கொண்டிருக்கையிலேயே, கர்ணன் துரியோதனனை நன்றாகப்பார்த்துக் கோபத்தினால் அவருடைய வார்த்தையைத் தைரியமாக ஆக்ஷேபித்துப் புரோகிதரை நோக்கி, "ஓ! பிராமணா! அந்த விஷயம் உலகத்தில் எந்தப்பிராணியினால் அறியப்படவில்லை? அடிக்கடி திரும்பித்திரும்பிச்சொல்லப்பட்ட அந்தவார்த்தை

யால் என்னபயன்? துரியோதனனிமித்தம் சகுனியானவன் முந்திச் சூதாட்டத்தில் ஜயித்தான். பாண்டுபுத்திரனையுதிஷ்டிரன் பிரதிஜ்ஞை யால் காட்டை அடைந்தான். அவன் பிரதிஜ்ஞையை நிறை வேற்றிவிட்டுத் தன் தந்தையின் ராஜ்யத்தையடைய விரும்பவில்லை; மூடன்போல மாத்ஸ்யர்களுடைய பலத்தையும் பாஞ்சாலர்க ளுடைய பலத்தையும் அடைத்து விரும்புகிறான். ஓ! வித்துவானே! துரியோதனனானவன் பயத்தினால் கடைசியாகக் கால்பாகமும் கொடான்; தர்மத்தினாலோ சத்துருவுக்கும் பூமிமுழுமையையும் கொடுப்பான். அவர்கள் பித்ருபிதாமஹர்களைச்சேர்ந்த ராஜ்யத்தை விரும்புகிறார்களானால் பிரதிஜ்ஞை செய்தபடி வனத்தை அடைந்து மறுபடி அவ்வளவுகாலம் ஸஞ்சாரம்செய்யவேண்டும். பிறகு, ஓரிடத்திலிருந்தும் பயமில்லாதவர்களாகத் துரியோதனனுடைய மடியிலிருக்கலாம். கேவலமான மூர்க்கத்தனத்தால் அவர்கள் அதர்மமான புத்தியைக் கொள்ளவேண்டாம். அல்லாமலும், அந்தப்பாண்டவர்கள் தர்மத்தைவிட்டு யுத்தத்தை விரும்புகிறார்களே யானால், இந்தக்கௌரவச்ரேஷ்டர்களை எதிர்த்து (தோற்கும்போது) என்னுடைய வார்த்தையை நினைப்பார்கள்" என்கிற வசனத்தைச் சொன்னான்.

பீஷ்மர், "ராதேய! உன்னுடையவார்த்தையால் என்ன பயன் உண்டாகும்? அந்தச்செய்கையை நீ நினைக்கவேண்டும். எப்பொழுது விராடநகரத்தில் தீரனான அர்ஜுனன் ஒருவனாகவே யுத்தத்தில் ஆறுமகாரதர்களையும் வென்றானோ அப்பொழுது அவ்விடத்தில் நீ வரவேயில்லையா? அப்பொழுதே, பலமுறை ஜயிக்கப்பட்டவனான உன் னுடைய வேலை பார்க்கப்பட்டது. இந்தப்பிராமணர் சொல்லியபடி செய்யாமலிருப்போமானால் அவனால் யுத்தத்தில் அடிக்கப்பட்டு நிச் சயமாக மண்ணைக் கவ்வுவோம். துரியோதனன் மந்திரிகளுடன் நாசத்தை அடைவான்; ஸந்தேகமில்லை" என்று சொன்னார். உடனே, குருகுலத்தவனான அந்தத்திருதராஷ்டிரன், பீஷ்மரைத் துதித்து ஸமாதானஞ்செய்து, கர்ணனையும் அதட்டிவிட்டு, "சந்தனுபுத்திரரான பீஷ்மர் நமக்கும் பாண்டவர்களுக்கும் எல்லா உலகத்திற்கும் ஹித மான இந்தவார்த்தையைச் சொன்னார். நான் ஆலோசித்துப் பாண்ட வர்களிடம் ஸஞ்சயனை அனுப்புவேன். நீர் இப்பொழுது பாண்டவர் களிடமே செல்லும்; தாமதிக்கவேண்டாம்" என்று சொல்லி, அந்தப் பிராமணரைப் பூஜித்துப் பாண்டவர்களிடம் அனுப்பி விட்டு, ஸபையின் மத்தியில் ஸஞ்சயனை அழைத்து ஒருவார்த்தை சொல்லலானான்.

---

## இருபத்திரண்டாவது அத்யாயம்.

## ஸஞ்சயயானபர்வம். (தொடர்ச்சி.)

(த்ருதராஷ்டிரன் துரியோதனாதியரை இகழ்ந்தும் பாண்டவரைப் புகழ்ந்தும், ஸஞ்சயனைப் பாண்டவரிடம் தூதனுப்பியது.)

*த்ருதராஷ்டிரன், (ஸஞ்சயனை நோக்கி), "ஸஞ்சய! பாண்டுபுத்திரர்கள் உபப்லாவ்யத்தில் வந்திருப்பதாகச் சொல்லுகிறார்கள். நீ போய் அவர்களை அறிந்துவா. அஜாதசத்துருவான யுதிஷ்டிரனையும், 'பாக்கியத்தால் நீ வனம்விட்டுக் கிராமத்தை அடைந்தாய்' என்று மரியாதைசெய்வாய். ஸஞ்சய! எல்லாரையும் நோக்கி, 'கஷ்டமான வாஸத்தை அதற்குத் தகுதியில்லாதவர்களான நீங்கள் செய்துவிட்டு க்ஷேமத்தோடு கூடினீர்கள்' என்று சொல்லு. கபடமற்றவர்களும் உபகாரிகளுமாயிருக்கிற அவர்களுக்கு எங்கள் விஷயத்தில் சீக்கிரமாகச் சாந்தியானது உண்டாயிருக்கிறது. ஓ! ஸஞ்சய! நான் பாண்டவர்களிடம் ஒருவிஷயத்திலும் ஒருகாலும் ஒருவிதமான கபடச் செயலையும் பார்க்கவில்லை. பாண்டவர்கள் தங்கள் பலத்தால் அடையப்பட்ட எல்லாஸம்பத்தையும் என்பொருட்டே கொண்டுவந்து கொடுத்தார்கள். நான் பாண்டவர்களை நிந்திக்கக்கூடிய ஸூக்ஷ்மமான ஒரு தோஷத்தையும் அவர்களிடம் தேடிப்பார்த்தும் அறியவில்லை. எப்பொழுதும் தர்மார்த்தங்களுக்காகக் காரியத்தைச் செய்கின்றார்கள். ஆசையால் ஸுகத்தையும் பிரியத்தையும் அனுஸரிக்கிறார்களில்லை. பார்த்தர்கள் உஷ்ணம், சீதம், பசி, தாகம், நித்திரை, சோம்பல், கோபம், (விஷயத்தில்) ஸந்தோஷம், அஜாக்கிரதை ஆகிய இவைகளைத் தைரியத்தாலும் அறிவினாலும் விலக்கித் தர்மார்த்த ஸாதனங்களில் மிகவும் முயற்சி செய்கிறார்கள். ஸமயத்தில் மித்திரர்களுக்குத் தனங்களைக் கொடுக்கின்றார்கள். அவர்களிடம் நீண்டகாலம் வஸிப்பதால் ஸ்நேஹமானது குறைகிறதில்லை. அவர்கள், யோக்கியதையை அனுஸரித்துக் கௌரவித்தலையும் பொருள்கொடுத்தலையும் செய்கிறார்களல்லவா? பாபியும் முரடனும் மந்தபுத்தியுடையவனுமான துரியோதனனையும் மிக்க அற்பனான கர்ணனையும் தவிர வேறு அவர்களைத் த்வேஷிக்கிறவனில்லை. அல்லாமலும், ஒருவாறு பீமாதிகளைத் த்வேஷிக்கிறவன் இருந்தாலும், தர்மபுத்திரனைத் த்வேஷிக்கிறவனே இல்லை. ஸஞ்சய! விஷயத்தில் புத்தியுடையவனும் என்னுடையபுத்திரனுமான*

துரியோதனன் மிருத்யுவின்வசத்தை அடைந்துவிட்டான். (துரியோதனன் கர்ணன்) இவ்விருவர்களும், ஸுகம் பிரியம் இரண்டும்விட்டவர்களும் மகாத்மாக்களுமான அவர்களுக்குக் கோபத்தை உண்டுபண்ணுகிறார்களல்லவா? ஆரம்ப சூரனும் ஸுகமாக வளருகிறவனுமான துரியோதனன் சிறுபிள்ளைத்தனத்தால், பாண்டவர்கள் உயிருடனிருக்கையில், அவர்களுடைய பாகத்தை அபகரிக்கக்கூடியதாக நினைப்பது நல்லசெய்கையென்று எண்ணுகிறான். அர்ஜுனனும் கேசவனும் விருகோதரனும் ஸாத்யகியும் மாத்திரியின்புத்திரர்களும் ஸ்ருஞ்சயர்களும் அனுஸரித்துப் பின்தொடருகின்ற அஜாதசத்துருவினுடைய பாகத்தை யுத்தத்துக்கு முந்தி அவருக்குக் கொடுப்பது நலம். இடக்கையாலும் பாணப்பிரயோகம் செய்கிறவனும் காண்டீவமென்கிற வில்லுடையவனுமான அந்த அர்ஜுனனொருவனே தேரிலிருந்துகொண்டு பூமியைப் பிளப்பான். ஜயத்தையே சீலமாகவுடையவனும் நெருங்கமுடியாதவனும் மூவுலகத்திற்குமதிபதியும் மகாத்மாவுமான கிருஷ்ணனும் அப்படியே. எல்லா உலகங்களிலும் சிறந்தவனான அவன்முன்னே எந்தமனிதன் நிற்பான்? காண்டீவத்தை வில்லாகவுடைய அர்ஜுனன், ஒரேரதமுடையவனாக, மேகம்போல முழங்குபவைகளும் மிக்கவேகமுடையவைகளுமான பாணக்கூட்டங்களை மின்மினிப்பூச்சிகளைப்போல் வாரி இறைத்து வடதிக்கையும் உத்தர குருதேசங்களையும் ஜயித்தான். ஸவ்யஸாசியானவன் இவர்களுடைய தனத்தையும் அபகரித்தான். தமிழர்களையும் சேனைக்குப் பின்னுள்ளவர்களாகவே செய்தான். காண்டவவனத்தில் இந்திரனுடன்கூடின தேவர்களை ஜயித்த ஸவ்யஸாசியும் காண்டீவத்தை வில்லாகவுடையவனுமான பாண்டவன், பாண்டவர்களுக்குக் கீர்த்தியையும் கௌரவத்தையும் விருத்திசெய்துகொண்டு அக்கினிக்கு அவ்வனத்தைக் கொடுத்தான். இவ்வுலகில் கதாயுதம் எடுத்தவர்களில் பீமனுக்குச் சரியானவன் இல்லை. அவனுக்குச் சரியான யானைஏறுகிறவனும் இல்லை. ரதிகர்களில் அவனை அர்ஜுனனுக்குக் குறையாதவனாகவும் சொல்லுகிறார்கள்; புஜங்களின் பலத்தால் பதினாயிரம் யானைகளின் பலமுள்ளவனாகவும் சொல்லுகிறார்கள். நன்றாகப் பழக்கப்பட்டவனும் வைரமுண்டுபண்ணப்பட்டவனும் வேகமுடையவனுமான அவன் சீக்கிரமாக அற்பர்களான திருதராஷ்டிரன்புத்திரர்களை எரித்துவிடுவான். எப்பொழுதும் மிக்க பொறாமைகொண்ட அவன் யுத்தத்தில் பலாத்காரமாக ஸாக்ஷாத் இந்திரனாலும் வெல்லமுடியாதவன். நல்ல

தேஜஸ்ஸுடையவர்களும் பலசாலிகளும் கைவேகமுடையவர்களும் அர்ஜுனனால் நன்றாகப் பழக்கப்பட்டவர்களும் ஸஹோதரர்களு மான மாத்திரியின் புத்திரர்கள் பக்ஷிக்கூட்டங்களைக் கொல்லுகின்ற 1 பருந்துகள்போலப் பகைவர்களை மிச்சம்வைக்கமாட்டார்கள். நம்முடைய இந்தச்சேனை இவ்விதம் பூர்ணமாயிருக்கிறதென்பது ஸத்தியம். ஆனாலும், அவர்களை எதிர்த்து நில்லாதென்று நினைக் கிறேன். அந்தப்பாண்டவர்களுடைய நடுவில் இருக்கிறவனும் பல சாலியுமான திருஷ்டத்யும்னன் இவ்வுலகில் ஒப்பற்றவன். ஸோமகர் களில் ச்ரேஷ்டனான துருபதன் மந்திரிகளுடன் பாண்டவர்களி னிமித்தம் சரீரத்தில் (ஆசையை) விட்டவனாக என்னால் கேட்கப் பட்டான். விருஷ்ணிகளில் சிறந்தவனான கிருஷ்ணன் பாண்டவர் களுக்குத் தலைவனாயிருப்பதால் அஜாதசத்துருவை வேறு எவன் ஸகிப்பான்? கூடவஸிப்பவனும் உபகரிக்கப்பட்டவனும் பிராய முதிர்ந்தவனும் மச்சதேசத்தார்களுக்கு அதிபதியுமான விராடன் புத்திரர்களுடன் பாண்டவர்களின் நிமித்தமாயிருப்பதாகவும் யுதிஷ் டிரனிடத்தில் பக்தியுடையவனாயிருப்பதாகவும் அடிக்கடி எனக்குக் கேள்வி. கேகய தேசத்திலிருந்தும் வெளியில் துரத்தப்பட்டவர்க ளும் தேராளிகளும் பெரிய வில்லுடையவர்களுமான ஐந்துஸஹோ தரர்கள் இருக்கின்றார்கள். அவர்களும் கேகயர்களிடமிருந்தும் ராஜ்யத்தைவிரும்பினவர்களும் யுத்தத்தை விரும்பினவர்களுமாகிப் பார்த்தர்களை அடுத்து வஸிக்கின்றார்கள். அரசர்களுள் வீரர்களும் வந்தவர்களும் பாண்டவர்களின்விஷயத்தில் பற்றுதலுள்ளவர்களு மான எல்லாரையும் சூரர்களாகவும் பக்திமான்களாகவும் பிரீதியுள்ள வர்களாகவும் தர்மராஜனை அடுத்தவர்களாகவும் நான் கேட்கிறேன். பர்வதங்களை அடுத்து வஸிப்பவர்களும் பிரவேசிக்கமுடியாத வனங் களில் வஸிப்பவர்களும் பூமியில் குலத்தாலும் ஜாதியாலும் சுத்தர் களுமான யுத்தவீரர்களும், பலவிதஆயுதங்களும் வீரியமுமுடைய மிலேச்சர்களும், பாண்டவர்களின்நிமித்தம் வந்தவர்களும் பற்றுத லுள்ளவர்களுமாயிருக்கிறார்கள். யுத்தத்தில் இந்திரனுக்கு ஸம மானவனும் அனேக சிறந்த யுத்தவீரர்களுடன் கூடினவனும் மகாத்மாவும் உலகத்தில் சிறந்தவீரனும் நிகரில்லாத வீர்யமும் பராக் கிரமமுமுடையவனுமான பாண்டியராஜனும் பாண்டவர்கள்நிமித்த மாக வந்திருக்கிறான். துரோணரிடமிருந்தும், அர்ஜுனனிடமிருந்தும், வாஸுதேவனிடமிருந்தும், கிருபரிடமிருந்தும், பீஷ்மரிடமிருந்தும்

1 'ச்யேநம்' என்பது மூலம்; 'ராசாளி' என்றும் கூறுவர்.

அஸ்திரத்தை அப்பியஸித்தவனாக (என்றால்) கேட்கப்படுகிறவனும் இவனொருவனே பிரத்யும்னனுக்கு நிகரென்று சொல்லப்பட்டவனு மான ஸாத்யகியானவன், பாண்டவர்கள்பக்ஷத்தில் சேர்ந்திருக்கிறான். சேதி தேசத்தவர்களும் கரூசக தேசத்தவர்களும் சேர்ந்து எல்லா முயற்சிகளோடும் நெருங்கினபொழுது, கிருஷ்ணன், அரசர்களுடைய எல்லா உத்ஸாகத்தையும் தொலைத்து அவர்களுடைய மத்தியில் ஸூரியனைப்போலத் தபிக்கச்செய்கிறவனும் ஸ்ரீயுடன் கூடினவனும் ஜ்வலிக்கிறவனும் பூமியில் நாணிழுக்கிறவர்களில் மிகவும் சிறந்த வனுமான சிசுபாலனை யுத்தத்தில் அடக்கமுடியாதவனாக நினைத்துப் பலாத்காரமாகச் சீக்கிரம் நொறுக்கினான்; கரூசராஜன்முதலான எல்லா அரசர்களும் எவனுக்குக் கௌரவத்தை விருத்திசெய்தார்களோ அந்தச் சிசுபாலனைப் பார்த்துப் பாண்டவர்களுக்குக் கீர்த்தியையும் கௌரவத்தையும் விருத்திசெய்துகொண்டு கொன்றான். அந்தயுத்தத் தில் ஸுக்ரீவமுதலான குதிரைகள்பூண்ட தேருடன்கூடினவனும் கேசவனுமான அந்தவாஸுதேவனை ஸஹிக்கமுடியாதென்று நினைத் துச் சிசுபாலனை விட்டுவிட்டு, ஸிம்மத்தைப்பார்த்து அற்பமிருகங்கள் ஓடுவதுபோல, மற்றவர்கள் ஓடிவிட்டார்கள். அப்படிப்பட்ட வாஸு தேவனை (இரண்டுரதிகர்கள் மாத்திரம் எதிர்க்கிற) த்வைரதமென் கிற யுத்தத்தில் விரும்புகிறவனும் விரோதியுமாகி வேகமாக எதிர்த்தவனான சிசுபாலன் கிருஷ்ணனால் அடிக்கப்பட்டு உயிர் மாண்டு, காற்றினால் முறிக்கப்பட்ட கோங்குமரம்போலச் சாய்ந் தான். ஓ! ஸஞ்சய! கவல்கணனுடையபுத்திர! அவர்கள் விஷயத்தில் கேசவனுடைய பராக்கிரமத்தைச் சாரர்கள் எனக் குத் தெரிவித்தகாரணத்தினால், அந்த விஷ்ணுவினுடைய செய்கை களை நினைத்து நான் ஸமாதானத்தை அடையவில்லை. எந்தப் பாண்டவர்களுக்கு அந்தக்கிருஷ்ணன் தலைவனாயிருக்கிறானோ அவர் களை ஒருகாலும் மற்றச்சத்துருவானவன் தாங்கமாட்டான். கிருஷ்ணார்ஜுனர்கள் ஓரேதேரில் சேர்ந்திருக்கிறார்களென்று கேட்டு என்னுடையமனம் பயத்தால் நடுங்குகிறது. மந்தபுத்தியுள்ள என் னுடையபுத்திரன் அவர்களுடன் யுத்தத்தை அடையாமலிருப்பானா கில் அப்பொழுது ஸுகத்தைஅடைவான். ஸஞ்சய! அப்படிக்கு இல் லாதவிஷயத்தில் இந்திரனும் விஷ்ணுவும் அஸுரசேனையை எரிப்பது போல் அவர்கள் கௌரவர்களை எரித்துவிடுவார்கள். தனஞ்சயனை இந்திரனுக்கு ஸமமாகவும் கிருஷ்ணனை அநாதியான விஷ்ணுவாகவும் நான் நினைக்கிறேன். தர்மங்களுக்கு இருப்பிடமும் லஜ்ஜையுடன்கூடின

வனும் பலசாலியும் குந்திபுத்திரனும் பாண்டவனும் துரியோதனனால் வஞ்சிக்கப்பட்டவனுமான யுதிஷ்டிரன் மனத்தை அடக்கியவனாக இல்லாவிட்டால், கோபமூண்டு திருதராஷ்டிர புத்திரர்களை எரித்திருப்பான். ஸூத! கோபத்தால் ஜ்வலித்தவனான ராஜாவினுடைய கோபத்திற்கு எப்பொழுதும் இயல்பாக நான் மிகவும் பயப்படுவது போல அர்ஜுனனிடமிருந்தும் வாஸுதேவரிடமிருந்தும் பீமனிடமிருந்தும் நகுலஸஹதேவர்களிடமிருந்தும் பயப்படுவதில்லை. அவன் மிக்க தவமுடையவனும் பிரம்மசரியத்துடன் கூடினவனுமாயிருக்கிறான். அவன்மனத்தினுடைய இந்தஎண்ணம் ஸித்திக்கும். ஸஞ்சய! அவனுடைய கோபத்தை ஆலோசித்து உசிதத்தை அறிகின்ற நான் எப்பொழுதும் மிகவும் பயமடைந்திருக்கிறேன். அது உசிதமே. ஆகையால், அனுப்பப்பட்டவனான நீ சீக்கிரம் தேரிலேறிப் பாஞ்சாலராஜனுடைய சேனையிருக்குமிடத்தை அடை. தர்மபுத்திரனைக் குசலப்பிரஶ்னம் செய். நீ அடிக்கடி ப்ரீதியுடன் சொல்லு. ஐயா! மஹாபாக்கியமுடையவனும், வீரியமுடையவர்களில் சிறந்தவனுமான கிருஷ்ணனையும் அடைந்து என்வசனத்தினால் ஆரோக்யத்தைக் கேள். திருதராஷ்டிரன் பாண்டவர்களுடன் ஸமாதானத்தைஅடைய விருப்பமுள்ளவனா யிருக்கிறானென்றும் சொல்லு. ஸூத! குந்திபுத்திரனானவன் அந்த வாஸுதேவனுடைய எந்தவார்த்தையையும் செய்யாமலிரான். வாஸுதேவன் இவர்களுக்குப் பிரியனும் வித்வானும் இவர்களுடைய காரியத்தில் எந்நாளும் முயற்சியுள்ளவனுமாயிருக்கிறான். பாண்டவர்களும் ஸ்ருஞ்சயர்களும் ஜனார்த்தனனும் ஸாத்தியகியும் விராடனும் திரௌபதியின் புத்திரர்கள் ஐவர்களும் ஆகிய எல்லாரையும் ஓரிடத்தில் வருவிக்கச்செய்து என்வசனத்தால் நோயின்மையைக் கேள். அவ்விடத்தில் நீ பிறர்பொருட்டு ஸமயோசிதமாகவும் பாரதர்களுக்கு நன்மையாகவும் எதையெதை நினைப்பாயோ, எது கோபத்தை விருத்திசெய்யாதோ எது யுத்தத்திற்குக் காரணமுமாகாதோ அவற்றை அரசர்களுடையபந்தியில் சொல்லு" என்று சொன்னான்.

## இருபத்துமூன்றாவது அத்யாயம்.

## ஸஞ்சயயானபர்வம். (தொடர்ச்சி.)

(ஸஞ்சயன் உபப்லாவ்யம் சென்று பாண்டவர்களிடம் திருதராஷ்டிரன் க்ஷேமம் விசாரிப்பதாகச் சொல்லியதும், யுதிஷ்டிரர் திருதராஷ்டிரன் முதலியோருடைய க்ஷேமத்தைக் கேட்டதும்.)

அப்பொழுது, ஸூதபுத்திரனான அந்தஸஞ்சயனே, திருதராஷ்டிரராஜனுடைய வார்த்தையைக்கேட்டு, அளவற்றபராக்ரமமுடையவர்களான பாண்டவர்களைப் பார்ப்பதற்காக உபப்லாவ்யம் சென்று, உடனே குந்திபுத்ரரான யுதிஷ்டிரமஹாராஜரை அடைந்து, முதலில் நமஸ்கரித்துச் சொல்லலானான். கவல்கணனென்கிற ஸூதனுடைய புத்திரனான ஸஞ்சயன் ஸந்தோஷமடைந்து, அஜாதசத்துருவான அவரை நோக்கி, 'ஓ! ராஜரே! நான், பாக்கியத்தினால், மஹேந்திரனுக்கு நிகரான நீர் ரோகமில்லாமல் ஸஹாயத்துடன் கூடினவராயிருப்பதைப் பார்க்கின்றேன். அம்பிகையின் புத்திரரும் வயது முதிர்ந்தவரும் புத்திமானுமான திருதராஷ்டிரராஜர் உம்மை ஆரோக்கியத்தை வினவுகிறார். பாண்டவரில் சிறந்தவனான பீமன் க்ஷேமமா? தனஞ்சயனும் அந்தமாத்திரியின் புத்திரர்களும் க்ஷேமமா? துருபதராஜன் புத்திரியும் தவறாதவிரதமுடையவளும் வீரர்களைப் பதிகளாக அடைந்தவளும் நல்ல புத்திரர்களையுடையவளும் மானமுடையவளுமான கிருஷ்ணையும் க்ஷேமமாயிருக்கிறாளா? ஓ! பாரதரே! க்ஷேமத்தை விரும்புகிற நீர் [1] எவர்களிடத்தில்இஷ்டமான காமங்களை விரும்புகிறீரோ (அப்படிப்பட்ட ஆப்தர்களுக்கும்) குசலமா?' என்று கேட்டான்.

யுதிஷ்டிரர், 'ஓ! காவல்கணியே! ஸஞ்சய! உனக்கு நல்வரவா? ஓ! ஸூத! நான் மனத்தில் பிரீதியடைந்து உன்னைப்பற்றி ஸந்தோஷிக்கிறேன். நான் உன்னுடைய நோயின்மையை அறிகிறேன். ஓ! வித்வானே! தம்பிகளுடன் க்ஷேமமாயிருக்கிறேன். ஓ! ஸூத! ஸஞ்சய! பரதகுலத்தில் பிறந்தவரும் கௌரவர்களில் முதியவருமான அரசருடைய இந்தக் குசலவார்த்தையை வெகுகாலத்திற்குப் பிறகு கேட்டு, உன்னைப் பார்த்தமட்டிலேயே பிரீதியின் சேர்க்கையால் நான் அரசரை நேரில் பார்த்ததாக நினைக்கிறேன். ஐயா! எங்களுக்குப் பிதாமஹரும் முதுமையடைந்தவரும் நல்லமனமுடையவரும்

1 'நீர் எவர்களுடைய க்ஷேமத்தை விரும்பி இஷ்டகாமங்களை விரும்புகிறீரோ அவர்களும் க்ஷேமமா?' என்பது கருத்து.

பேரறிவாளரும் எல்லாத் தர்மங்களோடும் கூடினவரும் குருவம்சத்தில் பிறந்தவருமான அந்தப் பீஷ்மர் குசலத்துடனிருக்கிறாரா? (எங்களிடத்தில்) அவருடைய [1]நட்பு முன்போலிருக்கிறதா? அரசரும் விசித்திரவீரியபுத்திரரும் மகாத்மாவுமான திருதராஷ்டிரர் புத்திரர்களுடன்கூடிக் குசலத்துடனிருக்கிறாரா? ஓ! ஸூதபுத்திரா! மஹாராஜரும் பிரதீபன்புத்திரரும் வித்துவானுமான பாஹ்லிகரும் க்ஷேமமா? அந்த ஸோமதத்தன் க்ஷேமமா? ஸத்திய ஸந்தனான பூரிஶ்ரவஸூம், சலனும், புத்திரனோடுகூடியவரும் வேதியருமான துரோணரும், கிருபரும் ஆகிய பெரியவில்லையுடைய இவர்களும் ரோகமற்றிருக்கிறார்களா? ஓ! ஸஞ்சய! பூமியில் பிரதானர்களும் அறிவிற்சிறந்தவர்களில்மஹான்களும் எல்லாச் சாஸ்திரங்களிலும் தெளிந்தஅறிவுடையவர்களும் பூமியில் விற்பிடித்தவர்களில் மிகவும் சிறந்தவர்களுமான வில்லாளிகளெல்லாரும் கௌரவர்களிடம் ஆசையுள்ளவர்களாயிருக்கின்றார்களா? ஐயா! எவர்களுடைய ராஜ்யத்தில் ரூபவானும் பெரிய வில்லுடையவரும் சீலமுடையவருமான துரோணபுத்திரர் வஸிக்கிறாரோ அந்தக்கௌரவர்களிடமிருந்து இந்தவில்லாளிகள் கௌரவத்தை அடைகின்றார்களா? இவர்களும் ரோகமில்லாதவர்களாயிருக்கின்றார்களா? ஓ! ஐயா! திருதராஷ்டிரமஹாராஜருக்கு வைஶ்யஸ்திரீயிடம் பிறந்தவனும் அறிவிற்சிறந்தவனுமான யுயுத்ஸூவானவன் க்ஷேமமா? ஐயா! எவனுக்கு மந்தனான துரியோதனன் வசப்பட்டவனாயிருக்கிறானோ மானியான அந்தக் கர்ணன் க்ஷேமமா? ஓ! ஸூத! ஸ்திரீகளும், முதியவர்களும், பாரதர்களுடையதாய்களும், பெரியவேலைக்காரிகளும், வேலைக்காரர்களின் மனைவிகளும், புத்திரர்களுடைய மனைவிகளும், புத்திரிகளும், புத்திரர்களும், ஸகோதரிகளின் புத்திரர்களும், ஸகோதரிகளும், புத்திரிகளின் புத்திரர்களும் (அரசரிடம்) அப்பிரியமில்லாமலிருக்கின்றார்களா? ராஜாவானவர் முன்போலப் பிராமணர்களுடைய ஜீவனத்தை முறைப்படிநடத்துகிறாரா? ஓ! ஸஞ்சய! துரியோதனன், பிராமணர்களுக்கு என்னால் கொடுக்கப்பட்ட மானியங்களைக் கெடுக்காமலிருக்கிறானா? புத்திரர்களுடன்கூடித் திருதராஷ்டிரராஜர் பிராமணர்களுடைய அதிக்கிரமங்களை உபேக்ஷிக்கிறாரா? அப்படியே ஸ்வர்க்கத்திற்குமார்க்கமாக ஏற்பட்ட அவர்களின் பரிபாலனவிருத்தியை எப்பொழுதுமே உபேக்ஷிக்காமலிருக்கிறாரா? ஜீவலோகத்தில், பிரம்மாவினால் பிரஜைகளுக்கு உத்தமமும் சுத்தமுமான இந்தப் (பிராமணவிருத்தி பரிபாலன

1 'ஜீவனமானது' என்றும் கொள்ளலாம்.

ரூபமான) ஜோதியானது ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. மந்தர்களான அந்தத் துரியோதனுதிகள் அங்ஙனம் (காவாமையாகிய) தோஷத்தை அடக்காமல்போனுல் கௌரவர்களுக்கு முழுமையும் நாசம் ஏற்படும். புத்திரனுடன் திருதராஷ்டிரராஜர் மந்திரிவர்க்கத்தில் ஜீவனத்தைக் கொடுக்கவிரும்புகிருரா? அவர்கள் ஒற்றுமையடைந்து ஸுஹ்ருத்துக்களுடையவேஷமும் கெட்டஎண்ணமுமுடையவர்களாகிப் பேதத்துடன் ஜீவிக்கவிரும்பாதவர்களாயிருக்கிருர்களா? ஓ! ஐயா! அந்தக்கௌரவர்களெல்லாருமே, பாண்டவர்களிடத்தில் தோஷத்தைச் சொல்லாமலிருக்கிருர்களா? புத்திரருடன்கூடின துரோணரும் வீரரான கிருபரும் எங்களிடத்தில் தோஷங்களைச் சொல்லாமலிருக்கிருர்களா? ராஜ்யத்தில் குருதேசவாஸிகளெல்லாருமே புத்திரனுடன் கூடின திருதராஷ்டிரரைஅடைந்து (தங்கள் காரியத்தைச்) சொல்லுகிருர்களா? ஒன்றுசேர்ந்துவருகிற திருடர்களின் கூட்டங்களைப் பார்த்துவிட்டு யுத்தங்களுக்குநாயகனுன அர்ஜுனனை நினைக்கின்ருர்களா? வில்லைத்தரிக்கிறவனும் பரபரப்புள்ளவனுமான தனஞ்சயனுல் நாணின்மத்தியிலிருந்து விடப்பட்டவைகளும், காண்டீவத்தால் தள்ளப்பட்டவைகளும், மேகம்போல முழங்குகின்றவைகளுமான பாணங்களை நினைக்கிருர்களா? எவனுக்குத் தீட்டப்பட்டவைகளும் கூர்மையான முனையுடையவைகளும் நல்லகட்டுக்களுடையவைகளுமான அறுபத்தொருபாணங்கள் ஒருகையில் பிரயோகமென்பது ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறதோ அந்தஅர்ஜுனனுக்கு அதிகமாகவோ ஸமமாகவோ ஒருவீரனையும் நான் பூமியில் பார்க்கவில்லை. பலசாலியும் கதையைக்கையிலுடையவனும் சேனையில்பகைவர்கூட்டங்களை நடுங்கச்செய்துகொண்டு, கோரைக்காடுகளில் மதயானைநடப்பதுபோல நடப்பவனுமான பீமனை நினைக்கிருர்களா? சேர்ந்துவந்தவர்களான கலிங்கர்களை [1] யுத்தத்தில் இடசாரிவலசாரியாகத் தானே (பாணங்களை) வாரியெறிந்துகொண்டு வென்றவனும் மாத்ரீபுத்திரனும் மிக்கவலிமையுள்ளவனுமான ஸஹதேவனை நினைக்கிருர்களா? ஓ! ஸஞ்சய! முன் நீ பார்த்திருக்கையில் சிபிகளையும் திரிகர்த்தர்களையும் ஜயிப்பதற்காக அனுப்பப்பட்டு மேலைத்திக்கை என்னுடைய வசமாகச் செய்தவனும் மாத்திரியின் புத்திரனுமான நகுலனை நினைக்கிருர்களா? கெட்ட ஆலோசனையினுல், துவைதவனத்தில் கோஷயாத்திரையாக வந்தவர்களான அவர்கள் பலமற்றவர்களாகிப் பகைவர்வசப்

1 'தந்தகூரே' என்பது மூலம்; தந்தகூரம் என்னும் இடத்தில் என்றும் கொள்ளலாம்.

பட்டு, அவமானத்தையடைந்தபொழுது, (அவர்களைப்) பீமஸேனனும் விஜயனும் விடுவித்தார்கள். நான் அர்ஜுனனுக்குப் பின் பலமாயிருந்து காத்தேன். பீமன், நகுல ஸகதேவர்களைப் பின்பலமாயிருந்து காத்தான். காண்டீவத்தை வில்லாகவுடைய விஜயனும் சத்துருக்கூட்டங்களை ஓட்டி (அவர்களைவிடுவித்துவிட்டு) க்ஷேமத்துடன் திரும்பிவந்தான். இந்த அவமானத்தை நினைக்கிறார்களா? ஓ! ஸஞ்சய! நாங்கள் திருதராஷ்டிரனுடைய புத்திரனை(த் தானமேபேதமுதலாகிய அங்கங்களாகிற) எல்லா உபாயத்தினாலும் ஜயிப்பதற்குச் சக்தர்களாகாமலிருப்போமேயானால் அப்பொழுது இவர்கள் விஷயத்தில் (ஸாமமென்னும்) ஒரு நல்ல செய்கையினால் ஸுகம் அடையக்கூடியதாகாது. இது நிச்சயம்' என்று சொன்னார்.

## இருபத்துநான்காவது அத்யாயம்.

## ஸஞ்சயயானபர்வம். (தொடர்ச்சி.)

**(ஸஞ்சயன் யுதிஷ்டிரருடைய வினாக்களுக்கு விடைகூறித் திருதராஷ்டிரனனுப்பிய செய்தியைக் கேட்கும்படி யுதிஷ்டிரரை வேண்டியது.)**

ஸஞ்சயன், 'ஓ! பாண்டவரே! எனக்கு நீர் எதை எப்படிச் சொன்னீரோ அதுஅப்படியேதான். ஓ! குருஸ்ரேஷ்டரே! கௌரவர்களையும் மற்ற ஜனங்களையும்பற்றிக் கேட்கிறீர். ஐயா! குந்திபுத்திரரே! நீர் எந்தக்கௌரவஸ்ரேஷ்டர்களைப்பற்றி வினவுகிறீரோ அவர்கள் நல்லமனமுடையவர்களாகவும் ரோகமற்றவர்களாகவுமிருக்கிறார்கள். துரியோதனனிடத்தில் முதியோர்களான ஸாதுக்களும் இருக்கிறார்கள்; பாவிகளும் இருக்கின்றார்களென்று அறியும். துரியோதனனைவன் பகைவர்களுக்கும் கொடுப்பான். பிராமணர்களுடைய மானியங்களை ஏன் கெடுப்பான்? இவன் துரோஹம் செய்யாதவர்களான உங்கள் விஷயத்தில் துரோஹம் செய்கிறவர்களிடத்திற்போல இருப்பது நல்லதன்று. நன்னடக்கையுடைய உங்களைப் பகைக்கிறவனும் கெட்டவனுமான துரியோதனன் மித்திரத்துரோகி ஆவான். ஓ! அஜாதசத்ருவே! அந்தக் கிழவரும் அறிகிறார்; மிகவும் தபிக்கிறார்; உள்ளே துயரமும் அடைகிறார். மித்திரத்துரோகமானது பாதகங்களைக்காட்டிலும் பெரிதென்று பிராமணர்களிடமிருந்து கேட்கிறானன்றோ? ஓ! அரசரே! ஸபையில் உம்மை நினைக்கின்றார்கள். யுத்தம் நேரிட்டபொழுது யுத்தங்களுக்குநாயகனை அர்ஜுனனையும் நினைக்கிறார்கள். துந்துபிவாத்தியங்களுடன் சங்கமுழக்கமானது

கோஷிக்கப்பட்டபொழுது கதாபாணியான பீமஸேனனை நினைக்கிறார்கள். அப்படியே யுத்தமத்தியில் எல்லாத்திக்குகளிலும் தடையின்றிச் செல்லுகின்றவர்களும், எப்பொழுதும் சேனையின்மேல் பாணவர்ஷங்களைப் பொழிகின்றவர்களும் யுத்தத்தில் சலிக்கும்படிசெய்ய முடியாதவர்களும், மஹாரதர்களுமான மாத்திரீபுத்திரர்களையும் நினைக்கின்றார்கள். ஓ! ராஜரே! பாண்டவரே! (அப்படியிருக்க) எல்லாத் தர்மங்களோடும்கூடின நீரே மிகவும் கஷ்டமானதுயரத்தை அடைந்தீரானால் மனிதனுக்கு எது நேரிடக்கூடியதோ அது அறியப்படுகிறதேயில்லை யென்று நினைக்கிறேன். ஓ! அஜாதசத்துருவே! கஷ்டத்தை அடைந்தவரான நீரே விவேகத்தினால் இதை மறுபடியும் ஸமாதானம் செய்துகொள்ளவேண்டும். இந்திரனுக்குநிகரான பாண்டுவின் புத்திரர்கள் எல்லாரும் காமத்திற்காகத் தர்மத்தை விடவே மாட்டார்களல்லவோ? ஓ! அஜாதசத்துருவே! திருதராஷ்டிர புத்ரர்களும், பாண்டவர்களும், ஸ்ருஞ்சயர்களும் மற்றும்சேர்ந்திருக்கிற அரசர்களும், எதனால் ஸுகத்தை அடைவார்களோ அதை நீரே விவேகத்தினால் ஸரிபண்ணிக்கொள்ளும். ஓ! அஜாதசத்துருவே! உம்முடையபிதாவான திருதராஷ்டிரர் ராத்திரியில் என்னிடம் சொல்லிய அப்படிப்பட்ட இந்தவார்த்தையை மந்திரிகளோடும் புத்திரர்களோடும் சேர்ந்து அறியக்கடவீர்' என்றுசொன்னான்.

## இருபத்தைந்தாவது அத்யாயம்.

## ஸஞ்சயயானபர்வம். (தொடர்ச்சி.)

(ஸஞ்சயன் போரையிகழ்ந்து ஸமாதானமடைவதே பீஷ்மர் முதலியோரின் கருத்தென்பதை யுதிஷ்டிரனுக்குச் சொல்லியது.)

யுதிஷ்டிரர் (அவனை நோக்கி), 'ஓ! காவல்கணியே! ஸூத புத்திரா! பாண்டவர்களும் ஸ்ருஞ்சயர்களும் ஜனார்த்தனரும் ஸாத்தியகியும் விராடனும் (சேர்ந்து) வந்திருக்கிறார்கள். திருதராஷ்டிரரால் உன்னிடம் கட்டளையிடப்பட்ட வார்த்தையைச் சொல்' என்று சொல்ல, ஸஞ்சயன் சொல்லலானான்.

'யுதிஷ்டிரரிடத்திலும், பீமனிடத்திலும், தனஞ்சயனிடத்திலும், மாத்திரியின் புத்திரர்களிடத்திலும், வாஸுதேவரிடத்திலும், ஸாத்தியகியினிடத்திலும், சேகிதானனிடத்திலும், விராடனிடத்திலும், பிராயம்முதிர்ந்த பாஞ்சாலராஜரிடத்திலும், பிருஷத வம்

சத்தில் பிறந்தவனும் யஜ்ஞஸேனன்புத்திரனுமான திருஷ்டத்யும்ன னிடத்திலும் தெரிவித்துக்கொள்ளுகிறேன். குருவம்சத்தோர்களுக்கு க்ஷேமத்தை விரும்பிச் சொல்லப்போகிற என்னுடைய இந்த வார்த் தையை எல்லாரும் கேட்க வேண்டும். திருதராஷ்டிரராஜர் பகைதணி தலைப் புகழ்பவராகி விரைவுடன் எனக்குத் தேரைப் பூட்டிவிட்டார். பிராதாக்களோடும் புத்திரர்களோடும் பந்துக்களோடும்கூடின அரச ருடைய அந்த வார்த்தையானது பாண்டவர்களுக்கு ருசிக்கவேண் டும். சமம் ஏற்படவேண்டும். குந்தியின்புத்திரர்களான நீங்களோ எல்லாத் தர்மங்களோடும் அழகோடும் கிருபையோடும் நேர்மையோ டும் கூடினவர்களும், நல்ல குலத்தில் பிறந்தவர்களும், ஹிம்ஸையே செய்யாதவர்களும், கொடையில் சிறந்தவர்களும் லஜ்ஜையுடையவர் களும், காரியங்களின் முடிவை அறிந்தவர்களுமாயிருக்கிறீர்கள். ஓ! பயங்கரமான சேனையையுடையவர்களே! உங்களிடத்தில் இழிவான காரியமானது பொருந்தாது. ஏனென்றால், உங்களுடைய நற்குண மானது அப்படிப்பட்டது. உங்களிடத்தில் ஏற்படுகிற களங்கமானது வெளுப்பு வஸ்திரத்தில் மையின்புள்ளிபோல ஸ்பஷ்டமாகப் பிரகாசிக் குமன்றோ? பாபத்திற்குக் காரணமும், சூன்ய ரூபமும், குருக்களு டைய ஸர்வநாசத்திற்குக் காரணமும், ஜயாபஜயம் ஸமமாகக் காணப் படுவதுமான யுத்தகார்யத்தை, அறிந்தவனை எவன் ஒருகாலாவது செய்வான்? எந்தப் பாண்டவர்களால் ஞாதிகளின்காரியமானது செய் யப்பட்டதோ அவர்களே தன்னியர்கள். அவர்களே புத்திரர்களும் ஸுஹ்ருத்துக்களும் பந்துக்களுமாயிருப்பவர்கள். பார்த்தர்கள் கௌர வர்களைப் பரிபாலித்துப் பிறகு அவர்கள் எல்லாரையும் பகைவர்களாக நிச்சயித்துக் கொன்றுவிட்டு (அதனால்) நிந்திக்கப்பட்ட உயிர்களை விடு வார்களேயானால்,கௌரவர்களுக்கு நிலையான மகிமையுண்டாகும். ஒரு ஸமயம், நீங்கள் ஞாதிகளைக் கொன்றதினால் நன்றாகஜீவித்தாலும் உங் களுடைய அந்த ஜீவனம் மரணத்தோடு ஒப்பானதாகும். திருஷ்டத் யும்னனுடைய புஜங்களால் ரக்ஷிக்கப்பட்டவர்களும், கேசவருடனும் சேகிதானனுடனும் ஸாத்தியகியுடனுங் கூடினவர்களுமான உங்களை, இந்திரனுடன்கூடின தேவர்களை ஸஹாயமாக அடைந்தவனாயிருந் தாலும், எவன்தான் வெல்லுவதற்கு எதிர்த்து நிற்பான்? ஓ! ராஜரே! துரோணராலும் பீஷ்மராலும் கர்ணனாலும் காக்கப்பட்டு அச்வத்தாமாவுடனும் சல்யனுடனும் கிருபர் முதலியவர்களுடனும் (மற்ற) அரசர்களுடனும் கூடியிருக்கும் கௌரவர்களை, எவன்தான் யுத்தத்தில் வெல்லுவதற்கு எதிர்த்து நிற்பான்? திருதராஷ்டிரபுத்ர

னை அரசனுடைய பெரிய சேனையைத் தான் நாசத்தை அடையாமல் கொல்லுவதற்கு எவன்தான் வல்லவன்? இவ்விதமெல்லாம் ஆலோசிக்கிற நான், ஜயத்திலேயும் அபஜயத்திலேயும் ஒருவிதமான க்ஷேமத்தையும் பார்க்கவில்லை. கெட்ட குலத்தில் பிறந்த இழிந்தவர்கள் போலப் பார்த்தர்கள் தர்மார்த்தங்களுக்கு விரோதமான காரியத்தை எப்படிச் செய்யக்கூடும்? (இவ்விதம் கவலையுடையவனை) நான் வாஸுதேவரையும், முதியோரான பாஞ்சாலராஜரையும் வணங்கி, இரக்கட் வரச்செய்து, கௌரவர்களுக்கும் ஸ்ருஞ்சயர்களுக்கும் க்ஷேமமுண்டாகும் வண்ணம் (செய்தற்காக) அஞ்சலிசெய்துகொண்டு, உங்களைச் சரணமடைகிறேன். 'அவ்விதமில்லை; இவ்விதம்' என்று ஒருவார்த்தையையும் வாஸுதேவரோ தனஞ்சயனோ ஒருகாலும்சொல்லக்கூடாது. [1] யாசிக்கப்படுகிறவன் பிராணன்களையும் விடலாம். மற்றதை ஏன் விடக்கூடாது? ஓ! வித்துவானே! காரியம்முடிவதற்காக இதைச்சொன்னேன். உங்களுக்கு இவ்வுலகில் உத்தமமான சாந்தியானது ஏற்படவேண்டுமென்பதுவே பீஷ்மரை முன்னிட்டவரான திருதராஷ்டிர மஹாராஜருடைய கொள்கை' என்று சொன்னான்.

---

## இருபத்தாறுவது அத்யாயம்.

## ஸஞ்சயயானபர்வம். (தொடர்ச்சி.)

**(தர்மபுத்ரர் நன்மையோ தீமையோ வருமென்பதையும், தம்மைத் துரியோதனுதியர் வெல்லமுடியாதென்பதையும், இந்த்ரப்ரஸ்த ராஜ்யத்தைக் கொடுத்தால் ஸமாதானமடையலாமென்பதையும் சொல்லியது.)**

யுதிஷ்டிரர், 'ஓ! ஸஞ்சய! யுத்தத்தில் பயப்படுகிறாயே? என்னிடமிருந்து யுத்தத்தில் விருப்பமுள்ள எந்தவார்த்தையைக் கேட்டாய்? ஐயா! யுத்தத்தைக்காட்டிலும் யுத்தமில்லாமை சிறந்தது. ஓ! ஸூத! எவன் [2] அதை அடைந்தபிறகு ஒருகாலாவது யுத்தம்செய்வான்? ஓ! ஸஞ்சய! மனிதன் ஒருகாரியத்தையும் செய்யாமலே மனத்

---

1 மூலத்தில் 'யாசமான:' என்றிருக்கிறது. 'யாச்யமான:' என்று மாற்றப்பட்டது.

2 'யுத்தமில்லாமல் இருத்தற்குக்காரணத்தை' அதாவது, இங்கு, 'தம் பாகத்தை அடைந்து' என்பதே பொருள்.

தால் விரும்புவதெல்லாம் ஸித்திக்குமேயானால், யுத்தத்தைவிட மிக லகுவான மற்றக்காரியத்தையும் செய்யமாட்டேனென்பது நான் அறிந்தவிஷயம். அப்படியிருந்தால், எதற்காக எந்தமனிதன் ஒரு காலாவது யுத்தத்தை அடைவான்? தேவர்களால் சபிக்கப்பட்டவனன்றோ யுத்தத்தைவிரும்புவான்? ஸுகத்தை விரும்பினவர்களான பார்த்தர்கள் தர்மத்தாலுண்டாகும் ஸுகத்தைப் பிரார்த்திக்கிறவர்களாகத் தர்மத்தினின்று குறைவடையாததும் உலகத்திற்கு ஹிதமுமான காரியத்தைச் செய்கிறார்கள். உண்மையில் கஷ்டப்பட்டு நிறைவேற்றக்கூடிய கார்யமே துக்கம். ஸுகத்தை அடைய விரும்புகிறவனும் துக்கத்தை நிவிருத்திக்க விரும்புகிறவனுமாயிருப்பவன் தர்மத்தைவிட்டு விலகாத செய்கையைத் தொடங்கவேண்டும். ஆசைக்குவசப்பட்டவைகளான இந்திரியங்களுடைய காரியத்தை அறிந்த எவன் தன் சரீரத்தை வருத்தப்படுத்துவான்? எந்த ஆசையினால்விடுபட்டவன் துக்கமான காரியத்தைச் செய்யவில்லையோ எல்லாத் தர்மத்தையும்விட்டு விலகினதான அதனைத் தள்ளவேண்டும். மூட்டப்பட்டதும் நன்கு கொழுந்துவிட்டெரிவதுமான அக்னிக்கு மேல் மேலும் பலம் விருத்திஅடைகிறதுபோலவே விரும்பினது விரும்பினபடி கிடைப்பதால் ஆசைக்கு மேன்மேலும் பலம் விருத்தியடைகிறது. நெய்யினால் விருத்தியடைந்த அக்னிபோல் மனிதன் திருப்திஅடைகிறதில்லை. எங்களோடு கூடியிருந்தால் திருதராஷ்டிரராஜருக்கு இந்தப்போகஸமூகம் நன்கு பெரிதாயிருக்குமென்பதை ஆலோசித்துப் பார். மிகுந்த புண்ணியமில்லாதவன் யுத்தங்களுக்கு வல்லவனாகான். மிகுந்த புண்ணியமில்லாதவன் கானசப்தத்தைக்கேட்கிறதில்லை. மிகுந்த புண்ணியமில்லாதவன் மாலைகளின் கந்தங்களை அனுபவிக்கிறதில்லை. மிகுந்தபுண்ணியமில்லாதவன் சந்தனமுதலானவைகளைப் பூசுகிறதில்லை. மிகுந்தபுண்ணியமில்லாதவன் சிறந்த வஸ்திரங்களை உடுக்கிறதில்லை. அப்படியில்லாவிட்டால் எங்களைக் குருதேசங்களிலிருந்தும் எவ்விதம் துரத்துவார்? அறியாதவனுக்குத்தான் அனேகமாக இந்தவிஷயத்திலேயே ஆசையானது ஏற்படும். அது சரீரத்தில் மனத்தை வருத்துகிறது. அரசரானவர் தாம் சங்கடத்தில் அகப்பட்டுக்கொண்டு பிறர்களுடைய பலத்தைத் தேடுகிறார். அது நல்லதன்று. [1] அவர் தம்முடைய நடையை எவ்விதம் நினைக்கிறாரோ அவ்விதமே பிறர்களுடைய நடையையும் நினைக்கிறார். ஓ! ஸஞ்சய! வஸந்தருதுவில் வெயில்வேளையில் பக்கத்திலிருக்கிற

[1] 'துரியோதனன்' என்பது பழையவுரை.

அக்கினியை நுழையமுடியாததும் துரும்புகள் அடர்ந்ததுமான புதரில் எறிந்துவிட்டு, அது காற்றின் வசத்தினுல் விருத்திஅடைய, (அதிலிருந்து) விடுதலைவிரும்பி க்ஷேமத்தைப்பற்றித் துக்கிப்பது போல ஐஸ்வரியத்தைஅடைந்தவரான திருதராஷ்டிரராஜர், துஷ்டபுத்திபுடையவனும் கோணல்வழியில்பற்றுள்ளவனும் மந்தனும் துர்மந்திரிகளையுடையவனுமான புத்திரனை அங்கீகரித்துக்கொண்டு இப்பொழுது என்னகாரணத்திற்காகப் புலம்புகிறார்?

துரியோதனனும் மிக்க ஆப்தரான விதுரருடைய வார்த்தைகளை ஆப்தனல்லாதவனுடைய வார்த்தைகளைப்போல அவமதித்திருக்கிறான். (அந்தப்) புத்திரனுடைய பிரியத்தை விரும்பினவரான திருதராஷ்டிரராஜரும் (விதுரருடைய வார்த்தைகளை அவமதித்து) நன்றாக அறிந்தே அதர்மத்தில் பிரவேசித்திருக்கிறார். மேதாவியும் கௌரவர்களுடைய அர்த்தத்தில் விருப்பமுள்ளவரும் மிகக்கற்றவரும் வியவகாரத்தில்வல்லவரும் சீலமுடையவருமான அந்த விதுரரை, அந்தத்திருதராஷ்டிரராஜர், புத்திரனிடமுள்ள பேராசையால், கௌரவர்களுக்கு வேண்டினவராக நினைத்தாரில்லை. ஓ! ஸஞ்சய! (எங்கள்) மானத்தைக்கெடுத்தவனும், (தனக்கு) மானத்தை விரும்புகிறவனும், பொறாமையுள்ளவனும் படபடப்புள்ளவனும், அர்த்ததர்மங்களைக் கடந்தவனும், துர்ப்பாஷைபேசுகிறவனும், கோபத்தின்வசமானவர்களைப் பின்பற்றுகிறவனும், காமத்தில்மனமுடையவனும், துஷ்டமனமுள்ளவர்களால் கெட்ட எண்ணம் உண்டாக்கப்பட்டவனும், திருப்பமுடியாதவனும், ச்ரேயஸில்லாதவனும், மிக்ககோபமுடையவனும், மித்திரத்துரோகம்செய்கிறவனும், பாவத்தில் புத்தியுடையவனுமான புத்திரனுடைய பிரியத்தைவிரும்புகிற திருதராஷ்டிரராஜர் ப்ரத்தியக்ஷமாகப் பார்த்துக்கொண்டே தர்மகாமங்களை விட்டுவிட்டார். ஓ! ஸஞ்சய! நான் சொக்கட்டானுடுகையில், ஹிதமான வார்த்தையைச் சொல்லுகிறவரான விதுரரைத் துரியோதனன் மெச்சிக்கொண்டாடாதபொழுதே கௌரவர்களுக்கு நாசமானது வந்துவிடுமென்கிற எண்ணம் எனக்கு உண்டாகிவிட்டது. ஓ! ஸூத! மந்திரியான விதுரருடைய புத்தியை எப்பொழுது அவர்கள் அனுஸரிக்கவில்லையோ அப்பொழுதே கௌரவர்களைக் கஷ்டம் வந்து அடைந்துவிட்டது. எதுவரையில் அவருடைய புத்தியை அனுஸரித்துவந்தார்களோ அதுவரையில் அவர்களுக்கு ராஜ்யவிருத்தியானது ஏற்பட்டது. ஓ! ஸூத! பொருளாசைகொண்ட திருதராஷ்டிரரின்புத்திரனுக்கு இப்பொழுது எவர்கள் மந்திரிகள் என்

பதை என்னிடமிருந்து கேள். (அவர்கள்) துச்சாஸனனும் சகுனியும் கர்ணனுமாவர். ஓ! காவல்கணியே! இவனுடைய அறியாமையைப் பார். அதையெல்லாம் நினைக்கின்ற நான், நன்றாக ஆலோசித்தும், எவ்விதம் கௌரவர்களுக்கும் ஸ்ருஞ்சயர்களுக்கும் க்ஷேமமுண்டாகுமென்பதைக் காணவில்லை. திருதராஷ்டிரர் பிறர்களிடமிருந்து ஐஸ்வரியத்தைக் கவர்ந்துகொண்டு, தீர்க்கமான ஆலோசனையுடைய விதுரரை விலக்கிவிட்டு, புத்திரர்களுடன் பாரில் பகையற்ற பெரிய அரசாட்சியை விரும்புகிறாரல்லவா? நான் வனம் போக, எவர் எல்லாத்தனத்தையும் தம்முடையதாக நினைக்கிறாரோ அவர் விஷயத்தில் (ஒன்றும் வாங்காமல்) கேவலமான சமமானது அடையத்தக்கதில்லை. கர்ணனானவன் யுத்தத்தில் ஆயுதமெடுத்தவனான அர்ஜுனனை வெல்லக்கூடியவனாக நினைக்கிறானே; முன் பெரிய யுத்தங்கள் ஏற்பட்டபொழுது (அவன்) இவர்களுக்குத் திட்டுப்போல ஆதாரமாக ஏன் ஆகவில்லை? அர்ஜுனனைக்காட்டிலும் வேறு (சிறந்த) வில்லாளி இல்லையென்பதைக் கர்ணனும் துரியோதனனும் துரோணரும் பிதாமஹரான பீஷ்மரும் மற்றும் அங்குள்ள கௌரவர்களும் அறியவே செய்கின்றார்கள். கௌரவர்களும் சேர்ந்தவர்களான மற்ற அரசர்களும் எல்லாருமே சத்துருக்களைச்சிக்ஷிக்கிறவனான [1] பால்குனனானவன் இல்லாமலிருந்ததால் இவ்வுலகில் துரியோதனனிடம் ராஜ்யம் இருந்ததென்பதை அறிகிறார்கள். [2] பனைப்பிரமாணமான வில்லுடையவனும், அந்த வில்வித்தையை அறிந்தவனுமான கிரீடியோடு அந்த ராஜ்யவிஷயத்தில் யுத்தத்தைச்செய்து, திருதராஷ்டிரரின்புத்திரன் (அந்த அர்ஜுனனுக்கும்) ஸம்பந்தமுள்ள பாண்டவர்களுடைய ராஜ்ய ஸம்பந்தத்தைஅபகரிக்க முடியுமென்றுநினைக்கிறான். அந்தத்தார்த்தராஷ்டிரர்கள் காண்டீவத்தின் நாணொலியைமட்டும் கேட்டபொழுதே சாவார்கள். துரியோதனனானவன் கோபத்தை அடைந்த பீமஸேனனைப் பாராமலிருப்பானேயானால் தனத்தை ஸித்தித்ததாக நினைக்கலாம். ஐயா! பீமஸேனனும், தனஞ்சயனும், நகுலனும் ஸகிக்கமுடியாத வீரனான ஸஹதேவனும் உயிருடனிருக்கையில், இந்திரனும் எங்களுடைய ஐஸ்வரியத்தை அபஹரிக்க மனத்தைச் செலுத்தமாட்டான். ஓ! ஸூத! முதியவரான அந்த அரசர் புத்திரனுடன் பாண்டவர்கள் வெல்லப்படமுடியாதவரென்னும் (இந்தப் புத்தியை) அடைவாராகில், யுத்தத்தில் அவருடைய புத்திரர்கள் இவ்

1 பால்குனனிருந்தபடியால் என்றும் கொள்ளலாம். 2 'தால:' என்பது மூலம்; 'நான்கு முழ நீள முள்ளது' என்பதுபழையவுரை.

விதம் பாண்டவர்களின் கோபத்தால் தகிக்கப்பட்டு, நாசத்தை அடை யார்கள். எங்களுக்கு ஏற்பட்ட கிலேசத்தை நீ அறிகிறாய். ஓ! ஸஞ்சய! உன்னைக் கௌரவப்படுத்துகிறதற்காக நான் கௌரவர்க ளால் எங்களுக்கு முன் ஏற்பட்ட கிலேசத்தைப் பொறுத்துக்கொள்ளு கிறேன். துரியோதனனிடத்தில் நாங்கள் அப்பொழுது எவ்விதம் இருந்து வந்தோமோ அவ்விதமே அவனிடத்தில் இப்பொழுதும் இருக்கக்கடவோம். நீ எப்படிச்சொல்கிறாயோ அப்படியே நான் சாந்தியை அடைவேன். இந்திரப்பிரஸ்தத்திலேயே என்னுடைய ராஜ்யம் ஏற்படட்டும். பாரதர்களில் முதற்பாகத்திற்கு உரியவனான துரியோதனன் என்னுடைய ராஜ்யத்தையே கொடுக்கட்டும்' என்று சொன்னார்.

---

## இருபத்தேழாவது அத்யாயம்.

## ஸஞ்சயயானபர்வம். (தொடர்ச்சி.)

(ஸஞ்சயன் போரில் பலகுற்றங்களைக் காட்டிப் பகைவர் பங்கு கொடா விடினும் போரின்றிப் பொறுத்தலே சிறந்ததென்று யுதிஷ்டிரருக்குச் சொல்லியது.)

ஸஞ்சயன், (அவரை நோக்கி), 'ஓ! பாண்டவரே! உம்முடைய செய்கையானது எப்பொழுதும் தர்மத்துடன் கூடினதென்று உலகத் தில் பிரஸித்தமாயிருக்கிறது. ஓ! குந்திபுத்திரரே! (இப்பொழுதும்) காணப்படுகிறது. ஓ! பாண்டவரே! நீர் [1] பெரியபுகழையும் அநித்திய மான உயிர்வாழ்க்கையையும் நன்றாக ஆலோசியும். (ஞாதிகளை) நாசம்செய்யாதீர். ஓ! அஜாதசத்துருவே! கௌரவர்கள் யுத்தத்தை விட்டு (வேறுவிதமாக) உமக்குப் பாகத்தைக் கொடாமற்போனால் அந்தகர்கள், விருஷ்ணிகள் இவர்களின் ராஜ்யத்தில் பிக்ஷாடனத்தை மேலானதாக நினைக்கிறேன்; யுத்தத்தாலடையக்கூடியராஜ்யத்தையோ சிறந்ததாக நினைக்கவில்லை. மனிதனுக்கு ஏற்பட்ட உயிர்வாழ்க்கை யானது அற்பகாலமுடையதும் (வெளியில்போகப்) பலமார்க்கங்க ளுடையதும் எந்நாளும் துக்கமுடையதும் சஞ்சலமுள்ளதுமானது. ஓ! பாண்டவரே! மேலும், அது கீர்த்திக்கு நிகராகாததாகையாலும், நீர் பாவத்தைச்செய்யாதீர். ஓ! அரசரே! தர்மத்தின்கேட்டுக்கு

---

1 'பெரிய புகழோடு கூடிய உயிர் வாழ்க்கையும் நிலையுள்ளதன்று' என்றும் கொள்ளலாம்.

மூலமாக இந்தக்காமங்கள் மனிதனைப் பற்றுகின்றன. புத்திமானான மனிதன் அவைகளை முந்தியே நாசம்செய்து உலகத்தில் களங்கமற்ற புகழை அடைகிறான். இவ்வுலகத்தில் பொருளாசையானது கட்டுக் கயிறன்றோ? அதனை விரும்புகிறவர்களுக்குத் தர்மம் பாதிக்கவேபடு கிறது. எவன் தர்மத்தை நன்றாகவிரும்புகிறானோ அவன் அறிந்த வன். காமத்திலாசையுள்ளவன் அர்த்தத்தை அனுஸரித்துக் குறைவை அடைகிறான். ஐயா! கர்மங்களில் சிறந்ததான தர்மத்தைச் செய்து பெரிதான பிரதாபமுள்ளவன் ஸூரியன்போல விளங்குவான். தர்மங்குறைந்தவனும் பாவத்தில் புத்தியுடையவனுமான மனிதனோ இந்தப்பூமி (முழுமையும்) அடைந்தும் துக்கத்தையடைவான். சிறந்த தான ஸ்வர்க்கஸ்தானத்தைக் கருதின உம்மாலே வேதமானது அத் தியயனஞ்செய்யப்பட்டது; பிரம்மசரியமும் அனுஷ்டிக்கப்பட்டது; யாகங்களால் தேவபூஜையும் செய்யப்பட்டது; பிராமணர்களுக்குத் தானமும் செய்யப்பட்டது. அனேகம்வருஷம் ஸுகத்திற்காகச் சரீ மானது அதிகமாக அர்ப்பணம் செய்யவும்பட்டது. கரைகடந்த ஸுகத்தையும் பிரியத்தையும் அனுபவித்துக்கொண்டு யோகாப்பியாஸ விஷயத்தில் காரியத்தைச்செய்யாதவன், காமத்தின்வேகத்தால் தூண்டப்பட்டுத் தனநாசம் ஏற்பட்டபொழுது, ஸுகந்துறவடைந்து கரைகடந்த துக்கத்தில் விழுகிறான். இவ்விதம், மறுபடியும் பிரம்ம சரியத்தில் பற்றில்லாதவனும் தர்மத்தைவிட்டு அதர்மத்தை மிகச் செய்கிறவனும் பரலோகத்தில் ஸ்ரத்தையில்லாதவனும் மூடனும் மந்தனுமான அவன் தேகத்தைவிட்டுப் பரலோகமடைந்து தபிக்கி றான். பரலோகத்தில் புண்ணியகர்மங்களுக்கோ அல்லது பாவகர் மங்களுக்கோ (பயனில்லாமல்) நாசமானது இல்லை. புண்ணியமும் பாவ மும், செய்தவனுக்கு முந்திப்போகின்றன. இவைகளைச் செய்பவன் பின்னே தொடர்கிறான். ஆகையால், உம்மால் பிராமணர்களுக்கு நியா யத்துடன்கூடினதும், ஸ்ரத்தையால் பரிசுத்தமானதும், மணமும் சுவையும் சேர்ந்ததுமாக அன்னதானம் செய்யப்பட்டது. உத்தமமான தக்ஷிணைகளையுடைய யாகங்களில் உம்முடைய செய்கையானது அப் படிப்பட்டதென்று புகழப்படுகிறது. இஹலோகமாகிற க்ஷேத்திரத் தில் தர்மகாரியமானது செய்யப்படுகிறது. பரலோகம்சென்றால் ஒரு காரியமும் செய்யப்படுகிறதில்லை. பரலோகஸாதனமும் ஸத்துக்களால் மிகவும் சிலாகிக்கப்பட்டதும் பெரிதுமான புண்ணிய கர்மமானது உம்மால் செய்யப்பட்டது. பரலோகத்தில் மரணத்தையும் ஜரையை யும் பயத்தையும் விடுகிறான்; பசியும் தாகமும் மனத்திற்கு அப்

பிரியங்களுமில்லை. இந்திரியங்களைத் திருப்திசெய்விப்பதைத்தவிர வேறொன்றும் செய்யவேண்டியதில்லையன்றோ? ஓ! அரசரே! கர்மத்தின்பயனானது இத்தன்மையுடையது. ஓ! பாண்டவரே! (திருதராஷ்டிர காந்தாரிகளான) தந்தைதாய்களுடைய இருதயத்தின் [1] அப்ரியத்துடன் உத்ஸாகத்தாலுண்டான கோபத்தையும் விடும். பலநாளாகத் தேடின இம்மை மறுமைகளிரண்டையும், கர்மங்களின் முடிவை அடைந்து உண்டான புகழையும் ஸத்தியத்தையும் அடக்கத்தையும் நேர்மையையும் விடாதீர். அச்வமேதத்தையும் ராஜஸூயத்தையும் செய்துவிட்டுத் திரும்பவும் பாவகர்மத்தின் பயனை அடையாதீர். ஓ! பாண்டவர்களே! இவ்விதம் பெரிய த்வேஷத்தால் வெகுநாளுக்குப் பிறகு அவ்விதமான பாவச்செய்கையைச் செய்வீர்களேயானால், எந்தச் சேனையானது உமக்குச் சொந்தமாக அப்பொழுதிருந்ததோ அதை முன் வனயாத்திரையால் தள்ளிவிட்டுத் தர்மத்துக்காக வனங்களில் அனேக வருஷங்கள் நீங்கள் ஏன் துக்கமான வாஸத்தைச் செய்தீர்கள்? உமக்கு இந்தமந்திரிகள் எந்நாளும் வசமாயுள்ளவர்கள். ஜனார்த்தனரும், வீரனான ஸாத்தியகியும், புத்திரர்களுடன்கூடின [2]ருக்மரதனென்கிற மத்ஸ்யராஜனும், (மிகவும்) சத்துருக்களை அடிப்பவர்களான புத்திரர்களுடன் கூடின விராடனும், முன் உம்மால் ஜயிக்கப்பட்ட அரசர்களனைவர்களும் உம்மையே அடுத்திருப்பார்கள். பெரிய ஸஹாயமுடையவரும், மிகவும் தவிக்கிறவரும், சேனையுடனிருப்பவரும், வாஸுதேவராலும் அர்ஜுனனாலும் பூஜிக்கப்பட்டவருமான நீர் சூதாட்ட ஸபையிலேயே சிறந்தவர்களான சத்துருக்களைக்கொன்று துரியோதனனுடைய கொழுப்பைத் தொலைத்திருக்கலாமே? பாண்டவரே! என்ன காரணத்தால், சத்துருவுக்குப் பலத்தை விருத்தியடையவும் உம்மைச் சேர்ந்த ஸஹாயர்களைக் [3]குறையவும் செய்து, அனேக வருஷங்கள் வனங்களிலும் வஸித்துக் குறைவுண்டான காலத்தில் யுத்தம் செய்ய விரும்புகிறீர்? ஓ! பாண்டவரே! அறிவில்லாதவனோ அல்லது தர்

1 'கோபத்தைவிட்டால், அவர்களுடைய அப்ரியமும் விடும்' என்பது கருத்து.

2 மத்ஸ்யதேசத்தில் இவன் ஒரு பகுதியை ஆண்டவனாதல் வேண்டும். 'மச்சநாடனும், பொற்றேருள்ளவனும், புத்திரர்களுடன் கூடினவனும், புத்திரர்களோடு கூடின நன்கு அடிக்குந்தன்மையுள்ள வீரர்களோடு கூடினவனுமான விராடராஜனும்' என்றும் கொள்ளலாம்.

3 'கஸ்மாத்' என்பது மூன்றிடத்தில் வருகிறது; இரண்டிடத்தில் விடப்பட்டது.

மத்தை அறியாதவனே அவனும் யுத்தம்செய்து, பிறகு, ஐசுவரி யத்தை அடைகிறான். அறிவுள்ளவனே, அல்லது தர்மத்தை அறிந்தவனே அவனும் மோகத்தாலே (தெய்வச் செயலாக) ஐசுவரியத்திலிருந்தும் நழுவுகிறான். ஓ! பார்த்தரே! உம்முடைய புத்தியானது அதர்மத்திலிருக்கிறதில்லை. நீர் கோபத்தால் பாவ கர்மத்தைச் செய்தவரல்லர். அறிவுக்கு விரோதமாக இந்தக் கர்மத் தைச் செய்யவிரும்புவதற்குக் காரணம் சொல்லும். ஓ! மஹாராஜரே! வியாதியால் ஏற்படாததும், காரமாயுள்ளதும், தலைவலியை உண்டாக் குவதும், புகழைத்திருடுவதும், பாவத்தின் பயனுக்குக் காரணமும், ஸத்துக்கள் பானம் செய்யக்கூடியதும், அஸத்துக்கள் பானம்செய் யமுடியாததுமான கோபத்தைப் பானம் செய்யும்; சமனத்தை அடையும். பாவம் தொடர்வதான அதை எவன் விரும்புவான்? உமக்குப் பொறுமையே சிறந்தது. சந்தனுவின் புத்திரரான பீஷ் மரையும், புத்திரரோடுகூடின துரோணரையும், கிருபரையும், சல் யனையும், ஸோமதத்தன்புத்திரனையும், விகர்ணனையும், விவிம்சதியை யும், கர்ணதுரியோதனர்களையும்கொன்று அடையப்பட்ட போகங்கள் சிறந்தவைகளாகாவன்றே? இவர்களைக் கொன்றுவிட்டு அடையும் ஸுகம் எவ்விதமானதாகும்? அதைச் சொல்லும். ஸமுத்திரத்தை எல்லையாகவுடைய இந்தப் பூமியை அடைந்தாலும் நீர் முதுமையை யும் மரணத்தையும் விலக்கவேமாட்டீர். ஓ! அரசரே! பிரியத்தையும் அப்பிரியத்தையும் ஸுகத்தையும் கஷ்டத்தையும் விலக்கமாட்டீர். இவ்விதம் அறிந்தவரான நீர் யுத்தத்தை ஒருபோதும் செய்யாதீர். மந்திரிகளுடைய இச்சையின் காரணத்தால், நீர் இவ்விதம் நேரிட்ட தான கர்மாவைச் செய்ய விரும்புகிறீரானால், அவர்களுக்கே தனத் தைக்கொடுத்துவிட்டு விலகிவிடும். நீர் தேவயானமென்கிற பிரம்ம லோகமார்க்கத்தை விட்டு விலகாதீர்' என்று சொன்னான்.

---

## இருபத்தெட்டாவது அத்யாயம்.

## ஸஞ்சயயானபர்வம். (தொடர்ச்சி.)

**(யுதிஷ்டிரர் தர்மாதர்ம நிச்சயம் ஸாமான்யர்கள் சொல்லமுடியாததா லின் தர்ம ரஹஸ்யங்களை அறிந்த வாஸுதேவரே சொல்ல வேண்டுமென்பதை ஸஞ்சயனுக்குச் சொல்லியது.)**

**யுதிஷ்டிரர்,** 'ஓ! ஸஞ்சய! கர்மங்களுள் தர்மமானது சிறந்த தென்று நீ சொன்னதானது உண்மை; ஸந்தேகமில்லை. ஆனால்,

நான் தர்மத்தை அனுஷ்டிக்கிறேனே அதர்மத்தை அனுஷ்டிக்கிறேனே வென்று தெரிந்துகொண்டு நீ என்னைத் தூஷிக்கக்கடவாய். எவனிடத்தில் [1] அதர்மமானது தர்மரூபங்களைத் தரிக்கிறதோ, எவனிடத்தில் [2] தர்மமுழுதும் அதர்மரூபமாகக்காணப்படுகிறதோ, அப்படியே, எவனிடத்தில் [3] தர்மம் தர்மரூபத்தையே தரிக்கிறதோ அவர்களை அறிஞர்கள் புத்தியினாலே நன்றாகக்காண்கிறார்கள். அப்படியே, ஆபத்தில் இவ்விதமான இந்த அடையாளத்தை நிலையான தன்மையையுடைய தர்மாதர்மங்கள் அடைகின்றன. ([4] அதர்மமானது தர்மரூபத்தைத் தரிக்கின்றதென்கிற) மூந்தின அடையாளமானது எவனுக்கு ஏற்பட்டதோ அது அவனுக்குத்தான் பிரமாணம். ஓ! ஸஞ்சய! அதை ஆபத்தர்மமாக அறியக்கடவாய். செல்வம்குறைந்தபொழுது, குறைவை அடைந்தவன் எதனால் கர்மத்தை நிறைவேற்றலாமோ அதை அடையவிரும் பலாம். ஓ! ஸஞ்சய! போதுமானசெல்வத்திலிருந்துகொண்டு ஆபத்தர்மத்திலிருக்கிறவனும் ஆபத்திலிருந்துகொண்டு செல்வநிலைக்கு ஏற்பட்ட தர்மத்திலிருப்பவனும் இந்த இருவர்களும் நிந்திக்கத்தக்கவர்களாகிறார்கள். விதாதாவான பிரம்மாவினாலே விநாசம் வராமலிருப்பதை விரும்புகிறவர்களான பிராமணர்களுக்குப் பரிகாரமானது விதிக்கப்பட்டிருக்கிறபடியால், கர்மங்களிலிருக்கிறவர்களை நன்றாகக்கவனித்துப்பார். ஓ! ஸஞ்சய! நீ விரோதமான கர்மத்திலிருப்பவர்களை நிந்தி. மனத்தின் வரத்தை விரும்புகிறவர்களுக்குப் புத்தியின்செய்கை ஒடுங்குவதன்பொருட்டு எப்பொழுதும் நல்லவர்களிடத்தில் ஜீவனம் விதிக்கப்பட்டிருக்கிறது. பிரம்மநிஷ்டரல்லாதவர்களும், வித்வான்களல்லாதவர்களுமாயிருப்பவர்களின்பொருட்டு (தர்மாதர்மங்களாகிற) எல்லாக் கர்மங்களுடையஸம்பந்தத்தையும் நல்லதென்றுநினைக்கவேண்டும். பிதிருக்களும், பூர்விகர்களானபிதாமஹர்களும் அவர்களுக்கும் மூந்தின

1 பிறர்கேட்டுக்காகச செய்யும் ஆபிசாரத்தில் செய்யப்படும் ஹோம முதலியன தர்மமாகத்தோற்றுதல்.

2 யோகிகளென்று காட்டிக்கொள்ளாத தத்தாத்ரேயர் முதலியோர் விருப்பு வெறுப்பின்றிச செய்யும் யோகதர்மம் நித்யகர்மநியமங்கள் தவறுவதால் பித்தர் செயல்போலிருப்பதால் அதர்மமாகத் தோற்றுவது.

3 வஸிஷ்டர் முதலியோர் உள்ளும் புறமும் ஒத்துச்செய்யும் தவ முதலியன.

4 'பிராமணனுக்கு அதர்மமான வத முதலியன க்ஷத்திரியனுக்குத் தர்மம். பிராமணனுக்குத் தர்மமான யாஜநமுதலியன க்ஷத்திரியனுக்கு அதர்மம். அவனவனுக்கேற்பட்டது அவனவனுக்குத் தர்மம். ஆபத்தில் மேல்வர்ணத்துக்குக் கீழ்வர்ணத்தின் தர்மங்களும் தர்மமாகிவிடும்' என்று கருத்து.

மற்றவர்களும் (என்னால்சொல்லப்பட்ட) அந்த (க்கர்ம) மார்க்கத்தை உடையவர்களாயிருந்தனர். எவர்கள் யஜ்ஞத்தை விரும்புகிறவர்களோ அவர்களும் கர்மாவையே செய்வார்களாகையால் நான் நாஸ்திகனுகிவிடுவேனென்று அதைக்காட்டினும் வேறான (பிக்ஷாடனம் முதலிய மார்க்கத்தை) நினைக்கவில்லை. ஓ! ஸஞ்சய! இந்தப் பூமியின்கண்ணுள்ள தனமுழுமையையுமோ, [1] மூன்றே நிலைமைகளையுடைய தேவர்களுடைய சிறந்ததானபதத்தையோ, சுவர்க்கத்தையோ, பிரம்மலோகத்தையோ நான் அதர்மத்தால் விரும்பமாட்டேன். தர்மங்களுக்குத் தலைவரும் ஸமர்த்தரும் நீதியுள்ளவரும் பிராமணர்களை உபாஸிக்கிறவரும் புத்திசாலியுமான வாஸுதேவர் பலவிதமானவர்களும் மிக்கபலசாலிகளும் ராஜவம்சத்தில் பிறந்தவர்களுமான போஜர்களைப் பரிபாலனம் செய்கிறார். ஸமாதானத்தைவிட்டு யுத்தம்செய்கிற நான் நிந்திக்கத்தக்கவனுவேனுனுலும் ஸ்வதர்மத்தைவிட்டவனுவேனுனுலும், அந்தவிஷயத்தைப் பெரிதானகீர்த்தியுடைய கேசவர் சொல்லட்டும். அவரோ இரண்டுபேர்களுக்கும் நன்மையை விரும்புகிறவர். இந்த ஸாத்யகியும், சேதிதேசத்தார்களும், அந்தகர்களும், விருஷ்ணியின் குலத்திலுண்டானவர்களும், போஜர்களும், குகுரர்களும், ஸ்ருஞ்சயர்களும், வாஸுதேவருடைய புத்தியை அனுசரித்தவர்களாய்ப் பகைவர்களை நாசஞ்செய்து மித்திரர்களைச் சந்தோஷிக்கச் செய்கிறார்கள். யதுவம்சத்தில்பிறந்த விருஷ்ணிகளும் அந்தகர்களும் உக்கிரஸேனன் முதலானவர்களும் கேசவரால் நடத்தப்பட்டவர்களுமான எல்லார்களுமே இந்திரனுக்குச் சமானர்களும் நல்லமனமுடையவர்களும் ஸத்தியத்தையே முக்கியஸாதனமாயுடையவர்களும் மிக்கபலசாலிகளும் போகத்தோடு கூடினவர்களுமாயிருக்கிறார்கள். எவன்பொருட்டு வாஸுதேவரானவர், வருஷாகாலத்தில் மேகமானது பிரஜைகளின்பொருட்டு வர்ஷிப்பதுபோல், இஷ்டங்களைப் பொழிகிறாரோ காசிதேசத்தரசனை அந்தப் பப்ருவானவன், பிராதாவாகவும் சிக்ஷகராகவுமிருக்கிற அவரை அடைந்து, உத்தமமான சம்பத்தை அடைந்தான். ஐயா! இப்படிப்பட்ட இந்தக்கேசவர் வித்வானுயிருப்பவர். இவரைக் கர்மங்களுடைய நிச்சயத்தை உணர்ந்தவராக அறி. இவர் எங்களுக்குப் பிரியரும் மிகவும் நல்லவருமாயிருப்பவர். இவருடைய வார்த்தையைக் கடக்கமாட்டேன்' என்று சொன்னார்.

---

1 'பால்யம், கௌமாரம், யௌவனம்' எனினும், 'மூன்றாவதாகிய யௌவனமட்டுமே உடையவர்' எனினுமாம்.

## இருபத்தொன்பதாவது அத்யாயம்.

## ஸஞ்சயயானபர்வம். (தொடர்ச்சி.)

(கிருஷ்ணர் தாம் கௌரவபாண்டவவிஷயத்தில் ஸமமான எண்ணத்துடனிருப்பதையும் செய்யவேண்டியதை அவசியம் செய்யவேண்டுமென்பதையும் துரியோதனனுடைய தீச்செயல்களையும் திருதராஷ்டிரன் இஷ்டப்படி செய்யலாமென்பதையும் தாம் ஸமாதானத்திற்காக ஹஸ்தினாபுரத்திற்கு வருவதாயிருப்பதையும் ஸஞ்சயனுக்குச்சொல்லியது.)

வாஸுதேவர், 'ஸஞ்சய! நான் இந்தப்பாண்டவர்களுக்கு நாசமில்லாமலிருப்பதையும் ஐச்வரியத்தையும் பிரியத்தையும் விரும்புகிறேன். ஸூத! அப்படியே, அனேகம் புத்திரர்களையுடைய திருதராஷ்டிரராஜருக்கு விருத்தியையும் நன்கு பிரார்த்திக்கிறேன். ஓ! ஸஞ்சய! எந்நாளுமே என்னுடைய விருப்பம் இதுதான். அவர்களைக் குறித்துச் சமனத்தை அடையுங்களென்பதைத்தவிர வேறு சொல்லமாட்டேன். பாண்டவர்களுடைய முன்னே திருதராஷ்டிரராஜருடைய இந்தப்பிரியத்தையும் கேட்கிறேன். இதையும் ஆலோசிக்கிறேன். ஓ! ஸஞ்சய! எந்தவிஷயத்தில் புத்திரனுடன்கூடின திருதராஷ்டிரர் ஆசைகொண்டிருக்கிறாரோ அதில் சமமானது நிச்சயமாகச் செய்யமுடியாதென்பது யுதிஷ்டிரரால் காண்பிக்கப்பட்டதன்றோ? ஆகையால்,என்னகாரணத்தால் இவர்களுக்குக் கலகமானது விருத்தியடையாது? ஓ! ஸஞ்சய! இவ்வுலகில் பலவிதமாக நடந்துவருகிற தர்மத்தை என்னையும் யுதிஷ்டிரரையும் காட்டிலும் நீ அறியவில்லை. ஓ! ஸஞ்சய! அப்படியிருக்க, உத்ஸாஹமுடையவரும் தம் கர்மத்தை முடிக்கிறவரும் புகழுக்குத் தக்கபடி குடும்பத்தில் வஸிக்கிறவருமானபாண்டவருக்கு என்னகாரணத்தால் முன்[1] செய்யவேண்டிய நல்லகாரியத்தை விட்டதாகச் சொன்னாய்? உண்மையாக இந்த விதியானது இருக்கையில்,பிராமணர்களுடைய எண்ணங்கள் அனேகவிதமாக ஏற்பட்டிருக்கின்றன. சிலர் கர்மாவினாலே பரலோகத்தில் ஸித்தியைச் சொல்லுகிறார்கள். சிலர் கர்மாவைவிட்டு ஞானத்தினால் ஸித்தியைச் சொல்லுகிறார்கள். வித்துவானாயிருந்தாலும், இவ்வுலகில் போஜனமாகிற கர்மாவைச்செய்யாமல் பக்ஷியபோஜ்யங்களில் திருப்தியடைகிறதில்லை. பிரம்மவித்துக்களான பிராமணர்களுக்கும்

1 போர்புரியாமல் வனம்சென்றது தவறென்பது.

இவ்வுலகில் கர்மா விதிக்கப்பட்டிருக்கிறது. எந்தவித்தைகள் இவ்வுலகில் கர்மாவைச் சாதிக்கின்றனவோ அவைகளுக்குப் பயன் இருக்கிறது; மற்றவைகளுக்குக் காணவில்லை. ஆகையால், இம்மையில் கர்மா, பிரத்தியக்ஷமானபயனை உடையதாயிருக்கிறது. தாகத்தால் வருந்தினவன் தண்ணீரையருந்தித் தாகசாந்தியை அடைகிறான். ஓ! ஸஞ்சய! அப்படிப்பட்ட இந்தக்கர்மவிதியானது கர்மாவினாலேயே விதிக்கப்பட்டிருக்கிறது. பரலோகநிமித்தம் கர்மாவானது செவ்வையாகச் சொல்லப்பட்டிருக்கிறது. பரலோகவிஷயத்தில் எவன் கர்மாவைவிட்டு மற்றதை நல்லதாக நினைப்பானோ வன்மை குறைந்தவனை அவனுடைய புலம்பல் வீணானது. கர்மாவினாலே பரலோகத்தில் இந்தத்தேவர்கள் விளங்குகிறார்கள். இவ்வுலகத்தில் வாயுவானவன் கர்மாவினாலேயே வீசுகிறான். ஸூரியன் கர்மாவினாலேயே இராப்பகல்களைச்செய்து சோம்பலில்லாமல் நித்தியம் உதயமாகிறான். தவிரவும், சந்திரனும் கர்மாவினாலேயே மாஸங்களையும் பக்ஷங்களையும் செய்துகொண்டு சோம்பலில்லாமல் நக்ஷத்திரங்களுடைய சேர்க்கைகளை அடைகிறான். அக்கினி மூட்டப்பட்டுப் பிரஜைகளின் பொருட்டு வேலையைச்செய்து சோம்பலில்லாமல் எரிக்கிறான். பூமிதேவியானவள் சோம்பலில்லாமல் பலத்தினால் பெரிதான இந்தப்பாரத்தைத் தாங்குகிறாள். நதிகளானவை எல்லாப் பிராணிகளுக்கும் நன்கு திருப்திசெய்துகொண்டு சோம்பலில்லாமல் ஜலத்தை வேகமாகக் கொண்டுபோகின்றன. மழைக்கடவுள் அதிகமான தேஜஸுடையவனும், ஆகாயத்தையும் திக்குக்களையும் மிகவும் சப்திக்கச்செய்கிறவனுமாகச் சோம்பலில்லாமல் பொழிகிறான். வலனுக்குப் பகைவனான இந்திரன் தேவச்ரேஷ்டனாயிருக்கும் தன்மையை விரும்பி, ஸுகத்தையும் மனத்தின்பிரியங்களையும் தள்ளிவிட்டுச் சோம்பலில்லாமல் பிரம்மசரியத்தை அனுஷ்டித்தான். அவன் அந்தக்கர்மாவினால் தலைமையை அடைந்தான். மகவானான அவன் ஸத்தியத்தையும் தர்மத்தையும் தவறுதலில்லாமல் காக்கிறவனாகி, அடக்கம், பொறுமை, ஸமபுத்தி (எல்லாப்பிராணிகளிடத்திலும்) பிரியம் இவையெல்லாவற்றையும் அனுஷ்டித்துச் சிறந்ததான தேவராஜ்யத்தை அடைந்தான். பிருகஸ்பதியானவர் இந்திரியங்களை அடக்கி ஸுகத்தைவிட்டு ஸமாதியுடன்கூடினவரும் இளைத்த சரீரமுடையவருமாக விதிப்படி பிரம்மசரியத்தை அனுஷ்டித்தார். அதனால், அவர் தேவர்களுக்குக் குருவானார். ஓ! ஸூத! அப்படியே, நக்ஷத்திரங்களும், ருத்திரர்களும், ஆதித்யர்களும், வஸுக்களும், விச்வேதேவர்களும், யமனும், ராஜா

வும் விஸ்ரவஸின் புத்திரனுமான குபேரனும், கந்தர்வர்களும், யக்ஷர்களும், அப்ஸரஸுகளும், கர்மாவினாலே ஸ்வர்க்கத்தில் விளங்குகின்றார்கள். பிரம்மவித்தையையும் பிரம்மசரியத்தையும் கர்மாவையும் அனுஷ்டித்து ரிஷிகள் ஸ்வர்க்கத்தில் விளங்குகின்றார்கள். ஓ! ஸஞ்சய! எல்லா உலகங்களையும், பிராமணஸ்ரேஷ்டர்கள், க்ஷத்திரியர்கள், வைஸ்யர்கள் இவர்களின் இந்தத்தர்மத்தையும் அறிகிறவனாயிருக்கிறாய். அப்படிப்பட்ட நீ ஞானமுடையவனாயிருந்தும், அறிந்தவர்களைக் கௌரவர்கள் நிமித்தம் ஏன் நடுக்கிறாய்? இவருக்கு வேதங்களிலும், அப்படியே அஸ்வமேதத்திலும், ராஜஸூயத்திலும், எங்நாளும் ஸம்பந்தத்தை அறியக்கடவாய். (இவர்,) வில்லையும் கவசத்தையும் யானை குதிரை முதலியவைகளையும் ரதங்களையும் சஸ்திரங்களையும் மிகுதியாக உடையவராயிருக்கிறார். அப்படிப்பட்ட இந்தப்பாண்டவர்கள் கௌரவர்கள்விஷயத்தில் வதமில்லாமலே வேறு உபாயத்தை அறிவார்களேயானால், அப்பொழுது, இவர்களுக்குச் சிறந்ததான கொல்லாமையில், பீமஸேனனை அடக்கித் தர்மத்தைக் காக்கிறதான புண்ணியமானது செய்யப்பட்டதாகும். அப்படிப்பட்ட இவர்கள் தந்தை வழியில் வந்த (க்ஷத்ரியத்) தொழிலிலிருக்கிறவர்களும் சக்திக்குத் தக்கபடி தம்கர்மத்தைப் பூர்த்திசெய்கிறவர்களுமாகித் தெய்வ வசத்தால் மரணத்தை அடைவார்களானால், இவர்களுக்கு அந்தமரணமும் சிலாக்கியமாகும். நல்லது; இருக்கட்டும். நீ சாந்தியையே நினைக்கிறாயே. அரசர்களுக்கு யுத்தம்செய்வதில் தர்மமிருக்கிறதா? அல்லது, யுத்தம் செய்யாமையில் தர்மமிருக்கிறதா? நீ சொல்லுகிறபடியே உன்னுடைய இந்த வார்த்தையைக் கேட்கிறேன். ஓ! ஸஞ்சய! முதலிலே நான்குவர்ணங்களுடைய தர்மவிபாகத்தையும் உன்னுடைய கடமையையும் பார்த்துக்கொண்டு, பிறகு, பாண்டவர்களுடைய செய்கையையும்கேட்டு உனக்குத் தோற்றுகிறபடி ஸ்லாகி; அல்லது, நிந்தி. பிராமணனானவன் அத்தியயனம் செய்யவேண்டும்; யாகம் செய்யவேண்டும்; தானம்செய்யவேண்டும்; சிறந்த தீர்த்தங்களுக்குச் செல்லவேண்டும்; அத்தியயனம் செய்விக்கவேண்டும்; யாகம் செய்விக்கக் கூடியவர்களுக்கு யாகம்செய்விக்கவேண்டும்; (வேண்டுமானால்) விதிக்கப்பட்டவைகளான தானங்களை வாங்கவேண்டும். க்ஷத்திரியனானவன் அத்தியயனம்செய்யவேண்டும்; பிறகு, யாகம் செய்யவேண்டும்; தனத்தைக்கொடுக்கவேண்டும்; ஒன்றையுமேயாசிக்கக்கூடாது; யாகம்செய்விக்கவும் கூடாது; அத்தியயனம் செய்விக்கவும் கூடாது. இவ்விதம் ஆதியாக க்ஷத்திரிய தர்மமானது கருதப்பட்

டிருக்கிறது. அப்படிப்பட்ட அரசனானவன் அஜாக்கிரதையில்லாமல் தர்மத்துடன் பிரஜைகளின் பாலனத்தைச்செய்து, பிறகு, தானஞ் செய்து யாகங்களால் பூஜித்து, எல்லா வேதங்களையும் அத்திய யனம்செய்து, மனைவியைவிவாகம்செய்துகொண்டு, புண்ணியங்களைச் செய்து, இல்லறத்திலிருக்கவேண்டும். தர்மத்தில் மனமுடைய வனான அந்த க்ஷத்திரியன் பரிசுத்தமான தர்மத்தை அடைந்து, (வேறுகாரணமின்றி) இயற்கையினாலேயே பிரம்மலோகத்தை அடை கிறான். வைஶ்யனானவன் அத்தியயனம்செய்து, கிருஷி, பசுக்காத் தல், வர்த்தகம் இவற்றால் தனத்தைத் தேடுகிறவனும், (தேடினதை) அஜாக்கிரதைஇல்லாதவனாகிப் பரிபாலிக்கிறவனும், பிராமணர்க ளுக்கும் க்ஷத்திரியர்களுக்கும் பிரியத்தைச்செய்கிறவனும், புண்ணி யத்தைச் செய்கிறவனுமாக வீடுகளில் வஸிக்கவேண்டும். சூத்திர னுக்குப் பிராமணர்களுடைய பரிசாரியையும் வந்தனமும் தர்மம்; அத் தியயனம் செய்யக்கூடாது. இவனுக்கு யாகமானது மறுக்கப்பட்டிருக் கிறது. ஐஶ்வரியத்தின் விஷயத்தில் எந்நாளும் முயற்சிசெய்கிறவ னும் சோம்பலில்லாதவனுமாயிருக்கவேண்டும். இவ்விதம் அனேகியா கச் சூத்திரனுடைய தர்மமானது கருதப்பட்டிருக்கிறது. அரசன் இவர்களை அஜாக்கிரதையில்லாமல் காக்கிறவனும் எல்லாவர்ணத்தார் களையும் தங்கள் தர்மத்தைச் செய்விக்கிறவனும், காமத்தில் புத்தி யைச் செலுத்தாதவனும், பிரஜைகளிடத்தில் ஸமமாயிருப்பவனும் காமத்தால் அதர்மசீல... அனுஸரியாதவனுமாயிருக்கவேண்டும்.

அவனைப்பார்க்கிலும் மிகச்சிறந்தவனும் எல்லாத் தர்மங்களையு முடையவனுமாக அறியப்பட்டவன் ஒருவனிருந்தானேயானால், அந்த அரசன், அவனைப் பிரஜைகளைப் பார்த்துக்கொள்ளுவதற்குக் கட்டளையிடவேண்டும். அவன் விஷயத்தில், 'இதை இவன் தெரிந்து கொள்ளக்கூடாது' என்கிற எண்ணம் நல்லதன்று. எப்பொழுது (ஓர் அரசன்) தெய்வக்கெடுதலால் ஹிம்ஸிக்கிறவனும் சேனையைச் சேர்க் கிறவனுமாகப் பிறனுடைய ஐஶ்வரியத்தில் ஆசைவைப்பானோ அப் பொழுது அரசர்களுக்கு இந்தயுத்தமானது ஏற்பட்டது. அதில் கவச மும் ஆயுதங்களும் வில்லும் உண்டாயின. இந்திரனாலே திருடர்க ளைக் கொல்லுவதற்காக இந்த யுத்தமும் கவசமும் ஆயுதங்களும் வில்லும் உண்டுபண்ணப்பட்டன. அதில் திருடர்களுடைய வதததி னாலே புண்ணியமானது அடையப்படுகிறது.

ஓ! ஸஞ்சய! கடுமையே உருவங்கொண்ட அப்படிப்பட்ட இந்தக் குற்றமானது அதர்மத்தை அறிந்தவர்களும் (கருதுகிறவர்களும்) தா

மத்தை அறியாதவர்களுமான கௌரவர்களால் உண்டாகிவிட்டது; அது நல்லதன்று. அப்படியாகையில், புத்திரர்களுடன்கூடின திருத ராஷ்ட்ர ராஜர் அகாரணமாகப் பாண்டவர்களுடைய தர்மமானதனத்தை அபகரித்தார். அவர் வம்சத்திலுள்ள கௌரவர்களெல்லாரும் அனுதியான ராஜதர்மத்தைப் பார்க்கவில்லை. (ஒருவன்) காணப்படாதவனுகித் தனத்தை அபகரித்தாலும், காணப்பட்டவனுகிப் பலாத்காரம்செய்து அபகரித்தாலும் இவ்விருவர்களும் நிந்திக்கத்தக்கவர்களாகின்றுர்கள். (ஆகையால்), திருதராஷ்டிர புத்திரனிடத்தில் (திருடனைக் காட்டிலும்) என்ன வித்தியாஸமிருக்கிறது? அப்படிப்பட்ட துரியோதனன் கோபத்தின் வசத்தை அடைந்து தான் விரும்புவதைப் பேராசையால் தர்மமாக நினைக்கிறுன். பாண்டவர்களுடைய பாகமோ (கௌரவர்களிடம் அடைக்கலமாக) வைக்கப்பட்டிருந்தது. எங்களுடைய அந்தப் பாகத்தை என்ன காரணத்தால் பகைவர்கள் பிடுங்கிக்கொள்ளுவார்கள்? இந்தப் பாகவிஷயத்தில் யுத்தம் செய்கிறவர்களான எங்களுக்கு வதமும் சிறந்ததே. பிறருடைய ராஜ்யத்தைக்காட்டிலும் பிதிருராஜ்யமானது சிறந்தது. ஓ! ஸஞ்சய! பழமையான இந்தத் தர்மங்களை அரசர்களுடைய மத்தியில் கௌரவர்களுக்குச் சொல்லக்கடவாய். மூடர்களான இந்த அரசர்கள் மந்தத்தினுல் மிருத்யுவின் வசத்தையடைந்து, துர்யோதனனுல் வரவழைக்கப்பட்டு வந்தார்கள். ஸபையின் மத்தியில் நடந்த அந்தச் செய்கையோ, மிகவும் கொடுமையாயுள்ளதே. பீஷ்மர் முதலான கௌரவர்கள் பாண்டவர்களுக்குப் பிரியமானமனைவியும், துருபத ராஜன் புத்திரியும், புகழுடையவளும், நற்குணமும் நன்னடையுமுள்ளவளுமான திரௌபதியானவள் போகும்பொழுது, [1] காமத்தினலழுந்தினவனுன துச்சாஸனன் தடுத்து மறித்ததை உபேக்ஷித்தார்களே. கௌரவர்களுடைய அந்த நடையைப் பார். இளையவர்களோடும் முதியவர்களோடும்கூடின அந்தக்கௌரவர்கள், [2] அந்தத் துச்சாஸனனைத் தடுத்திருப்பார்களேயானுல் திருதராஷ்டிரர் என்னிஷ்டத்தைச்செய்தவராவர். இவருடைய புத்திரர்களுக்கும் இவரால் நன்மையானது செய்யப்பட்டதாக ஏற்படும். துச்சாஸனனுனவன் அக்கிரமமாக மாமனுர்களுடைய ஸபையின் மத்தியில் கிருஷ்ணையைக் கொண்டுபோய் நிறுத்தினுன். அவ்விடம் கொண்டுவந்து நிறுத்தப்பட்ட அவள் தீனமாகப்பார்த்து விதுரரைத் தவிர வேறு ரக்ஷகனைச்

---

1 'காமாநுகேந உபருத்தாம்' என்பதுமூலம்; வீட்டுக்கு விலக்கானவளும் என்பது பழையவுரை. 2 வேறுபாடம்.

சிறிதும் அடையவில்லை. அங்கு சேர்ந்திருந்த அரசர்கள் (மீறிச் சொல்ல முடியாமலிருந்ததாகிய) ஏழைத்தன்மையினாலேதானே ஸபையில் மறுமொழி சொல்வதற்குக் கூடியவர்களாகவில்லை? தர்மத்தைவிட்டு விலகாத விஷயத்தைச் சொல்லுகிறவரான விதுரர் ஒருவர், தர்மபுத்தியினாலே, அற்பபுத்தியையுடைய துரியோதனனை நோக்கி உத்தரம் சொன்னார். (ஆகையால்,) நீ இந்தத் தர்மத்தை அறியாமல் ஸபையில் பாண்டவருக்கு உபதேசிக்க விரும்புகிறாய். த்ரௌபதியோ அந்தஸபையை அடைந்து அந்தக் கஷ்டத்தில் ஸமுத்திர வெள்ளத்திலிருந்தும் தோணி கரையேற்றுவதுபோலப் பாண்டவர்களையும் தன்னையும் கரையேற்றக்கூடியதும் செய்யஅரியதும் அத்புதமாயிருக்கிற இந்தக் காரியத்தைச் செய்தாள். ஸபையில் ஸூத புத்திரனான கர்ணன், மாமனார்களுடைய ஸமீபத்தில் நிற்கிறவளான கிருஷ்ணையை நோக்கி, 'யஜ்ஞஸேனனுடைய புத்திரி! உனக்கு ஆதாரம் இல்லை. துரியோதனனுடைய வீட்டை அடைவாய். உன்னுடைய அந்தப் பதிகள் ஜயிக்கப்பட்டுவிட்டார்கள். உனக்குப் பதிகளில்லை. ஓ! காந்திபொருந்தியவளே! நீ வேறுபதியை வரிப்பாய்' என்று சொன்னபொழுது, கர்ணனிடமிருந்து எலும்பை முறிக்கிறதும் மர்மத்தைப்பிளக்கிறதும் மிகவும் கோரமும் கடுமையான தேஜஸ்ஸையுடையதுமான எந்தச் சொல்வடிவமான பாணமானது அர்ஜுனனுடைய இருதயத்தில் தைத்ததோ அது (அந்த) அர்ஜுனனுடைய இருதயத்தில் நிலையாக நிற்கிறது. துச்சாஸனன், மான்தோல்களை உடுப்பதற்கு விரும்பினவர்களான பாண்டவர்களைக்குறித்து, 'இவர்களெல்லாரும் எள்ளுப்பதர்கள்; தனநாசத்தை அடைந்தார்கள்; குறைவை அடைந்தார்கள்; நெடுநாள்களுக்கு நரகத்தை அடைந்தார்கள்' என்று கடுமையாகச் சொல்லியதும், காந்தாரதேசத்தரசனான அந்தச்சகுனியானவன், வஞ்சனையால் சூதாடும்காலத்தில், யுதிஷ்டிரரை நோக்கி, 'நகுலன் ஜயிக்கப்பட்டான். உனக்கு என்ன இருக்கிறது? யஜ்ஞஸேனன் புத்ரியான கிருஷ்ணையைக்கொண்டு சொக்கட்டாடு' என்று சொல்லியதுமாகிய சூதாட்டத்திலுண்டான இழிவான இந்த எல்லா வார்த்தையையும் நான் சொல்லிய இந்தப்படி நீயும் அறிந்தேயிருக்கிறாய். கெடுதலையடைந்ததான இந்தக் காரியத்தைச் சரிபண்ணுவதற்கு நான் நேரிலே அவ்விடத்தில் போவதற்குப் பிரார்த்திக்கிறேன். துர்புத்தியுடையவனும் பாவத்தின் வசத்தை அடைந்தவனுமான திருதராஷ்டிர புத்திரனுடைய மோகத்தை நீ அறிகிறாய். பாண்டவர்களுடைய காரியத்தைக் கெடுக்காமலே கௌரவர்களுக்குச் சமனத்

தையும் செய்யக்கூடியவனுமேவனுனால் பெரிதான பயனுடைய புண்ணியமானது என்னால் செய்யப்பட்டதாகும். கௌரவர்களும் மிருத்யுவின் பாசத்திலிருந்து விடுபடுவார்கள். தவிரவும், சுக்கிராசாரியருடைய நீதியும் தர்மத்திற்கிருப்பிடமும் பயனுள்ளதும் ஹிம்ஸையில்லாததுமான வார்த்தையை நான் சொல்லும்பொழுது திருதராஷ்டிரரின் புத்திரர்கள் கேட்பார்களா? நேரில் தானாகவே வந்த என்னைக் கௌரவர்களும் கௌரவிப்பார்களா? இதற்கு மாறுபட்டால் தேரிலேறின அர்ஜுனனாலும் யுத்தத்திற்காகக் கவசம்பூண்ட பீமஸேனனாலுமே, பலத்தால் கர்வங்கொண்டவர்களும் தம் செய்கையால் பாபிகளுமான திருதராஷ்டிரரின் புத்திரர்களைத் தகிக்கப்படுகிறவர்களாக அறியக்கடவாய். துரியோதனன் ஜயிக்கப்பட்டவர்களான பாண்டவர்களைக்குறித்துப் பயங்கரமும் கடுமையுமான வார்த்தைகளைச் சொல்லுகிறான். (அந்தத்) துரியோதனனைப் பீமஸேனன் கதையைக் கையிலுடையவனும் அஜாக்கிரதையில்லாதவனுமாக ஸமயத்தில் (அவைகளை) நினைக்கச்செய்வான்.

துரியோதனன் கோபரூபமான பெரியமரம்; கர்ணன் அதனுடைய அடிக்கிளை; சகுனி (அதன்) சிறுகிளைகள்; துச்சாஸனன் செழித்தவைகளான (அதன்) மலர்களும் கனிகளும்; புத்தியில்லாத திருதராஷ்டிரராஜர் (அதன்) வேர். யுதிஷ்டிரரானவர் தர்மரூபமான பெரியமரம்; அர்ஜுனன் அதனுடையஅடிக்கிளை; பீமஸேனன் அதன் சிறுகிளைகள்; மாத்திரியின் புத்திரர்கள் செழித்தவைகளான அதன் மலர்களும் கனிகளும்; நானும் வேதமும் பிராம்மணர்களும் (அதன்) வேர். ஓ! ஸஞ்சய! புத்திரர்களுடன்கூடின திருதராஷ்டிராஜன் ஒருவனம். பாண்டவர்கள் அந்த வனத்தின் ஸிம்மங்கள். ஸிம்மங்களால் ரக்ஷிக்கப்பட்டவனமானது நாசத்தை அடையாது. வனத்தால் ரக்ஷிக்கப்பட்ட ஸிம்மமும் நசிக்காது. வனமில்லாத ஸிம்மமும் கொல்லப்படும். ஸிம்மமில்லாத வனமும் அழிக்கப்படும். ஆகையால், ஸிம்மம் வனத்தைக் காக்கவேண்டும். வனமும் ஸிம்மத்தைக் காக்கவேண்டும். திருதராஷ்டிராஜர் வனம். பாண்டவர்கள் வனத்திலுள்ள புலிகள். புலிகளோடுகூடின வனத்தை அழித்துவிடாதே. வனமில்லாவிடில் புலிகள் நசிக்கும். வனமில்லாத புலி கொல்லப்படுகிறது. புலியில்லாத வனம் வெட்டப்படுகிறது. ஆகையால், புலி வனத்தைக்காக்கவேண்டும். வனமும் புலியைக் காக்கவேண்டும். ஓ! ஸஞ்சய! திருதராஷ்டிரரின் புத்திரர்கள் கொடிக்கு ஒப்பான தன்மையுடையவர்கள். பாண்டவர்கள் ஸாலவிருக்ஷங்கள். பெரியமரத்தைப்பற்றாத கொடியானது ஒருகா

லும் விருத்தியடையாது. சத்துருக்களைச் சிக்ஷிக்கின்ற பார்த்தர்கள் பணிவிடைசெய்வதற்காவனும் இருக்கிறார்கள்; யுத்தம்செய்வதற்காவனும் இருக்கிறார்கள். திருதராஷ்டிரருக்கு எதுசெய்யவிருப்பமோ அதை அவர் செய்யட்டும். மகாத்மாக்களும் தர்மத்தில் நடப்பவர்களும் போர்வீரர்களும் ஸமர்த்தர்களுமான பாண்டவர்கள் பொறுமையிலிருக்கிறார்கள். ஓ! வித்வானே! அதை உள்ளபடி சொல்லு' என்று சொன்னார்.

---

முப்பதாவது அத்யாயம்.

## ஸஞ்சயயானபர்வம். (தொடர்ச்சி.)

(ஸஞ்சயன் யுதிஷ்டிரரிடம் விடைகொண்டதும், யுதிஷ்டிரர் பீஷ்மர் முதலிய எல்லாருக்கும் தம் வந்தனமுதலியனகூறி க்ஷேமத்தைத் தெரிவிக்கச்சொல்லியதும், ஸமாதானமோ அல்லது சண்டையோ எதுவும் தமக்கு ஸம்மதமென்பதைத் துரியோதனனுக்குச் சொல்லச் சொல்லியதும்.)

ஸஞ்சயன், (யுதிஷ்டிரரை நோக்கி), 'ஓ! அரசரே! உம்மிடம் தெரிவித்துக்கொள்ளுகிறேன்; நான் போகிறேன். ஓ! பாண்டவரே! உமக்கு க்ஷேமம் உண்டாகுக. என்னாலே, மனத்தினுடைய ஆக்கிரகத்தால், ஒருவிதமான பாவமும் வாக்கினால் சொல்லப்படவில்லையல்லவா? வாஸுதேவர், பீமன், அர்ஜுனன், மாத்ரியின் புத்திரர்கள், ஸாத்தியகி, சேகிதானன் இவர்களிடத்திலும் தெரிவித்துக்கொண்டு மங்களமாகப் போகிறேன். உங்களுக்கு ஸுகமுண்டாகுக. ஓ! அரசர்களே! என்னைக் குளிர்ச்சியான நேத்திரத்தால் பாருங்கள்' என்று சொன்னான்.

யுதிஷ்டிரர், 'ஓ! ஸஞ்சய! எங்களால் அனுமதிகொடுக்கப்படுகிறாய். க்ஷேமமாகப்போவாய். ஓ! வித்வானே! நீ ஒருபொழுதும் எங்களுக்கு அப்பிரியத்தை நினைக்கிறவனல்லை. அவர்களும் நாங்களுமெல்லோரும் உன்னைச் சுத்தமனமுடையவனும், ஸபையிலிருக்கிறவனும், நடுநிலையிலிருப்பவனுமாக அறிகிறோம். ஓ! ஸஞ்சய! நீ ஆப்தனும் மிகவும் பிரியனும் சுபவார்த்தையுடையவனும் சீலமுடையவனும் திருப்தியுடையவனுமான தூதனாக இருக்கிறாய். ஓ! ஸஞ்சய! நீ ஒருபொழுதும் புத்திமோகத்தை அடையமாட்டாய். 1 கெட்டவார்த்தைகளால் பேசப்பட்டவனா

1 வேறு படம்.

யிருந்தாலும், கோபிக்கவுமாட்டாய். ஒருபொழுதும் விரஸமும் குரூரமுமான வார்த்தையைப் பேசமாட்டாய். கடுமையான குறிப்பு வார்த்தையையும் சொல்லமாட்டாய். பயனில்லாத வார்த்தையையும் சொல்லமாட்டாய். ஓ! ஸூத! உன்னுடைய இந்த வார்த்தையைத் தர்மத்திற்கு இருப்பிடமும் பயனுள்ளதும் ஹிம்ஸையில்லாததுமாக அறிகிறோம். ஓ! தூத! நீ தான் எங்களுக்கு மிகவும் பிரியனானவன். (நீ இவ்விடம் வந்தது) இரண்டாம் விதுரர் வந்ததுபோன்றது. நீ பழமையானவன்; அடிக்கடி (பிரியனாகப்) பார்க்கப்பட்டிருக்கிறாய். அர்ஜுனனுக்குத் தனக்கு நிகரான தோழனாகிறாய். ஓ! ஸஞ்சய! இவ்விடமிருந்து சீக்கிரமாகச்சென்று, துதிக்கத்தக்கவர்களான அந்தப் பிராமணர்களைத் துதிக்கக்கடவாய். ஐயா! மிகவும் சுத்தமான நியமாத்தியயன முடையவர்களும், ஆசாரமுடையவர்களும், நல்லகுலத்தில் பிறந்தவர்களும், எல்லாத் தர்மங்களோடும்கூடினவர்களும், தங்கள் வேதங்களை ஆவிருத்திசெய்துகொண்டு வருகிறவர்களுமாக இருக்கும் பிராமணர்களையும், யதிகளையும், எந்நாளும் வனங்களில் தவம் செய்துகொண்டிருப்பவர்களையும் வணங்கி, அப்படியே, என்னுடைய வார்த்தையினாலே அந்தப் பெரியோர்களிடம் க்ஷேமம்விசாரிக்கக் கடவாய். ஓ! ஸூத! அப்படியே அந்தத் திருதராஷ்டிரராஜருடைய புரோஹிதரையும், ஆசாரியர்களையும், சேர்ந்தவர்களாயிருக்கிற ரித்விக்குக்களையுமே நியாயப்படி குசலப்பிரச்னத்தோடு அடையக்கடவாய். ச்ரோத்திரியர்களல்லாதவர்களும் நல்லமனமுடையவர்களும் சீலத்தையும் பலத்தையுமுடையவர்களும் எங்களை விரும்புகிறவர்களும் நினைக்கிறவர்களும் சக்திக்குத்தக்கபடி லேசான தர்மத்தை அனுஷ்டிக்கின்றவர்களுமான எந்தப் பெரியோர்கள் வஸிக்கின்றார்களோ அவர்களிடத்தில் என்னை க்ஷேமத்தோடு கூடினவனாகச் சிலாகித்துச்சொல்லு. பிறகு, ஆரோக்கியத்தைக்கேள். (நமது) ராஜ்யத்தில் எவர்கள் வாணிகத்தால் ஜீவிக்கின்றார்களோ, எவர்கள் பசுக்களைப் பரிபாலித்துக்கொண்டு வசிக்கின்றார்களோ, எவர்கள் உழவு செய்கின்றவர்களாக உலகத்தைப் போஷிக்கின்றார்களோ அவர்கள் எல்லார்களுடைய க்ஷேமத்தையும் வினவக்கடவாய். ஆசாரியரும், அன்புடையவரும், நியாயத்தில் செல்லுகிறவரும், (எல்லாருக்கும்) கட்டுப்பட்டவரும், வேதங்களை அடையவிரும்பிப் பிரம்மசரியத்தை அனுஷ்டித்தவரும், பின்னும் அஸ்திரத்தை (மந்திரம், உபசாரம், விடுதல், திருப்பிஅழைத்தல் என்கிற) நான்கு பாதமுடையதாகவே அப்பியாஸம் செய்தவரும், மனத்தின் தெளிவுடையவருமான அந்தத்

துரோணரை (எனக்காக) நீ நமஸ்கரிக்கவேண்டும். வேதங்களை அத்தியயனம்செய்தவரும், ஆசாரமுடையவரும், பின்னும் நான்குபாதங்களையுடையதாகவே அஸ்திரத்தை அப்பியாஸம் செய்தவரும், கந்தருவபுத்திரனுக்கு நிகரானவரும், பலசாலியுமான அந்த அஸ்வத்தாமாவையும் க்ஷேமம் விசாரிக்கக்கடவாய். ஓ! ஸஞ்சய! சரத்வானுடைய புத்திரரும், மகாரதரும், ஆத்மஜ்ஞானிகளில் சிறந்தவருமான கிருபருடைய கிருகத்தையடைந்து நீ என்னை அடிக்கடி சொல்லி, கையினால் அவருடைய பாதங்களைப் பிடிக்கக்கடவாய். சூரத்தன்மையும் துரோகமில்லாமையும் தவமும் பிரஜ்ஞையும் ஒழுக்கமும் வித்தையும் ரூபமும் தைரியமும் பொருந்தியவரும் கௌரவர்களில்சிறந்தவருமான பீஷ்மருடைய பாதங்களைப்பிடித்துக்கொண்டு அவரிடத்தில் என்னைத் தெரிவிக்கக்கடவாய். ஓ! ஸஞ்சய! அறிவையே கண்ணாகவுடையவரும் கௌரவர்களுக்குத் தலைவரும் மிகக்கற்றவரும் பெரியோர்களை ஸேவிக்கிறவரும் புத்திமானும் முதியவருமான அந்தத் திருதராஷ்டிரராஜருக்கு நமஸ்காரம்செய்து நான் ஆரோக்கிய முடையவனாக இருக்கிறேனென்று தெரிவிக்கக்கடவாய். ஓ! ஸஞ்சய! திருதராஷ்டிரருடைய மூத்தபுத்திரனும் மந்தனும் மூடனும் வஞ்சகனும் பாவத்திலேயே பற்றுள்ளவனும் உலகமெங்கும் பரவின அபவாதமுடையவனுமான துரியோதனனைக் குசலப்பிரச்னம் செய்யக்கடவாய். ஓ! ஸஞ்சய! ஐயா! அவனுக்குத் தம்பியும் மந்தனும் அப்படிப்பட்ட ஒழுக்கமுடையவனும் பெரிய வில்லுடையவனும் கௌரவர்களில் மிகவும் சூரனுமான அந்தத்துச்சாஸனனையும் அடிக்கடி குசலப்பிரச்னம் செய்யவேண்டும். ஓ! ஸஞ்சய! எந்நாளும் பரதகுலத்தோர்களுடைய சமனத்தைத் தவிர வேறுவிருப்பத்தை அடையாதவரும், மனோவசமுடையவரும், [1]நல்லசீலமுடையவருமான அந்தப் பாஹ்லிகதேசத்தரசரும் உன்னால் வணங்கத்தக்கவர். ஐயா! முன்விழுந்து யுத்தம் செய்கிறவனும், பெரிதான விற்பிடித்தவனும், தேராளிகளில் உத்தமனும், சிறந்தவனுமான பூரிஸ்ரவஸை அடைந்து என் வார்த்தையால் சொல்லு. அப்படியே, சல்யனையும் என் வார்த்தையால் ஞாபகமுடையவனாகச் சொல்லு. பெரிய வில்லுடையவனும் தேராளிகளிலுத்தமனும் சிறந்தவனும் இந்தச் சல்லியனுக்குப் பின்பக்கத்தை ரக்ஷிக்கிறவனும் இவனுக்குச் சமானனுமான சலனும், லஜ்ஜை பொருந்தியவனும் சூதுவிளையாடுகிறவனும் சூதுக்

[1] வேறுபாடம் 'என்விஷயத்தில் அருளுள்ளவராய்ப் பேசும்படி' என்பது மூலபாடத்தின் பொருள்.

ஷாய்களை அறிந்தவனும் உறுதியான விரதமுடையவனுமான புரு மித்திரனும், ஜயனும் என் வார்த்தையால் சொல்லப்படத் தக்கவர் கள். ஐயா! எவர்கள் அப்பொழுது என்னுடைய வனயாத்திரை யைச் சந்தோஷிக்கவில்லையோ அவர்களெல்லாருடைய குசலத்தை யும் பிரச்னம் செய்வாய். மிகவும் சிறந்தவைகளான அனேகம் குணங் களுடன்கூடினவரும், மிக்க அறிவுடையவரும், நிஷ்டூரத்தன் மையே இல்லாதவரும், அன்பினால் எப்பொழுதுமே பொறு மையை அடக்குகிறவருமான அந்த ஸோமதத்தரானவர் பூஜிக்கத் தக்கவரென்பது என்னெண்ணம். ஓ! ஸஞ்சய!கௌரவர்களில் மிக வும் பூஜிக்கத்தக்கவனும், எங்களுக்குப் பிராதாவும், எனக்குத் துணை வனும், பெரிய வில்லுடையவனும், தேராளிகளில் சிறந்தவனும், யோக்கியனும், மந்திரிகளுடன்கூடினவனுமான அந்த ஸோமதத்த னுடைய புத்திரனை க்ஷேமம் விசாரிக்கக்கடவாய். ஓ! ஸூத! இவர்களைத்தவிர வேறு எவர்கள் கௌரவர்களில் சிறந்தவர்களான யௌவனப் பிராயமுள்ளவர்களிருக்கின்றார்களோ, எங்களுக்குப் புத்திரர்களாயும் பௌத்திரர்களாயும் பிராதாக்களாயும் எவர்களிருக் கின்றார்களோ இவர்களில் எவர் எவருக்கு எது எது தகுதியென்று நினைக்கிறாயோ அவரவருக்கு அதை அதைச் சொல்லிவிட்டு, ஆரோக் கியத்தைச்சொல்லக்கடவாய். ஓ! ஸூத! துரியோதனனாலே பாண்ட வர்களுடன் யுத்தம் செய்வதற்காக வரவழைக்கப்பட்டவர்களும், எல்லாரும் குரூரத்தன்மையில்லாதவர்களும், ஒழுக்கமும் ஆசாரமு முடையவர்களும், வஸாதிகளும், ஸால்வர்களும், கேகயர்களும், அம் பஷ்டர்களும், சிறந்தவர்களான திரிகர்த்தர்களும், கீழ்த்திக்கிலுள்ள வர்களும், வடதிக்கிலுள்ளவர்களும, சூரர்களான தெற்குத் திக்கி லுள்ளவர்களும், மேலைத் திக்கிலுள்ளவர்களும், பர்வதப் பிரதேசத்தி லுள்ளவர்களுமான அரசர்களெல்லாரையும் குசலப்பிரஶ்னம் செய் வாய். யானை ஏறுகிறவர்களும் தேராளிகளும் குதிரைஏறுகிறவர் களும் காலாட்களுமான மகான்களான ஆரியர்களுடைய ஸங்கங்க ளில் என்னை எந்நாளும் க்ஷேமத்துடன்கூடினவனாகச் சொல்லிவிட்டு, எல்லாரிடத்திலும் ஆரோக்கியத்தைக்கேட்கக்கடவாய். அப்படியே, திருதராஷ்டிரராஜருடைய தனவிருத்தியில் முயன்றவர்களான மந்திரி களையும், வாயில்காப்பவர்களையும், ஸேனாதிபதிகளையும், வரவு செலவுக் கணக்குப்பார்க்கிற கணக்கர்களையும், எந்நாளும் பெரிய (கப்பமுத லான) திரவியங்களைச் சிந்திக்கிறவர்களையும் (ஆரோக்கியத்தை விசா ரிக்கக்கடவாய்.) ஐயா! (திருதராஷ்டிரருக்கு) வைஶ்யஸ்திரீயினிடம்

(பிறந்த) புத்திரனும், கௌரவர்களுடைய மத்தியில் மௌட்டிய மில்லாமல் பெரிதான பிரஜ்ஞையுடையவனும், எல்லாத்தர்மங்களோடுங் கூடினவனும், ஒரு காலமும் (எங்களுடன்) யுத்தத்தை விரும்பாதவனும், சிறந்தவனுமான யுயுத்ஸுவைக் குசலபிரச்னஞ் செய்யக்கடவாய். ஓ! ஐயா! பொருளைப்பறிக்கின்ற சூதாட்டத்தில் நிகரற்றவனும், மறைவான கபடச் செய்கையுள்ளவனும், நன்றாகச் சூதாடுகிறவனும், சூதுக்காய்களில் நிச்சயமுடையவனும், யுத்தத்தில் 1 தேவரதனாலே ஜயிக்கமுடியாதவனுமான சித்திரஸேனனானவன் குசலப்பிரச்னம் செய்யப்படத் தக்கவன். ஓ! ஸூத! காந்தார தேசத்தரசனும், மலைநாட்டிலுள்ளவனும், பொருளைக்கவர்வதில் நிகரில்லாதவனும், துரியோதனனுக்குக் கௌரவத்தைச் செய்கிறவனாகிச் சூதாடினவனும், கெட்டபுத்தியுடையவனுமான சகுனியைக் குசலப் பிரச்னம்செய்வாய்.

நெருங்கமுடியாதவர்களான பாண்டவர்களை ஒருரதத்துடன் வெல்லுவதற்கு மிக்க ஊக்கம்கொண்டவீரனும், மயக்கத்தை அடைகின்ற கௌரவர்களை மயக்குவதில் நிகரற்றவனுமான அந்தக்கர்ணனையும் குசலப்பிரச்னம்செய்வாய். ஆழமானபுத்தியுடையவரும் தீர்க்கமான ஆலோசனையுடையவருமான விதுரர் எங்களிடம் அன்புள்ளவர். அவரே எங்களுக்குக் குரு; அவரே எங்களைத் தாங்குகின்றவர்; அவரே பிதா; அவரே மாதா; அவரே நண்பர்; அவரே மந்திரி. அவரைக் குசலப்பிரச்னம் செய்யக்கடவாய். ஓ! ஸஞ்சய! முதியவர்களான ஸ்திரீகளும், குணங்களோடு கூடின ஸ்திரீகளும் எங்களாலே மாதாக்களாக நினைக்கப்படுகிறார்கள். ஆகையால், முதியமாதர்களோடு கூடினவர்களும் சேர்ந்தவர்களுமான அந்த எல்லாஸ்திரீகளையும் அடைந்து நமஸ்காரத்தைச் சொல்லக்கடவாய். ஓ! ஸஞ்சய! 'உங்களுடைய புத்திரர்கள் உயிர்வாழும் பிள்ளைகளுள்ளவர்களாகிக் குரோதத்தன்மையில்லாதவர்களாக நல்லநடையிலிருக்கின்றார்களா?' என்று கேட்டுவிட்டு, பிறகு, 'அஜாதசத்ருவானவன் புத்திரர்களுடன் க்ஷேமமாயிருக்கிறான்' என்று சொல்லு.

ஓ! ஸஞ்சய! அவ்விடத்திலுள்ள ராஜபாரியைகளை அறிகிறாய். ஐயா! அவர்களெல்லாருடைய க்ஷேமத்தையும் வினவக்கடவாய்.

---

1 'யோதர்ஜயோ தேவரதே நஸங்க்யே' என்பதுமூலம். 'யுத்தத்திலல்லாமல் சூதாட்டத்தில் ஜயிக்கமுடியாதவனும்' என்பது இங்கிலீஷ் மொழிபெயர்ப்பு. அங்கே 'தேவரதே' என்பதற்கு, 'சூதாட்டத்தில்' என்று பொருள்செய்திருக்கிறது.

'ஓ! குற்றமற்றவர்களே! நன்கு ரக்ஷிக்கப்பட்டவர்களும் வாஸனை தரிக்கின்றவர்களும் வீட்டுக்காரியங்களில் அஜாக்கிரதையில்லாதவர்களுமாக வீடுகளில் இருக்கின்றீர்களா? ஓ! மங்களத்துடன் கூடியவர்களே! மாமனார் மாமியார்கள்விஷயத்தில் நன்மையுடன்கூடினதும், குரூரத்தன்மையே யில்லாததுமான செய்கையிலிருக்கின்றீர்களா? உங்களுடைய பதிகள் அனுகூலமாயிருக்கும்படி உங்கள் நடையை உறுதிப்படுத்துங்கள்' என்றுசொல்லு. ஓ! ஸஞ்சய! அவ்விடத்தில் நல்ல குலங்களிலிருந்து வந்தவர்களும் நற்குணமுள்ளவர்களும் குழந்தைகளுள்ளவர்களுமான எங்கள் மருகிமார்களை அறிகிறாய். அவர்களையும் அடைந்து, 'யுதிஷ்டிரன் உங்களிடம் மகிழ்ச்சியுள்ளவனாக விசாரித்தான்' என்றுசொல்லு. ஓ! ஸஞ்சய! இல்லங்களிலிருக்கிற கன்னிகைகளைத் தழுவிக்கொண்டு என்னுடைய வார்த்தையினால், நோயின்மையை வினவி, 'உங்களுக்கு நற்குணமுடையவர்களும் அனுகூலர்களுமான பதிகள் கிடைக்கக் கடவர்கள். நீங்கள் பதிகளுக்கு அனுகூலர்களாயிருக்கக் கடவீர்' என்று சொல்லு. ஓ! ஐயா! ஆபரணங்களணிந்து சிறந்த ஆடைபுமுடுத்து நல்லகந்தம்பூசிக் குற்றமற்று, ஸுகசாலிகளும் போகமுடையவர்களுமாய் அழகானதோற்றமும் மிருதுவான வார்த்தையுமுடைய (அரசர்களுடைய) வேஶ்யாஸ்திரீகளையும் க்ஷேமத்தை வினவுவாய். கௌரவர்களுடைய வேலைக்காரர்களிடத்திலும் வேலைக்காரிகளிடத்திலும் அந்தக் கௌரவர்களை அடுத்த அனேகர்களான கூனர்களிடத்திலும் முடவர்களிடத்திலும் நான் க்ஷேமமாக இருக்கிறேனென்பதைச் சொல்லிவிட்டு, பிறகு, ஆரோக்கியத்தை வினவுவாய். 'துரியோதனன் உங்களுக்குப் பழையஜீவனத்தை நடத்துகிறானா? போகங்களைக் கொடுக்கிறானா?' என்றுகேள். துரியோதனன் தயையினால் போஷிக்கின்ற அங்கப்பழுதுள்ளவர்களும் தீனர்களும் குள்ளர்களும் குருடர்களும் செவிடர்களும் பலவகைக் கைத்தொழில்ஜீவனமுள்ளவர்களுமான எல்லார்களிடத்திலும் நான் க்ஷேமத்துடனிருப்பதைச் சொல்லிவிட்டு, பிறகு நோயின்மையையும் வினவக்கடவாய். 'துக்கத்தையுண்டுபண்ணுகிற இழிவான பிழைப்பினிமித்தம் பயப்படாதீர்கள். நிச்சயமாக (முன் பிறப்புக்களில்) பாவமானது செய்யப்பட்டிருக்கும். பகைவரைத் தண்டித்து, நண்பரை அனுக்கிரகித்து, உங்களை ஆடைகளாலும் அன்னத்தினாலும் போஷிப்பேன்' என்று சொல்லு. ஓ! ஸஞ்சய! இதுவும் ஒருவனாலே சொல்லக்கூடியதன்று. பலதேசங்களிலுள்ளவர்களும், பலர்களும், பயங்கரமான சேனையாகச் சேர்ந்த

வர்களுமான பலஜாதிக்கூட்டங்களை நகரம்விட்டு வெளியில்சென்றவ னுன நான் சிறுவன்போலப் பார்க்கவிருப்பமுள்ளவனுக வணங்கு கிறேன். அவர்கள் என்னுல் உண்மையாகச் சொல்லப்பட்டதும் உன் னுல் உரைக்கப்படுகிறதுமான இந்தவார்த்தையைக் கேட்கும்படி செய் வாய். ' என்னுல் பிராமணர்களின்பொருட்டு (வர்ஷாசனமாகச்) செய் யப்பட்ட (மான்யமுதலியவைகள்) இருக்கின்றனவே ; அவைகளை நான் நடத்திவந்ததுபோலவே உன்னைச்சேர்ந்தவர்களும் கெடுக்காமல் நடத்துகிறர்களா ? அப்படி நடந்துவரும் விஷயத்தை எனக்குத் தெரிவி' என்று துரியோதனனிடம் சொல்லு. ஓ ! ஐயா ! திக்கற்ற வர்களும், (எப்பொழுதும்) வலிமையற்றவர்களும், எப்பொழுதும் [1] சுயநலத்திலேயே முயலுகிறவர்களும், மூடர்களும், எல்லாவிதத்தா லுமே எளியவருமாயிருப்பவர்களையும் நீ என்னுடைய வாக்கியத்தால் க்ஷேமம் விசாரிப்பாய். ஓ ! ஸூதபுத்திரா ! திருதராஷ்டிரபுத்திரர் களை அடுத்தவர்களும் பல திசைகளிலிருந்தும் வந்தவர்களுமாயிருப் பவர்களையும் பார்த்துப் பூஜிக்கத்தக்கவர்களான அவர்களெல்லார் களையும் க்ஷேமத்தையும் கெடுதலில்லாமையையும் கேட்கக்கடவாய். இவ்விதம் அழைக்கப்பட்டு வந்தவர்களும் தாமாகவந்தவர்களுமான எல்லார்களையும் எல்லாத்திசைகளிலிருந்தும் வந்தவர்களான எல்லாத் தூதர்களையும் குசலப்பிரச்னம் செய்து, பிறகு, அவர்களிடம் நான் க்ஷேமத்துடனிருப்பதாகச் சொல்லவேண்டும். துரியோதனனுல் அடையப்பட்ட போர்வீரர்களுக்கு நிகரான வேறு போர்வீரர்கள் பாரில் இல்லையல்லவா ? தர்மமோ நித்தியமாயுள்ளது. எனக்குப் பகை வரை வெல்லுவதின் பொருட்டுப் பெரிதான பலத்தையுடைய தர்மந் தானே இருக்கிறது ? ஓ ! ஸஞ்சய ! திருதராஷ்டிரபுத்திரனுன ஸுயோதனனிடத்தில், ' சத்துருவற்றவனுகக் கௌரவர்களை ஆள்வே னென்கிற விருப்பமானது உன்னுடைய சரீரத்திலிருந்துகொண்டு இருதயத்தை வருத்துகிறதே ; இதற்கு ஒருவிதமான உபாயமுமில்லை. உனக்கு எவ்விதம் இஷ்டமோ அவ்விதம் செய்யமாட்டேன். ஓ ! பரத வம்சத்தாரில் சிறந்த வீரனே ! என்னுடைய இந்திரப்பிரஸ்தத்தை மட்டுமேயாவது கொடு. அல்லது, யுத்தத்தையாவது செய்' என்று இந்த வார்த்தையைக் காதில்போடு.

---

1 ' ஆத்மங்யேவ ' என்பது மூலம் ; ' மனத்திலேயே நினைப்பதல்லா மல் செய்கையால் செய்யாதவர் ' என்பது பழையவுரை.

## முப்பத்தோராவது அத்யாயம்.

## ஸஞ்சயயானபர்வம். (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரர், திருதராஷ்டிரனுக்கும் பீஷ்மருக்கும் வந்தனங்கூறி ஸமாதானத்தை விரும்புவதாகவும் துரியோதனனுக்கு அவனுடைய குற்றங்களைத் தாங்கள்பொறுப்பதாகவும் ஐந்து ஊர்களையாவது கொடுத்து ஸமாதானஞ் செய்துகொள்ள வேண்டுவதாகவும் சொல்லும்படி ஸஞ்சயனிடம் சொல்லியது.)

ஓ! ஸஞ்சய! கடவுள் நல்லவனையோ, கெட்டவனையோ, சிறுவனையோ, முதியவனையோ, பலமில்லாதவனையோ, பலசாலியையோ, (யாரையும்) தம் வசம் செய்துகொள்ளுகிறார். முன்காரணமான வினையை வெளிப்படுத்துகிறதற்காக மூடனுக்குப் பாண்டித்தியத்தையோ, பண்டிதனுக்கு மூடத்தன்மையையோ முழுதும் கொடுக்கிறார். (ஆகையால்), உள்ளபடி ஆலோசனையைச்செய்து, ஸந்தோஷத்தையடைந்து, எங்கள் பலத்தை அறியவிருப்பமுள்ளவனை துரியோதனனுக்கு உண்மையாகச் சொல்லக்கடவாய். ஓ! ஸஞ்சய! குருதேசத்தைஅடைந்து, மிக்கபலமுள்ள திருதராஷ்டிரரை நமஸ்கரித்து, (பாதங்களைப்) பிடித்துக்கொண்டு, பிறகு, ஆரோக்கியத்தைக்கேள். ஸஞ்சய! கௌரவர்களால் சூழப்பட்டிருக்கிறவரான அவரிடத்தில் நீ, 'ஓ! அரசரே! பாண்டவர்கள் உம்முடையபலத்தினலேயே ஸுகமாக ஜீவிக்கிறார்கள். ஓ! சத்துருக்களைச்சிக்ஷிக்கிறவரே! உம்முடைய அனுக்கிரகத்தினலே (அவர்கள் பாலர்களாயிருக்கையிலேயே) ராஜ்யத்தைஅடைந்தார்கள். முதலில் அவர்களை ராஜ்யத்தில் ஸ்தாபனம் செய்துவிட்டு, (அவர்கள்) கெடுதலையடைகிறபொழுது, உபேக்ஷியாதீர். இந்த உலகமெல்லாம் ஒருவனுக்கும்போதாது. ஓ! பிதாவே! நாங்கள் சேர்ந்து ஜீவிப்போம். நீங்கள் சத்துருக்களுடைய வசத்தை அடையவேண்டாம்' என்று சொல்லு. அப்படியே, நீ சந்தனுவின் புத்திரரும் பாரதர்களுக்குப் பிதாமஹருமான பீஷ்மரை என்னுடைய பெயரைச்சொல்லிக்கொண்டு சிரத்தால் வணங்கக்கடவாய். வணங்கிவிட்டு, பிறகு, எங்களுடைய பிதாமஹரிடம், 'ஓ! ஐயா! முழுகிப்போனதான சந்தனுவினுடைய வம்சமானது உம்மால் மறுபடியும் கரையேற்றப்பட்டது. ஓ! பிதாமஹரே! அப்படிப்பட்ட நீர் உம்முடைய அபிப்பிராயத்தைக்கொண்டு எப்படி உம்முடைய பௌத்

திரர்கள் ஒருவருக்கொருவர் பிரீதியுடையவர்களாக ஜீவிப்பார்களோ அப்படிச் செய்யும்' என்று சொல்லவேண்டும். அப்படியே, கௌரவர்களுக்கு மந்திரியாயிருக்கிற விதுரரிடத்தில், 'ஓ! ஸாதுஸ்வபாவமுடையவரே! யுதிஷ்டிரன்விஷயத்தில் ஹிதத்தை விரும்புகிறவரான நீர் யுத்தம் கூடாதென்று சொல்லும்' என்று சொல்லக்கடவாய். பிறகு, கௌரவர்களுடைய நடுவிலிருக்கிறவனும் பொறுமையில்லாதவனும் ராஜபுத்திரனுமான துரியோதனனிடத்தில் அடிக்கடி இன்சொற்கூறிச் சொல்லு. 'குற்றமற்றவளும் ஸபையை அடைந்தவளுமான இந்தக்கிருஷ்ணையை நீ உபேக்ஷித்ததாலுண்டான துக்கத்தைப் பொறுத்தோம். கௌரவர்களைக் கொல்லாமல் விடுத்தோம். இவ்விதம் பாண்டவர்கள் பலவான்களாயிருந்தும், முன்னும் பின்னுமான கிலேசங்களைப் பொறுத்தார்களென்கிற எல்லாவற்றையும் கௌரவர்கள் அறிவார்கள். ஓ! ஸாதுவே! எங்களை மான்தோலுடுக்கும்படி செய்து, வனத்திற்குத் துரத்தின துக்கத்தையும் பொறுத்தோம். கௌரவர்களைக் கொன்றோமில்லை. பகைவரை வாட்டுபவனே! குந்தியை மீறிவிட்டுத் துச்சாஸனனானவன் உன் ஸம்மதத்தின்மேல் கிருஷ்ணையைக் கூந்தலில் பிடித்திழுத்ததும் எங்களால் பொறுக்கப்படும். உசிதமான எங்கள் பாகத்தை அடையக் கடவோம். ஓ! அரசனே! பிறர்பொருளில் ஆசைகொண்ட புத்தியைத் திருப்பு. அரசனே! இப்படியானால் வைரசாந்தி ஏற்படும். ஒருவருக்கொருவர் பிரீதியும் உண்டாகும். ஸமாதானத்தை விரும்புகிறவர்களான எங்களுக்கு ராஜ்யத்தில் ஒரு சிறு பகுதியையாவது கொடு. அவிஸ்தலத்தையும் விருகஸ்தலத்தையும் மாகந்தியையும் வாரணாவதத்தையும் ஐந்தாவதாக ஏதாவதொன்றையும் கொடு. [1] இப்படி கொடுப்பதில் முடிவு ஏற்படட்டும். துர்யோதன! ஐந்து பிராதாக்களுக்கும் ஐந்துகிராமங்களைக் கொடு' என்றும் சொல்லு. ஓ! பேரறிவாளனான ஸஞ்சய! எங்களுக்கு ஞாதிகளோடு வைரசாந்தியானது ஏற்படட்டும். பிராதா பிராதாவை அடையட்டும். பிதா புத்திரனோடு சேரட்டும். பாஞ்சாலர்கள் ஸந்தோஷத்தை அடைந்து, கௌரவர்களுடன் சேரட்டும். பாஞ்சாலர்களைக் கெடுதலில்லாதவர்களாக நீ செய்வதைப் பார்க்கவேண்டுமென்று விரும்புகிறேன். ஓ! பாரதர்களிற் சிறந்தவனே! ஐயா! நாங்கள் எல்லாரும் நல்லமனத்தை அடையக்கடவோம். ஓ! ஸஞ்சய! ஸமாதானத்துக்கும், அப்படியே யுத்தத்திற்கும் திறமையுள்ளவனாகவே இருக்கி

1 'இதில் வாஸஸ்தலம் ஏற்படட்டும்' என்பது பழையவுரை.

றேன். நான் தர்மார்த்தங்கள்விஷயத்தில், நயமான செய்கைக்கும் கடுமையான செய்கைக்கும் சக்தனாகவே இருக்கிறேன்' என்றுசொல்'' என்றார்.

---

முப்பத்திரண்டாவது அத்யாயம்.

## ஸஞ்சயயானபர்வம். (தொடர்ச்சி.)

(அர்ஜுனன் பீஷ்மர்முதலியோருக்குவந்தனம் சொல்லியதும், ஸஞ்சயன் திரும்பி இரவில் அஸ்தினபுரம்சேர்ந்து திருதராஷ்டிரனிடம் யுதிஷ்டிரர் வந்தனம்சொல்லி க்ஷேமம் விசாரித்ததைக் கூறித் திருதராஷ்டிரனை நிந்தித்து, யுதிஷ்டிரர் சொல்லியவற்றை மறுநாள் ஸபையில் தெரிவிப்பதாகச் சொல்லித் தன்வீடு சென்றதும்.)

குந்திபுத்திரனான தனஞ்சயன், தர்மராஜருடைய வார்த்தையைக் கேட்டு, அந்தஸபையில் வாஸுதேவர் கேட்டுக்கொண்டிருக்கையில், ஸஞ்சயனை நோக்கி, 'ஓ ஸஞ்சய! சந்தனுவின் புத்திரரான பிதாமஹரையும், திருதராஷ்டிரரையும், துரோணரையும், அஸ்வத்தாமாவையும், சல்யனையும், மஹாராஜரான பாஹ்லிகரையும், விகர்ணனையும், ஸோமதத்தனையும், ஸுபல புத்திரனான சகுனியையும், விவிம்சதியையும், சித்திரஸேனனையும், ஜயத்ஸேனனையும், அப்படியே சூரனும் யுத்தம்செய்பவர்களில் சிறந்தவனுமான பகதத்தனையும், மற்றும் அங்கிருக்கின்ற கௌரவர்களையும், துரியோதனனால் அழைக்கப்பட்டவர்களும் யுத்தம்செய்ய விருப்பமுள்ளவர்களும் ஸமுத்திரத்தில் வஸிப்பவர்களும் பூமியில்வஸிப்பவர்களும் உலகைப்பரிபாலிப்பவர்களுமான அரசர்கள் சேர்ந்திருந்தால் அவர்களையும், சேர்ந்திருக்கும்பொழுது, நியாயப்படி என்வார்த்தையால் குசலப்பிரச்னத்தையும் நமஸ்காரத்தையும் சொல்லக்கடவாய். ஓ! ஸஞ்சய! பிறகு, அரசர்களின்மத்தியில் பாவத்தைச்செய்பவர்களுக்கெல்லாம் தலைவனான துரியோதனனையும் சொல்லு' என்றான்.

இவ்விதம், குந்திபுத்திரனான தனஞ்சயன், அந்த ஸஞ்சயனைப் பிரயாணப்படுத்தியபிறகு, தன்னுடைய ஜனங்களுக்கு ஸந்தோஷத்தைச் செய்கின்றதும் திருதராஷ்டிரபுத்திரர்களை நடுங்கச் செய்கின்றதும் அர்த்தமுள்ளதும் தர்மமுள்ளதுமான வார்த்தையைச் சொன்னான். அர்ஜுனனால் கட்டளையிடப்பட்ட ஸஞ்சயனோ, 'அப்படியே' என்று சொல்லிவிட்டுப் பாண்டவர்களிடத்திலும் சிறந்த புக

மூடைய கேசவரிடத்திலும் அனுமதிபெற்றுக்கொண்டான். பகைவரை வாட்டுபவரே! அப்பொழுது, ஸஞ்சயன், தர்மபுத்திரரால் அனுமதி கொடுக்கப்பெற்று, மகாத்மாவான திருதராஷ்டிரனுடைய கட்டளையெல்லாவற்றையும் செய்துவிட்டுப் புறப்பட்டான். சத்துருக்களைத் தபிக்கச்செய்கிற அவன், ஒரே பகலில் சீக்கிரமாகச் சென்று, ராத்திரி காலத்தில் ஹஸ்திநபுரியை அடைந்தான். மிகவும் வேகமுடைய குதிரைகளாலே, சீக்கிரமாக ஹஸ்திநபுரத்தை அடைந்து, அந்தப் புரத்தைச்சேர்ந்து, வாயில்காப்போனை நோக்கி, 'வாயில்காப்போனே! 'ஸஞ்சயன் பாண்டவர்களிடமிருந்து வந்திருக்கிறான்' என்று திருதராஷ்டிரரிடம் தெரிவி. தாமதம் செய்யாதே. ஓ! வாயில்காப்போனே! விழித்துக்கொண்டிருந்தால் நீ சொல்லு. அரசருக்குத் தெரிவித்துக் கொண்டு நான் உள்ளே பிரவேசிப்பேன். ஏனென்றால், இவரிடத்தில் எனக்குத் தெரிவிக்கவேண்டியதும், தெரிவியாவிட்டால் கெடுதியுமான காரியம் இருக்கிறது' என்று சொன்னான். உடனே, வாயில்காப்போன் கேட்டு, அரசனிடத்தில், 'ஓ! பூபதியே! உமக்கு நமஸ்காரம். இதோ ஸஞ்சயன் உம்மைப் பார்க்கவேண்டுமென்கிற விருப்பத்தால் வாயிலில் வந்திருக்கிறான். தூதுசென்ற அவன் பாண்டவர்களிடமிருந்து வந்திருக்கிறான். ஓ! அரசரே! இவன் என்ன செய்ய வேண்டும்? கட்டளையிடும்' என்று சொன்னான். திருதராஷ்டிரன், (வாயில்காவலனை நோக்கி), 'நான் ஸௌக்கியமா யிருப்பதாகவும், எப்பொழுதும் பார்க்கக்கூடியவனா யிருப்பதாகவும் அந்த ஸஞ்சயனுக்குச் சொல்லு. அவனை வரச்சொல்லலாம். ஸஞ்சயனுக்கு நல்வரவா? நான் அவனுக்கு ஒருபொழுதும் பார்க்கக்கூடாதவனல்லேன். (ஆகையால்), அவன் என்ன காரணத்தால் என்னுடைய வாசலில் தடுக்கப்பட்டு நிற்கவேண்டும்?' என்று சொன்னான்.

உடனே, ஸூதபுத்திரனான ஸஞ்சயன், அரசனுடைய ஸம்மதத்தின்மேல், அறிவிற் சிறந்தவர்களும் சூரர்களும் பூஜ்யர்களுமான ஜனங்களாலே ரக்ஷிக்கப்பட்ட பெரிதான ராஜகிருகத்தில் பிரவேசித்து, அஞ்சலிசெய்துகொண்டு, ஸிம்மாஸனத்திலிருக்கிற விசித்திரவீரியன் புத்திரனான அரசனை அடைந்தான். அவன், திருதராஷ்டிரனை நோக்கி, 'ஓ! அரசரே! நான் ஸஞ்சயன். உமக்கு நமஸ்காரம். ஓ! நரபதியே! பாண்டவர்களிடம் சென்று வந்து சேர்ந்தேன். நல்லமனமுள்ள பாண்டுபுத்திரரான யுதிஷ்டிரர் உம்மை நமஸ்கரித்து க்ஷேமத்தையும் விசாரித்தார். அவர் ஸந்தோஷத்தை அடைந்து உம்முடைய புத்திரர்களையும் விசாரித்தார். ஓ! அரசரே! புத்தி

ரர்களோடும், பௌத்திரர்களோடும், இஷ்டர்களோடும், மந்திரிகளோடும் உம்மை அடுத்து ஜீவிக்கிறவர்களோடும் பிரீதி அடைகின்றீராவென்றும் வினவினர்' என்று சொன்னன்.

திருதராஷ்டிரன், 'அப்பா! ஸஞ்சய! குந்திபுத்திரனை அஜாதசத்ருவை ஸுகமாகச் சிலாகித்துக்கொண்டு உன்னிடம் சொல்லுகிறேன். கௌரவர்களுக்கு அரசனை அந்த யுதிஷ்டிரன் புத்திரர்களோடும் மந்திரிகளோடும் தம்பிமார்களோடும் க்ஷேமமா?' என்று கேட்டான். ஸஞ்சயன், 'பாண்டுபுத்திரரானவர் மந்திரிகளுடன் க்ஷேமமாயிருக்கிறார். உம்முடைய முன்னே தமக்கு எது ஏற்பட்டிருந்ததோ அதை அடைய விரும்புகிறார். அவர் தோஷமற்ற தர்மார்த்தங்களைச் செய்கிறவரும் நல்லமனமுடையவரும் நிரம்பக் கற்றவரும் நல்லஆலோசனையுள்ளவரும் சீலமுடையவருமாயிருக்கிறார். பாண்டவருக்குத் தயையானது பெரிதான தர்மம். அவருக்குப் பொருட்குவியலைக்காட்டிலும் தர்மமானது மேலானதென்று அபிப்பிராயம். ஓ! பாரதரே! அவருடைய புத்தியானது அதர்மமில்லாதவைகளும் அர்த்தத்துடன்கூடினவைகளுமான இன்பத்தையும் இஷ்டத்தையும் அனுஸரிக்கின்றது. மனிதன், கயிற்றால் கோக்கப்பட்ட மரத்தால்செய்த பெண்பாவைபோல், கடவுளால் ஏவப்பட்டு, பலவிதமாக வேலைசெய்கிறான். பாண்டவருடைய இந்த அடக்கத்தைப் பார்த்தும், பாவத்தை முடிவில் பயனாகவுடையதும் கோரமானதும் சொல்லத்தகாததுமான உம்முடைய இந்தத் தீயசெயலைப் பார்த்தும், மனிதமுயற்சியைக்காட்டிலும் தெய்வத்தின் செய்கையைப் பெரிதாக நினைக்கிறேன். எதுவரை மேலானசத்துருவானவன் (இவனிருக்கட்டுமென்று) விரும்புகிறானே அதுவரை இந்தமனிதன் கரைகடந்த புகழ்ச்சியை அடைகிறான். சத்துருக்களில்லாதவரும் வீரருமான யுதிஷ்டிரரோ, ஸர்ப்பமானது ஜீர்ணமும் பலமற்றதுமான சட்டையை விடுவதுபோலப் பாவத்தைத் தள்ளி, உம்முடையவிஷயத்தில் கெடுதலான காரியத்தைவிட்டுவிட்டு, பூஜ்யமான நடையோடிருப்பதை விரும்புகிறாரல்லரோ? ஓ! அரசரே! கஷ்டம்! உம்முடைய செய்கையைத் தர்மார்த்தங்களோடுகூடின பூஜ்யர்களுடைய நடத்தையைவிட்டு விலகினதாக அறியும். அரசரே! இம்மையில் நிந்தையை அடைந்தவருமாகிறீர்; மறுமையிலும் அதிகமான பாவமும் பற்றும். அப்படிப்பட்ட நீர், புத்திரன்வசத்தையடைந்து, அந்தப்பாண்டவர்களை விட்டு, ஸந்தேகத்துக்கிடமான பொருளை விரும்புகிறீர். இப்படிப்பட்ட உமக்குப் பூமியில் தர்மந்தவறினவரென்னும் பெரியசப்தமும்

ஏற்படும். ஓ! பாரதர்களில் சிறந்தவரே! இந்தக்காரியம் உமக்குச் சரியன்று. அறிவில்லாதவன், கெட்டகுலத்திற்பிறந்தவன், குரூரத் தன்மையுள்ளவன், நீடித்த வைரமுள்ளவன், க்ஷத்திரியருக்குரிய வித்தைகளில் தைரியமில்லாதவன், வீரியம்குறைந்தவன், சிஷ்டா சாரமில்லாதவன் இவ்விதத்தன்மையுள்ளவர்களை ஆபத்துக்கள் வந் தடையும். நல்லகுலத்தில் பிறந்தவனும் பலமுடையவனும் கீர்த்தியுடை யவனும் அதிகமாகக்கற்றவனும் ஸுகமாகஜீவிக்கிறவனும் மனத்தை அடக்கினவனுமான எவன் தர்மாதர்மங்கள் கலந்தவைகளென் னும் உறுதியுடனிருக்கிறானோ அவன் இந்தத்தெய்வத்தின் வசத் தால் (உண்டானதை) அடைகிறானல்லவா? சிறந்ததான ஆலோச னையையுடையவனும் மனத்தைவசம்செய்தவனும் ஆபத்தில் தர்மார்த் தங்களை நன்றாகச்சம்பாதிக்கின்றவனும் எல்லா ஆலோசனைகளும் குறையாதவனும் மூடத்தன்மையில்லாதவனுமென்று இவ்விதம் சொல்லப்பட்டமனிதன் எப்படி குரூரமான செய்கையைச் செய் வான்? உமக்கோ இந்தமந்திரிகள் சேர்ந்து காரியங்களில் எந்நாளும் முயற்சி செய்துகொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய உறுதியான இந்த நிச்சயமானது அவசியமாகக் கௌரவர்களின் நாசத்தின்நிமித் தம் ஏற்பட்டது. அஜாதசத்துரு ஒருகால் (உம்முடைய) கெட்டசெய் கையினால் உம்முடையவிஷயத்தில் கெட்டசெய்கையை விரும்பு வாரேயானால், அகாலத்தில் கௌரவர்கள் நசித்துவிடுவார்கள். தர்மபுத்ரர் உம்மிடத்தில் பாவத்தைவைத்துவிட்டு (த்தாம் பாவ மற்றவராவார்.) உலகத்தில் உமக்கு இந்த நிந்தையும் ஏற்படும். 1 தேவர்களுடைய விஷயத்தைக்காட்டிலும் மற்றதில் என்ன இருக் கிறது? தெய்வவசத்தால் பரலோகத்தைப் பார்ப்பதற்காகச் சென்ற வனும் (தேவர்களுக்கு) ஸம்மதனுமான அர்ஜுனனும் அவ்விதம் வன வாஸியானானென்பதனால், முயற்சி பயனற்றதென்பதில் ஸந்தேக மில்லை. மகாபலிசக்கரவர்த்தியோ, கர்மத்தால் செய்யப்பட்ட இந் தக்குணங்களையும், தற்காலமிருப்பவைகளும் நிலையற்றவைகளுமான செல்வத்தையும், வறுமையையும், கர்மாவினால் செய்யப்பட்டனவாக அறிந்து ஆலோசித்துப்பார்த்து முடிவைஅடையாமல் இந்தவிஷயத் தில் காலத்தைத்தவிர வேறுகாரணம் உண்டென்று நினைக்கவில்லை. கண், காது, மூக்கு, நா, துவக்கு இவைகள் பிராணியினுடைய ஞானத்திற்கு இருப்பிடம். இவைகள் ஆசைநசித்தபொழுது திருப் தியைஅடையவே அடைகின்றன. (ஆகையால்), வருத்தமில்லாத

1 'எல்லாம் தெய்வாதீனம்' என்பது.

வனும் துக்கமில்லாதவனுமாக அவைகளைப் பழக்கவேண்டும். மனிதனுடைய கர்மாவோ நன்றாகச்செய்யப்பட்டாலும் பலிக்கிறதென்றே நினைக்கவில்லை. தாய்தந்தையரிடமிருந்து பிறந்த குழந்தை, விதிப்படி, போஜனத்தினால் வளர்வதும் (முன்) வினையினாலேயே. ஓ! அரசரே! விருப்புவெறுப்புக்களும், ஸுகதுக்கங்களும், புகழ்ச்சி இகழ்ச்சிகளும் (மனிதனை) அடையவே செய்கின்றன. அன்னியனானவன் இவனைக் குற்றமேற்பட்டபொழுது நிந்திக்கிறான்; அவனையே நல்நடையோடிருக்கும்பொழுது ச்லாகிக்கிறான். ஆகையால், நான் உம்மைப் பாரதர்களுடைய விரோதத்தால் நிந்திக்கிறேன். இதோ பிரஜைகளுக்கு நாசமானது ஏற்படப்போகிறது; நிச்சயம். (ராஜ்யம் கொடுப்பதாகிய) இந்தக்காரியம் (உமக்குச்) சம்மதமில்லாவிடில், உமது குற்றத்தால், கிருஷ்ணவர்த்மாவென்கிற பெயருடைய அக்கினியானது காய்ந்ததிருணக்குவியலை எரிப்பதுபோலக் கிருஷ்ணனை வழிகாட்டியாகவுடைய அர்ஜுனன் கௌரவர்களை எரித்துவிடுவான். ஓ! அரசரே! நரச்ரேஷ்டரே! (ஒருகால்), நீர் ஒருவராகவே காமத்திலேயே மனமுடைய புத்திரன்வசத்தை அடைந்து எல்லா உலகத்திலும் (உம்மைக்) கிருதார்த்தராக நினைத்து, சூதாடும் ஸமயத்தில் சமனத்தை அடையாமலிருந்தீர். இதனுடைய கெட்டபயனைப் பாரும். ஓ! அரசரே! குருவம்சத்திலுதித்தவரே! நீர் வேண்டாதவர்களைச் சேர்த்துக்கொண்டதாலும் வேண்டியவர்களை விலக்கியதாலும் வலியற்றவராய், விரிவாயும் அளவற்றதாயுமிருக்கிற பூமியைக்காப்பதற்கு அசக்தராகிவிட்டீர். ஓ! நரச்ரேஷ்டரே! ரதத்தின்வேகத்தால் சரீரம் அலைக்கப்பட்டவனும் ச்ரமத்தை அடைந்தவனுமான நான் அநுமதிபெற்றுக்கொண்டு சயனத்தை அடைகிறேன். கௌரவர்கள் காலையில் ஸபையில்சேர்ந்து யுதிஷ்டிரர்சொன்ன வார்த்தையைக் கேட்பார்கள்' என்று சொன்னான்.

திருதராஷ்டிரன், 'ஓ! ஸூதபுத்திரா! உத்தரவுபெற்றுக்கொண்டு கிருகத்திற்குச் செல்லு; சயனம் செய்துகொள். கௌரவர்கள் காலையில் ஸபையில் உன்னால் சொல்லப்பட்ட அஜாதசத்துருவின் வார்த்தையைக் கேட்பார்கள்' என்று சொன்னான்.

ஸஞ்சயயானபர்வம் முற்றிற்று.

## முப்பத்துமூன்றுவது அத்யாயம்.

## ப்ரஜாகரபர்வம்.

(திருதராஷ்டிரன் கவலையால் நித்திரையற்று இரவில் விதுரரை அழைத்துத் துரியோதனுதியர் ஸுகமாகவாழ உபாயங் கேட்டதும், விதுரர் நீதிகளைக்கூறிப் பாண்டவர்களுக்கு ராஜ்யங்கொடுப்பதே உபாயமென்றதும்.)

பேரறிவுடையவனும் அரசனுமான திருதராஷ்டிரன், வாயில் காப்போனை நோக்கி, 'விதுரனைப் பார்க்க விரும்புகிறேன். அவனை இவ்விடம் அழைத்துவா. தாமதம் வேண்டாம்' என்று சொன்னான். திருதராஷ்டிரனால் அனுப்பப்பட்ட தூதன், விதுரரை நோக்கி, 'பேரறிவாளரே! ஐஶ்வர்யம் பொருந்திய நமது மஹாராஜர் உம்மைப் பார்க்க விரும்புகிறார்' என்று சொன்னான். இவ்விதம் சொல்லியதைக்கேட்ட விதுரரோ, ராஜமாளிகையை அடைந்து வாயில்காப்பவனை நோக்கி, 'திருதராஷ்டிரரிடம் என் வரவைத் தெரிவி' என்று சொன்னார். வாயில்காவலனும், திருதராஷ்டிரனிடத்தில், 'ஓ! ராஜஶ்ரேஷ்டரே! உம்முடையகட்டளைப்படி, இதோ விதுரர் கூடவே வந்துவிட்டார். உம்முடைய பாதங்களைத் தரிசிக்க விரும்புகிறார். என்னசெய்யவேண்டும்? எனக்குக் கட்டளையிடும்' என்று சொன்னான்.

திருதராஷ்டிரன், (வாயில் காவலனை நோக்கி), 'பேரறிவாளனும் தீர்க்கமான ஆலோசனையுள்ளவனுமான விதுரனை உள்ளேவிடு; நானோ இந்த விதுரனுக்கு ஒருபொழுதும் பார்க்கத் தகாதவனல்லேன்' என்று சொன்னான். (உடனே) காவற்காரன், விதுரரிடத்தில், 'ஓ! [1] க்ஷத்தாவே! புத்திமானான மகாராஜருடைய அந்தப்புரத்தில் போம். அரசர் உமக்கு ஒருபொழுதும் காணக்கூடாதவரல்லரென்றும் என்னிடம் சொன்னார்' என்று கூறினான். உடனே, விதுரர், திருதராஷ்டிரனுடைய அரண்மனையில் பிரவேசித்து, கவலையுற்றிருக்கும் அரசனை நோக்கி அஞ்சலிசெய்துகொண்டு, 'ஓ! மிக்க அறிவுடையவரே! உம்முடைய கட்டளையினால், நான் விதுரன் இதோ வந்திருக்கிறேன். ஏதாவது செய்யவேண்டுவது இருக்குமேயானால் என்னைக் கட்டளையிடும்' என்று சொன்னார்.

---

1 ஆதிபர்வம் 789-ம் பக்கம் பார்க்க.

திருதராஷ்டிரன், 'ஓ! விதுரா! ஸஞ்சயன் வந்துவிட்டான்; என்னைத் தூஷித்துவிட்டும் போய்விட்டான். அவன் யுதிஷ்டிரனுடைய வார்த்தையை நாளை ஸபையின் நடுவில் சொல்லுவான். கௌரவர்களிற் சிறந்தவனான அந்த யுதிஷ்டிரன் சொன்னவார்த்தையானது இப்பொழுது எனக்குத் தெரியவில்லை. அது என் அங்கங்களை எரிக்கின்றது. அது மிகவும் [1] ஜாக்கிரதைச் செய்துவிட்டது. அப்பா! [2] ஜாகரணத்தோடு கூடினவனும் எரிக்கப்படுகிறவனுமான எனக்கு எதை நன்மையென்று ஆலோசிக்கிறாயோ அதை நீ சொல்லு. நீ நம்முடைய தர்மார்த்தங்களில் ஸமர்த்தனல்லனோ? எப்பொழுது ஸஞ்சயன் பாண்டவர்களிடமிருந்து வந்தானோ அதுமுதல்தான் என் மனத்திற்கு வழக்கம்போலச் சாந்தியானது இல்லை. எல்லா இந்திரியங்களும் ஸ்வபாவம் மாறிவிட்டன. என்ன சொல்லப்போகிறானோ என்று இப்பொழுதே எனக்குப் பெரிய கவலை உண்டாகிவிட்டது. ஆகையால், ஓ! விதுர! நீ அஜாதசத்துருவினுடைய எல்லா அபிப்பிராயத்தையும் உண்மையாகச் சொல்லு. அப்பா! எவ்விதம் நமக்கு நன்மை உண்டாகுமோ, எல்லாப் பிரஜைகளும் ஸுகத்தை அடையுமோ அவ்விதத்தையும் சொல்லு' என்று சொன்னான்.

விதுரர், 'ஓ! அரசரே! வலிமையில்லாதவனும் யுத்தஸாதனங்கள் குறைந்தவனுமாயிருக்கையில் வலிய பகைவனால் எதிர்க்கப்பட்டவனையும், பொருளைப்பறிகொடுத்தவனையும், காமியையும், திருடனையும் ஜாகரணமானது வந்தடைகிறது. இந்தப் பெரியதோஷங்களாலே நீர் பரிசிக்கப்படாமலிருக்கிறீரா? பிறருடைய தனங்களில் ஆசைகொண்டு பரிதாபத்தை அடையாமலிருக்கிறீரா?' என்று கேட்டார். திருதராஷ்டிரன், 'தர்மத்திலிருந்து விலகாததும் சிறந்ததும் க்ஷேமத்தைச் செய்கிறதுமான உன்னுடைய வார்த்தையைக் கேட்க விரும்புகிறேன். இந்த ராஜரிஷிவம்சத்தில் நீ ஒருவனே விவேகிகளுக்கு ஸம்மதனானவனல்லனோ?' என்று சொன்னான். விதுரர், 'ஓ! திருதராஷ்டிரரே! ஜனங்களை ரஞ்சிப்பிக்கிறவனும் ராஜலக்ஷணங்கள் பொருந்தியவனுமான யுதிஷ்டிரன் மூன்று உலகத்திற்கும் அதிபதியாவான். உமக்கு [3] ஏவலாளியாயிருக்கிற அவன் (வனத்திற்கு) அனுப்பவேபட்டான். மிக்கவிபரீதரும் பார்க்கும் தன்மை இல்லாதவருமான நீர் ராஜ்யபாகத்தை அடையும் விஷயத்தில் ஒப்புக்கொள்ளப்படவில்லை. தர்மசித்தமுடையவனும், தர்மத்தை அறிந்த

---

1, 2 தூக்கமில்லாமை.

3 'எல்லாராலும் மிகவிரும்பப்பட்டவன்' என்பது பழையவுரை.

வனுமான யுதிஷ்டிரன், குரூரத்தன்மையில்லாததினலும் தயாளு வானதாலும் தர்மத்தாலும் ஸத்தியத்தாலும் பராக்கிரமத்தாலும் உம்மிடம் குருவென்னும் எண்ணத்தினலும் நன்ருக ஆலோசித்துப் பலகிலேசங்களைப்பொறுக்கின்ருன். துரியோதனன், சகுனி, கர்ணன், துச்சாஸனன் ஆகிய இவர்களிடம் ராஜாதிகாரத்தை வைத்து விட்டு நீர் எப்படி ஸம்பத்தை விரும்புகிறீர்? ஆத்மஜ்ஞானம், சரியானமுயற்சி, பொறுமை, தர்மத்தையே நித்தியமாயுடைய வனுயிருத்தல் இவைகள் எவனைப் புருஷார்த்தத்திலிருந்தும் நழுவச் செய்யவில்லையோ அவனே பண்டிதனுகச்சொல்லப்படுகிருன். ஓ! அரசரே! ஒரே மரத்திலிருந்து ஸ்ருக்கு, த்ரோணி, பேடீ, பீடனமென்கிற யாகபாத்திரங்கள் உண்டாகின்றன. மன்னரே! நான் சொல்லுகிற இந்தவார்த்தையினலே தெரிந்துகொள்ளும். ஒரே வஸ்துவிலிருந்தும் நல்லதும் கெட்டதும் உண்டாகின்றன. பண்டிதன் ஶ்லாக்கியமான காரியங்களைச் செய்வான்; நிந்திக்கப்பட்டவைகளைச் செய்யமாட்டான்; நாஸ்திகத்தன்மையில்லாதவனும் ஶ்ரத்தையுள்ள வனுமாயிருப்பான். இது பண்டிதனுடைய லக்ஷணம். கோபம், ஸந்தோஷம், மதம், லஜ்ஜை, வணக்கமில்லாமை, நான் பூஜ்யனென்கிற எண்ணம் இவைகள் எவனைப் புருஷார்த்தத்திலிருந்தும் நழுவச் செய்யவில்லையோ அவன் பண்டிதனுகச் சொல்லப்படுகிருன். எவனுடைய காரியத்தையோ, ரஹஸ்யமாகச் செய்யப்பட்ட ஆலோசனையையோ, பிறர் அறியாமல் அவன் செய்தபிறகே அறிகிருர்களோ அவனே பண்டிதனுகச் சொல்லப்படுகிருன். எவனுடைய காரியத்தைக் குளிரோ, வெப்பமோ, அச்சமோ, விளையாட்டோ, செல்வமோ, வறுமையோ தடைப்படுத்தவில்லையோ அவனே பண்டிதனுகச் சொல்லப்படுகிருன். பரவுகிறதான எவனுடைய பிரஜ்ஞையானது தர்மார்த்தங்களை அனுஸரித்திருக்கிறதோ, எவன் இம்மை மறுமைகளின் நிமித்தம் பொருளைத் தேடுகிருனே, அவனே பண்டிதனுகச் சொல்லப்படுகிருன். தேர்ந்த அறிவுள்ள மனிதர்கள் சக்திக்குத்தக்கபடி காரியத்தைச் செய்யவிரும்புகிருர்கள்; சக்திக்குத்தக்கபடி செய்யவும் செய்கிருர்கள்; ஒன்றையும் (அவமதிப்ப தில்லை). பண்டிதன் சீக்கிரம் அறிகிருன்; வெகுகாலம் கேட்கிருன்; விஷயத்தைத் தெரிந்துகொண்டு அடைகிருன்; ஆசையால் அடைகிற தில்லை. பிறனுடையவிஷயத்தில் கேட்கப்படாமல் சொல்லுகிறதில்லை. அது பண்டிதனுடைய முதன்மையான லக்ஷணம். தேர்ந்தஅறி வுள்ளமனிதர்கள் அடையமுடியாததை விரும்புகிறதில்லை. கெட்டுப்

போனதைநினைத்துத் துக்கப்படுவதில்லை. ஆபத்துக்காலங்களிலும் மயங்குகிறதில்லை. எவன் உறுதிசெய்துகொண்டு ஆரம்பித்துக் காரியத்தின்மத்தியில் விட்டுவிடுகிறதில்லையோ, காலத்தை வீணைகப் போக்காதவனும் மனத்தைவசப்படுத்தியவனுமான அவனே பண்டிதனைகச் சொல்லப்படுகிறுன். ஓ! பாதஸ்ரேஷ்டரே! பண்டிதர்கள் சிறந்தகாரியத்தில் விருப்பங்கொள்ளுகிறுர்கள்; ஸம்பத்திற்குரிய கர்மங்களைச் செய்கின்றுர்கள்; நன்மையான காரியத்தில் வெறுப்பு அடைகிறதில்லை. எவன் தன்னைக் கௌரவித்தபொழுது ஸந்தோஷிக்கவில்லையோ, அவமானத்தால் தாபத்தை அடைகிறதுமில்லையோ கங்கையின் மடுவைப்போலக்கலக்கமுடியாதவனுயிருக்கிறுனே, அவன் பண்டிதனைகச் சொல்லப்பகிறுன். எல்லாப்பிராணிகளுடைய தன்மையையும் அறிந்தவனும் எல்லாக்கர்மங்களுடைய முறையையும் அறிந்தவனும் உபாயத்தை அறிந்தவனுமான மனிதன், மனிதர்களுள் பண்டிதனைகச் சொல்லப்படுகிறுன். தடையில்லாத வாக்குடையவனும், விசித்திரமாகப் பேசுகிறவனும், ஊஹமுடையவனும், காலோசிதமாகத்தோன்றும் புத்தியையுடையவனும், சீக்கிரமாகக் கிரந்தத்தைச் சொல்லுகிறவனுமாயிருப்பவன் பண்டிதனைகச் சொல்லப்படுகிறுன். எவனுடைய சாஸ்திராப்பியாஸமானது தன்னுடைய கொள்கையை ஒத்திருக்கிறதோ, கொள்கையும் சாஸ்திராப்பியாஸத்தை ஒத்தேயிருக்கிறதோ, எவன் ஆர்யர்களுடைய முறையை மீறுமலிருக்கிறுனே, அவன் பண்டிதனென்கிற பெயரை அடைகிறுன். எவன் அதிகமான தனத்தையும் கல்வியையும் அதிகாரத்தையும் அடைந்தும், கர்வமில்லாதவனைக ஸஞ்சரிக்கின்றுனே அவன் பண்டிதனைகச் சொல்லப்படுகிறுன்.

சாஸ்திரத்தை அப்பியஸியாதவனுயிருந்தும் கர்வங்கொண்டவனும், தரித்திரனுயிருந்தும் ஔதார்ய முடையவனும், இழிவான காரியத்தினுல் செல்வத்தை அடைய விரும்புகிறவனுமானவன் பண்டிதர்களாலே மூடனைகச்சொல்லப்படுகின்றனன். எவன் தன்னுடைய காரியத்தை விட்டுவிட்டுப் பிறனுடைய காரியத்தைச் செய்கிறுனே, மித்திரன்விஷயத்தில் கபடமாக நடக்கிறுனே அவன் மூடனைகச் சொல்லப்படுகிறுன். எவன் தன்னிடம் விருப்பமில்லாதவர்களை விரும்புகிறுனே, (தன்னை)விரும்புகிறவர்களை விட்டுவிடுகிறுனே, வலியவனைப் பகைத்துக்கொள்ளுகிறுனே அவனை மூடபுத்தியுடையவனைகச் சொல்லுகிறுர்கள். எவன் பகைவனை மித்திரனைகச் செய்கிறுனே, நண்பனைப் பகைத்து அவனுக்குத் துன்பமும் செய்கிறுனே, தீயசெயலை

யும் செய்யத்தொடங்குகிருனே அவனை மூடபுத்தியுடையவனுகச் சொல்லுகிருர்கள். ஓ! பரதஸ்ரேஷ்டரே! எவன் காரியங்களைப் 1 பெருகச் செய்கிருனே, எல்லாக்காரியத்திலும் ஸந்தேகிக்கிருனே, சீக்கிரம் செய்யவேண்டிய காரியத்தில் தாமதத்தைச் செய்கிருனே அவன் மூடன். எவன் பிதிருக்களுக்கு ஸ்ராத்தத்தைச் செய்கிற தில்லையோ, தேவதைகளைப் பூஜிக்கிறதில்லையோ, நல்லமனமுடைய மித்திரனை அடைகிறதில்லையோ அவனை மூடபுத்தியுள்ளவனுகச் சொல்லுகிருர்கள். மூடபுத்தியுடைய கெட்டமனிதன், அழைக்கப்படாமல் பிரவேசிக்கிருன்; கேட்கப்படாமலே, அதிகமாகச் சொல்லு கிருன்; (தன்னிடம்) நம்பிக்கையில்லாதவனிடம் நம்பிக்கை வைக் கிருன். எந்த மனிதன், தான் அவ்விதமிருந்துகொண்டு பிறனைத் தோஷத்தினுல் நிந்திக்கிருனே, சக்தியில்லாதவனுயிருந்துகொண்டு கோபிக்கிருனே அவன் மிகவும்மூடன். தன்பலத்தை அறியாமல் தர்மார்த்தங்களில்லாததும் அடையமுடியாததுமான விஷயத்தை முயற்சியில்லாமலே விரும்புகிறவன் இவ்வுலகில் மூடபுத்தியுடையவ னுகச் சொல்லப்படுகிருன். ஓ! அரசரே! எவன் உபதேசிக்கக் கூடாதவனுக்கு உபதேசிக்கிருனே, உபதேசிக்க வேண்டியவனுக்கு உபதேசிக்கவில்லையோ, லோபியை உபாஸிக்கிருனே, அவனை மூட புத்தியுடையவனுகச் சொல்லுகிருர்கள். அடுத்தவர்களுக்குப் பங்கிட் டுக்கொடாமல் எவன் சிறந்த உணவுப்பொருளை ஒருவனுகப் புஜிக் கிருனே, சிறந்தவஸ்திரத்தையும் ஒருவனுகவே உடுக்கிருனே அவ னைக்காட்டிலும் மிகவும் கொடியவன் எவன் இருக்கிருன்? 2 ஒருவன் பாவங்களைச் செய்கிருன்; ஜனங்களுடைய ஸமூகமானது பயனை அனுபவிக்கிறது. பயனை அனுபவிக்கிறவர்கள் விடுபடுகிருர்கள். செய்தவன் தோஷத்தால் பற்றப்படுகிருன். வில்லாளியால் விடப் பட்ட பாணமானது ஒருவனைக் கொல்லும்; அல்லது கொல்லாமலு மிருக்கும். புத்திமானுலே பிரயோகிக்கப்பட்ட புத்தியானது அரச னேடு ராஜ்யத்தையும் அழிக்கும். ஒரு புத்தியினுலே காரியா காரியங்களிரண்டையும் நிச்சயித்து (சத்துரு மித்திரன் உதாஸீனன்) மூன்று பேர்களையும் (ஸாம தான பேத தண்டங்களாகிய) நான்குக

---

1 'பிறரைக்கொண்டு செய்விக்கிருனே' என்பது பழையவுரை.

2 'ஒருவன் பாவமாகிய தீங்கைச்செய்கிருன். அத்தீங்கினுல் வரும் துன்பத்தைப் பலர் அனுபவிக்கின்றனர். அத்தீங்கினுல் கிடைத்த லாபத்தை அவனைச்சார்ந்த சிலர் அனுபவிக்கின்றனர். பாவப்பயன் அவர் களுக்கில்லை. செய்தவனே பாவத்தால் வரும் தண்டனையாகிய பயனை அடைகிருன்' என்பது.

ளாலும் வசம்பண்ணக்கடவீர். (இந்திரியங்கள்) ஐந்தையும் ஜயித்து, (ஸந்தி விக்கிரகம் முதலான) ஆறினையும் அறிந்து (ஸ்திரீ, சூதாட்டம், வேட்டை, மதுபானம், கடுஞ்சொல், கடுந்தண்டனை, தனத்தை வீணாக்கு தல் இவ்) ஏழையும் தள்ளி ஸுகத்தைஅடைவீராக. விஷத்தின் ரசமானது ஒருவனைக் கொல்லுகிறது. ஆயுதத்தால் ஒருவன் கொல்லப்படுகிறான். தவறான ஆலோசனையானது ராஜ்யத்தோடும் பிரஜைகளோடும் அரசனைக் கொல்லும். ருசியான பதார்த்தத்தை ஒருவனாகப் புஜிக்கக் கூடாது. ஒருவனாக விஷயங்களை ஆலோசிக்கக்கூடாது. ஒருவனாக வழி போகக்கூடாது. தூங்குகிறவர்களின் நடுவில் ஒருவனாக விழித்திருக்கக்கூடாது. ஓ! அரசரே! எந்த ஒன்றை நீர் அறியவில்லையோ அது இரண்டற்று ஒன்றாகவே இருக்கிறது. அந்த ஸத்தியமானது, ஸமுத்திரத்திற்கு ஓடம்போல், ஸ்வர்க்கத்திற்குப் படியாயிருக்கிறது. பொறுமையுள்ளவர்களுக்குப் பொறுமையுள்ளவனாயிருக்கிற இவனை ஜனங்கள் சக்தியில்லாதவனாக நினைக்கிறார்களென்கிறதொன்றே தோஷம். இரண்டாவது தோஷம் அடையப்படுகிறதில்லை. அவனுக்கு அது தோஷமாகக் கருதத்தக்கதன்று. பொறுமையானது பெரிய பலமன்றோ? சக்தியில்லாதவர்களுக்குப் பொறுமையானது குணமாகிறது. சக்தியுள்ளவர்களுக்கும் பொறுமை அலங்காரம். உலகத்தில் பொறுமையானது வசப்படுத்துவதாகும். பொறுமையால் எதுதான் சாதிக்கப்படுகிறதில்லை? எவனுடைய கையில் சாந்தியாகிற கத்தி இருக்கிறதோ அவனைத் துர்ஜனன் என்ன செய்வான்? கூளமில்லாத இடத்தில் விழுந்த தீயானது தானே அவிகிறது. பொறுமையில்லாதவன் தன்னையுமே மிக்கதோஷங்களோடு சேர்ப்பிப்பான். தர்மமொன்றே சிறந்ததான நன்மை. பொறுமை ஒன்றே உத்தமமானசாந்தி. வித்தையொன்றே மேலான திருப்தி. அஹிம்ஸை ஒன்றே ஸுகத்தைக்கொடுக்கிறது. (சத்துருக்களிடம்) விரோதத்தைச்செலுத்தாத அரசன், தீர்த்தயாத்திரைக்குப்போகாத பிராமணன் இவ்விருவர்களையும், ஸர்ப்பமானது எலிகளைத் தின்பது போல, பூமியானது தின்றுவிடுகிறது. கடுமையாக ஒருவார்த்தையும் சொல்லாமலிருப்பதும், அஸத்துக்களைப் பூஜியாமலிருப்பதுமாகிய இவ்விரண்டுகாரியங்களையும் செய்கிறமனிதன் இவ்வுலகத்தில் விளக்கமடைகிறான். ஓ! ஆண்மையிற்சிறந்தவரே! இச்சிக்கப்பட்டவைகளையே இச்சிக்கின்ற ஸ்திரீகளும் பூஜிக்கப்பட்டவர்களையே பூஜிக்கின்ற மூடர்களுமாகிய இவ்விருவரும் பிறர்களிடம் நம்பிக்கையை வைக்கின்றவர்கள். தனமில்லாதவனுடைய விருப்பமும், சக்தியில்லாதவனுடைய கோபமும், கூர்மையானவைகளும் சரீரத்தை உலரச்செய்

கின்றவைகளுமான முள்ளுகள். முயற்சியில்லாத கிருகஸ்தனும் காரியங்களோடுகூடிய ஸங்யாஸியுமாகிய இருவர்களுமே மாறுபட்ட செய்கைகளாலேயே விளக்கம் அடைவதில்லை. ஓ! அரசரே! சக்தியுள்ளவனுயிருந்தும் பொறுமையுடன்கூடினவனும், தரித்திரனுயிருந்தும் தானம்செய்கிறவனும் ஆகிய இவ்விரண்டு மனிதர்களும் ஸ்வர்க்கத்தின்மேலே இருக்கிறார்கள். நியாயமாகவந்தபொருளுக்கு அபாத்திரத்தில் கொடையும், பாத்திரத்தில் கொடாமையுமாகிய இரண்டும் தவறுதல்களாக அறியத்தக்கவைகள். தானம்செய்யாத தனவானும் தவம்புரியாத தரித்திரனுமாகிய இருவர்களையும் கழுத்தில் பாரமானகல்லைக்கட்டி ஜலத்தில் ஆழ்த்தவேண்டும். ஓ! புருஷஸ்ரேஷ்டரே! யோகத்துடன்கூடின யதியும் போரில் எதிர்முகனுகநின்று கொல்லப்பட்டவனுமாகிய இவ்விருவர்களும் (ஸ்வர்க்கத்திற்கு வழியான) ஸூரியமண்டலத்தைப் பிளக்கின்றார்கள். ஓ! பரதஸ்ரேஷ்டரே! மனிதர்களுக்கு [1] உத்தமம் [2] மத்தியமம் [3] அதமமென்றுமூன்று நியாயங்கள் கேட்கப்படுகின்றன. இவ்விதம், வேதவித்துக்கள் அறிகின்றார்கள். ஓ! அரசரே! மனிதர்கள் உத்தமர், மத்தியமர், அதமரென மூன்றுவகையினராவர். அவர்களை முறைப்படி மூன்றுவிதமான கர்மங்களிலேயே சேர்ப்பிக்கவேண்டும். ஓ! அரசரே! மனைவி, வேலைக்காரன், மகன் ஆகிய மூவருமே (தமக்கெனத்) தனமில்லாதவர்கள். அவர்கள் அடையும்பொருள் அவர்கள் யாரைச்சார்ந்தவரோ அவருடையதே. பிறர்பொருளை அபகரிப்பதும், பரதாரங்களைச் சேருவதும், அன்புள்ளவனைத்தள்ளுவதுமாகிய மூன்றுதோஷங்களும் நாசத்தைச் செய்யும். காமம், குரோதம், லோபம் என்னும் இவை நரகத்தின் மூன்றுவித வாயில்கள்; ஆத்மநாசத்திற்குக் காரணமானவை. ஆகையால், இம் மூன்றையும் தள்ளவேண்டும். ஓ! பாரதரே! [4] வரம்பெறுதல், அரசனுதல், புத்திரனுண்டாதல், [5] ஸ்ரமப்பட்டுச் சத்துருவினிடமிருந்துவிடுபடுதல் (இந்தநான்கும்) ஸமமானவை. அடுத்தவன், அடுக்கிறவன், உம்மைச் சேர்ந்தவனுகிறேனென்று சொல்லுகிறவனுகிய சரணமடைந்த இம்மூவரையும் (தனக்குச்) சங்கடம் நேரிட்டகாலத்திலும் கைவிடக்கூடாது. மிக்கபலசாலியான அரச

---

1 ஸமாதானம். 2 தானபேதங்கள். 3 யுத்தம்.

4 'வரப்ரதானம்' என்பது மூலம். 'வரங்கொடுப்பது' என்பது நேரான பொருள்.

5 'பகைவனுகிய யுதிஷ்டிரனைத் தன்கோத்ரத்தார்களைத் தான் கொல்லுவதினின்றும் விடுவிப்பது' என்பது பழையவுரை.

ளுலே நான்குகாரியங்கள் தள்ளத்தக்கவைகளென்று சொல்லுகிறார்கள். பண்டிதனானவன் அவைகளைத் தெரிந்துகொள்ளவேண்டும். புல்லறிவினரோடும், விரைந்துசெய்யவேண்டிய காரியத்தில் தாமதமான முயற்சியுள்ளவர்களோடும், சோம்பேறிகளோடும், [1] சாரணர்களோடும் ஆலோசனை செய்யக்கூடாது. ஐயா! கிருகஸ்த தர்மத்திலிருந்துகொண்டு செல்வத்துடன் கூடினவராயிருக்கிற உம்முடைய கிருகத்தில் [2] வயதுமுதிர்ந்த ஞாதியும், செல்வங்தளர்ந்துபோன குலீனனும், ஏழையான நண்பனும், புத்திரனில்லாத ஸஹோதரியும் ஆகிய நான்கு பேர்களும் வஸிக்கவேண்டும்.

ஓ! மஹாராஜரே! ப்ருகஸ்பதியானவர் (தம்மிடம்) வினவிய இந்திரனை நோக்கி நான்குகளை உடனே பலிக்கின்றவைகளாகச் சொன்னார். தேவதைகளுடைய ஸங்கற்பம், புத்திமான்களுடைய மகிமை, வித்தியாப்பியாஸம் செய்தவர்களுடைய விநயம், பாபிகளுடைய [3] நாசகர்மம்ஆகிய இவைகளை என்னிடமிருந்து தெரிந்துகொள்ளும். அக்கினிஹோத்திரம், மௌனம், அத்தியயனம், யஜ்ஞமென்கிற நான்கு கர்மங்களும் அபயத்தைச் செய்கின்றவைகள், அவைகள் வேறுவிதமாகக் கௌரவத்திற்காகச் செய்யப்பட்டால் பயத்தைக் கொடுக்கின்றன. ஓ! பரதஸ்ரேஷ்டரே! பிதா, மாதா, அக்னி, ஆத்மா, குருவென்கிற ஐந்து அக்கினிகள் மனிதனால் முயற்சியுடன் பணிவிடைசெய்யப்படத்தக்கவைகள். உலகத்தில் தேவர்கள், பிதிருக்கள், மனுஷியர்கள், யதிகள், அதிதிகள் ஆகிய ஐந்துவகையார்களையுமே பூஜிக்கிறவன் மிக்கபுகழை அடைகிறான். எங்கெங்கே போவீரோ அங்கங்கெல்லாம் மித்திரர்கள், சத்துருக்கள், மத்தியஸ்தர்கள், ஆஸ்ரயிக்கப்படவேண்டிய பெரியோர்கள், ஆஸ்ரயித்தவர்கள் ஆகிய ஐந்துபேர்களும் உம்மைப் பின்தொடர்வார்கள். ஐந்து இந்திரியங்களையுடைய மனிதனுடைய ஓர் இந்திரியமானது துவாரமாகுமேயானால் (=விஷயத்தில் பற்றுமேயானால்,) அதன் வழியாக இவனுடைய அறிவானது தோலால் செய்யப்பட்ட (ஓட்டைப்) பாத்திரத்திலிருந்தும் ஜலம் நழுவுவதுபோல் வெளியில் நழுவிவிடும். ஸம்பத்தை விரும்புகிற மனிதனாலே அதிக நித்திரை, சோம்பல், பயம், குரோதம், முயற்சியின்மை, விரைந்து

---

1 ஸ்தோத்ரம் செய்பவர்கள்.

2 'முதியவனான ஞாதி குலதர்மங்களை உபதேசிப்பான்; குலீனன் குழந்தைகளுக்கு நல்லபழக்கங்களைக் கற்பிப்பான்; நண்பன் நன்மையைச் சொல்லுவான்; ஸகோதரி பொருளைக் காப்பாற்றுவாள்' என்பது பழையவுரை. 3 திருட்டுமுதலியன.

செய்யாமை என்கிற ஆறுதோஷங்களும் தள்ளத்தக்கவைகள். மனிதன் நன்றாகச்சொல்லாதவனான ஆசாரியனையும், அத்தியயனம் செய்யாத ரித்விக்கையும், ரக்ஷிக்காத அரசனையும், அப்பிரியமாகப் பேசுகிற மனைவியையும், கிராமத்தைவிரும்புகிற இடையனையும், வனத்தைவிரும்புகிற க்ஷௌரகனையும் இவ்வாறு பேர்களையும் ஸமுத்திரத்தில் உடைந்ததோணியைத் தள்ளுவதுபோலத் தள்ளவேண்டும். மனிதனாலே உண்மையுரைத்தல், ஈதல், சோம்பலில்லாமை, அஸூயையில்லாமை, பொறுமை, தைரியம் ஆகிய ஆறுகுணங்களும் ஒருபொழுதும் விடத்தக்கவைகளல்ல. ஓ! அரசரே! எந்நாளும் தனத்தின் வரவு, நோயற்றிருத்தல், அன்புடையவளும் பிரியமாகப்பேசுகிறவளுமான மனைவி, வசப்பட்டவனான புத்திரன், தனத்தைச்செய்கிற வித்தை இவை ஆறும் மனிதவர்க்கத்திற்கு ஸுகத்தைக் கொடுக்கின்றவைகள். மனத்தில் நித்தியமாயிருக்கிற (காமம், குரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸரியம்) இவ்வாறினையும் அடக்குந்தன்மையை எவன் அடைகிறானோ, இந்திரியங்களை ஜயித்தவனான அவன் பாபங்களோடு கூடுகிறதில்லை. அவன் அனர்த்தங்களை என்னகாரணத்தால் அடைவான்? பின்வரும் ஆறுபேர்களும் ஆறு பேர்களிடத்தில் ஜீவிக்கிறார்கள். ஏழாமவன் அறியப்படவில்லை. (என்னவெனில்) திருடர்கள் அஜாக்கிரதையுள்ளவனிடமும், வைத்தியர்கள் நோயாளிகளிடமும், ஸ்திரீகள் காமிகளிடமும், யாகம்செய்விப்பவர்கள் யாகம்செய்பவர்களிடமும், அரசன் வழக்காளிகளிடமும், பண்டிதர்கள் மூடர்களிடம் எப்பொழுதும் ஜீவிக்கிறார்கள். பசுக்கள், ஊழியம், வேளாண்மை, மனைவி, கல்வி, சூத்திரருடைய சேர்க்கை இவ்வாறும் ஒரு முகூர்த்தம் பாராவிட்டால் நசிக்கின்றன. கற்பிக்கப்பட்ட சிஷ்யர்கள் ஆசாரியனையும், தாரத்தை அடைந்தவர்கள் மாதாவையும், காமம் நீங்கினவர்கள் நாரியையும், பயனை அடைந்தவர்கள் உதவிசெய்தவனையும், கரையையடைந்தவர்கள் தோணியையும், வியாதிநீங்கினவர்கள் வைத்தியனையுமாக (முன்முன்சொல்லப்பட்ட) இவ்வாறுபேர்களும் முன்னம் உபகரித்தவர்களான (பின்பின்சொல்லப்பட்ட) ஆறுபேர்களையும் அவமதிக்கின்றார்கள். ஓ! அரசரே! நோயின்மை, கடனில்லாமை, பரதேசவாஸமில்லாமை, ஸத்துக்களான மனுஷியர்களுடன் சேர்க்கை, [1]தன்புத்தியால் ஏற்பட்டஜீவனம், பயமில்லாதவாஸம் இவ்வாறும் ஜீவர்களுக்கு ஸுகஸாதனங்கள். பொறாமை

---

[1] 'தன் புத்திக்கு நிச்சயமாகத் தோற்றுகிறபடியே நடத்தல்' என்பது பழையவுரை.

புடையவனும் அருவருப்புள்ளவனும் திருப்தியில்லாதவனும் கோபிஷ்டனும் எப்பொழுதும் சங்கைப்படுகிறவனும் பிறனுடைய பாக்கியத்தை அடுத்துப்பிழைப்பவனும் இவ்வாறுபேர்களும் எந் நாளும் துக்கமுள்ளவர்கள். வேரூன்றின அரசர்களையும் பெரும் பாலும் நாசத்தைஅடையும்படி செய்கின்றவைகளும் வியஸனத்திற் குக் காரணமுமானஸ்திரீகள், சூது, வேட்டை, பானம், கடுஞ்சொல், பெரிதும் கடுமையுமான சிக்ஷை, தனத்தைவீணுக்குதல் என்கிற ஏழு தோஷங்களும் எப்பொழுதும் அரசனால் தள்ளத்தக்கவைகள். பிரா மணர்களை (த்தானுக) முதலில் துவேஷிப்பதும், பிராமணர்களால் விரோதிக்கப்படுவதும், பிராமணர்களின் பொருளைக் கவர்வதும், பிராமணர்களைக் கொல்லவிரும்புவதும், அவர்களைத் தூஷிப்பதில் மகிழ்வதும், அவர்களைப் புகழ்வதில் மகிழாதிருப்பதும், செய்ய வேண்டிய காரியங்களில் அவர்களை நினையாதிருப்பதும், அவர்கள் யாசிக்கையில் அஸூயையடைவதுமான எட்டும் ஒரு மனிதன் அடைகிற நாசத்திற்கு முன்னுண்டாகும் குறிகள். அறிவுடைய வனுன மனிதன் புத்தியால் இந்தத் தோஷங்களை அறிந்து நீக்க வேண்டும். ஓ! பாரதரே! நண்பர்களுடன் சேர்க்கையும், அதிகமான தனலாபமும், புத்திரனுடைய ஆலிங்கனமும், அன்பு ஒத்த ஸ்திரீ புருஷர்களின்சேர்க்கையும், ஸமயத்தில் பிரியமான ஸல்லா பமும், தன்னுடைய கூட்டத்தார்களுள் மேன்மையும், இஷ்டமான வஸ்துவின் லாபமும், ஜனஸங்கத்தில் மரியாதையும், இவ்வெட்டும் ஸந்தோஷத்திற்கு வெண்ணெய் போன்றனவாகக் காணப்படுகின்றன. அவைகளே தனக்கு ஸுகத்தை அளிக்கின்றவைகளாயுமிருக்கின்றன. அறிவு, நற்குடிப்பிறப்பு, அடக்கம், கல்வி, பராக்கிரமம், மிதமான வார்த்தை, சக்திக்குத்தக்கபடி தானம், செய்ந்நன்றிஅறிதல் (இந்த) எட்டுக்குணங்களும் மனிதனை விளங்கச்செய்கின்றன. எந்த வித் வான் ஒன்பது துவாரமுடையதும் [1] (இடை, பிங்கலை, ஸுஷும்னை யென்கிற) மூன்று தூண்களுள்ளதும் [2] இந்திரியங்களாகிற ஐந்து [3] ஸாக்ஷிகளையுடையதும் ஜீவனால் வசிக்கப்பட்டதுமான இந்த (ச்சரீ ரமாகிற) கிருகத்தை அறிந்தானே அவன் சிறந்த அறிவுள்ளவன். ஓ! திருதராஷ்டிரரே! பத்துப் பேர்கள் தர்மத்தை அறிகிற தில்லை. அவர்களைத் தெரிந்து கொள்ளும். அவர்கள் மதங்

1 'வாதபித்தஸ்லேஷ்மங்கள்' என்பது பழையவுரை.

2 'இந்திரியங்களின் விஷயங்களாகிற' என்பது பழையவுரை.

3 பார்க்கிறவர்கள்.

கொண்டவன், அஜாக்கிரதையுடையவன், பித்தன், களைப்படைந்தவன், கோபத்தையடைந்தவன், பசித்தவன், அவஸரக்காரன், லோபி, பயந்தவன், காமி ஆகிய இப்பதின்மரும் ஆவர். ஆகையால், பண்டிதனானவன் (மதமுதலான) இந்தவிஷயங்களில் [1] விழக்கூடாது. இந்த விஷயத்திலேயே அஸுர ஸ்ரேஷ்டனான ப்ரஹ்லாதனுக்கும் ஸுதந்வாவுக்கும் ப்ரஹ்லாதபுத்ரன்விஷயமாக நடந்த வார்த்தையான பழமையான இந்த இதிஹாஸத்தைச் சொல்லுகிறார்கள். எந்த அரசன் காமக்ரோதங்களை முழுதும் தள்ளுகிறானோ (நல்ல) பாத்திரத்தில் தனத்தை அளிக்கிறானோ, விசேஷங்களை அறிந்தவனும் சாஸ்திரத்தைக் கற்றவனும் (கார்யத்தை) விரைந்து செய்கிறவனுமாயிருக்கிறானோ அவனை எல்லா மனிதர்களும் [2] பிரமாணமாகச் செய்கிறார்கள். எவன் மனுஷியர்களை விசுவாஸம் வரச்செய்வதற்கு அறிகிறானோ அறியப்பட்ட தோஷமுடையவர்களிடத்தில் சிக்ஷையைச் செய்கிறானோ, சிக்ஷையின் அளவையும் [3] பொறுமையையும் அறிகிறானோ அவ்விதமான அவனை நிரம்பினசெல்வம் அடைகிறது. பகைவரின் தவறுதலைப்பார்ப்பதில் விழித்திருந்துகொண்டு புத்திபூர்வகமாகப் பகைவனை அடுக்கிறவனும், சிறிதும் பலமில்லாதவனாயிருக்கிற ஒரு பகைவனையும் அலக்ஷியம் செய்யாதவனும், பலசாலிகளோடு யுத்தத்தைவிரும்பாதவனும், ஸமயத்தில் பராக்கிரமத்தை வெளிப்படுத்துகிறவனுமாயிருப்பவனே தீரன். காரியத்தில் துரந்தரனும், ஆபத்தை அடைந்தபொழுதும் ஒருகாலும் துன்பத்தை அடையாதவனும், அஜாக்கிரதையில்லாமல் பிரவிருத்தியைத்தேடுகிறவனும், துக்கம் நேரிட்டபொழுது பொறுப்பவனுமாயிருக்கும் மகாத்மாவால் பகைவர்கள் ஜயிக்கப்பட்டவர்களாவார்கள். எவன் வீட்டைவிட்டுப் பயனில்லாமல் தேசாந்திரம் செல்வதையும், பாவிகளுடன்சேர்க்கையையும், பிறர்மனைவியைச் சேர்தலையும், டம்பத்தையும், திருட்டையும், கோள்சொல்லுவதையும், மதுபானத்தையும் செய்யவில்லையோ அவன் எப்பொழுதும் ஸுகியாயிருப்பான். மூடனல்லாதவன் தர்மார்த்தகாமங்களைப் படபடப்பாக ஆரம்பிக்கிறதில்லை; அழைத்துக் கேட்கப்பட்டால் உண்மையையே சொல்லுவான்; மித்திரன்விஷயத்தில் விவாதத்தை விரும்புகிறதில்லை. பூஜிக்கப்படாவிட்டாலும் கோபிக்கிறதில்லை. எவன் அஸூயை அடைகிறதில்லையோ, தயைசெய்கிறானோ, பலமில்லாதவனாயிருக்கையில் விரோ

1 சம்பந்திக்கக் கூடாது.

2 'அவனைப் பார்த்து நடக்க நிச்சயிக்கிறார்கள்' என்பது கருத்து.

3 குற்றவாளிகளாயினும் சிக்ஷிக்கத் தகாதவரைச் சிக்ஷியாமை.

த்தைச் செய்வதில்லையோ, ஒன்றையும் அதிகமாகச் சொல்லுகிற தில்லையோ, விவாதத்தை ஸஹிக்கிறானோ அப்படிப்பட்டவன் எங்கும் புகழ்ச்சியையடைகிறான். எவன் ஒரு பொழுதும் கர்வத்தைக்காட்டும் வேஷத்தைச் செய்துகொள்ளுகிறதில்லையோ, பௌருஷத்தால் பிறரிடம் தற்புகழ்ச்சி செய்துகொள்ளுகிறதில்லையோ, மிஞ்சினவனுக்குச் சிறிதும் கடுமையான வார்த்தைகளைப் பேசுகிறதில்லையோ அவனை மனிதன் எப்பொழுதும் பிரியனாகச் செய்கிறானல்லவா? அடங்கின வைரத்தை வளரச்செய்யாதவனும் கொழுப்பையடையாதவனும் பொறுமையை அடைந்தவனும் வறுமையடைந்திருக்கிறேனென்று அகாரியத்தை செய்யாதவனுமாயிருப்பவனை ஆரியர்கள் மிகவும் ஆரியர்களுடைய சீலமுடையவனாகச் சொல்லுகிறார்கள். தனக்கு ஸுகமுண்டானபொழுது ஸந்தோஷத்தை அடையாதவனும், பிறருக்குத் துக்கமேற்பட்டபொழுதும் ஸந்தோஷத்தை அடையாதவனும், கொடுத்துவிட்டுப் பிறகு பச்சாத்தாபப்படாதவனுமாயிருப்பவன் ஸத்புருஷனாகவும் புகழத்தக்க ஒழுக்கமுடையவனாகவும் சொல்லப்படுகிறான். தேசாசாரங்களையும், (அங்குள்ள) கொள்கைகளையும், ஜாதிகளின் தர்மங்களையும் அறிகிறவனும் ஏற்றத் தாழ்வறிந்தவனுமாயிருப்பவன் முன்னுக்கு வருகிறான். அவன் எங்கேபோனாலும், அவ்விடத்தில் (ஜனங்களால்) அடையப்பட்டவனாகி (அந்த) ஜனக்கூட்டத்திற்கு அதிபதியாயிருத்தலை அடைகிறான். டம்பத்தையும், மோகத்தையும், மாத்ஸரியத்தையும், பாவச் செயலையும், ராஜத்வேஷத்தையும், கோள்சொல்வதையும், ஜனக்கூட்டங்களோடு பகைத்தலையும், மதங்கொண்டவர்களோடும் பித்தர்களோடும் துர்ஜனர்களோடும் பேச்சையும் தள்ளுகிற பேரறிவாளனே சிறந்தவன். எவன் அடக்கம், சுத்தி, தெய்வகர்மம், மங்களகாரியங்கள், பிராயச்சித்தங்கள், பலவிதமான உலக வியவஹாரங்கள் ஆகிய இவைகளை நித்தியமாகச் செய்கிறானோ அவனுக்குத் தேவதைகள் மேன்மேலும் விருத்தியைச் செய்கிறார்கள். ஸமமாயுள்ளவர்களுடன் விவாஹத்தைச் செய்கிறவனும், இழிவானவர்களுடன் விவாஹத்தைச் செய்யாதவனும், ஸமானர்களோடு ஸ்நேஹத்தையும் (ஆகாரம் முதலான) வியவகாரத்தையும் ஸம்பாஷணத்தையும் செய்கிறவனும், குணங்களால் சிறந்தவர்களைக் கௌரவிக்கிறவனுமான வித்வானுடைய நீதிகள் நன்றாகச் செலுத்தப்பட்டவைகளாகும். (தன்னை) அடுத்தவர்களுக்குப் பகுத்துக் கொடுத்துவிட்டு மிதமாகப் புஜிக்கிறவனும், அளவற்ற காரியத்தைச் செய்துவிட்டு மிதமாக நித்திரைசெய்கிறவனும்,

யாசிக்கப்பட்டால் பகைவர்களுக்கும் தானம் செய்கிறவனும், நல்ல மனமுடையவனுமாயிருப்பவனை அனர்த்தங்கள் விட்டுவிலகுகின்றன. எவனுடைய செய்யவிரும்பப்பட்ட காரியத்தையும், மாறாகச் செய்யப் பட்ட காரியத்தையும், இதரஜனங்கள் சிறிதும் அறிகிறதில்லையோ அவனுடைய ஆலோசனை ரகஸ்யமாயும் நன்றாக அனுஷ்டிக்கப்பட்ட தாயுமிருந்தால் (அவனுக்கு) ஒரு காரியமும் சிறிதும் நழுவுகிறதில்லை. எல்லாப் பிராணிகள்விஷயத்திலும் அமைதியில் பிரவேசித்தவனும், உண்மையுள்ளவனும், மிருதுஸ்வபாவமுடையவனும், (தக்கவர்களை) நன்குமதிக்கிறவனும், சுத்தமான எண்ணமுடையவனுமாயிருக்கிற வன், ஞாதிகளின்நடுவில், நல்லஜாதியிலுண்டானதும் தெளிவுள்ளது மான பெரிய ரத்தினம்போல அதிகமாக அறியப்படுகிறான். எந்தமனி தன் தானாகவே (அகாரியங்களில்)மிகவும் லஜ்ஜைஅடைகிறானோ அவன் எல்லாஉலகத்திற்கும் குருவாகிறான்; தவிரவும், அளவற்ற தேஜ ஸுடையவனும் நல்லமனமுடையவனும் சித்தம்நிலைபெற்றவனுமாகி றான். அவன் தேஜஸினால் ஸூரியன்போல விளங்குகிறான். ஓ! அம்பிகையின்புத்திரரே! சாபத்தால் எரிக்கப்பட்டவரும் அரசரு மான பாண்டுவினுடைய புத்திரர்கள் ஐவரும் வனத்தில் பிறந்தார்கள்; ஐந்து இந்திரர்களுக்கு நிகரானவர்களாயிருக்கிறார்கள். பாலர்களான அவர்கள் உம்மாலேயே வளர்க்கப்பட்டவர்களும் கற்பிக்கப்பட்டவர் களுமாக உம்முடைய கட்டளையைக் காத்துவருகிறார்கள். ஓ! ஐயா! அவர்களுக்கு உசிதமான ராஜ்யத்தைக்கொடுத்துவிட்டுப் புத்திரர் களுடன் ஸுகியும் ஸந்தோஷிக்கிறவரும் ஆகக்கடவீர். ஓ! அரசரே! (இப்படிச்செய்தால்) நீர் தேவர்களுக்கும் மனுஷியர்களுக்கும் நிந்திக் கத்தக்கவர் ஆகமாட்டீர்' என்றார்.

## முப்பத்துநான்காவது அத்யாயம்.

## ப்ரஜாகரபர்வம். (தொடர்ச்சி.)

---

(திருதராஷ்டிரன் துரியோதனுதியரின் மேன்மைக்கு ஸாதனத்தைக் கேட்க, விதுரர் பலநீதிகளைக்கூறிப் பாண்டவர்களுக்கு ராஜ்யம் கொடுப்பதே முக்கியஸாதனமென்றது.)

திருதராஷ்டிரன், 'நித்திரையில்லாதவனும், கவலையினால் எரிக் கப்படுகிறவனுமான எனக்கு எந்தக்காரியத்தை ஆலோசித்தறிகி றாயோ அதனைச் சொல்லு. நீயோ நம்மவர்களில் தர்மார்த்தங்

களில் ஸமர்த்தனும் சுசியுள்ளவனுமாயிருக்கிறாய். உதாரமான மனத்தையுடையவனே! விதுரா! ஆகையால், அஜாதசத்துருவுக்கு நன்மையான எல்லாவற்றையும் உள்ளபடி நன்குஉணர்ந்து சொல்லக்கடவாய். கௌரவர்களுக்கு நன்மையைக்கொடுப்பதாக எதை நினைக்கிறாயோ அதைச் சொல்லு. கெடுதலைச் சங்கிக்கிறவனான நான் கெடுதியைப் பார்க்கிறவனாகி வியாகூலமான மனத்துடன் உன்னை வினவுகிறேன். அறிவு தளராதவனே! ஆகையால், அஜாதசத்துருவுக்கு இஷ்டமான எல்லாஉண்மையையும் உள்ளபடி சொல்' என்று கேட்டான்.

விதுரர், 'அவமானத்தைவிரும்பாதவன், சுபத்தையோ அல்லது பாவத்தையோ, துவேஷத்துக்குரிய காரியத்தையோ அல்லது பிரியத்தையோ, கேளாமல் ஒருவனுக்கும் சொல்லக்கூடாது. அரசரே! ஆகையால், (நீர் கேட்டபடியால்) கௌரவர்களுக்கு நன்மையும் உறுதியைச் செய்வதும் தர்மத்திலிருந்து விலகாததுமான வார்த்தையை உமக்குச் சொல்லுகிறேன். சொல்லுகிற என்னிடமிருந்து அதைத் தெரிந்துகொள்ளும். ஓ! பாரதரே! கபடத்துடன்கூடினவையும் கெட்ட உபாயங்களால்செய்யப்பட்டவையும் கைகூடுகின்றவையுமான கார்யங்களில் மனத்தைச் செலுத்தாதீர். மேதாவியானவன்அப்படியே யுக்தியினால் செய்யப்பட்டவையும் உபாயங்களுடன் கூடினவையும் பயனை அளியாதவையுமான செய்கைகளில் மனத்தை ப்ரமப்படுத்தக் கூடாது. பயனுடன்கூடின கர்மங்களிலே பயன்களைப் பார்க்கவேண்டும்; நிச்சயித்துச் செய்யவேண்டும்; படபடப்பாய்ச் செய்யக்கூடாது. தீரனானவன் கர்மங்களுடையபலனையும் விபரீதபலனையும் தன்னுடைய வளர்ச்சியையும் நன்றாக அறிந்தேசெய்யவேண்டும். அல்லது,செய்யாமலிருக்க வேண்டும். கோட்டை முதலான இருப்பிடத்திலும் வளர்ச்சியிலும் குறைவிலும் பொக்கசத்திலும் பட்டணத்திலும் சேனையிலும் பிரமாணத்தை அறியாதவன் ராஜ்யத்தில் நிலைக்கிறதில்லை. எவன் இவைகளில் பிரமாணங்களைச் சொல்லப்பட்டபடி அறிகிறானோ, தர்மார்த்தங்களிலும் ஞானத்திலும் முயற்சியுள்ளவனான அவன் ராஜ்யத்தை அடைகிறான். ராஜ்யம் கிடைத்தேவிட்டதென்று தகாதபடி இருக்கக்கூடாது. முதுமையானது உத்தமமான ரூபத்தைக் கெடுப்பதுபோல அடங்காமை செல்வத்தைக் கெடுத்துவிடும். ஆகாரத்தில் விருப்பமுள்ள மீனானது சிறந்தஉணவால் மறைக்கப்பட்ட இரும்புத்தூண்டிலை விழுங்குகிறது; பின்பு நேரிடும் விபரீதமானபயனை அறிகிறதில்லை. பக்ஷிக்கமுடிவதும்,பக்ஷிக்கத்தக்கதும்,பக்ஷிக்கப்பட்டு ஜரிக்கிறதும், ஜரிக்கும்போது ஹிதமாயிருப்பதுமானதை க்ஷேமத்தை

விரும்புகிறவன் சாப்பிடவேண்டும். மரத்திலிருந்து பக்குவமாகாத பழங்களைப்பறிக்கிறவன் அவைகளிலிருந்து ரஸத்தை அடையமாட்டான். அந்த மரத்தினுடைய விதையும் நசித்துவிடுகிறது. முதிர்ந்து பக்குவமான ஸமயத்தில் பழத்தைப்பறிக்கிறவனே பழத்திலிருந்து ரஸத்தை அடைகிறான்: விதையினால் மறுபடியுமே பலத்தை அடைகிறான். வண்டுகள் புஷ்பங்களைக் கெடுக்காமல் மதுவைக்கவர்வது போல மனிதர்களிடமிருந்து நலியாமல் தனங்களைக்கிரகிக்கவேண்டும். [1] மாலை கட்டுகிறவன் பூந்தோட்டத்தில் செய்வதுபோலப் புஷ்பிக்கப் புஷ்பிக்கப் பறிக்கவேண்டும். கரியைச் சேர்க்கிறவன்போல மூலத்தை நாசஞ்செய்யக்கூடாது. மனிதனானவன், 'இதைச் செய்தால் எனக்கு என்ன உண்டாகும்? இதைச் செய்யாவிட்டால் என்னஉண்டாகும்?' என்று நன்றாக ஆராய்ந்து கர்மாக்களைச் செய்யவேண்டும். அப்படியில்லாவிடில் செய்யக்கூடாது. (ஏனென்றால்) எந்தக்காரியங்களில் செய்யப்பட்ட மனிதமுயற்சியானது பிரயோஜனமில்லாததாகிவிடுமோ அவ்விதம் எப்பொழுதும் ஆரம்பிக்க முடியாதவைகளும் அடையப்படாதவைகளுமாகச் சில கார்யங்கள் ஏற்படுகின்றன. அனர்த்தத்திலேயே பற்றுள்ளவனும் அர்த்தத்தில் பராமுகனுமாயிருக்கிறவனை நபும்ஸகனானபதியை ஸ்திரீகள் விரும்பாததுபோல ஜனங்கள் போஷகனாக விரும்புகிறதில்லை. எவனுடைய மகிழ்ச்சியும் கோபமும் பயனில்லாதவையோ அவனை, ஸ்திரீகள் நபும்ஸகனைப் பதியாக விரும்பாததுபோலப் போஷகனாக விரும்புகிறதில்லை. அறிவுள்ளவனான மனிதன் சிறு முயற்சியுடையவைகளும் பெரிய பயனுள்ளவைகளுமான சிலகாரியங்களைச் செய்யச் சீக்கிரமாக ஆரம்பிக்கிறான்: அப்படிப்பட்டவைகளைத் தாமதிக்கச் செய்கிறதில்லை. எல்லாவற்றையும் நேத்திரத்தினால் பானம்செய்கிறவன்போல ருஜுவாகப் பார்க்கிறவன் சும்மா (ஒன்றும் செய்யாதவனாக) இருந்தாலும் அவனை மனிதர்கள் விரும்புகிறார்கள். [2] நல்ல புஷ்பங்களுள்ளதாகஇருந்தும் பழங்களில்லாததாக இருக்கவேண்டும். பழங்களுள்ளதாக இருந்தும் ஏற முடியாததாயிருக்கவேண்டும். பக்குவமாகாததாக இருந்தும் பக்குவமானதுபோல இருக்கவேண்டும். ஆனால், ஒருபொழுதும் உதிரலாகாது. நேத்திரத்தினாலும் மனத்தினாலும் வாக்கினாலும் செய்கை

1 மாலைகட்டுகிறவன் பூந்தோட்டத்தில் புஷ்பிக்கப் புஷ்பிக்கப் பறிப்பதுபோலத் தனம் செழிக்கச் செழிக்கக் கிரஹிக்கவேண்டும். ஒரே தரமாய் உபத்திரவிக்கக் கூடாதென்பது கருத்து. சாந்திபர்வம் 241-ம் பக்கம் பார்க்க. 2 சாந்திபர்வம் 484-ம் பக்கம் பார்க்க.

யினாலும் எவன் உலகத்தை நான்கு விதமாக மனமகிழச்செய்கிறானோ அவனிடம் உலகம் மகிழ்கிறது. மான்பிடிக்கும் வேடனிடமிருந்து மான்கள் பயப்படுவதுபோல எவனிடமிருந்து பிராணிகள்பயப்படுகின்றனவோ அவன் ஸமுத்திரம் வரையிலுள்ள பூமியை அடைந்தாலும் குறைவை அடைவான். அநீதியுடன்கூடினவன், தகப்பன் பாட்டன் வழியாய்வந்த ராஜ்யத்தை அடைந்தாலும், தன்செய்கையால், வாயுவானது வேகத்தை அடைந்து அதனை நழுவச்செய்வதுபோல ராஜ்யத்தை நழுவச்செய்கிறான். ஸத்துக்களால் அனுஷ்டிக்கப்பட்ட தர்மத்தை ஆதிமுதற்கொண்டு அனுஷ்டித்துவருகின்ற அரசனுடையபூமியானது, தனங்களால் நிரம்பினதும் ஐச்வரியத்தைப் பெருக்குகின்றதுமாக விருத்தியடைகிறது. அப்படியில்லாமல், தர்மத்தை விட்டவனும் அதர்மத்தை அனுஷ்டிக்கிறவனுமான அரசனுடைய பூமியானது, அக்னியில்போடப்பட்ட தோல்போலக் குறைவை அடைகிறது. சத்துருவினுடைய ராஜ்யத்தை நாசம்செய்வதில் செய்யப்படுகிற முயற்சியே தன்ராஜ்யத்தின் பரிபாலனத்திலும் செய்யத்தக்கது. தர்மமாக ராஜ்யத்தை அடையவேண்டும்; தர்மமாகப் பரிபாலிக்கவேண்டும்; தர்மமூலமான செல்வத்தை அடைந்தால், அது நழுவாது. அவன் குறைவையும் அடையமாட்டான். புலம்புகிறவனை பித்தனிடமிருந்தும் மாறிமாறிப் பேசுகிற குழந்தையினிடமிருந்தும் எல்லாவற்றிலுமிருந்தும் கற்பாறைகளிலிருந்து பொன்னைக் கிரகிப்பதுபோல ஸாரத்தைக் கிரகிக்கவேண்டும். உஞ்சவ்ருத்தியால் ஆகாரம்செய்கிறவன் கொஞ்சம் கொஞ்சமாகக் கிரகிப்பதுபோல மஹான்களுடைய நல்ல வசனங்களையும் நல்ல கர்மங்களையும் தீரனானவன் அங்கங்கிருந்து ஸம்பாதிக்கிறவனாக இருக்கவேண்டும். பசுக்கள் கந்தத்தால் பார்க்கின்றன. பிராமணர்கள் வேதங்களால் பார்க்கிறார்கள். அரசர்கள் சாரர்களால் பார்க்கிறார்கள். மற்ற ஜனங்கள் நேத்திரங்களால் பார்க்கிறார்கள். அரசரே! எந்தப் பசுவானது பால்கறக்க இணங்குகிறதில்லையோ அது அதிகமான துன்பத்தை அடைகிறது. அப்படியில்லாமல், எது லேசாகக் கறக்கின்றதோ அதைத் துன்பப்படுத்துவதே இல்லை. எது காய்ச்சாமலே வளைகிறதோ, அது காய்ச்சப்படுகிறதில்லை. எந்த மரம் தானாகவே வளைந்திருக்கிறதோ அதனை அறிந்தவன் வளைக்கமாட்டான். இந்த உபமானத்தினாலே தீரனானவன் பலவானை வணங்கவேண்டும். பலவானை வணங்குகிறவன் இந்திரனை வணங்குகிறவனாவான். பசுக்கள் (வர்ஷதேவதையான) பர்ஜன்யனை நாதனாகவுடையவைகள். அரசர்கள்

மந்திரிகளை உறவினர்களாகவுடையவர்கள். ஸ்திரீகளுக்குப் பதிகள் பந்துக்கள். பிராமணர்கள் வேதங்களைப் பந்துக்களாகவுடையவர்கள். தர்மமானது ஸத்தியத்தால் காக்கப்படுகிறது. வித்தையானது அப்பியாஸத்தால் காக்கப்படுகிறது. ரூபமானது சுத்தம்செய்வதால் ரக்ஷிக்கப்படுகிறது. குலமானது நல்லநடையால் ரக்ஷிக்கப்படுகிறது. அளவினால் தானியம் ரக்ஷிக்கப்படுகிறது. குதிரைகளைத் தேகப்பயிற்சி முதலியவற்றால் காக்கவேண்டும். அடிக்கடி பார்ப்பதனால் கோக்களை ரக்ஷிக்கவேண்டும். மட்டமானவஸ்திரத்தால் ஸ்திரீகள் ரக்ஷிக்கத்தக்கவர்கள். நடையால் இழிவானவனுக்குக் குலமானது பிரமாணமாகிறதில்லையென்பது என்னெண்ணம். கீழ்க்குலத்தில் பிறந்தவர்களானாலும், அவர்களுடையநன்னடையானது குலத்தைக்காட்டிலும் அதிகமாகிறதல்லவா? எவன் பிறர்களுடைய தனம், ரூபம், வீரியம், குலம், ஸந்ததி, ஸுகம், நல்லபாக்கியம், பூஜை இவைகளில் பொறாமையுடையவனாயிருக்கிறானோ அவனுக்கு வியாதியானது முடிவற்றது. அகாரியங்களைச்செய்வதிலும் காரியங்களைவிடுவதிலும் அகாலத்தில் விபரீதமான ஆலோசனையிலும் [1] பயந்தவன், மதத்தைக்கொடுக்கிற வஸ்துவைப் பானம் செய்யக்கூடாது. வித்தியாமதம், தனமதம், மூன்றாவதானகுலமதம் ஆகிய இந்தமதங்கள் கர்வங்கொண்டவர்களுக்கு ஏற்படுகின்றன. இவைகளே ஸத்துக்களுக்குச்(சொல்லாலும்பொருளாலும்)மதத்திற்கு எதிரிடையான தமங்களாகின்றன. ஒருகால், ஒருகாரியநிமித்தம் ஸத்துக்களால் பிரார்த்திக்கப்பட்ட அஸத்துக்கள்,அஸத்தென்று பிரஸித்தமாயிருந்தும் தம்மை ஸத்தாகநினைக்கிறார்கள். பிராணிகளுக்கு ஸத்துக்கள் கதி; ஸத்துக்களுக்கு ஸத்துக்களே கதி. அஸத்துக்களுக்கும் ஸத்துக்கள் கதி. அஸத்துக்களோ ஸத்துக்களுக்குக் கதியல்லர். நல்லவஸ்திரமுள்ளவனாலே ஸபையானது ஜயிக்கப்பட்டதாகும். கோக்களுள்ளவனால் நல்ல ஆகாரத்திலாசையானது ஜயிக்கப்பட்டதாகும். வாகனமுள்ளவனால் வழியானது ஜயிக்கப்பட்டதாகும். சீலமுடையவனால் எல்லாம் ஜயிக்கப்பட்டனவாகும். மனிதனுக்குச் சீலம் முக்கியம். அது எவனுக்கு இகத்தில் நசித்துவிடுகிறதோ அவனுக்கு உயிரினாலும் தனத்தினாலும் பந்துக்களாலும் பயனில்லை. ஓ! பரதஸ்ரேஷ்டரே! தனவான்களுக்கு மாம்ஸத்தால் சிறந்ததும், நடுவாயுள்ளவர்களுக்கு ஆவின்பால் தயிர் நெய் மோர்களால் சிறந்ததும், தரித்திரர்களுக்குத் தைலத்தால் சிறந்ததுமாயி

---

1 'இவைகளில் பயப்படவேண்டும்' என்றும், 'மதிமயக்கத்தைத் தரக்கூடிய வஸ்துவைக் குடிக்கக்கூடாது' என்றும் பழையவுரை கூறுகிறது.

ருக்கிற அன்னமானது ஏற்படுகிறது. தரித்திரர்கள் எப்பொழுதும் உடனே பாகமான அன்னத்தைப்புசிக்கிருர்கள். பசியானது அவர்களுக்கு ருசியை உண்டுபண்ணுகிறது. தனவான்களுக்கு அந்தப்பசி எளிதில் கிடையாது. உலகத்தில் அனேகமாகத் தனவான்களுக்குப் புஜிப்பதற்குச் சக்தியிருக்கிறதில்லை. ஓ! அரசரே! தரித்திரர்களுக்குக் காய்ந்தகட்டைகளும் ஜரிக்கின்றனவல்லவா? கீழான மனிதர்களுக்கு பிழைப்பில்லாமல்போவதில் பயம்; நடுவானவர்களுக்கு மரணத்தில் பயம்; மேலானமனிதர்களுக்கு அவமானத்தில் மிக்க பயம்; குடிமதமுதலான மதங்களுக்கெல்லாம் ஐஶ்வரியமதமானது மிகவும் பாவமாயுள்ளது. பணக்கொழுப்பால் கொழுத்தவன் விழுந்தும் (= தாழ்வையடைந்தும்) அறிகிறதில்லையல்லவா? விஷயங்களில் பிரவிருத்திக்கின்றவைகளும் வசப்படாதவைகளுமான இந்திரியங்களாலே இந்த உலகமானது (சூரியன் முதலான) கிரகங்களால் நக்ஷத்திரங்கள் தாபத்தையடைவதுபோலத் தாபத்தை அடைகிறது. கூடப்பிறந்ததும் மனத்தைவெளியிலிழுப்பதுமான ஐம்புலன்களின் கூட்டத்தால் வசம்செய்யப்பட்டவனுக்கு வளர்பிறையில் சந்திரன் வளர்வதுபோல் ஆபத்துக்கள் வளர்கின்றன. எவன் தன்னை வசம் செய்யாமல் மந்திரிகளை வசம்செய்ய விரும்புகிருனே, மந்திரிகளை வசம்செய்யாமல் சத்துருக்களைத் தான் வசம்செய்ய விரும்புகிருனே அவன் அவசனுயிருந்து குறைவையடைகிருன். முதலில் தன்னையே துவேஷத்துடன் (வசம்செய்யவேண்டியவர்களுடன்) சேர்க்கவேண்டும். பிறகு, மந்திரிகளையும் பகைவர்களையும் சேர்க்கவேண்டும். வீணுக (இதற்குமாருக) வசம்செய்யவிரும்பக்கூடாது. இந்திரியங்களை வசம்செய்தவனும், மந்திரிகளை வசம்செய்தவனும், சத்துருக்கள் விஷயத்தில் சிக்ஷையைச்செய்பவனும், ஆலோசித்துச் செய்பவனும், தீரனுமாயிருப்பவனைச் செல்வமானது எப்பொழுதும் அடையும். ஓ! அரசரே! மனிதசரீரம் ரதம்; புத்தி ஸாரதி; இவனுடைய இந்திரியங்கள் குதிரைகள். அடங்கினவைகளான அந்த நல்லகுதிரைகளால் ஜாக்கிரதையுள்ளவனும் ஸமர்த்தனுமாகஇருப்பவன் தீரனை தேராளி போல் ஸுகமாகச் செல்லுகிருன். சிக்ஷிக்கப்படாதவைகளான இவைகளே, அடக்கமில்லாதவைகளும் வசமாகாதவைகளுமான குதிரைகள்போல் ரதத்தோடு ஸாரதியையும் குதிரையான தன்னையும் கொல்லுவதற்குப் போதும். அறிவில்லாதவன் அடங்காத இந்திரியங்களால் அனர்த்தத்தை அர்த்தமாகவும் அர்த்தத்தை அனர்த்தமாகவுமே பார்க்கிறவனுகிப் பெரிய துக்கத்தை ஸுகமாக நினைக்கிருன். எவன் தர்மார்த்தங்களைவிட்டு இந்திரியங்களின்வசத்தை

அடைந்தவனுகிருனே அவன் அழகு, பிராணன், தனம், தாரங்கள் இவைகளிலிருந்து சீக்கிரம் குறைவை அடைகிருன். எவன் தனங் களுக்கு அதிபதியும், இந்திரியங்களுக்கு அதிபதிஅல்லாதவனுமா வானே அவன் இந்திரியங்களுக்கு அதிபதியல்லாமைபற்றி ஐஶ்வரி யத்திலிருந்தும் நழுவுகிருனல்லவா? அடங்கினவைகளான மனம், புத்தி, புலன்கள் இவைகளாலே தாஞகவே தன்னைத் தேடவேண்டும். ஆத்மாவே ஆத்மாவுக்கு பந்து அல்லவா? ஆத்மாவே ஆத்மாவுக்குச் சத்துரு. எவனுல் தன்னுலேயே தன்னுடைய ஆத்மா வசம்செய்யப் பட்டதோ, அவனுடைய ஆத்மாவுக்கு ஆத்மாவே (= அவனே) பந்து. அந்த ஆத்மாவே நிலையான பந்து; அந்த ஆத்மாவே நிலையானசத் துரு. ஓ! அரசரே! பலமில்லாத கண்களுள்ள வலையினுல் மூடப்பட்ட இரண்டு பெரிய மீன்கள் அந்தவலையை அறுப்பதுபோலக் காமமும் குரோதமும், சிறந்த அறிவை நாசஞ்செய்கின்றன. இவ்வுலகில் எவன் தர்மார்த்தங்களை நன்முகத் தெரிந்துகொண்டு (யுக்த) ஸாதனங் களை அடைகிருனே, பூர்ணமான ஸாதனங்களுள்ள அவன் எப்பொழு தும் ஸுகமாக விருத்தி அடைகிருன். எவன் உள்ளேயிருப்பவை களும் மனத்தின் விகாரங்களுமான ஐம்புலன்களான பகைகளை வெல்லாமல் மற்றப்பகைகளை வெல்ல விரும்புகிருனே அவனைப் பகை வர்கள் அவமதித்துவிடுகிருர்கள். மகாத்மாக்களான அரசர்கள் இராஜ் யத்திலுண்டான [1]மோகங்களாலே, இந்திரியங்களை வசம்செய்யாத தால், தங்கள் கர்மங்களால் நிர்ப்பந்திக்கப்பட்டவர்களாகக் காணப்படு கிருர்களல்லவா? பாவம் செய்கிறவர்களை விலக்காததினுல் பாபமில்லா தவர்களுக்கும்சேர்க்கையினுல்ஸமமான சிக்ஷை ஏற்படுகிறது. உலர்ந்த விறகுடன் சேர்ந்த ஈர விறகும் எரிக்கப்படுகிறது. ஆகையால், பாவி களுடன் சேர்க்கையை அடையக்கூடாது. தன்னைச் சேர்ந்தவைகளும் கிளம்பினவைகளும் ஐந்து பயனுள்ளவைகளுமான ஐந்து பகைகளைத் தன்வசம்செய்யாத மனிதனை ஆபத்தானது விழுங்குகிறது. அஸூயை யில்லாமை, நேர்மை, சுசியாயிருத்தல், மகிழ்ச்சி, இன்சொல், அடக் கம், மெய்ம்மை, சஞ்சலமில்லாமை ஆகிய இவைகள் துஷ்டமனமுள்ள வர்களுக்கு உண்டாகமாட்டா. ஓ! பாரதரே! ஆத்மஞானம், அனு யாஸம், பொறுமை, தர்மத்தை நித்தியமாகக் கொள்ளுதல், அடக்க மான வார்த்தை, அடக்கமான தானம் ஆகிய இவைகள் கீழான மனி தர்களிடம் இரா. நிந்தைகளாலும் அபவாதங்களாலும், அறியாதவர்

1 அரசாட்சியாலுண்டான மயக்கங்கள்.

கள் பண்டிதர்களைத் துன்பஞ்செய்கிறார்கள். சொன்னவன் பாவத்தை அடைகிறான். பொறுக்கிறவன் விடுபடுகிறான். தீயவர்களுக்குப் பிறரைப்பீடித்தல் பலம்; அரசர்களுக்குச் சிக்ஷைசெய்வது பலம். மாதர்களுக்குக் கணவர்பணிவிடை பலம். குணசாலிகளுக்குப் பொறுமை பலம். ஓ! அரசரே! வாக்கை அடக்குவது செய்ய மிக அரியதாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. அர்த்த முடையதாகவும் விசித்திரமாகவும் அதிகமாகப் பேசுவதற்கு முடியாது. நலமாகச் சொல்லப்பட்ட வார்த்தையானது பலவிதமான நன்மையைக்கொடுக் கிறது. ஓ! அரசரே! அந்தச்சொல்லே கெடுதியாகச் சொல்லப்பட்டால் கெடுதியின்பொருட்டு ஏற்படுகிறது. பாணங்களால் உண்டான புண்ணும், கோடாலியால் வெட்டப்பட்ட காடும், (மாறி) ஆறியும் துளிர்த்தும் விடுகின்றன. வாக்கினாலே கெடுதியாகச்சொல்லப்பட்ட நிந்தையாகிற சொற்புண்ணானது ஆறுகிறதில்லை. காதுபோன்ற பிடியுடைய கர்ணியென்கிற பாணங்களையும் குண்டுகளையும் நாராசங்களையும் சரீரத்திலிருந்தும் பிடுங்கியெடுக்கிறார்கள். வாக்காகிற சல்லியமோ எடுக்க முடிகிறதில்லை. அது இருதயத்தில் ஊன்றிப்போகிறதன்றோ? எவைகளால் அடிக்கப்பட்டவன் இராப்பகல் துக்கிக்கிறானோ அந்தச் சொற்களாகிற அம்புகள் வாயிலிருந்தும் வெளியில் வருகின்றன. அவைகள் பிறனுடைய மர்மங்களைத் தவிர மற்றவிடங்களில் விழுகிறதில்லை. பண்டிதனானவன் அவைகளைப் பிறர்களின்பொருட்டு விடக்கூடாது. தேவர்கள் எந்த மனிதன்பொருட்டு அவமானத்தைக் கொடுக்கிறார்களோ அவனுடைய புத்தியைக் குறைக்கின்றார்கள்; அவன் கீழானகாரியங்களைப் பார்க்கிறான். புத்தி கலங்கிநாசம்நேரிட்ட ஸமயத்தில் அநீதியானது நீதிக்கு நிகராகி மனத்தைவிட்டு விலகுகிறதில்லை. ஓ! பரதஶ்ரேஷ்டரே! உம்முடைய புத்திரர்களுடைய அப்படிப்பட்ட இந்தப் புத்தியானது பாண்டவர்களிடம் விரோதத்தினால் வியாபிக்கப்பட்டிருக்கிறது. இவர்களை நீர் அறியவில்லை. ஓ! திருதராஷ்டிரரே! ராஜேந்திரரே! எல்லா லக்ஷணங்களும் பொருந்தினவனும், மூவுலகத்திற்கும் அரசனாகக்கூடியவனும், உம்முடைய எல்லாப்புத்திரர்களுக்கும் மேற்பட்டவனும், பாக்கியத்தால் கௌரவிக்கப்பட்டவனும், வல்லமையும் மிக்க அறிவுமுடையவனும், தர்மார்த்தங்களின் உண்மையை அறிந்தவனும், தர்மங்களை வகிக்கின்றவர்களில் சிறந்தவனுமான இந்த யுதிஷ்டிரன், தயையினாலும், குரூரத்தன்மையில்லாமையினாலும், உம்மிடமிருக்கும் குருத்தன்மையினாலும், உம்மா

லுண்டான பல் க்லேசங்களைப் பொறுக்கிறான். உமக்குச் சிஷ்யனான இந்த யுதிஷ்டிரன் அரசனாக இருக்கட்டும்' என்று சொன்னார்.

## முப்பத்தைந்தாவது அத்யாயம்.

## ப்ரஜாகர பர்வம். (தொடர்ச்சி.)

(விதுரர் திருதராஷ்டிரனுக்கு ஸுதன்வா விரோசனஸம்வாதமுதலிய வற்றைச்சொல்லிப் பாண்டவர்களிடம் புத்திரனிடம் போலிருக்கவேண்டுமென்றது.)

திருதராஷ்டிரன், 'ஓ! மஹாபுத்திமானே! மறுபடியும், தர்மார்த்தங்களுடன்கூடின வசனத்தைச் சொல். கேட்கிற எனக்குக் கேட்டுத் திருப்தி உண்டாகவில்லை. இவ்வுலகில், நீ விசித்திரமான விஷயங்களைச் சொல்லுகிறாய்' என்று கேட்டான்.

விதுரர், 'எல்லாத்தீர்த்தங்களிலும் ஸ்நானமும் எல்லாப்பிராணிகள்விஷயத்திலும் ருஜுவான இருப்பும் இவ்விரண்டும் ஸமானமாயிருக்கலாம். அல்லது, ருஜுத்தன்மையானது அதிகமாயிருக்கலாம். ஓ! பிரபுவே! புத்ரர்களான பாண்டவர்கள்விஷயத்தில் எப்பொழுதும் ருஜுத்தன்மையை அடையக்கடவீர். (அதனால்) இம்மையில் சிறந்ததான கீர்த்தியைஅடைந்து, மரணத்திற்குப்பிறகு ஸ்வர்க்கத்தையும் அடைவீர். ஓ! புருஷச்ரேஷ்டரே! எதுவரையில் மனிதனுடைய பரிசுத்தமான கீர்த்தியானது உலகத்தில் சொல்லப்படுகிறதோ அதுவரையில் அவன் ஸ்வர்க்கலோகத்தில் பூஜிக்கப்படுகிறான். இந்த விஷயத்திலும் கேசினி என்கிற ஸ்திரீவிஷயத்தில் விரோசனனுக்கு ஸுதன்வாவுடன் உண்டான ஸம்வாதரூபமான இந்தப் பழைய சரித்திரத்தைச் சொல்லுகிறார்கள். 'ஓ! அரசரே! நிகரற்ற அழகு பொருந்தியவளும் கேசினிஎன்கிற பெயருடையவளுமான கன்னிகையானவள் சிறந்தவனானபதியை அடையவிரும்பி ஸ்வயம்வரத்திலிருந்தாள். அப்பொழுது, விரோசனனென்கிற அஸுரன் அவளை அடையவிருப்பமுள்ளவனாக உடனே அவ்விடம் வந்தான். உடனே, அவ்விடத்தில் கேசினியானவள், அந்த அஸுரராஜனை நோக்கி, 'ஓ! விரோசன! பிராமணர்கள் சிறந்தவர்களா? அல்லது, அஸுரர்கள் சிறந்தவர்களா? பிராம்மணர்கள் சிறந்தவர்களாதலால், என்னகாரணத்தால் ஸுதன்வா மஞ்சத்தில் ஏறாமலிருப்பார்?' என்று கேட்டாள். விரோசனன், 'ஓ! கேசினி! காச்யபப்ராஜாபதியின்

வம்சத்தில் பிறந்தவர்களும் மிக்க ஸத்துக்களுமான நாங்களே சிறந்தவர்கள். இந்த உலகங்கள் எங்களுடையவையல்லவா? தேவர்கள் [1] யார்? வேதியர்கள் யார்?' என்றுசொன்னான். கேசினி, 'ஓ! விரோசன! நாம் இருவரும் இவ்விடத்திலேயே எதிர்பார்த்திருப்போம். (என்னை) அடைவதனிமித்தம் நாளைக்காலையில் ஸுதன்வா வருவார். சேர்ந்திருப்பவர்களான உங்கள் இருவரையும் நான் பார்ப்பேன்' என்று சொன்னாள். விரோசனன், 'ஓ! மங்களகுணமுள்ளவளே! பயந்தவளே! நீ எவ்விதம் சொல்லுகிறாயோ அவ்விதம் செய்வேன். காலையில் சேர்ந்திருப்பவர்களான என்னையும் ஸுதன்வாவையும் பார்ப்பாய்' என்று சொன்னான்.

ஓ! அரசர்களிற்சிறந்தவரே! இரவுசென்று ஸூர்ய மண்டலம் உதித்தபிறகு ஸுதன்வா அந்த இடம் வந்தார். ஓ! பிரபுவே! விரோசனன் கேசினியுடனிருக்கிற அவ்விடத்திற்கு ஸுதன்வா என்கிற ப்ராம்மணரும், ப்ரஹ்லாதபுத்ரனான விரோசனனுக்கும் கேசினிக்கும் நேராக வந்தார். ஓ! பரதவம்சத்திற்சிறந்தவரே! கேசினி, நேரில் வந்தவரான வேதியரைப்பார்த்து எதிர்சென்று அவருக்கு ஆஸனத்தையும் பாத்யத்தையும் அர்க்கியத்தையும் கொடுத்தாள். ('என்னுடன் இந்த ஆஸனத்திலிருப்பீர்' என்று விரோசனனால் சொல்லப்பட்டவரான) ஸுதன்வா, விரோசனனைநோக்கி, 'ஓ! ப்ரஹ்லாதபுத்ரனே! ஸுவர்ணமயமான மஞ்சத்தில் உட்காரு. நான் பிராம்மணன். ஓ! ப்ரஹ்லாதபுத்ர! ஸுவர்ணமயமானதும் சிறந்ததுமான உன்னுடைய ஆஸனத்தை (க்கையால்) பரிசிக்கின்றேன். உனக்கு ஸமமான தன்மையை அடைந்தவனால் உட்காருவேன். (அப்படியில்லாததால்) நான் உன்னுடன் உட்காரமாட்டேன்' என்ற சிறந்தவசனத்தைச்சொன்னார். விரோசனன், 'உமக்குப் பலகையோ கூர்ச்சமோ தர்ப்பாஸனமோ உசிதமானது. ஓ! ஸுதன்வாவே! நீர் என்னுடன் ஸமமான ஆஸனத்திற்குத் தக்கவரல்லீர்' என்று சொன்னான். ஸுதன்வா, 'பிதாவும் புத்ரனும் இரண்டுவேதியர்களும் இரண்டு க்ஷத்திரியர்களும் விருத்தர்களான இரண்டு வைஸ்யர்களும் இரண்டு சூத்ரர்களும் சேர்ந்திருக்கலாம். மற்றவர்கள் ஒருவரோடொருவர் சேர்ந்திருக்கக்கூடாது. உன்னுடைய பிதாவானவன் என்னைச் சிறந்த ஆஸனத்தில் இருத்திக் கீழேயிருந்துகொண்டு உபாஸித்தானல்லவா? பாலனும் வீட்டில் ஸுகமாக வளர்க்கப்பட்டவனுமான நீ ஒன்றையும் அறியாய்' என்று சொன்னார். விரோசனன்,

---

1 'தன்னிலும் தாழ்ந்தவர்' என்பது.

'ஓ! ஸுதன்வாவே! ஸ்வர்ணத்தையும் பசுக்களையும் குதிரைகளையும் அஸுரர்களுள் எங்களுக்குச் சொந்தமான தனத்தையும் பந்தயம் வைக்கிறேன். அவற்றைக்கொண்டு அறிந்தவர்களிடத்தில் நாமிருவரும் வினவுவோம்' என்று சொன்னான். ஸுதன்வா, 'ஓ! விரோசன! ஸுவர்ணமும் பசுக்களும் குதிரைகளும் உனக்கே இருக்கட்டும். உயிர்ப்பந்தயம் வைத்துக்கொண்டு தெரிந்தவர்களிடம் வினவுவோம்' என்று சொன்னார். விரோசனன், 'உயிர்ப்பந்தயம் வைத்துக்கொண்டு நாம் எவ்விடம் செல்வோம்? நான் தேவர்கள் முன்னும் மனிதர்கள்முன்னும் ஒருகாலும் நிற்கமாட்டேன்' என்று சொன்னான். பிறகு, ஸுதன்வா, 'உயிர்ப்பந்தயம் வைத்துக்கொண்டு உன்பிதாவினிடம் செல்லுவோம். அந்தப் பிரஹ்லாதன் புத்ரன் நிமித்தமும் பொய்யைச் சொல்லமாட்டான்' என்று சொன்னார். இவ்விதம் விரோசனனும் ஸுதன்வாவும் பந்தயம் வைத்துக்கொண்டு கோபத்துடன் அப்பொழுது ப்ரஹ்லாதனிருக்குமிடம் வந்து சேர்ந்தார்கள். அப்பொழுது, ப்ரஹ்லாதன், 'இவர்கள் முன்பு சேர்ந்து ஸஞ்சரிக்காதவர்கள். அப்படிப்பட்ட இவர்கள் எதிரில் காணப்படுகிறார்கள். ஸர்ப்பங்கள்போலக் கோபங்கொண்டவர்களும் ஒரே வழியில் வந்தவர்களுமாக இருக்கிறார்கள்' என்று நினைத்துப் புத்ரனை நோக்கி, 'விரோசன! நீங்கள் இருவரும் என்ன காரணம் இவ்விதம் சேர்ந்து ஸஞ்சரிக்கின்றீர்கள்? இதற்கு முன் சேர்ந்து ஸஞ்சரிக்கிறதில்லையே? உனக்கு ஸுதன்வாவுடன் நட்பு உண்டாயிருக்கிறதா? இதைப்பற்றிக் கேட்கிறேன்' என்று கேட்டான். விரோசனன், 'ஓ! ப்ரஹ்லாதரே! எனக்கு ஸுதன்வாவுடன் ஸ்நேகமில்லை. உயிரில் பந்தயம் வைத்துக்கொண்டிருக்கிறோம். உண்மையைக் கேட்கிறேன். கேள்விக்கு விடை பொய்யைச் சொல்லாதீர்' என்று சொன்னான். பிறகு, ப்ரஹலாதன், 'ஸுதன்வாவுக்கு (ப்பாத்யத்திற்குத்) தீர்த்தத்தையும் மதுபர்க்கத்தையும் கொண்டுவாருங்கள்' என்று சொல்லிவிட்டு, ஸுதன்வாவை நோக்கி, 'ஓ! பிராம்மணரே! பூஜிக்கத்தக்கவராகிறீர்; பருத்த வெள்ளைப் பசுவானது மதுபர்க்கத்திற்காக ஏற்படுத்தப்பட்டிருக்கிறது' என்று சொன்னான். ஸுதன்வா, 'ஓ! பிரஹ்லாத! கேள்விக்கு மறுமொழி சொல்வதினாலேயே எனக்குப் பாத்யஜலமும் மதுபர்க்கமும் கொடுக்கப்பட்டனவாய்விடும். இப்பொழுது கேட்கிறவனை என்னுடைய கேள்வியை உண்மையாகச் சொல். பிராம்மணர்கள் சிறந்தவர்களா? அல்லது, விரோசனன் சிறந்தவனா?' என்று கேட்டார். ப்ரஹ்லாதன், 'தர்மமானது சித்திரவர்ண முடையதுமில்லை; கபில

நிறமுடையது மில்லை; கறுத்த நிறமாயுமில்லை; சிவந்த நிறமாயுமில்லை. கத்தி முனையைக்காட்டிலும் கூர்மையாயிருக்கிற தர்மத்தை எவன் சொல்லக் கூடியவனாகிறான்? ஓ! பிராம்மணரே! நீர் வணங்கத்தக்க வரும் பந்தயத்தின் விஷயத்தில் ஏற்படுத்தப்பட்டவருமா யிருக்கிறீர். ஓ! பிராம்மணரே! எனக்கு ஒரு புத்ரன். நீரும் இங்கே நேரில் இருக்கிறீர். விவாதம் செய்து கொண்டவர்களான அப்படிப்பட்ட இருவர்களுடைய கேள்வியையும் என்னைப் போன்றவன் எவ்விதம் சொல்லுவான்?' என்று சொன்னான். ஸுதன்வா, 'ஓ! ப்ரஹ்லாதனே! நிகரற்றதான இந்தக் கேள்வியை நீ சொல்லாமலிருந்தாலும் அல்லது விபரீதமாகச் சொன்னாலும் உன்னுடைய தலை சிதறிவிடும்' என்று சொன்னார்.

ஓ! திருதராஷ்டிரரே! அறிவிற் சிறந்தவரே! ப்ரஹ்லாதன், ஸூர்யனுடன்கூட வருவதும் எல்லாவற்றையும் உணர்ந்ததும் எல்லாவற்றையும் நேரில் பார்ப்பதுமான ஹம்ஸத்தை நோக்கி, 'ஓ! ஹம்ஸமே! புத்திரனும் மற்றவனும் பந்தயம் வைத்துக்கொண்டு விவாதம் செய்தால் அவர்கள் விஷயத்தில் எப்படி (சொல்வது) தர்மமாகும்?' என்று கேட்டான். ஹம்ஸம், 'புத்திரனுக்குப் பசுவையோ வேறு இஷ்டமான தனத்தையோ கொடுக்கலாம். ஓ! அரசரே! இரண்டு பேர்கள் வாதம் செய்யும்போது (கேட்ட) கேள்வியை (விதிப்படி) உண்மையாகவே உரைக்கவேண்டும்' என்று சொல்லிற்று. ப்ரஹ்லாதன், ஹம்ஸத்தை நோக்கி, 'ஓ! ஹம்ஸமே! உண்மையைக் கேட்கிறேன். ஒருவன் மெய்யையோ பொய்யையோ தெளிவாகச் சொல்லவில்லையானால் அவன் எவ்வளவு பாவம் செய்தவனாவான்?' என்றுகேட்டான். ஹம்ஸமும், 'தர்மத்தைப்பற்றிக் கேட்கப்பட்டவன் விபரீதமாகச் சொல்லக்கூடாது. ஓ! அரசரே! கோவின் காதுபோலச் சஞ்சலமாக நடக்கிறவன் தர்மத்திலிருந்தும் நழுவுவான். தவிரவும், அவனுக்கு உலகமுமில்லை; பிரஜைகளுமில்லை. தர்மத்தை ஆராய்ந்தறிந்தவர்களான எவர்கள் மனத்தில் நினைத்துக் கொண்டு மௌனமா யிருக்கின்றார்களோ அவர்களைத் தர்மமானது கரையில் முளைத்த விருக்ஷங்களை நதிகள் பங்கப்படுத்துவதுபோலப் பங்கப்படுத்துகிறது. எந்த ஸபையில் நிந்திக்கப்படத்தக்கவன் நிந்திக்கப் படவில்லையோ அந்தஸபையில் தலைவனாயிருப்பவன் (அவன் பாவத்தில்) பாதியை அடைகிறான். செய்தவனுக்கு நாலில் ஒன்று கிடைக்கிறது. நாலிலொன்று அந்த ஸபையிலுள்ளவர்களிடம் சேருகிறது. எந்த ஸபையில் நிந்திக்கத் தக்கவன் நிந்திக்கப்படுகிறானோ அதில்

ஸபைத் தலைவன் பாபமில்லாதவனாகிறான். ஸபையிலிருப்பவர்களும் பாவத்திலிருந்தும் விடுபடுகிறார்கள். பாவமும் செய்தவனைச் சாருகின்றது' என்றுசொல்லிற்று. ப்ரஹ்லாதன், ஹம்ஸத்தை நோக்கி, 'ஓ! ஹம்ஸமே! தத்வத்தைக் கேட்கிறேன். அறியாமையினாலேயோ ஆசையினாலேயோ பொய்யான வார்த்தையைச் சொல்லுவானானால் தவறாக எடுத்து உரைத்தவன் எவ்விதம் வசிப்பான்?' என்று கேட்டான். ஹம்ஸமும், 'ஒருஸ்திரீ இருக்கையில் மற்றொருத்தி விவாகம் செய்யப்பட்டால் அந்த மூத்தாளும், சூதாட்டத்தில் அபஜயத்தை அடைந்தவனும், சுமைசுமந்து அங்கம் நைந்தவனும் அந்தராத்திரி முழுவதும் எவ்விதம் வஸிப்பார்களோ அவ்விதம் தவறாகச் சொன்னவனும் [1] வஸிப்பான். பட்டணத்தில் கோட்டைக்கு வெளியில் தடுக்கப்பட்டுப் பசியுடன்கூடி அனேகம் பகைவர்களைப் பார்க்கின்றவன் (இராத்திரி முழுவதும் எவ்விதம் துக்கத்துடன் வாஸத்தைச் செய்வானோ) அவ்விதமே தவறாகச் சொன்னவனும் வஸிப்பான். பிரியனான மித்ரன்விஷயத்தில் கபடம் செய்தவனும் துரோகம் செய்யப்பட்டவனும் எல்லாப் பொருளையும் இழந்தவனும் (அது அது செய்யப்பட்ட) ராத்ரி முழுதும் எவ்விதம் வஸிப்பாரோ அவ்விதம் மாறாகச் சொன்னவனும் வஸிப்பான். [2] ஆட்டுக்காகப் பொய்சொல்லுபவன் முன்னோர்களான ஐந்து பேர்களையும் நாசம் செய்தவனாவான்; [3] கோவுக்காகப் பொய்சொல்லுபவன் முன்னோர்கள் பத்துப்பேர்களைக் கொன்றவனாவான்; குதிரையினிமித்தம் பொய்சொல்லுபவன் நூறு பேர்களை நாசம் செய்தவனாவான்; மனிதனிமித்தம் பொய்சொல்லுபவன் ஆயிரம் பேர்களை நாசம்செய்தவனாவான்; ஸ்வர்ணத்தினிமித்தம் பொய்சொல்லுபவன் பிறந்தவர்களையும் பிறக்கப் போகின்றவர்களையும் கொன்றவனாவான்; பூமியினிமித்தம் பொய்சொன்னால் எல்லாவற்றையும் கொன்றவனாவான்; (ஆகையால்) [4] பூமியினிமித்தம் பொய் சொல்லாதே' என்று சொல்லிற்று.

ப்ரஹ்லாதன், (புத்திரனை நோக்கி), 'விரோசன! அங்கிரஸ் என்னிலும் சிறந்தவர்; ஸுதன்வா உன்னிலும் சிறந்தவரே; உன் மாதாவைக்காட்டிலும் இவருடைய மாதா சிறந்தவளே. ஆகையால், நீ இவரால் ஜயிக்கப்பட்டாய். விரோசன! இந்த ஸுதன்வா உன்னுடைய பிராணனுக்கு எஜமானர்' என்றுசொல்லிவிட்டு, (ஸுதன்

1 'அவ்வித துக்கத்தை அடைவான்' என்பது கருத்து.

2, 3 இவற்றைக் கொல்லுவதற்காக.

4 'பூமிக்குகிகரான கேசினியினிமித்தம்' என்பது பழையவுரை.

வாவைநோக்கி) 'ஓ! ஸுதன்வாவே! விரோசனன் மறுபடியும் உம்மால் கொடுக்கப்பட விரும்புகிறேன்' என்று சொன்னான். ஸுதன்வா, 'ஓ! பிரஹ்லாதனே! நீ தர்மத்தைக்கைப்பற்றி ஆசையால் பொய்யைச் சொல்லாமையால் கிடைக்கஅரிய புத்திரனைத் திரும்ப உனக்குக் கொடுக்கிறேன். ஆனால், பிரஹ்லாத! என்னால் கொடுக்கப்பட்ட உன்னுடைய புத்திரனை இந்த விரோசனன் சிறுமியானகேசினியின் முன்னே எனது [1]பாதங்களை ப்ரக்ஷாலனம் செய்யவேண்டும்' என்று சொன்னார்.

ஓ! அரசச்ரேஷ்டரே! ஆகையால், ஒரு பூமியினிமித்தமும் பொய்யைச்சொல்ல அருகரல்லீர். புத்திரனிமித்தம் (உண்மையைச்) சொல்லாமல் புத்திரர்களோடும் மந்திரிகளோடும் நாசத்தைஅடையாதீர். தேவர்கள், மாடுமேய்ப்பவன்போலக் கோலையெடுத்துக் கொண்டு (மனிதனைக்) காக்கவில்லை. எவனைக் காக்கவிரும்புகின்றார்களோ அவனுக்கு நல்லபுத்தியை உண்டுபண்ணுகிறார்கள். ஒரு மனிதன் எவ்வளவுக்கெவ்வளவு நல்லகாரியத்தில் மனத்தைச் செலுத்துகிறானோ அவ்வளவுக்கவ்வளவு அவனுக்கு விரும்பினவையெல்லாம் ஸித்திக்கின்றன. இந்தவிஷயத்தில் சந்தேகமில்லை. கபடத்தோடிருக்கின்ற இந்தமாயாவியை வேதங்கள் பாவத்திலிருந்தும் கரையேற்றுவதில்லை. சிறகுமுளைத்த பக்ஷிகள் கூட்டை(த்தள்ளுவது)போல் வேதங்கள் இவனை முடிவுக்காலத்தில் தள்ளிவிடுகின்றன. கட்குடித்தலையும், கலகத்தையும், ஜனக்கூட்டத்துடன் வைரத்தையும், கணவனையும் மனைவியையும் பிரிப்பதையும், ஞாதிகளைப்பேதிப்பதையும், ராஜத்துவேஷத்தையும், ஸ்திரீபுருஷர்களின் விவாதத்தையும், மிக்க கெட்டமார்க்கத்தையும் தள்ளத்தக்கவைகளாகச் சொல்லுகின்றார்கள். ரேகைபார்த்துச் சொல்லுகிறவனையும் [2] முன்பு திருடனாயிருந்து பின் வாணிபம்செய்பவனையும் [3] சலாகைவைத்துக்கொண்டு (யோகிவேஷம் பூண்ட) வஞ்சகனையும் வைத்தியனையும் பகைவனையும் நண்பனையும் [4] காயகனையும் இவ்வேழுபேர்களையும் மத்யஸ்தர்களாகச்

---

1 'என்முன்னிலையில் கேசினியின்பாதங்களில் மஞ்சள்பூசவேண்டும்' என்பது பழையவுரை.

2 'தராசு முதலியவற்றால் ஏமாற்றுகிறவன்' எனினுமாம்.

3 'கம்பி அல்லது கயிறுமுதலியன வைத்துக்கொண்டு சகுனமுதலியன சொல்லி ஏமாற்றுகிறவன்' என்பது பழையவுரை.

4 'குசீலவ' என்பது மூலம்; 'இழிவான தன்மையுடையவன்' என்பது பழையவுரையின் கருத்து.

செய்யக்கூடாது. அபயத்தை அளிக்கிறவைகளான அக்னிஹோத்ரம், மௌனம், அத்யயனம், யஜ்ஞம் இந்நான்கும் கௌரவத்திற்காகச் செய்யப்பட்டால் கபடமாகச் செய்யப்பட்டவைகளாகிப் பயத்தை அளிக்கின்றன. வீட்டில் தீ வைக்கிறவனும் விஷமிடுகிறவனும் பத்னியை வ்யபிசரிக்கச்செய்து ஜீவிக்கிறவனும் ஸோமலதையை விற்கிறவனும் ஆயுதம் செய்கிறவனும் கோட்சொல்லுகிறவனும் மித்திரனுக்குத் துரோகம்செய்கிறவனும் பரதாரத்தில் பற்றுதலுள்ளவனும் [1] ப்ரூணஹத்தி செய்தவனும் குருதாரகமனம் செய்தவனும் கட்குடிக்கின்ற இருபிறப்பாளனும் மிக்ககுரூரனும் அசுசியாயிருப்பவனும் நாஸ்திகனும் வேதநிந்தை செய்பவனும் உபநயனமுதலான ஸம்ஸ்காரமில்லாதவனும் [2] கிராமபுரோகிதனாயிருப்பவனும் [3] உழவு செய்பவனும் பலமிருந்தும் ரக்ஷியென்று சொல்லப்பட்டும் ஹிம்ஸிக்கிறவனும் இவர்களெல்லாரும் ப்ரம்மஹத்திசெய்தவனுக்கு ஒப்பாவார்கள். உருவமுள்ள பொருளானது (இருளாயிருக்கையில்) துரும்புப் பந்தத்தினாலும், தர்மமானது நடையினாலும், ஸாதுவானவன் (துன்பம்செய்யாமைமுதலிய) வியவகாரத்தினாலும் அறியப்படுகின்றனர். பயங்கள் நேரிட்டபொழுது சூரனும், அர்த்தங்களுக்குக் கெடுதல்நேரிட்டபொழுது தீரனும், பஞ்சம்முதலான ஸங்கடங்களும் ஆபத்துக்களும் நேர்ந்தபொழுது மித்ரர்களும் சத்துருக்களும் அறியப்படுகிறார்கள். முதுமையானது ரூபத்தையும், ஆசையானது தைரியத்தையும், மிருத்யுவானவன் பிராணன்களையும் அஸூயையானது தர்மம்செய்தலையும் கோபமானது ஸம்பத்தையும் அனரியர்களைஸேவித்தலானது சீலத்தையும் காமமானது லஜ்ஜையையும் அபகரிக்கின்றன. (செல்வமுதலியவற்றாலுண்டான) செருக்கானது எல்லாவற்றையுமே அபகரிக்கிறதல்லவா ? குரோதமுள்ளவனுக்கு அர்த்தம் இல்லை ; ஹிம்ஸிக்கிறவனுக்கு மித்ரனில்லை. குரூரனுக்கு ஸ்திரீயில்லை : ஸூகியாயிருப்பவனுக்கு வித்தையில்லை : காமிக்கு லஜ்ஜையில்லை ; சோம்பேறிக்குச் செல்வமில்லை ; உறுதியில்லாதவனுக்கு ஒன்றுமே இல்லை. செல்வமானது மங்களமான காரியத்தால் உண்டாகிறது ; ஸாமர்த்தியத்தால் விருத்தியடைகிறது ; சீக்கிரமான செய்கையால் வேரூன்றுகிறது ; அடக்கத்தால் நிலைக்கின்றது. அறிவு, குடிப்

1 சாந்திபர்வம் 43-வது பக்கம் குறிப்பில் காண்க. 2 'அரசாங்க உத்யோக வலிமையால் எல்லா வியாபாரிகளிடமும் ஸ்ருவமென்னும் கருவியால் தானிய முதலியவற்றை வாங்குகிறவன்' எனினுமாம்' என்பது பழையவுரை. 3 'ரகசியமாக ஆடுமாடுகளைக் கொல்பவன்' என்பது இங்கிலீஷ் மொழி பெயர்ப்பு.

பிறப்பு, அடக்கம், கல்வி, பராக்ரமம், மிதமாகப் பேசுதல், சக்திக்குத்தக்கபடி தானம், நன்றியறிதல் என்கிற எட்டுக்குணங்களும் மனிதனைப் பிரகாசிக்கச் செய்கின்றன. ஓ! ஐய! மிக்கமகிமை பொருந்திய இந்தக்குணங்களை ஒரு குணமானது பலாத்கரித்துச் சேருகிறது. அரசனானவன் எப்பொழுது ஒரு மனிதனைப் பூஜிக்கிறானோ அப்பொழுது அந்த ராஜபூஜையாகிற குணமானது (அவனிடத்தில்) எல்லாக்குணங்களுக்கும் மேற்பட்டு விளங்குகின்றது. ஓ! அரசரே! (சொல்லப்போகிற) இந்த எட்டுக்களும் மனிதலோகத்தில், ஸ்வர்க்கலோகத்திற்கு முன் அடையாளங்களாயிருக்கின்றன. இவைகளில், நான்குகள் [1] ஸத்துக்களால் தேடி அடையப்படுகின்றன. இவைகளில், (மற்ற) நான்குகளை ஸத்துக்கள் அனுசரித்து நடக்கின்றார்கள். ([2] அவைகளாவன:-) யாகம் தானம் அத்தியயனம் தவம் இந்நான்குகளும் [3] ஸத்துக்களால் தேடி அடையப்படுகின்றன. அடக்கம், ஸத்யம், நேர்மை, அஹிம்ஸை இந்நான்குகளையும் ஸத்துக்கள் அனுசரித்து நடக்கின்றார்கள். யாகம், தானம், அத்யயனம், தவம், ஸத்யம், பொறுமை, தயை, லோபமின்மை என்று தர்மத்திற்கு எட்டுவிதமான மார்க்கங்கள் கருதப்பட்டிருக்கின்றன. அவைகளில் முந்தின நான்குகளுடைய வர்க்கமானது டம்பத்திற்காகவும் செய்யப்படுகிறது. பின்னுள்ள நான்குகளின் கூட்டமானது மஹாத்மாக்களைத் தவிர மற்றவர்களிடம் இருக்கிறதில்லை. எதில் பெரியோர்களில்லையோ அது ஸபையன்று. எவர்கள் தர்மத்தைச் சொல்கிறதில்லையோ அவர்கள் பெரியோர்களல்லர். எதில் ஸத்யமில்லையோ அது தர்மமாகாது. எது கபடத்துடன் கூடியிருக்கிறதோ அது ஸத்யமாகாது. ஸத்யம், விநயத்திற்குரிய லக்ஷணம், அத்தியயனம், தேவதைகளின் உபாஸனம், குலத்திற்கு உசிதமான காரியம், ஒழுக்கம், பலம், தனம், சூரத்தனம், யுக்தியுடன்கூடின வார்த்தை இந்தப் பத்தும் ஸ்வர்க்கத்திற்குக் காரணங்கள். பாவத்தைச் செய்கிறவன் பாவமான கீர்த்தியுடையவனாகப் பாவத்தின் பயனையே அனுபவிக்கிறான். புண்ணியத்தைச் செய்கிறவன் பரிசுத்தமான கீர்த்தியுடையவனாக மிக்கபுண்ய பலத்தையே அனுபவிக்கிறான். ஆகையால், மனிதன் கடுமையான விரதமுடையவனாகப் பாவத்தைச் செய்யாமலிருக்கவேண்டும். பாவமானது அடிக்கடி செய்யப்பட்டால் அறிவை நாசம் செய்கிறது. அறிவழிந்தமனிதன் எந்நாளும் பாவத்தையே செய்ய ஆரம்பிக்கிறான். புண்ணியமானது அடிக்கடி செய்யப்பட்டால் அறிவை விருத்தி

1-2-3 'ஸாதுக்களிடம் எப்பொழுதுமிருக்கின்றன' என்பது பழையவுரை.

செய்கிறது. அறிவு விருத்தியடைந்த மனிதன் எந்நாளும் புண்ணியத்தையே செய்ய ஆரம்பிக்கிறான். புண்ணியத்தைச் செய்கிறவன் புண்ணியமான புகழுடையவனாகிப் புண்யமான ஸ்தானத்தையே அடைவான். ஆகையால், மனிதன் மனத்தை நன்கு ஒருவழிப் படுத்தினவனாகிப் புண்ணியத்தையே செய்யவேண்டும். அஸூயையைச் செய்கிறவனும் மர்மத்தைப் பேதிக்கிறவனும் க்ரூரமாகப் பேசுகிறவனும் வைரத்தைச் செய்கிறவனும் ரகசியமாக அப்ரியத்தைச் செய்கிறவனுமான மனிதன் பாவத்தைச் செய்து விரைவில் பெரிதான கஷ்டத்தை அடைவான். அஸூயையைச் செய்யாதவனும் அறிவைச் செலுத்துகிறவனுமான மனிதன் எப்பொழுதும் சுபகாரியங்களையே அனுஷ்டித்துப் பெரிய கஷ்டத்தை அடைகிறதில்லை; எங்கும் விளக்கத்தையும் அடைகிறான். எவன் அறிவுடையோர்களிடமிருந்து அறிவையே ஸம்பாதிக்கிறானோ பண்டிதனான அந்த அறிஞன் தர்மார்த்தங்களை அடைந்து ஸுகமாக விருத்திஅடைவதற்குத் தக்கவனாகிறான். எதனால் ராத்திரியில் ஸுகமாக வஸிப்பானோ அதைப் பகலிலேதானே செய்து கொள்ளவேண்டும். எதனால் மாரிக்காலம் முழுதும் ஸுகமாக வஸிப்பானோ அதனை (மற்ற) எட்டு மாதத்திலே செய்து கொள்ளவேண்டும். எதனால் முதுமைக் காலத்தில் ஸுகமாக வஸிப்பானோ அதனை இளமையிலேயே செய்து கொள்ள வேண்டும். எதனால் மரித்ததின் பிறகு ஸுகமாக வஸிப்பானோ அதனை உயிருள்ளளவும் செய்யவேண்டும். ஜீர்ணமான அன்னத்தையும், யௌவனம் கடந்த மனைவியையும், யுத்தத்தில் வெற்றியடைந்த சூரனையும், தத்வத்தை அறிந்த தவசியையும் சிலாகிக்கின்றார்கள். அதர்மத்தால் அடையப்பட்ட தனத்தாலே எந்தத் [1]துவாரம் அடைக்கப்படுகிறதோ அது அடைபடாததே ஆகிறது. அதைத்தவிர, வேறு துவாரமும் திறக்கிறது. நல்ல மனமுடையவர்களுக்குக் குருவானவர் சிக்ஷகர். துஷ்டமனமுள்ளவர்களுக்கு அரசன் சிக்ஷகன். உள்ளே மறைக்கப்பட்ட பாவத்தையுடையவர்களுக்கு ஸூரிய புத்ரனான யமன் சிக்ஷகன். ரிஷிகள், நதிகள், மஹாத்மாக்களுடைய குலங்கள், ஸ்திரீகளுடைய கெட்டநடை இவற்றின் மூலமானது விசாரிக்கத் தக்கதில்லை. ஓ! அரசரே! பிராம்மணர்களுடைய பூஜையில் பற்றுள்ளவனும் கொடையாளியும் ஞாதிகளிடம் நேர்மையாயிருப்பவனும் ஒழுக்கமுள்ளவனுமான அரசன் நெடுங்காலம் பூமியைப் பரிபாலனம் செய்கிறான். சூரனும் கற்றறிந்தவனும் ஊழியம் செய்யும்

1 தோஷம்.

முறைஅறிந்தவனுமாகிய மூன்று மனிதர்களும் ஸுவர்ணம் விளையும் பூமியை ஸம்பாதிக்கின்றார்கள். ஓ! பாரதரே! புத்தியினால் செய்யப் பட்ட கர்மங்கள் சிறந்தவைகளும் புஜபலத்தால் செய்யப்பட்டவை மத்யமமானவைகளுமாகின்றன; காலால் நடத்தலால் செய்யப்பட்ட வை இழிந்தவைகளும் சுமத்தலால் செய்யப்பட்டவை மிக இழிந்தவை களுமாக இருக்கின்றன. துரியோதனனிடத்திலும் சகுனியினிடத் திலும் மூடனான துச்சாஸனனிடத்திலும் கர்ணனிடத்திலும் நீர் அதி காரத்தை வைத்துவிட்டு எப்படி ஸம்பத்தை விரும்புகிறீர்? ஓ! பரத ஶ்ரேஷ்டரே! எல்லாக் குணங்களோடும்கூடின பாண்டவர்களோ பிதாவினிடம்போல உம்மிடத்திலிருக்கின்றார்கள். நீர் அவர்களிடத் தில் புத்திரர்களிடத்திலிருப்பதுபோல இருக்கக்கடவீர்.

## முப்பத்தாறுவது அத்யாயம்.

## ப்ரஜாகரபர்வம். (தொடர்ச்சி.)

(விதுரர், ஆத்ரேயர் ஸாத்யர்களுக்குச் சொல்லிய நீதியையும் மஹாகுல லக்ஷணத்தையும் த்ருதராஷ்டிரனுக்குக் கூறிப் பாண்டவர்களுடன் ஸந்தி செய்யும் படி சொல்லியது.)

இந்த விஷயத்திலேயே ஆத்ரேயருக்கும் ஸாத்யர்களுக்கும் நடந்த ஸம்வாதரூபமான பழமையான இதிஹாஸத்தைச் சொல்லு கின்றார்களென்று நமக்குக் கேள்வி. முன் காலத்தில் ஸாத்யர்களென் கிற தேவர்கள், ஹம்ஸரென்னும் ஸந்யாஸிரூபத்துடன் ஸஞ்சரிக் கிறவரும் கடுமையான வ்ரதமுடையவரும் மஹா ப்ராஜ்ஞருமான ஆத்ரேய மஹரிஷியை நோக்கி, 'ஓ! மஹரிஷியே! நாங்கள் ஸாத் யர்களென்கிற தேவர்கள். உம்மைப் பார்த்து (இப்படிப்பட்டவ ரென்று) அனுமானம் செய்வதற்குச் சக்தர்களாகவில்லை. சாஸ்திரக் கேள்வியினால் நீர் தீரரும் புத்திமானுமாக எங்களால் நினைக்கப்பட்டீர். வித்வானுக்கு லக்ஷணமும் உதாரமுமான வார்த்தையைச் சொல்ல வேண்டும்' என்று வினவினார்கள். (அப்பொழுது), ஸந்யாஸியான வர் (அவர்களை நோக்கி), 'ஓ! அமரர்களே! இந்தக் காரியமானது என்னால் (குருவிடமிருந்து) கேட்கப்பட்டது. மனிதன் தைர்யம், அடக்கம், ஸத்தியத்தையும் தர்மத்தையும் அனுஸரித்து நடப்பது, மனத்தினுடைய எல்லா (ஸங்கற்ப) முடிச்சுக்களையும் விலக்கி ப்ரியத் தையும் அப்பிரியத்தையும் தனக்குச் சமமாகச் செய்துகொள்ளல்

இவற்றை அடையவேண்டும். நிந்திக்கப்பட்டவன் திரும்பி நிந்திக்கக்கூடாது. பொறுக்கிறவனுடையகோபமே நிந்திக்கிறவனை எரிக்கிறது. நிந்திக்கிறவனுடைய புண்யத்தையும் (பொறுத்தவன்) அடைகிறான். பிறனை நிந்திக்கிறவனும் அவமதிக்கிறவனும் மித்திரனுக்குத் துரோகஞ்செய்கிறவனும் ஆகக்கூடாது. தவிரவும், இழிவானவனுக்கு வேலைக்காரனாகவும் இருக்கக்கூடாது. கர்வமுடையவனும் இழிவான தொழிலுடையவனுமாயிருக்கக்கூடாது. குரூரமும் கோபத்துடன்கூடினதுமான வார்த்தையைத் தள்ளவேண்டும். இவ்வுலகில் கடுமையானசொற்கள் மனிதர்களுடைய மர்மங்களையும் எலும்புகளையும் இருதயத்தையும் உயிர்களையும் எரிக்கின்றன. ஆகையால், தர்மத்தில் பற்றுள்ளவன் எந்நாளும் கடுமையும் எரிக்கிறதுமான சொல்லை விலக்கவேண்டும். வருத்தத்தை உண்டுபண்ணுகிறவனும் கடுமையாயிருப்பவனும் குரூரமான வார்த்தையுடையவனும் மனிதர்களைச் சொற்களாகிற முட்களால் குத்துகிறவனுமான மனிதனை ஜனங்களுள் சிறிதும் திருவற்றவனும் முகத்தில்கட்டப்பட்டமிருத்யுவைத் தாங்குகிறவனுமாக அறியவேண்டும். மேன்மைபெற்ற கற்றறிந்தோன், பிறன் தன்னை மிகக் கூர்மையானவைகளும் அக்கினிபோலவும் ஸூரியன்போலவும் ஜ்வலிக்கிறவைகளுமான சொல்லம்புகளாலே மிகவும் அடிப்பானேயானால் (தான்) தாழ்த்தப்பட்டானானாலும், 'எனக்குப் புண்யத்தை உண்டுபண்ணுகிறான்' என்று நினைக்கவேண்டும். நல்லவனையோ கெட்டவனையோ தவசியையோ திருடனையோ ஒருவன் அடுப்பானானால் ஆடையானது சாயத்தின்வசத்தை அடைவதுபோல அவன் அப்படியே அவர்களின்வசத்தை அடைகிறான். எவன் அதிகமான வார்த்தையைச் சொல்லவில்லையோ (பிறனைக்கொண்டு) சொல்லும்படி செய்யவுமில்லையோ அடிக்கப்பட்டும் எதிர்த்து அடிப்பதில்லையோ அடிக்கும்படி செய்கிறதுமில்லையோ தனக்குக் கேடுசெய்தவனைக் கொல்லவிரும்புகிறதுமில்லையோ (அவன்) வரும்பொழுது தேவர்கள் அவனிடம் ஆசைவைக்கிறார்கள். பேசுவதைக்காட்டிலும் பேசாமலிருப்பதைச் சிலாக்யமாக (=முதலாவதாகச்) சொல்லுகிறார்கள். பேசினால் உண்மையைப்பேசவேண்டும்; அது இரண்டாவது. அப்படிப் பேசுவதிலும் பிரியத்தைச்சொல்லவேண்டும்; அது மூன்றாவது. அப்படிச் சொல்வதிலும் தர்மமாயுள்ளதைச் சொல்லவேண்டும்; அது நான்காவது. மனிதன் எப்படிப்பட்டவர்களுடன் சேருகிறானோ எப்படிப்பட்டவர்களுடன் வேலைசெய்கிறானோ எப்படிப்

பட்டவனாக ஆக விரும்புகிறானோ அப்படிப்பட்டவனாக ஆகிறான். எதிலிருந்தும் எதிலிருந்தும் நிவிருத்தியடைகிறானோ அதிலிருந்தும் அதிலிருந்தும் விடுபடுகிறான். எல்லாவற்றிலிருந்தும் நிவிருத்திஅடைந்தால் அணுமாத்திரமான துக்கத்தையும் அறியமாட்டான். இவன் வெல்லப்படுகிறதும்இல்லை; பிறர்களை வெல்ல விரும்புகிறதுமில்லை; வைரத்தைச் செய்கிறதுமில்லை; இடையூற்றைச் செய்கிறதுமில்லை; நிந்தைகளிலும் ஸ்துதிகளிலும் ஸமமான ஸ்வபாவத்தையுடையவனாகத் துக்கிக்காமலும் ஸந்தோஷத்தை அடையாமலும் இருக்கிறான். எவன் எல்லாருக்கும் க்ஷேமத்தை விரும்புகிறானோ, கெடுதலில் மனத்தைச் செலுத்துகிறதில்லையோ, ஸத்தியவாதியும் மென்மையும் அடக்கமுமுடையவனுமாயிருக்கிறானோ அவன் தான் உத்தமனான மனிதன். எவன் பயனில்லாதபடி இன்சொல் கூறுகிறதில்லையோ, கொடுப்பதாகச் சொன்னால் கொடுத்து விடுகிறானோ, பிறனுடைய குற்றத்தை அறிகிறானோ, அவன் மத்தியமமான மனிதன். (மற்றவன்) தகாதவற்றைக் கட்டளையிடுகிறவனும், கெடுக்கப்பட்டவனும், நிந்திக்கப்பட்டவனும், நன்றிமறந்தவனுமாகக் கோபத்தின் வசத்திலிருந்து திரும்புகிறதில்லை. கெட்டசித்தமுடையவன், ஒருவனுக்கும் மித்திரனாகிறதில்லை. இந்த்அம்சங்கள் இவ்வுலகில் அதமனானமனிதனைச் சேர்ந்தவைகள். எவன் தன்னையே சங்கித்தவனாகிப் பிறர்களிடமிருந்தும் நன்மையைநம்புகிறதில்லையோ மித்திரர்களை நிராகரணம் செய்கிறானோ, அவன் அதமனான மனிதன். எவன் தனக்கு ஸம்பத்தை விரும்புகிறானோ அவன் உத்தமர்களையே அடுக்கவேண்டும். (அவசியமான) ஸமயம்நேரிட்டால் மத்தியமர்களையும் அடுக்கலாம். அதமர்களையோ (ஒருபொழுதும்) அடுக்கக்கூடாது. (அதமன்) கெட்டவர்களுடைய பலத்தினாலே, நித்தியம் முயற்சிசெய்து, அறிவினாலும் மனிதஸாமர்த்தியத்தினாலும்தனத்தை அடையவே செய்வான்; நல்லபுகழையோ அடைகிறதேயில்லை. உயர்குடிப்பிறந்தோர்களுடைய நடையையும் அடைகிறதில்லை' என்று சொன்னார்' என்று கூறினார்.

(அப்பொழுது) திருதராஷ்டிரன், 'மஹாகுலங்களின் விஷயத்தில் தேவர்களும், தர்மார்த்தங்களை நித்தியமாயுடையவர்களும், மிகுதியாக அத்தியயனம்செய்தவர்களும் ஆசைவைக்கின்றார்கள். ஓ! விதுரா! உன்னிடம் இந்தக்கேள்வியைக் கேட்கிறேன். எவைகள் மஹாகுலங்களாகின்றன?" என்று கேட்டான். விதுரர், 'தவம், ஐம்பொறியடக்கல், வேதங்களையறிதல், பொறுமை, யாகம்

[1] விவாஹங்கள், இன்சொல், அன்னதானம் இந்த எட்டுக்குணங்களும் பெரியோர்களிடத்தில் எப்பொழுதும் இவ்விதமே இருக்கின்றன. (அவர்களின்) அந்தக்குலங்கள் மகாகுலங்கள். எவர்களுடைய நடையானது தவறுகிறதில்லையோ, வம்சமும் தவறுகிறதில்லையோ, சித்தத்தின் தெளிவுடன் எவர்கள் தர்மத்தை அனுஷ்டிக்கிறார்களோ, எவர்கள் தம் குலத்தில் சிறந்தபுகழை விரும்புகிறார்களோ, பொய்யைத் தள்ளியிருக்கிறார்களோ (அவர்களின் அந்தக்குலங்கள்) மகாகுலங்கள். குலங்கள், யாகமின்மையாலும் கெட்டவிவாகங்களாலும் வேதத்தை விட்டதனாலும் தர்மத்தைக்கடந்ததனாலும் கெட்டகுலமாதலை அடைகின்றன. தேவாலயத்தின் திரவியங்களை நாசம் செய்வதினாலும், பிராமணர்களின் பொருளை அபகரித்தலினாலும், பிராமணர்களை மீறிநடத்தலினாலும், நல்ல குலங்கள் கெட்ட குலங்களாகின்றன. ஓ! பாரதரே! பிராம்மணர்களை அவமதிப்பதினாலும், அபவாதம் சொல்வதினாலும், அடைக்கலம்வைத்த தனத்தை எடுத்துக்கொள்வதினாலும் நல்லகுலங்கள் கெட்டகுலங்களாகின்றன. கோக்களையும் மனிதர்களையும் தனங்களையுமுடையவைகளாயிருந்தாலும் நடக்கையால் இழிவானவைகளாயிருக்கிற குலங்கள் குலக்கணக்கில் சேருகிறதில்லை. சிறிது செல்வமுடையவைகளாயினும், நன்னடை குறையாத குலங்கள் குலக்கணக்கில் சேருகின்றன. பெரும் புகழையும் தம்மிடம் இழுக்கின்றன. சீலத்தை முயன்று காக்கவேண்டும். தனமானது வரவும் செய்கிறது; போகவும் செய்கிறது. தனத்தால் குறைந்தவன் குறைந்தவனல்லன். சீலத்தால் கெட்டவனே கெட்டவனே. சீலத்தால் இழிவடைந்தகுலங்கள் வித்தைகளாலும் பசுக்களாலும் குதிரைகளாலும் மிகவும் செழிப்பான கிருஷியினாலும் முன்னுக்கு வருகிறதில்லை. நம்முடையகுலத்திலே ஓர் அரசனும் வைரத்தைச் செய்கிறவனும், (பிறர்களுக்குக்) கட்டுப்பட்டவனும், பிறர்பொருளை அபகரிக்கிறவனும், மித்திரத்துரோகம் செய்கிறவனும், வஞ்சகனும், பொய்சொல்லுகிறவனும், தாய்தந்தைகளுக்கும் தேவதைகளுக்கும் அதிதிகளுக்கும் (போஜனம் செய்விப்பதற்கு) முன் புஜிக்கிறவனுமா யிருக்கவேண்டாம். நம்மில் எவன் ப்ராம்மணர்களைத் துன்பப்படுத்துவானோ, நம்மில் எவன் ப்ராம்மணர்களைப் பகைப்பானோ, நம்மில் எவன் கிருஷிக்கு இடையூறு செய்வானோ அவன் நமது ஸபையை அடையவேண்டாம். (அதிதிகளுக்குக்கொடுக்கும்படி) [2] திருணங்களும் தரையும் ஜலமும் நான்காவதான இன்

1 தக்க குலங்களில் ஸம்பந்தம் செய்தல். 2 பாய் முதலியன.

சொல்லும் ஆகிய இவை ஸாதுக்களுடைய வீடுகளில் ஒருபொழுதும் இல்லாமல் போகிறதில்லை. ஓ! அரசரே! பேரறிவுள்ளவரே! மேலான ச்ரத்தையுடன் கொண்டுவரப்பட்டவைகளான இவைகள் தர்மவான்களான புண்ணியசாலிகளுக்குப் பூஜையைச் செய்வதற்கு ஏற்பட்டிருக்கின்றன. ஓ! அரசரே! சிறியதாயிருந்தாலும் [1] ஸ்யந்தன மரமானது பாரத்தைத் தாங்குதற்குச் சக்தியுள்ளது. மற்ற மரங்கள் அவ்விதம் சக்தியுள்ளவைகளாகிறதில்லை. இவ்விதம் பெரிய வம்சத்தில் பிறந்தவர்கள் முயற்சியுள்ளவர்களாகிக் (குடும்ப) பாரத்தைப் பொறுப்பவர்களாகின்றனர். மற்றமனிதர்கள் அப்படி ஆகிறதில்லை. எவனுக்கு எவனுடையகோபத்தினின்றும் பயமிருக்கிறதோ அவனுக்கு அவன் மித்திரனல்லன். எவன் பயந்து உபசரிக்கப்படவேண்டியவனோ அவனும் மித்ரனல்லன். எந்த மித்திரனிடத்தில் பிதாவினிடம் போல் ஆறுதலை அடைகிறானோ அவன்தான் மித்திரன். மற்றவை (பேருக்கு மாத்திரம்) சேர்க்கைகள். எவனுயிருந்தாலும் (காரணத்தால்) கட்டுப்படாமல் மித்திரத்தன்மையுடன் இருக்கிறவனே பந்து; அவனே மித்திரன்; அவனே கதி; அவனே மேலான ஸ்தானம்; சஞ்சலமான சித்தமுடையவனும், பெரியோர்களை அடுக்காதவனும், அறிவு மயக்கமுள்ளவனுமான மனிதனுக்கு மித்திரனுடைய சேர்க்கையானது எப்பொழுதும் நிலையில்லாததாயிருக்கிறது. சலிக்கின்ற சித்தமுடையவனும், புத்தியில்லாதவனும், இந்திரியங்களின் வசத்தை அடைந்தவனுமான மனிதனை, அர்த்தங்கள், வற்றின குளத்தை அன்னப்பறவைகள் சூழ்வதுபோலச் [2] சுற்றியிருக்கின்றன. காரணமில்லாமல் கோபிப்பதும் காரணமில்லாமல் மகிழ்வதுமாகிய அஸாதுக்களுடைய சீலமானது சஞ்சலமான மேகம் போன்றது. பூஜிக்கப்பட்டவர்களும் உபகரிக்கப்பட்டவர்களுமான எவர்கள் (அந்த) மித்திரர்களுடைய (நன்மையின் பொருட்டு) ஏற்படுகிறதில்லையோ, அந்த நன்றிகொன்றவர்களை மரித்தபொழுதும் ஊனுண்பவைகளும் தின்கிறதில்லை. தனம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் மித்திரர்களை யாசிக்கவே வேண்டும். யாசிக்காதவன் மித்திரர்களுடைய நட்பின் உறுதியையும் உறுதியின்மையையும் அறிகிறதில்லை. ஸந்தாபத்தினால் நிறம் குன்றுகிறது; ஸந்தாபத்தினால் பலம் நழுவுகின்றது; ஸந்தாபத்தினால்

1 தேர்க்காலுக்கு உபயோகமான உறுதியுள்ள ஒருமரம்.

2 'விலகிநிற்பன' என்பது கருத்து.

ஞானம் நசிக்கிறது. ஸந்தாபத்தினால் (மனிதன்) வியாதியை அடைகிறான். சோகத்தால் அடையக்கூடிய நன்மை ஒன்றுமில்லை; சரீரமும் தாபத்தை அடைகிறது; பகைவர்களும் மிகச் சந்தோஷிக்கின்றார்கள். (ஆகையால்,) சோகத்தில் மனத்தைச் செலுத்தாதீர். மனிதன் அடிக்கடி மரிக்கவும் செய்கிறான்; பிறக்கவும் செய்கிறான். மனிதன் அடிக்கடி குறைவையும் அடைகிறான்; விருத்தியையும் அடைகிறான். மனிதன் அடிக்கடி யாசிக்கவும் செய்கிறான்; யாசிக்கப்படவும் செய்கிறான். மனிதன் அடிக்கடி துக்கிக்கிறான்; (பிறரால்) துக்கிக்கவும் படுகிறான். ஸுகம், துக்கம், இருப்பு, இல்லாமை, லாபம், நஷ்டம், பிழைப்பு, இறப்பு ஆகிய இவைகள் கிரமமாக எல்லாவற்றையும் அடைகின்றன. ஆகையால், தீரனானவன் ஸந்தோஷிக்கவும் கூடாது; துக்கிக்கவும் கூடாது. இந்த [1] ஆறு இந்திரியங்களும் சஞ்சலமானவையாயிருக்கின்றன. அவைகளில், எது எது எதில் எதில் விருத்தியடைகிறதோ அதனதன் வழியாய் (அதிலதில்) இவனுடைய புத்தியானது, துவாரமுள்ள நீர்க் குடத்திலிருந்து ஜலம் ஓடுகிறதுபோல தினந்தோறும் ஓடுகிறது' என்று சொன்னார்.

திருதராஷ்டிரன், 'அரணியாகிற சரீரத்தில் கட்டப்பட்ட அக்கினி போன்றவனும், என்னால் கபடமாக உபசரிக்கப்பட்டவனும் நுட்பமான தர்மத்தினால் அடக்கப்பட்டவனுமான தர்மராஜன் யுத்தத்தினாலே மந்தர்களான எனது புத்திரர்களுடைய நாசத்தைச் செய்யப்போகிறான். இவை எல்லாம் எந்நாளும் பயத்தோடு கூடியவை. இந்த மனமும் எந்நாளும் பயத்தோடுகூடியது. ஓ! மிக்க புத்திசாலியே! எந்தப் பதமானது பயமற்றதோ அதனை எனக்குச் சொல்' என்று கேட்டான்.

விதுரர், 'ஓ! குற்றமற்றவரே! உமக்கு வித்தையும் தவமுமாகிய இவைகளைக் காட்டிலும் மற்றதில் சாந்தியை (=நன்மையை) நான் பார்க்கவில்லை. இந்திரியங்களின் நிக்ரஹத்தைக் காட்டிலும் மற்றதில் உமக்குச் சாந்தியைக் காண்கிறேனில்லை. லோபத்தைத் தள்ளுவதைக் காட்டிலும் மற்றதில் உமக்குச் சாந்தியை நான் காணவில்லை. ஒருவன் புத்தியினால் பயத்தை விலக்குகிறான்; தவத்தினால் (குரு, சாஸ்திரம் முதலிய) பெருமையை அடைகிறான். குருபணிவிடையினால் ஞானத்தை அடைகிறான்; யோகத்தினால் சாந்தியை அடைகிறான். முக்தர்கள், தானத்தாலுண்டான புண்ணியத்தை ஆச்ரயிக்காதவர்களும் வேதத்தாலுண்டான புண்ணியத்தை ஆச்ரயிக்காதவர்

1 பொறிகள் ஐந்தும் மனம் ஒன்றும்.

களும் விருப்பு வெறுப்புக்களை விட்டவர்களுமாகி இவ்வுலகில் ஸஞ்சரிக்கின்றார்கள். நியமத்துடன் கூடிய அத்யயனமும் தர்மமான யுத்தமும் குறைவற்ற நல்ல கர்மமும் நன்றாகச் செய்யப்பட்ட தவமும் ஏற்பட்டால், அவைகளின் முடிவில் (மனிதன்) ஸுகமாக விருத்தியடைகிறான். (தம் இனத்தில்) பேதத்தை அடைந்தவர்கள் நல்ல விரிப்புக்களுடன் கூடின சயனங்களை அடைந்தாலும் ஒரு பொழுதும் நித்திரையை அடைகிறதில்லை. ஓ! அரசரே! ஸ்திரீகளிடத்திலும் மகிழ்ச்சியை அடைகிறதில்லை; மாகதர்களாலும் ஸூதர்களாலும் துதிக்கப்பட்டாலும் மகிழ்ச்சியை அடைகிறதில்லை. பேதத்தை அடைந்தவர்கள் ஒருகாலும் தர்மத்தை அநுஷ்டிப்பதில்லை. பேதத்தை அடைந்தவர்கள் இவ்வுலகில் ஸுகத்தை அடைகிறதில்லை. பேதத்தை அடைந்தவர்கள் கௌரவத்தையும் அடைகிறதில்லை. பேதத்தை அடைந்தவர்கள் சமத்தை விரும்புகிறதில்லை. அவர்களுக்குச் சொல்லப்பட்ட இன்சொல்லும் ருசிக்கிறதில்லை. அவர்களுக்கு இஷ்ட வஸ்துவின் லாபமும் இருக்கிற வஸ்துவின் பாலனமு முண்டாகிறதே இல்லை. ஓ! அரசரே! பேதத்தை அடைந்தவர்களுக்கு விநாசத்தைத் தவிரச் சிறந்ததான ஒருகதியும் இல்லை. கோக்களிடத்தில் (பால் முதலியவற்றின்) பெருக்கு உண்டாகக்கூடியது. பிராம்மணனிடத்தில் தவம் உண்டாகக்கூடியது. ஸ்திரீகளிடத்தில் சாபல்யம் உண்டாகக்கூடியது. ஞாதிகளிடத்திலிருந்து பயம் உண்டாகக்கூடியது. '1 மெலியனவாயிருந்தாலும் நீண்டவைகளும் பலவும் ஸமமாயிருப்பவைகளுமான நூல்களும், பலவாயிருப்பதால் பல வருஷங்கள் (இழுக்கப் படுதல் முதலிய) பலவான ஆயாஸங்களைப் பொறுக்கின்றன' என்பதே ஸாதுக்களுக்கு உபமானம். ஓ! பரதஸ்ரேஷ்டரே! திருதராஷ்டிரரே! ஞாதிகளானவர்கள் பிரிந்தால், பிரிக்கப்பட்ட கொள்ளிகள் புகைவதுபோல மங்குகின்றார்கள். சேர்ந்தால், சேர்ந்த கொள்ளிகள் போல ஜ்வலிக்கின்றார்கள். திருதராஷ்டிரரே! எவர்கள் பிராம்மணர்களிடத்திலும் ஸ்திரீகளிடத்திலும் ஞாதிகளிடத்திலும் கோக்களிடத்திலும் சௌரியத்தைச் செலுத்துகிறார்களோ அவர்கள் பக்குவமான பழம் காம்பிலிருந்து விழுவதுபோல விழுகின்றார்கள். பெரிதும் பலமுள்ளதும் நன்றாக வேரூன்றினதும் கிளைகளுடன் கூடினதுமாயிருந்தாலும் ஒன்றாக முளைத்த மரமானது காற்றினால் நொடிப் பொழுதில் முறிக்கக்கூடியதே ஆகிறது. அப்படியல்லாமல், எந்த மரங்கள் நன்றாகவேரூன்றிக்கூட்டமாகச்சேர்ந்திருக்கின்றனவோ அவைகள்

1 'பாண்டவர்கள் பல வருஷம் கஷ்டத்தை ஸஹித்தார்கள்; ஸாதுக்களானதால்' என்பது கருத்து.

ஒன்றையொன்று பற்றிக்கொண்டு மிக்கவேகமுள்ள காற்றுக்களையும் பொறுக்கின்றன. இவ்விதம் குணங்களோடு கூடினவனுயிருந்தாலும் ஒருவனுயிருக்கிற மனிதனை, வாயுவானது தனியேமுளைத்த மரத்தைப் போலச் சத்துருக்களால் வெல்லப்படக்கூடியவனென்று நினைக்கிறார்கள். ஞாதிகளானவர்கள் தடாகத்திலிருக்கின்ற கருநெய்தல்மலர்கள்போல ஒருவரையொருவர்பற்றி ஒருவரையொருவர் அடுத்திருத்தலால் நன்றாக விருத்தியடைகின்றார்கள். பிராமணர்களும் கோக்களும் ஞாதிகளும் சிசுக்களும் ஸ்திரீகளும் அன்னமிட்டோர்களும் சரணமடைந்தோர்களும் கொல்லப்படத்தக்கவர்களல்லர். பெரிதானகுற்றமும் ஏற்பட்டாலும் விலக்கிவிடுவதே அவர்களுக்குத் தண்டனை. ஓ! அரசரே! பொருளுடன் கூடியிருப்பதையும் நோயில்லாமலிருப்பதையுங்காட்டிலும் மனிதனிடத்தில் சிறந்தகுணம் வேறு ஒன்றில்லை. உமக்கு மங்களம் உண்டாகுக. ரோகிகள் மரித்தவர்களுக்கு நிகரல்லர். ஆகையால், ஓ! மகாராஜரே! வியாதியாலுண்டாகாததும், காரமுள்ளதும், தலைவலியைக் கொடுப்பதும், பாவத்துடன் கூடியதும், கடுமையும் கூர்மையும்உஷ்ணமுமுள்ளதும், ஸாதுக்களால் பானம் செய்ய (அடக்க)க் கூடியதும், தீயவர்களால் பானம் செய்ய முடியாததுமான கோபத்தைப் பானம் செய்யும்; சமனத்தை அடையும். ரோகத்தால் பீடிக்கப்பட்டவர்கள் (புஷ்பம் முதலிய) பயன்களை ஆதரிப்பதில்லை; விஷயங்களில் உண்மையை அறிகிறதில்லை. ரோகிகள் எந்நாளும் துக்கத்தோடு கூடினவர்களாகிறார்கள். தனத்தாலுண்டான போகங்களையும் ஸௌக்யத்தையும் அறிகிறதில்லை. ஓ! அரசரே! சூதாட்டத்தில் ஜயிக்கப்பட்ட த்ரௌபதியைப் பார்த்து, 'சூதாட்டத்தின் விஷயத்தில் துரியோதனனைத் தடுக்கக்கடவீர்' என்று முற்காலத்திலே என்னால் சொல்லப்பட்ட வார்த்தையை நீர் செய்யவில்லையன்றோ? பண்டிதர்கள் சூதாடுந்தன்மையை விலக்குகிறார்கள். மிருதுவாயிருப்பவனுடன் விரோதிப்பதென்பது பலத்துக்கு ஒத்ததன்று. ஸூக்ஷ்மமான தர்மமானது விரைவாகச் செய்யத்தக்கது. செல்வமானது கொடியவனிடத்தில் வைக்கப்பட்டால் பெரிதான நாசத்தை அடைகின்றது; நல்லவனிடமோ வளர்ந்து புத்ர பௌத்ரர்களை அடைகிறது. உம்முடைய புத்ரர்கள் பாண்டவர்களைக் காப்பாற்றவேண்டும். பாண்டுவின் புத்திரர்கள் உம்முடைய புத்ரர்களைக் காப்பாற்றவேண்டும். ஓ! அரசரே! கௌரவர்கள் ஸமமான சத்ருமித்திரர்களையுடையவர்களும் ஸமமானகாரியத்தையுடையவர்களும் ஸுகத்துடன்கூடினவர்களும் செழிப்படைந்தவர்களுமாக ஜீவிக்கக்கடவர். ஓ! அஜமீடவம்சததிலுதித்தவரே! இப்பொழுது நீர்

கௌரவர்களுக்கு [1]மேடாராக இருக்கிறீர். குருகுலமானது உம்முடைய அதீனமாயிருக்கிறது. ஐயா! உம்முடைய கீர்த்தியைக் காப்பதற்காக வனவாஸத்தால் தாபத்தை அடைந்த சிறுவர்களான குந்தீபுத்ரர்களை ரக்ஷிக்கக்கடவீர். ஓ! கௌரவரே! நீர் பாண்டுபுத்ரர்களுடன் ஸந்தியைச் செய்யும். உம்முடைய பகைவர்கள் [2]ரந்திரத்தை ப்ரார்த்திக்கவேண்டாம். ஓ! அரசரே! அவர்களெல்லாரும் ஸத்யத்திலே இருக்கிறார்கள். ஓ! ராஜரே! நீர் துரியோதனனை அடக்கும்.

## முப்பத்தேழாவது அத்யாயம்.

## ப்ரஜாகரபர்வம். (தொடர்ச்சி.)

(திருதராஷ்டிரன் வினவ விதுரர் ஆயுளின்குறைவுக்குக் காரணத்தையும் நீதிகளையும் சொல்லிக் கௌரவபாண்டவர்களை ஸமாதானம்செய்யும்படி சொல்லியது.)

ஓ! ராஜஶ்ரேஷ்டரே! விசித்திரவீரியரின் புத்ரரே! பிரம்மபுத்ரரான மனுவானவர் கற்பிக்கத்தகாதவனுக்குக் கற்பிப்பவனையும், சிறுலாபத்தால் ஸந்தோஷிக்கிறவனையும், பகைவனை அளவுக்கு மிஞ்சி அடுத்து க்ஷேமத்தைஅடைகிறவனையும், [3]ஸ்திரீகளைரக்ஷித்து க்ஷேமத்தை அடைகிறவனையும், யாசிக்கத்தகாதவனை யாசிக்கிறவனையும், தற்புகழ்ச்சிசெய்கிறவனையும், நல்லகுலத்தில்பிறந்துஅகாரியத்தை ஶ்ரத்தையுடன் செய்பவனையும், பலமில்லாதவனாகஇருந்து பலசாலியுடன் எந்நாளும் பகைப்பவனையும், ஶ்ரத்தையில்லாதவனுக்குச்சொல்லுகிறவனையும், விரும்பத்தகாததை விரும்புகிறவனையும், மாமனாராயிருந்துகொண்டு மருமகளுடன் பரிஹாஸத்தை நினைக்கிறவனையும், [4]மருமகளாலே பயநிவிருத்தி அடைந்தவனாகிக் கௌரவத்தை

1 'மேடீபூத:' என்பது மூலம்; 'மேட:' என்பதற்கு 'களத்தில் தாமணிகட்டுகிற கடைதறி' என்பது பொருள். 'மூளை, தான்அசையாமல் நின்று காளைகளை அடக்கி நடத்துவதுபோல, நீர் நடுநிலைமையிலிருந்து புத்திரர்களை மனம்போனபடி செல்லாமல் அடக்கவேண்டும்' என்பது கருத்து. ஆஶ்வமேதிகபர்வம் 2-ம் பக்கம் குறிப்பிற்காண்க.

2 நீர் அஜாக்ரதையாகஇருக்கும் ஸமயத்தை.

3 அவர்களால் வரும் பொருளால் பிழைப்பவன்.

4 மருமகள் வகையாரால் கடன் முதலிய ஆபத்துக்களில் காக்கப்பட்டுப் பின்னும் அவர்கள் பொருள் முதலியன கொடுத்துக் கௌரவித்தலை விரும்புகிறவன்.

விரும்புகிறவனையும், பிறர் மனைவியரை அடைகிறவனையும், ஸ்திரீயை அதிகமாக நிந்திக்கிறவனையும், (பிறரிடமிருந்து ஒன்றை) அடைந்து பின்பு நினைவில்லையென்று சொல்லுகிறவனையும், [1] தானம் செய்து விட்டுப் பிறகு கேட்கப்பட்டபொழுது தன்னைப் புகழ்ந்து கொள்ளுகிறவனையும், துஷ்டர்களை [2] நல்ல வார்த்தை சொல்லுகிறவனையும் இந்தப் பதினேழு மனிதர்களையும் ஆகாயத்தை முஷ்டிகளால் உடைக்கிறவர்களாகச் சொன்னார். மேலும், அவர்களையே, வளைக்க முடியாத இந்திரனுடைய (வான) வில்லை வளைக்கிறவர்களாகவும், அவ்வாறே, பிடிக்கமுடியாத ஸூரிய கிரணங்களைப் பிடிக்கின்றவர்களாகவும் சொன்னார். இவர்களைப் பாசத்தைக் கையில்கொண்டவர்களான யமபடர்கள் நரகத்தை அடைவிக்கிறார்கள். எந்த மனிதன் எவன் விஷயத்தில் எவ்விதம் இருக்கிறானோ அந்த மனிதன்விஷயத்தில் அவனும் அவ்விதம் இருக்கவேண்டும்; அது தர்மம். கபடமான ஆசாரமுடையவன்விஷயத்தில் கபடத்துடன் இருக்கவேண்டும். நல்ல ஆசாரமுடையவன் நல்ல ஆசாரத்துடன் அடையப்படத் தக்கவன். ஜரை ரூபத்தையும், ஆசை தைரியத்தையும், மிருத்யு பிராணன்களையும், அஸூயை தர்மானுஷ்டானத்தையும், காமம் லஜ்ஜையையும், ஈனர்களை ஸேவிப்பது சீலத்தையும், கோபமானது செல்வத்தையும் அபகரிக்கின்றன. அஹங்காரமானது எல்லாவற்றையுமே அபகரிக்கிறது' என்று சொன்னார்.

திருதராஷ்டிரன், 'மனிதன் நூறு வயதுள்ளவனாக எல்லா வேதங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறானே; அப்படியிருக்க, என்ன காரணத்தால் இவ்வுலகில் அந்த ஆயுள் முழுமையும் அடைகிறதில்லை?' என்று கேட்டான். விதுரர், 'ஓ! அரசரே! மிக்க அதிக அகங்காரம், அதிகப் பேச்சு, மிக்க குற்றம், மிக்க கோபம், தன்னை மாத்திரம் போஷிப்பதில் ஆசை, மித்திரத்துரோகம் என்ற இந்த ஆறுமாகிற கூர்மையான கத்திகள் தேகிகளுடைய ஆயுளை அறுக்கின்றன. இவைகள் மனிதர்களைக் கொல்லுகின்றன. மிருத்யு கொல்லுகிறதில்லை. உமக்கு க்ஷேமம் உண்டாகுக. ஓ! பாரதரே! நம்பினவனுடைய தாரத்தைச் சேருகிறவனும், குருபத்தினியை அடைந்தவனும், இரு

1 தீர்த்த முதலிய இடங்களில் கொடுப்பதாகச் சொல்லிப் பிறகு அதை யாசகன் வீட்டில் வந்து கேட்கும்போது அதனைக் கொடாமலே தன்னைப் புகழ்ந்து கொள்ளுகிறவன்.

2 'ஸத்வம்' என்று பாடங்கொண்டு, 'தீயவரை நல்லவரென்று சொல்பவர், அல்லது பொய்யை மெய்யென்று சொல்பவர்' என்பது பழையவுரை

பிறப்பாளனுயிருந்தும் சூத்திர ஸ்திரீக்குப் பதியானவனும், கட்குடிப்பவனும், நியமிப்பவனுயிருந்துகொண்டு தன் கீழுள்ளவர்களின் ஜீவனத்தைக் கெடுக்கிறவனும், வேதியர்களை வேலைக்கு ஏவுகிறவனும், சரணமடைந்தோர்களைக் கெடுக்கிறவனும் ஆகிய இவர்களெல்லாரும் ப்ரம்மஹத்தி செய்தவனுக்குச் சமமானவர்கள். இவர்களுடன் சேர்ந்தால் பிராயச்சித்தம் செய்துகொள்ள வேண்டுமென்று கேள்வி. (ஹித) வார்த்தையை ஏற்றுக் கொள்பவனும், நீதி அறிந்தவனும், தானத்தில் ஸமர்த்தனும், (தேவதை முதலியவர்களுடைய) சேஷமான அன்னத்தைப் புஜிப்பவனும், சிறிதேனும் துன்பஞ் செய்யாதவனும், பயனில்லாத செய்கைகளால் கலக்கப்படாதவனும், நன்றியுணர்ந்தவனும், உண்மை பேசுபவனும், மென்மைத் தன்மையுள்ளவனுமான வித்வான் ஸ்வர்க்கத்தை அடைகிருன். ஓ! அரசரே! எப்பொழுதும் பிரியமாகப் பேசுகின்ற மனிதர்கள் எளிதில் அகப்படுவார்கள். அப்பிரியமான நன்மையைச் சொல்லுகிறவனும் கேட்கிறவனும் கிடைப்பதரிது. எவன் தர்மத்தை அடுத்து எஜமானனுடைய பிரியத்தையும் அப்பிரியத்தையும் தள்ளிவிட்டு, அப்பிரியமானுலும் நன்மைகளையே சொல்லுகிருனே அவன்தான் அரசனுக்கு உற்ற துணைவன். ஒரு குலத்தினிமித்தம் ஒரு மனிதனை விடவேண்டும். ஒரு கிராமத்தினிமித்தம் ஒரு குலத்தை விடவேண்டும். பட்டணத்தினிமித்தம் ஒரு கிராமத்தை விடவேண்டும். தன்னிமித்தம் நாட்டையேவிடலாம். ஆபத்திற்காகத் தனத்தை ரக்ஷிக்கவேண்டும். தனங்களாலே தாரத்தை ரக்ஷிக்கவேண்டும். தாரத்தினுலும் தனங்களாலும் ஆத்மாவை எப்பொழுதும் ரக்ஷிக்கவேண்டும். இந்தச் சூதாட்டமானது முன்கற்பத்தில் மனிதர்களுக்குப் பகையைச் செய்கிறதாகக் காணப்பட்டது. ஆகையால், புத்திமானுனவன் விளையாட்டிற்காகவும் சூதாட்டத்தைச் செய்யக்கூடாது. ஓ! அரசரே! பிரதீப குலத்தில் பிறந்தவரே! சூதாடுங்காலத்திலேயே என்னுல் 'இது உசிதமில்லை' என்று தடுத்து ஒரு வார்த்தையானது சொல்லப்பட்டது. ஓ! விசித்ரவீரியரின் புத்திரரே! அது, வியாதி கொண்டவனுக்குப் பத்தியமான ஒளஷதம் ருசியாததுபோல உமக்கு ருசிக்கவில்லை. விசித்ரமான தோகைகளையுடைய இந்தப் பாண்டவர்களான மயில்களைத் தார்த்தராஷ்டிரர்களாகிற காக்கைகளால் அபஜயமடையச் செய்தீர். ஓ! அரசரே! ஸிம்மங்களைத் தள்ளிவிட்டு நரிகளை மறைத்து வைத்துக்கொண்டவரான நீர் ஸமயம்வந்தபொழுது துக்கிக்கப்போகிறீர். ஐயா! எந்தபபோஷகன்

பக்தனும் நன்மையில் பற்றுள்ளவனுமான வேலைக்காரன்விஷயத்தில் எல்லாக்காலத்திலும் கோபியாமலிருக்கிறானோ அந்தப்போஷகனிடத்தில் வேலைக்காரர்கள் விசுவாஸத்தை அடைகிறார்கள். ஆபத்துக்காலங்களிலும், இவனைக்கைவிடுகிறதில்லை. வேலைக்காரர்களுடைய ஜீவனத்தைக் கெடுத்துப் புதிதான ராஜ்யத்தையோ தனத்தையோ அடைய விரும்பக்கூடாது. ஸ்நேகத்துடன் கூடின மந்திரிகளோ, வஞ்சிக்கப் புட்டவர்களும் போகமிழந்தவர்களுமானால் விரோதிகளாகி, இவனைக் கைவிடுகிறார்களல்லவா? முதலில் எல்லாக் காரியங்களையும் வரவு செலவுக்கு உசிதமான விருத்தியையும் கணக்கிட்டு அதற்கு உசிதர்களான ஸஹாயர்களைச் சேர்க்கவேண்டும். செய்யமுடியாதவைகளான காரியங்களும் ஸஹாயத்தால் ஸாதிக்கக்கூடியவைகளல்லவா? யஜமானனுடைய கருத்தை அறிந்து சோம்பலில்லாமல் எல்லாக் காரியங்களையும் செய்கிறவனும் ஹிதங்களைச் சொல்லுகிறவனும் பற்றுதலுடையவனும் பூஜ்யனும் சக்தியை அறிந்தவனுமான அந்த வேலைக்காரன் தன்னைப்போலத் தயைசெய்யத் தக்கவனல்லவா? எவன் சொல்லப்பட்டும் சொன்னசொல்லை மதிக்கிறதில்லையோ, கட்டளையிடப்பட்டும் தடுத்துச் சொல்லுகிறானோ, அறிவிற்சிறந்தவனென்கிற அபிமானமுடையவனும் விபரீதமாகப் பேசுகிறவனுமான அப்படிப்பட்ட அந்த வேலைக்காரன் சீக்கிரமாகவே விலக்கப்படத் தக்கவன். மந்தமில்லாதவனும் ஆண்மையுடையவனும் காரியத்தைச் சீக்கிரம் செய்கிறவனும் தயையுள்ளவனும் திறமையுடையவனும் பிறரால் கலைக்கமுடியாதவனும் சிறிதும் நோயில்லாதவனும் யுக்தியுக்தமான வார்த்தைசொல்லுபவனும் ஆக எட்டுக்குணங்களும் பொருந்தினவனைத் தூதனாகச் சொல்லுகிறார்கள். அறிவுள்ளமனிதன் விசுவாஸத்தினாலே தன்னிடம் நம்பிக்கையில்லாதவனுடைய வீட்டில் ஒருபோதும் ஸாயங்காலத்தில் போகக்கூடாது. ராத்திரியில் நாற்சந்தியில் மறைந்துகொண்டு நிற்கக்கூடாது. அரசனால் இச்சிக்கப்பட்ட ஸ்திரீயை இச்சிக்கக்கூடாது. மந்திராலோசனை செய்கிறவன் அநேகம் பேர்களிடம் கலந்த ஆலோசனையையுடையவனும் கெட்ட சேர்க்கையுடையவனுமாயிருக்கும் பொழுது, (என்போன்றவன்) ஆக்ஷேபத்தைச் செய்யக்கூடாது. '(பலருடன் ஆலோசிக்கும்) உம்மிடத்தில் நான் நம்பிக்கைவைக்கவில்லை' என்று சொல்லவும்கூடாது. பின் என்னவெனில், [1] காரணத்தோடு வியாஜத்தைச் செய்யவேண்டும்.

1 'தனக்கு வேறுகாரியமிருப்பதாகக் காரணத்தோடு சொல்லி விலகிப் போகவேண்டும்' என்பது.

தயாளு, அரசன், வியபிசரிக்கிறவள், அரசனுடைய ஸேவகன், புத்திரன், ஸஹோதரன், பாலர்களான புத்திரர்களையுடைய விதவை, சேனையிற்புகுந்து ஜீவிக்கிறவன், வீட்டில் அதிகாரம் விலகினவன் ஆகிய இவர்கள், பொருளைச் செலவிடுதல் முதலிய வியவகாரங்களிலிருந்து விலக்கப்படத்தக்கவர்களாவார்கள். அறிவுடைமை, நற்குலம், கல்வி, அடக்கம், வல்லமை, பலசொல்லாமை, சக்திக்குத்தக்கபடி தானம், நன்றியறிதல் ஆகிய எட்டுக்குணங்களும் மனிதனைப்பிரகாசிக்கச்செய்கின்றன. ஐயா! மிக்க மஹிமை பொருந்திய இந்தக் குணங்களை ஒரு குணமானது பலாத்கரித்துச் சேருகிறது. (அதாவது), எப்பொழுது அரசன் ஒருவனை உபசரிக்கிருனே அப்பொழுது (ராஜோபசாரமாகிய) இந்தக்குணம் (அவனிடத்தில்) எல்லாக்குணங்களையும் அதிகரித்து விளங்குகிறது. ஸ்நானசீலனை ஒருவனைப் பலம், ரூபம், ஸ்வரசுத்தி, அக்ஷரசுத்தி, மென்மை, நன்மணம், அதிகமான சுத்தி, காந்தி, அழகு, சிறந்தவர்களான ஸ்திரீகள் இந்தப் பத்துக்குணங்களும் அடைகின்றன. அளவறிந்து உண்பவனை ஆரோக்யம், ஆயுள், பலம், ஸுகம், மறுவற்ற குழந்தை, பெருந்தீனிக்காரனென்கிற நிந்தையில்லாமை ஆகிய இந்த ஆறு குணங்களும் அடைகின்றன. தீச்செயலை இயல்பாகவுடையவனையும் பெருந்தீனிக்காரனையும் உலகத்துடன் பகைப்பவனையும் பலவித வஞ்சனைகளுள்ளவனையும் ஹிம்சை செய்பவனையும் தேசகாலங்களை அறியாதவனையும் [1] தகாதவேஷமுடையவனையும் தன்வீட்டில் வஸிக்கும்படி செய்யக்கூடாது. ஈயாதவன், நிந்திக்கிறவன், மூடன், [2] காட்டில் வஸிப்பவன், சூதாடுகிறவன், பூஜிக்கத்தகாதவனைப் பூஜிக்கிறவன், தயையில்லாதவன், பகைமைபாராட்டுகிறவன், நன்றிமறந்தவன் ஆகிய இவர்களை மிகுதியான பீடையுள்ளவனுக இருந்தாலும் ஒருகாலும் யாசிக்கக்கூடாது. [3] ஆததாயி, மிக்க அஜாக்ரதையுடையவன், எந்நாளும் பொய்சொல்லுகிறவன், உறுதியான அன்பில்லாதவன், ஸ்நேகத்தை விட்டவன், (தன்னை) ஸமர்த்தனுக நினைப்பவன் ஆகிய மனிதர்களில் ஈனர்களான இந்த ஆறுபேர்களுக்கும் வேலைசெய்யக்கூடாது. அர்த்தங்களோ ஸஹாயத்தைக் காரணமாகவுடையவைகள். ஸஹாயங்கள் அர்த்தத்தைக் காரணமாகவுடையவைகள். ஒன்றேடொன்று

---

1 'பௌத்தஸந்யாஸிவேஷமுதலிய வேஷங்களைத் தரிப்பவன்' என்பது பழையவுரை.

2 'செம்படவன்' என்பது பழையவுரை.

3 விராடபர்வம் 175-ம் பக்கம் குறிப்பில் காண்க.

மூலமாகவுடையவைகளான இவைகள் ஒன்றில்லாமல் மற்றொன்று கிடைப்பதில்லை. புத்திரர்களை உண்டுபண்ணிக் கடனற்றவர்களாகச் செய்து அவர்களுக்கு ஒரு பிழைப்பை ஏற்படுத்தி எல்லாக் குமாரிகளையும் சரியான இடங்களில் கொடுத்துவிட்டு, பிறகு, வனத்திலிருந்துகொண்டு முனியாவதற்கு விரும்பவேண்டும். சக்தனுள்ளவன் எது எல்லாப்பிராணிகளுக்கும் ஹிதமும் தனக்கு ஸுகத்தை அளிப்பதுமாயிருக்கிறதோ அதைச் செய்யவேண்டும். இது எல்லா அர்த்தங்களின் ஸித்திக்கும் மூலம். செல்வப் பெருக்கம், சத்துரு ஜயம், சௌரியம், ஸத்வகுணம், முயற்சி, உறுதி இவைகள் எவனுக்கு ஏற்படுமோ அவனுக்குப் பிழைப்பில்லாமையாலுண்டான பயம் ஏது? ஓ! இந்திரனுக்கு நிகரானவரே! பாண்டவர்களுடன் பகைப்பதிலுண்டாகும் தோஷங்களை நீர் ஆலோசியும். எதில் இந்திரன் முதலான தேவர்களும் வருந்துவார்களோ, எதில் புத்திரர்களுடன் வைரமும் எந்நாளும் பயந்த குடியிருப்பும் புகழின் நாசமும் சத்துருக்களுக்குச் சந்தோஷமும் பீஷ்மருக்கும் உமக்கும் துரோணருக்கும் அரசனான யுதிஷ்டிரனுக்கும் கோபமும் உண்டாகின்றனவோ, அது விருத்தியடைந்தால் ஆகாயத்தில் குறுக்காக விழுந்த தூமகேதுவைப்போல இந்த உலகத்தை நாசம் செய்யும். உம்முடைய நூறு புத்திரர்களும் கர்ணனும் பாண்டவர்கள் ஐவர்களும் (சேர்ந்து) கடலை ஆடையாகவுடைய பூமி முழுமையையும் ஆளக்கூடியவர்கள். ஓ! அரசரே! உம்முடைய புத்ரர்கள் காடு; பாண்டு புத்திரர்கள் ஸிம்மங்கள் என்று கருதப்பட்டார்கள். புலிகளுடன்கூடிய காட்டை வெட்டாதீர். வனத்தை விட்டுப் புலிகளும் நாசத்தை அடையவேண்டாம். புலிகளில்லாவிட்டால் காடு இராது. காடில்லாவிட்டால், புலிகளும் இரா. காடு புலிகளால் காக்கப்படுகிறது. காடு புலிகளைக் காக்கிறது. பாவபுத்தியுள்ளவர்கள் பிறர்களுடைய கெட்ட குணத்தை அறிவதற்கு எவ்விதம் விரும்புகிறார்களோ அவ்விதம் அவர்களுடைய நல்ல குணங்களை அறிவதற்கு விரும்புகிறதில்லை. பெரியகாரியஸித்தியை விரும்புகிறவன் ஆதிமுதல் தர்மத்தையே ஆசரிக்கவேண்டும். ஸ்வர்க்கத்திலிருந்தும் அமிருதம் விலகாதது போலத் தர்மத்திலிருந்தும் அர்த்தமானது விலகுகிறதில்லை. பாவத்திலிருந்தும் ஒழிவடைந்த எவனுடைய மனமானது நல்ல காரியத்தில் பிரவேசிக்கச் செய்யப்பட்டதோ அவனால் காரணமும் காரியமுமான இவையெல்லாம் அறியப்பட்டவையாகும். எவன் தர்மத்தையும் அர்த்தத்தையும் காமத்தையும் அந்தஅந்தக் காலத்தில் செய்கிறானோ

அவன் இம்மையிலும் மறுமையிலும் தர்மார்த்த காமங்களுடைய ஸம்பத்தை அடைகிறான். ஓ! அரசரே! எவன் மேலோங்கிய விருப்பு வெறுப்புக்களுடைய வேகத்தை நன்றாக அடக்குகிறானோ, எவன் ஆபத்துக்களில் மோகத்தை அடையவில்லையோ அவர்கள் ஸம்பத்திற்கு இருப்பிடம். மனிதர்களுக்கு நித்யமாயும் ஐந்துவிதமாயுமிருக்கிற பலத்தை என்னிடமிருந்து தெரிந்துகொள்ளும். புஜபலமென்பது முதலாவது பலமாகச் சொல்லப்படுகிறது. மந்திரிகளுடைய லாபமானது இரண்டாவது பலமாகச் சொல்லப்படுகிறது. உமக்கு க்ஷேமம் உண்டாகுக. தனலாபத்தையோ புத்திமான்கள் மூன்றாவது பலமாகச் சொல்லுகிறார்கள். ஓ! அரசரே! இந்த மனிதனுக்குத் தாதைமுதாதைகளின் வழியாக இயற்கையாக வந்ததும் [1] அபிஜாத பலமென்று பெயருள்ளதுமான பலமானது நான்காவது பலமாகக் கருதப்பட்டிருக்கிறது. ஓ! பாரதரே! எதனால் இந்த எல்லாப்பலங்களும் ஸங்கிரகஞ் செய்யப்பட்டிருக்கின்றனவோ எது பலங்களுக்கெல்லாம் சிறந்ததான பலமோ அது அறிவின் பலமென்று சொல்லப்படுகிறது. எந்தமனிதன் மற்றொருவனுக்குப் பெரியதீங்கைச்செய்ய வல்லவனானோ அவனுடன் வைரத்தைச்செய்துவிட்டுத் தூரத்திலிருக்கிறேனென்று ஸமாதானத்தை அடையக்கூடாது. ஸ்திரீகள், அரசர்கள், ஸர்ப்பங்கள், [2] தன்வேதாத்யயனம், பிரபு, சத்ரு, போகம், ஆயுள் இவைகளில் புத்திமானான எவன் நம்பிக்கை வைக்கத்தக்கவனாவான்? (பகைவனுடைய) புத்தியாகிற பாணத்தால் அடிக்கப்பட்டவனுக்கு வைத்தியர்களுமில்லை; ஔஷதங்களுமில்லை; (சாந்தி) ஹோமத்திற்குரிய மந்திரங்களும் இல்லை; நன்மையைச்செய்யும் காரியங்களுமில்லை; அதர்வணவேதத்திலுள்ள ஆபிசார மந்திரங்களுமில்லை; மிக்கஸித்தியுள்ள ரஸகுளிகைகளுமில்லை. ஓ! பாரதரே! ஸர்ப்பமும் அக்கினியும் ஸிம்மமும் தன்குலத்தில் பிறந்த புத்ரனும் மனிதனால் அவமதிக்கத்தக்கவர்களல்லர். இவர்களெல்லாரும் அளவற்ற பராக்ரமமுடையவர்களல்லவா? உலகத்தில் பெரியதேஜஸாயிருக்கிற அக்னியானது மரங்களில் மறைந்துகொண்டிருக்கிறது; பிறர்களாலே ஜ்வலிப்பிக்கப்படாதவரையில் அந்தக்கட்டையை உபயோகப்படுத்துகிறதுமில்லை (= எரிக்கிறதுமில்லை). அந்தஅக்னியே எப்பொழுது கட்டைகளிலிருந்தும் கடைந்து ஜ்வலிப்பிக்கப்படுகிறதோ அப்பொழுது தன்தேஜஸினால் அந்தக்கட்டையையும் மற்றவனத்தையும் சீக்கிரமே

---

1 நற்குடிப் பிறப்பு.

2 'ஆவிருத்தியில்லாவிட்டால் மறந்துவிடும்' என்பது கருத்து.

எரித்துவிடுகிறது. இப்படிப்போலவே அக்னிக்கு நிகரான தேஜஸை யுடைய குலபுத்ரர்கள், பொறுமையுடையவர்களும் சேஷ்டையில்லாத வர்களுமாகக் கட்டையில் தீ அடங்கியிருப்பதுபோல அடங்கியிருக் கிறார்கள். புத்திரர்களுடன் கூடின நீர், கொடிக்குச் சமமான தன்மை யுடையவர். பாண்டுவின் புத்திரர்கள் ஸாலவிருக்ஷங்களாகக் கருதப் பட்டார்கள். பெரிய விருக்ஷத்தை அடுக்காத கொடியானது ஒரு பொழுதும் விருத்தி அடைகிறதில்லை. ஓ! அரசரே! அம்பிகையின் புத்திரரே! உம்முடைய புத்திரன் காடு. பாண்டவர்களை வனத்தி லிருக்கும் ஸிம்மங்களாக அறியும். ஸிம்மமில்லாத வனம் நசிக்கு மன்றோ? வனமில்லாத விஷயத்தில் ஸிம்மங்களும் நசிக்கும்.

## முப்பத்தெட்டாவது அத்யாயம்.

## ப்ரஜாகரபர்வம். (தொடர்ச்சி)

(விதுரர் திருதராஷ்டிரனுக்கு நீதிகளைச் சொல்லி, பாண்ட வர்களுக்கு நாடுகொடாவிடில் துரியோதனனுக்கு ராஜ்யம் நிலையாதென்றது.)

பிராயமுதிர்ந்தவன் வரும்பொழுது, தருணனுடைய பிராணன் கள் உயரக் கிளம்பிவிடுகின்றனவல்லவா? அவன், எதிர்கொள்வது நமஸ்காரம் செய்வது இவைகளாலே மறுபடியும் அவைகளை அடை கிறான். தீரனானவன் வந்தவரான ஸாதுவுக்கு ஆஸனங்கொடுத்து ஜலத்தைக் கொண்டுவந்து பாதங்களைக் கழுவி ஸுகத்தை விசாரித்துத் தன்னுடைய ஸ்திதியைத் தெரிவித்துப் பிறகு ச்ரத்தையுடன் அன் னத்தை அளிக்கவேண்டும். வேதத்தையறிந்தவர் எவனுடைய கிரு கத்தில் (அவனுடைய) லோபத்தினாலோ (அவனிடமுள்ள) பயத்தி னாலோ அல்லது (அவனுடைய) கிருபணத்தன்மையினாலேயோ (பாத்ய) ஜலத்தையும் மதுபர்க்கத்தையும் கோவையும் பெற்றுக்கொள்ள வில்லையோ அவனுடைய உயிர்வாழ்க்கையைப் பெரியோர்கள் பய னற்றதாகச் சொல்லுகிறார்கள். வைத்தியன், ஆயுதம் செய்கிறவன், பிரம்மசரியம் நஷ்டமானவன், திருடன், குரூரன், மதுபானம் செய் பவன், [1] ப்ரூணஹத்தி செய்பவன், படையில் ஜீவிக்கிறவன், [2] வேத

1 சாந்திபர்வம் 43-ம் பக்கம் குறிப்பிற் காண்க.

2 வேதனம் வாங்கிக்கொண்டு வேதாத்தியயனம் செய்விக்கிறவன்.

த்தை விற்கிறவன் ஆகிய (இப்படிப்பட்ட) [1] அதிதிகள் மிகவும் ப்ரியராயிருந்தாலும் ஜலம் கொடுக்கப்படத் தக்கவரல்லர். உப்பும் பக்குவமான அன்னமும் தயிரும் பாலும் தேனும் எண்ணெயும் நெய் யும் எள்ளும் மாம்ஸமும் பழங்களும் கிழங்குகளும் கீரையும் சிவப்பு வஸ்திரமும் எல்லா வாசனைப் பொருள்களும் வெல்லம் முதலியவை களும் விற்கத் தக்கவைகளல்ல. எவன் கோபமற்றவனும், ஓட்டாஞ் சில்லியும் கருங்கல்லும் பொன்னும் சமமாக நினைப்பவனும், சோகம் நீங்கினவனும், நட்புப் பகையில்லாதவனும், இகழ்புகழ்களில் ஒழி வடைந்தவனும், விருப்பு வெறுப்புக்களை விட்டவனும், உதாஸீனன் போன்றவனுமா யிருக்கிறானோ அவன்தான் பிக்ஷு. வனத்தில் வஸித்துக்கொண்டு தினை கிழங்கு இங்குதவிருக்ஷத்தின் காய்கள் கீரைகள் இவைகளால் ஜீவிப்பவனும், மனத்தை நன்கு அடக்கினவ னும், அக்னிகாரியங்களில் முயற்சியுள்ளவனும், [2] அதிதிகள் விஷயத் தில் அஜாக்கிரதையில்லாதவனும், (காரிய) பாரத்தை வகிக்கிறவனும், புண்ணியத்தைச் செய்கிறவனுமான அவன் தவம் செய்பவன். புத்தி மானுக்கு அபகாரத்தைச் செய்துவிட்டுத் தூரத்திலிருக்கிறே னென்று ஸமாதானத்தை அடையக்கூடாது. புத்திமானுடைய கைகள் நீண்டவைகள். தான் துன்பஞ்செய்யப்பட்டால் (துன்பஞ் செய்தவனை) அவைகளால் துன்பஞ்செய்வான். தன்னிடம் நம்பிக்கை யில்லாதவனிடம் நம்பிக்கை வைக்கக்கூடாது. நம்பிக்கையுள்ளவ னிடமும் அதிகநம்பிக்கை வைக்கக்கூடாது. நம்பிக்கை வைத்ததா லுண்டான பயமானது வேர்களையும் அறுக்கும். தாரங்களைக் காப்பவனும் (அந்த) ஸ்திரீகள் விஷயத்தில் பொறுமையில்லாதவனும் வரும்படியைப் பிரித்துக்கொடுக்கிறவனும் பிரியத்தைச் சொல்லுகிற வனும் மிருதுவான ஸ்வபாவமுள்ளவனும் இன்பமாகப் பேசுகிறவனு மாயிருக்கவேண்டும். ஆனால், இவர்களுடைய வசத்தை அடையக் கூடாது. பூஜிக்க யோக்யர்களும் மஹா பாக்யமுடையவர்களும் பரிசுத்தர்களும் வீட்டை விளங்கச்செய்கிறவர்களுமான ஸ்திரீகள் வீட்டிற்கு லக்ஷ்மிகளாகச் சொல்லப்படுகிறார்கள். ஆகையால், அவர் கள் விசேஷமாகக் காக்கப்படத்தக்கவர்கள். பிதாவுக்கு அந்தப் புரத்தின் மேற்பார்வையை அளிக்கவேண்டும். மாதாவுக்குப் பாக

---

1 'இவர்கள் தண்ணீரும் கொடுக்கத்தகாதவராயினும் அதிதியாகவந் தால் மிக்க பிரியம் பாராட்டப்படத்தக்கவர்கள்' என்பது பழைய வுரை.

2 'இப்படிப்பட்டவனும் அதிதிகளைப் பூஜிக்கவேண்டுமென்றதனால், செல்வமுள்ளவர்களைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ?' என்பது பழைய வுரை.

சாலையை அளிக்கவேண்டும். பசுக்களிடத்தில் தனக்குச் சமமா யுள்ளவனை ஏற்படுத்தவேண்டும். தானே கிருஷிக்குச் செல்லவேண்டும். வேலைக்காரர்களால் வியாபாரத்திற்குரிய பதார்த்தங்களைப் போக வரச்செய்யவேண்டும். புத்திரர்களால் பிராம்மணர்களுக்குப் பணிவிடை செய்யவேண்டும். ஜலத்திலிருந்து அக்னியும், ப்ராம்மணனிடமிருந்து க்ஷத்திரியஜாதியும், கற்பாறையிலிருந்து உலோகமும் உண்டாயின. எங்கும் செல்லுகிற அவைகளுடைய சக்தியானது தன் காரணங்களில் அடங்கிவிடுகிறது. நல்லகுலத்திற் பிறந்தவர்களும் அக்னிக்குநிகரான தேஜஸுடையவர்களுமான ஸத்துக்கள் எப்பொழுதும் பொறுமையுள்ளவர்களும் (ஸத்துக்களென்று தெரியும்) ரூபமில்லாதவர்களுமாகிக் கட்டையில் அக்கினி அடங்கியிருப்பதுபோல அடங்கியிருக்கிறார்கள். எந்த அரசனுடைய ஆலோசனையை அவனைச் சேர்ந்தவர்களும் வெளியிலுள்ளவர்களும் அறியவில்லையோ, எந்த அரசன் எங்கும் சாரர்களாகிற கண்களுடையவனுயிருக்கிறானோ அவன் நெடுங்காலம் ஐஸ்வரியத்தை அனுபவிப்பான். தர்மம் காமம் அர்த்தம் இவைகளினிமித்தமான காரியங்களைச் செய்யப்போகிறவன் சொல்லக்கூடாது. செய்தவைகளைச் செய்த பிறகுதான் வெளியிடவேண்டும். அப்படியானால் ஆலோசனையானது வெளியாகாது. மலையின் உச்சியிலேயோ உப்பரிகையிலேயோ ஏறி ஏகாந்தமாக இருந்து ஆலோசனை செய்யவேண்டும். செடிகொடிகளில்லாத காடாயிருந்தால் அவ்விடத்தில் ஆலோசனை (செய்யும்படி) சொல்லப்படுகிறது. ஓ! பாரதரே! நண்பனல்லாதவனும், நண்பனுயிருந்தாலும் பண்டிதனல்லாதவனும், பண்டிதனுயிருந்தாலும் அடக்கமில்லாதவனும் முடிவான ஆலோசனையை அறியத்தக்கவராகார். அரசனானவன் பரீக்ஷியாமல் ஒருவனைத் தனக்கு மந்திரியாக வைத்துக்கொள்ளக்கூடாது. மந்திரியின் மூலமாகவேயன்றோ தனலாபமும் மந்திராலோசனையைக் காத்தலும் ஏற்படும். எந்த அரசனுடைய தர்ம நிமித்தமும் அர்த்த நிமித்தமும் காம நிமித்தமுமான எல்லாக்காரியங்களையும் செய்த பிறகு ஸபையோர்கள் அறிகிறார்களோ அந்த அரசன் அரசர்களில் சிறந்தவன். அரசன் ரகசியமான ஆலோசனையுடையவனாக இருந்தால், அவனுக்கு ஸந்தேகமின்றிக் காரியஸித்தியுண்டாகும். அறியாமையால் இகழத்தக்க காரியங்களைச் செய்பவன் அவைகளின் நாசத்தினால் வாழ்நாளிலிருந்தும் நழுவுகிறான். புகழத்தக்க காரியங்களைச் செய்வதோ மிக்க ஸுகத்தை அளிக்கும். அவைகளைச் செய்யாமலிருப்பதுவே பச்சாத்தாபத்தைச் செய்வதாகக் கருதப்படுகிறது.

வேதங்களை அத்தியயனம் செய்யாத வேதியன் எப்படி ச்ராத்தகர்மத்திற்கு அருகனில்லையோ அப்படியே (ஸந்திவிக்ரகமுதலான) ஆறு குணங்களையும் கேட்டறியாதவன் மந்திராலோசனையைக் கேட்க அருகனாகான். ஓ! அரசரே! நிலை விருத்தி க்ஷயம் இவைகளை அறிந்தவனும் (ஸந்தி முதலான) ஆறுகுணங்களாலும் பிரஸித்திபெற்றவனும் அவமதிக்கப்படாத நல்லொழுக்கத்தையுடையவனுமாயிருப்பவனுக்குப் பூமியானது சுவாதீனமாக இருக்கிறது. வீணாகாத கோபசந்தோஷங்களையுடையவனும் தானேசெய்து பின்னும்பார்க்கிறவனும் தன்னால் அறியப்பட்ட தனசாலையையுடையவனுமா யிருப்பவனுக்குப் பூமியானது செல்வங்களை அளித்துக்கொண்டே யிருக்கிறது. அரசனானவன் (அரசனென்கிற) பேர்மாத்திரத்தினாலும் குடையினாலும் ஸந்தோஷிக்கவேண்டும். திரவியங்களை வேலைக்காரர்களுக்குக் கொடுக்கவேண்டும். ஒருவனாகவே எல்லாவற்றையும் கிரகித்துக்கொள்ளுகிறவனாக இருக்கக்கூடாது. பிராமணனைப் பிராமணன் அறிவான். ஸ்திரீயைக் கணவன் அறிவான். மந்திரியை அரசன் அறிவான். அரசனை அரசனே அறிவான். கொல்லவேண்டிய நிலைமையை அடைந்த பகைவன் தன் வசப்பட்டால் விடக்கூடாது; கொல்லவேண்டியவனை வணக்கத்துடனிருந்துகொண்டு அடுக்கவேண்டும். (தனக்குப்) பலம் உண்டானபொழுது கொல்லவேண்டும். கொல்லப்படாத விஷயத்தில் அவனிடமிருந்தும் சீக்கிரம் பயமுண்டாகும். தெய்வங்கள் அரசர்கள் பிராமணர்கள் முதியவர்கள் இளைஞர்கள் நோயாளிகள் இவர்கள்விஷயத்தில் கோபத்தை எப்பொழுதும் முயற்சிசெய்து அடக்கவேண்டும். அறிவுள்ளவன், மூடர்களால் செய்யப்பட்ட பயனற்றதான கலகத்தை விலக்கவேண்டும். அப்படிச்செய்தால், உலகத்தில் கீர்த்தியையும் அடைவான்; அனர்த்தத்தோடும் சேரமாட்டான். எந்த யஜமானனுடைய அனுக்கிரகமும் கோபமும் பயனற்றனவாகுமோ அவனை ஜனங்கள் அலியானபதியை ஸ்திரீகள் விரும்பாததுபோல விரும்பமாட்டார்கள். புத்தியானது தனலாபத்திற்குக் காரணமாகிறதில்லை. மூடத்தன்மையானது செழிப்பில்லாமைக்குக் (காரணமாகிறதில்லை). உலக பரம்பரையினுடைய வரலாற்றைப் புத்திமான் அறிகிறான்; மற்றவன் அறிகிறதில்லை. ஓ! பாரதரே! மூடனானவன், வித்தையால் சிறந்தவர்களையும் சீலத்தால் சிறந்தவர்களையும் பிராயத்தினால் மூத்தவர்களையும் புத்தியினால் சிறந்தவர்களையும் தனத்தால் பெரியவர்களையும் குலத்தால் மேலானவர்களையும் எப்பொழுதும் அவமதிக்கிறான். இழிவான செய்கையுடையவனையும்

அறிவில்லாதவனையும் அஸூயையுடையவனையும் தர்மம் செய்யாதவனையும் குற்றமானசொற்களைப் பேசுகிறவனையும் கோபமுடையவனையும் அனர்த்தங்கள் விரைந்து அடைகின்றன. தான் சொன்ன சொல் தவறாமல் கொடுப்பதும் காலத்தைக் கடவாமலிருப்பதும் (ஜனங்களுக்கு) இனிய வார்த்தையும் மனிதர்களைத் தன்னிடம் [1] அடிக்கடி வரும்படி செய்கின்றன. சொன்னசொல் தவறாதவனும் ஸமர்த்தனும் நன்றியறிந்தவனும் புத்திமானும் நேர்மையுள்ளவனுமான மனிதன் பொக்கசம் நசித்தாலும் பரிவாரத்தை அடைகிறான். தைரியம், சமம், தமம், சுத்தி, தயை, நிஷ்டூரமில்லாதவார்த்தை, மித்திரர்களுக்குத் துரோகம்செய்யாமை இந்தஏழும் செல்வத்தை நன்கு விருத்திசெய்கின்றவைகள். ஓ! அரசரே! பாகிக்துக்கொடாதவனும் நியமனமுடையவனும் நன்றிமறந்தவனும் லஜ்ஜையற்றவனுமான அப்படிப்பட்ட அரசன் உலகத்தில் விலக்கப்படத்தக்கவன். எவன் குற்றமுள்ளவனாயிருந்துகொண்டு தனக்குள்ளிருக்கிற குற்றமில்லாத மனிதனைக் கோபம்வரச் செய்கிறானோ அவன் ஸர்ப்பத்தோடுகூடிய வீட்டில் வஸிப்பவன்போல இரவில் ஸுகமாகத் தூங்குகிறதில்லை. ஓ! பாரதரே! எவர்கள் மனக்கலக்கமடைந்தால் யோகக்ஷேமத்திற்குத் தீங்கு ஏற்படுமோ அவர்களுக்குத் தேவதைகளுக்குச் செய்வதுபோல எப்பொழுதும் ஸந்தோஷம் வரும்படி நடக்க வேண்டும். எந்தப் பொருள்கள் ஸ்திரீகளிடத்திலும் மிக்க மதங்கொண்டவர்களிடத்திலும் ஒழுக்கங்குன்றியவர்களிடத்திலும் இழிவானவர்களிடத்திலும் சேர்ந்திருக்கின்றனவோ அவைகள் ஸந்தேகத்தைஅடைந்தவைகளே. எவ்விடத்தில் ஸ்திரீயும் சூதாடியும் இளைஞனும் அதிகாரஞ்செலுத்துகிறார்களோ அங்குள்ளவர்கள் கல்தோணியிலுள்ளவர்கள் நதியில் முழுகுவதுபோல ஸ்வதந்திரமற்றவர்களாகி முழுகிவிடுகிறார்கள். ஓ! பாரதரே! எவர்கள் விசேஷமான பிரயோஜனங்களில் பற்றில்லாதவர்களாயிருக்கிறார்களோ அவர்களை நான் அறிவுள்ளவர்களாக நினைக்கிறேன். விசேஷங்கள் [2] கலகப்பிரஸங்கத்தைச் செய்கின்றவை அல்லவா? எவனைச் சூதாட்டக்காரர்கள் புகழ்கின்றார்களோ எவனைக் கூத்தாடிகள் புகழ்கின்றார்களோ எவனை வியபிசாரிகள் புகழ்கின்றார்களோ அவன் ஜீவிக்கிறதில்லை. ஓ! பாரதரே! பெரிய வில்லையுடையவர்களும் அளவற்ற பராக்ரமமுடையவர்களுமான அந்தப் பாண்டவர்களைவிட்டு உம்மாலே துரியோதன

---

1 'தன் வசப்படுத்துகின்றன' என்பது கருத்து.

2 'பொறாமைக்குக் காரணமானவை' என்பது கருத்து.

னிடத்தில் பெரிய ஐம்வரியமானது வைக்கப்பட்டது. ஆகையால், ஐம்வரிய மதத்தால் மதிமயங்கியிருக்கிற அவன், அந்த ஐம்வரியத்தி லிருந்து, மூவுலகங்களிலிருந்தும் மஹாபலி நழுவினதுபோல நழு வினதை நீர் பார்ப்பீர்' என்று சொன்னார்.

## முப்பத்தொன்பதாவது அத்யாயம்.

## ப்ரஜாகரபர்வம். (தொடர்ச்சி.)

(விதுரர் திருதராஷ்டிரனுக்கு ஞாதிகளை வசப்படுத்திக்கொள்வதிலுள்ள நன்மையையும் கௌரவ பாண்டவர்களிடம் ஸமமாயிருக்க வேண்டுமென்பதையும் சொல்லியது.)

திருதராஷ்டிரன், விதுரரை நோக்கி, 'இந்த மனிதன் பொரு ளுடைமையிலும் பொருளின்மையிலும் கயிற்றில் கோக்கப்பட்டதும் மரத்தால் செய்யப்பட்டதுமான பெண்பதுமைபோல அசக்தனாயிருக் கிறான். இவன் பிரம்மாவினால் முன்வினைப்பயனை அனுசரித்துப் படைக்கப்பட்டவனாயிருக்கிறானே? ஆகையால், நீ சொல். நான் கேட்பதில் உறுதியுடையவனாயிருக்கிறேன்' என்று சொன்னான். விதுரர், 'ஓ! பாரதரே! ஸமயந்தவறி வார்த்தையைச் சொல்லு கிறவன் பிருகஸ்பதியாயிருந்தாலும் புத்திக்குறைவையும் அவமா னத்தையும் அடைகிறான். (ஒருவன்) தானத்தால் பிரியனாகிறான். மற்றொருவன் பிரியமான வார்த்தையால் பிரியனாகிறான். வேறொரு வன் [1] ஆலோசனையைக் காரணமாகவுடைய பலத்தினால் பிரியனா கிறான். எவன் பிரியனோ அவன் பிரியனே. வேண்டாதவன் நல்ல வனாகிறதில்லை; புத்திமானுமாகிறதில்லை; பண்டிதனுமாகிறதில்லை; வேண்டினவனிடமுள்ள காரியங்களெல்லாம் நல்லவைகளே. வேண்டா தவனிடமுள்ள காரியங்களெல்லாம் தீயவைகளே. ஓ! அரசரே! பிறந்த வுடனேயே, 'நீர் துரியோதனன் ஒரு புத்ரனை விட்டுவிடும்; அவனை விடுவதால் நூறு புத்திரர்களுக்கும் விருத்தியுண்டாகும்; அவனை விடாவிடில் நூறு புத்திரர்களுக்கும் நாசமுண்டாகும்' என்று நான் சொன்னேன். எந்த வளர்ச்சியானது பிறகு குறைவைக் கொடுக் குமோ அந்த வளர்ச்சி பெரிதாக நினைக்கத்தக்கதில்லை. குறைவா யிருந்தாலும் எந்தக் குறைவானது பிறகு வளர்ச்சியைக் கொடுக்

1 'மந்திராலோசனையின் பலத்தினாலும் மூலபலத்தினாலும்' என்பது பழைய வுரை.

குமோ அது பெரிதாக நினைக்கத்தக்கது. ஓ! மஹாராஜரே! எந்தக் குறைவானது வளர்ச்சியைக் கொடுக்குமோ அது குறைவன்று. இங்கே எந்தக் காரியத்தை அடைந்து பலவற்றை அழிப்பானோ அது குறைவென்று நினைக்கத்தக்கது. ஓ! திருதராஷ்டிரரே! சிலர் குணங்களால் பூர்ணமாயிருக்கிறார்கள். சிலர் தனத்தினால் பூர்ணமாயிருக்கிறார்கள். தனத்தால் நிறைந்தவர்களானாலும் குணங்களால் குறைந்தவர்களை விடக்கடவீர்' என்று சொன்னார்.

திருதராஷ்டிரன், 'நீ, எல்லாவற்றையும் அறிவுடையோர் ஒப்புக் கொள்ளத்தக்கவையும் வருங்காலத்தில் நற்பயனளிக்கத்தக்கவையு மாகச் சொல்லுகிறாய். ஆனாலும், (நான்) புத்திரனை விடுவதற்குத் துணியவில்லை. எங்கே தர்மமோ அங்கே ஜயமுண்டாகும்' என்று சொன்னான். விதுரர், 'நிரம்பிய குணங்களுள்ளவனும் வணக்கமுள்ள வனுமாயிருப்பவன் பிராணிகளுடைய மிக்க ஸூக்ஷ்மமான நாசத்தை யும் ஒருபொழுதும் உபேக்ஷிக்கமாட்டான். எவர்கள் பிறர்களுடைய நிந்தையில் பற்றுள்ளவர்களும், பிறர்களுக்குத் துக்கங்களையுண்டு பண்ணுவதிலும் ஒருவருக்கொருவர் விரோதத்திலும் எப்பொழு தும் கிளம்பினவர்களுமாக முயற்சி செய்கிறார்களோ, எவர்களைப் பார்த்தால் தோஷம் ஏற்படுமோ, உடன் வஸிப்பதிலும் பெரிதான பயமுண்டாகுமோ, (எவர்களுடைய) தனத்தைக் கிரகிப்பதில் பெரி தான தோஷமுண்டாகுமோ, (எவர்களுக்குக்) கொடுப்பதிலும் பெரி தான பயமுண்டாகுமோ, எவர்கள் பேதப்படுத்துவதை இயல்பாக வுடையவர்களோ, எவர்கள் காமத்துடன் கூடினவர்களும் லஜ்ஜையில் லாதவர்களும் ரகஸ்யமாக அனிஷ்டத்தைச் செய்பவர்களுமாயிருக் கின்றார்களோ, எவர்கள் பாவிகளென்று பிரஸித்தியடைந்து ஸகவா ஸத்தில் நிந்திக்கப்பட்டவர்களாயிருக்கிறார்களோ, எவர்கள் மற்றப் பெரிய தோஷங்களுடனும் கூடினவர்களாயிருக்கிறார்களோ அவர்களை விட்டுவிடவேண்டும். இழிவான எவனிடத்தில் நட்பின் காரணம் விலகும்பொழுது, அன்பும் பயனின் உற்பத்தியும் ஸ்நேகத்திலுள்ள ஸௌக்யமும் அழிகின்றனவோ, எவன் அபவாதம் சொல்வதற்கு முயலுகிறானோ, அழிவில் முயலுகிறானோ, அறியாமல் சிறிது தீங்கு ஏற்பட்டபொழுதும் பொறுமையை அடைகிறதில்லையோ, துன்பம் செய்கிறவர்களும் மனத்தை வசஞ்செய்யாதவர்களுமான அப்படிப் பட்ட அற்பர்களுடன் சேர்க்கையை வித்வான் புத்தியினால் நன்கு ஆராய்ந்து தூரத்தில் விலக்கவேண்டும். எவன் ஞாதியையும் வறிய வனையும் பரிதாப நிலையிலிருப்பவனையும் நோயாளியையும் அனுக்ரகிக்

கிறானே அவன் புத்திரர்களாலும் பசுக்களாலுமுண்டான செழிப்பையும் அழிவற்ற க்ஷேமத்தையும் அடைகிறான். ஓ! அரசர்களில் சிறந்தவரே! எவர்கள் தமக்கு நன்மையையும் குலத்திற்கு விருத்தியையும் விரும்புகிறார்களோ அவர்கள் ஞாதிகளை விருத்தியடையச் செய்யவேண்டும். ஆகையினாலே, நல்லதைச் செய்யக்கடவீர். ஓ! அரசரே! ஞாதிகளுடைய பூஜையைச் செய்கிறவன் க்ஷேமத்துடன் சேருவான். ஓ! பரதஸ்ரேஷ்டரே! ஞாதிகள் குணக்கேடராலும் நன்கு ரக்ஷிக்கப்படத் தக்கவர்கள். குணவான்களும் உம்முடைய அருளை விரும்புகிறவர்களுமான பாண்டவர்கள் ரக்ஷிக்கப் படத்தக்கவர்களென்று சொல்லவும் வேண்டுமா? ஓ! அரசரே! வீரர்களான அவர்களுக்கு அனுக்ரகத்தைச்செய்யும். ஓ! அதிபதியே அவர்களுடைய ஜீவனத்திற்காகச் சில கிராமங்களைக் கொடுக்கக்கடவீர். ஓ! அரசரே! இப்படிச் செய்தால், உலகத்தில் உம்மால் புகழானது அடையப்பட்டதாகும். ஐயா! முதியவராயிருக்கிற நீர் புத்திரர்களைக் கட்டளையிடவேண்டும். என்னாலும் நன்மையானது சொல்லத்தக்கது. என்னை உம்முடைய நன்மையில் விருப்பமுடையவனென்று அறியும். சுபத்தைவிரும்புகிறவன் ஞாதிகளுடன் போர்செய்யக்கூடாது. ஓ! பரதஸ்ரேஷ்டரே! ஸுகங்களானவை ஞாதிகளோடு கூடியே அனுபவிக்கத்தக்கவைகள். ஞாதிகளோடுகூடி ஒருவரிடத்தொருவர் நல்ல போஜனமும் நல்ல ஸம்பாஷணமும் நல்லப்ரீதியும் செய்ய வேண்டும். ஒருபொழுதும் விரோதமானது செய்யத்தக்கதன்று. இவ்வுலகில், ஞாதிகள் ஆபத்துக்களினின்றும் தாண்டுவிப்பார்கள்; முழுகுவிக்கவும் செய்வார்கள். இவ்வுலகில் நன்னடையுடைய ஞாதிகள் தாண்டுவிப்பார்கள். தீயநடையுள்ளவர்கள் முழுகச்செய்வார்கள். ஓ! ராஜேந்திரரே! பகைவர்களின் கர்வத்தை ஒழிக்கிறவரே! பாண்டவர்கள் விஷயத்தில் நல்ல நடையுடையவராக இருக்கக்கடவீர். அவர்களால் சூழப்பட்டால் நீர் பகைவர்களுக்கு வெல்லமுடியாதவராவீர். எந்த ஞாதியானவன் செல்வவானாயிருக்கிற ஞாதியை அடைந்து விஷம்பூசின பாணத்தைக் கையிலுடையவனை அடைந்த மிருகம்போலக் கெடுதலை அடைகின்றானோ அவனுடைய பாவத்தைச் செல்வவானாயிருக்கிற அந்தஞாதி அடைகிறான். ஓ! அரசரே! பின்னாலேயும் அந்தப் பாண்டவர்களையோ அல்லது புத்திரர்களையோ கொல்லப்பட்டவர்களாகக் கேட்டு உமக்குத் தாபமானது உண்டாகப் போகிறது. ஆகையால், அதைப்பற்றி யோசிக்கக்கடவீர். உயிர் நிலையில்லாமலிருப்பதால், (மனிதன்) எந்தக் காரியத்தைச் செய்ததினால்

கவலை கொண்டவனுகிப் பரிதாபத்தை அடைவானே அதனை முன்பே செய்யாமலிருக்கவேண்டும். நீதிசாஸ்திரத்தைச் செய்த சுக்ராசாரியரைத் தவிர மற்றஎவன் அநீதியைச் செய்யாதவன்? ஆனுல், அந்த அநீதியானது நடந்துவிட்டது. ஆதலால், நடக்கவேண்டியதை அந்தஅந்த ஸமயத்திற்குத் தக்கபடி செய்வதென்பது புத்திமான்களிடத்தில்தான் இருக்கிறது. ஓ! அரசரே! துரியோதனனுலே அவர்கள் விஷயத்தில் இந்தக் கெடுதலான காரியமானது முன் செய்யப்பட்டிருக்குமேயானுல், (இப்பொழுது) குலத்தில் பெரியவரான உம்மால் அதானது நிவிருத்தி செய்யத்தக்கது. ஓ! அரசரே! நீர் அவர்களை ஓரிடத்தில் நிலைக்கச்செய்து உலகத்தில் களங்கம் நீங்கினவரும் மதிமான்களால் பூஜிக்கத்தக்கவருமாவீர். எவன் தீரர்களுடைய நல்லவசனங்களைப் பயன்வரையும் ஆலோசித்துக் காரியங்களில் உறுதியை அடைகின்றுனே அவன் வெகுகாலம் புகழுடனிருப்பான். மிகவும் ஸமர்த்தர்களாயிருந்தாலும் அறியவேண்டியதை அறியாமலும் அறியப்பட்டதை அனுஷ்டியாமலும் இருப்பார்களாகில், (அவர்கள் தங்கள்) ஞானத்தை நன்கு உபயோகித்தவர்களாகார். எந்தவித்வான் பாவத்தின் உத்பத்தியைப் பயனுகவுடைய காரியத்தை ஆரம்பியாமலிருக்கிறுனே அவன் விருத்தியடைகிறுன். எவன் முன் செய்யப்பட்ட பாவத்தை ஆலோசியாமல் தொடர்ந்துசெய்கிறுனே துர்ப்புத்தியுள்ள அவன் ஆழமான சேற்றுடன்கூடின பள்ளத்தில் (=கொடிய நரகத்தில்) தள்ளப்படுகிறுன். புத்திமானுனவன் ஆலோசனை வெளியாகிக் கெடுவதற்குக் காரணமான இவ்வாறினையும் பார்க்கவேண்டும். செல்வத்தின் மிகுதியை விரும்புகிறவனுக எப்பொழுதும் இவைகளை நேராமல் காக்கவேண்டும். ஓ! அரசரே! (அவைகளாவன:—)குடிமயக்கம், அதிநித்திரை, பிறருடைய ரகஸியமான சாரர் முதலியவரை அறியாமை, தன்னிடமுண்டாகும் குறிப்பு, துஷ்டமந்திரிகளிடம் நம்பிக்கை, ஸாமர்த்தியமில்லாத தூதன் இவ்வாறுகளே. அரசரே! இந்த ஆறுதுவாரங்களையும் எவன் அறிந்துகொண்டு எப்பொழுதும் மந்திராலோசனையை மறைக்கிறுனே அவன் தர்மார்த்தகாமங்களை அனுஷ்டிப்பதில் முயற்சியுடையவனுகப் பகைவர்களைக் கீழ்ப்படுத்திக்கொண்டிருக்கிறுன். பிருஹஸ்பதிக்கு ஸமானர்களாலும், சாஸ்திரத்தை அறியாமலும் பெரியோர்களை ஸேவியாமலும் தர்மார்த்தங்கள் அறியப்படக்கூடியவைகளல்ல. கடலில் விழுந்தது நஷ்டமே. செவிகொடாதவனிடம் சொல்லப்பட்ட வார்த்தை நஷ்டமே. புத்தியில்லாதவனிடம் சாஸ்திரம் நஷ்டமே. சாம்பலில்

விழுந்த ஹவிஸ் நஷ்டமே. புத்திமானனவன், யுக்தியால் பரீக்ஷித்து, அடிக்கடி புத்தியால் நிச்சயித்து, பிறர் மூலமாகவும் கேட்டு, தானும் பார்த்த பிறகு, விசேஷமாகத் தெரிந்துகொண்டு, அறிஞர்களுடன் ஸ்நேகத்தைச் செய்யவேண்டும். அடக்கமானது புகழின்மையைப் போக்கும். பராக்ரமமானது பொருளின்மையை நாசம் செய்யும். பொறுமையானது எப்பொழுதும் கோபத்தை நாசஞ்செய்யும். ஆசாரமானது அலக்ஷணத்தை (=இன்னகுலத்தானென்று அறியப்படும் அடையாளமின்மையை) நாசஞ்செய்யும். ஓ! அரசரே! அனுபவிக்கும் பொருள்களாலும் உத்பத்தி க்ஷேத்ரத்தினாலும் கிருகத்தினாலும் ஒழுக்கத்தினாலும் போஜனத்தினாலும் ஆடையினாலும் குலத்தைக் கண்டறியவேண்டும். சரீரத்தில் ஆசையைவிட்டவனுக்கும் காமம் நேரிட்டால் தடுத்துச் சொல்வது முடியாது. காமத்தில் ஆசை கொண்டவனுக்குக் கேட்பானேன்? பேரறிஞர்களை அடுப்பவனும் வித்வானும் தர்மசீலனும் காட்சிக்கினியவனும் மித்திரனுடன்கூடினவனும் நல்லவாக்குடையவனுமான நண்பனைப் பரிபாலிக்கவேண்டும். கெட்டகுலத்திற் பிறந்தவனோ நல்லகுலத்திற் பிறந்தவனோ எவன் மரியாதையைத் தாண்டாமலிருப்பானோ, தர்மத்தை விரும்புகிறவனும் மென்மைத்தன்மையுடையவனும் லஜ்ஜையுடையவனுமான அவன் நல்ல குலத்தோர்கள் நூறுபேர்களைக் காட்டிலும் சிறந்தவன். எந்த இருவருக்கு எண்ணத்தோடு எண்ணமும் ரகஸியத்தோடு ரகஸியமும் அறிவோடறிவும் ஒத்துப்போகின்றனவோ, அவர்களுடைய ஸ்நேகமானது கெடுகிறதில்லை. புத்திசாலியானவன் மதிகேடனும் கல்வியறிவில்லாதவனுமாயிருப்பவனைப் புற்களால் மறைக்கப்பட்ட கிணற்றைப்போல் விலக்கவேண்டும். அவனிடத்தில் ஸ்நேகம் நசித்துவிடும். பண்டிதனானவன், கர்வங்கொண்டவர்களிடத்திலும் மூடர்களிடத்திலும் கோபமுள்ளவர்களிடத்திலும் ஆலோசியாமற் செய்கிறவர்களிடத்திலும் தர்மம் விலகினவர்களிடத்திலும் ஸ்நேகத்தை வைக்கக்கூடாது. நன்றியறிந்தவனும் தர்மம் செய்பவனும் ஸத்யமுள்ளவனும் அற்பத்தனமில்லாதவனும் உறுதியான பக்தியுடையவனும் இந்திரியங்களை ஜயித்தவனும் (இருக்கவேண்டிய) முறையிலிருப்பவனுமான மனிதனை மித்திரனென்று (வித்வான்) விரும்புகிறான். இந்திரியங்களை விஷயங்களிற் செல்லவிடாமலிருப்பதானது மரணத்தைக் காட்டிலும் அதிக (ஶ்ரம) மாயிருக்கிறது. இந்திரியங்களை அதிகம் செல்லவிடுவதோ தேவதைகளையும் கெடுத்துவிடும். எல்லாப் பிராணிகளின் விஷயத்திலும் மிருதுவான ஸ்வ

பாவம், அஸூயையில்லாமை, பொறுமை, தைரியம், மித்திரர்களை அவமதியாமலிருத்தல் இவைகளைப் பண்டிதர்கள் ஆயுளுக்குக் காரணங்களாகச் சொல்லுகின்றார்கள். எவன் அநியாயத்தால் கெடுக்கப்பட்ட அர்த்தத்தை, மிக்க மனவுறுதியை அடைந்து, நல்ல நியாயத்தால் மறுபடியும் திருப்ப விரும்புகிறானோ அவனுடைய அச்செய்கை உத்தம புருஷர்களின் விரதமாகிறது. வரப்போகிற துக்கத்தில் பரிகாரத்தை அறிந்தவனும் நடக்கின்ற காரியத்தில் உறுதியான நிச்சய முடையவனும் (அகார்யம்) நடந்தபின் மேல் செய்யவேண்டிய காரியத்தின் சேஷத்தை அறிந்தவனுமான மனிதன் அர்த்தங்களால் விடப்படுகிறதில்லை. செய்கையினாலும் மனததாலும் வாக்காலும் எதை அடிக்கடி பற்றுகிறானோ அதே அவனைக் கவர்கின்றது. ஆகையால், நல்ல காரியத்தைச் செய்யவேண்டும். மங்களத் திரவியங்களைத் தொடுவதும், உதவியின் நிறைவும், சாஸ்திரமும், முயற்சியும், ருஜுத் தன்மையும், அடிக்கடி ஸத்துக்களைத் தரிசிப்பதும் ஆகிய இவைகள் ஐச்வரியத்தைச் செய்கின்றவைகள். முயற்சியை விடாமலிருப்பது செல்வத்திற்கும் லாபத்திற்கும் நன்மைக்கும் காரணம். முயற்சியை விடாதவன் பெரியவனாகிறான்; அளவற்ற ஸுகத்தையும் அனுபவிக்கிறான். ஐயா! வல்லவனாயிருப்பவனுக்கு எப்பொழுதும் எல்லோர்விஷயத்திலும் பொறுமையுடனிருப்பதைக் காட்டிலும் மிக்க திருவுடையதும் மிக்கநலமாயிருப்பதும் வேறொன்றுமில்லை. அசக்தனான வன் எல்லாவற்றையும் பொறுக்கவேண்டும். சக்தியுள்ளவன் தர்மத்தின் காரணமாகப் பொறுக்கவேண்டும். எவனுக்கு அர்த்தமும் அனர்த்தமும் ஸமமோ அவனுக்கு எப்பொழுதும் பொறுமை அநுகூலமானது. எந்த ஸுகத்தை அனுபவிக்கிறவனாயிருந்தும், தர்மார்த்தங்களிலிருந்து குறைவையடையானோ அதை இஷ்டப்படி அனுபவிக்கலாம். மூடனுடைய விரதத்தைச் செய்யக்கூடாது. துக்கத்தால் பீடிக்கப்பட்டவர்களிடத்திலும் மதங்கொண்டவர்களிடத்திலும் நாஸ்திகர்களிடத்திலும் சோம்பேறிகளிடத்திலும் அடக்கமில்லாதவர்களிடத்திலும் ஊக்கமில்லாதவர்களிடத்திலும் செல்வமானது நிற்கிறதில்லை. நேர்மையுடையவனும்நேர்மையால்(அகாரியங்களில்) லஜ்ஜையுள்ளவனுமான மனிதனைத் துர்ப்புத்தியுள்ளவர்கள் சக்தியில்லாதவனாக நினைத்துக்கொண்டு அவமதிக்கிறார்கள். மிக்க யோக்யனும் அதிகமாகக் கொடுப்பவனும் அதிசூரனும் அதிக விரதமுடையவனும் தன்னறிவால் கர்வமுள்ளவனுமாயிருப்பவனை லக்ஷ்மியானவள் பயத்தினால் கிட்ட நெருங்குகிறதில்லை. இந்த லக்ஷ்மியானவள் அதிக குணவான்

களிடத்திலும் அதிக குணமற்றவர்களிடத்திலும் இருக்கிறதில்லை. இந்த லக்ஷ்மியானவள் குணங்களையும் விரும்புகிறதில்லை; குணமில்லா விட்டாலும் பற்றுகிறதில்லை. பித்துக்கொண்டவளான இந்த ஸ்ரீயா னவள், கண் பொட்டையான பசுப்போல ஏதாவது ஓரிடத்திலேயே இருக்கிறாள். வேதங்கள் அக்கினிஹோத்திரத்தைப் பயனாகவுடைய வைகள். சாஸ்திரமானது நல்லியற்கையையும் நன்னடையையும் பய னாகவுடையது. ஸ்திரீயானவள் கிரீடையையும் புத்திரனையும் பயனாக வுடையவள். தனமானது தானத்தையும் போகத்தையும் பயனாக வுடையது. எவன் அதர்மத்தால் ஸம்பாதிக்கப்பட்ட தனங்களால் பரலோகத்திற்குரிய கர்மாவைச் செய்கிறானோ அவன், (அந்தத்) தனம் கெட்ட வழியாய் வந்ததால், மரித்தபிறகு அந்தக் கர்மாவின் பயனை அனுபவிக்கமாட்டான். ஸத்வகுணமுள்ளவர்களுக்கு, காடு களிலும் வனத்திலுள்ள செல்லமுடியாத இடங்களிலும் கஷ்ட மான ஆபத்துக்களிலும் பரபரப்பை உண்டுபண்ணுகிற காரியத்தி லும் ஆயுதங்கள் ஓங்கப்பட்ட காலத்திலும் பயம் இல்லை. முயற்சி, இந்திரியங்களின் அடக்கம், திறமை, அஜாக்ரதையில்லாமை, தைரி யம், ஞாபகசக்தி, நன்கு ஆலோசித்து ஆரம்பித்தல் இவைகளை ஐஶ்வரியத்துக்குக் காரணமாக அறியும். தவசிகளுக்குத் தவம் பலம்; பிரம்மஜ்ஞானிகளுக்குப் பிரம்மம் பலம். தீயோர்களுக்குத் துன்பம்செய்தல் பலம். குணவான்களுக்குப் பொறுமை பலம். ஜலம், கிழங்கு, பழம், பால், [1] ஹவிஸ், பிராமணனுடைய அனு மதி, குருவின் வசனம், ஔஷதம் இவ்வெட்டும் விரதத்தைக் கெடுக்காதவைகள். எது தனக்குக் கெடுதலாயிருக்கிறதோ அதைப் பிறனுக்குச்செய்ய நினைக்கக்கூடாது. (புலன்களின்) அடக்கத்தி னாலேதான் தர்மமானது உண்டாகும். அதர்மமானது காமத்தால் நடக்கிறது. கோபியாமலிருந்தே கோபத்தை ஜயிக்கவேண்டும். துஷ்டனைத் தன் நல்லொழுக்கத்தால் ஜயிக்கவேண்டும். லோபியைத் தானத்தால் ஜயிக்கவேண்டும். பொய்யை ஸத்தியத்தால் ஜயிக்க வேண்டும். ஸ்திரீ, தூர்த்தன், சோம்பேறி, பயந்தவன், கொடுமை யுள்ளவன், (தான் ஒருவனே) ஆண்பிள்ளை என்கிற கர்வமுள்ளவன், திருடன், நன்றிமறந்தவன், நாஸ்திகன் (இவர்களிடத்தில்) நம்பிக்கை வைக்கக்கூடாது. நமஸ்காரத்தை வழக்கமாகவுடையவனும் எந் நாளும் பெரியோர்களை அடுத்து வழிபடுகிறவனுமான மனிதனுக்குக்

---

1 கஞ்சிவடிக்காமல் பொங்கின அன்னம்.

[1] கீர்த்தியும் ஆயுளும் [2] யசஸும் பலமும் இந்நான்கும் நன்றாக விருத்தியடைகின்றன. எந்த அர்த்தங்கள் அதிகக் கிலேசத்தினுலேயோ தர்மத்தை மீறுவதனுலேயோ சத்துருவை வணங்குவதனுலேயோ ஏற்படுமோ அவைகளில் மனத்தைச் செலுத்தாதீர். கல்லாத மனிதன் துக்கிக்கப்படத் தக்கவன். பிரஜையை உண்டுபண்ணுத சேர்க்கை துக்கிக்கப்படத்தக்கது. ஆகாரமில்லாத பிரஜைகள் துக்கிக் கப்படத்தக்கவைகள். அரசனில்லாத நாடு துக்கிக்கப்படத்தக்கது. தேகிகளுக்கு வழிப்போக்கானது ஜரை; பர்வதங்களுக்கு ஜலமானது ஜரை; ஸ்திரீகளுக்கு ஸம்போகமில்லாமை ஜரை; மனத்திற்குக் கடுஞ் சொல் ஜரை. வேதங்கள் அப்பியாஸமில்லாமையைக் களங்கமாகவுடையவைகள்; பிராமணனுக்கு விரதமில்லாமை களங்கம்; பூமிக்கு வாஹ்லீக தேசத்து ஜனங்கள் களங்கம்; மனிதனுக்குப் பொய் களங்கம்; பதிவிரதைக்குக் [3] கௌதூஹலம் களங்கம்; ஸ்திரீகளுக்குப் பரதேசகமனம் களங்கம். ஸுவர்ணத்திற்கு வெள்ளி மலம்; வெள்ளிக்கு ஈயம் மலம்; ஈயத்திற்குக் காரீயம் மலம்; காரீயத்திற்கு அழுக்கே மலம். சயனத்தால் நித்திரையை ஜயிக்கமுடியாது; காமத்தால் ஸ்திரீகளை ஜயிக்கமுடியாது; விறகினுல் அக்கினியை ஜயிக்கமுடியாது; பானத்தால் ஸுரையை ஜயிக்கமுடியாது. மித்திரனைத் தானத்தால் ஜயித்தவனும், சத்துருக்களை யுத்தத்தால் ஜயித்தவனும், தாரத்தை அன்னபானத்தால் ஜயித்தவனுமாயிருப்பவனுடைய வாழ்வு பயனுள்ளது. ஆயிரமுள்ளவர்களும் ஜீவிக்கிறார்கள்; நூறுள்ளவர்களும் ஜீவிக்கிறார்கள். ஓ! திருதராஷ்டிரரே! ஆசையை விடும். எப்படியாவது ஜீவிக்கப்படுகிறதில்லையென்பதில்லை. பூமியில் எவ்வளவு நெல்லும் யவையும் பசுக்களும் ஸ்வர்ணமும் ஸ்திரீகளுமுண்டோ அவையெல்லாம் ஒருவனுக்குப் போதாவென்று பார்க்கிறவன் மயக்கத்தை அடைகிறதில்லை. ஓ! அரசரே! மறுபடியும் உமக்குச் சொல்லுகிறேன். ஓ! அரசரே! உமக்குச் சொந்தப் புத்திரர்களிடத்திலும் பாண்டுவின் புத்திரர்களிடத்திலும் ஸமமான எண்ணமிருக்குமேயானல் (அந்தப்) புத்திரர்கள்விஷயத்தில் சமமாக நடப்பீராக.

1 தானம் முதலானவற்றுல் உண்டாகும் புகழ்.

2 பராக்ரமத்தால் உண்டாகும் புகழ்.

3 அரிய பொருள்களில் ஆசை.

## நாற்பதாவது அத்யாயம்.

## ப்ரஜாகரபர்வம். (தொடர்ச்சி.)

(விதுரர் திருதராஷ்டிரனுக்கு அவரவர் ஜாதித் தொழிலை அவரவர் அனுஷ்டிக்கவேண்டுமென்பதையும் யுதிஷ்டிரருக்கு ராஜ்யங்கொடுத்து க்ஷத்திரியத் தொழிலிலிருக்கச் செய்யவேண்டுமென்பதையும் கூறியது.)

பற்றுதலில்லாதவனும் ஸாதுக்களால் பூஜிக்கப்பட்டவனுமான எவன் சக்தியைக் கெடுத்துக்கொள்ளாமல் காரியத்தை (ச்செவ்வையாய்ச்) செய்கிறானோ ஸத்தான அவனைப் புகழானது விரைந்து வந்தடைகின்றது. ஸத்துக்கள் மிக்க மகிழ்ச்சியை அடைந்து (அவனுடைய) ஸுகத்திற்காக அமைகிறார்கள். எவன் (பகைவர்களால்) தாழ்த்தப்படாமலிருந்தே பெரிதாயிருந்தாலும், அதர்மத்துடன் கூடின பொருளை விடுகிறானோ அவன் ஜீர்ணமான தோலைவிட்ட ஸர்ப்பம்போல மிக்கதுக்கங்களைவிட்டு ஸுகமாக நித்திரை செய்வான். பொய்சொல்லி மேன்மையடைவதும், அரசன்விஷயத்தில் கோளும், குருவின்விஷயத்தில் கபடமான நிர்ப்பந்தமும், பிரம்மஹத்திக்கொப்பானவைகள். பொறுமையானது எல்லாவிதத்தாலும் மிருத்யுவே. அதிகப்பேச்சானது திருவை அழிக்கும். (குருவுக்குப்) பணி செய்யாமை, விரைதல், (பிறர்) புகழ்தல் ஆகிய மூன்றும் வித்தைக்குப் பகைகள். சோம்பல், மதம், மோகம், சாபல்யம், வீண்பொழுது போக்கும்கூட்டம், கர்வத்துடன்கூடுதல், விறைப்பு, [1]தியாகியாயிருப்பது இந்த ஏழுதோஷங்களும் எப்பொழுதும் வித்தியார்த்திகளுக்கு உண்டாகுமென்று கருதப்பட்டன. ஸுகத்தை விரும்புகிறவனுக்கு வித்தை ஏது? வித்தையை விரும்புகிறவனுக்கு ஸுகம் இல்லை. ஸுகத்தை விரும்புகிறவனாயிருந்தால் வித்தையை விடவேண்டும். வித்தையை விரும்புகிறவனாயிருந்தால் ஸுகத்தை விடவேண்டும். அக்னியானது கட்டைகள்விஷயத்தில் திருப்தியடைகிறதில்லை. கடலானது நதிகளையடைந்து திருப்தியடைகிறதில்லை. மிருத்யுவானவன் எல்லாப் பிராணிகளாலும் திருப்தியடைகிறதில்லை. ஸ்திரீயானவள் புருஷர்கள்விஷயத்தில் திருப்தியடைகிறதில்லை. ஆசையானது தைரியத்தை அழிக்கிறது. அந்தகன், (பெண்டிர் மக்கள் முதலான) செழிப்பை அழிக்கிறான். கோபமானது செல்வத்தை அழிக்கிறது.

---

1 'அத்யாகித்வம்' என்று பிரித்து 'ஈயாமை' என்பது பழையவுரை.

சயாமையானது புகழை அழிக்கிறது. பாலனஞ்செய்யாமை பசுக்களை அழிக்கிறது. ஓ! அரசரே! கோபத்தை அடைந்த ஒரு பிராம்மணன் ராஜ்யத்தை அழிப்பான். ஓ! பாரதரே! அஜங்கள், வெண்கலப் பாத்திரம், நல்லவெள்ளி, தேன், [1] விஷத்தையிழுக்கிற சகோரபக்ஷி, ஸ்ரோத்ரியன், முதுமையடைந்த ஞாதி, ஸ்ரமதசையடைந்த நல்ல குலத்தோன் இவர்கள் எப்பொழுதுமே உம்முடைய கிருகத்திலிருக்க வேண்டும். பாரதரே! சந்தனம், அஜம், விருஷபம், வீணை, கண்ணாடி, தேன், நெய், உலோகம், தாம்ரபாத்திரம், சங்கம், ஸாளக்கிராமம், கோரோசனை ஆகிய இவைகள் சிறந்தவைகள். தேவர்கள் பிராம்மணர்கள் அதிதிகள் ஆகிய இவர்களுடைய பூஜைக்காக வீட்டில் வைத்துக்கொள்ளவேண்டியவைகளென்று மனு சொல்லியிருக்கிறார். எல்லாவற்றிலும் சிறந்ததும் புண்ணியமான ஸ்தானமும் உத்ஸவத்திற்கு ஸமானமுமான இதனையும் உமக்குச் சொல்லுகிறேன். ஒருகாலும் காமத்தாலோ பயத்தாலோ லோபத்தாலோ, உயிரின் நிமித்தமாகவும் தர்மத்தை விடக்கூடாது. தர்மம் நிலையானது. ஸுக துக்கங்கள் நிலையற்றவை. ஜீவன் நித்தியமானது. இந்த ஜீவனுடைய [2] சரீரமானது அநித்தியம். அநித்தியத்தைத் தள்ளிவிட்டு நித்தியத்தில் நிலைத்திருக்கக் கடவீர். ஸந்தோஷத்தை அடைவீராக. ஸத்துக்கள் ஸந்தோஷத்தை முக்யமாகவுடையவர்களாயிருக்கிறார்களல்லரோ? மிக்க பலசாலிகளும், மகானுபாவர்களும், தனங்களாலும் தானியங்களாலும் பூர்ணமாயிருக்கிற பூமியை ஆண்டு ராஜ்யங்களையும் விரிவான போகங்களையும் விட்டுவிட்டு அந்தகனுடைய வசத்தை அடைந்தவர்களுமான அரசர்களை ஆலோசித்துப்பாரும். ஓ! அரசரே! கஷ்டப்பட்டு வளர்த்த புத்திரனையும் மரித்தபொழுது மனிதர்கள் தூக்கித் தங்கள் வீடுகளிலிருந்தும் வெளியாக்குகிறார்கள். அவனைக்குறித்துத் தலைவிரித்துக்கொண்டு இரக்கமாக அழுகிறார்கள்; சிதையின் நடுவில் கட்டையைப் போலப் போடவும் செய்கிறார்கள். இறந்துபோனவனுடைய தனத்தை மற்றொருவன் அனுபவிக்கிறான். பக்ஷிகளும் அக்னியும் சரீரத்தின் தாதுக்களைப் பக்ஷிக்கின்றன. இவன் புண்ணியத்தாலும் பாவத்தாலும் சூழப்பட்டு இரண்டுடனும் பரலோகம் செல்லுகிறான். ஐயா!

---

1 அரசருணவைப் பரீக்ஷிப்பதற்குச் சகோரபக்ஷியைக் கொணர்ந்து உணவை அதற்குக்காட்டி அதன் முகவேறுபாடு முதலியவற்றால் அவ்வுணவில் விஷ முதலியன கலந்திருத்தலை அறிவது முற்கால வழக்கம்.

2 'ஹேது:' என்பது வேறு பாடம். 'ஜீவனுக்குக் காரணமான அவித்தை' என்பது பழையவுரை.

ஞாதிகளும் மித்திரர்களும் புத்திரர்களும், மலர்களும் கனிகளுமில்லாத மரங்களைப் பறவைகள் விடுவதுபோல,(மரித்தவனை)விட்டுவிட்டுத் திரும்பிவந்துவிடுகிறார்கள். அக்கினியில் போடப்பட்ட அவனையோ அவன்செய்த கர்மமானது தொடருகிறது. ஆகையால், மனிதன் மெள்ள மெள்ள முயற்சிசெய்து தர்மத்தை ஸம்பாதிக்கவேண்டும். ஓ! அரசரே! [1] இந்த உலகத்திற்கு மேலும் ஸ்வர்க்கலோகத்திற்குக் கீழும், பெரிதான இருளடைந்த அந்ததாமிஸ்ரமென்கிற நரகம் இருக்கிறது. அது இந்திரியங்களை மோஹிக்கச்செய்யுமென்று அறியக்கடவீர். அது உம்மை அணுகவேண்டாம். இந்த வார்த்தையைக் கேட்டு உண்மையாக எல்லாவற்றையுமே செய்யவல்லவராவீரானால் பூலோகத்தில் பெரிதான புகழை அடைவீர். உமக்கு இம்மையிலும் மறுமையிலும் பயமுமில்லை. ஓ! பாரதரே! ஜீவனானது புண்ணியகர்மத்தைத் தீர்த்தமாகவுடையதும் பிரம்மத்திலிருந்துமுண்டானதும் சந்தோஷத்தைக் கரையாகவுடையதும் தயையை அலையாகவுடையதுமான நதி. அதில் ஸ்நானம் செய்தவன் பரிசுத்தனாகிறான்; புண்ணிய கர்மத்தைச் செய்தவனும் ஆகிறான். எந்நாளும் அழிவில்லாத ஆத்மாவே புண்ணியனல்லவா? காமக்குரோதங்களாகிற முதலைகளுள்ளதும் ஐம்புலன்களாகிற ஜலமுள்ளதுமான நதியையும் (அதிலுள்ள) ஜன்மங்களாகிற மடுக்களையும் ஸந்தோஷமாகிற ஓடத்தைச்செய்து தாண்டக்கடவீர். எவன், பேரறிவால் முதியவனும் தர்மத்தால் முதியவனும் வித்தையால் முதியவனும் பிராயத்தால் முதியவனும் தன் பந்துவுமாயிருப்பவனைக் காரியாகாரியங்களில் பூஜித்து மகிழச்செய்து வினவுவானோ அவன் ஒருபொழுதும் மோகத்தை அடையமாட்டான். மனவுறுதியினால் பெண்விருப்பத்தையும் உதரத்தையும் ரக்ஷிக்கவேண்டும். கண்ணால் கைகால்களைக் காக்கவேண்டும். மனத்தால் கண் காதுகளைக் காக்கவேண்டும். கர்மாவினால்மனத்தையும் வாக்கையும் காக்கவேண்டும். நித்தியம் ஸ்நானம் செய்பவனும், நித்தியம் யஜ்ஞோபவீதத்துடன் கூடினவனும்; நித்தியம் தன் வேதத்தைஅத்தியயனம் செய்கிறவனும், பதிதர்களுடைய அன்னத்தைத் தள்ளினவனும், உண்மையை உரைக்கிறவனும், குருவினுடைய பணிவிடையைச் செய்கிறவனுமான பிராம்மணன் பிரம்மலோகத்தையடைந்து நழுவாமலிருப்பான். வேதங்களை அத்யயனம் செய்து அக்னிகளுக்குத் தர்ப்பங்களால் [2] பரிஸ்தரணம்

1 'ஸ்வர்க்கத்திற்கும் இவ்வுலகத்திற்கும் கீழேயுள்ள' என்பது பழையவுரை. 2 அக்னியைச் சுற்றித் தர்ப்பங்களைப் பரப்புவது; 'தினந்தோறும் அக்னிஹோத்ரம் செய்து' என்றபடி.

செய்து யாகங்களால் ஆராதித்துப் பிரஜைகளைப் பரிபாலித்துக் கோக்களுக்கும் பிராம்மணர்களுக்குமாக யுத்தத்தில் கொல்லப்பட்டுச் சஸ்திரத்தினால் பரிசுத்தமான மனத்தையுடையவனான க்ஷத்திரியன் ஸ்வர்க்கத்தை அடைகிறான். வைஸ்யனானவன் அத்தியயனஞ் செய்து பிராம்மணர்களுக்கும் க்ஷத்திரியர்களுக்கும் தன்னை அடுத்தவர்களுக்கும் ஸமயத்தில் தனங்களைப் பிரித்துக்கொடுத்து (கார்ஹபத்திய முதலான) மூன்று அக்கினிகளுடைய பரிசுத்தம் செய்வதும் புண்யமுமான தூமத்தையும் முகர்ந்து, மரித்தபிறகு ஸ்வர்க்கத்தில் திவ்யஸுகங்களை அனுபவிக்கிறான். சூத்திரனானவன் பிராம்மணஜாதி க்ஷத்திரியஜாதி வைஸ்யஜாதிகளை முறையாக நியாயப்படி பூஜிக்கிறவனும் இவர்கள் சந்தோஷத்தை அடைந்தபொழுது வருந்தாதவனுமாகிப் பாவங்களை எரித்துத் தேகத்தைவிட்டு ஸ்வர்க்கத்தில் ஸுகங்களை அனுபவிக்கிறான். இப்பொழுது நான்கு வர்ணங்களுடைய தர்மமும் உமக்குச் சொல்லப்பட்டன. (இதைச் சொன்னதற்குக்) காரணத்தையும் அடுத்துச் சொல்லுகிற என்னிடமிருந்து தெரிந்துகொள்ளும். பாண்டுபுத்திரனானவன் க்ஷத்திரிய தர்மத்திலிருந்தும் குறைவை அடைகிறான். ஓ! அரசரே! நீர் அவனை ராஜதர்மத்தில் ஏற்படுத்த வேண்டும்' என்று சொன்னார்.

(அப்பொழுது), திருதராஷ்டிரன், 'நீ எனக்கு எந்நாளும் அறிவிக்கிறபடி இது உண்மையே. எனக்கு இனியவனே! நீ என்னிடம் எவ்விதம் சொல்லுகிறாயோ அப்படியே என்னுடைய புத்தியும் இருக்கிறது. பாண்டவர்களைக்குறித்து எப்பொழுதும் என்னுடைய புத்தியானது இவ்விதம் செய்யப்பட்டிருந்தாலும் துரியோதனனை அடைந்து (=நினைத்து) மறுபடி திரும்பிவிடுகிறது. ஒரு ப்ராணியினாலும் தெய்வமானது தாண்ட முடிகிறதில்லை. தெய்வத்தையே நிலைத்ததென்றும் மனிதனுடைய சக்தியையோ ப்ரயோஜனமற்றதென்றும் நினைக்கிறேன்' என்று சொன்னான்.

ப்ரஜாகரபர்வம் முற்றிற்று.

---

## நாற்பத்தோராவது அத்யாயம்.

## ஸநத்ஸுஜாதபர்வம்.

**(திருதராஷ்டிரன் மேலும் தர்மங்களைச் சொல்லும்படிகேட்க விதுரர் தமது தகுதியில்லாமையைக் கூறி, நினைத்தவுடன் வந்த ஸநத்ஸுஜாதரைத்திருதராஷ்டிரனுக்குத் தத்வோபதேசஞ்செய்ய வேண்டினது.)**

திருதராஷ்டிரன், 'விதுர! உன் வாக்கினாலே சொல்லப்படாதது ஏதாவது இருக்குமானால், கேட்க விருப்பமுள்ளவனான எனக்கு அதனையும் சொல். விசித்திரமான விஷயங்களைச் சொல்லுகிறாயன்றோ?' என்று கேட்டான். விதுரர், 'ஓ! திருதராஷ்டிரரே! பாரதரே! ஆதியிலுண்டானவரும் அழிவில்லாதவரும் [1] குமாரருமான ஸநத்ஸுஜாதரானவர், 'மிருத்யுவானது இல்லை' என்று சொன்னார். 'ஓ! மஹாராஜரே! புத்திமான்களெல்லாரிலும் சிறந்தவரான அவர் உமக்கு ரகஸ்யமும் வெளிப்படையுமான மனத்திலுள்ள எல்லாவற்றையும் சொல்லுவார்' என்று சொன்னார்.

திருதராஷ்டிரன், 'ஓ! விதுர! எனக்கு இதன்மேல் ஸநாதனரான ஸநத்ஸுஜாதர் சொல்லப்போவது உனக்குத் தெரியாதா? உனக்குத் தெரிந்தவற்றில் மிச்சமிருக்குமேயானால் நீயே சொல்' என்று சொன்னான். விதுரர், 'நான் சூத்திரஜாதியில் பிறந்தவன்; ஆகையால், இதற்குமேல் சொல்ல நான் துணியவில்லை. குமாரருடைய அநாதியாக வந்த கொள்கையை நான் அறிவேன். பிராம்மண ஜன்மத்தை அடைந்தவரான அவர் ரகஸ்யத்தையும் சொல்லுவார். அதனால், அவர், தேவர்களுக்கு நிந்திக்கக்கூடியவராகமாட்டார். ஆகையினாலே, நான் உமக்கு இதனைச் சொல்லுகிறேன்' என்று சொன்னார்.

திருதராஷ்டிரன், 'விதுர! நீ அவரைப் புராணரும் எந்நாளும் இருப்பவருமாக என்னிடம் சொல்லுகிறாய். இந்தத் தேகத்துடன் இங்கேயே எப்படி (அவருடன்) சேர்க்கையானது ஏற்படும்?' என்று கேட்டான். விதுரர், உக்கிரமான விரதத்தையுடையவரான அந்த முனிவரை நினைத்தார். ஓ! பாரதரே! அந்தமுனிவரும் விதுரருடைய நினைவை அறிந்து தரிசனம் அளித்தார். அந்த விதுரரும் சாஸ்திரத்தில் காணப்பட்ட செய்கையால் அவரை வரவேற்றார். பிறகு, ஸுகமாக உட்கார்ந்தவரும் ஶ்ரமபரிகாரம் செய்துகொண்டவருமான அவரை நோக்கி, விதுரர், 'ஓ! பகவானே! திருதராஷ்டிரருடைய மனத்தில்;

---

1 'முதுமையில்லாதவர்; நித்யயௌவனமுடையவர்' என்பது பொருள்

என்னால் சொல்லக்கூடாததாயிருக்கிற ஒரு ஸந்தேகம் இருக்கிறது. எதைக்கேட்டால், இந்த அரசர் எல்லாத் துக்கங்களையும் கடந்தவரா வாரோ, லாபாலாபங்களும் வேண்டுதல்வேண்டாமைகளும் ஜரா மரணங்களும் பயம் பொறாமைகளும் பசிதாகங்களும் மத ஐஸ்வரியங்களும் வெறுப்பும் சோம்பலும் காமக்குரோதங்களும் விருத்தி க்ஷயங்களும் இவரைத் துன்புறுத்தமாட்டாவோ, அதனை நீர் இவருக்குச் சொல்லவேண்டும்' என்று வேண்டினார்.

## நாற்பத்திரண்டாவது அத்யாயம்.

## ஸநத்ஸுஜாதபர்வம். (தொடர்ச்சி.)

(ஸநத்ஸுஜாதர் திருதராஷ்டிரனுக்குத் தத்வத்தை உபதேசித்தது.)

பிறகு, புத்திமானான திருதராஷ்டிர ராஜன், விதுரரால் சொல்லப்பட்ட அந்த வார்த்தையைப் புகழ்ந்து, [1] ஆத்ம ஸ்வரூபமாவதற்கு விருப்பமுள்ளவனாகி, ஏகாந்தத்தில், (ஸநத்தென்கிற ஹிரண்யகர்ப்பரிடமிருந்து சமதமாதிகளுடன் நற்பிறவியாகப் பிறந்தவரான) ஸநத்ஸுஜாதரை நோக்கிச் சிறந்த ஆத்மஞானத்தை வினவினான். 'ஓ! ஸநத்ஸுஜாதரே! மிருத்யுவானது இல்லையென்று நீர் உபதேசித்திருப்பதாகக் கேட்கிறேன். தேவர்களும் அஸுரர்களும் மிருத்யுவில்லாமலிருப்பதற்காகக் குருகுலவாஸத்தை அனுஷ்டித்தார்களே; அவ்விரண்டில் எது ஸத்தியம்?' என்று கேட்டான்.

ஸநத்ஸுஜாதர், 'சிலர்கர்மாவினால் மிருத்யுவின் நிவிருத்தியைச் சொல்லுகிறார்கள். மற்றவர்கள் மிருத்யுவானது இல்லையென்று சொல்லுகிறார்கள். ஓ! அரசனே! இது எவ்விதமென்பதைச் சொல்லுகிறேன். என்னிடமிருந்து கேள்; ஸந்தேகப்படாதே. ஓ! க்ஷத்திரியர்களில் முதன்மையானவனே! (மிருத்யு இருக்கிறான்; இல்லையென்கிற) இரண்டு விதங்களும் ஸத்தியமாக இருக்கின்றன. சில வித்வான்களால் இந்த மிருத்யுவானது (அனாத்மாவில் ஆத்ம புத்தியான) மோகமாக ஒப்புக்கொள்ளப்பட்டதாயிருக்கிறது. நானோ (ஆத்ம ஸ்வரூபத்திலிருந்தும்) தவறுதலான அஜ்ஞானத்தை மிருத்யுவாகச் சொல்லுகிறேன். அப்படியே, (தன் ஸ்வரூபத்திலிருக்கையான) தவறாமையை மோக்ஷமாகவும் சொல்லுகிறேன். தவறுதலால் அஸுரர்கள் அவமானத்தை அடைந்தார்கள்; தவறாமையால்,

1 'புரூஷன்' என்பது மூலம்.

தேவர்கள் பிரம்மமானூர்கள். மிருத்தியுவானது பிராணிகளைப் புலி போலப் பக்ஷிக்கிறதில்லை. ஏனென்றால், இந்த மிருத்தியுவினுடைய ரூபமானது அறியப்படுகிறதில்லையன்றோ? சிலர் இதைக் காட்டிலும் வேருக யமனை மிருத்தியுவாகவும் புத்தியில்வஸிப்பவனுகவும், மரணமற்றவனுகவும், பிரம்ம நிஷ்டனுகவும், அந்தத் தேவனைப் புண்ணியசாலிகளுக்கு ஸுகத்தையளிக்கிறவனும் பாவிகளுக்குத் துக்கத்தைக் கொடுக்கிறவனுமாகப் பிதிருலோகத்தில் ராஜ்யத்தை ஆளுகிறவனுகவும் சொல்லுகிருர்கள். இவனுடைய ஆஞ்ஞையினுலே மனிதர்களுக்குக் கோபமும் தவறும் லோபரூபமான மிருத்தியுவும் உண்டாகின்றன. அகங்காரத்தினுலே சாஸ்திர விரோதமான வழிகளில் சஞ்சரிக்கிறவனுயிருந்துகொண்டு ஒருவனும் ஆத்மாவினுடைய தியானத்தை அடைகிறதில்லை. மோகத்தை அடைந்தவர்களான அவர்கள் அந்த மிருத்தியுவின் வசத்திலிருக்கிறவர்களாகி இங்கிருந்து பரலோகத்தில் சென்று மறுபடியும் விழுகிருர்கள். பிறகு, அவர்களை இந்திரியங்கள் (கர்மங்களை) அனுஸரித்துச் சுற்றுகின்றன. இதனுல், மரணங் காரணமாக மிருத்தியு ஆகிருன். அவர்கள் கர்மம் (பயன்தரத்) தொடங்கிக் கர்மப் பயனில் விருப்பமுள்ளவர்களாகி அதனைத் தொடருகிருர்கள். (அதனுல்) மிருத்யுவைத் தாண்டுவதில்லை. தேஹியானவன் பரமாத்மாவை அடையக்கூடிய யோகத்தை அறியாமையால் போகத்தின் சேர்க்கையால் எல்லாவற்றிலும் பிரவிருத்திக்கிருன். அந்தப் போகப் பிரவிருத்தியானது இந்திரியங்களுக்கு மகாமோகத்தை உண்டுபண்ணுகிறது. (பிறகு), பொய்யான விஷயங்களுடைய சேர்க்கையில் செலவானது நியமமாக ஏற்படுகிறது. பொய்யான விஷயங்களில் சேர்க்கையால் கெடுக்கப்பட்ட அந்தராத்மாவையுடையவனுக எங்கும் விஷயங்களை நினைத்துக்கொண்டு அனுபவிக்கிருன். முதலில் விஷயத்தின் தியானமானது உலகங்களைக் கெடுக்கிறது. பிறகு, காமமும் குரோதமும் சீக்கிரம் பிடித்துக் கொண்டு கெடுக்கின்றன. இவைகள் மூடர்களை மிருத்யுவுக்குக் கொடுக்கின்றன. தீரர்களோ தைர்யத்தினுல் மிருத்யுவைத் தாண்டுகின்றுர்கள். அவன், விஷயதோஷங்களைச் சிந்திக்கிறவனும் மேலே வர விருப்பமுள்ளவனும் அநாதரவினுல் அவைகளை நினையாதவனுமாய்த் தள்ளவேண்டும். இவ்விதம் எந்தவித்வான் விஷயங்களைத் தள்ளுவானே அவனை (அஞ்ஞானமாகிற) மிருத்யுவானது மிருத்யுப் போலாகிப் பக்ஷிக்கிறதில்லை. காமங்களை அனுசரிக்கின்ற மனிதன் காமங்களுடன் நசிக்கின்றுன். காமங்களை விட்டவன் எல்லாப்புண்

ணிய பாவத்தையும் நாசம் செய்கிறான். இதோ பிராணிகளுக்கு அஞ்ஞானரூபமான இருளாகிற நரகமானது காணப்படுகிறது. பிராணிகள், மோகத்தை அடைந்து மேலே பார்த்துக்கொண்டு பள்ளத்திற்கெதிராய்ப்போவதுபோல் ஓடுகின்றன. இவ்வுலகில் மூடனுடைய செய்கைபோன்ற செய்கையில்லாத இந்த மனிதனுக்கு மிருத்திவுவானவன்புல்லால்செய்யப்பட்டபுலிபோல என்னசெய்வான்? ஓ! அரசனே! (விஷயங்களை) நினையாமலிருக்கிறவன் வேறு ஒன்றையும் நினைக்கிறதில்லை: (அப்பொழுது), இவனுக்கு (மிருத்யுவானவன்) புல்லால்செய்த பாம்புபோலாகிறான். கோபத்தாலும் லோபத்தாலும் உண்டான மோஹ பயங்களுடன்கூடின இந்த ஆத்மாவே மிருத்யு. இவன் உமது சரீரத்திலிருக்கிறான். இவ்வித மிருத்யு உண்டாகிறதைத் தெரிந்துகொண்டு ஞானத்திலிருக்கிறவன் இவ்வுலகத்தில் மிருத்யுவினிடமிருந்தும் பயத்தை அடைகிறதில்லை. அவனுடைய விஷயத்தில் மிருத்யுவானவன் மிருத்யுவின் விஷயத்தையடைந்து மனிதன் நசிப்பதுபோல நசிக்கிறான்' என்றார்.

திருதராஷ்டிரன், 'த்விஜர்களுக்கு யாகத்தால் மிகவும் பரிசுத்தமானவைகளும் ஸநாதனமானவைகளும் சிறந்தவைகளுமான வேதவித்துக்கள் சொல்லுகின்ற உலகங்களையே வேதங்கள் இந்த ஸம்ஸார மண்டலத்தில் பரமபுருஷார்த்தமாகச் சொல்லுகின்றன. வித்வானவன் ஏன் இந்தக் கர்மாவைச் [1] செய்கிறதில்லை?' என்று கேட்டான். ஸநத்ஸுஜாதர், 'இவ்விதமே அவித்வான் அடைகிறான். வேதங்கள் அங்கங்கேயும் பயன்களின் கூட்டத்தைச் சொல்லுகின்றன. அவனே இவ்வுலகில் திரும்பிவருகிறான். (வித்வான் இதர) மார்க்கங்களைத் தள்ளி (ஞான) மார்க்கத்தினால் [2] பரமாத்மாவாகிப் பரமனை அடைகிறான்' என்று சொன்னார்.

திருதராஷ்டிரன், 'ஜனனமற்றவரும் புராதனருமான அவரை (ஸம்ஸாரத்தில்) ஏவுகிறவன் யார்? கிரமமாக இந்த எல்லாமாயிருக்கிறாரேயானால் அவருக்கு இதில் என்னகார்யம்? அல்லது, என்னஸுகம்? ஓ! வித்வானே! அது அனைத்தையும் எனக்கு உள்ளபடி சொல்லும்' என்று கேட்டான். ஸநத்ஸுஜாதர், '(இவரிடம்) பலவாயிருப்பதின்ஸம்பந்த முண்டென்றாலோ பெரிய [3] தோஷம் ஏற்படும். அனாதியான அவித்தையின் ஸம்பந்தத்தால் நித்தியர்களான ஜீவர்கள் ஏற்படுகின்ற

---

1 'நைதி' என்பது மூலம்.

2 தானே பரமாத்மாவென்றெண்ணி அதுவேயானென்பது.

3 ஒருவராயிருப்பதைத் தெரிவிக்கிற சாஸ்திர விரோதம்.

ணர். அப்படியாகையில், இவருக்குச் சிறிதேனும் [1] அதிகத்தன்மை போகிறதில்லை. ஆகையால், அவர்கள் அவித்தையின் ஸம்பந்தத்தினால் பரமாத்மாவினிடமிருந்தும் உண்டாகின்றனர். பகவானும் நித்தியரு மான அவர், மாயையின் ஸம்பந்தத்தால் இந்தப்பிரபஞ்சத்தை உண்டு பண்ணுகிறார். அப்படியாகையில், (அது) அவருடைய சக்தியென்று கருதப்பட்டது. வேதங்கள் அவ்விதமான [2] அர்த்தஸம்பத்துடன் ஏற்படுகின்றன' என்றார்.

திருதராஷ்டிரன், 'இவ்வுலகில் [3] சிலர் தர்மங்களைச் செய்யாத காரணத்தாலும் சிலர் இவ்வுலகத்தில் தர்மங்களைச் செய்கின்ற காரணத்தாலும் தர்மம் [4] பாவத்தால் கெடுக்கப்படுகின்றதா? அல்லது, தர்மம் பாவத்தைக் கெடுக்கின்றதா?' என்று கேட்டான். ஸநத்ஸு ஜாதர், 'அந்தப் பிரம்மத்திலிருந்து வித்வானானவன் ஞானத்தினால் நித்தியமான அவ்விரண்டையும் நாசம் செய்கிறான். இது உறுதி. வித்து வானல்லாத விஷயத்தில் தேகியானவன் நேரிட்டவையான புண்ணியத் தையும் அப்படியே பாவத்தையும் அடைகிறான்; இது நிச்சயம். கர் மாவுடன் சென்று புண்ணியபாவங்களினுடைய ஸ்திரமான இரண்டு பயனையும் [5] அனுபவிக்கிறான். [6] அந்தவித்வானும் இம்மையில் புண் ணியகர்மத்தினால் பாவத்தை நாசம் செய்கிறான். அவைகளின் தர் மம் பலமுள்ளதென்று அறியக்கடவாய்' என்று சொன்னார்.

திருதராஷ்டிரன், 'ஓ! வித்துவானே! புண்ணியத்தைச் செய் கின்றவர்களான த்விஜாதிகளுக்குத் தம்தர்மத்திற்குரிய ஸநா தனமான எந்தலோகங்களைச் சொல்லுகின்றார்களோ அவைகளு டைய கிரமங்களையும் அவைகளைக் காட்டிலும் மற்றவைகளையும் சொல்லும். இந்தக்கர்மத்தை நான் அறியவிரும்பவில்லை' என் றான். ஸநத்ஸுஜாதர், 'ஆனால், எவர்களுக்கு [7] விரதத்தில், பலவான் களுக்குப் பலத்தில் ஏற்படுவதுபோல [8] ஸ்பர்த்தை ஏற்படுகிறதோ அந்தப்பிராம்மணர்கள் இங்கிருந்து சென்று சுவர்க்கத்தில் பிரகாச

1 எல்லாவற்றினும் மேலானவரென்பது.

2 பொருளைத் தெரிவிக்கின்றன என்பது.

3 யதிகள். 4 தர்மத்தைச் செய்யாமை.

5 இது சங்கரபாஷ்ய பாடம்; கிருஷ்ணாசாரியர் பாடத்திற்கு, 'அடைந்து (மறுபடியும்) கர்மாவுடன் கூடுகின்றான்' என்பது பொருள்.

6 அறிவுடன்கூடிக் கர்மாக்களைச் செய்பவன்.

7 பயனில் விருப்பத்துடன் அனுஷ்டிக்கப்பட்ட தர்மம்.

8 தத்தம் விரதத்தின் பயன் மேற்பட்டிருக்க வேண்டுமென்னும் எண்ணம்.

மாயிருத்தலை அடைகின்றனர். எவர்களுக்குக் கருமத்திலே [1] ஸ்பர்த்தையோ அவர்களுக்கு அது ஞானஸாதனமாகிறது. அந்தப்பிராம்மணர்கள், இங்கேயே விடுபட்டவர்களாகி [2] மூன்றுஅவஸ்தைகளுடன் கூடினவர்களை (அவற்றினின்றும் விலக்கிக்) காக்கின்ற மோக்ஷத்தை அடைகின்றனர். [3] வேதவித்துக்களான மனிதர்கள் அவர்களுடைய தர்மானுஷ்டானத்தை நல்லனவாகச் சொல்லுகின்றனர். அவன் வெகுவான இந்தப்பந்துஜனங்களையோ மற்றவர்களையோ கருதக்கூடாது. எந்தவிடத்தில், மாரிக்காலத்தில் புல்லும் ஜலமும் அதிகமாயிருப்பதுபோலப் பிராம்மணனுக்குரிய அன்னமும் பானமும் நிரம்பஇருப்பதாக எண்ணுவானோ, அந்தவிடத்திலிருந்து ஜீவிக்க வேண்டும்; வருந்தக்கூடாது. எங்குள்ள [4] ஜனங்கள் (தன்மகாத்மியத்தை) வெளியிடாதவனாயிருக்கிற (இவனுக்கு) அதிகமாகச்செய்ய வேண்டிய மரியாதையைச் செய்யாதவர்களாய் [5] அமங்களமான பயத்தைக் கொடுக்கின்றனரோ அங்குள்ள அந்த ஜனங்கள் (இவனுக்கு) நன்மையைச் செய்பவராவர். இதரஜனங்கள் நன்மையைச் செய்பவரால்லர். [6] எவன் (தன்மகாத்மியத்தை) வெளியிடாதவனுடைய ஆத்மாவைத் தபிக்கச்செய்யானோ பிரம்மஸ்வத்தைக் [7] கெடுக்கமாட்டானோ அவனுடைய அன்னமானது ஸத்துக்களுக்குச் சம்மதமாயுள்ளது. யோகியினுடைய குசம் வல்கலம் வஸ்திரம் முதலியவற்றை

1 'நசஸ்பர்த்தா' என்பது சங்கரபாஷ்யபாடம்; 'ஸ்பர்த்தையில்லையோ' என்பது பொருள். 2 'ஜாக்ரஸ்வப்னஸுஷுப்திக்குமேற்பட்ட துரியநிலையை அளித்து'என்று கருத்து.

3 'அந்தத்தர்மத்தை நன்றாயனுஷ்டிப்பதை வேதவித்துக்களான ஜனங்கள் நல்லதாகச் சொல்லுகின்றனர். வெளிவியாபாரமுடையவனும் அந்தர்முகனுமாயிருக்கின்ற இவனை அதிகமாகக்கௌரவிக்கக்கூடாது; சிறிது செய்யவேண்டும்' என்பது பழையவுரை.

4 '(தன்மஹிமையைச்) சொல்லாமலிருக்கும்போது அமங்களமான பயத்தையுண்டுபண்ணுமிடத்திலிருந்துகொண்டு தன்னைச் சிறந்தவனாகத் தெரிவிக்காமலிருப்பவன் சிறந்தவன். மற்றவன் சிறந்தவனல்லன்' என்பது பழையவுரை. 5 அவமானம்.

6 'தன்மஹிமையைச் சிலாகிக்கிறவனைப்பற்றி வருத்தமடையாதவனும் யதிகளுக்கும் பிரம்மசாரிகளுக்கும் பிக்ஷையிடாமல் போஜனம் செய்யாதவனுமாயிருப்பவனுடைய அன்னம் ஸாதுக்களுக்கு ஸம்மதமானது' என்பது பழையவுரை. 7 சங்கரபாஷ்யபாடம்; கிருஷ்ணாசாரியர் பாடத்துக்கு; 'பிரம்மஸ்வத்தை யெடுத்து அனுபவியானோ' என்பது பொருள்.

பிரம்மஸ்வமாகச் சொல்லுகின்றனர். எப்படி நாயானது எப்பொழுதும் கண்டோர்அருவருக்கும்படி தன்னுடைய வாந்தியைத் தின்னுகின்றதோ அப்படியே, (தம்மஹிமையை வெளியிடுகின்ற) ஞானிகள் தம் பலத்தைக்கொண்டு ஜீவிப்பதால் வாந்தியைப் புஜிக்கின்றனர். பிரம்மவித்தானவன், 'என்னுடைய ஒழுக்கங்கள் எந்நாளும் பிறரால் அறியப்படவேண்டாம்' என்று எண்ணவேண்டும். இவ்விதம், ஞாதிகளுடைய மத்தியில் வஸிப்பவனாகி ஒன்றையுமடையாமலிருக்க வேண்டும். எவன் பிராம்மணனாயிருந்துகொண்டு, லிங்கசரீரமில்லாதவரும் சலியாதவரும் சுத்தரும் எல்லாத்வந்த்வங்களும் அற்றவருமான அந்தராத்மாவை எவ்விதம் அறிவதற்கு யோக்கியனாகிறான்? எவன் ஒருவிதமாயிருக்கிற ஆத்மாவை மற்றொருவிதமாய் அறிகிறானோ ஆத்மாவை அபஹரித்தவனான அந்தத்திருடனாலே எந்தப்பாவம் செய்யப்பட்டதாகாது? பிரம்மவித்தும் பண்டிதனுமாயிருக்கிற அந்தப் பிராம்மணனானவன், (பசிதாகங்களால்) ஶ்ரமமில்லாதவனும் (ஒன்றையும்) பெற்றுக்கொள்ளாதவனும் (பெரியோர்களால்) ஒப்புக்கொள்ளப் பட்டவனும் (சோகமுதலான) உபத்திரவமில்லாதவனும் சிஷ்டனுமாயிருக்கவேண்டும்; சிஷ்டன்போலிருக்கக்கூடாது. எவர்கள் மனிதர்களைச்சேர்ந்த தனத்தில் பூர்ணமாயில்லாதவர்களும் தேவர்களைச் சேர்ந்த யாகத்தில் பூர்ணர்களுமாயிருக்கின்றனரோ அவர்கள் வெல்லமுடியாதவர்களும் அசைக்கமுடியாதவர்களுமானவர்கள். அவர்களைப் பிரம்மத்தின் சரீரமாக அறியவேண்டும். இவ்வுலகில் எவனொருவன் மிகவும் இஷ்டத்தைச் செய்கிற எல்லாத் தேவர்களையும் அறிவானோ அவனும், [1] எந்தத் தேவனிடம் தான் பிரயத்னம் செய்கிறானோ அந்தத் தேவனும் பிரம்மவித்துக்கு ஸமானமாகார்கள். பிரயத்னமில்லாதவனாயிருக்கிற எவனை மனவடக்கமுள்ளவர்கள் பூஜிக்கின்றார்களோ பூஜிக்கப்படுகிற அவன் (பூஜிக்கப்பட்டோம் என்று) நினைக்கக்கூடாது; அவமானம் ஏற்பட்டபொழுதும் அதிகம் வருந்தக்கூடாது. (பூஜிக்கப்படக்கூடிய வித்துவானானவன்) பூஜிக்கப்பட்டபொழுது, 'இமை மூடித்திறப்பதுபோல் எப்பொழுதும் உலகமானது இயற்கையான செய்கையுள்ளது. (ஆகையால்), இங்கே வித்வான்கள் பூஜிக்கின்றனர்' என்று நினைக்கவேண்டும். [2] பூஜிக்கப்படாதபொழுது, 'உலகத்தில் அதர்மத்தில் நிபுணர்களும் மூடர்

---

1 சங்கரபாஷ்யபாடம்; 'தஸ்மிந்' என்று பாடங்கொண்டு, 'அவன் அந்த இஷ்டநிமித்தம் முயல்வதால் பிரம்மஜ்ஞானிக்கு ஒப்பாகான்' என்பது பழையவுரை. 2 'மந்யேத் அமாநித:' என்று திருத்தப்பட்டது.

களும் மாயையில் ஸமர்த்தர்களுமாயிருப்பவர்கள், பூஜிக்கத்தக்கவனைப பூஜிக்கமாட்டார்கள்' என்று நினைக்கவேண்டும். எப்பொழுதும் மானமும் மௌனமும் சேர்ந்து வஸிக்கிறதில்லை. வித்வான்கள், 'மானத்திற்கு இந்த லோகம். மௌனத்திற்குப் பரலோகமான தத்பதார்த்தம் (=பிரம்மம்)' என்று அறிகின்றனர். ஓ! க்ஷத்திரிய! செல்வமோ மானமென்னும் பொருளுடன் சேர்ந்திருக்கிறது. அதுவும் (மோக்ஷத்துக்கு) விரோதமாயிருக்கிறது. பிரம்மத்தைச் சேர்ந்த (மோக்ஷச்) செல்வமோ பிரஜ்ஞையில்லாதவனால் அடைய மிகவும் அரிதாயுள்ளது. இவ்வுலகில் சத்துருக்கள் பலவிதமானவைகளும் தரிக்கமுடியாதவைகளும் கர்வத்தையும் மோகத்தையும் தடுப்பவைகளுமான ஸத்தியம், நேர்மை, லஜ்ஜை, அடக்கம், சுசியாயிருத்தல், வித்தை இந்த ஆறுகளையும் அந்த மோக்ஷச் செல்வம் வருதற்கு வாயில்களாகச் சொல்லுகின்றனர்' என்று சொன்னார்.

## நாற்பத்துமூன்றுவது அத்யாயம்.

## ஸநத்ஸுஜாதபர்வம். (தொடர்ச்சி.)

### (ஸநத்ஸுஜாதர் தத்வோபதேசத் தொடர்ச்சி.)

திருதராஷ்டிரன், 'ஓ! முனிவரே! இந்த மௌனமானது [1] யாருக்கு? [2] இவ்விரண்டில் எது மௌனம்? ஓ! வித்வானே! மௌனத்தின் தன்மையைச் சொல்லும். வித்வானானவன் வாக்கின் மௌனத்தால் பிரம்மமாகிற மௌனத்தை அடைகிறானா? (அல்லது வேறு உபாயத்தாலா?) இவ்வுலகில் மௌனத்தை எவ்விதம் செய்கின்றார்கள்?' என்று கேட்டான். ஸநத்ஸுஜாதர், '[3] வேதங்கள் மனத்துடன் இந்தப் பிரம்மத்தில் பிரவேசிக்கமுடியாத காரணத்தினால் இது மௌனம். அரசனே! எவர்விஷயத்தில் இந்த வேதசப்தமானது உண்டாயிருக்கிறதோ அவர் அந்த வேத சப்தத்தினாலேயே சொல்லத் தக்கவராயிருக்கிறார்; [4] ஜோதிர்மயமாக விளங்குகிறார்' என்றார்.

1 'என்னப்ரயோஜனத்திற்காக?' என்பது பழையவுரை.

2 வாக்கின்மௌனம்; அர்த்தமௌனம், எது பிரம்மம்.

3 'வாக்கும் மனமும் செல்லாநிலைமையுடைமையால்' என்பதுகருத்து.

4 'தந்மய:த்வேஷ' என்பதுமூலம்; 'சப்தமயமாக' என்பதுபழையவுரை.

திருதராஷ்டிரன், 'எந்தப்பிராம்மணன் ரிக்குக்களையும் யஜுஸுக்களையும் ஸாமங்களையும் அறிவானோ அவன் பாவங்களைச் செய்தால் பாவத்தால் ஸம்பந்திக்கப்படுகிறானா? இல்லையா?' என்று கேட்டான். ஸநத்ஸுஜாதர், 'ரிக்குக்களோ யஜுஸுகளோ ஸாமங்களோ, வாக்குமனங்களை அடக்கும் ஸாமர்த்தியமில்லாதவனைப் பாபகர்மத்திலிருந்தும் காக்கிறதில்லை. உமக்கு நான் பொய்யைச் சொல்லவில்லை. கள்ள ஒழுக்கமுள்ள கபடமுள்ளவனை வேதங்கள் பாவத்திலிருந்தும் கரையேற்றுகிறதில்லை. சிறகுமுளைத்தபக்ஷிகள் கூட்டை விடுவதுபோல, வேதங்கள் இவனை முடிவுக்காலத்தில் விட்டு விடுகின்றன' என்றார்.

திருதராஷ்டிரன், 'ஓ! ஸமர்த்தரே! வேதங்கள் வேதவித்தைக் காக்கச் சக்தியில்லாமலிருக்குமேயானால், பிராம்மணர்களுக்கு நெடுநாளாயுள்ள இந்தப் [1]புலம்பல் ஏன்?' என்று கேட்டான். ஸநத்ஸுஜாதர், 'ஓ! மஹானுபாவ! [2]வேதங்களானவை அந்தப்பரமாத்மாவினுடைய நாமம்முதலான விசேஷரூபங்களாலேயே இந்த ஜகத்துவிளங்குகின்றதென்று உதாஹரித்துவிட்டு, அவருடைய ஸரியான ரூபத்தைச்சொல்லுகின்றன. (முனிவர்களும்) அந்தப்பிரம்மத்தை, பிரபஞ்சத்தைவிட வேறானரூபமுடையதாக உதாஹரிக்கின்றார்கள். அந்தப்பிரம்மஸ்வரூபத்தை அடைவதற்காக (வேதத்தில்) இந்தத்தவமும் யாகமும் சொல்லப்பட்டன. இந்த வித்வான் அவைகளால் புண்ணியத்தை அடைகிறான். பிறகு, அவன் புண்ணியத்தால் பாவத்தை நாசம் செய்து ஞானத்தினால் நன்றாக விளக்கப்பட்ட ஆத்மாவையுடையவனாகிறான். ஆத்மாவானவன் ஞானத்தால் பரமாத்மாவை அடைகிறான்; [3] வேறுமார்க்கத்தால் அடைகிறதில்லை. (அறம்பொருளின்பங்களென்னும்) திரிவர்க்கங்களின் பலன்களை விரும்புகிறவன் இவ்வுலகில் செய்யப்பட்ட எல்லாவற்றையும் கிரஹித்துக்கொண்டு பரலோகத்தில் அனுபவிக்கிறான். மறுபடியும், (ஸம்ஸார) மார்க்கத்தை அடைகிறான். இவ்வுலகில் தவம் செய்யப்படுகிறது. பரலோகத்தில் பயன் அனுப

1

2 'வேதங்கள் எதனுடைய புலம்பலென்று சொல்லுகிறார்களோ அந்தப் பிரம்மத்தின் நாமமுதலான விசேஷ ரூபங்களுடன் இந்த உலகம் விளங்குகின்றது; வேதங்கள், உருவமுள்ளனவும் இல்லாதனவுமான உலகமெல்லாம் பிரம்மமே என்று குறிப்பிட்டு நன்கு சொல்லுகின்றன. அந்தப்ரம்மத்தை உலகத்தைவிட வேறான ரூபமுள்ளதாகவும் சொல்லுகின்றன' என்பது பழையவுரை. 3 வேறுபாடம்.

விக்கப்படுகிறது. பிராம்மணர்களுக்கு இந்தஉலகங்கள் தவம் வளர்தற்காக அமைக்கப்பட்டிருக்கின்றன. பிரம்மவித்துக்களான பிராம்மணர்களுடைய தவமானது மிகவளர்கிறது. பிரம்மத்தை அறியாத மற்ற ப்ராம்மணர்களுடைய தவமானது அவ்வளவாகவே இருக்கிறது. பயனை விரும்பாமல் செய்யப்பட்ட கேவலமான இந்தத்தவம் அதிகம் வளர்வதாகி மிக அதிகம் வளர்வதாகின்றது' என்று சொன்னார்.

திருதராஷ்டிரன், 'கேவலமான தவமானது வளர்ச்சியுள்ளதாயிருந்தும் எப்படி மிக்க வளர்ச்சியுடையதாகிறது? ஸநத்ஸுஜாதரே! நாங்கள் அறிந்துகொள்ளும்படி அதைச் சொல்லும்' என்று கேட்டான். ஸநத்ஸுஜாதர், 'பயனில் விருப்பமுதலிய கல்மஷமில்லாத இந்தத்தவம் கேவலமாகச் சொல்லப்படுகின்றது. கேவலமான இந்தத்தவம் வளர்வதாயினும் மிகவளர்வதாகிறது. ஓ! க்ஷத்திரியனே! நீ என்னிடம் கேட்கிற இந்த உலகமுழுதும் அந்தக் கேவல தவத்தைக் காரணமாகவுடையது. வேதவித்துக்களோ தவத்தால் அமிருதமான பரமாத்மாவை அடைவார்கள்' என்றார்.

திருதராஷ்டிரன், 'ஓ! ஸநத்ஸுஜாதரே! எதனால் ரகஸ்யமும் ஸநாதனமுமான இந்தப் பிரம்மத்தை அறிவேனோ கல்மஷமில்லாத அந்த (க்கேவல) தவமானது கேட்கப்பட்டது. தவத்தின் கல்மஷத்தைச் சொல்லும்' என்று கேட்டான். ஸநத்ஸுஜாதர், 'அரசனே! த்விஜர்களுடைய தவத்திற்குக் குரோத முதலிய பன்னிரண்டு தோஷங்களும், பதின்மூன்று குரூரதோஷங்களும், தர்ம முதலிய பன்னிரண்டு குணங்களும், மநு முதலான வம்சகர்த்தர்களுடைய சாஸ்திரத்தில் அறியப்பட்டன. 1 குரோதம், 2 காமம், 3 லோபம், 4 மோஹம், 5 விதித்ஸை, 6 அக்ருபை, 7 அஸூயை, 8 மானம், 9 சோகம், 10 ஸ்ப்ருஹை, 11 ஈர்ஷை, 12 ஜுகுப்ஸை ஆகிய (இவைகள்) மனிதர்களுக்குரிய தோஷங்கள். இந்த பன்னிரண்டும் மனுஷ்

---

1 விருப்பத்தைத் தடுத்ததாலுண்டானதும் வைதல் அடித்தல்முதலியவற்றிற்குக் காரணமுமான மனக்கொதிப்பு. 2 ஸ்திரீ விஷயமான ஆசை. 3 பொருட்செலவில் பயம். 4 செய்யத்தக்கவை தகாதவைகளைப் பகுத்தறியாமை. 5 மேல்மேல் லாபமேற்பட்டும் திருப்தியில்லாமை. 6 தயையில்லாமை. 7 பிறர்குணங்களில் தோஷத்தை வெளியிடுதல். 8 தன்னைப் பூஜ்யனாக நினைத்தல். 9 இஷ்டவஸ்து நசித்தபொழுது மனத்தின் தளர்ச்சி. 10 அனுபவப் பொருள்களில் ஆசை. 11 பிறருடைய மேம்பாட்டைப் பொறாமை. 12 பிறரை நிந்தித்தல், அல்லது அஞ்சுதல்.

யர்களால் எப்பொழுதும் விலக்கப்படத்தக்கவைகள். ராஜச்ரேஷ்டனே! இவைகள் ஒவ்வொன்றுமே மனிதர்களை மிருகங்களுடைய ஏமாற்ற நிலையைத் தேடுகின்ற வேடன்போல அவர்களுடைய தவறுதலைத் தேடி அடைகின்றன. தன்னைப் புகழ்கின்றவனும் போகத்தில் விருப்பத்தையே இயற்கையாக உடையவனும் அதிக கர்வத்தால் பிறரை அவமதிக்கும் தன்மையுடையவனும் தீராக்கோபமுள்ளவனும் [1] சாபல்யமுடையவனும் [2] நிமித்தமின்றிக் கோபிக்கிறவனுமான பாவிகளான மனிதர்கள் (இஹபரங்களிலுள்ள) பெரிய கஷ்டத்தில் பயமற்றுப் பாவமான இந்த ஆறையும் செய்கின்றார்கள். சிற்றின்பத்தில் பற்றினால் வியவஸ்தை கெட்டவனும் அதிக கர்வமுடையவனும் கொடுத்துவிட்டுப் பச்சாத்தாபத்தையடைகிறவனும் பிராணன் போகிறதானாலும் பணச்செலவை ஸஹியாதவனும் [3] அதிகமாக வரியை வாங்குகிறவனும் (பிறரை நிந்திப்பதாகிய) [4] பாவத்தைப் புகழ்கிறவனும் (தன்னால்) விவாஹம் செய்துகொள்ளப்பட்ட ஸ்திரீகளிடம் பகைக்கிறவனும் இந்த ஏழுபேர்களும் மற்றக் குரூரர்களின் வகைகள். தர்மமும் ஸத்தியமும் கர்மேந்திரிய நிக்கிரஹமும் தவமும் மாத்ஸரியமில்லாமையும் (அகார்யத்தில்) வெட்கமும் பொறுமையும் அஸூயையில்லாமையும் யாகமும் தானமும் தைரியமும் அத்யயனமும் ஆகிய பன்னிரண்டும் பிராம்மணனுக்குரிய (குணங்களான) விரதங்கள். எவன் இந்தப் பன்னிரண்டிலும் ஸமர்த்தனாவானோ அவன் இந்தப் பூமிமுழுமையும் ஆளுவான். (இவைகளில்,) மூன்றோ இரண்டோ ஒன்றோ இருப்பவன் எவனோ அவனுக்கும் பாக்யம் இருக்கிறதென்று அவனை அறியவேண்டும். கர்மேந்திரிய நிக்கிரஹம், கர்மபலத்தியாகம், [5] அஜாக்கிரதையில்லாமை இவைகளில் மோக்ஷமானது வைக்கப்பட்டிருக்கிறது. வித்வான்களான வேதியர்கள் அவைகளை ஸத்தியத்தை முதன்மையாகக்கொண்டவைகளாகச் சொல்லுகின்றனர். தமமென்பது பதினெட்டுத் தோஷங்களை உடையதாகும். (ஒரு தோஷத்தைச்) செய்தாலும் தமத்துக்கு இடையூறுசெய்ததாகும். எல்லாருக்கும் பிரதிகூலனாயிருத்தல், பொய்சொல்லுதல், அஸூயை,

---

1 ஸ்நேகம் முதலியவற்றில் உறுதியில்லாதவன்.

2 'அரக்ஷணம்' என்பது வேறுபாடம். 'சக்தியிருந்தும் காக்கவேண்டிய மனைவி முதலியோரையும் காவாதவன்' என்பது பழையவுரை.

3 'ஞான பலமில்லாதவன்' என்பது சங்கர பாஷ்யம்.

4 'இந்திரியக்கூட்டத்தை' என்பது சங்கர பாஷ்யம்.

5 'பிரம்மத்தியானம்' என்பது பழையவுரை.

காமம், பொருள்தேடுவதில் பெருமுயற்சி, பொருளாசை, கோபம், சோகம், பேராசை, பொருட்செலவில் துணியாமை, கோள், மத்ஸரம், பலவிதஹிம்ஸை, அதிதுக்கம், நல்லகாரியங்களில் வெறுப்பு, 1 செய்யவேண்டியகார்யத்தை மறத்தல், வீணை அதிகப்பேச்சு, தன்னை அதிகமாக மதித்தல் இந்தத்தோஷங்களால் விடுபட்டவன் ஸத்துக்களால் தமமுடையவனென்று சொல்லப்படுகிறான். மதமானது பதினெட்டுத்தோஷங்களுடையதாகும். தியாகமானது ஆறுவிதமாகிறது. இந்தத் தமதோஷங்கள் எதிரிடையாகக் கருதப்பட்டு மததோஷங்களாய்ச் சொல்லப்பட்டன. முன்சொல்லப்பட்ட தமத்தின் தோஷங்களை விலக்கவேண்டும். ஆறுவிதமான தியாகமும் மிகவும்சிறந்தவை. (இவைகளில்), மூன்றாவது செய்யமுடியாததாயிருக்கிறது. அந்த மூன்றாவது தியாகத்தினால், (ஆத்யாத்மிக முதலியமூன்று) பிரிவான துக்கத்தையும் தாண்டுகிறான். அதானது செய்யப்பட்டபொழுது (எல்லாம்) ஜயிக்கப்பட்டதாகும். ஆறுவிதமான தியாகமும் ச்ரேயஸ்கரமாகும். ஐஸ்வரியத்தை அடைந்து கர்வமில்லாமலிருப்பது (முதலாவது). எப்பொழுதும் பயனில் விருப்பமில்லாமையோடு கூடிய யாகமும் (தடாகநிர்மாணம் முதலிய) பூர்த்தமும் இரண்டாவதாகும். ஓ! ராஜச்ரேஷ்டனே! காமங்களைத் தியாகம்செய்வது மூன்றாவதென்று கருதப்பட்டது. இதனைச் சொல்லவும் முடியாததாகச் சொல்லுகின்றார்கள். திரவியங்களை விடுவதாலுண்டாகின்றதும் போகப்பொருள்களை உபயோகித்ததாலுண்டாகாததுமான நிஷ்காமத்வ குணமானது மூன்றாவதாகக் கருதப்பட்டது. அது, திரவியங்களை அடைவதினாலும் போகத்திற்காகப் பொருள்களைச் செலவிடுவதாலும் உண்டாவதில்லை. திரவியமுடையவனுயிருந்தும் எல்லாக் குணங்களோடுமே கூடியவனுயிருப்பவனுக்குக் காரியங்கள் பயன்பெறாதபொழுது துக்கமுண்டாகாது. அதனால், ப்ரமத்தை அடையமாட்டான். (இதுவரை மூன்றாவது). 'அனிஷ்டமேற்பட்டகாலத்தில் ஒருபொழுதும் வருத்தத்தை அடைகிறதில்லை' என்பது நான்காவது. 'ஒருபொழுதும் இஷ்டர்களையும் புத்திரர்களையும் தாரங்களையும் யாசிக்கமாட்டான்' என்பது ஐந்தாவது. யோக்கியனை யாசகன்பொருட்டுத் தானம் செய்யவேண்டும். அது நல்லதாகும்; இது ஆறாவது. இவைகளால், 2 அப்ரமாதமுடையவனுவான். அந்த அப்ரமாதமும் எட்டுக்குணங்களுடையதாகும். உண்மையுரைத்தல், ஈமாவர ஸ்வரூ

1 'பரிவாதஃ' என்பது சங்கரபாஷ்யபாடம்; ஒருவனைநேரில்தூஷித்தல்.

2 அஜாக்கிரதை யில்லாமை; தவறுதலில்லாமை.

பத்தைச் சிந்தித்தல், பிரம்மஸ்வரூபமாய் நிலைபெற்றிருத்தல், 'நான் யார்? யாரைச் சேர்ந்தவன்? எங்கிருந்து வந்தேன்?' என்று தனக்குள்ளே வினவல், வைராக்கியம், [1] திருடாமை, [2] எட்டுவிதமான சேர்க்கையைத் தள்ளுதல், (புத்திரன் தாரம் பூமி முதலியவைகளைச்) சேர்த்துக் கொள்ளாமலிருத்தல் (இவைகள் எட்டும் அப்ரமாதத்தின் குணங்கள்.) இவ்விதம் மதத்திற்கும் தோஷங்கள் சொல்லப்பட்டன. அந்தத் தோஷங்களையும் விலக்கவேண்டும். அப்படியானால், தியாகமும் எட்டுக் குணங்களுடையதாகக் கருதப்பட்ட அப்ரமாதமும் ஏற்படும். பிரமாதத்தால் வரும் தோஷங்கள் [3] எட்டு. அவைகளையும் விலக்கவேண்டும். ஓ! பாரத! ஐம்புலன்கள், மனம், சென்றவைகள், வருபவைகள், (ஆக எட்டுவித தோஷங்களிலிருந்தும்) விடுபட்டவன் ஸுகியாவான். ஓ! ராஜச்ரேஷ்டனே! ஸத்தியத்தில் மனமுடையவனாயிரு. ஸத்தியத்தில் உலகங்கள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. அவைகளை ஸத்தியத்தை முதன்மையாயுடையவைகளாகச் சொல்லுகின்றனர். மோக்ஷமானது ஸத்தியத்தில் வைக்கப்பட்டிருக்கிறது. இவ்வுலகத்தில், தோஷங்களை விலக்கியே தவமாகிற விரதத்தைச் செய்யவேண்டும். இது பிரம்மாவினால் செய்யப்பட்ட செய்கை. ஸத்துக்களுக்கு ஸத்தியமே விரதம். இவ்வித தோஷங்களை விட்டவனும் இந்தக் குணங்களுடன் கூடினவனுமாயிருக்கவேண்டும். இவ்விதம் கேவலமான தவமானது மிகவும் நிறைவுடையதாகிறது. ஓ! ராஜச்ரேஷ்டனே! நீ என்னிடம் கேட்டதைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன். இது பாவத்தைப் போக்குவதும் பரிசுத்தமும் பிறப்புமூப்புச் சாக்காடுகளை நிவிருத்திப்பதுமானது' என்றார்.

திருதராஷ்டிரன், 'மனிதன் இதிஹாஸபுராணங்களை ஐந்தாவதாகவுடைய வேதங்களால் நன்குநிரம்பினவனாகச் சொல்லப்படுகிறான். அப்படியே, சிலர் நான்குவேதமுள்ளவர்களும் சிலர் மூன்றுவேதமுள்ளவர்களும் சிலர் இரண்டுவேதமுள்ளவர்களும் சிலர் ஒருவேதமுள்ளவர்களும் சிலர் ரிக்குமுதலியவேதமே இல்லாதவர்களுமாகச் சொல்லப்

---

1 ஐஹிகாமுஷ்மிக போகங்களில் ஆசையை விடுதல்.

2 1. ஸ்த்ரீயை நினைத்தல்; 2. அவளைப்பற்றிப் புகழுதல்; 3. அவளுடன் விளையாடுதல்; 4. அவளைப் பார்த்தல்; 5. ரகஸ்யமாக அவளுடன் பேசுதல்; 6. சேர்க்கையை ஸங்கற்பித்தல்; 7. உறுதிசெய்தல்; 8. சேர்தல்.

3 ஐம்புலன்கள், மனம் இவற்றின் விஷயங்களில் விருப்பு வெறுப்புக்களாலுண்டாகும் தவறுகள் ஆறு; இறந்துபோன புத்ரன் முதலியவற்றை நினைத்தலாலுண்டாகும் தவறு ஒன்று; புத்ரனை விரும்பியும் உண்டாகாமை முதலியவற்றால் உண்டாகும் தவறு ஒன்று; ஆக எட்டு.

படுகின்றனர். அவர்களில் எவரை நான் பிராம்மணராக அறியவேண்டும் ?' என்று கேட்டான். ஸநத்ஸுஜாதர், ' ஓ! ராஜஶ்ரேஷ்டனே! ஒரு [1] வேதத்தை (=பிரம்மத்தை) அறியாமையால் உண்மையான அந்த ஒருப்ரம்மத்தை அறிவதற்காகப் பலவேதங்கள் செய்யப்பட்டன. அதனை அறிந்த ஒருவன் அந்த ஸத்தியத்தில் நிலைத்தவனாயிருக்கிறான். இவ்விதம் வேதத்தை அறியாமல் (ஒருவன்) நான் பிராஜ்ஞனென்று நினைக்கிறான். தானமும் அத்யயனமும் யாகமும் லோபத்துடனே (=பயனில் ஆசையுடனே) நடக்கின்றன. ஸத்யத்திலிருந்து நழுவின இவர்களுடைய ஸங்கற்பமானது வீணாகும். ஆகையால், ஸத்தியத்தை உறுதியாக அறியாததால் யாகமானது விஸ்தாரமாகச் சொல்லப்படுகிறது. ஒருவனுக்கு [2] மனத்தாலும், ஒருவனுக்கு [3] வாக்காலும், ஒருவனுக்குக் [4] கிரியையினாலும் யாகமானது உண்டாகிறது. தியானத்தால் ஸித்திபெற்ற மனிதன் விரும்பப்பட்ட உலகங்களை அடைகிறான். இந்த ஸங்கற்பத்திற்கு நிலையில்லாததால் தீக்ஷிதனுக்குரிய விரதத்தைச் செய்யவேண்டும். (தீக்ஷிதனென்கிற) இந்தப் பெயர் (விரதமென்னும் பொருளுள்ள) ' தீக்ஷ் ' என்கிறவினையடியால் உண்டாயிற்று. ஸத்துக்களுக்கு ஸத்தியமே சிறந்ததாயுள்ளது. ஞானமென்பது பிரத்தியக்ஷம். தவமானது அப்ரத்தியக்ஷமாக உண்டாகிறது. வெகுவாகப் [5] படிக்கிறவேதியனையோ, மிகப்படித்தவனாக அறியவேண்டும். ஓ! க்ஷத்திரியனே! ஆகையால், பாடத்தினாலேயே பிராம்மணனாக நினையாதே. [6]ஸத்தியத்திலிருந்தும் விலகாதவனாகவேயிருப்பவன் உன்னால் பிராம்மணனாக அறியத்தக்கவன். ஓ! க்ஷத்திரியனே! வேதங்களென்பன, 'அதர்வா' என்கிற இந்த முனிவரும் மகரிஷிகளின் ஸங்கமும் முன்காலத்தில் எவைகளைக் கானம் செய்தார்களோ அவைகளே. தவிரவும், எவர்கள் வேதங்களால் அறியவேண்டிய பிரம்மத்தின் தத்துவத்தை அறியாமல் வேதத்தை அத்யயனம் செய்தவர்களோ அவர்கள் வேதவித்துக்களல்லர். ஓ! அரசனே! வேதங்களென்பவைகள் அந்தப் பிரம்மத்தினிடத்தில் [7] ஸ்வதந்திரமான ஸம்பந்தத்தோடிருக்

---

1 ' பிரம்மத்தை அறியாமல் எத்தனை வேதம் படித்தாலும் பிராம்மணனில்லை ' என்பது கருத்து. 2 தேவதாரூபத்தை மனத்தால் தியானித்தல். 3 வாக்கினால் வேதத்தைச் சொல்லுவதாகிய பிரம்மயஜ்ஞம்.

4 செய்கையால் செய்வதாகிய ஜோதிஷ்டோம முதலியன. 5 ' பாடினம் ' என்பது மூலம்; புராணமுதலியன சொல்பவர் என்பது பொருள்.

6 பிரம்மம். 7 கர்மாவில் அறிந்து செய்யவும்வேண்டுவது போலில்லாமல் அறிந்த மாத்திரத்தில் பயனைத்தருவது.

கின்றன. அதனால், வேதவித்துக்களான ஆர்யர்கள வேதங்களை அத்யயனம் செய்து வேதத்தின்பொருளை அடையவில்லையென்பதில்லை. ஓ! அரசனே! ஒருவன் வேதங்களை அறிகிறதில்லை; ஆனால், மற்றொருவன் இந்த வேதங்களை அறிகிறவனுமாகிறான். எவன் வேதங்களை அறிந்தவனோ அவன் வேத்யத்தை (= அறிய வேண்டிய பிரம்மத்தை) அறிந்தவனல்லன். எவன் ஸத்தியத்திலிருப்பவனோ அவன் வேத்தியத்தை அறிவான். [1] வேதங்களுள் ஒன்றும் (பரமாத்மாவை) அறிவதாயில்லை. அந்தவேதத்தால் பரமாத்மாவை அறிவதில்லை; உலகத்தையும் அறிவதில்லை. எவன் வேதத்தை (=பரமாத்மாவை) அறிந்தானோ அவன் உலகத்தையும் அறிவான். எவன் உலகத்தையறிந்தானோ அவன் பரமாத்மாவை அறியான். எவன் (ரிக் முதலான) வேதங்களை அறிந்தானோ அவன் உலகத்தை அறிவான். ஆனால், அந்தப் பரமாத்மாவை வேதவித்துக்கள் அறிகிறதில்லை, வேதங்களும் அறிகிறதில்லை. ஆனாலும், எந்தப்பிராம்மணர்கள் வேதவித்துக்களாகின்றனரோ அவர்கள் (ரிக் முதலான) வேதங்களால் ப்ரம்மத்தை அறிகின்றனர். என்னவென்றால், சந்திரனுடைய கலையைத் தெரிவிப்பதில் விருக்ஷத்தின் [2] கிளைகள் எப்படியோ அப்படியே பரமாத்மாவைத் தெரிவிப்பதாகிற ஸத்தியமான அந்த அர்த்தத்தில் வேதங்களுமென்று சொல்லுகின்றனர். (பரமாத்மாவை) விவரித்துச் சொல்லுகின்ற பண்டிதனைப் பிராம்மணனாக அறிகின்றேன். எவன் ஸந்தேகங்கள் அற்றவனோ அவன் எல்லா ஸந்தேகங்களையும் விரித்துரைக்கின்றான். கிழக்குத் திக்கிலே இவனை (= ஆத்மாவை)த் தேடுவதை அடையக்கூடாது; தெற்கிலும் கூடாது; அருகிலும் கூடாது. குறுக்கில் எப்படிக்கூடும்? திக்கில்லாமல் தேடுவது ஒரு விதத்திலுமில்லை. [3] சத்துருக்களிடத்தில் எப்படியாவது அவனைத் தேடுவதை அடையவேண்டும். வேதத்தில் இதனைத் தேடாமல் தவத்தைச்செய்து பிரபுவான இதனைப் பார்க்கிறான். மௌனமான வனாகி இதனை ஆராய்ந்தறியவேண்டும். மனத்தினாலும் அசையக் கூடாது. பிரஸித்தமான அந்தப்பிரம்மத்தை [4] அந்தராத்மாவில்

---

1 சங்கரபாஷ்யபாடம்.

2 'மரத்தின் கிளைகள் சந்திரனிடம் ஸம்பந்தியாமலே அவனால் பிரகாசித்துக்கொண்டு அவனைக் காண்பிப்பதுபோல வேதங்கள் பிரம்மத்தைக் காண்பிக்கின்றன' என்பது.

3 'தேக இந்திரிய விஷயங்களாகிற சத்துருக்களில் கலந்திருப்பதால் அவைகளில் தேடவேண்டும்' என்பது. 4 சரீரத்திற்குள்ளே.

[1] உபாஸியும். மௌனத்தால் அவன் முனியாகிறதில்லை; வனவாஸத்தி னாலும் முனியாகிறதில்லை. ஆனால், தன்னையே லக்ஷணமாகவுடைய பிரம்மத்தை எவன் அறிந்தானோ அவன் சிறந்த முனியாகச் சொல்லப் படுகின்றான். எல்லா அர்த்தங்களையும் வியாகரணம் (=விவரம்) செய் தால், வையாகரணனாகச் சொல்லப்படுகிறான். அந்தப்பிரம்மமூலமாய் உலகத்துக்கு வியாகரணம் (=விவரணம்) ஏற்பட்டிருக்கிறது. [2] வியா கரணம் செய்கிறதென்று அந்தப்பிரம்மம், அப்படி, வையாகரணனாகி றது. (அந்த) மனிதன் உலகங்களைப் பிரத்தியக்ஷமாய்ப் பார்க்கின்றவ னும், [3] எல்லாவற்றையும் பார்க்கின்றவனுமாவான். ஸத்யத்திலிருக்கிற வனும் அதை அறிந்தவனுமான பிராம்மணன், எல்லாவற்றையும் அறிந்தவனாவான். ஓ! க்ஷத்திரியனே! தர்மமுதலியவைகளிலிருப்பவ னும் இவ்விதம் பிரம்மத்தைப் பார்க்கிறான். வேதங்களுடைய வரன் முறையினாலும், புத்தியினாலும் இதனை உமக்குச் சொல்லுகிறேன்' என்று சொன்னார்.

---

## நாற்பத்துநான்காவது அத்யாயம்.

## ஸநத்ஸுஜாதபர்வம். (தொடர்ச்சி.)

### (ஸநத்ஸுஜாதர் தத்வோபதேசத் தொடர்ச்சி.)

திருதராஷ்டிரன், 'ஓ! ஸநத்ஸுஜாதரே! குமாரரே! நீர் உயர்ந்தபயனையுடையதும் பலரூபமுடையதும் பிரம்மத்தைப்பற்றிய துமான இந்த வார்த்தையைச் சொல்லுகிறகாரணத்தால் சிறந்ததும் தன்னிச்சையால் அடையவரிதுமான கதையாயிருக்கிற இவ்விதவார்த் தையை (இன்னும்) எனக்குச் சொல்லும்' என்று கேட்டான். ஸநத் ஸுஜாதர் சொல்லுகிறார்: '(அரசனே!) எந்த ப்ரம்மத்தை ஆவலுடன் என்னைக்கேட்டு மிகமகிழ்கிறாயோ அந்தப்பிரம்மமானது அவஸரக் காரனால் அடையத்தக்கதில்லை. புத்தியில் மிகவும் மனம் லயித்த பொழுது சிந்திக்கக்கூடிய அந்த (ப்ரம்ம) வித்தையானது பிரம்மசரி யத்தாலல்லவா அடையக்கூடியது?' என்றார்.

---

1 உபாஸ்தி—விசாரித்தறிதல்.

2 'அதை விவரணம்செய்கிறானென்று அந்தமுனியும் அப்படி வையா கரணனாகிறான்' என்பது பாஷ்யம். 3 எல்லாமாகிற பிரம்மத்தையும்.

திருதராஷ்டிரன், 'முடிவற்ற பிரம்மத்தின் வித்தையானது நித்திய ஸித்தமும் ப்ரம்மசர்யத்தால் வ்யக்தமாகின்றதும் (கர்மாவைப்போல) ஆரம்பிக்கமுடியாததும் கர்மாவைச்செய்யும்பொழுதும் இருப்பதுமாக நீர் சொல்லுகிறீரே? மோக்ஷமானது பிராம்மணனுக்கு ஹிதமென்பதும் அடையப்படுவதென்பதும் எப்படியாகும்?' என்று கேட்டான். ஸநத்ஸுஜாதர், 'எந்த வித்தையானது குருவினால் விருத்தியடைந்தவர்களிடத்தில் நிலைத்திருக்கிறதோ, எந்த வித்தையானது அவர்களிடம் புத்தியினாலும் பிரம்மசரியத்தினாலும் ஸித்தித்திருக்கிறதோ, எதை அடைந்து இந்த மரிக்குந்தன்மையை விடுகிறார்களோ, ஆதியிலுண்டானதும் ஸத்யமான விஷயத்தையுடையதுமான அந்த வித்தையைச் சொல்லப்போகிறேன்' என்றார்.

திருதராஷ்டிரன், 'எந்தவித்தை பிரம்மசர்யத்தினால் உண்மையாக அறியக்கூடியதோ, (அதற்கு ஸாதனமான) அந்தப் பிரம்மசர்யம் எவ்விதமாகும்? ஓ! வித்வானே! இதனை எனக்குச்சொல்லும்' என்று கேட்டான். ஸநத்ஸுஜாதர், 'எவர்கள் ஆசாரியனுடைய ஸமீபத்தை அடைந்து சிஷ்யர்களாகிப் [1] பிரம்மசர்யத்தையனுஷ்டிக்கின்றார்களோ அவர்களே இந்த உலகில் சாஸ்திர கர்த்தர்களாகின்றார்கள்; பிறகு, தேகத்தை விட்டுவிட்டு ஸத்யமான பரமாத்மாவை அடைகின்றார்கள். அவர்கள் ஒவ்வொருநாளும் பிரம்மத்தில் இருப்பைவஹிக்கிறவர்களாகி இவ்வுலகில் இப்பொழுதே காமங்களை ஜயிக்கின்றார்கள். ஸத்வகுணத்திலிருப்பவர்களான அவர்கள், இம்மையில், முஞ்சப்புல்லிலிருந்தும் ஈர்க்கை இழுப்பதுபோலத் தைரியத்தால் தேகத்திலிருந்தும் ஆத்மாவைப் பிரித்தறிகிறார்கள். ஓ! பாரத! மாதா பிதா இவ்விருவர்களும் சரீரத்தைச்செய்கிறார்கள். ஸத்யமான பிரம்மமந்திரத்தை உபதேசித்து வர்ணங்களைப் பரிசுத்தம்செய்து பிரம்மத்தை உபதேசித்து மோக்ஷத்தைக் கொடுப்பவனான ஆசாரியனாலே கற்பிக்கப்பட்ட [2] ஜன்மம் பரிசுத்தமானது. அது, ஜரையற்றது; மரணமற்றது. ஸத்யமான பிரம்மத்தையறிவித்து மாறாததான அந்தப் பிரம்மஸ்வரூபத்தால் [3] ஜாதியின் அபிமானத்தைத்தொலைத்து மோக்ஷத்தையளிக்கின்ற ஆசானையே தந்தைதாய்களாகநினைக்கவேண்டும். அவர்செய்த நன்றியை நினைக்கிறவனாகி அவருக்குத்துரோகம் செய்யாமலிருக்கவேண்டும். சிஷ்யன் குருவை எந்நாளும் நமஸ்கரிக்க

1 குருபணிவிடை முதலியன.

2 உபநயனம்பெற்று வேதமோதுவதாகிய பிறப்பு.

3 பிரம்மஜ்ஞானத்தால் பேத உணர்ச்சியைப் போக்கி.

வேண்டும். அஜாக்ரதையில்லாதவனாக, சுசியுடன், தன்வேதத்தை ஆவிருத்தி செய்யவேண்டும். அஹங்காரத்தைச் செய்யாமலும் கோபத்தை அடையாமலுமிருக்க வேண்டும். இது பிரம்மசரியத்தின் முதற்பாதம். எவன் சுசியாய்ச் சிஷ்யன் நடக்கவேண்டிய முறையினாலேயே வித்தையை அடைகிறானோ அவனுடைய அதுவும் இந்தப் பிரம்மசரிய விரதத்தின் முதற்பாதமாகச் சொல்லப்படுகிறது. பிராணன்களாலும் தனங்களாலும் செய்கையினாலும் மனத்தினாலும் வாக்கினாலும் ஆசானுடைய பிரியத்தைச் செய்வது இரண்டாவது பாதமாகச் சொல்லப்படுகின்றது. எந்நாளும் ஒன்றுபோலக் குருவினிடம் நடக்கின்றதும், அவ்விதம் குருபத்னியினிடத்திலும் குருபுத்ரனிடத்திலும் நடக்கின்றதும் இரண்டாவது பாதமாகச் சொல்லப்படுகின்றன. ஆசாரியனால் தனக்குச்செய்யப்பட்ட உபகாரத்தை நினைக்கிறவனாகவும் அதன் பயனைத் தெரிந்துகொண்டு அவன்விஷயத்தில் ஸந்தோஷத்தை அடைந்த புத்தியுடையவனாகவும், 'இவரால் விருத்தியடையும்படி செய்யப்பட்டேன்' என்று நினைப்பது பிரம்மசரியத்தின் மூன்றாவது பாதம். பிராஜ்ஞனானவன் ஆசார்யனுக்குத் தக்ஷிணை கொடுப்பதாகிய கடனைத் தீர்க்காமல் வேறுஇடம் போகக்கூடாது. தீர்த்துவிட்டு, 'நான் இதைச்செய்தேன்' என்று நினைக்கக்கூடாது; சொல்லவும் கூடாது. அதுவே பிரம்மசரியத்தின் நான்காவது பாதம். இவன் ஆசாரியனுடைய சேர்க்கையினால் (வித்தையின்) காற்பாகத்தை அடைகிறான். தன்னுடைய புத்தியின் வைபவத்தினால் காற்பாகத்தை அடைகிறான். [1] காலக்கிரமத்தால் காற்பாகத்தை அடைகிறான். பிறகு, (உடன் பயில்வாரோடு) சாஸ்திர ஆராய்ச்சிசெய்வதால் மற்றொரு காற்பாகத்தை அடைகிறான். [2] தர்மமுதலான பன்னிரண்டு ரூபங்களுடையதும் (ஸத்யம்முதலான) இதரஸாதனங்களையுடையதும் யோகப்ரவிருத்தியாகிற அவைகளைக் காக்கும் பலமுடையதுமான பிரம்மசரியமானது ஆசாரியனிடம் சேர்ந்து வேதார்த்தத்தைப் பெறுவதனால் பலிக்கின்றதென்று சொல்லுகிறார்கள். இவ்விதம் ப்ரவிருத்தித்தவன், தான்அடைந்த தனத்தை உடனே ஆசாரியனிடம் அளிக்கவேண்டும். அப்படிப்பட்டவன் வெகுவான குணங்களையுடைய அந்தச்செய்கையை அடைவான். ஆசாரியபுத்திரனிடத்திலும், இந்தச் செய்கையுடன் இருக்கவேண்டும். இவ்விதம் வஸிப்பவன் இகத்தில் எங்கும் மேன்மையடைகிறான்;

---

1 புத்தியின் பரிபாகம்.

2 இதன் 174-ம் பக்கத்திலும் 181-ம் பக்கத்திலும் பார்க்க.

வெகுபுத்திரர்களையும் அடைவான்; புகழையும் அடைவான். இவனுக்குத் திக்குவிதிக்குக்கள் வருஷிக்கும். இவன் வஸிக்கும்பொழுது ஜனங்களும் பிரம்மசரியத்தில் வஸிப்பர். இந்தப் பிரம்மசரியத்தால் தேவர்கள் தேவத்தன்மையை அடைந்தனர். மஹாபாக்யவான்களான ரிஷிகளும் மனோவசமுள்ளவர்களாகிப் பிரம்மலோகத்தை அடைந்தனர். இதனாலேயே கந்தர்வர்களுக்கும் அப்ஸரஸுகளுக்கும் அழகு உண்டாயிற்று. இந்தப் பிரம்மசரியத்தினால் சூரியனும் பகலைச் செய்பவனானன். சிந்தாமணியானது விரும்புகிறவர்களுக்கு விரும்பியபொருளை விரும்பியபடி கொடுப்பதுபோல் இந்தத்தேவர் முதலியவர்கள் இந்தப்பிரம்மசரியமும் அவ்விதம் செய்யுமென்று அறிந்து (ப்ரம்மசரியத்தை அனுஷ்டித்து) அவ்வித (தேவர் முதலியவர்) ஆகுந்தன்மையை அடைந்தார்கள். ஓ! அரசனே! இந்தப்பிரம்மசரியத்தை அடுத்துத் தவத்தால் வாட்டப்பட்டு வாழ்நாள் முழுதும் பரிசுத்தனாக இருந்து, வித்வானானவன் குழந்தைபோல் காமம் குரோதம் டம்பமுதலியன அற்றவனாகி முடிவுக்காலத்தில் ஸம்ஸாரநிவிருத்தியை அடைவான். ஓ! க்ஷத்திரிய! அவித்வான்களான ஜனங்கள் களங்கமற்ற கர்மாவினால் அழிவுள்ள (ஸ்வர்க்கமுதலான) உலகங்களை அடைகின்றார்கள். பிரம்மத்தையே அறிந்தவித்வானானவன் ஞானத்தினால் எல்லாமாகிய பிரம்மத்தை அடைகிறான். மோக்ஷத்திற்கு வேறுவிதமான மார்க்கம் கிடையாது' என்றார்.

திருதராஷ்டிரன், 'வித்வானான ப்ராம்மணன் இந்தச்சரீரத்தில் ஓரிடத்தில் பிரம்மத்தைப் பார்க்கிறானே; அந்தப்பிரம்மம் வெளுப்பா? சிவப்பா? கறுப்பா? [1] பொன்னிறமா? எப்படி ப்ரகாசிக்கின்றது? எந்தவிடத்தில் பிரகாசிக்கின்றது? அமிருதமும் விகாரமில்லாததும் (எல்லாரும் அடையவேண்டிய)ஸ்தானமுமான அது எவ்வித ரூபமுள்ளது?' என்று கேட்டான். ஸநத்ஸுஜாதர், 'இது வெளுப்புப் போலவோ சிவப்புப்போலவோ கறுப்புப்போலவோ [2] பொன்னிறம் போலவோ தோற்றுகின்றது. இது பிருதிவியிலிருக்கிறதில்லை. ஆகாயத்திலும் இருக்கிறதில்லை. இது (ஸம்ஸார)சமுத்திரத்தில் ஜலப்பிரதானமான தேகத்தை வஹிக்கிறதில்லை. இதனுடைய ரூபமானது நக்ஷத்திரங்களிலுமில்லை; மின்னலை அடுத்ததாயுமில்லை; மேகங்களிலும் காணப்படுகிறதில்லை. வாயுவினிடத்திலும் தேவதைகளிடத்திலும் சந்திரனிடத்திலும் சூரியனிடத்திலும் காணப்படுகிறதில்லை. அரசனே! அசைவற்ற அதானது ரிக்குக்களிலோ யஜுஸுகளிலோ

---

1, 2 ஒருசொல் விடப்பட்டது.

அதர்வமந்திரங்களிலோ களங்கமில்லாத ஸாமங்களிலுள்ள ரதந்திர ஸாமத்திலோ பிருஹத்ஸாமத்திலோ மஹாவிரதஸாமத்திலோ காணப்படுகிறதேஇல்லை. தாண்டமுடியாததும் அஞ்ஞானத்திற்கு அப்புறப்பட்டதுமான அதில் அந்தகனும் முடிவுக்காலத்தில் லயிக்கிறான். அந்த ரூபம் அணுக்களுக்கும் அணுவும் கத்திமுனைக்கு நிகரும் பர்வதங்களைக் காட்டிலும் பெரிதுமான ரூபமாகும். அது எல்லாவற்றிற்கும் ஆதாரம். அது அமிருதம் (=மாறாதது). அதுவே உலகங்கள். அது பிரம்மம். அது யசஸ். அதனிடமிருந்தும் பிராணிகளுண்டாகின்றன. அதிலேயே பிரளயத்தையடைகின்றன. அது கெடுதலற்றது. (அது) வியாபகமாயுள்ளது. அது மிகவும் பரவினதான யசஸ். கவிகளால் பெயர் வேறுபாடுகளாகச் சொல்லப்பட்ட இந்த ஜகமெல்லாம் எதில் கற்பிக்கப்பட்டிருக்கின்றதோ அதை அறிந்தவர்கள் முக்தி அடைகின்றனர். அப்படிப்பட்ட இந்த எல்லாஜகத்தும் அதிலிருந்துகொண்டு (அதன்) பிரகாசத்தால் பிரகாசிக்கிறது. ஆத்மஜ்ஞானியானவன் ஞானயோகத்தால் அதனைப் பார்க்கிறான். அதனிடத்தில் இந்த எல்லாஜகத்தும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. இதை எவர்கள் அறிகின்றார்களோ அவர்கள் முக்தர்களாகின்றார்கள்.

---

நாற்பத்தைந்தாவது அத்யாயம்.

## ஸநத்ஸுஜாதபர்வம். (தொடர்ச்சி.)

(ஸநத்ஸுஜாதர் தத்வோபதேசத் தொடர்ச்சி.)

சோகம், கோபம், லோபம், காமம், அகங்காரம், நித்திரையிற் பற்றுதல், பொறாமை, அறியாமை, ஸந்தேகம், ஸ்நேகம், அஸூயை, (தன்னைக்) குறைவாகநினைத்தல் இந்தப்பன்னிரண்டும் மனிதனுடைய பிராணனைநாசஞ்செய்கின்ற பெரியதோஷங்கள். ஓ! ராஜஸ்ரேஷ்டனே! மனிதனை வியாபித்து, அவனை மழுங்கின அறிவுடையவனும் பாவத்தில் பிரவிருத்திப்பவனுமாகச்செய்கின்ற இவைகள் ஒவ்வொருமனிதனையும் சூழ்கின்றன. பேராசையுள்ளவனும் இரக்கமற்றவனும் கடுமையாகப்பேசுகின்றவனும் அதிகமாகப்பேசுகிறவனும் மனத்தால் கோபத்தைத் தரிக்கிறவனும் தன்னைப்புகழ்ந்துகொள்பவனுமான இந்த ஆறுமனிதர்களும் குரூரமானதன்மையுடையவர்கள். தவிரவும், இவர்கள் ஒருகால் தனத்தை அடைந்தால், பிறரை மதியார்கள். ஸம்

போகத்தில் பற்றுதலினால் தவறுதலாக நடப்பவனும் அதிக கர்வமுடையவனும் கொடுத்துவிட்டுத் தன்னைப்புகழ்கிறவனும் கிருபணனும் துர்ப்பலனாயிருப்பவனும் தன்னை மிகவும் புகழ்கிறவனும் எப்பொழுதுமே மனைவியைப் பகைக்கிறவனும் ஆகிய ஏழுபேர்களுமே பாவ ஒழுக்கமுடையவர்களும் க்ரூரர்களுமாகச் சொல்லப்பட்டனர். தர்மம், ஸத்யம், தவம், அடக்கம், மாத்ஸர்யமில்லாமை, லஜ்ஜை, (ஸுகதுக்கங்களைச்) சகித்தல், அஸூயையில்லாமை, தானம், அத்யயனம், தைரியம், (பிறர்பிழை) பொறுத்தல் இந்தப் பன்னிரண்டும் பிராம்மணனுக்குப் பெரிய விரதங்கள். எவன் இந்தப் பன்னிரண்டிலிருந்தும் நழுவானோ அவன் இந்த எல்லாப் பூமியையும் ஆட்சிசெய்வான். எவன், இவைகளுள், மூன்று இரண்டு அல்லது ஒன்றையாவது விரும்புவானோ அவனுக்குத் [1] தன்னைச்சேர்ந்த பொருள் இல்லையென்று அறியவேண்டும். தமம், தியாகம், தவறாமை இவைகளில் மோக்ஷமானது நிலைத்ததாயிருக்கிறது. இவைகள் ப்ரம்மத்தை ப்ரதானமாகவுடையவர்களும் வித்வான்களுமான ப்ராம்மணர்களுக்குரியவைகள். உள்ளதோ இல்லாததோ [2] பிறரைத்தூஷிப்பது பிராம்மணனுக்குச் சொல்லப்படவில்லை. எந்த மனிதர்கள் இவ்விதம் செய்கின்றனரோ அவர்கள் நரகத்தில் நிலையுள்ளவர்களாவார்கள். மதமானது பதினெட்டுத்தோஷங்கள் கொண்டது. அவைகளை முன்பு நான் சொல்லவில்லை. அவை :—உலகத்திற்குத் த்வேஷத்தையுண்டு பண்ணுகிறகர்மம், விபரீதமாயிருத்தல், அஸூயை, பொய்யுரைத்தல், காமம், குரோதம், பரதந்திரனாயிருத்தல், பிறரைத்தூஷித்தல், கோட்சொல்லுதல், தனத்தைக்கெடுத்தல், விவாதம், மாத்ஸர்யம், பிராணிகளைப்பீடித்தல், பொறாமை, களித்தல், அதிவாதம், புத்திநாசம், அஸூயையையுண்டுபண்ணுதல் ஆகிய பதினெட்டுமாம். ஆகையால், புத்திமானானவன் மதத்தை அடையக்கூடாது. எப்பொழுதுமே இது நிந்திக்கப்பட்டதாகும். நல்லமனமுடைய தன்மையிலோ ஆறுகுணங்கள் அறியத்தக்கவைகள். (அவைகள் யாவையெனில் :—) நண்பனுக்கு மகிழ்ச்சியுண்டாகும்பொழுது (அவனுடைய நண்பர்கள்) மகிழ்வார் ; துன்பம் வந்தபொழுது வருந்துவார். தனக்கு [3] மிக்க பிரியமான பொருளையும்கூட (நண்பன்) கேட்டால் கொடுக்கிறான்.

---

1 அவன் பற்றற்றவன் என்பது.

2 'பிராம்மணனைத் தூஷிப்பது சிலாகிக்கப்படுகிறதில்லை' என்றும் கொள்ளலாம். 3 ஸுசிரம் என்பது ருசிரம் என்று மாற்றப்பட்டது.

ஏனெனில், யாசிக்கத்தகாத பொருளும் அவனுக்கு நண்பன் விஷயத்தில் கொடுக்கத்தக்கவையாகும். அப்பொழுது, சுத்தமான மனமுள்ள அவன் இஷ்டர்களான தனது புத்திரர்களையும் ஸம்பத்துக்களையும் தாரங்களையுங்கூட யாசிக்கப்பட்டால் கொடுக்கத்தக்கவனுகித் திரவியங்களைத் தியாகம்செய்து ஸுகமாக வஸிப்பான். [1] ஆசையால் இகத்தில் போகங்களை அனுபவியான். [2] கர்மங்களுடைய பயனில் விருப்பத்தையும் தொலைப்பான். திரவியமுள்ளவனும் குணமுள்ளவனுமான ஸாத்விகன் இவ்விதம் கொடையாளியாகிறான். அவ்விதமானவன் ஐந்து விஷயங்களிலிருந்தும் பஞ்சபூதங்களாலுண்டான இந்திரியங்களைத் திருப்புகிறான். இந்தத்தவமானது [3]கேவலமாக ஸம்ருத்தி (= மிக்கநிறைவு) யுள்ளதாயினும் ஸத்வத்திலிருந்தும் நழுவினவர்களிடம் [4] ஸங்கற்பத்துடன் சேர்க்கப்பட்டு ரித்தியுடன் (= சாதாரண நிறைவுடன்) கூடினதாகிறது. ஸத்யஸங்கல்பத்தால் (= பிரம்மத்யானத்தால்) யாகங்கள் செழிப்படைகின்றன. ஆகையால், [5] ஒருவனுக்கு மனத்தினாலேயே (யஜ்ஞம்) ஏற்படுகிறது; [6] ஒருவனுக்கு வாக்கினால் ஏற்படுகிறது; [7] மற்றொருவனுக்குக் கிரியையினால் ஏற்படுகிறது. ஸங்கற்பத்தில் ஸித்திபெற்ற மனிதனை ஸங்கற்பமற்றவன் மிஞ்சுகிறான். தவிரவும், பிராம்மணனுக்குரிய விசேஷமான வேறொன்றையும் என்னிடம் கேள். பிராம்மணன் பெரிதாயும் யசஸென்று பெயருடைய பிரம்மத்தைஅடைய ஸாதனமாயுமிருக்கிற இந்த யோகசாஸ்திரத்தை(சிஷ்யனுக்கு)அத்யயனம் செய்விக்கவேண்டும். வித்வான்கள்(மற்றச்சாஸ்திரங்களைச்)சொல்வேறுபாடுகளென்று சொல்லுகின்றனர். இந்த யோகத்தில் இந்த உலகமெல்லாம் இருக்கிறது. அதனை அறிந்தவர்கள் மோக்ஷத்தை அடைந்தவர்களாகின்றனர். அரசனே! ஸுகிருதகர்மத்தினாலேயே பிரம்மத்தையடையமாட்டான். (அக்னிஹோத்ர முதலிய) ஹோமத்தைத்தான் செய்

---

1 இம்மைஇன்பத்தில் வைராக்யம்

2 மறுமை இன்பத்தில் வைராக்கியம்; 'நண்பன்விஷயத்தில் செய்த உதவிக்குப் பிரதிப்பயனை எதிர்பாரான்' என்றும் சொல்லலாம்.

3 பயனை விரும்பாமற் செய்யப்பட்டது. 4 பயனில் ஆசை.

5 ஸத்யஸங்கற்பத்தில் நிலைத்தவனுக்குத் தியானத்தால் யஜ்ஞம் நிறைவேறுகிறது. அதற்கு உதாரணம், பிராதாவால் கிணற்றில் தள்ளப்பட்ட த்ரிதர். சல்யபர்வம் 172-ம் பக்கம் பார்க்க.

6 நடுத்தரமானவனுக்கு பிரம்மயஜ்ஞமுதலியவைகளின் ஜபத்தினால்.

7 அதமனுக்குக் கர்மாவினால்.

யட்டும்; அல்லது, யாகத்தைத்தான் செய்யட்டும்; அவித்வானனவன் இதனல் மோக்ஷத்தை அடையான். அரசனே! அவன் முடிவில் சந்தோஷத்தையும் அடையான். ஒருவனுக மௌனத்தை உபாஸிக்க வேண்டும். மனத்தினுலும் சலிக்கக்கூடாது. அப்படியே ஸ்துதியினுல் ஸந்தோஷத்தையும் நிந்தையினுல் ரோஷத்தையும் தள்ளவேண்டும். அரசனே! இந்த நிலையேயிருப்பவன் பிரம்மத்தை அடைகிறுன். வேதங்களில் முறையாக இதைப் பார்க்கிறுன். ஓ! வித்வானே! இதை உனக்குச் சொல்லுகிறேன்.

## நாற்பத்தாறுவது அத்யாயம்.

## ஸநத்ஸுஜாதபர்வம். (தொடர்ச்சி.)

### (ஸநத்ஸுஜாதர் தத்வோபதேசத் தொடர்ச்சி.)

சுத்தமான பெரிய ஜோதியும் பிரகாசிக்கின்ற பெரிதான யசஸும் தேவர்களால் உபாஸிக்கப்பட்டதும் ஆதித்யனுக்கு ப்ரகாசத்தை உண்டுபண்ணுவதும் எப்போதுமிருப்பதும் பகவானுமான அந்தப் பரமாத்மாவை, யோகிகள் நன்கு பார்க்கின்றனர். ஹிரண்யகர்ப்பரை உண்டுபண்ணி வளரச்செய்வதும், (ஆதித்யன் முதலிய) ஜோதிகளின்மத்தியில் (அவைகளால்) விளக்கப்படாமல் (அவைகளை) விளக்கிக்கொண்டு விளங்குகின்றதும் எப்பொழுதுமிருப்பதும் பகவானுமான அந்தச் சுத்தப்பிரம்மத்தை யோகிகள் நன்கு பார்க்கின்றனர். இந்த ப்ரம்மத்தினிடமிருந்தும் 1(ஸூக்ஷ்ம) அப்புக்களைப் பிரதானமாகவுடைய 2(ஸூக்ஷ்ம) பூதங்களும் அவைகளிலிருந்து 3ஸ்தூலஅப்புக்களை ப்ராதானமாகவுடைய தேகரூபமான 4ஸ்தூல பூதங்களும் உண்டாயின. அந்தத்தேகமத்தியில் ஹிருதயாகாசத்தில் ஜீவேஸ்வரர்களாகிய இரண்டுதேவர்கள் ஆஸ்ரயித்திருக்கின்றனர். இவ்விருவர்களையும் பிருதிவியையும் தேவலோகத்தையும், மாயை அற்றதும் ஜகத்காரணத்தை வியாபித்திருப்பதுமான ப்ரம்மம் வகிக்கின்றது. எப்பொழுதுமிருப்பதும் பகவானுமான அந்தச் சுத்தப்பிரம்மத்தை யோகிகள் நன்கு பார்க்கின்றனர். சுத்தமான ப்ரம்மம் இரண்டு தேவர்களையும் பூமியையும் தேவலோ

1 மற்றப்பூதங்களோடு கலவாதஜலம். 2 கலவாத பூதங்கள்.
3 மற்றப்பூதங்களோடு கலந்தஜலம். 4 கலந்த பூதங்கள்.

கத்தையும் திக்குக்களையும் பிரம்மாண்டத்தையும் வஹிக்கின்றது. அதனிடமிருந்தும் திக்குக்கள் பரவுகின்றன. நதிகள் ஓடுகின்றன. அளவற்றகாமங்கள் உண்டாயின. எப்பொழுதும் இருப்பதும் பகவானுமான அந்தச் சுத்தப்பிரம்மத்தை யோகிகள் நன்கு பார்க்கின்றனர். நிலையற்றதும் அழிவற்ற கர்மாவையுடையதுமான சரீரமாகிற தேரினுடைய கோளகமாகிற சக்ரத்திலிருக்கின்ற புலன்களான குதிரைகள் பிரஜ்ஞையுடன்கூடின ஜீவனை இருதயாகாசத்தில் விளங்குகிறதும் ஜரையற்றதுமான ப்ரம்மத்தைக் குறித்து வஹிக்கின்றன. எப்பொழுதுமிருப்பதும் பகவானுமான அந்தச் சுத்தப்பிரம்மத்தை யோகிகள் நன்குபார்க்கின்றனர். இந்தப்ரம்மத்தினுடையரூபமானது இதர வஸ்துவினுடைய உவமையிலிருக்கிறதில்லை. (ஆகையால்), இதனை ஒருவரும் கண்ணால் பார்க்கமுடியாது. எவர்கள் இதனைப் [1] புத்தியினாலும் [2] மனத்தினாலும் [3] இருதயதேசத்தாலும் அறிகின்றனரோ அவர்கள் முக்தர்களாகின்றனர். எப்பொழுதுமிருப்பதும் பகவானுமான அந்தச்சுத்தப்பிரம்மத்தை யோகிகள் நன்கு பார்க்கின்றனர். எந்த ஜீவர்கள், சித்தமென்கிற கரணஸமூகம் 1, அதன் கார்யமான நினைவின் ஸமூகம் 2, ஶ்ரோத்ர முதலிய ஞானேந்திரிய ஸமூகம் 3, அதன் கார்யமான கேள்விமுதலிய ஞானஸமூகம் 4, வாக்கு முதலிய கர்மேந்திரியஸமூகம் 5, பேசுதல்முதலிய அதன் காரியஸமூகம் 6, சப்தம்முதலிய விஷயஸமூகம் 7, அதற்கு ஆதாரமான ஆகாசமுதலிய பூதஸமூகம் 8, பிராணஸமூகம் 9, சுவாஸம் முதலிய அதன் காரியஸமூகம் 10, பழைய வாஸனைக்கூட்டம் 11, அதன் கார்யமான புண்ணியபாபக்கூட்டம் 12, ஆக இப்பன்னிரண்டு கூட்டமுடையதும் ஆதித்யன் முதலிய தேவர்களால் காக்கப்பட்டதுமான அவித்தையாகிறநதியைப்பானம்செய்து கர்மபலனானதேனை அனுபவிக்கின்றனரோ அவர்கள் இந்தப்ரம்மத்தினிடம் கற்பிக்கப்பட்டிருக்கிற கோரமான ஸம்ஸாரநதியில் ஸஞ்சரிக்கின்றனர். எப்பொழுதுமிருப்பதும் பகவானுமான அந்தச்சுத்தப்பிரம்மத்தை யோகிகள் நன்குபார்க்கின்றனர். தேனீயைப்போலச் சுற்றிவரும் ஜீவன், சுக்கிலபக்ஷம் அரைமாதமாய்நிறைவேறின சந்திராமிருதமாகிற அந்தத்தேனை அருந்துகிறான். ஈசனான ப்ரம்மம் அந்தச்சந்திரனை எல்லாப்பிராணிகள் விஷயத்திலும் ஹவிஸாகும்படி கற்பித்தது. எப்பொழுதுமிருப்பதும் பகவானுமான அந்தச் சுத்தப்பிரம்மத்தை யோகிகள் நன்கு பார்க்கின்றனர். சிறகுகளில்

[1] புத்தியின் விருத்தியினால். [2] மௌனம்; ஊஹாபோஹம்.
[3] இருதயதேசத்தில்.

லாத அந்தஜீவர்களாகிற தேனீக்கள் பிராம்மணுதிதேகமாகிற ஸ்வர்ண மயமான அஸ்வத்தமரத்தையடைந்து அதில் பரமாத்மனான முதலிய சிறகுகளுள்ளவைகளாகி அவையவைகளுக்குரிய திக்குக்களை நோக்கிப் பறக்கின்றன. எப்பொழுதுமிருப்பதும் பகவானுமான அந்தச்சுத்தப்பிரம்மத்தை யோகிகள் நன்கு பார்க்கின்றனர். பூர்ணமானப்ரம்மத்தினிடமிருந்து பூர்ணமான ஜீவர்களை எடுக்கின்றனர். பூர்ணமான ப்ரம்மத்தினுலேயே பூர்ணமான ஜீவர்கள் செய்யப்பட்டனர். பூர்ணமானப்ரம்மத்தினுலேயே பூர்ணமான ஜீவர்களை ஹரிக்கின்றனர். முடிவில் பூர்ணமான ப்ரம்மமே மிஞ்சுகிறது. எப்பொழுதுமிருப்பதும் பகவானுமான அந்தச்சுத்தப்பிரம்மத்தை யோகிகள் நன்குபார்க்கின்றனர். ப்ரம்மத்தினிடமிருந்து வாயு வந்தான்; அதனிடமே எப்பொழுதும் அடங்கியிருக்கிறுன். அதனிடமிருந்து அக்னியும் ஸோமனும் வந்தனர். அதனிடம் பிராணன் பரவியிருக்கிறுன். எல்லாம் ப்ரம்மத்தினிடமிருந்தே வந்தனவென்றறியவேண்டும். அதையதை (தத்தனித்தனி) சொல்லச் சக்தர்களாகிறேமில்லை. எப்பொழுதுமிருப்பதும் பகவானுமான அந்தச்சுத்தப்பிரம்மத்தை யோகிகள் நன்கு பார்க்கின்றனர். பிராணன் அபானனை அடக்குகிறுன். பிராணனை மனேரூபியான சந்திரன் அடக்குகிறுன். சந்திரனைப் புத்திரூபனுன ஆதித்யன் அடக்குகிறுன். ஆதித்யனை ப்ரம்மம் அடக்குகிறது. எப்பொழுதுமிருப்பதும் பகவானுமான அந்தச் சுத்தப்பிரம்மத்தை யோகிகள் நன்கு பார்க்கின்றனர். ப்ரம்மமாகிற ஹம்ஸமானது ஸம்ஸாரமாகிற ஜலத்திற்கு மேலே ஸஞ்சரிக்கிறதாயிருந்துகொண்டு ஜீவனுகிற தனது ஒரு பாதத்தை உயர எடுக்கிறதில்லை. அது ஸம்ஸாரத்தில் பரவினதான அந்த ஒருபாதத்தை எப்பொழுதும் எடுக்குமேயானுல் பந்தமோக்ஷங்கள் ஏற்படா. எப்பொழுதுமிருப்பதும் பகவானுமான அந்தச்சுத்தப்பிரம்மத்தை யோகிகள் நன்கு பார்க்கின்றனர். அந்தராத்மாவும் பூர்ணமுமான அந்தப்ரம்மம் [1] லிங்கசரீரத்தின் சேர்க்கையினுல் கட்டைவிரலளவுள்ளதாகி எப்பொழுதும் ஸம்ஸாரத்தை அடைகிறது. துதிக்கத்தக்கதும் உட்புகுந்து உலகத்தைக் கற்பிக்கின்றதும் ஆதியும் பிரகாசிக்கின்றதுமான அந்த ப்ரம்மத்தை மூடர்கள் பார்க்கின்றுர்களில்லை. எப்பொழுதுமிருப்பதும் பகவானுமான அந்தச்சுத்தப்பிரம்மத்தை யோகிகள் நன்கு பார்க்கின்றனர். இந்தப்பரமாத்மா சமம் முதலிய ஸாதனமுடையவர்களோ ஸாதனமில்லாதவர்களோ எல்லாமனிதர்களிடத்திலும் ஸமமாகக் காணப்படுகின்றது. இது மோக்ஷத்திற்கும்

1 சாந்தி பர்வம் 788-ம் பக்கம் பார்க்க.

வேறான ஸம்ஸாரத்திற்கும் ஒரேவிதமாயிருக்கிற அவர்களில் ஸாதனத்துடன்கூடி முக்தர்களானவர்கள் மதுவினுடைய உயர்ந்த பாகத்தை அடைகின்றனர். எப்பொழுதுமிருப்பதும் பகவானுமான அந்தச் சுத்தப்பிரம்மத்தை யோகிகள் நன்கு பார்க்கின்றனர். வித்வான் வித்தையினால் இரண்டு உலகங்களையும் வியாபித்துச் செல்லுகிறான். அப்பொழுது அவனுக்கு ஹோமம் செய்யப் படாத அக்னிஹோத்ரமும் ஹோமம் செய்யப்பட்டதாகின்றது. 1 பிரம்ம வித்தையானது உனக்கு லேசான தன்மையைச் செய்ய வேண்டாம். பிரம்மஞானம் ஏற்படட்டும். அதனைத் தீரர்கள் அடைகின்றனர். எப்பொழுதுமிருப்பதும் பகவானுமான அந்தச் சுத்தப் பிரம்மத்தை யோகிகள் நன்கு பார்க்கின்றனர். இவ்விதம் ஞானத்தை ரூபமாகவுடைய மனிதன் பரமாத்மாவாகிறான். எல்லாவற்றையும் அடக்குகிற அக்நியையும் அடக்குகிறவனான அவன் ஹ்ருதய குகையிலிருக்கும் ஆத்மாவை அறிகிறான். அவனுக்கு இந்தச்சரீரத்திலே ஆத்மா தெரியாமற்போவதில்லை. எப்பொழுதுமிருப்பதும் பகவானுமான அந்தச்சுத்தப்பிரம்மத்தை யோகிகள் நன்கு பார்க்கின்றனர். ஆயிரமாயிரம் சிறகுகளை அமைத்துக்கொண்டு மனோவேகமாக (கோடிகல்பகாலம்) பறந்தும் எல்லாவற்றுக்கும் காரணமான எந்தப் பரமாத்மாவை முழுமையும் காணமாட்டானோ, பகவானும் பழமையாயிருப்பதுமான அந்தப்பிரம்மத்தை யோகிகள் பார்க்கின்றனர். இந்த ப்ரம்மத்தினுடைய ரூபமானது காணக்கூடிய நிலையிலில்லை. மிகவும் சுத்தமான மனமுடையவர்கள் அதனைப் பார்க்கவும் செய்கின்றனர். அவ்விதமறிந்த வித்வான் உலகத்திற்கு ஹிதமாகி மனத்தை அடக்க வல்லமை அடைந்து மனத்தால் தாபத்தை அடைகிறதில்லை. எவர்கள்(ப்ரம்மத்தையடையத்) துறவிகளாகின்றனரோ அவர்கள் முக்தியடைகின்றனர். எப்பொழுதுமிருப்பதும் பகவானுமான அந்தச் சுத்தப் பிரம்மத்தை யோகிகள் நன்கு பார்க்கின்றனர். ப்ரம்மத்தையறியாத வஞ்சக மனிதர்கள் வஞ்சகமான குருவின் உபதேசத்தாலோ அல்லது ஸ்வேச்சையான தமது நடையினாலோ புதர்களில் ஸர்ப்பங்கள் மறைவதுபோலத் தம்மை மறைத்துக்கொள்ளுகின்றனர். அவர்களிடம் மூடஜனங்கள் மயங்குகின்றனர். அவர்கள் தங்கள் வழிப்படியே நரகபயம் உண்டாகும்படி அந்த மூடஜனங்களை மயங்கச் செய்கின்றனர். வஞ்சகர்களால் அறியப்படாமலிருப்பதும் பகவா

1 ப்ரம்மவித்தையை அடையாமல் நீ அற்பனாகவேண்டாமென்பது கருத்து.

னும் ஸநாதனமுமான பிரம்மத்தை யோகிகள் பார்க்கின்றனர். 'நான் அஸத்தான தேகம் முதலியவையாகச் செய்யப்படவில்லை. எனக்கு மரணமுமில்லை. ஜனனமுமில்லை. மோக்ஷம் ஏது? ஸத்தியம்போல் விளங்குகின்ற ஆகாய முதலிய உலகமும் பொய்யான ஸ்வப்னப்பிர பஞ்சமும் என்னிடம் கட்டப்பட்டிருக்கின்றன. கார்யத்திற்கும் கார ணத்திற்கும் 'நானொருவனே காரணம்' என்று அறிகிறயோகிகள் எப் பொழுதுமிருப்பதும் பகவானுமான அந்தச் சுத்தப்பிரம்மத்தை நன்கு பார்க்கின்றனர். மனிதர்களிடத்தில் இந்தப் பிரம்மமானது நல்ல கர் மத்தினாலோ கெட்ட கர்மத்தினாலோ வேறுபாடுள்ளதாகக் காணப் படுகிறதில்லை. இது மோக்ஷத்திலும் வேறுபாடில்லாததென்று அறிய வேண்டும். இவ்வித யோகத்துடன் கூடினவனாகிப் பிரம்மமாகிற அந்த மதுவை அடைய விரும்பவேண்டும். எப்பொழுதுமிருப் பதும் பகவானுமான அந்தச்சுத்தப்பிரம்மத்தை யோகிகள் நன்கு பார்க்கின்றனர். நிந்தைகளானவை இந்தப் பிரம்மவித்தினுடைய மனத்தைத் தபிக்கச்செய்கிறதில்லை. அத்யயனம் செய்யாமலிருப் பதும் அக்னிஹோத்திரஹோமஞ்செய்யாமலிருப்பதும் இவனுடைய மனத்தைக் தபிக்கச்செய்கிறதில்லை. பிரம்மவித்தையானது, யோகி கள் அடைகின்ற அந்த ஞானத்தை இவனுக்குச் சீக்கிரம் உண்டு பண்ணுகிறது. எப்பொழுதுமிருப்பதும் பகவானுமான அந்தச் சுத்தப் பிரம்மத்தை யோகிகள் நன்கு பார்க்கின்றனர். இவ்விதம் எவன் எல் லாப் பிராணிகளிடத்திலும் தன்னுடைய ஆத்மாவை நன்கு பார்க்கின் றானோ அவன், அதன் பிறகு, மற்றவர்கள் மற்ற வஸ்துக்களில் பற் றுள்ளவர்களாயிருக்கையில் ஏன் துக்கிப்பான்? நான்கு பக் கத்திலும் ததும்பி வழிகின்ற பெரிதான தடாகத்தில் எப்படி மற்றத் தடாகமுதலியவிடத்தில் செய்துகொள்ளும் காரியம் எல்லாம் செய்துகொள்ளக்கூடுமோ அப்படியே ஆத்மாவை அறிந்த வனுக்கு வேதத்தில் சொல்லப்பட்ட எல்லாஸாதனத்தாலுமுண்டா கும் பயனும் கிடைக்கின்றது. பூர்ணமும் மஹாத்மாவும் ஜனனமற் றதுமான ப்ரம்மம் கட்டைவிரலளவுள்ளதாக இருதயத்தில் நன்குபுகு ந்து இராப்பகல் சோம்பலின்றி ஸஞ்சரித்தும் காணப்படுகிறதில்லை. வித்வான் அதனைக் கருதியறிந்து தெளிந்தவனாயிருக்கிறான். நானே, எது உள்ளதோ, எது இல்லாததோ, எல்லாவற்றிற்கும் தாயும் தந் தையுமாகக் கருதப்பட்டேன். நானே அந்தராத்மாவுமாகிறேன். நானே புத்திரனுமாகிறேன். நானே கிழமான பிதாமஹரும் பிதா வும் புத்திரனும் ஆகிறேன். ஓ! பாரத! நீங்கள் எனது ஆத்மாவி

லேயே இருக்கின்றீர்கள். நீங்கள் என்னுடையவர்களில்லை. நான் உங்களுடையவனில்லை. எனக்கு ஆத்மாவே ஸ்தானம். என்னுடைய ஜன்மத்திற்கு ஹேதுவும் ஆத்மா. நான் குறுக்கும் நெடுக்கும் வியாபித்தவன். நழுவாத ஸ்திதியை உடையவன்; ஜனனமற்றவன்; சோம்பலின்றி இராப்பகல் ஸஞ்சரிக்கின்றவன். வித்வானானவன், என்னையறிந்து தெளிவடைந்தவனாயிருக்கிறான். ஆத்மா அணுவுக்கும் அணுவாகி நல்ல மனமுடையதாகி எல்லாப் பிராணிகளிடத்திலும் விழித்திருக்கின்றது. உலகத்துக்குப் பிதாவாயிருக்கிற அந்த ஆத்மாவை வித்வான்கள் எல்லாப்பிராணிகளுடைய இருதயகமலத்திலுமிருப்பதாக அறிகின்றனர்' என்று சொன்னார்.

ஸநத்ஸுஜாதபர்வம் முற்றிற்று.

நாற்பத்தேழாவது அத்யாயம்.

## யாநஸந்திபர்வம்.

(திருதராஷ்டிரன் முதலியோர் ஸபையிற்கூடியதும், ஸஞ்சயன் வந்து கோவிந்தர் அபிப்பிராயத்தைச் சொல்லியதும்.)

இவ்விதம் ஸநத்ஸுஜாதரோடும் புத்திமானான விதுரரோடும் (கதையைச்) சொல்லிக்கொண்டிருக்கையில், அரசனுக்கு அந்த இரவானது கழிந்தது. அந்த ராத்திரியானது விடிந்தபொழுது, அந்த எல்லா அரசர்களுமே ஸூதனான ஸஞ்சயனைப் பார்க்கும் விருப்பத்தால் ஸந்தோஷமடைந்தவர்களாகி ஸபையை அடைந்தார்கள். ஓ! அரசரே! திருதராஷ்டிரன்முதலிய எல்லாரும் அறம்பொருள்களோடுகூடியவையான பாண்டவர்களுடைய வார்த்தைகளைக் கேட்கவிரும்பி, சுபமானதும், [1] ஸுதையால் வெளுப்பாயும் விரிவாயுமுள்ளதும், பொன்மயமான முகப்புக்களால் அலங்கரிக்கப்பட்டதும், சந்திரனுக்கு நிகரான காந்தியுடையதும், மிகவும் அழகாயிருப்பதும், சந்தன ஜலத்தால் தெளிக்கப்பட்டதும், ரமணீயமானவைகளும் பொன்மயமானவைகளும் மரத்தால் செய்யப்பட்டவைகளும் ரத்தினங்கள் இழைத்தவைகளும் தந்தங்களால் செய்தவைகளும் நல்ல விரிப்புள்ளவைகளும் மேற்கட்டியுள்ளவைகளுமான ஆஸனங்களால் விரிக்கப்பட்டதுமான

1 சுதை - சுண்ணும்பு; ஸுதைபோல் வெளுத்தது; ரஜதமயமென்றுங் கொள்ளலாம்.

ஸபையை அடைந்தார்கள். ஓ! பரதஸ்ரேஷ்டரே! பீஷ்மரும் துரோணரும் கிருபரும் சல்லியனும் கிருதவர்மாவும் ஜயத்ரதனும் அஸ்வத்தாமாவும் விகர்ணனும் ஸோமதத்தனும் பாஹ்லிகனும் பேரறிவாளரான விதுரரும் மகாரதனான யுயுத்ஸுவும் சூரர்களான எல்லா அரசர்களும் சேர்ந்தவர்களாகித் திருதராஷ்டிரனை முன்னிட்டுக் கொண்டு சுபமான அந்த ஸபையை அடைந்தார்கள். ஓ! அரசரே! துச்சாஸனனும் சித்திரஸேனனும் ஸுபலபுத்திரனான சகுனியும் துர்முகனும் துஸ்ஸஹனும் கர்ணனும் உலூகனும் விவிம்சதியும், கௌரவர்களுக்கு அரசனும் பொறுமையுடையவனுமான துரியோதனனை முன்னிட்டுக்கொண்டு, தேவர்கள் இந்திரஸபையை அடைவதுபோல, அந்தஸபையை அடைந்தார்கள். ஓ! அரசரே! நான்கு பக்கத்திலும் பிரவேசிக்கின்றவர்களும் இருப்புலக்கைபோன்ற கைகளையுடையவர்களுமான சூரர்களாலே அப்பொழுது அந்த ஸபையானது, சிங்கங்களால் மலையின்குகை விளங்குவதுபோல விளங்கிற்று. பெரிய வில்லுடையவர்களும் பெரிதான பராக்கிரமமுள்ளவர்களும் ஸூர்யனுக்கு நிகரான காந்தியுடையவர்களுமான அவர்களெல்லாரும் ஸபையில் பிரவேசித்து விசித்திரமான ஆஸனங்களை அடைந்தார்கள். ஓ! பாரதரே! அந்த எல்லா அரசர்களும் ஆஸனத்திலிருக்கும் பொழுது, வாயில்காவலன், 'எவன் பாண்டவர்களைக் குறித்துச் சென்றானோ அவன் ரதத்துடன் வருகிறான். நம்முடைய தூதன் நன்றாக இழுக்கிறவைகளான குதிரைகளாலே வேகமாக வருகிறான்' என்று ஸூதபுத்திரன் வந்ததைத் தெரிவித்தான். குண்டலங்களுடையவனான அவனோ, சமீபத்தில் வந்து சீக்கிரமாக ரதத்திலிருந்து இறங்கி, மகாத்மாக்களான அரசர்கள்நிறைந்த ஸபையில் நுழைந்தான். ஸஞ்சயன்,' ஓ! கௌரவர்களே! பாண்டவர்களிடம் சென்று வந்துசேர்ந்தேன். அதனை அறியுங்கள். பாண்டவர்கள் வயதிற்குத் தக்கபடி கௌரவர்களெல்லாரையும் கொண்டாடினார்கள்; பெரியோர்களை நமஸ்கரித்தார்கள். தோழர்களைத் தோழர்கள் பூஜிப்பதுபோலப் பிராயத்துக்குத் தக்கபடி பூஜைசெய்து, பாண்டவர்கள் திரும்பவும் வினவினார்கள். நான் திருதராஷ்டிரரால் முன் கட்டளையிடப்பட்டு இங்கேயிருந்துபோய்ப் பாண்டவர்களை அடைந்து, அப்படியே சொன்னேன். அதில் ஒன்றும் விடப்படவில்லை' என்று சொன்னான்.

---

இந்த அத்யாயம் முழுதும் அதிகபாடம்.

திருதராஷ்டிரன், 'அப்பா! ஸஞ்சய! பலம் தளருதவரும் யுத்தங்களை நன்ருக நடத்துகிறவரும் கெட்ட எண்ணமுள்ளவர்களின் உயிரை நாசம் செய்பவரும் மகாத்மாவுமான ஜநார்த்தனர் சொன்ன வாக்கியத்தை, அரசர்கள் மத்தியில், உன்னைக் கேட்கிறேன்' என்று சொன்ஞன். ஸஞ்சயன், 'அரசரே! நான் கணுக்கால்கள்வரை வஸ்திரமுடுத்தவனும் சுத்தியுள்ளவனும் கைகளைக் குவித்தவனும் புருஷஶ்ரேஷ்டர்களான (கிருஷ்ணுர்ஜுனர்களிடம்) தெரிவிக்கப்பட்டவனுமாகி அந்தப்புரத்தில் பிரவேசித்தேன். எந்த இடத்தில் கிருஷ்ணுர்ஜுனர்களும் லாவண்யமுடையவர்களான திரௌபதியும் ஸத்தியபாமையுமிருக்கின்றனரோ, எந்தவிடத்தில் மனிதருட்சிறந்தவர்களான கிருஷ்ணுர்ஜுனரிருவரும் ஈத்தேன் பூந்தேன்களால் புஷ்டியை அடைந்தவர்களும் சிறந்த சந்தனத்தால் பூசப்பட்டவர்களும் மாலைசூடினவர்களும் சிறந்த வஸ்திரமுடைய அங்கங்களுடையவர்களும் சிறந்தபணிபூண்டவர்களுமாகி அனேக ரத்தினங்களால் பலநிறமுடையதும் பொன்மயமும் பலவகை விரிப்புக்கள் விரிக்கப்பெற்றதுமான சிறந்த ஆஸனத்திலிருக்கின்றனரோ, அவ்விடத்தில் அபிமன்யுவும் நகுலஸஹதேவர்களும்கூடப் போவதில்லை. ஜனுர்த்தனரோ, ஸத்தியபாமையின் மடியைத் தலையணையாகச்செய்து சயனித்திருக்கிருர். கேசவருடைய பாதங்களை அர்ஜுனனுடைய மடியை அடைந்தவைகளாகக்கண்டேன். அர்ஜுனனுடைய இரண்டு பாதங்களும் சுபையான திரௌபதியின் மடியை அடைந்தவைகளாயிருந்தன. பார்த்தனுனவன் ஸந்தோஷத்துடன் ஸ்வர்ணமயமான பாதபீடத்தை (எனக்கு) அளித்தான். என்பொருட்டு இரண்டு தாவிகளால் கொண்டுவரப்பட்ட (அதைக் கையால்) தொட்டுவிட்டுப் பூமியில்உட்கார்ந்தேன். உயர்முகமான ரேகைகளால் அடையாளம் செய்யப்பட்டவைகளும் சுபமான லக்ஷணங்களுடையவைகளும் பாதபீடத்திலிருந்து எடுக்கப்பட்டவைகளுமான அர்ஜுனனுடைய பாதங்களைச் சிறந்தவர்களான வேலைக்காரிகளிருவர்களும் தரித்தார்கள். எனக்கு (ச்செய்தஉபசார) காரியங்களில் கொஞ்சமேனும் கல்மஷமில்லை; நிச்சயம். ரகஸ்யத்தில் ஸ்திரீரத்னங்களுடன் சேர்ந்த அவர்கள் என்னிடம் பேசினுர்களாதலால் எனக்குப் பெரிதான ஆச்சரியமுண்டாயிற்று. எனக்கு மிகுதியான (ஆனந்தக்) கண்ணீர் உண்டாயிற்று. சேர்ந்திருந்தவர்களான அவ்விருவர்களையும் பார்த்துவிட்டு (என்னுடைய) ரோமங்களும் சிலிர்த்தன. பசுமை நிறமுடையவர்களும் பருத்தவர்களும் தருணர்களும் யானைகள்போல் மிகவுமுயர்ந்தவர்களும் ஒரு படுக்கையை அடைந்தவர்களுமாயிருப்பவர்களைப் பார்த்த பிறகு, பெரிய பயமானது என்னை அடைந்தது. அவ்விடத்தில் ஆண்மையிற்சிறந்தவர்களான அவர்களைப்பார்த்துவிட்டு, உடனே இந்த நரநாராயணர்களிருவரும் எவருடைய

உத்தரவை அடைந்தவர்களாயிருக்கின்றனரோ (அந்த) தர்மராஜருக்கு எண்ணினது ஒன்றும் அடையமுடியாததில்லையென்று நினைத்தேன். வஸ்திரத்தால் போர்த்தப்பட்டு அன்னபானங்களால் உபசரிக்கவும்பட்டேன். உபசாரத்தையடைந்த நான் சிரத்தில் அஞ்சலியைச் செய்துகொண்டு நீங்கள் சொன்ன செய்தியையும் தெரிவித்தேன். பிறகு, தனஞ்சயன் விற்பிடித்துப் பழகிய கரத்தினாலே கீர்த்திபெற்றவரான கேசவருடைய லக்ஷணங்கள்பொருந்திய ஒரு பாதத்தை மடக்கினான். திவ்யமான ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவரும் இந்திரனுக்கு நிகரான வீர்யமுடையவருமான கேசவர் இந்திரனுடைய த்வஜம்போல் எழுந்திருந்து உட்கார்ந்து என்னை நோக்கிச் சொன்னார். பேசுகிறவர்களில் சிறந்தவரான அவர் சொல்லுவதற்கு உசிதமும் தார்த்தராஷ்டிரர்களைத் தூண்டுகிறதும் ஆரம்பத்தில் மிருதுவும் மிக்க கடுமையுமான வார்த்தையை எடுத்தார். புத்திமானான அவர் வெளியில் ஸஞ்சரிக்கின்ற பிராணன் போன்றவனும் பிரியத்தைச் செய்கிறவனும் பிரியனுமான அர்ஜுனனுடைய புத்தியைக் கலந்துகொண்டு வார்த்தையை எடுத்தார். வசனத்தை அறிகின்ற அவருடைய வசனமானது எழுத்திலக்கணப்படி உச்சரிக்கப்படும் அக்ஷரங்களுடன் கூடினதும், சிறந்ததும், மனத்திற்குச் சந்தோஷத்தைச் செய்கிறதும், பிறகு, மனத்தைச் சுடுவதுமாயிருந்தது.

மாதவர், 'ஸஞ்சய! க்ஷத்திரியர்களுடைய ஸபையையடைந்து கௌரவர்களில் பெரியவரான பீஷ்மரும் புத்திமானான துரோணரும் கேட்க இந்த வார்த்தையைச் சொல்லு. பாண்டவர்களிடத்தில் பொருள்களை விடுங்கள். காமத்தாலுண்டான ஸுகத்தை அடையுங்கள். பிரியர்களுக்குப் பிரியத்தைச் செய்யுங்கள். அரசரான தர்மபுத்திரரோ, வெல்வதில் விரைவுபடுகிறார். பலவிதமான யாகங்களால் பூஜியுங்கள். தக்ஷிணைகளைக் கொடுங்கள். புத்திரர்களோடும் பத்தினிகளோடும் ஸந்தோஷத்தை அடையுங்கள். உங்களுக்குப் பெரிதான பயம் வந்துவிட்டது. துரௌபதியானவள் நெடுந்தூரத்தில் வஸிப்பவனான என்னையுத்தேசித்து, 'கோவிந்தா' என்றலறினதானது வட்டியேறினகடன் போல என்மனத்திலிருந்தும் விலகுகிறதில்லை. தேஜோமயமும் அதிக்கிரமிக்கமுடியாததுமான காண்டீவமென்கிற வில்லையேந்தியவனும் என்னை ஸஹாயமாகவுடையவனுமான தனஞ்சயனுடன் உங்களுக்கு வைரம் நேரிட்டுவிட்டது' என்று சொன்னார். அவருடைய இந்த வார்த்தையைக்கேட்டு உமது புத்திரனுடைய மிகுகின்ற லோபத்தையும் பார்த்து, எனக்குப் பெரிதான பயம் வந்துவிட்டது. மந்தனான (துரியோதனன்) பீஷ்மரையும் துரோணரையும் அடுத்திருப்பதினாலும் கர்ணனுடைய தற்புகழ்ச்சியினாலும் ஸோமனுக்கும் இந்திரனுக்கும் ஒப்பானவர்களான அந்த வீரர்களை அறியவில்லை' என்று சொன்னான்.

நாற்பத்தேட்டாவது அத்யாயம்.

## யாநஸந்தி பர்வம். (தொடர்ச்சி)

(ஸஞ்சயன், கிருஷ்ணரைப் புகழும் அர்ஜுனன் பேச்சை விரித்துக் கூறியது.)

திருதராஷ்டிரன், 'ஸஞ்சய! ஐயா! தளராத பலத்தையுடையவனும் யுத்தங்களுக்கு நாயகனும் கெட்டமனமுள்ளவர்களின் உயிரை நாசம் செய்பவனும் மகாத்மாவுமான தனஞ்சயன், அரசர்களின் மத்தியில் என்ன சொல்லைச் சொன்னான்? (அதனை) உன்னைக் கேட்கிறேன்' என்றான். ஸஞ்சயன், 'யுத்தம் செய்யப்போகிறவனும் மகாத்மாவும் தனஞ்சயனுமான அர்ஜுனன் யுதிஷ்டிருடைய அநுமதியின்மேல் கிருஷ்ணன் கேட்டுக்கொண்டிருக்கையில் சொன்னதான இந்த வார்த்தையைத் துரியோதனன் கேட்கவேண்டும். தீரனும் தன்புஜபலத்தை அறிந்தவனுமான கிரீடியானவன், யுத்தத்தில் அஞ்சாதவனும் யுத்தம் செய்யப்போகிறவனுமாகி வாஸுதேவரின் ஸமீபத்தில் என்னைநோக்கி, 'ஸூத! என்னுடன் எப்பொழுதுமே யுத்தம்செய்ய விரும்புகிறவனும் மந்தபுத்தியுள்ளவனும் காலமுடிவை அடைந்தவனும் மிக்கமூடனும் கெட்ட பேச்சுக்களைப் பேசினவனும் துராத்மாவுமான ஸூதபுத்திரன் கேட்டுக்கொண்டிருக்கும்போது கௌரவர்களின்மத்தியில் துரியோதனனை நோக்கிச் சொல்லு. பாண்டவர்களுடன் யுத்தத்திற்காக வரவழைக்கப்பட்ட அரசர்களும் கேட்டுக்கொண்டிருக்கையில் என்னால் சொல்லப்பட்ட வார்த்தையை முழுமையும் உள்ளபடி மந்திரியுடன்கூடின அரசனைக்கேட்கச்செய்வாய்' என்று சொன்னான். எப்படி நிச்சயமாக வஜ்ரபாணியான தேவராஜனுடைய (வார்த்தையை) எல்லாத்தேவர்களும் கேட்கவிரும்புகிறார்களோ அப்படியே பாண்டவர்களும் ஸ்ருஞ்சயர்களும் கிரீடியினால் சொல்லப்பட்ட சிறந்தபொருளுள்ள வார்த்தையை விரும்பிக் கேட்டார்கள். யுத்தம் செய்யப்போகிறவனும் காண்டீவமென்கிற வில்லையுடையவனுமான அர்ஜுனன் செந்தாமரை மலர்கள்போன்ற நேத்திரங்களையுடையவனாக இவ்விதம் சொன்னான். 'அஜமீடவம்சத்திற் பிறந்தவரும் அரசருமான யுதிஷ்டிருடைய ராஜ்யத்தைத் திருதராஷ்டிரரின் புத்திரன் விடாமலிருப்பானேயானால் அவர்களுக்குப் பீமஸேனார்ஜுனர்களோடும் நகுலஸஹதேவர்களோடும் வாஸுதேவரோடும் ஆயுதத்தை ஏந்திய ஸாத்யகியோடும்

திருஷ்டத்யும்னனோடும் சிகண்டியோடும் கெடுக்க நினைத்தமாத்திரத்தில் பூமியையும் ஸ்வர்க்கத்தையும் எரிக்கின்றவரும் இந்திரனுக்குச் சமானருமான யுதிஷ்டிரரோடும் யுத்தம்நேர்வது திண்ணம். திருதராஷ்டிர புத்திரர்களாலே முன்னனுபவிக்கப்படாத பாவச்செய்கையானது செய்யப்பட்டிருக்கிறதென்பது நிச்சயம். துரியோதனன் அவர்களோடு யுத்தம்செய்ய நினைக்கிறானேயானால் பாண்டவர்களுடைய எல்லாவிஷயமும் நிறைவேறிவிட்டது. பாண்டவனுடைய தனநிமித்தமாக நீ அதை (= யுத்தத்தை)ச் செய்யாதே. நீ அபிப்பிராயப்பட்டால் யுத்தத்தை அடையக்கடவாய். துரத்தப்பட்டவரும் தர்மத்தைச் செய்கிறவருமான பாண்டவர் வனத்தில் துக்கத்துடன் கூடிய எந்தச்சயனத்திலே வஸித்தாரோ மிக்கதுக்கமுடையதும் அனர்த்தமும் கடைசியுமான அந்தப் படுக்கையைத் துரியோதனனானவன் உயிரைவிட்டு அடையட்டும். [1] துஷ்டசித்தமுள்ளவனும் நியாயமில்லாத செய்கையுடையவனுமான துரியோதனன், லஜ்ஜையினாலும் ஞானத்தினாலும் தவத்தினாலும் அடக்கத்தினாலும் சௌர்யத்தினாலும் தர்மரக்ஷணத்தினாலும் தனத்தினாலும் கௌரவர்களையும் பாண்டவர்களையும் அதிகரித்திருந்தான். கபடமாகச் செய்யப்பட்டதை அடைந்தவரும் உண்மையுரைக்கிறவரும் கரைகடந்து கிலேசத்தை அடைந்தவருமான எங்கள் அரசர், அமைதி, நேர்மை, தவம், அடக்கம், தர்மரக்ஷணம், பலம் இவைகளால் பொறுக்கிறவராயிருந்தார். எப்பொழுது அடக்கப்பட்டமனத்தையுடையவரும் மூத்தவருமான பாண்டவர், முன்எண்ணம்மாறின மனமுடையவராகிப்பலவருஷமாய் அடக்கப்பட்டதும் மிக்ககோரமுமான கோபத்தைக் கௌரவர்களிடத்தில் செலுத்துவாரோ அப்பொழுது துரியோதனன் யுத்தத்தைக் குறித்துத் தாபத்தையடைவான். யுதிஷ்டிரர் விருத்தியடைந்ததும் ஜ்வலித்ததுமான அக்கினிபோலக் கோபத்தால் ஜ்வலித்தவராகிக் கோடைக்காலத்தில் தீயானது காட்டை எரிப்பதுபோலத் துரியோதனனுடைய சேனையை அடுத்துப்பார்த்து எரிக்கப்போகின்றார். எப்பொழுது, துரியோதனன், தேரிலிருப்பவனும் கதையைக் கையிலுடையவனும் கோபமாகிறவிஷத்தைக் கக்குகிறவனும் பொறுதவனும் பயங்கரமான வேகத்தையுடையவனும் பாண்டவனுமான

1 'துராத்மாவும் அன்னியாயச் செய்கையுடையவனுமான துரியோதனன் எந்த ஜனங்களுக்குத் தலைவனாயிருந்தானோ அவர்களை லஜ்ஜை, அறிவு, தவம், அடக்கம், சௌர்யம், தர்மரக்ஷணம், தனம் இவைகளுடன்கூடின பாண்டவர்வசம் செய்வாய்' என்பது பழையவுரை.

பீமஸேனனைப்பார்ப்பானோ அப்பொழுது யுத்தத்தைப்பற்றி வருந்துவான். எப்பொழுது, சேனையின் முன் செல்லுகிறவனும் கவசம்பூண்டவனும் நல்லலக்ஷணமுடையவனும் பகைவர்களில வீரர்களைக்கொல்லுகிறவனும் சேனையை அடிக்கிறவனும் யமனுக்கொப்பானவனுமான பீமஸேனனைப் பார்ப்பானோ அப்பொழுது அதிக கர்வங்கொண்ட அவன் [1] (தான்சொன்ன)வார்த்தையை நினைப்பான். எப்பொழுது, பீமஸேனனால் அடித்துத்தள்ளப்பட்டவைகளும் பர்வதங்களின் கொடுமுடிபோல் விளங்குகின்றவைகளும் மஸ்தகம் உடைந்தவைகளும் குடங்களைக்கொண்டு சொரிவதுபோல ரக்தத்தைக் கக்குகின்றவைகளுமான யானைகளைப் பார்ப்பானோ அப்பொழுது துரியோதனன் யுத்தத்தைப்பற்றி வருந்துவான். எப்பொழுது, கதாபாணியும் பயங்கரமான ரூபமுடையவனுமாகிப் பீமனானவன், பெரிய சிங்கமானது பசுக்களில்புகுந்து கொல்லுவதுபோலத் திருதராஷ்டிரபுத்திரர்களை அடைந்து கொல்லுவானோ, அப்பொழுது, துரியோதனன் யுத்தத்தைப்பற்றி வருந்துவான். பெரிதான பயமேற்பட்டபொழுது பயமில்லாதவனும் படைகளைப் பயின்றவனும் யுத்தத்தில்பகைவர் படையை நொறுக்குகிறவனும் சூரனுமானபீமன், ஒருதேர்கொண்டே எதிரற்ற தேர்க்கூட்டங்களையும் காலாள்களின் கூட்டங்களையும் கதையால் எதிர்த்தடிக்கிறவனும் வேகத்தால் அனேகம் சேனைகளை முறிக்கிறவனுமாகிக் கோடாலியால் வனத்தைவெட்டுகிறவன்போலத் துரியோதனன்படையை எப்பொழுது வெட்டுவானோ அப்பொழுது துரியோதனன் யுத்தத்தைப்பற்றி வருந்துவான். தீயினால் எரிக்கப்பட்ட கூரைவீடு நிறைந்த கிராமத்தைப்போல, பீமஸேனனால் சஸ்திரஜ்வாலையினால் எரிக்கப்பட்ட தார்த்தராஷ்டிரர்களையும், இடியின் தீயினால் எரிக்கப்பட்ட விளைந்தபயிரைப்போல் எரிக்கப்பட்டதும் தூரத்தில் துரத்தப்பட்டதும் வீரர்கள் மடிந்ததும் சேனாபதியையிழந்ததும் பயத்தால் பீடையடைந்ததும் திரும்பியதும் பெரும்பாலும் [2] தைரியமில்லாத வீரர்களையுடையதுமான தனது விரிவானசேனையையும் பார்த்தும், உடனே துரியோதனன் யுத்தத்தைக் குறித்து வருந்துவான். எப்பொழுது, பலவிதமாக யுத்தம் செய்கிறவனான நகுலன் [3] சிறந்த அங்கங்களுள்ள (வீரர்களுடைய) பக்கங்களில் வலமாகச் சுற்று

---

1 'நூறுபேரையும் வதைக்கிறேனென்று பீமன்சொன்ன' என்றும் கொள்ளலாம். 2 வேறுபாடம்

3 'ரதிகர்களுள் சிறந்தவனும் விசித்திரமாக யுத்தம் செய்பவனுமான நகுலன் எப்பொழுது ஸாமர்த்தியத்தால் தலைகளை (அறுத்துக்) குவிப்பானோ, ரதிகர்களைக் கூட்டமாகச் செய்வானோ' என்பது பழையவுரை.

வானோ, ரதிகர்களில் சிறந்தவனான அவன் ரதிகர்களையும் கூட்டமாகச் செய்வானோ அப்பொழுது துரியோதனன் யுத்தத்தைக் குறித்து வருந்துவான். ஸுகத்திற்குத் தக்கவனான நகுலன் வெகு காலம் வனங்களில் துக்கமான படுக்கையில் படுத்ததை (நினைத்து, எப்பொழுது), கோபத்தையடைந்த ஸர்ப்பம்போல் (கோபமாகிற) விஷத்தைக் கக்குவானோ அப்பொழுது துரியோதனன் யுத்தத்தைப்பற்றி வருந்துவான். ஸூத! அரசர்களுடன் யுத்தத்திற்காகத் தர்மராஜரால் உத்தரவு அளிக்கப்பட்டவர்களும் சரீரத்தை வெறுத்தவர்களும் பிரகாசிக்கின்ற ரதங்களுடன் சேனையை எதிர்த்துப் பாய்கிறவர்களுமானவர்களைப் பார்த்துவிட்டுத் துரியோதனன்யுத்தத்தைப்பற்றிவருந்துவான். கௌரவனானவன் சிசுக்களும் அஸ்திரங்களை அப்யஸித்தவர்களும் பெரியவர்கள்போல்விளங்குகின்றவர்களும்உயிர்களைவெறுத்துக் கௌரவர்களை வளைக்கிறவர்களுமான உபபாண்டவர்களான ஐந்து சூரர்களையும் எப்பொழுது பார்ப்பானோ அப்பொழுது துரியோதனன் யுத்தத்தைக் குறித்து வருந்துவான். எப்பொழுது, ஸஹதேவன் அஸுரர்களை நாசம் செய்வதற்காக இந்திரன்போல ஸுவர்ணமயமான நக்ஷத்திரங்கள் பதித்ததும் அடங்கினவைகளான சிறந்த குதிரைகளுடன் கூடியதுமான ரதத்தில் ஏறி அம்புகளுடைய கூட்டங்களாலே அரசர்களுடைய தலைகளை உருட்டப் போகிறானோ அப்பொழுது பெரிய பயமானது நேரிட, தேரிலிருப்பவனும் வளைத்துவருகிறவனும் யுத்தத்தினிமித்தம் அஸ்திரங்களைக் கற்றவனும் எல்லாத் திக்குக்களிலும் வந்துவிழுகிறவனுமான அவனைப் பார்த்துவிட்டுத் துரியோதனன் யுத்தத்தைக்குறித்து வருந்துவான். எப்பொழுது, லஜ்ஜையுடையவனும் ஸமர்த்தனும் மெய்பேசுகிறவனும் மிக்க பலமுள்ளவனும் எல்லாத் தர்மங்களுடனுங் கூடினவனும் (போரை) விரைவாகச் செய்கிறவனும் வேகமுடையவனுமான ஸஹதேவன், ஸங்குல யுத்தத்தில் சகுனியை எதிர்த்து ஜனங்களை உருட்டப்போகிறானோ, எப்பொழுது, பெரிய விற்களையுடையவர்களும் சூரர்களும் அஸ்திரங்களைப் பயின்றவர்களும் தேர்ச்சண்டையில் வல்லவர்களும் கொடிய விஷத்தையுடைய ஸர்ப்பங்களைப்போல் வருகிறவர்களுமான துரௌபதியின் புத்திரர்களைப் பார்ப்பானோ அப்பொழுது துரியோதனன் யுத்தத்தைக் குறித்து வருந்துவான். எப்பொழுது, பகைவீரர்களைக் கொல்லுகிறவனும் கிருஷ்ணனுக்கு ஒப்பானவனும் அஸ்திரங்களை அப்யஸித்தவனுமான அபிமன்யுவானவன் பகைவர்களிடத்தில்[1] சரங்களால்

[1] சரம் = ஜலம்; அல்லது, பாணம்.

மேகம்போலப் பொழிகிறவனுகிக் கலக்குவானே அப்பொழுது துரியோதனன் யுத்தத்தைக்குறித்து வருந்துவான். எப்பொழுது, பாலனும் தருணனுடைய வீர்யமுடையவனும் பகைவரின் படையில் மிருத்யுவைப்போலப் பாய்கிறவனும் இந்திரனுக்கு நிகரானவனும் அஸ்திரங்களைப் பயின்றவனுமான ஸுபத்திரையின் புத்திரனைப் பார்ப்பானே அப்பொழுது துரியோதனன் யுத்தத்தைக் குறித்து வருந்துவான். எப்பொழுது, மிக்கவேகமுடையவர்களும் தருணர்களும் ஸமர்த்தர்களும் சிங்கத்திற்குச்சமமான வீர்யமுடையவர்களுமான ப்ரபத்ரகர்கள் சைனியத்துடன்கூடின திருதராஷ்டிரன் புத்திரர்களை எறிவார்களோ அப்பொழுது துரியோதனன் யுத்தத்தைக்குறித்து வருந்துவான். எப்பொழுது, விருத்தர்களும் மகாரதர்களுமான விராடனும் துருபதனும் ஒவ்வொருசேனையுடன் தனித்தனி எதிர்த்துச் செல்லுகிறவர்களாகிச் சேனையுடன் கூடிய திருதராஷ்டிரபுத்ரர்களைப் பார்ப்பார்களோ அப்பொழுது, துரியோதனன் யுத்தத்தைக்குறித்து வருந்துவான். எப்பொழுது, படைக்கலங்கள் பயின்றவனுன துருபதன் சமரில் தேரிலிருந்து கோபங்கொண்டு வில்லிலிருந்தும் விடுபட்டசரங்களாலே காளையர்களுடைய தலைகளை நன்குதேடிக் கொய்வனே அப்பொழுது துரியோதனன் யுத்தத்தைக் குறித்து வருந்துவான். எப்பொழுது, விராடன் பகைவர்களில் வீரர்களைக் கொல்லுகிறவனுகிக் குரூரமில்லாத ரூபத்தையுடையவர்களான மச்சதேசத்தார்களுடன் தேர்களுக்கிடையில் பகைவர்களுடைய சேனையில் நுழைவானே அப்பொழுது, துரியோதனன் யுத்தத்தைக்குறித்து வருந்துவான். எப்பொழுது, மச்சநாட்டுக்குத் தலைவனும் குரூபமில்லாமல் சிறந்ததான ரூபமுடையவனும் தேராளியும் பாண்டவர்கள் நிமித்தம் கவசம்பூண்டவனுமான விராடனுடையமூத்தபுத்திரனை எதிரில் பார்ப்பானே அப்பொழுது துரியோதனன் யுத்தத்தைக்குறித்து வருந்துவான். கௌரவர்களில் மகாவீரரும் சந்தனுவின் புத்திரருமான பீஷ்மர் சிகண்டியினுல் யுத்தத்தில் கொல்லப்பட்டபின்பு, ஒருபொழுதும் சத்துருக்கள் எங்களைத் தாங்கமாட்டார்கள். இதனைச் சந்தேகமின்றி உண்மையாகச் சொல்லுகிறேன். எப்பொழுது, சேனையால் சூழப்பட்ட சிகண்டி தேராளிகளைத் தேடிக்கொண்டும் திவ்வியமான குதிரைகளாலே தேர்க்கூட்டங்களை நொறுக்கிக்கொண்டும் தேருடன் பீஷ்மரைஎதிர்ப்பானே அப்பொழுது துரியோதனன் யுத்தத்தைக்குறித்து வருந்துவான். எப்பொழுது, ஸ்ருஞ்சயர்களுடைய படையின் முன்பாகத்தில் விளங்குகிறவ

னும் புத்திமானுன துரோணரால் ரகஸ்யமான அஸ்திரத்தை உபதே சிக்கப்பட்டவனுமான திருஷ்டத்யும்னனைப் பார்ப்பானே அப் பொழுது துரியோதனன் யுத்தத்தைக்குறித்து வருந்துவான். எப் பொழுது, ஸேனாதிபதியும் அளவற்ற வல்லமையுடையவனுமான அவன் பாணங்களால் திருதராஷ்டிர புத்திரர்களை அடிப்பவனும் பகைவர்களைத் தாங்குபவனுமாய்த் துரோணரைப் போரில் எதிர்ப் பானே அப்பொழுது துரியோதனன் யுத்தத்தைக் குறித்து வருந்து வான். ஸோமகர்களில் சிறந்தவனுன அந்தத் திருஷ்டத்யும்னன், அகாரியங்களில் லஜ்ஜையுடன்கூடியவனும் புத்திமானும் பலவானும் நல்ல மனமுடையவனும் திருவுடையவனுமாயிருப்பவன். எவர் களுக்கு விருஷ்ணிகளில் சிறந்தவரான அந்தக் கோவிந்தர் நாயக ராவாரோ (அவர்களைத் தவிர) மற்றப்பகைவர்கள் அவனை ஒருக்காலும் தாங்கமுடியாதவராவர். உலகத்தில் யுத்தத்தில் எதிராளியில்லாத வனும் ரதத்திலிருப்பவனும் சினிக்குப் [1] பேரனும் மிக்க பலமுடைய வனும் பயமில்லாதவனும் அஸ்திரங்களைக் கற்றவனுமான ஸாத்திய கியை ஸஹாயமாக வரிக்கிறோம். (ஆகையால்), 'யுத்தத்தை வேண் டாதே' என்று இதனையும் சொல்லு. விசாலமான மார்புடைய வனும் நீண்டபுஜங்களுள்ளவனும் பகைவர்களை அரைக்கிறவனும் யுத் தத்தில் நிகரற்றவனும் சிறந்த அஸ்திரங்களை அறிந்தவனும் சினிக் குப் [2] பேரனும் பனைபோன்ற வில்லுடையவனும் மகாரதனும் பயம் நீங்கினவனும் அஸ்திரங்களில் பழகினவனும் சினிகளுக்கு அதிப தியுமான இவன் எப்பொழுது என்னால் தூண்டப்பட்டுச் சரங்களால் பகைவர்கள்மேல் மேகம்போலப் பொழிகிறவனும் பகைவர்களைக் கொல்லுகிறவனுமாகிச் சிறந்தவர்களான வீரர்களை மூடுவானே அப் பொழுது துரியோதனன் யுத்தத்தைப்பற்றி வருந்துவான். நீண்ட கைகளுடையவனும் உறுதியான வில்லுடையவனும் மகாத்மாவு மான அவன் எப்பொழுது யுத்தம் செய்வதற்காகத் தைரியத் தைக் காண்பிப்பானே, அப்பொழுது, பகைவர்கள் போர்முகத்தில் இவனிமித்தமாகச் சிங்கத்தின் வாஸனையை முகர்ந்து பசுக்கள் நடுங்கு வதுபோல நடுங்குவார்கள். நீண்டகைகளுடையவனும் திடமான வில்லுடையவனுமான அந்தமகாத்மா, மலைகளை உடைப்பான்; எல்லா உலகங்களையும் சங்கரிப்பான். அஸ்திரங்களில் உழைத்தவனும் ஸமர்த்தனும் கைவேகமுள்ளவனுமான அவன் ஆகாயத்தில் நிலைத்

---

1, 2, 'நப்தாரம்' என்பது மூலம்.

திருக்கின்ற ஸூர்யன்போல் விளங்குகின்றான். யதுகுலத்தில் பிறந்தவரும் விருஷ்ணிகளில் சிறந்தவருமான கிருஷ்ணருடைய அஸ்திரப்பயிற்சியானது பலவிதமும் ஸூக்ஷ்மமும் வியப்பைத்தருவதும் நன்றாகச் செய்யப்பட்டதுமானது. அவருடைய பயிற்சியை எப்படிப்பட்டதாகவும் சிறந்ததாகவும் சொல்லுகின்றனரோ அப்படிப்பட்ட எல்லாக் குணங்களோடும் ஸாத்யகி கூடினவன். எப்பொழுது, வசம்செய்யப்படாத மனத்தையுடையவனும் மந்தனுமான துரியோதனன், யுத்தத்தில் மதுவின் வம்சத்திலுதித்தவனான ஸாத்யகியினுடைய பொன்மயமானதும் நான்கு வெள்ளைக் குதிரைகளுடன்கூடினதுமான தேரைப் பார்ப்பானோ, அப்பொழுது, வருந்துவான். எப்பொழுது பொன்களாலும் ரத்தினங்களாலும் பிரகாசிக்கின்றதும் வெள்ளைக்குதிரைகள் பூட்டப்பட்டதும் வானரக்கொடியையுடையதும் உக்கிரமானதும் கேசவரால் உட்காரப்பட்டதுமான என்னுடைய தேரையும் பார்ப்பானோ, அப்பொழுது, மனோவசமில்லாத அந்த மந்தன் வருந்துவான். எப்பொழுது, மந்தபுத்தியுடையவனும் மூடனும் துஷ்டபுத்தியுடையவனும் துஷ்டர்களை உதவியாகவுடையவனுமான திருதராஷ்டிரபுத்திரன், பெரிதான யுத்தத்தில் என்னால் அசைக்கப்படுகின்ற காண்டீவத்தினுடைய உக்கிரமும் பெரிய சப்தத்தையுடையதும் வஜ்ராயுதத்தின் உராதலுக்குச் சமமுமான உள்ளங்கையில் நாணுராதலைக் கேட்பானோ, அப்பொழுது, யுத்தமுகப்பில் மழைக்காலிருட்டில் தடைப்படுகின்ற பசுக்கூட்டங்களைப்போல் அம்புமழையாலுண்டான இருளில் முறிய அடிக்கப்படுகின்ற சேனையைப்பார்த்துவிட்டு, யுத்தநிமித்தமாய்த் தபிக்கப்போகின்றான். எப்பொழுது காண்டீவத்தால் விடப்பட்டவைகளும், நாணின் முகத்திலிருந்தும் வருகின்றவைகளும், கூர்மையான முனையுடையவைகளும், நல்லகணுக்களுள்ளவைகளும், மேகத்திலிருந்து வெளிக்கிளம்பி மிக்கபயத்தைச் செய்பவைகளான மின்னலின் கணங்கள்போலக் கோரமான ரூபத்தையுடையவைகளும், எலும்புகளை முறிக்கின்றவைகளும், மர்மங்களைப்பிளக்கின்றவைகளும், யுத்தங்களில் பகைவர்களை ஆயிரங்களாகக் கொல்லுகின்றவைகளும், குதிரைகளையும் யானைகளையும் கவசம்பூண்ட வீரர்களையும் விழுங்குகின்றவைகளுமான பாணக்கூட்டங்களைப் பார்ப்பானோ, அப்பொழுது, துரியோதனன் யுத்தத்தைக்குறித்து வருந்துவான். எப்பொழுது மந்தனான துரியோதனன், என்பகைவர்களால் விடப்பட்ட பாணங்கள் என்னுடைய பாணங்களால் எதிர்த்துத்திருப்பப்பட்டு அந்த அம்புக

ளாலே குருக்கே அடித்துமுறிக்கப்படுவதைப் பார்ப்பானே, அப்பொழுது, யுத்தத்தைக்குறித்து வருந்துவான். எப்பொழுது, எனது கைகளால் விடப்பட்ட விபாடங்களென்னும் அம்புகள் வீரர்களுடைய தலைகளைப் பக்ஷிகள் மரங்களினுனியிலிருந்து பழங்களை(உதிர்ப்பது)போல உதிர்த்துக் கூட்டிக் குவிக்கின்றனவோ, அப்பொழுது, துரியோதனன் யுத்தத்தைப்பற்றி வருந்துவான். எப்பொழுது, சரங்களால் கொல்லப்பட்டவர்களும் தேர்களிலிருந்தும் பெரியயானைகளிலிருந்தும் விழுகின்றவர்களும் குதிரையிலிருந்து கொல்லப்பட்டு விழுந்தவர்களுமான சிறந்தபோர்வீரர்களைப் பார்ப்பானே, அப்பொழுது, துரியோதனன் யுத்தத்தைப்பற்றி வருந்துவான். எப்பொழுது, தன்பகைவனுடைய அஸ்திரமார்க்கத்தில் எதிர்க்காமலும் போரில் ஒரு செயலையும் செய்யாமலும் நான்குபக்கத்திலும் ஓளிகிறவர்களான தார்த்தராஷ்டிரர்களைப் பார்ப்பானே, அப்பொழுது, துரியோதனன் யுத்தத்தைப்பற்றி வருந்துவான். எப்பொழுது, வாயைத் திறந்துகொண்ட காலன்போல அம்புகளை இடைவிடாமல் தொடுக்கும் நான் ஜ்வலிக்கின்ற பாணவர்ஷங்களாலே காலாட்களுடைய கூட்டங்களையும் தேர்க்கூட்டங்களையும் பகைவர்களையும் நாற்புறங்களிலும் குத்தித் தள்ளுவேனே, அப்பொழுது, மந்தபுத்தியுடைய அவன் வருந்துவான். எப்பொழுது, எல்லாத்திக்குக்களிலும் சுற்றிவருகின்ற எனது தேரின் தூளியால் கெடுக்கப்பட்டும் காண்டீவத்தால் அறுக்கப்பட்டும் மோகத்தையடைந்ததான தன்சேனையைப் பார்ப்பானே, அப்பொழுது,மந்தபுத்தியுடைய அவன் வருந்துவான். எப்பொழுது, மந்தபுத்தியுடைய துரியோதனன் பயந்தோடினதும் சரீரம் அறுபட்டதும் நினைவற்றதும் குதிரைகளும் வீரஶ்ரேஷ்டர்களும் அரசர்களும் யானைகளும் கொல்லப்பட்டதும் தாகமெடுத்ததும் ஶ்ரமத்தை அடைந்த வாகனங்களையுடையதும் பயத்தால் பீடையடைந்ததும் தீனமான ஸ்வரத்தையுடையதும் கொல்லப்படுகின்றதும் கொல்லப்பட்டதும் சிதறின கேசம் எலும்பு மண்டையோடு இவைகளின் குவியல்களையுடையதுமான எல்லாச்சேனையையும் பார்ப்பானே, அப்பொழுது, 1 யதார்த்தத்தில் நிலைத்ததான (= தவறுததான) பிரம்மதேவருடைய வேலையைப்பார்த்துவிட்டுத் தபிக்கப்போகிறான். தேரில் காண்டீவத்தையும் வாஸுதேவரையும் திவ்யமான பாஞ்சஜன்யமென்கிற சங்

1 'ப்ரஜாபதியைத் தேவதையாகவுடைய வாஜபேயயாகத்தில் பதினேழு பசுக்கள் கொல்லப்பட்டுச் சிதறிக் கிடப்பதுபோல்' என்பது பழையவுரை.

கத்தையும் குதிரைகளையும் குறைவடையாத தூணிகளையும் தேவ தத்தமென்கிற சங்கத்தையும் என்னையும் போரில் பார்த்த பிறகு, துரியோதனன் வருந்துவான். எப்பொழுது, யுகமுடிவில் சேர்ந்தவர்களான திருடர்களின் கூட்டங்களை எரிக்கிறவனாகி வேறுயுகத்தைப் பிரவிருத்திக்கச்செய்கின்ற அக்கினிபோலக் கௌரவர்களை எரிப்பேனே, அப்பொழுது, திருதராஷ்டிரர் புத்திரர்களுடன் தவிப்பார். உடன்பிறந்தவர்களுடன் கூடினவனும் சேனையுடன் கூடினவனும் வேலைக்காரர்களுடன்கூடினவனும் கோபத்திற்கு வசமானவனும் அற்பமான அறிவுடையவனும் மந்தனுமான துரியோதனன், அடிக்கப்பட்டு நடுக்கங்கொண்டு ஐச்வரியமிழந்து கொழுப்பு முடிந்தபொழுது வருந்துவான். ஒரு ஸமயம், [1] ஜலக்கரையில் முற்பகலில் மந்திரஜபம் செய்தவனான என்னை நோக்கி, ஒருவேதியர், 'அர்ஜுன! செய்ய முடியாத காரியம் உன்னால் செய்யத்தக்கதாயிருக்கிறது. ஓ! ஸவ்ய ஸாசியே! உனக்குப் பகைவர்களுடன் யுத்தம் செய்யவேண்டியதாயிருக்கிறது. போரில் உன்னுடைய முன்னாலே இந்திரனாவது, குதிரையையுடையவனும் வஜ்ராயுதத்தைக் கையிலுடையவனும் பகைவர்களைக் கொல்லுகிறவனுமாகச் செல்லட்டும். வாஸுதேவரான கிருஷ்ணராவது ஸுக்ரீவமுதலான குதிரைகள் பூட்டிய ரதத்துடன் உனக்குப்பின்னால் ரக்ஷிக்கட்டும்' என்று இனிமையாகச் சொன்னார். நானும் இந்த யுத்தத்தில் வஜ்ரபாணியான இந்திரனை விட்டு வாஸுதேவரை ஸஹாயமாக வேண்டினேன். திருடர்களான (தார்த்தராஷ்டிரர்களின்) வதத்தின்பொருட்டு நான் அந்தக் கிருஷ்ணரை அடைந்தேன்; எனக்கு இது தேவதைகளால் செய்யப்பட்டதென்று நினைக்கிறேன். (அந்தக்) கிருஷ்ணர் போர்செய்யாமலே மனத்தினால் ஒரு மனிதனுக்கு வெற்றியை விரும்புவாரானால் அதனாலேயே அந்தமனிதன் இந்திரனுடன்கூடின எல்லாத் தேவர்களுமான பகைவர்களையும் மிஞ்சுவான். மனிதன் விஷயத்தில் சிந்தையில்லை. எவன் தேஜஸோடுகூடியவரும் மிக்கசூரரும் வஸுதேவரின் புத்திரருமான கிருஷ்ணரைப் போரால் வெல்லவிரும்புவானோ, அவன், ஸகரபுத்திரர்களால் செய்யப்பட்டதும் அளவிடமுடியாததுமான ஜலஸமுத்திரத்தைக் கைகளால் கடக்கவிரும்புவான். எவன் திரளான பாறைகளுள்ளதும் மிகப்பெரிதுமான ச்வேதபர்வதத்தை உள்ளங்கையால் உடைக்க விரும்புவானோ அவனுடைய நகங்களுடன்கூடிய கைதான் சிதறும். பர்வதத்திற்கோ அவன் ஒன்றையும் செய்ய முடியாது. எவன் யுத்தத்தால் வாஸுதேவரை வெல்ல

1 'ஸந்த்யாவந்தனத்தில் ஆசமநீயத்தின் முடிவில்' என்பது பழையவுரை.

விரும்புவானே அவன் மூண்டெரிகின்ற தழலைக் கைகளால் அவிப்பவனாவான்; சந்திரனையும் சூரியனையும் தடுப்பான்; தேவர்களுடைய அமிருதத்தை வலிமைசெய்து கவர்வான். மகாத்மாவான ப்ரத்யும்னனைப் பெற்றவளும் புகழால் விளங்குகின்றவளுமான ருக்மிணியென்ற மனைவியை, யுத்தத்தில் ஓரேதேருடன் போஜதேசத்தரசர்களைத் துரத்திப் பாலாத்காரம் செய்து மணந்தவரான இவர் காந்தாரதேசத்தை விரைவில் நாசம் செய்து நக்னஜித்தின் புத்திரர்களனைவரையும் ஜயித்து, கட்டப்பட்டவனும் சப்திக்கிறவனும் தேவதைகளுக்கு அலங்காரபூதனுமான ஸுதர்சனனென்கிற அரசனை வன்மைசெய்து விடுவித்தார். இவர் கவாடநகரத்தில் பாண்டியனைக் கொன்றார்; அப்படியே, கலிங்கர்களையும் தந்தவக்த்ரனையும் கொன்றார். வாராணஸீயென்கிற நகரியானது இவரால் எரிக்கப்பட்டதாகிப் பலவருஷங்கள் நாதனில்லாததாயிருந்தது. இவர், மற்றவர்களால் ஜயிக்கமுடியாதவனும் ஏகலவ்யனென்னும் பெயருள்ளவனுமான அந்த வேடராஜனை யுத்தத்தில் எதிர்க்கக் கருதினார். பிரஸித்தனான அவன் இவரால் அடிக்கப்பட்டு உயிர்துறந்து மலையினால் வேகமாயடிக்கப்பட்ட ஜம்பன்போலப் படுத்திருக்கிறான். அப்படியே பலதேவரை ஸஹாயமாகக்கொண்டு மிக்கதுஷ்டனும் விருஷ்ணி அந்தகர்களுடைய நடுவையடைந்தவனும் ஸபையிலிருப்பவனும் உக்கிரஸேனன் புத்திரனுமான கம்ஸனை வீழ்த்தினார்; அவனைக் கொன்றுவிட்டு, உக்கிரஸேனனுக்கு ராஜ்யத்தையும் கொடுத்தார். இவர் ஆகாயத்திலிருப்பவனும் மாயையால் பயங்கரனும் சால்வராஜனுமான ஸௌபனுடன் யுத்தம் செய்தார்; ஸௌபனுடைய வாசலில் (அவனால் பிரயோகிக்கப்பட்ட) சக்தியைக் கைகளால் பிடித்தார். எந்த மனிதன் இவரைத் தாங்குவான்? பிராக்ஜோதிஷமென்று பெயருடையதும் சொல்லமுடியாததும் கோரமும் ஸகிக்கமுடியாததுமான அஸுரர்களுடைய பட்டணமிருந்தது. அதில் மிக்க பலமுடையவனும் பூமியின் புத்திரனுமான நரகாஸுரன் அதிதியினுடைய சுபமான [1] ரத்னகுண்டலங்களைக் கவர்ந்தான். யுத்தத்தில் மிருத்யுவினிடமிருந்தும் பயமில்லாதவர்களும் ஒருங்கு சேர்ந்தவர்களுமாயிருந்தும் இந்திரனுள்ளிட்ட தேவர்கள் அவனை வெல்ல வல்லவர்களாகவில்லை. அவர்கள் கேசவரான கண்ணபிரானுடைய அப்படிப்பட்ட பராக்கிரமத்தைப் பார்த்துவிட்டுப் பலத்தையும் தடுக்கமுடியாத அஸ்திரத்தையும் ஸ்வபாவத்தையும் அறிந்தவர்களாகித் திருடனுடைய வதத்திற்

1 ஸபாபர்வம் 55-வது அத்தியாயம் பார்க்க.

க்காகக் கிருஷ்ணரை ஏவினார்கள். கார்யஸித்திகளைத் தம்வசத்து லுடையவரான அந்த வாஸுதேவர் செய்யமுடியாததான அந்தக் காரியத்தைச் செய்வதாகப் பிரதிஜ்ஞை செய்தார். அந்தவீரர், நிர்மோசனமென்கிற நகரத்தில் ஆறாயிரம் பேர்களைக் கொன்று, கத்திபோன்ற கூரியமுனையுள்ள பாசங்களை வேகமாக அறுத்து, முரனையும் அடித்து, ஓகனென்கிற ராக்ஷஸனையும் கொன்று, நிர்மோசனத்தையும் அடைந்தார். அங்கேயே மிக்க பலசாலியான அந்த முரனுடன் அதிபலசாலியான இந்த விஷ்ணுவுக்கு யுத்தம் ஏற்பட்டது. அவன் கோவிந்தரால் அடிக்கப்பட்டுக் காற்றினால் முறிக்கப்பட்ட கோங்குமரம்போல உயிர்போய்விழுந்தான். வித்வானும் நிகரற்ற பிரபாவமுள்ளவருமான வாஸுதேவர் பூமிபுத்ரனை நரகனையும் முரனையும் கொன்றுவிட்டு அந்த மணிகுண்டலங்களைத் திரும்பக் கவர்ந்து காந்தியினாலும் புகழாலும் சூழப்பட்டவராய்த் திரும்பி வந்தார். அப்பொழுது, தேவர்கள் போரில் செய்யப்பட்ட பயங்கரமான அந்தச் செயலைப்பார்த்து, 'போர்செய்கிற உமக்கு ஶ்ரமம் ஏற்படாது; ஆகாயத்திலும் ஜலத்திலும் உமக்கு ஸஞ்சாரம் ஏற்படட்டும்; உம்முடைய சரீரத்தில் ஆயுதங்கள் பாயாமலிருக்கக் கடவன' என்றே இவருக்கு வரங்களை அளித்தார்கள். அதனால், வாஸுதேவரும் கிருதார்த்தரானார். இவ்வித ரூபத்தையுடையவரும் உள்ளபடி அறியமுடியாதவரும் மிக்கவன்மையுடையவருமான வாஸுதேவரிடத்தில் எப்பொழுதும் குணங்களின் நிறைவே இருக்கிறது. பகைவரால் தாங்கமுடியாதவரும் அளவற்ற வீர்யமுடையவருமான அந்த விஷ்ணுவைத் துரியோதனன் ஜயிப்பதற்கு விரும்புகிறான். மதிகேடனை அவன் எப்பொழுதும் இவரை [1] எதிர்த்து வாதாடுகிறான். எங்களைப் பார்த்து அதையும் இவர் பொறுக்கின்றார். எவன், எனக்கும் கோவிந்தருக்குமேகூட (எங்களை) மீறிவந்ததான கலகத்தையும் (அதனால்) பாண்டவர்களுக்கு (அவரிடமிருக்கிற) நம்மைச் சேர்ந்தவரென்கிற ஸம்பந்தத்தை அபகரிக்க முடியுமென்பதையும் நினைக்கிறானோ அவன், அதை [2] அவ்விடத்தில் யுத்தத்தை அடைந்து அறிவான். ராஜ்யத்தை அடையவிரும்புகிறவனை நான், சந்தனுவின் புத்திரரான அரசருக்கும் புத்திரருடன் கூடின துரோணருக்கும் எதிரற்றவரான கிருபருக்கும் நமஸ்காரம் செய்துவிட்டுப் போர் செய்யப்போகிறேன். எவன் தர்மத்தில் ஸஞ்சரிப்பவனாகிப் பாண்டவர்களுடன் யுத்தம் செய்யப்போகிறானோ அவனுக்குத் தர்மத்தால் நேரி

1 கட்ட முயல்கிறான் என்பது பழையவுரை. 2 குருக்ஷேத்திரத்தில்.

டும் மரணத்தை நினைக்கிறேன். குரூரர்களாலே ராஜபுத்திரர்களான (நாங்கள்) பொய்யான சூதுப்பந்தயத்தில் வெல்லப்பட்டோம். பன்னிரண்டு வருஷங்களான நீண்டகாலம் காட்டில் கஷ்டமான வாஸமும், ஒரு வருஷம் யாராலும் அறியப்படாத வாஸமும் விதிக்கவும் பட்டன. அந்தத் திருதராஷ்டிர புத்திரர்கள், பாண்டவர்கள் உயிருடனிருக்கும்போது எந்தக்காரணத்தால் அதிகாரத்திலிருந்துகொண்டு மகிழ்வார்கள்? அவர்கள் யுத்தம் செய்கிறவர்களான எங்களை இந்திரன் முதலான தேவர்களாகிற ஸஹாயங்களாலும் ஜயிப்பார்களேயானால் தர்மத்தைக்காட்டிலும் அதர்மமானது அனுஷ்டிக்கப்பட்டுப் பெரிதாகி விடும். அப்பொழுது, செய்யப்பட்ட ஸத்கர்மமும் நிலையில்லை. இந்த முயற்சியானது பயனற்றதாகுமானாலும், எங்களை மேற்பட்டவர்களாக நினையாமற்போனாலும், நான் வாஸுதேவரை ஸஹாயமாக உடையவனாகித் துரியோதனனை அடுத்தவர்களுடன் கொல்ல விரும்புகிறேன். இந்தச்செய்கையானது அரசர்களுக்குப் பயனற்றதென்று தோற்றாமலிருக்குமேயானால், நற்கருமமும் பயனற்றதாகாதமேயானால், இதனையும் அதனையும் ஆலோசித்துத் துரியோதனனுக்கு அபஜயமே தரும்; நிச்சயம். கௌரவர்களே! நான் சொல்வது உங்களுக்குப் பிரத்யக்ஷமாகவுள்ளது. திருதராஷ்டிரபுத்திரர்கள் யுத்தம் செய்தால் அழிந்துவிடுவார்; யுத்தம் செய்யாமற்போனால் இருப்பார்கள். இந்த யுத்தத்தில் ஒருவனும் மிஞ்சப்போகிறதில்லை. நானே கர்ணனுடன் கூடின திருதராஷ்டிர புத்திரர்களைக்கொன்று அவர்களுடைய முழுராஜ்யத்தையும் வெல்லுகிறவனாயிருக்கிறேன். உங்களுக்கு எது செய்யத்தக்கதோ அதைச் செய்யுங்கள். உங்கள் செல்வத்துக்குத் தக்கபடி இஷ்டமான தாரங்களையும் உங்கள் போகங்களையும் அடையுங்கள். தவிரவும், எங்களுக்கு இவ்விதம் (தெரிவிக்கின்ற) பெரியோர்களும் கல்விமிக்கவர்களும் நல்ல சீலமுடையவர்களும் நல்லகுலத்திற் பிறந்தவர்களும் வர்ஷப்பயனறிந்தவர்களும் ஜோதிஷத்தில் பயிற்சியுடையவர்களும் நக்ஷத்திரங்களிலும் யோகங்களிலும் நிச்சயத்தை அறிந்தவர்களுமான பிராம்மணர்களும் இருக்கின்றனர். பலவேறுவகைப்பட்டதும் தெய்வத்துடன் கூடினதுமான ரகஸ்யமும் வரப்போகின்றவைகளைத் தெரிவிக்கும் பிரஶ்னங்களும் ஆராயப்படும் ராசிகள் முதலியவற்றின் சக்கரங்களும் முகூர்த்தங்களும் கௌரவர்களுக்கும் ஸ்ருஞ்சயர்களுக்கும் பெரிதான நாசத்தையும் பாண்டவர்களுக்கு ஜயத்தையும் தெரிவிக்கின்றன. எப்படியென்றால், காரியங்கள் கைகூடுபவரான எங்கள் அஜாதசத்துருவான

வர் பகைவர்களை அடக்க நினைக்கிறார். பிரத்தியக்ஷமாக அறிகின்ற வரும் விருஷ்ணிகளில் சிறந்தவருமான ஜனார்த்தனரும் ஸந்தேகத்தை நினைக்கவில்லை. நானும், அஜாக்கிரதையில்லாதவனாய், நேரிடப்போகின்ற இதனைப் புத்தியினால் அப்படியே நேரில் பார்க்கின்றேன். காரியஸித்திக்கு முன்னுண்டான என்னுடைய [1] பார்வையானது மாறுகிறதில்லை. யுத்தம் செய்வார்களேயானால் திருதராஷ்டிர புத்திரர்கள் இருக்கமாட்டார்கள். காண்டீவமென்கிற வில்லானது எடுக்கப்படாமலே [2] சொரியத்திறக்கின்றது. எனது வில்லின் நாண் அடிக்கப்படாமலே அசைகிறது. எனதுபாணங்களும் அடிக்கடி அம்புத்தூணியின் முகத்திலிருந்தும் வெளிக்கிளம்பிப்போவதற்கே இச்சிக்கின்றன. ஜீரணமான தன்சட்டையைத் தள்ளிவிட்டு ஸர்ப்பமானது கிளம்புவதுபோலக் கத்தியானது கூட்டிலிருந்தும் பளபளப்பாக வெளியில் வருகிறது. துவஜத்தில், 'ஓ! கிரீடியே! உன்னுடைய தேரானது எப்பொழுது (யுத்தத்தில்) உபயோகிக்கப்படப்போகிறது?' என்று மிக்கபயங்கரமான சப்தங்கள் உண்டாகின்றன. ராத்திரியில் நரிகளின்கூட்டங்கள் கத்துகின்றன. ராக்ஷஸர்கள் ஆகாயத்திலிருந்தும் கீழேவிழுகின்றார்கள். மிருகங்களும் நரிகளும் மயில்களும் காகங்களும் கழுகுகளும் கொக்குக்களும் சிறுத்தைகளும் கருடன்களும் வெள்ளைக்குதிரைகள்பூண்ட தேரைப்பார்த்துவிட்டுப் பின்னால் வந்து விழுகின்றன. நானொருவனே சரங்களைப்பொழிகிறவனாகிப் பூமியிலுள்ள எல்லாப்போர்வீரர்களையும் யமனுலகம் அடைவிப்பேன்; தனித்தனியான அஸ்திரமார்க்கங்களைக் கிரகிக்கிறவனும் வகத்தில் உறுதிகொண்டவனும் வேகமுள்ளவைகளான ஸ்தூணாகர்ணமென்கிற அஸ்திரத்தையும் பாசுபதமென்கிற மஹாஸ்திரத்தையும் ப்ரம்மாஸ்திரத்தையும் இந்திரன் எனக்கு அளித்த ஐந்திராஸ்திரத்தையும் விடுகிறவனுமாகிக் கோடைக்காலத்தில் மூண்டெரிகின்ற தீயானது காட்டை மிச்சம் வைக்காததுபோல் இவ்வுலகில் பிரஜைகளைக் கொஞ்சமேனும் மீதிவைக்கமாட்டேன். ஓ! கவல்கணபுத்ரனே! (பிறகு), சாந்தியை அடைவேன். இது என்னுடைய மேலானதும் உறுதியுள்ளதுமான அபிப்ராயம்; அவர்களிடம் சொல்லு. ஸூதனே! எவர்கள் யுத்தத்தில் சேர்ந்தவர்களும் இந்திரன்முதலானவர்களுமான தேவர்களை எதிர்த்து ஜயிக்கவே செய்வார்களோ அவர்களுடன்கூட அந்தத் துரியோதனன் வலிமைசெய்து போரை நினைக்கிறான். இவனு

1 'யோகாப்பியாஸத்தாலுண்டான திருஷ்டியானது மறைபட்டதாயில்லை' என்பது பழையவுரை. 2 கொட்டாவிவிடுகின்றது.

டைய அறியாமையைப் பாருங்கள்! பிராயமுதிர்ந்தவரும் சந்தனு புத்திரருமான பீஷ்மரும், கிருபரும், புத்திரருடன்கூடின துரோணரும், புத்திமானான விதுரரும் ஆகிய இவர்களெல்லாரும் எதைச் சொல்லுகிறார்களோ அது நடக்கட்டும். கௌரவர்களெல்லாரும் நீண்ட ஆயுளுள்ளவர்களாக இருக்கட்டும்' என்று சொன்னான்" என்றான்.

## நாற்பத்தோன்பதாவது அத்யாயம்.

## யாநஸந்திபர்வம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர் நரநாராயணரே க்ருஷ்ணார்ஜுனராயவதரித்தனரென்பதையும் அவர்களுடன் பகைத்தால் கௌரவரழிவரென்பதையும் கூறிக் கர்ணனை நிந்தித்ததும், திருதராஷ்டிரன் பீஷ்ம த்ரோணர்களின்சொல்லைக் கேளாமற்போகவே கௌரவரனைவரும் உயிரில் ஆசையற்றவரானதும்.)

ஓ! பாரதரே! அந்த அரசர்களெல்லாரும் சேர்ந்திருக்கும் பொழுது, சந்தனுவின் புத்திரரான பீஷ்மர், துரியோதனனை நோக்கி, இந்தவார்த்தையைச் சொல்லலானார். 'பிருகஸ்பதியும் சுக்ராசார்யரும் பிரம்மதேவரைச் சூழ்ந்திருந்தார்கள். அப்பொழுது, இந்திரனுடன் தேவர்களும் அக்கினியும் வஸுக்களும் ஆதித்தியர்களும் ஸாத்தியர்களும் ஸ்வர்க்கத்திலுள்ள ஸப்தரிஷிகளும் விச்வாவஸுவென்கிற கந்தருவனும் சுபமான அப்ஸரஸுகளின் கூட்டங்களும் உலகங்களுக்கெல்லாம் முதியவரான பிதாமஹரை நமஸ்கரித்துவிட்டு நெருங்கிச் சென்றார்கள். அவர்கள் எல்லா உலகங்களுக்கும் ஈசரான (அவரை)ச் சூழ்ந்து இருந்தார்கள். அப்பொழுது, (தங்கள்) காந்தியினால் அவர்களுடைய மனத்தையும் சக்தியையும் கவர்கின்றவர்கள்போன்றவர்களும் பழமையான தேவர்களுமான நரநாராயணர்களென்கிறரிஷிகள் கடந்து சென்றார்கள். பிருகஸ்பதியோ, பிரம்மாவை நோக்கி, 'ஓ! பிதாமஹரே! இவர்கள் யார்? உம்மை உபசரிக்கவில்லை. இவர்களை எங்களுக்குச் சொல்லும்' என்று கேட்டார்.

பிரம்மதேவர், 'பூமியையும் ஆகாயத்தையும் பிரகாசிக்கச் செய்கிறவர்களும் ஜ்வலிக்கின்றவர்களும் அழகுள்ளவர்களும் இங்கு வியாபித்துச் சென்றவர்களுமான இந்தத்தவசிகள் மிக்கபலசாலிகளான நரநாராயணர்கள். ஒருலகத்திலிருந்து

கத்துக்குச் சென்றார்கள். தங்கள் தவத்தால் உறுதியுள்ளவர்களும் மிக்க பலமும் பராக்கிரமமுமுடையவர்களுமான இவர்களே கர்மாவினால் உலகத்தை ஸந்தோஷிக்கச் செய்தார்கள். இது நிச்சயம். ஓ! பிராம்மண! மிக்க அறிவுள்ளவர்களும் பகைவர்களை வாட்டுகிறவர்களும் தேவர்களாலும் கந்தர்வர்களாலும் பூஜிக்கப்பட்டவர்களுமான இவர்களை அஸுரர்களின் விநாசத்தின் பொருட்டு (ஒருவரே) இரண்டானவர்களாக அறியக்கடவாய்' என்று சொன்னார். அதைக் கேட்டு, இந்திரன், பிருகஸ்பதி முதலான எல்லாத் தேவகணங்களுடனும் அவர்கள் தவம்செய்கின்றவிடத்தை அடைந்தான்; தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் உண்டான யுத்தத்தில் தேவர்களுக்குப் பயமானது உண்டாயிருக்கும்போது, மகாத்மாக்களான நரநாராயணர்களிடத்தில் வரத்தை யாசித்தான். ஓ! பரதச்ரேஷ்ட! அப்பொழுது, அவர்கள், 'வரத்தைக்கேள்' என்று சொன்னார்கள். பிறகு, இந்திரன், அவர்களைநோக்கி, 'எங்களுக்கு ஸஹாயத்தைச் செய்யவேண்டும்' என்று சொன்னான். உடனே, அவர்கள், இந்திரனைநோக்கி, 'எதை விரும்புகிறாயோ அதைச்செய்வோம்' என்று சொன்னார்கள். இந்திரன், அவர்களுடன்கூடித் [1] தைத்தியர்களையும் [2] தானவர்களையும் ஜயித்தான். அப்பொழுது, பகைவரை வாட்டுபவனும் நரனுமான இந்த அர்ஜுனனே இந்திரனுடைய யுத்தத்தில் சுற்றிவருவதான தேரிலிருந்துகொண்டு, ஆயிரவர்களும் நூற்றுவர்களுமான பௌலோமர்கள் காலகஞ்சர்களென்கிற பகைவர்களைக் கொன்றுவிட்டுப் போரில் விழுங்குகிறவனான ஜம்பனுடைய தலையையும் பலத்தால் அறுத்தான். இவன் ஸமுத்திரத்தின் அக்கரையில் யுத்தத்தில் அறுபதினாயிரம் நிவாதகவசர்களைக்கொன்று ஹிரண்யபுரத்தை அழித்தான். நீண்ட புஜங்களுடையவனும் பகைவர்களின் பட்டணத்தை ஜயிப்பவனுமான இந்த அர்ஜுனன் இந்திரனுடன்கூடித் தேவர்களை ஜயித்து அக்கினிக்குத் திருப்தியைச்செய்தான். அப்படியே, இவ்வுலகில் நாராயணரும் வேறு அனேகர்களைக் கொன்றார். இவ்விதம், பெரிதான வீர்யமுடைய அவ்விருவர்களையும், வீரர்களும் மகாரதர்களும் சேர்ந்துவந்தவர்களுமான இந்த வாஸுதேவராகவும் அர்ஜுனனாகவும் பாருங்கள். நரநாராயணர்களென்கிற தேவர்கள் பூர்வதேவர்களென்று கேள்வி; மானிடவுலகத்தில் இந்திரனுடன் கூடின தேவாஸுரர்களாலும் ஜயிக்கமுடியாதவர்கள். நாராயணர் இந்தக் கிருஷ்ணராகவும் நரன்

1 திதியின் புத்திரர்களான அஸுரர்கள். 2 தனுவின் புத்திரர்களான அஸுரர்கள்.

அர்ஜுனனாகவும் கருதப்பட்டனர். ஒரேவஸ்துவானது நாராயணனென்றும் நரனென்றும் இரண்டுவிதமாகச் செய்யப்பட்டது. இவர்களோ, கர்மாவினால் குறைவற்றவைகளும் நிலையுள்ளவைகளுமான லோகங்களை அடைகின்றார்கள்; அங்கங்கே யுத்தஸமயத்தில் அடிக்கடி ஜனிக்கிறார்கள். ஆகையினால், கர்மாவே செய்யத்தக்கதென்று நாரதர் சொன்னார். இந்த எல்லாவற்றையும் வேதவித்தான நாரதர் விருஷ்ணிகளின் ஸமூகத்திற்குச் சொன்னார். அப்பா! துரியோதன! எப்பொழுது, ஸநாதனர்களும் மகாத்மாக்களும் ஒரே தேரிலிருப்பவர்களும் கிருஷ்ண (=கருமை) நிறமுள்ளவர்களுமான சங்கசக்ரகதாபாணியான கிருஷ்ணனையும், அஸ்திரங்களை எடுப்பவனும் பயங்கரமான வில்லையுடையவனுமான அர்ஜுனனையும் பார்ப்பாயோ, அப்பொழுது, என்வார்த்தையை நினைப்பாய். (என்வார்த்தையைக்) கேளாவிடில் கௌரவர்களுக்கு இதோ அழிவானது நேரிட்டதாகிவிடும். அப்பா! உன் புத்தியானது அறத்திலிருந்தும் பொருளிலிருந்தும் கெட்டுவிட்டது. இந்த வார்த்தையை ஏற்றுக்கொள்ளாமலிருப்பாயேயானால் அனேகம்பேர்களைக் கொல்லப்பட்டவர்களாகக் கேட்பாய். உன்னுடைய கொள்கையையே கௌரவர்களெல்லாரும் பின்பற்றுகின்றனர். பரதஶ்ரேஷ்ட! அப்படிப்பட்ட நீ ஒருவன், பரசுராமராலேயே சபிக்கப்பட்டவனும் கெட்டபிறப்புள்ளவனும் ஸூதபுத்திரனுமான கர்ணன், ஸுபலபுத்திரனான சகுனி, அற்பனும் பாவியும் உடன்பிறந்தவனுமான துச்சாஸனன் ஆகிய மூவருடைய கொள்கையையுமே அங்கீகரிக்கிறாய்' என்று சொன்னார்.

கர்ணன், 'ஓ! பிதாமஹரே! என்னைக்குறித்து எதைச்சொன்னீரோ அது, [1]ஆயுஷ்மானான உம்மால் சொல்லத்தக்கதன்று. ஸ்வதர்மத்தை விட்டுவிலகாமல் க்ஷத்திரிய தர்மத்தில் நிலைத்தவனாயிருக்கிறேன். மேலும், என்னை நீர் தூஷிக்கக்காரணமான வேறென்ன கெட்டநடை என்னிடம் இருக்கிறது? திருதராஷ்டிரரின் புத்திரர்களோ ஒரு விஷயத்திலும் என்னிடம் குற்றத்தைக் காணவில்லை. நான் துரியோதனனுக்கு ஒருநாளும் ஒருகெடுதலையும் செய்யவில்லை. நானே போரில் நிற்கின்ற எல்லாப் பாண்டவர்களையும் கொல்லப்போகிறேன். முன் விரோதிக்கப்பட்டவர்களுடன் பெரியோர்களால் எப்படி மறுபடியும் ஸமாதானமானது செய்யப்படுகிறது? என்னால் திருதராஷ்டிரராஜருடைய விருப்பமனைத்தும் செய்யத்தக்கன. அப்படியே, துரியோதனனுடைய விருப்பமனைத்தும் செய்யத்தக்கன. அவனே ராஜ்யத்தில் ஸ்தாபிக்கப்பட்டான்' என்று சொன்னான்.

---

1 தேர்ப்பாகன் தேர்வீரனை அழைப்பது.

கர்ணனுடைய வார்த்தையைக்கேட்டு, சந்தனுவின் புத்திரரான பீஷ்மரோ, திருதராஷ்டிரமகாராஜனை அழைத்து, இந்த வார்த்தையை மறுபடியும் சொன்னார். 'இவன் பாண்டவர்களைக் கொல்லப் போகிறேனென்று எந்நாளும் (தன்னைப்) புகழ்ந்துகொள்ளுகிறானே; இவன் மகாத்மாக்களான பாண்டவர்களுக்குப் பதினாறிலொரு பாகங்கூட நிரம்பினவனல்லன். துர்ப்புத்திகொண்ட உன் புத்திரர்களுக்கு வரப்போகின்ற கேடானது, கெடுமதியுடையவனும் தேர்ப்பாகன் மைந்தனுமான இவனுடைய வேலையென்று அறியக்கடவாய். மந்தபுத்தியுடைய உன்புத்திரனான துரியோதனன் இவனை அடுத்து, வீரர்களும் தேவபுத்திரர்களும் பகைவர்களைத் தண்டிக்கிறவர்களுமான அவர்களை அவமதித்தான். தவிரவும், முன் அந்தப்பாண்டவர்கள் எல்லாராலும் தனித்தனியாகச் செய்யப்பட்டதுபோல இவனால் முன் செய்ய மிகவுமரிதான என்னகாரியம் செய்யப்பட்டது? விராடநகரத்தில் தனஞ்சயனால் வலிந்துகொல்லப்பட்டவனும் பிரியனுமான [1] பிராதாவைப் பார்த்துவிட்டு, அப்பொழுது இவனால் என்ன செய்யப்பட்டது? அவர்கள் எல்லாரும் அஸ்திரங்களை அறிந்த சூரர்கள்; எல்லாரும் பெரியபுகழை அடைந்தவர்கள்; பூர்ணமான தேவ ஐஸ்வரியத்தைவிட்டாலும் விடுவார்கள்; ஜயத்தையோ வெனில், விடார்கள். தனஞ்சயன், சேர்ந்தவர்களான எல்லாக்கௌரவர்களையுமே எதிர்த்து அடித்து ஆடையையும் [illegible]னான். அப்பொழுது, இவன் வெளியில் போயிருந்தா[illegible]டைந்தவனாகிப் [illegible] காளைபோலக் கத்துகின்ற ஸூதபுத்திரன் [2] கோஷயாத்[illegible]கி ஓடு கந்தருவர்களால் உன்னுடையபுத்திரன் அபகரிக்கப்பட்டபொழுது எங்கே இருந்தான்? அப்பொழுதும், பீமனும் மகாத்மாவான அர்ஜுனனும் நகுலஸஹதேவர்களுடனும் கூடியே அந்தக் கந்தருவர்கள் ஜயிக்கப்பட்டார்களல்லவா? பரதச்ரேஷ்டா! உனக்கு க்ஷேமமுண்டாகட்டும். இவைகள், எப்பொழுதும் அறம்பொருள்களைக் கெடுக்கிறவனும் தற்புகழ்ச்சி செய்கிறவனுமான இவனுடைய பலவான பொய்வார்த்தைகள்' என்று சொன்னார்.

பெரிய மனத்தையுடைய துரோணரோ, பீஷ்மருடைய வார்த்தையைக்கேட்டு அரசர்களுடைய மத்தியில் கொண்டாடித் திருதராஷ்டிரனை நோக்கி, 'ஓ! அரசரே! பரதச்ரேஷ்டரான பீஷ்மர் சொன்னதைச் செய்யவேண்டும். மிக்க கர்வங்கொண்டவர்களுடைய

1 சத்ருந்தபன்; விராடபர்வம் 239-ம் பக்கம் பார்க்க.

2 பசுமந்தைகாணச்சென்றது.

வார்த்தையைச் செய்யத்தக்கவரல்லீர். யுத்தத்திற்கு முன்னமே பாண்டவர்களுடன் சேர்க்கையை நல்லதாக நினைக்கிறேன். அர்ஜுனனால் எந்தவார்த்தையானது சொல்லப்பட்டு ஸஞ்சயனால் தெரிவிக்கப்பட்டதோ அதையெல்லாம் அர்ஜுனன் செய்வானென்றும் அறிகிறேன். மூன்று உலகங்களிலும் இவனுக்குச் சமமான வில்லாளியானவன் இல்லை' என்று இந்த வார்த்தையைச் சொன்னார்.

அந்த அரசன், பயனுடன்கூடினதான பீஷ்மத்துரோணர்களுடைய அந்த வார்த்தையையோ அனுதரவு செய்துவிட்டுப் பிறகு பாண்டவர்களைப்பற்றி ஸஞ்சயனிடம் வினவலானான். எப்பொழுது அரசன் பீஷ்மத்துரோணர்களை அனுஸரித்து நன்றாகப்பேசவில்லையோ அப்பொழுதே கௌரவர்களெல்லாரும் உயிரில் ஆசையில்லாதவர்களானார்கள்.

## ஐம்பதாவது அத்யாயம்.

## யாநஸந்திபர்வம். (தொடர்ச்சி.)

---

**(திருதராஷ்டிரன் பாண்டவர்கள் யாருடையபலத்தால் போருக்கு முயல்கின்றனரென்று கேட்க, ஸஞ்சயன் பாண்டவர்களின் வல்லமையை [illegible]த்து மூர்ச்சையடைந்து பின்புதெளிந்து பாண்டவ[illegible] [illegible]யத்தாலும் தங்கள் வலிமை[illegible] மற்ற அரசர்களினுதவியாலும் முயல்கின்றனரென்றது.)**

திருதராஷ்டிரன், 'ஸூத! பாண்டுபுத்திரனும் அரசனுமான இந்தத்தர்மபுத்திரன், இவ்விடத்தில் எங்களுடைய பிரீதிக்காக வந்தவைகளும் பலவுமான சேனைகளைக்கேட்டுவிட்டு என்னசொன்னான்? யுத்தம் செய்யப்போகிறவனான அந்த யுதிஷ்டிரன் என்னசெய்கிறான்? உடன்பிறந்தவர்களுள்ளும் குமாரர்களுள்ளும் எவர்கள் இவனுடைய கட்டளையை அடையவிருப்பமுள்ளவர்களாகி முகத்தைப்பார்க்கின்றார்கள்? எவர்கள் மந்தர்களாலே வஞ்சனையினால் கோபிக்கும்படி செய்யப்பட்டவனும் தர்மத்தை உணர்ந்தவனும் தர்மத்தைஅனுஷ்டிப்பவனுமான அவனை யுத்தத்திலிருந்தும் 'ஒழிவைஅடை' என்று தடுக்கின்றார்கள்?' என்று கேட்டான்.

ஸஞ்சயன், 'பாண்டவர்களுடன் பாஞ்சலர்கள் யுதிஷ்டிரராஜருடைய முகத்தை எதிர்பார்க்கின்றனர். உமக்கு க்ஷேமமுண்டாகுக.

அவரும் எல்லாரையும் கட்டளையிடுகின்றார். பாண்டவர்கள் பாஞ்சாலர்கள் இவர்களுடைய தேர்க்கூட்டங்கள் தனித்தனி இருந்து கொண்டு, வருகின்றவரும் குந்திபுத்திரருமான யுதிஷ்டிரரைக் கொண்டாடுகின்றன. பாஞ்சாலர்கள், ஆகாயத்தில் உதிக்கின்ற ஸூரியனைப் போல ஜ்வலிக்கின்ற தேஜஸையுடைய குந்திபுத்திரரைப்பற்றி மகிழ்கின்றனர். உதித்திருக்கும் ஒளிக்கூட்டத்தைப்போல யுதிஷ்டிரரைப்பற்றி மாட்டிடையர் ஆட்டிடையர் முதலானோர்களும் ஸந்தோஷிக்கின்றனர். பாஞ்சாலர்களும் மத்ஸியர்களும் கேகயர்களும் பாண்டவரைக்குறித்து மகிழ்கின்றனர். விளையாடிக்கொண்டிருக்கின்ற பிராம்மணப்பெண்களும் ராஜபுத்திரிகளும் வைசிய புத்திரிகளும், ஸன்னத்தராயிருக்கிற பார்த்தரைப் பார்ப்பதற்கு நான்கு பக்கத்திலிருந்தும் வருகின்றனர்' என்று சொன்னான்.

திருதராஷ்டிரன், 'ஸஞ்சய! பாண்டவர்கள் திருஷ்டத்யும்னனுடைய சேனையும் ஸோமகர்களுடைய பலமுமான எவ்வித ஸஹாயத்தால் எங்களைக்குறித்து ஸன்னாஹம் செய்தார்களென்பதைச் சொல்' என்று கேட்டான். அதைக்கேட்ட ஸஞ்சயனோ, கௌரவர்கள் கூடியிருக்கும் அந்த ஸபையில் மிகவும் நெடுமூச்சுவிட்டு அடிக்கடி சிந்திக்கிறவன்போல் இருந்தான். அப்பொழுது, காரணமின்றித் தெய்வாதீனமாக ஸஞ்சயனுக்கு மயக்கமுண்டாயிற்று. அப்பொழுது, விதுரர், ஸபையில் அரசர்களுடைய மத்தியில், 'ஓ! மஹாராஜரே! இந்த ஸஞ்சயன் மூர்ச்சையடைந்தவனாகிப் பூமியில்விழுந்துவிட்டான். நினைவுதப்பி அறிவு குறைந்தவனாகி ஒரு வார்த்தையையும் சொல்லவில்லை' என்று சொன்னான். திருதராஷ்டிரன், 'ஸஞ்சயன் மகாரதர்களான குந்திபுத்திரர்களைப் பார்த்தான். புருஷச்ரேஷ்டர்களான அவர்களாலே இவனுடைய மனம் மிகவும் நடுங்கும்படி செய்யப்பட்டதென்பது நிச்சயம்' என்று சொன்னான்.

ஓ! மஹாராஜரே! ஸஞ்சயன் அறிவை அடைந்து தேறுதலையும் அடைந்து ஸபையில் கௌரவர்களின் மத்தியில் திருதராஷ்டிரனைநோக்கி இந்த வார்த்தையைச் சொல்லலானான். 'ஓ! ராஜேந்திரரே! மத்ஸியராஜனுடைய கிருகத்தில் வஸிப்பதினாலுண்டான நிர்ப்பந்தத்தினாலே கிலேசத்தை அடையும்படி செய்யப்பட்டவர்களும் மகாரதர்களுமான குந்திபுத்திரர்களைப் பார்த்தேன். ஓ! மஹாராஜரே! எவர்களைக்கொண்டு பாண்டவர்கள் படைகளை ஆயத்தம் செய்தார்களோ அவர்களைக்கேளும். யுத்தத்தில் வீரனான திருஷ்டத்யும்னனாலே அவர்கள் உங்களைக்குறித்து ஸந்நாஹம் செய்தார்

கள். ஓ! மஹாராஜரே! தர்மாத்மாவும் கோபத்தினாலோ பயத்தினாலோ லோபத்தினாலோ தனத்தின் காரணத்தினாலோ (ஒன்றை ஸ்தாபிப்பதற்கு) ஹேதுவைச் சொல்லுவதற்காகவோ, ஒருபொழுதும் ஸத்யத்தை விடாதவரும் தர்மத்தைத் தரிக்கின்றவர்களில் சிறந்தவரும் தர்மத்தில் பிரமாணமாயிருப்பவருமான அந்த [1] அஜாதசத்துருவினால் பாண்டவர்கள் போருக்கு ஆயத்தம் செய்தார்கள். கைவன்மையில் பூமியில் ஒருவனும் நிகரில்லாதவனும் வில்லைத் தரித்து எல்லா அரசர்களையும் வசம்செய்தவனும் யுத்தத்தால் காசி அங்க மகத கலிங்க தேசங்களை ஜயித்தவனுமான பீமஸேனனால் பாண்டவர்கள் உங்களைக்குறித்து ஸந்நாஹஞ் செய்தார்கள். பூமியில் (தனது) வீர்யத்தினால் நான்கு பாண்டவர்களையும் அரக்கு மாளிகையிலிருந்தும் வெளிப்படுத்தி அவர்களுக்கு ஹிடிம்பனென்கிற ராக்ஷஸனிமித்தம் திட்டாக அமைந்தும், ஸிந்துராஜன் பாஞ்சாலியை இழுத்தபொழுது அவர்களுக்குத் திட்டாகியும், வாரணாவதத்தில் சேர்ந்து எரிக்கப்படுகின்ற எல்லாப் பாண்டவர்களையும் விடுவித்தவனும் குந்தீபுத்ரனுமான பீமஸேனனால் அவர்கள் உங்களைக்குறித்து ஸந்நாஹம் செய்தார்கள். திரௌபதிக்குப் பிரியத்தைச் செய்வதற்காக, மேடுபள்ளமானதும் பயங்கரமாயிருப்பதுமான கந்தமாதன பர்வதத்தில் பிரவேசித்துக் குரோதவசர்களென்கிற யக்ஷர்களைக் கொன்றவனும் கைகளில் பதினாயிரம் யானைகளுக்குள்ள ஸாரமான பலத்தையுடையவனுமான பீமஸேனனால் பாண்டவர்கள் உங்களைக்குறித்து ஸந்நாஹம் செய்தார்கள். முன் அக்கினியின் மகிழ்ச்சியின்பொருட்டுக் கோவிந்தரை ஸஹாயமாகக் கொண்டு, யுத்தம் செய்கின்ற இந்திரனைப் பராக்ரமத்தால் ஜயித்தவனும், (யுத்தத்தினால்) கயிலையங்கிரியில் வஸிப்பவரும் சூலத்தைக் கையிலுடையவரும் தேவர்களுக்குத்தேவரும் உமைக்குப்பதியுமான மகாதேவரை நேரில் (எதிர்த்து) யுத்தஞ்செய்து மகிழ்வித்தவனும், வில்லைத் தரித்தே எல்லா லோகபாலர்களையும் வசம்செய்தவனும், வீரனுமான விஜயனால் பாண்டவர்கள் உங்களைக்குறித்து யுத்த ஸந்நாஹஞ்செய்தார்கள். மிலேச்சக்கூட்டங்களுடன்கூடின மேற்குத்திக்கை வசம்செய்தவனும் விசித்திரமாக யுத்தம்செய்பவனுமான நகுலன் அந்த யுத்தத்தில் யுத்தம் செய்யப்போகிறவனாக நிச்சயம்செய்தான். ஓ! கௌரவ்யரே! அழகாயிருப்பவனும் வீரனும் பெரிய விற்பிடித்தவனும் மாத்ரியின்புத்திரனுமான அவனால் பாண்டவர்கள் உங்

[1] அஜாதசத்ருவின் பலத்தைக்கொண்டு என்பது கருத்து.

களைக்குறித்து யுத்தஸங்காஹம் செய்தார்கள். காசி அங்க மகத கலிங்கதேசங்களை யுத்தத்தால் ஜயித்த ஸஹதேவனால் பாண்டுபுத்திரர்கள் உங்களைக் குறித்து யுத்தஸங்காஹஞ் செய்தார்கள். அரசனே! இளையவனும் மனிதர்களில் வீரனும் சத்ருக்களுக்குச் சம்ஹாரத்தைச் செய்பவனுமான அந்தஸஹதேவனுடைய வீர்யத்திற்கு அச்வத்தாமா திருஷ்டகேது ருக்மி பிரத்யும்னன் ஆகிய நான்குமனிதர்களே உலகில் நிகராயிருப்பவர்கள். இவனுடன் உங்களுக்கு மிக்க கெடுதியைச்செய்யும் யுத்தம் நேரிடப்போகிறது. ஓ! பரதஸ்ரேஷ்டனே! முன் காசிராஜன் பெண்ணாயிருந்து மரித்தூங்கடப் பீஷ்மரைக் கொல்ல விருப்பங்கொண்டு தவம்புரிந்து பாஞ்சாலனுக்குப் புத்திரியாகிப் பிறகு தெய்வத்தால் மறுபடி புருஷனாகி ஸ்திரிபுருஷர்களுடைய குணதுணங்களையறிந்தவனும் புருஷஸ்ரேஷ்டனும் யுத்தத்தில் கெட்டமதங்கொண்டு கலிங்கர்களை எதிர்த்தவனும் அஸ்திரங்களைப்பயின்றவனும் பாஞ்சாலனுடைய புத்திரனுமான சிகண்டியினாலே பாண்டவர்கள் உங்களைக்குறித்து யுத்தஸங்காஹம் செய்தார்கள். பீஷ்மரைக் கொல்லவேண்டுமென்கிற விருப்பத்தினால் யக்ஷன் எவனைப் புருஷனாகச்செய்தானோ பெரிதான வில்லுடையவனும் பயங்கரனுமான அவனால் பாண்டவர்கள் உங்களைக் குறித்து யுத்தஸங்காஹம் செய்தார்கள். பெரிய வில்லுடையவர்களும் ராஜபுத்ரர்களும் பிராதாக்களும் கவசம்பூண்டவர்களும் சூரர்களுமான ஐந்துகேகயர்களால் அவர்கள் உங்களைக் குறித்து யுத்தஸங்காஹம் செய்தார்கள். நீண்டகைகளுடையவனும் வேகமான அஸ்திரமுடையவனும் தைரியசாலியும் தவறாத பராக்ரமமுடையவனும் விருஷ்ணிகளில் வீரனுமான யுயுதானனுடன் உங்களுக்கு யுத்தம் நேரிடப்போகிறது. ஸமயத்தில் மகாத்மாக்களான பாண்டவர்களுக்குச் சரணமாக ஆன விராடனுடன் யுத்தத்தில் உங்களுக்கு எதிர்ப்பு ஏற்படப்போகிறது. வாராணஸியிலிருப்பவனும் மகாரதனும் காசிதேசத்திற்குப்பதியுமான அரசன் அவர்களுக்காக யுத்தஞ்செய்யப்போகிறான். அவனால் அவர்கள் உங்களைக்குறித்து யுத்தஸங்காஹம் செய்தார்கள். சிறுவர்களும் போரில் (பிறரால்) வெல்லமுடியாதவர்களும் மஹாத்மாக்களும் ஸர்ப்பங்களுக்கு நிகரான ஸ்பரிசத்தையுடையவர்களுமான த்ரௌபதியின் புத்திரர்களாலே பாண்டவர்கள் உங்களைக் குறித்து யுத்தஸங்காஹம் செய்தார்கள். வீர்யத்தில் வாஸுதேவருக்கு நிகரும் அடக்கத்தில் யுதிஷ்டிரருக்குச் சமமுமான அபிமன்யுவினால் பாண்டவர்கள் உங்களைக் குறித்து யுத்தஸங்

நாஹம் செய்தார்கள். வீர்யத்தில் எதிரில்லாதவனும் பெரிதான புகழுடையவனும் போரில் (பிறரால்) தாங்கமுடியாதவனும் குரோத முள்ளவனும் சிசுபாலன்புத்திரனும் மகாரதனும் ஓர் அக்ஷௌஹிணி யால் சூழப்பட்டுப் பாண்டவர்களை அடுத்தவனும் சேதிதேசத்தரச னுமான திருஷ்டகேதுவினால் பாண்டவர்கள் உங்களைக்குறித்து யுத்தஸங்நாஹம் செய்தார்கள். எவர் தேவர்களுக்கு இந்திரன் போலப் பாண்டவர்களுக்குப் புகலிடமாயிருக்கின்றாரோ அந்த வாஸுதேவரால் பாண்டவர்கள் உங்களைக்குறித்து யுத்தஸங்நாஹம் செய்தார்கள். ஓ! பரதஸ்ரேஷ்டரே! பிரஸித்தர்களும் சேதிராஜ னுக்குப் பிராதாக்களுமான சரபன் கரகர்ஷன் இருவர்களாலும் அவர்கள் உங்களைக்குறித்து யுத்தஸங்நாஹம் செய்தார்கள். ஜரா ஸந்தன்புத்திரர்களும் தேர்யுத்தத்தில் வீரர்களுமான ஸஹதேவன் ஜயத்ஸேனன் இருவர்களும் பாண்டவர்கள் நிமித்தத்தில் உறுதியா யிருக்கின்றனர். பெரிய சேனையையுடையவனான த்ருபதனும், பெரி தான சேனையால் சூழப்பட்டவனும் சரீரத்தை வெறுத்தவனுமாகப் பாண்டவர்களின் பொருட்டு யுத்தம் செய்யப்போகிறவனாகி உறுதி யாயிருக்கின்றான். இவர்களையும், கிழைத்திக்கிலுள்ளவர்களும் வட திக்கிலுள்ளவர்களும் நூற்றுக்கணக்காயுள்ளவர்களுமான மற்றும் அனேக அரசர்களையும் அடுத்துத் தர்மராஜர் (யுத்தத்தின் பொருட்டு) உறுதியாக நிற்கிறார்' என்று சொன்னான்.

---

ஐம்பத்தோராவது அத்யாயம்.

## யாநஸந்திபர்வம். (தொடர்ச்சி.)

**(திருதராஷ்டிரன் பீமஸேனனுடைய பலபராக்கிரமங்களை ஸஞ்சயனிடம் சொல்லி வருந்தியது.)**

திருதராஷ்டிரன் சொல்லுகிறான்: 'உன்னால் சொல்லப்பட்ட இவர்களெல்லோரும் மிகுந்த ஊக்கத்தையுடையவர்களே. இவர்க ளெல்லாருமே சேர்ந்து ஒரு பாகம்; பீமன் ஒரு பாகம். அப்பா! கோபத்தையடைந்தவனும் பொறுதவனுமான பீமஸேனனிடமி ருந்தே, பெரிதானகலைமானுக்குப் புலியினிடமிருந்து உண்டாவது போல, எனக்கு அடிக்கடி பெரிய பயம் உண்டாகிறது. அப்பா! சிங்கத் தினிடமிருந்து மற்றமிருகம் பயப்படுவதுபோல விருகோதரனிடமி ருந்தும் பயந்தவனாகி எல்லாராத்திரிகளும் தீர்க்கமாகவும் உஷ்ணமாக

வும் மூச்சுவிட்டுக்கொண்டு தூங்காமலிருக்கிறேன். பெரிய கைகளை யுடையவனும் இந்திரனுக்கு நிகரான பலமுடையவனுமான அவ னுக்கு எதிராக இந்தச்சேனையில் அவனை யுத்தத்தில் தாங்குபவ னைப் பார்க்கவில்லை. பொறுதவனும், உறுதியான வைரமுடையவ னும், விளையாட்டுச்சிரிப்பில்லாதவனும், மதவெறியுடையவனும், குறுக் குப் பார்வையுடையவனும், பெரிய சப்தமுடையவனும், மிக்க வேக முடையவனும், அதிக உத்ஸாகமுடையவனும், நீண்டகைகளையுடைய வனும், மிக்கவன்மையுடையவனும், குந்திபுத்ரனுமான பாண்டவன், யுத்தத்தால், மூடர்களான என்புத்திரர்களுடைய நாசத்தைச் செய் யப்போகிறான். காலையான விருகோதரன், பெரிய பிடிவாதத்திற்கு வசப்பட்ட கௌரவர்களுடைய போரில் அந்தகன் தண்டத்தைக் கையில்தரிப்பதுபோலக் கதையைக் கையில் தரித்திருப்பான். எட் டுப்பட்டங்களையுடையதும் இரும்பாற் செய்யப்பட்டதும் கோர மானதும் பொன்னுபரணங்களையுடையதுமான அந்தக்கதையை உயரத்தூக்கப்பட்ட [1] ப்ரம்மதண்டத்தைப்போல நான் மனத்தால் பார்க்கிறேன். பலமுள்ள சிங்கமானது மிருகக்கூட்டங்களில் சஞ்சரிப் பதுபோலப் பீமனைவன் என்சேனைகளில் ஸஞ்சரிக்கப்போகிறான். கொடிய பராக்ரமமுடையவனும் அதிகமாகப் புஜிக்கிறவனும் சிறுவயதி லேயே விரோதமாய் நடப்பவனும் எப்பொழுதும் படபடத்தவனு மான அவன் என்புத்திரர்கள் [2] எல்லாருக்குமே ஒருவன். துரியோ தனன்முதலான என்புத்திரர்கள் சிறுவயதிலேயே அவனுடன் போர் செய்து யானையால்அடிக்கப்படுவதுபோல் அடிக்கப்பட்டார்களே! என்னுடைய புத்திரர்கள் எந்நாளுமே அவனுடைய வீர்யத்தினால் மிக்க கிலேசத்தை அடைந்தார்கள். பயங்கரமான பராக்கிரமமுடைய அந்தப்பீமனே பேதத்திற்குக் காரணம். பீமனை யுத்தத்தில் கோப மிகுந்தவனும் யானைகுதிரைமனிதர்களின் கூட்டங்களை விழுங்குகிற வனுமாக எதிரில் பார்க்கிறவன்போலிருக்கிறேன். அஸ்திரத்தில் துரோணருக்கும் அர்ஜுனனுக்கும் ஸமானனும் வேகத்தில் வாயுவுக் குச்சமானனும் கோபத்தில் ருத்ரருக்குச்சமானனும் பயங்கரமாயி ருப்பவனும் சூரனும் பொறுமையுள்ளவனுமான அவனை யுத்தத் தில் எவன் கொல்லுவான்? ஸஞ்சய! எனக்குச் சொல்லு. பகை வர்களைக் கொல்லுகிறவனும் முயற்சியுள்ளவனும் மானியுமான அவன் அப்பொழுதே என்புத்திரர்களெல்லாரையும் கொல்லாம லிருந்ததையே அதிகலாபமாக நான் நினைக்கிறேன். முன்

1 ப்ராம்மண சாபம். 2 'எல்லாருக்குமே போதுமானவன்' என்பது கருத்து.

காலத்தில் பயங்கரமான பலமுடையவர்களான யக்ஷர்களையும் ராக்ஷஸர்களையும் கொன்றவனை அவனுடைய வேகத்தை யுத்தத்தில் மனிதன் எப்படி தாங்கப்போகிறான்? ஸஞ்சய! அவன் பால்யத்திற்கூட ஒருகாலும் என்வசத்திலிருந்ததில்லை. இப்பொழுது என்னுடைய துஷ்டபுத்திரர்களால் கிலேசப்படுத்தப்பட்ட அந்தப் பாண்டவன் என் வசமாகானென்று சொல்லவும் வேண்டுமா? மிக்க கடுஞ்சொல் சொல்லுகிறவனும் கோபமுடையவனுமான அவன் பங்கப்பட்டாலும் படுவான்; வணங்கமாட்டான். குறுக்காகப்பார்க்கிறவனும் [1]சேர்க்கப்பட்ட புருவங்களையுடையவனுமான விருகோதரன் எப்படி தணிவை அடைவான்? முன் இளமையிலேயே, 'பாண்டவன் ரூபத்தாலும் வீரியத்தாலும் சூரன்; சிவந்தநிறமுடையவன்; தனக்கு நிகரான பலசாலியற்றவன்; அளவில் பனைமரம்போல உயர்ந்தவன்; அர்ஜுனனைக்காட்டிலும் ஓர் ஒட்டை உயரம் அதிகமாயுள்ளவன். மத்தியம பாண்டவனை அவன் வேகத்தால் குதிரைகளை மிஞ்சினவன்; பலத்தால் யானைகளை மிஞ்சினவன்; சொற்கள் விளங்காதபடி பேசுகிறவன்; தேன்நிறமான கண்களையுடையவன்; பலசாலி' என்று வியாஸர்முகமாக நான் உண்மையாக நன்கு கேட்டிருக்கிறேன். கோபத்தையடைந்தவனும் பயங்கரனும் குரூரமான பராக்ரமத்தையுடையவனுமான அவன் யுத்தத்தில் இருப்புலக்கையால் தேர்களையும் யானைகளையும் மனிதர்களையும் குதிரைகளையும் கொல்லப்போகிறான். அப்பா! பொறுமையுடையவனும் எப்பொழுதும் படபடத்தவனும் அடிக்கிறவர்களில் சிறந்தவனுமான பீமன் முன் துன்பங்களைச் செய்யப்பட்டு என்னால் அவமதிக்கப்பட்டான். கோணலில்லாததும் இரும்பால் செய்யப்பட்டதும் பருத்ததும் புறங்கள் அழகியதும் பொன்னலங்காரமுடையதும் (ஓர் அடிக்கு) நூறுபேர்களைக் கொல்வதும் பெரியசப்தமுடையதுமான கதையை என்புத்திரர்கள் எப்படி தாங்கப்போகிறார்கள்? ஐயா! கரையற்றதும் ஓடமற்றதும் ஆழமானதும் சரங்களின் (= அம்புகளின் = ஜலத்தின்) அடியுள்ளதும் செல்லமுடியாததுமான பீமஸேனமயமாயிருக்கிற ஸமுத்திரத்தை மூடர்களான என்புத்திரர்கள் தாண்ட விருப்பமுள்ளவர்களாயிருக்கின்றனர். பாலர்கள்போன்றவர்களும் பண்டிதரென்கிற கர்வமுள்ளவர்களுமான (இவர்கள்) கதறுகின்றவனை என்னுடைய (வார்த்தையைக்) கேட்கிறதில்லை. தேனைப்

1 'கோபம் வரும்பொழுது புருவங்களிரண்டும் நெற்றியில் எறி வளைந்து சேர்ந்துவிடும்' என்பது.

பார்க்கிறவர்கள், (விழுந்தால் ஏறமுடியாத) விஷம்மான பள்ளத்தை நினைக்கிறதில்லை. ஐயா! தெய்வத்தால் ஏவப்பட்டவர்களாகி நிச்சயமாக யுத்தத்தில் சிங்கத்துடன் பெரியமான்கள் எதிர்ப்பதுபோல மானிடவேஷங்கொண்ட மிருத்யுவுடன் எதிர்க்கப்போகின்ற என் புத்திரர்கள், உறியில்வைக்கப்பட்டதும் நான்கு முழமுள்ளதும் ஆறு பட்டையுள்ளதும் அளவற்ற பலமுடையதும் ஏவப்பட்டதும் துயருறும்படி தாக்குவதுமான கதையை எவ்விதம் தாங்கப்போகின்றனர்? கதையைச் சுழற்றுகின்றவனும் யானைமத்தகங்களையுடைக்கின்றவனும் கடைவாய்களை நக்குகின்றவனும் அடிக்கடி (மூச்சுப்) புகையை விடுகின்றவனும் யானைகளைக்குறித்துப் பாய்கின்றவனும் பயங்கரமான சப்தங்களைச் செய்கின்றவனும் மதங்கொண்டு கர்ஜிக்கின்ற யானைகளைக்குறித்து மாறிப்பாய்கின்றவனும் தேர்களின் வழிகளில் புகுந்து மேலானவர்களைக் குறிவைத்து அடிக்கிறவனுமான அவனிடமிருந்தும், கொழுந்துவிட்டெரியும் அக்னியினிடமிருந்து விடுபடாததுபோல என்னைச் சேர்ந்தவர்கள் விடுபடவாபோகின்றனர்? பெரிய கைகளையுடைய அவன், வழியைச்செய்துகொண்டு என்சேனையை ஓட்டுகிறவனும் நடனம்செய்கிறவன் போன்றவனும் கதாபாணியுமாகி யுகமுடிவைக் காண்பிக்கப்போகிறான். விருகோதரனை அவன், யுத்தத்தில், புஷ்பித்தமரங்களை முடிக்கின்ற மதயானைபோல, என் புத்திரர்களுடைய சேனையில் பிரவேசிக்கப்போகிறான். ஸஞ்சய! ஆண்மையிற்சிறந்த அவன், தேர்களை வீரர்களில்லாதவைகளும் ஸாரதியற்றவைகளும் குதிரைகளில்லாதவைகளும் த்வஜமற்றவைகளுமாகச்செய்கிறவனும், தேராளிகளையும் குதிரைக்காரர்களையும் கொல்லுகிறவனுமாய், ஜலமுள்ள கரைப்பிரதேசத்தில் முளைத்த பலவகைமரங்களைக் கங்கையின் வேகம் முறிப்பதுபோல, யுத்தத்தில் என் புத்திரர்களுடைய சேனையை முறிக்கப்போகின்றான். ஸஞ்சய! முன்காலத்தில் வாஸுதேவரை ஸகாயமாகவுடைய எந்தப்பீமஸேனன் அந்தப்புரத்தில் பிரவேசித்து மிக்கவீர்யமுடைய ஜராஸந்தனென்கிற அரசனை விழத்தள்ளினானோ அவனிடமிருந்துமுண்டான பயத்தால் பீடிக்கப்பட்டு என் புத்திரர்களும் ப்ருத்யர்களும் அரசர்களுமே நிச்சயமாக வதத்தையடையப்போகின்றனர். புத்திமானும் மாகதர்களுக்கு அரசனும் பலவானுமான ஜராஸந்தனால் இந்தப்பூமிதேவியானவள் முழுமையும் வசஞ்செய்யப்பட்டுத் துன்புறுத்தப்பட்டாள். பீஷ்மருடைய பிரதாபத்தால் கௌரவர்களும் புத்தியின் தந்திரத்தால் அந்தகர்களும் விருஷ்ணி

களும் அந்த ஜராஸந்தன்வசத்தை அடையாதவர்களாயிருந்தது, கேவலம் தெய்வபலமே. அப்படிப்பட்டவனை வேகமுடையவனும் புஜபலமுள்ளவனும் வீரனுமான பாண்டுபுத்திரன் ஆயுதமில்லாதவனுய்ச் சென்று கொன்றதைக்காட்டிலும் மேற்பட்டது என்ன இருக்கிறது? ஸஞ்சய! அவன், ஸர்ப்பமானது நெடுநாளாகப் பொருந்தியுள்ள விஷத்தைச் செலுத்துவதுபோல யுத்தத்தில் என் புத்திரர்களிடத்தில் பலத்தைச் செலுத்தப்போகிறான். தேவர்களில் சிறந்தவனை மஹேந்திரன் வஜ்ராயுதத்தால் அஸுரர்களை நொறுக்கியது போலக் கதாபாணியான பீமஸேனன் என் புத்திரர்களை நொறுக்கப் போகின்றான். பீமஸேனன் பிறரால் தாங்கமுடியாதவனும் தடுக்கமுடியாதவனும் மிக்க வேகத்தையும் பராக்கிரமத்தையுமுடையவனும் மிகவும் சிவந்த கண்களையுடையவனுமாக வருகிறதைப் பார்க்கிறவன் போலிருக்கிறேன். கதையும் வில்லும் தேரும் கவசமுமில்லாமல் கைகளாலே யுத்தம் செய்தாலுங்கூட அவனுக்கு முன்னே எந்த மனிதன் நிற்பான்? நான் எப்படி புத்திமானுன அவனுடைய வீர்யத்தை அறிந்தவனே அப்படி பீஷ்மரும் துரோணரும் சரத்வானுடைய புத்ரரான கிருபரென்கிற இந்த வேதியரும் அறிகின்றார்கள். ஆரியர்களின் விரதத்தை அறிகின்றவர்களான புருஷச்ரேஷ்டர்கள் யுத்தத்தில் முடிவைச்செய்ய விருப்பமுள்ளவர்களாய் என் புத்திரர்களுடைய சேனைகளின் முன்பாகங்களில் நிற்பார்கள். விசேஷமாக அந்தப் பாண்டவர்களுக்கு ஜயத்தைப் பார்க்கிறவனுயிருந்தும் புத்திரர்களை நான் அடக்காமலிருக்கிறபடியால், மனிதனுடைய (முயற்சியைக் காட்டிலும்) எல்லா விஷயத்திலும் தெய்வமானது பலமுள்ளது. பெரிய வில்லுடையவர்களான அவர்கள் புராதனமான ஸ்வர்க்க மார்க்கத்தை அடைந்தவர்களும் பூமியிலுள்ள புகழைக் காக்கிறவர்களுமாகி நெருக்கமான யுத்தத்தில் பிராணனை விடப்போகிறார்கள். ஐயா! என் புத்திரர்கள் எப்படி இவர்களுள் பீஷ்மருக்குப்பௌத்ரர்களும் துரோணருக்கும் கிருபருக்கும் சிஷ்யர்களுமாயிருக்கின்றனரோ அப்படியே இவர்களுக்குப்பாண்டவர்களுமாவர். ஸஞ்சய! நம்முடைய அடுத்தலும் சிறிது கொடையும் பூஜையும் ஆகிய இவைகளுக்குக் கைம்மாற்றை முதியவர்களான மூவரும் ஆரியர்களாயிருப்பதால் செய்வார்கள். சஸ்திரத்தையெடுத்தவனும் க்ஷத்ரியஜாதியின் தர்மத்தை அடையவிருப்பமுள்ளவனுமான க்ஷத்ரியனுக்கு யுத்தத்தில் மரணத்தைச் சிறந்ததும் உத்தமமுமாகவே சொல்லுகின்றனர். ஆகையால், நான் பாண்டவர்களுடன் யுத்தம்செய்ய விரும்பினவர்களான எல்லாரையும்பற்

றித் துக்கிக்கிறேன். ஆதியில் விதுரனால் கதறிச் சொல்லப்பட்ட அத்தகைய இந்தப்பயமானது வந்துவிட்டது. ஸஞ்சய! ஞானத்தைத் துக்கத்தின் நிவிருத்தியைச் செய்வதாக நினைக்கவில்லை. மிக்க பலமுள்ளதான இந்தத் துக்கமானது ஞானத்தைக்கூடக் கெடுக்கிறதாகிறது. (பற்றிலிருந்து) விடுபட்டவர்களான முனிவர்களும் உலகம் நடைபெறுதலை நோக்குகின்றவர்களாகி ஸுகங்களால் ஸுகத்தை அடைந்தவர்களாகவும் துக்கத்தால் துக்கத்தையடைந்தவர்களாகவும் ஆகின்றனர். புத்திரர்களிடத்திலும் ராஜ்யத்திலும் தாரங்களிடத்திலும் பேரர்களிடத்திலும் உறவினர்களிடத்திலும் அங்கங்கே ஆயிரம் விதமாக மோகத்தை அடைந்தவன் (ஸுகியும் துக்கியும் ஆகிறானென்று) சொல்லவும் வேண்டுமா? பெரிதான இந்த ஸந்தேகத்தில் இனி எனக்கு எது செய்வது உசிதம்? ஆலோசிக்கையில், கௌரவர்களுக்கு விநாசத்தையே காண்கிறேன். கௌரவர்களுக்குப் பெரிதான பயமானது சூதின்வழியாகத் தோன்றுகிறது. ஐஸ்வரியத்தை விரும்பினவனான மந்தனாலே லோபத்தால் இந்தப் பாவமானது செய்யப்பட்டது. இது, போய்க்கொண்டேயிருக்கிற காலத்தின் விபரீதம். இது சக்கரத்தில் வட்டகைபோலப் பற்றியிருக்கிறது. இதற்குப் பயந்து ஓடமுடியாதென்று நினைக்கிறேன். ஸஞ்சய! என்ன செய்வேன்? எவ்விதம் செய்வேன்? எங்கே போவேன்? மந்தர்களான இந்தக் கௌரவர்கள் காலத்தின் வசத்தை அடைந்தவர்களாகி நசிக்கப் போகின்றார்கள். அப்பா! அப்பொழுது நான் நூறு புத்ரர்களும் மடிந்து அவசனாக ஸ்திரீகளுடைய (அழுகைக்) குரலைக் கேட்கப் போகின்றேன். என்னை மரணமானது எப்படி அணுகும்? எப்படி கோடைக் காலத்தில் நன்கு மூண்டெரிகின்ற கனலானது காற்றினால் தூண்டப்பட்டுத் துரும்புக்குவியலை எரிக்குமோ, அப்படியே, கதாபாணியான பாண்டவன் அர்ஜுனனுடன்கூடி என்னைச் சேர்ந்தவர்களைக் கொல்லப்போகின்றான்.

---

## ஐம்பத்திரண்டாவது அத்யாயம்.

## யாநஸந்திபர்வம். (தொடர்ச்சி.)

(திருதராஷ்டிரன் அர்ஜுனனது பலபராக்ரமங்களைச் சொல்லி வருந்தியது.)

ஒருபொழுதும் பொய்வார்த்தைகளை எவன்சொல்ல நாம் கேட்டதில்லையோ, எவனுக்குத் தனஞ்சயன் போர்வீரனோ, அவனை மூன்று உலகமும் சேர்ந்ததாகும். எப்பொழுதும் ஆலோசித்தும், காண்டீவமென்கிற வில்லையுடைய அவனை யுத்தத்தில் தேருடன் எதிர்த்துச் செல்லுகிறவனை நான் காணவேயில்லை. மார்பைப்பிளக்கின்ற கர்ணி, நாளீகம் என்கிற பாணங்களை இறைக்கிறவனான அர்ஜுனனைப் போரில் நேராக எதிர்த்துச் செல்லுகிறவன் ஒருவனுமில்லை. வீரர்களும் புருஷச்ரேஷ்டர்களும் அஸ்திரங்களைப் பயின்றவர்களும் பலவான்களில் சிறந்தவர்களும் சண்டைகளில் தோல்வியை அடையாதவர்களுமான துரோணரும் கர்ணனும் எதிர்ப்பார்களேயானால் (ஒருவாறு) உலகத்தில் பெரிதான ஸந்தேகமுண்டாகலாம். எனக்கோ விஜயமிருக்கிறதில்லை. பீமன் முதலியவர்களிடம் கர்ணனானவன் தயையுள்ளவனும் அஜாக்ரதையுடையவனுமாயிருப்பவன். ஆசாரியர் முதுமையடைந்தவரும் குருவுமாயிருப்பவர். அர்ஜுனன் ஸமர்த்தனும் பலவானும் திடமான வில்லுடையவனும் ச்ரமத்தைவென்றவனுமாயிருப்பவன். யுத்தமானது மிகவும் நெருக்கமாக ஏற்படும். ஒருவருக்கும் தோல்வி இராது. எல்லாரும் அஸ்திரங்களை அறிந்தவர்களும் சூரர்களுமாயிருப்பவர்கள். எல்லாரும் பெரும்புகழை அடைந்தவர்கள். தேவஸம்பத்தை முழுமையும் விட்டாலும் விடுவார்கள்; வெற்றியை விடார்கள். அவர்களுடைய வதத்திலாவது சாந்தி ஏற்படும்; அர்ஜுனனுடைய வதத்திலும் ஏற்படும்; நிச்சயம். அர்ஜுனனைக் கொல்லுகிறவனோ இல்லை. அவனை வெல்லுகிறவனுமில்லை. மந்தர்களைப்பற்றி உண்டான அவனுடைய கோபமானது எப்படி ஆறுதலையடையும்? மற்றவர்களும் அஸ்திரங்களை அறிகின்றார்கள். (அவர்கள்) ஜயிக்கப்படவும் செய்கின்றனர்; ஜயிக்கவும் செய்கின்றனர். அர்ஜுனனுக்கோ மாறாத ஜயமே கேட்கப்படுகின்றது. [1] முப்பத்துமூன்று தேவர்களைச் (சண்டைக்கு) அழைத்துக் காண்டவ

[1] 'முப்பத்துமூன்று வருஷங்களுக்குமுன்' என்பது பழையஉரை.

வனத்தில் அக்கினியைத் திருப்தியடையச்செய்தான்; எல்லாத் தேவர்களையும் ஜயிக்கவும் செய்தான். இவனுக்குத் தோல்வியை அறிகிறோமில்லை. அப்பா! எவனுக்கு யுத்தத்தில் சீலத்தாலும் நடையாலும் ஸமமான கிருஷ்ணன் ஸாரதியோ அவனுக்கு, இந்திரனுக்கு எப்படி வெற்றி உறுதியோ அப்படி வெற்றி உறுதியானது. ஒரு தேரில் ஸன்னத்தர்களான கிருஷ்ணார்ஜுனர்களையும் நாணேற்றின காண்டீவமென்கிற வில்லையும் ஒரேகாலத்திற்சேர்ந்த மூன்று சுடர்களாகக் கேட்கிறோம். நமக்கு அப்படிப்பட்ட வில்லுமில்லை; போர் வீரனுமில்லை; பாகனுமில்லை. அதனைத் துரியோதனன்வசத்தை யடைந்த மூடர்கள் அறியவில்லை. ஸஞ்சய! மூள்கிறதான இடியானது தலையில்விழுந்து மீதிவைக்கும். கிரீடியால் இறைக்கப்பட்ட சரங்களோ மீதியைச்செய்யா. தவிரவும், தனஞ்சயன் (பாணங்களை) இறைக்கிறவன்போலவும் அடிக்கிறவன்போலவும் சரமாரிகளால் சரீரங்களிலிருந்தும் சிரங்களை (அறுத்துத் தூக்குகிறவன்) போலவும் விளங்குகிறான். இன்னமும் காண்டீவத்தினிடமிருந்தும் கிளம்பின பாணமயமான அக்னியானது எங்கும்பற்றிக்கொண்டு யுத்தத்தில் என்புத்திரர்களுடைய சேனையை எரிக்கும். இன்னமும் பார்த்தர்களுடைய அந்தச்சேனையானது ஸவ்யஸாசியினுடைய தேரின் ஒலியினால் உண்டான பயத்தால் பீடை அடைந்ததும் பலவிதமாக நடுக்கமுற்றதுமாக எனக்குத் தோன்றுகின்றது. பெரிதான ஜ்வாலையுடையதும் காற்றினால் மூட்டப்பட்டதுமான பெரியதீயானது எங்கும் பரவிக் காய்ந்த புற்குவியலை எரிப்பதுபோலத் தனஞ்சயன் என்னைச் சேர்ந்தவர்களை எரிக்கப்போகிறான். யுத்தத்தில், [1] ஆததாயியான கிரீடி கூர்மையான அப்படிப்பட்ட பாணக்குவியல்களை எப்பொழுது கக்குகிறவனாவனோ அப்பொழுது பிரம்மாவினால் படைக்கப்பட்டு எல்லாவற்றையும் கவர்கிறவனான அந்தகன்போல் வெல்லமுடியாதவனாவான். யுத்தத்தில் எங்கும் அடிக்கடி நான் அந்தக் கௌரவர்களுடைய அப்படிப்பட்ட பலவித (துன்பங்களின்) வகைகளைக் கேட்கும்படி யுத்தமுகத்தில் பாரதர்களை இந்த நாசமானது வந்தடைகின்றதல்லவா?

---

1 அவனிடத்திலுள்ள வெறுப்பினால் இங்ஙனம் கூறினான்.

## ஐம்பத்துமூன்றாவது அத்யாயம்.

## யாநஸந்திபர்வம். (தொடர்ச்சி.)

(திருதராஷ்டிரன் பாண்டவர்களின் துணைவலிமை முதலியவற்றைச் சொல்லி ஸமாதானத்துக்கு முயல்வதாகச் சொல்லியது.)

எப்படி பாண்டவர்களெல்லாரும் பராக்ரமமுள்ளவர்களும் ஜயத்தில் விருப்பமுள்ளவர்களுமாகவே இருக்கிறார்களோ அப்படியே அவர்களை அடைந்தவர்களும், சரீரத்தை வெறுத்தவர்களும் ஜயத்தில் (மனத்தை) வைத்தவர்களுமாயிருக்கிறார்கள். குழந்தாய்! நீதானே எனக்குப் பகைவர்களான பாஞ்சாலர் கேகயர் மாத்ஸியர் மாகதர்களான அரசர்களைப் பராக்ரமமுடையவர்களென்று சொன்னாய்? எவர் விரும்பினால் இந்திரனுடன்கூடின இவ்வுலகங்களை வசப்படுத்துவரோ உலகத்தைப் படைக்கின்ற அந்தக் கண்ணபிரான் பாண்டவர்களுடைய வெற்றியில் உறுதியுள்ளவராயிருக்கிறார். அர்ஜுனனிடமிருந்தும் முழு (அஸ்திர) வித்தையையும் விரைவாக அடைந்தவனும் சினியின் குலத்தில் பிறந்தவனுமான ஸாத்யகி விதைகளை விதைப்பதுபோலப் போரில் சரங்களை இறைக்கிறவனாவான். பாஞ்சாலன் புத்திரனும் குரூரமான (போர்ச்) செயலையுடையவனும் மகாரதனும் சிறந்த அஸ்திரங்களை அறிகின்றவனுமான திருஷ்டத்யும்னனும் என் சேனைகளிடத்தில் யுத்தத்தைச் செய்யப்போகிறான். அப்பா! யுதிஷ்டிரனுடைய கோபத்திலும் அர்ஜுனனுடைய பராக்ரமத்திலும் நகுலஸஹதேவர்களிடத்திலும் பீமஸேனனிடத்திலும் எனக்குப் பயமுண்டாகிறது. மனிதஸ்ரேஷ்டர்களாலே மத்தியில் விரிக்கப்பட்டதும் அமானுஷமுமான (அஸ்திர) வலையை என்படைகள் தாண்டப்போகிறதில்லை. ஸஞ்சய! அதற்காகக் கதறுகிறேன். பாண்டுபுத்திரனானவன் அழகிய தோற்றமுள்ளவனும் நல்லமனமுடையவனும் வீரலக்ஷ்மியையுடையவனும் பிரம்மவர்ச்சஸுடையவனும் மேதாவியும் நன்கு பயிற்சிசெய்யப்பட்ட அறிவுள்ளவனும் தர்மசித்தமுடையவனுமாயிருப்பவன்; மித்ரர்களாலும் மந்திரிகளாலும் நிறைந்தவன்; யுத்தத்தை நடத்துகின்ற ஸகோதரர்களோடு கூடினவன்; வீரர்களும் மகாரதர்களுமான மாமன்களோடும் சேர்ந்தவன். புருஷஸ்ரேஷ்டனான பாண்டவன், தைரியத்தோடும் ரகஸியங்களை வெளியிடாமையோடும் கூடினவன்; குரூரத்தன்மையில்லாதவனும் கொடையில்சிறந்தவனும் அகாரியத்தில் லஜ்ஜை

யுள்ளவனும் தவறாத பராக்ரமத்தையுடையவனும் மிக்க கேள்வியறி வுள்ளவனும் கல்வியறிவுள்ளவனும் பெரியோர்களை அடுக்கிறவனும் புலன்களைவென்றவனுமாயிருப்பவன். எல்லாக்குணங்களோடுங் கூடி யவனும் நெருங்கமுடியாதவனுமான பாண்டவனென்கிற அக்னியைக் குறித்து, விருத்தியடைந்ததும் எரிக்கின்றதுமான அக்னியை நோக்கி விளக்குப்பூச்சி விழுவதுபோல, புத்தியற்று மரிக்கவிருப்ப முள்ளவனாக எந்தமூடன் விழுவான்? 1 சரீரத்தில் தடுக்கப்பட்ட அக்னியும் என்னால் கபடமாக உபசரிக்கப்பட்டவனுமான அரசன் யுத்தத்தினால் மந்தர்களான என் புத்திரர்களுடைய நாசத்தைச் செய்யப்போகிறான். அவர்களுடன் யுத்தஞ்செய்யாமலிருப்பதை நல்லதாக நினைக்கிறேன். கௌரவர்களே! அதை அறியுங்கள். யுத் தத்தில் குலம் முழுமைக்கும் நாசமானது ஏற்படும். இதுதான் என்மனத்திற்குச் சமனத்தைச் செய்கிறதென்பது என்னுடைய மேலான நிச்சயம். யுத்தமில்லாமையானது உங்களுக்கு இஷ்டமே யானால் வைராசாந்தியின்பொருட்டு நாம் முயற்சிசெய்கிறோம். நாம் துன்பத்தையடைவதை யுதிஷ்டிரன் உபேக்ஷை செய்யமாட்டான். என்னையே (கலக) காரணமாகக் குறித்து அதர்மநிமித்தமாய் நிந் திக்கிறானல்லவா?' என்று சொன்னான்.

---

## ஐம்பத்துநான்காவது அத்யாயம்.

## யாநஸந்திபர்வம். (தொடர்ச்சி.)

(ஸஞ்சயன் பாண்டவர்களிடம் வெற்றிக்கு வேண்டியவை யெல்லாம் அமைந்திருப்பதையும் திருதராஷ்டிரன் அவர்களுக்குச்செய்த அபகாரத்தையும் சொல்லி அவனை நிந்தித்தது.)

ஸஞ்சயன், 'ஓ! மஹாராஜரே! பாரதரே! நீர் சொல்லியபடி இது உண்மையே. யுத்தத்தில் காண்டீவத்தால் க்ஷத்திரியஜாதிக்கு விநாசம் காணப்படுகிறது. ஸவ்யஸாசியின் உண்மையை அறிந்த நீர் புத்திரனுடையவசத்தை அடைவீரென்பதையோ எப்பொழுதும் தீரரான உம்மிடத்தில் நினைக்கவில்லை. மஹாராஜரே! அடிக்கடி அப ராதம்செய்த உமக்கு இது காலமில்லை. பரதஸ்ரேஷ்டரே! உம்மாலே யன்றோ முதலில் பாண்டவர்கள் வஞ்சிக்கப்பட்டார்கள்? பிதாவினு

1 'மூர்த்திகரித்த அக்னி' என்பது வேறு பாடம்.

லும் மேலானவனுலும் நண்பனுலும் நன்கு ஒருவழிப்பட்டசித்தமு டையவனுலும் நலமே செய்யத்தக்கது. துரோகம்செய்பவன் குருவாகச் சொல்லப்படவில்லை. மஹாராஜரே! 'சூதாடும் சமயத்தில் இது ஜயிக்கப்பட்டது; இது அடையப்பட்டது' என்று (பாண்டவர்கள் ஜயிக்கப்பட்டதைக்) கேட்டு, உமது புத்திரனுன துரியோதனன் போல மகிழ்ச்சியடைந்தீர். முன்னமே கடுஞ்சொல் சொல்லப்பட்ட பாண்டவர்களை உபேக்ஷித்தீர். முழுராஜ்யத்தையும் ஜயிக்கிருர்களென் றெண்ணிப் பெரியகெடுதலைப்பார்த்திரில்லை. மஹாராஜரே! [1] பித்ரு ஸம்பந்தமான ராஜ்யம், காடுகளோடுகூடிய அந்தக் குருதேசமாத் திரமே. பிறகு, வீரர்களான பாண்டவர்களால் ஜயிக்கப்பட்ட பூமி முழுமையையும் அடைந்தீர். ஓ! ராஜஸ்ரேஷ்டரே! பாண்டவர்களாலே புஜபலத்தால் ஸம்பாதிக்கப்பட்ட பூமியானது உம்மிடம் ஒப்புவிக்கப்பட்டது. 'என்னுல் இது செய்யப்பட்டது' என்றே நினைக்கிறீர். ஓ! ராஜஸ்ரேஷ்டரே! கந்தர்வராஜனுல் கவரப்பட்டவர்களும் ஓடமில்லாது ஜலத்தில் [2]முழுகினவர்களுமான உமது புத்திரர்களை மறுபடியும் பார்த்தன் திருப்பினுன். அரசரே! பாண்டவர்கள் சூதாட்டத்தில் அவமதிக்கப்பட்டவர்களும் வனத்திற்சென்றவர்களுமாயிருக்கையில், உமது குமாரன்போல் அடிக்கடி கர்வம் கொள்ளுகிறீராகையால், அர்ஜுனன் கூரியவைகளும் பலமுமான பாணக்குவியல்களைப் பொழிகையில் கடல்களும் வற்றப்போகின்றன; தசையுடம்போடு பிறந்தவர்கள் நசிப்பார்களென்று சொல்லவும்வேண்டுமா? பால்குனன் போர்செய்பவர்களில் சிறந்தவன்; காண்டீவம் விற்களில் சிறந்தது; கேசவர் (தேவர் மனிதர் முதலான) எல்லாப் பொருள்களுக்கும் சிறந்தவர்; சக்ரம் ஆயுதங்களில் சிறந்தது; விளங்குகின்ற வானரக் கொடியானது கொடிகளிற் சிறந்தது. அரசரே! இவ்விதமான இவர்களைப் போரில் எந்தத்தேரானது சேர்த்துச் சுமக்கின்றதோ அந்தத் தேரானது கிளம்பினதான காலசக்கரம்போல நம்மை நசிக்கும்படி செய்யப்போகின்றது. ஓ! பரதஸ்ரேஷ்டரே! அரசரே! எவருக்குப் பீமனும் அர்ஜுனனும் போர்வீரர்களோ, இப்பொழுது பூமிமுழுமையும் அவருடையதே. ஓ! ராஜஸ்ரேஷ்டரே! அவரே அரசர். அந்தப் படி, பீமஸேனனுல் பெரும்பாலும் கொல்லப்பட்டதும் முழுகுகின்றதுமான உம்முடைய சேனையைத் துரியோதனன்முதலான கௌரவர்

1 'முன்னமிருந்த ராஜ்யம் காடடர்ந்த சிறு தேசமே. பிறகு, பாண்டவர்களால் பெருகியது' என்பது கருத்து.

2 'முழுகினவர்களுக்குச் சமமாயுள்ளவர்கள்' என்பது கருத்து.

க்கள் பார்த்துவிட்டு, நாசத்தை அடையப்போகின்றார்கள். ஓ! மஹாராஜரே! பீமனுக்கும் அர்ஜுனனுக்கும் பயந்தவர்களான உம்முடைய புத்ரர்களும் (அவர்களை) அனுஸரிக்கின்ற அரசர்களும் வெற்றியை அடையப்போகிறதில்லை. இப்பொழுது, மத்ஸ்யர்களும் பாஞ்சாலர்களும் கேகயர்களும் ஸால்வர்களும் சூரஸேனர்களும் உம்மைப் பூஜிக்கவில்லை. எல்லாரும் உம்மை அவமதிக்கிறார்கள். புத்திமானான பார்த்தருடைய வீர்யத்தை அறிந்தவர்களான இவர்களெல்லாருமே அவரை அடைந்தார்கள். அவரிடமுள்ள பக்தியினால் அவர்கள் எப்பொழுதுமே உம்முடைய பிள்ளைகளுடன் விரோதிக்கின்றார்கள். மஹாராஜரே! எவன், வதத்திற்குத் தகாதவர்களும் தர்மத்துடன் கூடினவர்களுமான பாண்டுபுத்திரர்களை விரோதமான காரியத்தால் கஷ்டப்படுத்தினானோ இப்பொழுதும் பகைக்கின்றானோ, துணையானவர்களுடன்கூடினவனும் பாவியுமான உம்முடைய அந்தப் புத்திரன் எல்லா உபாயங்களாலும் அடக்கப்படத்தக்கவன். (இவனை) அனுசரித்துத் துயரப்படத்தக்கவரல்லீர். ஓ! மஹாராஜரே! நான் மறைவாயில்லாமல் நேரில் இவனைப்பற்றிச் சொல்லுகிறேன். ஓ! பாரதரே! ராஜஶ்ரேஷ்டரே! சூதாடும்போது வல்லமையில்லாதவனாக இந்த என்னாலும் புத்திமானான விதுரராலும் [1] பாண்டவர்களைப் பற்றி உம்மிடம் புலம்பப்பட்டதெல்லாம் பயனற்றதாகிவிட்டது' என்று சொன்னான்.

---

ஐம்பத்தைந்தாவது அத்யாயம்.

## யாநஸந்திபர்வம். (தொடர்ச்சி.)

**(துரியோதனன், பீஷ்மர்முதலியோர் தனக்கு அபயம்கொடுத்ததையும் இருதிறத்துச்சேனையின் பலாபலங்களையும் சொல்லித் திருதராஷ்டிரனைத் தேற்றியது.)**

துரியோதனன் சொல்லுகிறான்: 'ஓ! மஹாராஜரே! நீர் பயப்படவேண்டாம். உம்மால் நாங்கள் துக்கிக்கப்படத்தக்கவர்களில்லை. ஓ! விபுவே! பலசாலிகளான நாங்கள் போரில் பகைவர்களை வெல்லுவதற்கு வல்லவர்களாயிருக்கிறோம். காட்டில் துரத்தப்பட்ட பார்த்தர்களை மதுஸூதனன் அடைந்தபொழுது, பகைவர்

---

1 'பாண்டவர்களைக்குறித்துச் சக்தியில்லாதவரைப்போல நீர் புலம்பும் இந்தப் புலம்பலெல்லாம் பயனற்றது' என்றும் கொள்ளலாம்.

களுடைய ராஜ்யத்தை நாசம்செய்கிறதும் பெரிதுமான சேனைக்கூட்டத்துடன் கேகயர்களும் திருஷ்டகேதுவும் த்ருபதபுத்திரனான திருஷ்டத்யும்னனும் மற்றும் அனேகம் அரசர்களும் பார்த்தர்களைப் பின்தொடர்கிறவர்களாகி அடைந்தார்கள். மகாரதர்களான அவர்கள் இந்திரப்ரஸ்தத்திற்குச் சமீபத்தில் வந்து கூடினார்கள்; கூடி, கௌரவர்களுடன்கூடின உம்மை நிந்தனையும் செய்தார்கள். ஓ! பாரதரே! கிருஷ்ணனை பிரதானமாகவுடைய அவர்கள் சேர்ந்து, தோல்களுடுத்துக்கொண்டு வீற்றிருக்கும் யுதிஷ்டிரரைச் சூழ்ந்திருந்தார்கள். அரசர்கள், ஜனக்கட்டோடுகூடின உம்மைக் கல்வி எடுப்பதற்கு விருப்பமுள்ளவர்களாய், ராஜ்யத்தைத் திரும்பவாங்குவதைச் செய்யவேண்டுமென்று சொன்னார்கள். ஓ! அரசரே! பரதஸ்ரேஷ்டரே! நானோ (இவ்விதச்செய்தியைக்) கேட்டு, உடனே, ஞாதிகளுடைய நாசத்திலுண்டான பயத்தால் பயந்து, பீஷ்மரிடமும் துரோணரிடமும் கிருபரிடமும் சொன்னேன். ஆகையால், பாண்டவர்கள் பிரதிஜ்ஞைப்படி (நடக்க) இருப்பார்களென்பது என்எண்ணம். வாஸுதேவனோ, எங்களுடைய முழுநாசத்தையும் செய்யவிரும்புகிறான். விதுரரைத்தவிர உங்களெல்லாரையும் கொல்லப்படவேண்டியவர்களென்று (அவன்கருதுகிறானென்பது) என் எண்ணம். தர்மத்தையுணர்ந்தவரும் கௌரவரில் சிறந்தவருமான திருதராஷ்டிரரோ கொல்லப்படத்தக்கவரில்லை. ஓ! ஐயா! ஜனார்த்தனன், எங்களை முழுமையும் நாசம்செய்து கௌரவர்களுடைய முழுராஜ்யத்தையும் யுதிஷ்டிரர்வசப்படுத்த விரும்புகிறான்; அப்படியிருக்க, நமக்கு இச்சமயம் செய்யவேண்டியதாக நேரிட்டது எது? நமஸ்காரமா? அல்லது, ஓட்டமா? அல்லது, 'உயிரை விட்டாவது பகைவர்களை எதிர்த்து யுத்தம் செய்வோம்' என்பதா? எதிர்த்து யுத்தம் செய்வதிலே நமக்குத் தோல்வி நிச்சயமாக ஏற்படும். எல்லா அரசர்களும் யுதிஷ்டிரருடைய வசத்திலிருக்கின்றனர். நம்மிடத்திலோ தேசமே வெறுப்புற்றதாயிருக்கிறது. நம்முடைய மித்ரர்களும் கோபங்கொண்டிருக்கிறார்கள். எல்லா அரசர்களாலும் உறவினர்களாலும் எங்கும் நிந்தனை செய்யப்பட்டோம். நமஸ்காரத்தில் தோஷமில்லை; மிகப்பலவருஷங்கள் நமக்கு ஸமாதானமுண்டு. ஆகையால், என்னிமித்தத்தில் துக்கத்தை அடைந்தவரும் அளவற்ற கிலேசத்தை அடைந்தவரும் அறிவையே நேத்திரமாகவுடையவரும் அரசருமான பிதாவை உத்தேசித்தே துக்கிக்கிறேன். உம்முடைய புத்ரர்கள் என்னுடையப்ரியத்திற்காகப் பகைவர்களான பாண்டவர்களுக்குக்

கெடுதியைச்செய்துவிட்டார்கள். அரசரே! இது உமக்கு முன்னமே தெரிந்த விஷயமே. 'மஹாரதர்களான அந்தப்பாண்டவர்கள் மந்திரிகளுடன்கூடின திருதராஷ்டிரராஜருக்குக் குலநாசத்தைச் செய்வதால் வைரத்திற்குப் பிரதிசெய்யப்போகிறார்கள்' என்று சொன்னேன். ஓ! பாரதரே! பிறகு, துரோணரும் பீஷ்மரும் கிருபரும் அஸ்வத்தாமாவும், பெரிதான கவலையையடைந்தவனும் வருத்தப்பட்ட இந்திரியங்களையுடையவனுமாயிருக்கிற என்னைக்கருதிச் சொன்னதாவது:— 'பகைவரைவாட்டுகிறவனே! பிறர் நமக்குத் [1]துரோகஞ்செய்வார்களேயானால் பயப்படவேண்டாம். பிறர் யுத்தத்தில் நிலையாகநிற்பவர்களான எங்களை வெல்லவல்லவர்களல்லர். நாங்கள் ஒவ்வொருவருமே எல்லா அரசர்களையும் வெல்லவல்லவர்கள். இவர்கள் வரட்டும். கூர்மையான சரங்களாலே இவர்களுடைய கொழுப்பைப் போக்குகிறோம்' என்பது.

முன்காலத்தில் பீஷ்மர் ஒருவராலேயே எல்லா அரசர்களும் ஜயிக்கப்பட்டார்கள். தமதுபிதா மரித்தபின்னர், மிக்க கோபத்தை அடைந்தவரும் பரபரப்புடன் கூடினவருமான கௌரவஸ்ரேஷ்டர், ஒரு தேருடன் அவர்களில் அனேகம்பேர்களைக் கொன்றார். அதற்குப் பிறகு, அவர்கள் பயத்தால் இந்தப்பீஷ்மரைச் சரணமடைந்தார்கள். அப்படிப்பட்ட இந்தப்பீஷ்மர் எங்களுடன்கூடிப் போரில் பகைவர்களை வெல்வதற்கு மிகவும் வல்லவர். பரதஸ்ரேஷ்டரே! ஆகையால், உம்முடைய பயமானது போகட்டும். அந்தச்சமயத்தில் அளவற்ற பராக்ரமமுடையவர்களான இவர்களுக்கு இவ்வித உறுதியானது ஏற்பட்டதன்றோ! முன்பு, பூமிமுழுமையும் பிறர்களுடைய வசத்திலிருந்தது. இப்பொழுது, நம்மையோ இவர்கள் யுத்தத்தில் வெல்லவல்லவர்களல்லர். இப்பொழுதோ, பகைவர்களான பாண்டவர்கள் சிறகு முறிந்தவர்களும் வீர்யம் குறைந்தவர்களுமாயிருக்கிறார்கள். பரதஸ்ரேஷ்டரே! பூமியும் நம்மிடமிருக்கிறது. ஸுகதுக்கங்களில் ஸமமான பயனையுடைய அரசர்களும் வரவழைக்கப்பட்டார்கள். பகைவர்களை வாட்டுகிறவரே! அப்படிப்பட்ட எல்லா அரசர்களும் என்னிமித்தம் அக்னியிலோ கடலிலோ விழுவார்கள். கௌரவர்களில் சிறந்தவரே! அதனை அறியக்கடவீர். தவிரவும், இப்பொழுது, உன்மத்தனைப்போலப் பலவிதமாய்ப் புலம்புகிறவரும் துக்கத்தை அடைந்தவரும் பகைவர்களுடைய தற்புகழ்ச்சியில் பயந்தவருமான உம்மைச் சிரிக்கின்றார்கள். இந்த அரசர்களெல்லாரும் ஒவ்வொரு

---

1 'நம்மால் துரோகம் செய்யப்பட்டிருப்பார்களேயானாலும்' என்றும் சொல்லலாமென்பது பழைய உரை.

வருமே பாண்டவர்களைக் குறித்துத் தம்மை ஸமர்த்தராகநினைக்கிறார்கள். உமக்கு நேரிட்ட பயமானது போகட்டும். இந்திரனுங்கூட, நிரம்பியிருக்கிற என்சேனையைக் கொல்லுவதற்குத் திறமையுள்ளவனல்லன். இது, ஸ்வயம்புவான பிரம்மாவுக்கும் கொன்று குறைக்க முடியாத ரூபத்தை உடையதாயிருக்கிறது. ஓ! விபுவே! அந்தயுதிஷ்டிரன் என்சேனைக்கும் என்வல்லமைக்குமே பயந்தல்லவோ பட்டணத்தைவிட்டு ஐந்து கிராமங்களை யாசிக்கிறான். ஓ! பாரதரே! நீர் குந்திபுத்ரனான விருகோதரனை ஸமர்த்தனாக நினைப்பது தப்பு. எனது முழுப்ரபாவத்தையுமோ நீர் அறியவில்லை. கதாயுத்தத்தில் எனக்குச் சமமானவனே பாரில் ஒருவனும் இருக்கவில்லை; இருந்தவனும் ஒருவனுமில்லை; உண்டாகப்போகிறவனும் ஒருவனுமில்லை. நான் முயற்சியுள்ளவனும் கஷ்டத்துடன் குருகுலத்தில் வஸித்தவனும் வித்தையில் கரைகண்டவனுமானவன். ஆகையால், எனக்குப் பீமனிடமிருந்தோ மற்றவர்களிடமிருந்தோ, ஓரிடத்திலிருந்தும் பயமில்லை. நான் அப்பொழுது பலராமருடைய வீட்டில் அவரையடுத்து வஸித்தபடியால் கதையில் துரியோதனனான எனக்கு நிகரானவனில்லையென்பது நிச்சயம். நான் பூமியில் யுத்தத்தில் பலராமருக்குச்சமானனும் பலத்தால் அதிகனுமாயிருப்பவன். யுத்தத்தில் எனது கதையின் அடியைப் பீமன் ஒருபொழுதும் தாங்கான். ஓ! அரசரே! நான் கோபத்துடன் பீமனுக்கு ஓர்அடி கொடுப்பேனேயானால் பயங்கரமான அதுவே அவனைச் சீக்கிரம் யமன்வீட்டிற்கு அனுப்பிவிடும். கதையைக் கையிலுடையவனாக விருகோதரனைப் பார்ப்பதற்கு விரும்பவும் செய்கின்றேன். இதுவோ, வெகுகாலமாகத் தினந்தோறும் எதிர்பார்க்கிற என்னுடைய விருப்பம். குந்திபுத்ரனான விருகோதரன் என்னால் யுத்தத்தில் கதையாலடிக்கப்பட்டுச் சரீரம் சிதறினவனும் உயிரிழந்தவனுமாகிப் பூமியில் விழப்போகிறான். 'இமயம்' என்கிறமலையும் என்னால் ஒருதரம் கதையின் அடியால் அடிக்கப்பட்டால் நூறுயிரமாகச் சிதறிப்போகும். அந்தப் பீமனும் இதனை அறிகிறான். வாஸுதேவனும் அர்ஜுனனும் அறிகின்றார்கள். கதையில் துரியோதனனுக்குச் சமமானவன் இல்லையென்பது உறுதி. ஆகையால், உமக்குப் பெரிய யுத்தத்தில பீமஸேனமயமான பயமானது போகட்டும். நானே இவனைத் தொலைக்கின்றேன். அரசரே! மனவருத்தம் அடையாதீர். ஓ! பரதஸ்ரேஷ்டரே! என்னால் அவன் கொல்லப்பட்டபொழுது, (அர்ஜுனனுக்கு) ஒப்பானவர்களும் மேலானவர்களுமான அனேகம் ரதிகர்கள் அர்ஜுனனை விரைவில் சிதறும்படி செய்யப்

போகின்றார்கள். ஓ! பாரதரே! பீஷ்மர், துரோணர், கிருபர், அப்வத்தாமா, கர்ணன், பூரிப்ரவஸ், பிராக்ஜோதிஷாதிபனான பகதத்தன், சல்லியன், ஸிந்துராஜனான ஜயத்ரதன் இவர்களில் ஒவ்வொருவருமே பாண்டவர்களைக் கொல்வதற்கு வல்லவர். சேர்ந்தவர்களாகியோ, நொடிப்பொழுதில் இவர்களை யமன்வீட்டை அடையச் செய்வார்கள். நிரம்பியதான அரசர்களின் சேனையானது ஒருவனான குந்திபுத்ரனான தனஞ்சயனை என்னகாரணத்தால் வெல்லுவதற்கு வல்லமையில்லாததென்றால், காரணமில்லை. அர்ஜுனன், பீஷ்மராலும் துரோணராலும் அப்வத்தாமாவாலும் கிருபராலும் சரக்கூட்டங்களால் நூற்றுக்கணக்காக அடிக்கப்பட்டுத் தன்வசமற்று யமன்வீடு செல்வான். ஓ! பாரதரே! கங்காபுத்ரரான பிதாமஹரும், சந்தநுவினிடம், பிரம்மரிஷிக்கு ஒப்பானவரும் தேவர்களாலும் தாங்கமுடியாதவருமாக உண்டானார். அரசரே! அவரைக் கொல்லுபவனும் ஒருவனுமில்லை. மகிழ்ச்சியை அடைந்தவரான (தமது) பிதாவினால், 'உனக்கு விருப்பமில்லாவிட்டால் நீ மரிக்கமாட்டாய்' என்றுசொல்லப்பட்டிருக்கிறாரல்லவோ? துரோணர், பிரம்மரிஷியான பரத்வாஜரிடமிருந்து, கலசத்திலுண்டானார். ஓ! மஹாராஜரே! சிறந்த அஸ்திரங்களை அறிகின்ற அப்வத்தாமாவும் துரோணரிடமிருந்தும் உண்டானார். ஆசார்யர்களிற் சிறந்தவரும் கௌதமமஹரிஷியினிடமிருந்தும் நாணல் தண்டிலுண்டானவரும் ஸ்ரீமானுமான கிருபரும் வதம் செய்யப்படத்தகாதவர் என்பது என் எண்ணம். ஓ! மஹாராஜரே! அப்வத்தாமாவினுடைய பிதா, மாதா, மாமன் இம்மூவர்களும் மனிதர் 1 வயிற்றில் பிறவாதவர்கள். சூரரான அந்த அப்வத்தாமாவும் என் பக்கத்தில் இருக்கிறார். ஓ! மஹாராஜரே! பரதப்ரேஷ்டரே! தேவர்களுக்குச் சமானர்களும் மஹாரதர்களுமான இவர்களெல்லாரும் யுத்தத்தில் இந்திரனுக்கும் துன்பத்தைச் செய்வார்கள். இவர்களில் ஒவ்வொருவரையும் எதிர்த்துப் பார்ப்பதற்கு அர்ஜுனன் சக்தனல்லன். ஆண்மையிற் சிறந்தவர்களான இவர்களோ, சேர்ந்து, அர்ஜுனனைக் கொல்லப்போகின்றனர். ஓ! பாரதரே! கர்ணனும், பீஷ்மதுரோணகிருபர்களுக்குச் சமானமாக என்னால் நினைக்கப்பட்டிருக்கிறான்; பரசுராமரால், 'எனக்குச் சமானனாகிறாய்' என்று ஒப்புக்கொள்ளப்பட்டவனாயும் இருக்கிறான். கர்ணனுக்கு அழகு பொருந்தியவைகளும் கூடஉண்டானவைகளும் சுபமானவைகளுமான குண்டலங்கள் இருந்தன. ஓ! மஹாராஜரே! இந்திரனானவன் பகைவர்களை

1 மூலத்தில் வேறு விதமாயிருக்கிறது.

வாட்டுகின்ற அவனிடத்தில் இந்திராணிக்காக, அவைகளை, வீணாகாத தும் மிகவும் பயங்கரமுமான [1] சக்தியினால் யாசித்தான். அவன் சக்தி யினால் காக்கப்பட்டவனாயிருக்கையில், தனஞ்சயன் எதனால் பிழைப் பான்? அரசரே! பூமியில் நிச்சயமாக எனக்கு வெற்றியும் பிறர்க ளுக்கு முற்றும் தோல்வியும் கையில்வைக்கப்பட்ட கனிபோலத் தெளிவாயிருக்கின்றன. ஓ! பாரதரே! இந்தப் பீஷ்மர் ஒரு பகலில் பத்துலக்ஷத்தைக் கொல்லுவார். பெரிதான வில்லுடையவர்களான துரோணரும் அஸ்வத்தாமாவும் கிருபரும் அவருக்கு நிகரானவர் கள். ஓ! பகைவரைவாட்டுபவரே! ஸம்சப்தகர்களென்கிற க்ஷத் திரியர்களுடைய கூட்டங்களும், 'நாங்களாவது அர்ஜுனனைக் கொல் லுவோம். வானரக்கொடியோனான அவனாவது எங்களைக்கொல்லட் டும்' (என்றசபதத்தோடு இருக்கின்றனர்.) ஸவ்யஸாசியின் வதத்தில் நிலைத்திருப்பவர்களான அரசர்கள் அந்த ஸம்சப்தகர்களையும் ஸமர்த் தர்களென்று நினைக்கின்றார்கள். அப்படியிருக்க, நீர் அந்தப்பாண்ட வர்கள் நிமித்தமாக ஏன் காரணமில்லாமல் துன்பம் அடைகிறீர்? ஓ! பாரதரே! பீமஸேனன் கொல்லப்பட்டபொழுது பிறர்களுள் வேறு எவன் யுத்தம் செய்வான்? ஓ! பகைவரை வாட்டுபவரே! அறிவீரா னால் எனக்கு அதைச்சொல்லும். ஓ! அரசரே! பகைவர்களில், அந் தப் பிராதாக்களெல்லாரும் (சேர்ந்து) ஐவரும் திருஷ்டத்யும்னனும் ஸாத்யகியுமாக எழுவர் யோதர்கள், ஸாரமான பலமென்று கருதப்பட் டனர். அரசரே! எங்களுக்குள்ளேயோ, பீஷ்மர் துரோணர் கிருபர் முதலியவர்களும், அஸ்வாத்தாமா, ஸூர்யபுத்ரனான கர்ணன், பாஹ் லிக ராஜனான ஸோமதத்தன், ப்ராக்ஜோதிஷாதிபன், சல்யன், அவந்தி தேதசத்தரசர் இருவர்கள், ஜயத்ரதன், துச்சாஸனன், துர்முகன், துஸ் ஸஹன், ஸ்ருதாயு, சித்ரஸேனன், புருமித்ரன், விவிம்சதி, சலன், பூரி ஸ்ரவஸ், உமது புத்திரனான விகர்ணன் ஆகிய இவர்களும் சிறந்தவர் கள். ஓ! அரசரே! எனக்குப் பதினோர் அக்ஷௌஹிணிகள் சேகரிக்கப் பட்டிருக்கின்றன. பகைவர்களுக்கு (என்னுடைய வற்றிலும்) குறைந் தவையான ஏழுஅக்ஷௌஹிணிகள் தாமே சேகரிக்கப்பட்டிருக்கின் றன? எதனால் எனக்குஅபஜயம்ஏற்படும்? பிருகஸ்பதியானவர்மூன்று மடங்கு குறைவான படையை (எதிர்த்து) யுத்தம் செய்யலாமென்று சொன்னார். அரசரே! என்னுடைய இந்தச்சேனையானது பகைவர் களைக் காட்டிலும் [2] மூன்றுபங்காக இருக்கிறது. ஓ! பாரதரே! பிறர்

1 'சக்தியென்கிற ஆயுதத்தைக்கொடுத்து அதற்குப்பிரதியாக' என்பது.

2 அவர்களில் ஏழுபேர்; தங்களில் தன்னைச்சேர்த்து இருபத்தொருவர்.

களுக்குக் குணக்குறைவாயுள்ள பலவிஷயத்தைப் பார்க்கிறேன். ஓ! அரசரே! எனக்குக் குணநிறைவுடன்கூடின பலகுணத்தையும் பார்க்கிறேன். ஓ! பாரதரே! என்னுடைய சிறந்ததான இந்த எல்லாப் பலத்தையும் பாண்டவர்களுடைய குறைவையும் நன்றாக அறிந்து மயக்கத்தை அடையாமலிருக்கக்கடவீர்' என்று சொன்னான். ஓ! பாரதரே! பிறருடைய பட்டணத்தை ஜயிக்கின்றவனான துரியோதனன், இவ்விதம் சொல்லிவிட்டு, அக்காலத்திற்குத் தக்கவைகளை அறிந்து மறுபடியும் அறியவிருப்பமுள்ளவனாகி ஸஞ்சயனை நோக்கி

## ஐம்பத்தாறுவது அத்யாயம்.

## யாநஸந்திபர்வம். (தொடர்ச்சி.)

(ஸஞ்சயன் பாண்டவர்களின் போர்விருப்பத்தையும் தேர் குதிரைகளையும்பற்றித் துரியோதனனுக்குச் சொல்லியது.)

துரியோதனன், 'ஸஞ்சய! அரசர்களுடன் ஏழு அக்ஷௌஹிணிகளை அடைந்து யுத்தத்தைச் செய்யவிருப்பமுள்ள குந்திபுத்ரனான யுதிஷ்டிரன் என்னசெய்ய விரும்புகிறான்?' என்றுவினவ, ஸஞ்சயன், 'அரசனே! யுத்தத்தையடைய விருப்பமுள்ளவரான யுதிஷ்டிரர் மிக்கஸந்தோஷத்தை அடைந்தவராயிருக்கிறார். பீமஸேனனும் அர்ஜுனனுமாகிய இருவர்களும் மகிழ்ச்சியுள்ளவர்களாயிருக்கின்றனர். நகுலஸஹதேவர்களும் பயப்படவில்லை. குந்திபுத்ரனான தனஞ்சயன் மந்திரத்தைப் பரீக்ஷிக்க விருப்பமுள்ளவனாகித் திவ்யமான ரதத்தை எல்லாத்திக்குக்களையும் பிரகாசிக்கச் செய்து பூட்டச்செய்தான். மின்னலோடுகூடின மேகத்தைப்போல ஸந்நத்தமான அந்தத்தேரைப் பார்த்தோம். நான்குபக்கத்திலும் ஊன்றிப்பார்த்து ஸந்தோஷிக்கிறவனாய், 'ஸஞ்சய! (ஜயத்திற்குக்) காரணமான இதைப்பார். நாங்கள் ஜயிப்போம' என்றுசொன்னான். அவன் என்னைநோக்கிச் சொன்னபடியே நானும் நினைக்கிறேன்' என்று சொன்னான்.

துரியோதனன், 'சூதாடுகருவிகளால் ஜயிக்கப்பட்ட அந்தப் பார்த்தர்களை மகிழ்ந்து புகழ்கிறாயே? அர்ஜுனனுடைய ரதத்தில் குதிரைகள் எவ்விதமாயிருக்கின்றன? த்வஜங்கள் எவ்விதமாயிருக்கின்றன? சொல்' என்றுகேட்டான். ஸஞ்சயன், 'ஓ! அரசனே!

த்வஷ்டா என்கிற ஸ்ருஷ்டிகர்த்தரும் விஸ்வகர்மாவும் இந்திரனும் எப்பொழுதும் பலவிதமான சித்திரங்களையுடையதாயிருக்கும்படி உருவங்களைக் கற்பித்தார்கள். அந்தத்துவஜத்திலோ அவர்கள் தேவமாயையினாலே மிக்கவிலையுள்ளவைகளும் திவ்யமானவைகளும் பெரியவைகளும் இலேசானவைகளுமான உருவங்களைச் செய்தார்கள். வாயுபுத்திரரான ஆஞ்சனேயர் பீமஸேனனுடைய திருப்திக்காக அந்தத் துவஜத்தில் தம்முடைய ப்ரதிபிம்பத்தை ஏறச்செய்யப்போகிறார். அந்தத் துவஜமானது எல்லாத்திக்குக்களிலும் குறுக்கிலும் உயரத்திலும் ஒருயோஜனையளவு இடைவெளியைத் தன் ஒளியினால் சூழ்ந்தது. மரங்களால் சூழப்பட்டாலும் (ஒன்றிலும்) தட்டுப்படாது. விஸ்வகர்மாவால் அவ்விதமன்றோ மாயையானது செய்யப்பட்டிருக்கிறது! ஆகாயத்தில் இந்திரனுடைய வில்லைப்போல விளங்குகின்றது. அது ஒருவர்ணமுடையதுமில்லை. அது என்னவோ நான் அறியேன். அப்படியே விஸ்வகர்மாவினால் த்வஜமானது செய்யப்பட்டது. அதனுடைய உருவமானது பலவடிவங்களுடையதாகக் காணப்படுகிறது. அக்கினியினிடமிருந்துண்டான புகையானது தேஜஸைச் சேர்ந்தவைகளும் சித்திரமான ரூபங்களையுடையவைகளுமான வர்ணங்களைத் தரிப்பதாகி ஆகாயத்தை மறைத்துக்கொண்டு போவதுபோலவே விஸ்வகர்மாவினால் த்வஜமானது செய்யப்பட்டிருக்கிறது. அப்படிச் செய்யப்பட்டிருப்பதால் பாரமுமில்லை; தடையுமில்லை. அரசனே! இந்தப் பூமியிலோ ஆகாயத்திலோ ஸ்வர்க்கத்திலோ எவைகளுக்கு எல்லாவித நடையும் குறைகின்றதில்லையோ வெளுப்பு நிறமுள்ளவைகளும் வாயுவுக்குநிகரான வேகமுடையவைகளும் தேவலோகத்திலுண்டானவைகளும் சித்ரரதனால் கொடுக்கப்பட்டவைகளுமான அப்படிப்பட்ட நல்லகுதிரைகள் அந்தத்தேரில் பூட்டப்பட்டன. அப்படியே, கொல்லக்கொல்ல எப்பொழுதும் நூறாகப் பூரணமாகும்படி முன் வரம்கொடுக்கப்பெற்றவைகளும் தந்தம்போல நிறமுடையவைகளும் பெரியவைகளும் அர்ஜுனன் குதிரைகளுக்கு நிகரான வீர்யமுடையவைகளுமான (குதிரைகள்) அரசருடைய ரதத்தில் பூட்டப்பட்டு விளங்குகின்றன. பீமஸேனனுடைய ரதத்தில் [1] நக்ஷத்திரங்கள்போன்ற காந்தியுடையவைகளும் வாயுவுக்கு நிகரான வேகமுடையவைகளுமான குதிரைகள் (பூட்டப்பட்டு) இருந்தன. வீரனை பிராதாவுக்குப் பிராதாவும் பிரீதி

---

1 'ரிக்ஷப்ரக்யா:' என்பது மூலம்: 'கரடிகள்போன்றவைகள் என்றும் கொள்ளலாம்.

யடைந்தவனுமான அர்ஜுனனால் தன் குதிரைகளைக்காட்டிலும் விசேஷமுள்ளவைகளாகக் கொடுக்கப்பட்டவைகளும் கறுத்த அங்கங்களுடையவைகளும் தித்திரிப்பக்ஷிகள்போலப் பலநிறமுள்ள முதுகையுடையவைகளுமான (குதிரைகள்) சந்தோஷமுள்ளவைகளாகி ஸஹதேவனைத் தாங்குகின்றன. மாத்ரியின் புத்திரனும், அஜமீடவமிசத்திற் பிறந்தவனும் வீரனுமான நகுலனையோ, மஹேந்திரனால் கொடுக்கப்பட்டவைகளும் குதிரைகளில் சிறந்தவைகளும் வாயுவுக்கு ஸமமானவைகளும் பலமுள்ளவைகளும் வேகமுடையவைகளுமான குதிரைகள் விருத்திரனுக்குப்பகைவனை இந்திரனை வகிப்பதுபோல வகிக்கின்றன. வயதினாலும் திறமையினாலும் இவைகளுக்கு நிகரானவைகளும் பலநிறமுடையவைகளும் மிக்கவேகமுடையவைகளும் நல்லஜாதியிற் பிறந்தவைகளும் [1] தேவர்களால் கொடுக்கப்பட்டவைகளும் பெரியவைகளுமான குதிரைகள் அபிமன்யு முதலானவர்களும் த்ரௌபதியின் புத்திரர்களுமான குமாரர்களை வஹிக்கின்றன' என்று சொன்னான்.

---

ஐம்பத்தேழாவது அத்யாயம்.

## யாநஸந்திபர்வம். (தொடர்ச்சி.)

**(ஸஞ்சயன் பாண்டவர்களுக்குத் துணையாகவந்த அரசர்களையும் அவர்கள் கௌரவ வீரர்களைக் கொல்லப் பங்கிட்டுக்கொண்டதையும் திருதராஷ்டிரனுக்குச் சொல்லியதும், துரியோதனன் தன் பக்கத்திலுள்ளவர்களின் வல்லமையைச் சொல்லித் திருதராஷ்டிரனைத் தேற்றியதும், ஸஞ்சயன் திருஷ்டத்யும்னன் சொன்னதைச் சொல்லிப் போரை நிறுத்தச்சொல்லியதும்.)**

திருதராஷ்டிரன், 'ஸஞ்சய! பாண்டவர்களுக்காக, என் புத்திரனுடைய சேனையுடன் யுத்தம் செய்வதற்காகப் பிரியத்துடன் வந்தவர்களில் அவ்விடத்தில் எவர்களைப் பார்த்தாய்?' என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான்: 'அந்தகர்களுக்கும் விருஷ்ணிகளுக்கும் தலைவரான (அவ்விடம்) வந்த கிருஷ்ணனையும் அவ்விடத்திலேயே தனித்தனி ஒவ்வோர் அக்ஷௌஹிணியுடன் பாண்டவர்களை அடைந்தவர்களும் மகாரதர்களென்று புகழ்பெற்றவர்களும் ஆண்மையினால் கர்வங்கொண்டவர்களுமான சேகிதானன் ஸத்யக

---

1 'சித்ரரதனால் கொடுக்கப்பட்டவை' என்பது பழையவுரை.

புத்ரனை யுயுதானன் ஆகிய இவர்களையும் பார்த்தேன். பின்னும் பாஞ்சாலதேசத்தரசனை துருபதன், ஸத்தியஜித்து முதலானவர்களும் திருஷ்டத்யும்னனைத் தலைவனாகவுடையவர்களும் வீரர்களுமான பத்துப்புத்திரர்களால் சூழப்பட்டவனும் கௌரவத்தை விருத்திசெய்கிறவனும் சிகண்டியினால் பரிபாலிக்கப்பட்டவனுமாகி அப்பொழுது எல்லாச் சேனைகளுடைய சரீரத்தையும் மறையும்படி செய்துகொண்டு ஓர் அக்ஷௌஹிணியுடன் வந்தடைந்தான். விராடமன்னன், சங்கன் உத்தரனென்கிற இரண்டுபுத்திரர்களோடும் ஸூர்யதத்தன் முதலானவர்களும் வீரர்களுமான ஸகோதரர்களோடும், மதிராக்ஷனைத்தலைவனாகவுடைய (மற்றப்) புத்திரர்களோடும் ஓர் அக்ஷௌஹிணிசேனையினாலே சூழப்பட்டவனாகிப் பார்த்தரை அடுத்தான். ஜராஸந்தன்புத்திரனை மகதராஜனும், சேதிதேசத்தரசனை திருஷ்டகேதுவும் ஒவ்வொருவரும் ஒவ்வோர் அக்ஷௌஹிணியால் சூழப்பட்டவர்களாகித் தனித்தனி வந்து அடைந்தார்கள். கேகயதேசாதிபதிகளான ஸகோதரர்கள் ஐவர்களும், எல்லாரும் சிவந்தகொடியுடையவர்களும் ஓர் அக்ஷௌஹிணியினால் சூழப்பட்டவர்களுமாகிப் பாண்டவர்களை அடுத்தார்கள். பாண்டவர்களுக்காகத் துரியோதனனுடைய சேனையுடன் போர்புரிவதற்காக வந்தவர்களான இந்த இவ்வளவுபேர்களையும் அவ்விடத்தில் பார்த்தேன். மனிதர்களைச்சேர்ந்ததும் தேவர்களைச் சேர்ந்ததும் கந்தருவர்களைச்சேர்ந்ததும் அஸுரர்களைச்சேர்ந்ததுமான வ்யூகமமைப்பதை அறிந்தவனும் மகாரதனும் ப்ரஸித்தனுமான திருஷ்டத்யும்னன், அவ்விடத்தில், சேனையின்முகத்தில் அமர்த்தப்பட்டான். ஓ! அரசரே! சந்தனுவின் புத்திரரான பீஷ்மர் சிகண்டியின் பாகமாக அமைக்கப்பட்டார். விராடன் அடிக்கின்றவர்களான மத்ஸியர்களுடன் அவனுக்குப்பின்பலமாக அமைக்கப்பட்டான். பலசாலியான மத்திரராஜன் பாண்டுவின்மூத்தகுமாரருடைய பாகமாகச் செய்யப்பட்டான். அப்பொழுது, அங்குள்ளசிலர் அவர்களைப் பற்றி எங்களால் (இவர்கள் ஒருவருக்கொருவர்) ஸமமில்லாதவர்களாக நினைக்கப்பட்டார்களென்று சொன்னார்கள். புத்திரர்களோடும் நூறு ஸஹோதரர்களோடும் துரியோதனனும் கிழக்குத்திக்கிலுள்ள அரசர்களும் தெற்குத்திக்கிலுள்ள அரசர்களும் பீமஸேனனுடைய பாகத்தில் ஏற்படுத்தப்பட்டார்கள். ஸூர்யபுத்திரனை கர்ணனும் அஸ்வத்தாமாவும் விகர்ணனும் ஸிந்துதேசத்தரசனை ஜயத்ரதனும் அர்ஜுனனுடைய பாகத்தோடு ஒப்புக்கொள்ளப்பட்டார்கள். பூமியில் (வெல்ல) முடியாதவர்களும் சூரரென்கிற கர்வ

முடையவர்களுமான (மற்றும்) எவ்வளவு பேர்களுண்டோ அவர்களெல்லாரையும் பிருதையின் குமாரனான அர்ஜுனன் தன் பாகத்தில் வைத்துக்கொண்டான். பெரிய வில்லுடையவர்களும் ராஜபுத்திரர்களும் [1] கேகயதேசாதிபதிகளுமான ஸகோதரர்கள் ஐவர்களும் யுத்தத்தில் கேகயர்களையே தங்கள் பாகமாகச் செய்துகொண்டு போர்புரியப்போகிறார்கள். மாளவர்களும் ஸால்வகர்களும் திரிகர்த்தர்களில் முக்கியர்களான ஸம்சப்தகர்களென்கிற இருவரும் அவர்களுடைய பாகமாகவே செய்யப்பட்டார்கள். துரியோதனன் துச்சாஸனன் இவர்களுடைய எல்லாப் புத்திரர்களும் ப்ருஹத்பலனென்கிற அரசனும் ஸுபத்திரையின் புத்திரனான (அபிமன்யுவினால் தன்) பாகமாகச் செய்யப்பட்டார்கள். பாரதரே! பெரியவில்லுடையவர்களும் பொன்னால் செய்யப்பட்ட த்வஜத்தையுடையவர்களுமான துரௌபதியின் புத்திரர்கள் திருஷ்டத்யும்னனை முன்னிட்டுக்கொண்டு துரோணருடன் யுத்தம் செய்யப்போகிறார்கள். சேகிதானனானவன் ஸோமதத்தனுடன் (இரண்டு தேராளிகள் தனியே ஒருவரையொருவர் எதிர்ப்பதாகிய) த்வைரதயுத்தம் செய்ய விரும்புகிறான். யுயுதானனானவன் போஜராஜனான கிருதவர்மாவுடன் போர்செய்ய விருப்பங்கொண்டிருக்கிறான். சூரனும் யுத்தத்தில் கர்ஜிக்கிறவனும் மாத்திரியின் புத்திரனுமான ஸஹதேவனே, ஸுபலனுடைய புத்திரனும் உம்முடையமைத்துனனுமான சகுனியைத் தன்பாகமாக ஏற்படுத்திக்கொண்டான். மாத்திரியின் புத்திரனான நகுலன் சூதாடியின் மகனான உலூகனையும் [2] ஸாரஸ்வதர்களென்கிற கூட்டங்களையும் தன்பாகமாகக் கற்பித்துக்கொண்டான். அரசரே! மற்றுமுள்ள எந்த அரசர்கள் யுத்தத்தில் எதிர்க்கப்போகிறார்களோ அவர்களையும் பாண்டுபுத்திரர்கள் [3] (அச்சமயம் அவரவர்கள்) அழைத்துக்கொள்வதாக ஏற்பாடுசெய்துகொண்டார்கள். இவ்விதம் இவர்களுடைய சேனைகள் பாகமாகப் பிரிக்கப்பட்டன. [4] புத்திரர்களுடன்கூடின உமக்கு எதுசெய்யத்தக்கதோ அதைக் காலந்தவறாமல் செய்வீராக" என்று சொன்னான்.

---

1 இவர்கள் மற்றக் கேகயமன்னர்; விந்தானுவிந்தர்களால் துரத்தப்பட்டவர்கள். உத்யோக பர்வம் 55-ம் பக்கம்பார்க்க.

2 ஸரஸ்வதீநதிக்கரையிலுள்ள அரசர் கூட்டங்கள்.

3 'பேர்சொல்லிப் பாகஞ்செய்துகொண்டார்கள்' என்றும் கொள்ளலாம்.

4 'அனேகம் புத்திரர்களையுடைய நீர் முடிவில் புத்திரனில்லாமல் போகவேண்டாம்' என்பதும், 'பத்திரனுள்ளநீர் உம்முடைய புத்திரர்

திருதராஷ்டிரன், 'ஸஞ்சய! எவர்களுக்குப் *போர்முனையில் பலவானான பீமனுடன் யுத்தமானது ஏற்பட்டிருக்கிறதோ மூடர்களும் கெட்ட சூதுவிளையாடினவர்களுமான என்னுடைய அந்த எல்லாப்புத்திரர்களும் இல்லாதவர்களே. பூமியிலுள்ள அரசர்களெல்லாரும் மிருத்யுவினாலே (யாகபசுப்போலக் கொல்வதற்காகக்) குளிப்பாட்டப்பட்டவர்களாகி விளக்குப்பூச்சிகள் அக்கினியில் விழுவதுபோலக் காண்டீவமாகிற அக்கினியில் விழப்போகிறார்கள். (நம்மால்) செய்யப்பட்ட வைரத்தையுடைய மகாத்மாக்களாலே (என்) சேனையைத் துரத்தப்பட்டதாக நினைக்கிறேன். பாண்டவர்களாலே யுத்தகளத்தில் யுத்தத்தில் பங்கம்செய்யப்பட்ட அந்தச்சேனையை எவர்கள் பின் தொடரப்போகிறார்கள்? எல்லாரும் அதிரதர்களும் சூரர்களும் கீர்த்திமான்களும் பிரதாபசாலிகளும் காந்தியால் ஸூர்யனுக்கும் அக்னிக்கும் நிகரானவர்களும் யுத்தத்தில் வெல்லுகிறவர்களுமாயிருப்பவர்கள். ஸஞ்சய! எவர்களுக்கு, யுதிஷ்டிரன் நாயகனோ, மதுஸூதனர் காப்பவரோ, பாண்டுபுத்திரர்களும் வீரர்களுமான பீமார்ஜுனர்களும் போர்வீரர்களோ, நகுலனும் ஸஹதேவனும் பாஞ்சாலன் புத்திரனான திருஷ்டத்யும்னனும் ஸாத்யகியும் துருபதனும் தம்பியுடன் கூடின திருஷ்டகேதுவும் பாஞ்சாலன்புத்திரனான உத்தமௌஜஸும் ஜயிக்கமுடியாதவனான யுதாமன்யுவும் சிகண்டியும் க்ஷத்திரதேவனும் விராடபுத்திரனான உத்தரனும் காசிதேசத்தரசர்களும் சேதிதேசத்தரசர்களும் மத்ஸியதேசத்தரசர்களும் எல்லா ஸ்ருஞ்சயர்களும் விராடபுத்திரனான பப்ருவும் பாஞ்சாலதேசத்தோர்களும் பிரபத்திரகர்களும் யுத்தவீரர்களோ, வீரர்களும் யுத்தத்தில் தீரர்களுமான எவர்கள் விருப்பமில்லாமலிருக்கையில் இந்திரனும் இந்தப் பூமியைக் கைப்பற்ற வல்லவனாகானோ, எவர்கள் மலைகளையும் பிளப்பார்களோ, எல்லாக்குணங்களும் நிறைந்தவர்களும் தேவர்களுக்குரிய பிரதாபத்துடன் கூடினவர்களுமான அவர்களுடன், நான் வைதுகொண்டிருக்கையிலேயே, துஷ்டனான புத்திரன் யுத்தஞ்செய்ய விரும்புகிறான்' என்று சொன்னான்.

துரியோதனன், 'இருவர்களும் ஒரு ஜாதியிலுள்ளவர்களும் இருவர்களும் பூமிக்கு விஷயமாயுள்ளவர்களுமாயிருக்கிறோம். அப்படியிருக்க, என்னகாரணத்தால் பாண்டவர்களுடைய பக்கமொன்றி

---

* களைப்போலப் பாண்டவர்களையும் நினைக்கவேண்டாமா?' என்பதும், 'உமக்குச் செய்யவேண்டியதை' என்பதால், 'நீரிருக்கையில் புத்திரர்களுக்கென்ன அதிகாரம்? உம்மிஷ்டப்படி ஏன் செய்யக்கூடாது?' என்பதும் குறிப்பு.

லேயே ஜயத்தை நினைக்கிறீர்? ஓ! தந்தையே! பெரியவில்லுடைய வர்களும் நல்ல பராக்கிரமமுடையவர்களுமான பிதாமஹரான பீஷ்மரையும் துரோணரையும் கிருபரையும் பிறரால் ஜயிக்க முடியாத கர்ணனையும் ஜயத்ரதனையும் ஸோமதத்தனையும் அஸ்வத்தாமாவையும் தேவர்களுடன்கூடின இந்திரனும் யுத்தத்தில் வெல்லவல்லவனல்லன். பாண்டவர்களா வல்லவர்கள்? ஓ! தாதையே! மரியாதைக்குரியவர்களும் ஆயுதங்களைத் தாங்குகின்றவர்களும் சூரர்களுமான எல்லா அரசர்களும் என்னிமித்தம் பாண்டவர்களை எதிர்த்து அடிப்பதற்கு வல்லவர்கள். அந்தப் பாண்டவர்கள் என்னைச் சேர்ந்தவர்களை எதிர்த்துப் பார்ப்பதற்கும் வல்லவரல்லர். நானே, யுத்தத்தில் புத்திரர்களுடன்கூடின பாண்டவர்களை (எதிர்த்து)ப்போர்செய்வதற்கு வல்லமையுடையவன். ஓ! பாரதரே! என்னுடைய பிரியத்தைச்செய்ய விருப்பமுள்ளவர்களான எல்லா அரசர்களும் அவர்களைப் பாசத்தால் மான்குட்டிகளை வளைப்பது போலப் பெரிதான தேர்க்கூட்டத்தாலே வளைக்கப்போகிறார்கள். என்னுடைய சரக்குவியல்களாலேயும் பாஞ்சாலர்கள் பாண்டவர்களோடு எதிர்த்துத் துரத்தப்பட்டவர்களாவார்கள்' என்று சொன்னான்.

திருதராஷ்டிரன், 'ஸஞ்சய! என்னுடைய புத்திரனை இவன் பித்தங்கொண்டவன்போலப் புலம்புகிறான். யுத்தத்தில் உறுதியுள்ள தர்மராஜனையோ போரில் வெல்லுவதற்கு இவன் வல்லவனல்லன். இந்தப்பீஷ்மர் மகாத்மாக்களான அந்தப்பாண்டவர்களுடன் யுத்தத்தை விரும்பவில்லையாகையால், புகழ்பெற்றவர்களும் புத்திரர்களுடன் கூடினவர்களும் தர்மத்தையுணர்ந்தவர்களும் மகாத்மாக்களுமான பாண்டவர்களுடைய வல்லமையை அறிகிறாரல்லவா? ஸஞ்சய! ஆனால், மறுபடியும் அவர்களுடையசெய்கையை எனக்குச் சொல்லு. பலசாலிகளும் பெரியவில்லுடையவர்களுமான அந்தப் பாண்டவர்களை ஹவிஸினால் ஜ்வாலையுடன்கூடின அக்னிகளை மூள்விப்பதுபோல் யார் அடிக்கடி தூண்டுகிறான்?' என்று கேட்டான்.

ஸஞ்சயன், 'ஓ! பாரதரே! திருஷ்டத்யும்னன் இவர்களை எப்பொழுதும், 'ஓ! பரதஸ்ரேஷ்டர்களே! யுத்தம் செய்யுங்கள். யுத்தத்தில் பயப்படாதீர்கள். துரியோதனனால் வேண்டப்பட்டு நெருக்கமாயும் சஸ்திரங்களால் நிறைந்ததாயுமிருக்கிற அந்த யுத்தத்தில் வருபவர்களும் கோபங்கொண்டவர்களும் பின்தொடர்பவர்களோடுகூடினவர்களும் சேர்ந்துவந்தவர்களுமான சில அரசர்களெல்லாரையும், தண்ணீரிலிருந்தும் மீன்களைத் திமியானது பிடிப்பதுபோல, நானொருவ

ஞகவே போரில் பிடிக்கின்றேன். பீஷ்மர் துரோணர் கிருபர் கர்ணன் அஸ்வத்தாமா சல்லியன் துரியோதனன் இவர்களையும், கரையானது கடலைத்தடுப்பதுபோலத் தடுப்பேன்' என்று தூண்டுகின்றான். அவ்விதம் சொல்லுகிறவனான அவனைநோக்கி, தர்மாத்மாவும் அரசருமான யுதிஷ்டிரர், 'பாண்டவர்களுடன் பாஞ்சாலர்களனைவரும் உன்னுடைய தைரியத்தையும் வீர்யத்தையும் அடுத்திருக்கிறோம். எங்களை யுத்தத்திலிருந்தும் கரையேற்று. ஓ! புஜபலமுள்ளவனே! க்ஷத்திரியதர்மத்தில் நிலைத்திருப்பவனும் ஸமர்த்தனுமான உன்னைக் கௌரவர்களை நன்கு சிக்ஷிப்பதில் போதுமானவனாக அறிகிறேன். பகைவரைவாட்டுகின்றவனே! எங்களுக்கு எது நன்மையோ அதை எதிர்த்து வந்தவர்களும் போர்புரிய விருப்பமுள்ளவர்களுமான கௌரவர்களுக்கு நீ செய்யவேண்டும். யுத்தத்திலிருந்தும் விலகினவர்களும் முறிய அடிக்கப்பட்டவர்களும் காப்பவனை விரும்புகிறவர்களுமாயிருப்பவர்களுக்குச் சூரனான எந்த ஆண்பிள்ளை ஆண்மையைக்காண்பித்து எதிரில்நிற்பானோ அவனை ஆயிரங்கொடுத்தும் விலைக்குக் கொள்ளவேண்டுமென்பது நீதிமான்களுடைய கொள்கை. நரஸ்ரேஷ்டனே! அப்படிப்பட்ட நீ சூரனும் வீரனும் பராக்கிரமமுடையவனும் யுத்தங்களில் பயத்தால் பீடையடைந்தவர்களைக் காக்கிறவனுமாயிருக்கிறாய். ஸந்தேகமில்லை' என்று சொன்னார். குந்திபுத்ரரும் தர்மாத்மாவுமான யுதிஷ்டிரர் இவ்விதம் சொல்லுகையில், திருஷ்டத்யும்னன், பயமற்று என்னை நோக்கி, 'ஸூத! துரியோதனனுடைய போர்வீரர்களான எல்லாத் தேசத்தார்களையும், பாஹ்லிகர்களுடன்கூடினவர்களும் விபரீதமாக நடப்பவர்களும் [1] நீண்டஆயுளுள்ளவர்களுமான கௌரவர்களையும் நோக்கிச் சொல்லு. நீ கர்ணனையும் புத்திரருடன்கூடின துரோணரையும் ஜயத்ரதனையும் துச்சாஸனனையும் விகர்ணனையும் அரசனான துரியோதனனையும் பீஷ்மரையும் அடைந்து சொல்லு; விரைவாகச் செல்லு; தாமதியாதே. என்ன சொல்வதுவெனில்:—'யுதிஷ்டிரர் நல்வழியாலே அடையத்தக்கவர். அர்ஜுனன் தேவர்களால் காக்கப்பட்டவனாகி உங்களைக் கொல்லவேண்டாம். சீக்கிரம் தர்மராஜருடைய ராஜ்யத்தைக்கொடுங்கள். உலகத்தில் வீரனும் பாண்டவனுமான அர்ஜுனனை (யுத்தம்கூடாதென்று) கெஞ்சிக்கேளுங்கள். ஸவ்யஸாசியும் தவறாத பராக்கிரமத்தையுடையவனுமான அர்ஜுனன்போன்ற போர்வீரன் இந்தப்பூவுலகில் ஒருவனுமில்லை. காண்டீவமென்கிற வில்லை

1 இங்கே குறிப்பினால் 'ஆயுள் குறைந்தவர்கள்' என்னும் பொருளையுணர்த்தியது.

யுடையவனுன (அர்ஜுனனுக்குத்) தேவர்களாலன்றே தேவலோகத்திலுண்டான ரதமானது ஸம்பாதிக்கப்பட்டது? அவன் மனிதனுல் வெல்லப்படான். யுத்தத்தில் மனத்தைச்செலுத்தாதீர்கள்' என்பது என்றுன்" என்று சொன்னுன்.

---

ஐம்பத்தேட்டாவது அத்யாயம்.

## யாநஸந்திபர்வம். (தொடர்ச்சி.)

(திருதராஷ்டிரன், 'பீஷ்மர்முதலியோர் போரைவிரும்பவில்லை' என்றதும், துரியோதனன், பீஷ்மர்முதலியவரை எதிர்பாராமலே கர்ணன் முதலியவருதவியால் பாண்டவாதியரைக் கொல்லுவதாகச் சொல்லியதும், திருதராஷ்டிரன் துரியோதனனை நிந்தித்ததும்.)

திருதராஷ்டிரன் சொல்லுகின்றுன்: 'பாண்டுபுத்திரனுன தனஞ்சயன் இளமைப்பருவமுதற்கொண்டே க்ஷத்திரியஜாதிக்குரிய பராக்கிரமமுடையவனும் வில்வித்தையில் பயிற்சியுடையவனுமாயிருக்கிறுன். மந்தர்களானவர்கள், நான் புலம்பிக்கொண்டேயிருக்க அவனுடன் யுத்தத்தைச் செய்யப்போகிறுர்கள். துரியோதன! பாரதர்களில் சிறந்தவனே! யுத்தத்திலிருந்தும் திரும்பு. [1] பகைவர்களைச்சிக்ஷிப்பவனே! வெற்றிதோல்விமுதலிய எல்லா நிலைமைகளையுமுடைய யுத்தத்தைப் (பெரியோர்கள்) சிலாகிக்கிறதில்லை. மந்திரிகளுடன்கூடின உனக்குப் பூமியினுடையபாதியானது ஜீவிப்பதற்குப் போதுமானது. பகைவர்களைச் சிக்ஷிப்பவனே! பாண்டுபுத்திரர்களுக்கும் உசிதப்படி கொடு. நீ மகாத்மாக்களான பாண்டுபுத்திரர்களுடன் (வைர) சாந்தியைக் கருதவேண்டுமென்பதைக் கௌரவர்களெல்லாரும் தர்மத்துடன்கூடினதாக நினைக்கின்றுர்கள். அப்பா! புத்திரா! உன்னுடைய இந்தச் [2] சேனையையே ஊன்றிப் பார். இதோ உனக்கு நாசமுண்டாகிவிட்டது. நீயோ மோகத்தால் அறியவில்லை. நானே யுத்தத்தை விரும்பவில்லை. பாஹ்லிகரும் இதை விரும்பவில்லை. பீஷ்மரும் துரோணரும் அஸ்வத்தாமாவும் ஸஞ்சயனும் ஸோமதத்தனும் சலனும் கிருபரும் யுத்தத்தை விரும்பவில்லை. ஸத்தியவ்ரதனும் புருமித்திரனும் ஜயனும்

---

1 நீ பலசாலியாயிருந்தாலும் இந்த யுத்தம் கூடாதென்று கருத்து. [யது.
2 குதிரைமுதலியன கண்ணீர்வடிப்பதால்அபசகுனத்தைப்பற்றிச்சொல்லி

பூரிஸ்ரவஸும் அப்படியே பகைவர்களால் பீடிக்கப்பட்ட கௌர வர்கள் எவர்களிடம் நிலையடைவார்களோ அவர்களும் யுத்தத்தைப் புகழவில்லை. அப்பா! (அவர்களுடையவிருப்பமான) அது உனக்கும் ருசிக்கட்டும். நீ உன் இச்சையால் செய்யவில்லை. கர்ணனும் பாவ புத்தியுள்ள துச்சாஸனனும் ஸுபலபுத்திரனான சகுனியும் உன்னைச் செய்விக்கிறார்கள்' என்று சொல்லத் துரியோதனன் கூறலானான்.

'நான் உம்மிடத்திலோ துரோணரிடத்திலோ அஸ்வத்தாமா விடத்திலோ ஸஞ்சயனிடத்திலோ பீஷ்மரிடத்திலோ காம்போஜ னிடத்திலோ கிருபரிடத்திலோ பாஹ்லிகரிடத்திலோ ஸத்தியவ்ரத னிடத்திலோ புருமித்ரனிடத்திலோ பூரிஸ்ரவஸினிடத்திலோ உம் மைச்சேர்ந்த மற்றவர்களிடத்திலோ சுமையைவைத்து அழைக்க வில்லை. ஓ! தந்தையே! பரதஸ்ரேஷ்டரே! நானும் கர்ணனும் யுத்த மாகிற வேள்வியை வளர்த்து யுதிஷ்டிரனைப் பசுவாகச்செய்து தீக்ஷி தர்களாகப்போகிறோம். ரதம் வேதி; கத்தி ஸ்ருவம்; கதை ஸ்ருக்கு; கவசம் மான்தோல்; எனதுகுதிரைகள் நான்குஹோதாக்கள்; பாணங்கள் தர்ப்பைகள்; புகழானது ஹவிஸ். ஓ! அரசரே! ஆத்மயஜ்ஞத்தால் யமதர்மராஜனைப் பூஜித்து யுத்தத்தில் வெற்றி பெற்றுப் பகைவர்களைக்கொன்றவர்களும் திருவினால் விரும்பப்பட்ட வர்களுமாகப்போகிறோம். ஓ! பிதாவே! நானும் கர்ணனும் என் ப்ராதாவான துச்சாஸனனுமாகிய நாங்கள் மூவர்களும் யுத்தத்தில் பாண்டவர்களைக் கொல்லுவோம். நானாவது பாண்டவர்களைக்கொன்று இந்தப்பூமியை ஆளுவேன். என்னையாவது பாண்டுபுத்திரர்கள் கொன்றுவிட்டு இந்தப்பூமியை அனுபவிப்பார்கள். ஓ! அரசரே! என்னுடைய உயிரும் ராஜ்யமும் எல்லாத்தனமும் [1] விடப்பட்டன. (ராஜ்யத்திலிருந்தும்) நழுவாதவரே! நான் ஒருகாலும் பாண்டவர்க ளுடன் வஸியேன். ஓ! ஐயா! கூர்மையான ஊசியின் நுனியினால் எவ்வளவு குத்தப்படுமோ நமது பூமியின் அவ்வளவு பாகங்கூடப் பாண்டவர்களுக்கு விடத்தக்கதில்லை' என்று சொன்னான். திருத ராஷ்டிரன் சொல்லலானான்: 'அப்பா! துரியோதனன் என்னால் விடப் பட்டான். யமனுடைய வீட்டை நோக்கிப் புறப்பட்ட மந்தனைப் பின்செல்லுகிறவர்களான உங்களெல்லாரையும்பற்றித் துக்கிக்கிறேன். அடிப்பவர்களில் சிறந்தவர்களான பாண்டவர்கள் யுத்தத்தில் எதிர்த்த வர்களாகி மான்களுடைய கூட்டங்களில் புலிகள் கொல்வதுபோலச் [2] சிறந்தவர்களையேசிறந்தவர்களையே கொல்லப்போகின்றனர். எனக்கு

---

[1] வெறுக்கப்பட்டன என்பது. [2] சிறந்தவர்களைப்பார்த்தே.

விபரீதம்போலத்தோற்றுகிறது. நீண்டகைகளையுடைய யுயுதானனாலே கௌரவசேனையாகிற ஸ்திரீயானவள் அலைக்கப்பட்டவளும் விழுங்கப் பட்டவளும் கசக்கப்பட்டவளுமாவாள். மாதவரானவர் ஸம்பூர்ணமா யிருக்கிற தனஞ்சயனுடைய பலத்தை மேலும் பூர்ணம்செய்யப் போகிறார். சினியின்பேரனான ஸாத்தியகி யுத்தத்தில் சரங்களை (விதைகளைப்) போல் விதைக்கிறவனாக நிற்கப்போகிறான். சிறந்த தான யுத்தத்தைப்யுடையவர்களுடைய சேனையின் முகப்பில் பீமஸே னன் நிற்கப்போகிறான். ஒருவரிடமிருந்தும் பயமில்லாதவனான அவனை எல்லாரும் கோட்டையை அடுப்பதுபோல அடுக்கப்போகி றார்கள். எப்பொழுது, போரில் பீமனால் விழும்படிசெய்யப்பட்ட வைகளும் கொம்புமுறிந்தவைகளும் பர்வதங்களுக்கு நிகரானவை களும் மத்தகம்உடைந்தவைகளும் இரத்தத்துடன் கூடினவைகளு மான யானைகளைப் பார்ப்பாயோ, அப்பொழுது, சிதறின மலைகள் போன்ற அவைகளைப் பார்த்துப் பீமனுடைய அடியிலிருந்தும் பயந்த வனாகி, என் வார்த்தையை நினைக்கப்போகிறாய். பீமனால் எரிக்கப் பட்ட தேர்யானைகுதிரைகளின் கூட்டமான சேனையை அக்னியின் கதியைப்போலப் பார்த்துவிட்டு என்னுடைய வார்த்தையை நினைக் கப்போகிறாய். உங்களுக்குப் பெரிதான பயம் வரப்போகிறது. பாண்டவர்களுடன் ஸமாதானத்தையடையாமலிருப்பீர்களேயானால் பீமஸேனனாலே கதையால் அடிக்கப்பட்டவர்களாகிச் சமனத்தை அடைவீர்கள். முறிக்கப்பட்ட பெருங்காட்டைப்போலப் பீமனால் விழும்படி தள்ளப்பட்ட கௌரவசேனையை எப்பொழுது பார்ப் பாயோ அப்பொழுது என்னுடையவார்த்தையை நினைப்பாய்' என் றான். மஹாராஜரே! அரசன் இவ்வளவு சொல்லிவிட்டு அந்த எல்லா அரசர்களோடும் கலந்துபேசி, திரும்பவும், ஸஞ்சயனை நோக்கி வினவலானான்.

---

## ஐம்பத்தோன்பதாவது அத்யாயம்.

## யானஸந்திபர்வம். (தொடர்ச்சி.)

(ஸஞ்சயன் அர்ஜுனன் சொல்லியதை மறுபடியும் கேட்ட திருதராஷ்டிரனுக்குச் சொல்லியது.)

திருதராஷ்டிரன், 'ஸஞ்சய! எது சொல்லப்படாத மிச்சமோ கிருஷ்ணனுக்குப் பிறகு அர்ஜுனன் உன்னை நோக்கி எதைச் சொன்

ஞனே அதைச் சொல்லு. எனக்கோ கேட்பதில் மிக்க விருப்பமிருக்கிறது' என்று சொன்ஞன். ஸஞ்சயன், 'வாஸுதேவருடைய வார்த்தையைக் கேட்டுவிட்டு, குந்தீபுத்ரனும் ஜயிக்கமுடியாதவனுமான தனஞ்சயன், (சொல்லுவதற்கு) ஸமயம் ஏற்பட்டபொழுது, அவர் கேட்டுக்கொண்டிருக்கையில் சொல்லலானுன் :— 'ஸஞ்சய! ஸூத! சந்தனுவின்புத்திரரான பிதாமஹரையும் திருதராஷ்டிரரையும் துரோணரையும் கிருபரையும் சல்யனையும் பாஹ்லிகமகாராஜரையும் அஸ்வத்தாமாவையும் ஸோமதத்தன்மகனையும் ஸுபலபுத்திரனை சகுனியையும் துச்சாஸனனையும் சலனையும் புருமித்திரனையும் விவிம்சதியையும் விகர்ணனையும் சித்திரஸேனனையும் ஜயத்ஸேனனென்கிற அரசனையும் அவந்திதேசத்தரசர்களான விந்தானுவிந்தர்களையும் புருவம்சத்திலுண்டான துர்முகனையும் ஸிந்துதேசத்தரசனை ஜயத்ரதனையும் துஸ்ஸஹனையும் பூரிஸ்ரவஸையும் பகதத்தனென்கிற அரசனையும் புருவம்சத்திலுண்டான ஜலஸந்தனையும் மற்றும் அவ்விடத்தில் கௌரவர்களுடைய பிரியத்திற்காக யுத்தம் செய்வதற்கு வந்தவர்களும் மிகவும் ஜ்வலிக்கிறதான பாண்டவர்களான அக்னியில் மரிக்கவிருப்பமுள்ளவர்களும் திருதராஷ்டிரருடைய புத்திரனுல் அழைக்கப்பட்டவர்களுமாகிவந்த அவர்களையும் நோக்கி என்வசனத்தினுல் (குசலத்தையும் வந்தனத்தையும்) முறைப்படி சொல்லு. ஸஞ்சய! அரசர்களுடைய நடுவில் பாவங்களைச் செய்கிறவர்களுள் முதன்மையானவனும் பொருமையுள்ளவனும் துஷ்டபுத்தியுடையவனும் ராஜபுத்திரனும் பாபாத்மாவும் திருதராஷ்டிரரின் புத்திரனும் மிக்க பேராசைகொண்டவனுமான துரியோதனனிடம் இதைச் சொல்லு. ஸஞ்சய! பூர்ணமான என்னுடைய இந்த எல்லாவார்த்தையையும் மந்திரிகளுடன்கூடின துரியோதனன் கேட்கும்படிசெய்' என்ருன். குந்தீபுத்திரனும் புத்திமானுமாயிருக்கிற தனஞ்சயன் இவ்விதம் (சொல்லிவிட்டு) என்னை ஆலிங்கனம் செய்துகொண்டு, பிறகு, வாஸுதேவரைப் பார்த்துவிட்டு, கடைக்கண் சிவந்து, பயனுள்ளதும் தர்மத்தோடுகூடியதுமான இந்த வார்த்தையையும் சொல்லலானுன் : 'சொல்லுகிறவரும் மகாத்மாவுமான யதுவீரருடைய சொல்லைக்கேட்டு ஞாபகத்தில் வைத்துக்கொண்டபடியே, அதனையும் என்னுடையசொல்லையும் அரசர் எல்லாரும் வந்தபொழுது நீ சொல்லவேண்டும். சரங்களாகிற அக்னியின்புகையையுடையதும் தேர்களின் கட்டுக்களால் சப்தமுடையதாகச் செய்யப்பட்டதும் பெரியயுத்தமாகிற யாகத்தில் பகைவரின் அஸ்திரவலிமையைக் கவர்

கிறதுமான வில்லாகிற ஸ்ருவத்தினாலே ஹோமமானது செய்யப் படாதபடி, அன்புள்ளவர்களாகச் சேர்ந்து முயற்சிசெய்யுங்கள். பகை வர்களைக்கொல்லுகிறவரான யுதிஷ்டிரருக்கு விருப்பமானதும் உரி யதுமான பாதிபாகத்தைக் கொடாமலிருப்பீர்களானால் குதிரைக ளோடும் காலாள்களோடும் யானைகளோடுங்கூடிய உங்களைக் கூர்மை யான சரங்களால் அமங்களமான பிதிருக்களுடையதிக்கை அடையச் செய்வேன்' என்று சொன்னான். தேவர்களுடைய காந்திபோன்ற காந்தியுடையவரே! அதன்பிறகு, நான், நான்குபுஜங்களுடைய ஹரி யையும் அர்ஜுனனையுமே விரைவுடன் நமஸ்கரித்து விடைபெற்றுப் பெரிதான செய்தியைத் தெரிவிப்பதற்காக வேகமாக இவ்விடத்தில் உம்முடைய ஸமீபத்தை அடைந்தேன்' என்று சொன்னான்.

அறுபதாவது அத்யாயம்.

## யானஸந்திபர்வம். (தொடர்ச்சி.)

(திருதராஷ்டிரன் இருதிறத்துப்பலாபலங்களையும் புத்ரரென்னும் அபிமானத்தால் யமன்முதலிய தேவர்களும் பாண்டவர் களுக்குத் துணைசெய்வாரென்பதையும் தனக்கும் ஸமாதானமே விருப்பமென்பதையும் துரி யோதனனுக்குச் சொல்லியது.)

அறிவையே கண்ணாகவுடைய அரசன், ஸஞ்சயனுடைய வார்த் தையைக் கேட்டு, பிறகு, அந்த வார்த்தையைக் குணதோஷங்களால் [1] கணக்குப்பண்ணத் தொடங்கினான். புத்திரர்கள் விஷயத்தில் வெற் றியை விரும்புகிறவனும் பண்டிதனும் [2] புத்திமானுமான அந்த அரசன், புத்தியின் நிச்சயத்தால், உள்ளபடி ஸூக்ஷ்மமாகக் குண தோஷங்களைக் கணக்கிட்டு யதார்த்தமாகப் பலாபலத்தையும் நிச்ச யித்து எப்பொழுது அந்தவார்த்தையைக் [3] குணதோஷங்களால் நிறைந்ததாக நினைத்தானோ, அப்பொழுது, மறுபடியுமே கௌரவ பாண்டவர்களுடைய சக்தியைப் பிரித்தறிவதற்குத் தொடங்கினான். பாண்டவர்களைத் தேவர்கள்மனிதர்களுடைய சக்தியோடும் தேஜ ஸோடும், கௌரவர்களை மிகவும் அற்பமான சக்தியோடும் (கூடினவர்

1 பிரித்தறிய. 2 இரட்டித்தலால் ஒன்றுவிடப்பட்டது.

3 பாண்டவர்களிடம்குணம், புத்ரர்களிடம் தோஷம்; அல்லது, ராஜ் யம் கொடுப்பதில் குணம், யுத்தத்தில் தோஷம்.

களாக நிச்சயித்து), பிறகு, துரியோதனனை நோக்கி, 'துரியோதன! எனக்கு அடிக்கடி (உண்டாகிற) இந்தக் கவலை நீங்கவில்லை. நானோ, இதை உண்மையாகவும் பிரத்யக்ஷமாகவும் நினைக்கிறேன்; அனுமானத்தினாலில்லை. எல்லாப்பிராணிகளும் பிள்ளைகளிடத்தில் மேலான ஸ்நேகத்தைச் செய்கின்றன. சக்திக்குத்தக்கபடி இவர்களுக்குப் பிரியங்களையும் நன்மைகளையும் செய்கின்றன. இப்படியே பெரும்பாலும் உபகாரம் செய்கிறவர்களைப் பார்க்கின்றோம். பெரியோர்கள் பெரும்பாலும் பெரிதான பிரியத்தையே கைம்மாறாகச்செய்வதற்கு விரும்புகின்றனர். ஆகையால், அக்னிபகவானும் காண்டவத்தில் அவனால் செய்யப்பட்டதை நினைக்கிறவனாகிக் கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் நேரிடும் பயங்கரமான போர்எதிர்ப்பில் அர்ஜுனனுக்கு ஸஹாயத்தைச் செய்கிறவனாவான். பெற்றவிருப்பத்தால் பாண்டவர்களைச் சேர்ந்தவர்களான தர்மர்முதலிய தேவர்கள் அழைக்கப்பட்டவர்களாகி அநேகமாக வருவார்கள். பீஷ்மர் துரோணர் கிருபர் முதலியவர்களுடைய பயத்திலிருந்தும் காக்கவிருப்பமுள்ளவர்களாகி இடிக்குச்சமமான கோபத்தை அடைவார்களென்பது என் எண்ணம். தேவர்களுடன் கூடினவர்களும் ஆண்மையிற் சிறந்தவர்களும் வீரியசாலிகளும் அஸ்திரங்களின் கரையை அடைந்தவர்களுமான அந்தப்பார்த்தர்கள் மனிதனால் எதிர்த்துப்பார்க்கப்படவும் கூடாதவர்கள். திவ்யமும் உத்தமமுமான எவனுடைய காண்டீவமென்கிற வில்லானது நெருங்கமுடியாததோ, எவனுடைய பெரிதான தூணீரங்கள் வருணனுடையவைகளும் குறையாதவைகளும் தேவலோகத்தவைகளும் பாணங்களால் நிறைந்தவைகளுமாயிருக்கின்றனவோ, எவனுடைய த்வஜத்திலுள்ள வானரமானது தெய்வத்தன்மை பொருந்தியதோ, ரதமானது தடையற்றதும் புகையினுடைய கதிபோன்ற கதியுடையதுமாயிருக்கிறதோ, நான்கு எல்லையுள்ள பூமியில் எவனுக்கு ஸமமானவனில்லையோ, பெரிதான மேகத்திற்கு நிகரான சப்தமும் ஜனங்களாலே கேட்கப்படுகிறதோ, பேரிடிக்குச்சமமான சப்தமானது பகைவர்கூட்டத்துக்குப் பயத்தைச் செய்கிறதோ, எல்லாஉலகமும் எவனை வீர்யத்தில் மனிதர்களை மிஞ்சினவனாகத் தீர்மானிக்கிறதோ, அரசர்கள் எவனை யுத்தத்தில் தேவர்களைக்கூட வெல்லுகிறவனாக அறிகின்றனரோ, எவன் ஐந்நூறு பாணங்களையும் எடுக்கிறவனும் இமைப்பொழுதுக்குள்ளேயே விடுக்கிறவனும் தூரத்தில் விழும்படி செய்கிறவனுமாகிக் கண்ணுக்குக் காணப்படுகிறதில்லையோ, யுத்தத்தின்பொருட்டு நிலைத்துநிற்பவனும்

தேராளிகளில் சிறந்தவனும் பகைவர்களைச் சிக்ஷிப்பவனுமான எந்த அர்ஜுனனைப் பீஷ்மரும் துரோணரும் கிருபரும் அஸ்வத்தாமாவும் மத்ரராஜனான சல்லியனும் மத்யஸ்தர்களான மனிதர்களும் மனிதர் செயலுக்கு மேற்பட்ட செயலைச்செய்யும் அரசர்களாலும் வெல்லமுடியாதவனாகச் சொல்லுகின்றார்களோ, எவன் ஒருமுறை இழுத்துவிடுகிற வேகத்தினால் ஐந்நூறுசரங்களை விடுகிறானோ, புஜபலத்தால் கார்த்தவீர்யனுக்கு ஒப்பானவனும் பாண்டுபுத்திரனும் பெரியவில்லையுடையவனும் மஹேந்திரனுக்கும் விஷ்ணுவுக்கும் நிகரான பராக்கிரமமுடையவனுமான அந்த அர்ஜுனனைப் பெரிதான யுத்தத்தையுடைய நெருக்கமான இந்தப்போரில் கொல்லுகின்றவனைப்போலப் பார்க்கின்றேன். பாரத! இவ்விதமான எல்லாவற்றையும் இரவும் பகலும் சிந்திக்கிறவனாகிக் கௌரவர்களுடைய பகைதணிவதில் கவலையினால் நித்திரையில்லாதவனும் ஸுகமில்லாதவனுமாயிருக்கிறேன். இப்பொழுது, கௌரவர்களுக்குப் பெரிதான அழிவுத்தொடக்கம் வந்திருக்கிறது. இந்தக்கலகத்திற்கு முடிவு ஏற்படவேண்டுமேயானால், சமனத்தைக்காட்டிலும் சிறந்தது வேறுஇல்லை. ஐயா! பார்த்தர்களுடன் ஸமாதானமே எனக்கு எந்நாளும் விருப்பமாயிருக்கிறது. யுத்தம் ருசிக்கவில்லை. எப்பொழுதும், பாண்டவர்களைக் கௌரவர்களைக்காட்டிலும் அதிகசக்தியுள்ளவர்களாக நினைக்கிறேன்' என்று சொன்னான்.

## அறுபத்தோராவது அத்யாயம்.

## யாநஸந்திபர்வம். (தொடர்ச்சி.)

(துரியோதனன், பாண்டவர்களுக்குத் தேவர்கள் துணைசெய்யாரென்பதைக் காரணத்தோடுகூறித் தன்திறமையைக் கூறித் தானே அவர்களை வெல்வதாகச் சொல்லியது.)

துரியோதனன், பிதாவினுடைய இந்தவார்த்தையைக்கேட்டு, மிக்க பொறுமையுடையவனாகி அதிககோபமுற்று, மறுபடியும் தானே இந்த வார்த்தையைச் சொல்லலானான்: 'ஓ! ராஜஸ்ரேஷ்டரே! தேவர்களை ஸகாயமாகவுடைய குந்திபுத்ரர்கள் (நம்மால் வெல்ல) முடியாதவர்களாயிருப்பார்களென்று நீர் நினைக்கிற அந்தப்பயமானது உம்மிடமிருந்து போகட்டும். பாரதரே! தேவர்கள், விருப்பு வெறுப்புக்களில்லாமையாலும் லோபத்தைவிட்டமையாலும் பதார்த்தங்களின் உபேக்ஷையாலும் தேவத்தன்மையை அடைந்தார்களென்று

தீவிற்பிறந்தவரான வியாஸரும் மிக்கதவமுடையவரான நாரதரும் ஜமதக்னி புத்ரரான பரசுராமரும் முன்னம் நமக்குக் கதைசொன்னார்கள். ஓ! பரதஸ்ரேஷ்டரே! தேவர்கள், மனுஷ்யர்கள்போல, ஒருகாலும் காமத்தினாலும் கோபத்தினாலும் லோபத்தினாலும் பகையினாலும் ப்ரவிருத்திக்கிறதில்லை. அக்னியும் வாயுவும் தர்மனும் இந்திரனும் அஸ்வினீதேவர்களும் காமஸம்பந்தத்தால் பிரவிருத்திப்பார்களேயானால் அப்பொழுது பார்த்தர்கள் துக்கத்தை அடையமாட்டார்கள். ஆகையால், உம்மால் ஒருவிதத்தாலும் இந்தக்கவலையானது அடையத்தக்கதில்லை. ஓ! பாரதரே! இந்தத்தேவர்களோ தேவர்களுக்குரிய (சமதமமுதலிய) தன்மைகளில் அடிக்கடி அபேக்ஷையுள்ளவர்கள்; அல்லது, தேவர்களிடத்தில், காமத்தின் ஸம்பந்தத்தால் பகையும் பேராசையும் காணப்படுமானால், (அப்பொழுது) இந்தத் தேவர்களுடைய இந்தச்செய்கையானது தேவர்களுக்குரிய [1] பிரமாணத்தன்மையால் [2] மேலிடப்போகிறதில்லை. [3] அக்னியானது என்னால் அடிக்கடி [4] மந்திரிக்கப்பட்டு, எல்லா உலகங்களையும் எரிக்கவிருப்பமுள்ளதாகி நாலுபக்கத்திலும் வாரியிறைக்கப்பட்டு அவிகின்றது; ஓ! பாரதரே! அல்லது, தேவர்களிடமிருக்கிற பராக்ரமமானது சிறந்ததேயானால் என்னுடைய (தேஜஸையும்) தேவர்களுடையதைக் காட்டிலும் அதிகமும் நிகரற்றதும்என்று அறியக்கடவீர். ஓ! அரசரே! பிளக்கின்ற பூமியையும் பர்வதங்களுடைய கொடுமுடிகளையும் உலகம் பார்க்க மந்திரஜபத்தால் நிலைக்கச்செய்கிறேன். இவ்வுலகில் சேதனமும் ஜடமுமாயிருக்கிற இந்தச்சராசரத்தினுடைய விநாசத்தின்பொருட்டு உண்டானதும் கோரமும் பெரிதான சப்தத்தையுடையதுமான கல்மாரியையும் காற்றையும், எப்பொழுதும் பிராணிகளிடம் தயையினால், அடிக்கடி உலகம் பார்க்க நான் சமனம் செய்கிறேன். என்னால் ஸ்தம்பனம்செய்யப்பட்ட ஜலங்களில் தேர்களும் காலாட்களும் நடக்கின்றனர். நான் ஒருவனுகத் தேவர்கள் அஸுரர்களின் தன்மைகளை நடத்துகிறவன். ஏதோ ஒரு காரியத்திற்காக நான் அக்ஷௌஹிணிசேனைகளுடன் செல்லுகிற இடங்களில் எங்கெங்கே விரும்புகிறேனோ அங்கே அங்கே எனக்கு ஜலம் உண்டாகிறது. பயத்தையுண்டுபண்ணுகிற ஸர்ப்பமுதலியவைகள் என் தேசத்திலில்லை. மந்திரத்தால் ரக்ஷிக்கப்பட்ட (என்) ப்ரஜைகளைப் பயங்கரமாயுள்ள (பிசாசுமுதலிய)வைகள் துன்பஞ்செய்வ

---

1 'வேதப்ராமாண்யாத்' என்பது வியாக்யானம். 2 'பலிக்காது' என்பது. 3 'அக்னியைவசப்படுத்தியிருக்கிறேன்' என்பது. 4 வேறுபாடம்.

இல்லை. அரசரே! [1]பர்ஜன்யனானவன் என் தேசவாஸிகளுக்கு அதிகமாக மழைபொழிகிறான். என்னுடைய ஜனங்கள் அனைவரும் தார்மிஷ்டர்கள். எனக்கு [2]ஈதி பாதைகள் இல்லை. அச்வினிதேவர்களும் வாயுஅக்னிகளும் தேவர்களுடன்கூடின இந்திரனும் தர்மராஜனுமே என்னால் பகைக்கப்பட்டவர்களை ரக்ஷிக்க மனதூக்கங்கொள்ளவில்லை. இவர்கள் என் பகைவர்களை விரைந்து காக்கவல்லவர்களானால், பார்த்தர்கள் பதின்மூன்று வருஷங்கள் துக்கத்தை அடைந்திருக்கமாட்டார்கள். என்னால் பகைக்கப்பட்டவனைத் தேவர்களும் கந்தர்வர்களும் அஸுரர்களும் ராக்ஷஸர்களும் காப்பதற்கு வல்லவரேயல்லர். உமக்கு இதனை உண்மையாகச் சொல்லுகிறேன். நான் என்னுடைய நண்பர் பகைவர் இருவர்கள் விஷயத்திலும் அடிக்கடி நன்மையையோ தீமையையோ எதை நினைக்கிறேனோ அது முன் வேறுவிதமானதே இல்லை. பகைவரை வாட்டுகிறவரே! 'இன்னது நேரிடப்போகிறது' என்று எதைச் சொல்லுகிறேனோ அது முன் வேறுவிதமானதே இல்லை. என்னை ஸத்யவாக்குள்ளவனென்று அறிகின்றனர். அரசரே! உலகத்தை ஸாக்ஷியாகவுடையதும் திக்குக்களில் பிரஸித்தமானதுமான என்னுடைய இந்த வல்லமையானது உம்மைத் தேறுதல் செய்வதற்காகச் சொல்லப்பட்டது; தற்புகழ்ச்சியால் சொல்லப்படவில்லை. அரசரே! நானோ இதற்கு முன் ஒருபொழுதும் என்னைப் புகழ்ந்துகொண்டதில்லை. தம்மைப் புகழ்ந்துகொள்வது இழிவானவர்களின் நடை அல்லவா? பாண்டவர்களையும் மச்சநாடர்களையும் பாஞ்சாலர்களையும் கேகயர்களையும் ஸாத்யகியையும் வாஸுதேவனையும் என்னால் ஜயிக்கப்பட்டவர்களாகக் கேட்கப்போகிறீர். எவ்வாற்றாலும் நதிகள் ஸமுத்திரத்தை அடைந்து நசிப்பதுபோல அவர்கள் என்னை அடைந்து வம்சத்துடன் நசிக்கப்போகிறார்கள். என்னுடைய சிறந்ததான புத்தியும் சிறந்ததான பராக்ரமமும் சிறந்ததான வீர்யமும் சிறந்ததான வித்தையும் சிறந்ததான என்னுடைய யோகமும் அவர்களைக் காட்டிலும் மேலாயிருக்கின்றன. பிதாமஹரும் துரோணரும் கிருபரும் சல்லியனும் சலனும் அஸ்திரங்களில் எதை அறிவார்களோ அது முழுதும் என்னிடமிருக்கிறது' என்றான். ஓ! பாரதரே! இவ்விதம் சொல்லப்பட்டபொழுது, பகைவரைத் தண்டிக்கின்றவனான திருத

1 இந்திரனுடைய ஒருமூர்த்தி; மழைக்கடவுள்.

2 அதிகமழை, மழையின்மை, வெட்டுக்கிளிகள், எலிகள், கிளிகள், அரசனருகிலிருப்பது ஆகிய இவை.

ராஷ்டிரன், [1]யுத்தம்செய்ய விருப்பமுள்ள பாண்டவருடைய காரியங்களை அறிந்து, மறுபடியும், ஸஞ்சயனை நோக்கி, அந்தச் சமயத்திற்கு உசிதமாயுள்ளதை வினவினான்.

அறுபத்திரண்டாவது அத்யாயம்.

## யாநஸந்திபர்வம். (தொடர்ச்சி.)

(கர்ணன் திருதராஷ்டிரனை அலக்ஷியம் செய்து பாண்டவர்களைக் கொல்வதாகப் பிரதிஜ்ஞைசெய்ததும், பீஷ்மரால் நிந்திக்கப்பட்ட கர்ணன் பீஷ்மர்ஒழியும்வரை தான் ஆயுதம் எடுப்பதில்லையென்று சொல்லிச் சென்றதும், பீஷ்மர் போரில் தினந்தோறும் பதினாயிரவரைக் கொல்வதாகப் பிரதிஜ்ஞை செய்ததும்.)

அவ்விதம் பாண்டவர்களைக்குறித்து அதிகமாக வினவுகிறவனும் விசித்திரவீரியன்புத்திரனுமான அந்தத் திருதராஷ்டிரனை மதிக்காமல், கர்ணனானவன், கௌரவர்களுடைய ஸபையில் திருதராஷ்டிரபுத்திரனை (துரியோதனனை) மகிழ்விப்பவனாகிச் சொல்லலானான்:—'என்னால் முன்காலத்தில் பொய்சொல்லிப் பரசுராமரிடமிருந்து பிரம்மமயமான அஸ்திரமானது அப்பியஸிக்கப்பட்டதை அப்பொழுது அவர் அறிந்து என்னைநோக்கி, '[2] உனக்கு முடிவுக்காலத்தில் (இந்த அஸ்திரம்) தோன்றாமல் போகும்' என்று இவ்விதம் சொன்னார். பெரிதானகுற்றம் ஏற்பட்டும், மகரிஷியான குரு என்னைச் சபிக்கவில்லை. உக்ரமான தேஜஸையுடைய (அந்த) மஹரிஷியோ, ஸமுத்திரத்துடன் கூடிய பூமியையும் எரிக்கவல்லவர். ஆகையால், என்னால் அவருடைய மனமானது என்னுடைய பணிவிடையாலும் ஆண்மையினாலும் அருளுள்ளதாகச் செய்யப்பட்டிருக்கிறது. எனக்கு அந்த அஸ்திரமானது (மறவாமல்) மிச்சமிருக்கிறது. ஆகையால், வல்லவனாயிருக்கிறேன். இது என்னுடைய பாரம். நான் நொடிப்பொழுதில் ரிஷியினுடைய அந்த அருளை அடைந்து பாஞ்சாலர்களையும் கரூசர்களையும் மத்ஸியர்களையும் புத்ர பௌத்ரர்களுடன் பாண்டவர்களையும் கொன்று சஸ்திரத்தால் ஜயிக்கப்பட்ட உல

1 'யுயுத்ஸோ:' என்பதுமூலம். 2 'திருடா! முடிவுக்காலத்தில் அஸ்திரத்தின் நினைவு உன்னை விடப்போகிறது' என்பது பழையவுரை.

கங்களை அடையும்படி செய்வேன். பிதாமஹரான பீஷ்மரும் துரோணரும் எல்லா அரசஶ்ரேஷ்டர்களும் உன் சமீபத்திலிருக்கட்டும். ரிஷியின் 'அருளாலும் பலத்தாலும் போய்ப் பார்த்தர்களைக் கொல்லுவேன். இது என்னுடைய பாரம்' என்று சொன்னான்.

இவ்விதம் சொல்லுகிறவனான அவனை நோக்கி, பீஷ்மர், 'காலத்தால் கவரப்பட்ட புத்தியுடையவனே! கர்ணா! ஏன் உளறுகிறாய்? [1] பிரதானமாயிருப்பவன் கொல்லப்பட்டால் திருதராஷ்டிரபுத்ரர்கள் கொல்லப்பட்டவர்களாகி விடுவார்களென்பதை நீ அறியவில்லை. கிருஷ்ணனை ஸஹாயமாகவுடையவனும் காண்டவ வனத்தை எரிக்கும்படி செய்தவனுமான தனஞ்சயனால் செய்யப்பட்ட காரியத்தைக் கேட்டே உறவினரோடுகூடின நீ மனத்தை அடக்கவேண்டும். தவிரவும், மகாத்மாவும் பகவானும் தேவர்களுக்கதிபதியுமான மஹேந்திரன் உனக்கு எந்தச் சக்தியாயுதத்தைக் கொடுத்தானோ அதை யுத்தத்தில் கேசவராலே சக்ரத்தினால் அடிக்கப்பட்டதும் சாம்பலாகச் செய்யப்பட்டதும் சிதறினதுமாகப் பார்க்கப்போகிறாய். கர்ண! ஸர்ப்பத்தின் முகத்தையுடையதும் எப்பொழுதும் முயற்சியுடன் சிறந்தமாலைகளால் பூஜிக்கப்பட்டு விளங்குகிறதுமான உன்னுடைய சரமானது அர்ஜுனனால் சரக்குவியல்களால் அடிக்கப்பட்டதாகி உன்னுடன் நாசத்தை அடையப்போகிறது. கர்ண! பாணாஸுரனையும் பூமியின் புத்திரனான நரகாஸுரனையும் கொன்றவரான வாஸுதேவர், நெருக்கமான கடும்போரில் உன்போலுள்ளவர்களும் இன்னும் சிறந்தவர்களுமான பகைவர்களைக் கொல்லப்போகிற கிரீடியைக் காக்கப்போகிறார்' என்று சொன்னார்.

கர்ணன், 'விருஷ்ணிபதியான கிருஷ்ணன், ஸம்சயமின்றி, எப்படிச்சொல்லப்பட்டானோ அப்படியேயாவன்; அதைக்காட்டிலும் மேலான மகாத்மாவுமாவன். என்னைச் சிறிது கடுமையாகப் பேசிய தன் பயனைப் பிதாமஹர் கேட்கட்டும். ஆயுதங்களை வைக்கப்போகிறேன். பிதாமஹரானவர் ஒருபொழுதும் என்னை யுத்தத்திலேயும் ஸபையிலேயும் பார்க்கப்போகிறதில்லை. நீர் ஒழிந்தபொழுதுதான் என்னுடைய பிரபாவத்தைப் பூமியிலுள்ள அரசர்களெல்லாரும் பார்க்கப்போகிறார்கள்' என்றான். பெரியவில்லாளியான அவன் இவ்விதம் சொல்லிவிட்டு, ஸபையைவிட்டுத் தன் வீட்டை அடைந்தான்.

---

1 'தலைவன் தக்கவனாக இருக்கவேண்டும்; நீ தகுதியில்லாதவன்' என்பது; 'குருகுலத்தலைவனான நான் செத்தால், அவர்கள் சாகவே போகிறார்கள்' என்றும் கொள்ளலாம்.

அரசரே! பீஷ்மரோ, கௌரவர்களுடைய மந்தியில் மிக நகைத்துத் துரியோதனனையே நோக்கி, 'ஸூதபுத்திரனானவன் ஸத்தியமான ப்ரதிஜ்ஞையுள்ளவனல்லவா? அவன் அந்தப்படி பாரத்தை ஏன் தாங்குவான்? நமது வியூகத்திற்கு எதிரணிவகுத்து மண்டைகளை உடைத்துப் பீமஸேனனிடமிருந்தும் (நேரிடும்) உலகத்தின் நாசத்தைப்பாருங்கள். அவந்திராஜனும் கலிங்கராஜனும் ஜயத்ரதனும் சிறந்த சேதிநாடனும் வாஹ்லிகரும் நிற்கையில், நான் எப்பொழுதும் பகைவீரர்களை ஆயிரக்கணக்காகவும் பதினாயிரக்கணக்காகவும் கொல்லுவேன். எப்பொழுது குற்றமற்றவரும் பகவானுமான பாசுராமரிடம் பிராம்மணனென்றுசொல்லி அந்த அஸ்திரத்தைக் கற்றானோ அப்பொழுதே மனிதர்களில் இழிவான அவனுடைய தர்மமும் தவமும் நஷ்டமாகிவிட்டன' என்று சொன்னார். ராஜஸ்ரேஷ்டரே! பீஷ்மர் அவ்விதவார்த்தையைச் சொல்ல, அஸ்திரங்களைக் கர்ணனும் வைத்துவிட்டுப் போனபொழுது, திருதராஷ்டிரன்புத்திரனும் அற்பபுத்தியுடையவனுமான துரியோதனன் சந்தனுபுத்திரரை நோக்கிச் சொல்லலானான்.

---

## அறுபத்துமூன்றாவது அத்யாயம்.

## யாநஸந்திபர்வம். (தொடர்ச்சி.)

**(துரியோதனன், பீஷ்மர்கருத்தைமறுத்துப் பீஷ்மர்முதலியோரை எதிர்பாராமல் கர்ணதுச்சாஸனர்களுடைய உதவியைக்கொண்டே பாண்டவர்களைக்கொல்வதாகப் பிரதிஜ்ஞைசெய்ததும், விதுரர் அடக்கத்தைப் புகழ்ந்ததும்.)**

துரியோதனன், 'எல்லாரும் மனிதர்களில் ஒத்தபிறப்புள்ளவர்களும் ஒத்தவர்களுமாயிருக்கும்பொழுது எப்படி அந்தப் பார்த்தர்களுக்கே ஒரேபக்ஷமாய் ஜயத்தை நினைக்கிறீர்? நாங்களும் வீர்யத்தாலும் பராக்ரமங்களாலும் ஒத்தபிராயத்தாலும் [1] பிரதிபையினாலும் வித்தையினாலும் அஸ்திரத்தாலும் வீரர்களின்நிறைவினாலும் வேகத்தினாலும் மேற்கொண்ட காரியத்தைச் செய்துமுடிக்கும் திறமையினாலும் ஸமமாயுள்ளவர்களே. எல்லாரும் ஸமமான ஜாதியையுடையவர்களாயிருக்கிறோம். எல்லாரும் மனிதப்பிறப்புள்ளவர்களாயிருக்கிறோம். பிதாமஹரே! அப்படியிருக்க, எப்படி பார்த்தர்

1 ஸமயத்தில் தோன்றும் அறிவு.

களிடத்தில் ஜயத்தை அறிகிறீர்? நான் உம்மிடத்திலும் துரோணரிடத்திலும் கிருபரிடத்திலும் [1] பாஹ்லிகரிடத்திலும் இதரஅரசர்களிடத்திலும் [2] பராக்ரமத்தைவைத்து ஆரம்பிக்கவில்லை. நானும் சூரியபுத்ரனான கர்ணனும் எனது பிராதாவான துச்சாஸனனும் யுத்தத்தில் பாண்டவர்கள் ஐவர்களையும் கூர்மையான சரங்களாலே கொல்லப்போகிறோம். அரசரே! பிறகு, அதிகமான தக்ஷிணைகளையுடைய பலவித பெரியயாகங்களாலும் கோக்களாலும் குதிரைகளாலும் தனத்தினாலும் பிராம்மணர்களைத் திருப்தியடையச் செய்வேன். எப்பொழுது என்னைச் சேர்ந்தவர்கள் யுத்தத்தில் புஜங்களால் பாசத்தால் மான்குட்டிகளைக் கட்டுவதுபோலக் கட்டுவார்களோ, ஜலத்தில் தோணிக்காரனில்லாதவர்களைப் போலச் சிதறச் செய்வார்களோ, அப்பொழுது, அந்தப்பாண்டவர்களும் அந்தக்கேசவனும் அந்த யுத்தத்தில் தேர்களாலும் யானைகளாலும் சூழப்பட்ட பகைவர்களைப் பார்க்கின்றவர்களாகிக் கொழுப்பை விடுவார்கள். காலம் நேரிட்டபொழுது ஒருங்குசேர்ந்தவர்களாகி(ப் பகைவரால்) மீறமுடியாத செயலைச்செய்து மனக்கவலை நீங்கி ஸுகங்களை அடைந்து தடையற்றவர்களாவோம்' என்று சொன்னான்.

பிறகு, திருதராஷ்டிரமஹாராஜன், மனத்தில் மிகவும் துக்கத்தை அடைந்தவனாகி, வித்வான்களிற் சிறந்தவரான விதுரரை நோக்கி, எல்லா அரசர்களுக்கும் எதிரில், 'அப்பா! கர்ணனுடன் கூடினவனும் என்னுடைய புத்திரனுமான துரியோதனன் ம்ருத்யுவின்பாசத்தினால் மதிமயங்கினவனுக்க் காலனுடைய வசத்தை அடைந்துவிட்டான்' என்று சொன்னான். விதுரர், 'இவ்வுலகில் உறுதியைப்பார்க்கின்ற பெரியோர்கள் க்ஷேமத்தைப்பற்றிச் சொல்லுகின்றார்கள். பிராம்மணனுக்கு விசேஷமாகத் [3] தமமானது ஸநாதனமான தர்மம். தமமுள்ள அவனுக்குத் தானமும் பொறுமையும் ஸித்திகளும் உள்ளபடி உண்டாகின்றன. தமமானது, தானம் தவம் ஞானம் அத்யயனம் இவைகளைத் தொடர்ந்திருக்கிறது. தமமானது தேஜஸை விருத்திசெய்கிறது. தமமானது சிறந்ததான பரிசுத்த வஸ்து. (தமமுடைய) மனிதனே பாபமற்றவனும் தேஜஸ் விருத்தியடைந்தவனுமாகிப் பிரம்மத்தை அடைகிறான். ராக்ஷஸர்களிடமிருந்து பயமுண்டாவதுபோலத் தமமில்லாதவர்களிடமிருந்து பிராணிகளுக்கு, எப்பொழுதும், பயம் உண்டாகும். அவர்களைத்

1 ஸோமதத்தன். 2 'இவர்களுடைய பலத்தை நம்பி' என்பது.
3 வெளிப்புலன்களை அடக்குதல்.

தடுப்பதற்காக ப்ரம்மாவினால் க்ஷத்திரிய ஜாதியானது படைக்கப் பட்டது. நான்கு ஆஸ்ரமங்களுக்கும் தமத்தையே உத்தமமான விரதமாகச் சொல்லுகிறார்கள். எந்தத்தமமானது எந்தக்குணங்களுடைய உற்பத்திக்குக் காரணமோ அந்தத் தமத்தினுடைய (குணங்களாகிற) அடையாளத்தைச் சொல்லுவேன். ஓ! ராஜ ஸ்ரேஷ்டரே! அவை:—பொறுமை, தரித்தல், அஹிம்ஸை, [1] ஸமமாயிருத்தல், ஸத்தியம், [2] நேரானதன்மை, இந்திரியங்களுடைய ஜயம், தைரியம், மிருதுத்தன்மை, லஜ்ஜை, சஞ்சலமின்மை, [3] கிருபணத்தனமின்மை, பரபரப்பில்லாமை, ஸந்தோஷம், ஸ்ரத்தையுடையவனாயிருத்தல் இவைகளேயாம். இவைகள் எந்தமனிதனுக்கு இருக்கின்றனவோ அவன் தமமுடையவனாகக்கருதப்பட்டிருக்கிறான். காமம், லோபம், கொழுப்பு, கோபம், நித்திரை, தற்புகழ்ச்சி, அகங்காரம், பொறாமை, சோகம் ஆகிய இவைகளைத் தமமுடையவன் அடையான். கோணலான தன்மையில்லாமையும் வஞ்சனையில்லாமையும் சுத்தத்தன்மையும் தமமுடையவனுடைய லக்ஷணம். ஆசைப்படாதவனும் ஸ்வல்பத்தையடைய விரும்புகிறவனும் [4] விஷயங்களைச் சிந்தியாமலிருப்பவனும் ஸமுத்திரத்திற்கு நிகராயிருப்பவனுமான மனிதன் தமமுடையவனாகச் சொல்லப்பட்டிருக்கிறான். நன்னடக்கையுடையவனும் சீலமுள்ளவனும் தெளிந்த மனமுடையவனும் ஆத்மாவை அறிந்தவனுமான வித்வான் இவ்வுலகில் நன்மதிப்பை அடைந்து அவ்வுலகம் சென்று நல்லகதியையும் அடைவான். எவனுக்கு எல்லாப்பிராணிகளிடமிருந்தும் பயமில்லையோ எவனிடமிருந்து எல்லாப் பிராணிகளுக்கும் பயமில்லையோ பக்வமான அறிவுள்ளவனும் மனிதர்களிற் சிறந்தவனுமான அவன் புகழ்பெற்றவனாவான். எல்லாப் பிராணிகளுக்கும் ஹிதனான அவன் மைத்ரனென்று சொல்லப்படுகிறான். அவனிடமிருந்து ஜனங்கள் நடுங்குகிறதில்லை. ஞானத்தால் திருப்தியடைந்தவன் ஸமுத்திரம்போலக் கம்பீரனாகிச் சமனத்தையடைகிறான். தமமுடையவர்களும் சமத்தை முக்கிய ஸாதனமாயுடையவர்களுமாயிருப்பவர்கள் முன்பு தமது கர்மத்தால் அனுஷ்டிக்கப்பட்டதும் ஸத்துக்களால் ஆசரிக்கப்பட்டதுமானதையே அடைந்து ஸந்தோஷிக்கின்றார்கள். ஞானத்தால் திருப்தியடைந்தவன் கர்மமில்லாமலிருப்பதான ஸந்யாஸத்தையாவது அடைந்து, இந்திரியங்களைவென்றவனும் காலத்தை எதிர்பார்க்

---

1 எல்லாரிடத்திலும் ஸமமாயிருத்தல். 2 உள்ளும்புறமும் ஒத்திருத்தல். 3 பிராணன்போனாலும் கொடாமை. 4 விஷயங்களால் மனங்கலங்காதவன்.

கிறவனுமாகி உலகத்தில் ஸஞ்சரித்துக்கொண்டு ப்ரம்மபாவத்திற்குத் தக்கவனாகிறான். ஆகாயத்தில் பக்ஷிகளுடைய அடிச்சுவடானது காணவேபடாததுபோல ஞானத்தால் திருப்தியடைந்த முனியினுடைய மார்க்கமானது காணப்படுகிறதில்லை. கிரகங்களை விட்டுத் தானே மோக்ஷத்தையே அபிமானிப்பவனுக்கு ஸ்வர்க்கத்தில் தேஜோமயமானவைகளும் நிலைத்திருப்பவைகளுமான உலகங்கள் ஏற்படுகின்றன.

---

அறுபத்துநான்காவது அத்யாயம்.

## யாநஸந்திபர்வம். (தொடர்ச்சி.)

**(விதுரர், பறவைகளின்கதையால் ஞாதிகளைப்பகைக்கலாகாதென்பதையும், வேடன்கதையால் அதிகஆசை அதிக நஷ்டமென்பதையும், வெற்றிதோல்விகள் நிலையற்றவை என்பதையும் சொல்லியது.)**

இவ்வுலகில் ஒருவேடன் பக்ஷிகளுக்காகப் பூமியில் கண்ணியைக் குத்தினானென்று முன்னோர்களிடமிருந்து கேட்டிருக்கிறோம். அதில், சேர்ந்துதிரிகின்றவைகளான இரண்டுபறவைகள் ஒரேகாலத்தில் கட்டுப்பட்டன. அந்த இரண்டுபறவைகளும் அந்தக்கண்ணியை எடுத்துக்கொண்டு சென்றன. அப்பொழுது, வேடன் ஆகாயத்திற் செல்லுகின்ற அவைகளைப் பார்த்து ஒழிவடையாதவனாகி அவை எந்த எந்த வழியிற்செல்லுகின்றனவோ அந்த அந்த வழியால் பின்தொடர்ந்தான். பக்ஷியைவிரும்பி அவ்விதம் பின் செல்லுகிறவனான அந்தவேட்டைக்காரனை, ஆஸ்ரமத்திலிருப்பவரும் [1]ஆஹ்நிகம்செய்தவருமான ஒருமுனிவர் பார்த்தார். ஓ! கௌரவரே! அப்பொழுது அந்தமுனிவர் ஆகாயத்திற் செல்லுகின்ற அவைகளை விரைந்து பின்தொடருகிறவனும் பூமியில் நடப்பவனுமான அவனை நோக்கி, 'மிருகங்களைக்கொல்லுகின்றவனே! இது எனக்கு விசித்திரமும் ஆச்சரியமுமாகத் தோன்றுகிறது. பறக்கின்ற பக்ஷிகளைக் காலால் நடக்கின்ற நீ ஏன் பின்தொடர்ந்து ஓடுகிறாய்?' என்று இந்த [2]ஸ்லோகத்தினால் கேட்டார். வேடனானவன், 'இந்த இரண்டும் சேர்ந்து என்னுடைய ஒரேகண்ணியை எடுத்துக்கொண்டு போகின்றன. இவைகள், எந்த

---

1 ஆகாயத்திற்செல்லுகிற பக்ஷிகளைப் பார்ப்பதற்குக் காரணம்.

2 முனிவர் சொல்லிய சொற்களடங்கிய ஸ்லோகம்.

விடத்தில் [1] விவாதத்தை அடையுமோ அந்தவிடத்தில் என்வசத்தை அடையும்' என்றுசொன்னான். அந்தப்பக்ஷிகள் மிருத்யுவால் ஸங்கிக்கப்பட்டு, விவாதத்தை அடைந்து மிகவும் கெடுமதியுள்ளவைகளாகிச் சண்டையையும்செய்து பூமியில் விழுந்தன. பரபரப்புடன் கூடியவைகளும் மிருத்யுபாசத்தின் வசத்தை அடைந்தவைகளுமான அவைகள் சண்டைசெய்கிறவைகளாகி அஜாக்ரதையாயிருக்க, உடனே, வேடன் கிட்டச்சென்று அவைகளைப் பிடித்தான். இவ்விதம் எந்தஞாதிகள் அர்த்தவிஷயத்தில் ஒருவரோடொருவர் கலகத்தைஅடைகின்றார்களோ அவர்கள், கலகத்தால் பக்ஷிகள் அடைந்ததுபோல மிருத்யுவின்வசத்தை அடைகின்றார்கள். நல்லபோஜனம், நல்லபேச்சு, நன்மையை வினவுதல், சேர்க்கை இவைகள் ஞாதிகள் செய்துகொள்ளவேண்டியவைகள். ஒருபொழுதும் விரோதம் செய்யத்தக்கதில்லை. எவர்கள் நல்லமனமுடையவர்களாய்ப் பெரியோர்களைச் சமயத்தில் அடுத்தார்களோ அவர்களனைவரும் ஸிம்மத்தால் காக்கப்பட்ட வனம்போல நெருங்கமுடியாதவர்களாகின்றனர். ஓ! பரதஶ்ரேஷ்டரே! எவர்கள் எப்பொழுதும் அர்த்தத்தைஅடைந்து தீனர்கள்போலிருக்கின்றார்களோ அவர்கள் செல்வத்தைப் பகைவருக்குக் கொடுத்துவிடுகின்றார்கள். பரதஶ்ரேஷ்டரே! திருதராஷ்டிரரே! ஞாதிகளானவர்கள் பிரிந்தவர்களானால் பிரிந்த கொள்ளிகள் போல் [2] புகைதலுடன் கூடுகிறார்கள். (அவர்களே), சேர்ந்தவர்களானால், சேர்ந்தகொள்ளிகள் போல [3] ஜ்வலிக்கின்றனர்.

ஓ! கௌரவரே! என்னால் பர்வதத்தில் பார்க்கப்பட்டபடி இதோ வேறொன்றைச் சொல்லுகிறேன். அதனையும் தெரிந்துகொண்டு எது நன்மையோ அதைச் செய்யும். நாங்கள், வேடர்களோடும், தேவர்களுக்கு ஸமானர்களும் (மந்திர யந்திர முதலிய) வித்தைகளையும் ஔஷதிகளையும்பற்றிப் பேசுவதில் விருப்பமுள்ளவர்களுமான பிராமணர்களோடும், சுற்றிலும் மலை முழுதும் புதராயுள்ளதும் ஜ்வலிக்கின்ற ஔஷதிஸமூகங்களையுடையதும் ஸித்தர்களாலும் கந்தர்வர்களாலும் அடையப்பட்டதுமான கந்தமாதனமென்கிற மலைக்குச் சென்றோம். அவ்விடத்தில் மேடுபள்ளமான மலைச்சாரலில் ஒரு பள்ளத்திலிருப்பதும் பொன்னிறமான ஈத்தேனடையுள்ளதும் குடம்போலுள்ளதும் ஸர்ப்பங்களால் காக்கப்பட்டதும்

---

1 ஒற்றுமையில்லாமல் வெவ்வேறுபக்கத்தை நோக்குதல்.

2 மனம் புகைகின்றனர். 3 சேர்ந்துவாழ்ந்து விளங்குகின்றனர்.

குபேரனுக்கு மிகவும் பிரியமுமான தேனை எல்லாரும் பார்த்தோம். ஓஷதிகளை ஸாதிக்கின்ற அந்தப் பிராம்மணர்கள், 'இதை அடைந்தால், மனிதன் மரிக்கும் தன்மையுள்ளவனாயிருந்தாலும், அமரத்தன்மையை அடைகிறான்; கண்ணில்லாதவன் கண்ணை அடைகிறான். கிழவன் தருணனாகிறான்' என்று சொன்னார்கள். ஓ! அரசரே! அப்பொழுது, வேடர்கள் அதைப்பார்த்துவிட்டு அதை எடுக்க விருப்பங்கொண்டு மேடுபள்ளங்களையுடையதும் ஸர்ப்பங்களையுடையதுமான அந்த மலைக்குகையில் (சென்று) நாசத்தை அடைந்தார்கள். அப்படிப் போலவே, உம்முடைய இந்தப் புத்திரன் ஒருவனாகப் பூமியைவிரும்புகிறான். அறியாமையால் தேனைப்பார்க்கிறான்; பள்ளத்தைப் பார்க்கவில்லை. துரியோதனன் யுத்தத்தில் ஸவ்யஸாசியுடன் யுத்தம்செய்ய மனமுடையவனாயிருக்கிறான். நான் இவனுக்கு அவ்வித பலத்தையோ பராக்ரமத்தையோ பார்க்கவில்லை. எவன் ஒருவனாகவே தேரிலேறிக்கொண்டு பூமியை ஜயித்தானோ, தக்கபலத்தோடு சென்றவர்களான பீஷ்மர் துரோணர் முதலியவர்கள் விராடநகரத்தில் எவனால் பங்கப்படுத்தப்பட்டுப் பயத்தைஅடைந்தார்களோ, எந்த வீரன் உம்முடைய பார்வையை எதிர்பார்க்கிறவனாய் க்ஷமிக்கிறானோ அவனிடத்தில் உமக்கு என்ன காணப்படவேண்டும்? குரோதத்தை அடைந்த த்ருபதனும் மச்சநாட்டரசனும் தனஞ்சயனும் யுத்தத்தில் மீதிவைக்கமாட்டார்கள். ஓ! திருதராஷ்டிரரே! ராஜாவான யுதிஷ்டிரனை [1] மடியிலிருக்கச்செய்யும். இரண்டுபேர்கள் யுத்தம் செய்பவர்களாயிருக்கையில், போரில் வெற்றியானது (இன்னாருக்குத்தான் என்று) உறுதியுள்ளதாகாது' என்று சொன்னார்.

## அறுபத்தைந்தாவது அத்யாயம்.

## யானஸந்திபர்வம். (தொடர்ச்சி.)

(திருதராஷ்டிரன், அர்ஜுனன் வாஸுதேவருக்கு மிக்க நண்பனாதலால் அவனை வெல்வது இயலாதென்றும் ஸமாதானம் செய்துகொள்ள வேண்டுமென்றும் துரியோதனனுக்குச் சொல்லியது.)

திருதராஷ்டிரன், 'புத்ரா! துரியோதனா! உன்னைநோக்கிச் சொல்லுவதை அறியக்கடவாய். உலகங்களைத் தரிக்கின்ற பஞ்ச

1 ஸமாதானஞ் செய்துகொள்ளும்.

மஹாபூதங்களுடைய தேஜஸ்ஸைப்போன்ற பஞ்சபாண்டவர்களுடைய தேஜஸ்ஸைக் கவர விரும்புகிறாயாகையால், வழிஅறியாத வழிப்போக்கன்போலத் தவறுதலான வழியை நினைக்கிறாய். நீ மரணத்தை அடைவதைத்தவிர, இவ்வுலகில் மிகச்சிறந்த தர்மத்தை அடைந்தவனும் குந்திபுத்ரனுமான யுதிஷ்டிரனையோ இந்தஜன்மத்தில் ஜயிக்கத்தக்கவனில்லை. பலத்தில் தனக்கு நிகரில்லாதவனும் குந்திபுத்திரனும் யுத்தத்தில் அந்தகனுமாயிருக்கிற அந்தப் பீமஸேனனையும் மரமானது பெருங்காற்றைப் (பயமுறுத்துவது) போலப் பயமுறுத்துகிறாய். மலைகளுள் மேருவைப்போல் ஆயுதமெடுத்தவர் அனைவருள்ளும் சிறந்தவனும் யுத்தத்தில் காண்டீவமென்கிற வில்லையுடையவனுமான தனஞ்சயனை யுத்தத்தில் (எதிர்த்துப்) புத்திமானான எவன் யுத்தம்செய்வான்? பகைவரினிடையில், தேவராஜன் வஜ்ராயுதத்தை விடுவதுபோலச் சரங்களைவிடுகின்றவனும் பாஞ்சாலன்புத்திரனுமான திருஷ்டத்யும்னன் இப்பொழுது யாரைத்தான் வெட்டமாட்டான்? வெல்லமுடியாதவனும் விருஷ்ணிகளிலும் அந்தகர்களிலும் பலவானாக ஒப்புக்கொள்ளப்பட்டவனும் பாண்டவர்களுடைய நன்மையில் பற்றுள்ளவனுமான ஸாத்யகியும் உன்சேனையை நாசஞ்செய்யப்போகிறான். ஒப்புமையால் மூவுலகங்களுக்கும் மேற்பட்டவரும், புண்டரீகாக்ஷருமான அந்தவாஸுதேவருடன் புத்திமானான எவன் யுத்தம் செய்வான்? இவருக்குத் தாரங்களும் ஞாதிகளும் பந்துக்களும் தம் சரீரமும் பூமியும் ஒருபாகம்; அர்ஜுனன் ஒருபாகம். எதில் வெல்லமுடியாதவரான வாஸுதேவரும் மனத்தையடக்கியவனான அர்ஜுனனும் இருக்கின்றார்களோ, (அல்லது) எதில் கேசவரிருக்கிறாரோ அந்தச் சைனியமானது பூமியினாலேகூடத் தாங்கக்கூடியதன்று. ஐயா! அன்புடையவர்களும் பயனைச்சொல்லுகிறவர்களுமான பெரியோர்களுடைய வார்த்தையில் நில்லு. பிராயமுதிர்ந்தவரும் சந்தனுவின் புத்ரரும் பிதாமஹருமான பீஷ்மரைப் [1]பொறுக்கக்கடவாய். கௌரவர்களுடைய பயனைக் கருதுகிறவனும் சொல்லுகிறவனுமான என்னையும் துரோணரையும் கிருபரையும் விகர்ணனையும் மஹாராஜரான பாஹ்லிகரையும் கேட்கவிரும்பு. இவர்களும் நான் எப்படியோ அப்படியேயாவர்; இவர்களை அப்படியே நினைக்கவேண்டும். பாரத! இவர்களெல்லாருமோ தர்மத்தை அறிகின்றவர்களும் ஸமமான அன்புடையவர்களுமாயிருப்பவர்கள். விராடநகரத்தில் உன் எதிரில் தம்பிமார்களுடன்கூட உன்சேனையானது பசுக்களைவிட்டுவிட்டு மிகவும்

1 'அவர் வார்த்தையைக் கேள்' என்பது கருத்து.

நடுங்கிச் சிதறினதென்பதும் அந்த நகரத்தில் ஒருவனுக்கும் பல பேர்களுக்கும் நேர்ந்த (சண்டையாகிய) பெரிதான ஆச்சரியமுமே போதுமான அத்தாட்சியாகும். அர்ஜுனன் அதை அவ்விதம் செய்தான். அவர்களெல்லாருமே அவ்விதம் செய்வார்களென்று சொல்ல வேண்டுமா? அப்படிப்பட்ட நீ (அவர்களை) பிராதாக்களாக நினைக்கக் கடவாய். (ராஜ்யத்தைக்கொடுப்பதாகிய) [1] ஜீவனோபாயத்தால் அவனை உபசரிக்கக் கடவாய்' என்று சொன்னான்.

---

அறுபத்தாறுவது அத்யாயம்.

## யாநஸந்திபர்வம். (தொடர்ச்சி.)

**(திருதராஷ்டிரன்சொல்லைத் துரியோதனன் கேளாமற் போனதும், ஸபையோர் கலந்துசென்றதும், திருதராஷ்டிரன் இருதிறத்துச் சேனையின் பலாபலத்தையும் வினவியதும், வ்யாஸர் திருதராஷ்டிரனுக்கு மறுமொழிசொல்ல ஸஞ்சயனுக்கு அனுமதி கொடுத்ததும்.)**

திருதராஷ்டிரனுடைய வார்த்தையை அவனுடைய புத்ரனை துரியோதனன் அங்கீகரிக்காமற் போகவே, எல்லாரும் மௌனமாயிருந்தவுடன், அரசர்கள் எழுந்திருந்தனர். ஓ! மஹாராஜரே! பூமியிலுள்ள எல்லா அரசர்களும் எழுந்திருந்தபொழுது, புத்திரர்களுடைய வசத்தை அடைந்த அரசனானவன், அவர்களுக்கு வெற்றியைவேண்டுகிறவனாகி, ஏகாந்தத்தில் ஸஞ்சயனை நோக்கி, [2] அவனுடைய நிச்சயத்தையும் [3] பிறர்களுடைய நிச்சயத்தையும் பாண்டவர்களுடைய நிச்சயத்தையும் வினவத் தொடங்கினான்.

திருதராஷ்டிரன், 'கவல்கணகுமார! நீ இந்த நமது சேனையிலும் பாண்டவர்களுடைய சேனையிலும் [4] ஸாரமாயும் அற்பமாயுமுள்ளவைகளை நமக்குச் சொல்லு. இவர்களுடையதில் எது பெரிது? அவர்களுடையதில் எது சிறிது? நீ எல்லாவற்றையும் செவ்வையாக

---

1 'காலக்ஷேபத்திற்குப் போதுமானதைக் கொடுத்து' என்பது கருத்து.

2 'ஆத்மநஸ்ச' என்பது மூலம்; 'தன்னுடைய' என்பதுபொருள்; அதாவது, 'ஸஞ்சயனுடைய' என்பது கருத்து.

3 'தன்னைச் சேர்ந்த மற்றவர்களுடைய' என்பது இங்கிலிஷ்மொழி பெயர்ப்பின் கருத்து.

4 பலமுள்ளவர்களும் பலமில்லாதவர்களும்.

அறிகிறாய். ஸஞ்சய! நீ இவைகளின் ஸாரத்தை அறிகின்றவன்; எல்லாவற்றையும் பார்க்கின்றவன்; தர்மத்திலும் அர்த்தத்திலும் ஸமர்த்தனும் நிச்சயமாய் அறிகின்றவனுமாயிருப்பவன். அப்படிப் பட்ட நீ, கேட்கப்பட்டவனாகி, எல்லாவற்றையும் எனக்குச்சொல்லு. இவர்களில் எவர்கள் யுத்தம் செய்கிறவர்களாயில்லை?' என்று கேட் டான்.

ஸஞ்சயன், 'ஓ! அரசரே! நான் உமக்கு ஏகாந்தத்தில் ஒரு பொழுதும் ஒன்றையும் சொல்லமாட்டேன். உமக்கோ அஸூயையே உண்டாகும். அஜமீடவம்சத்திற்பிறந்தவரே! பெரிதான விரதமுள்ள உம்முடைய பிதாவையும் தேவியான காந்தாரியையும் வரவழைப்பீ ராக. ஓ! அரசரே! அவர்கள் உம்முடைய அஸூயையைப் போக்கு வார்கள். அவர்கள் தர்மத்தை அறிந்தவர்களும் ஸமர்த்தர்களும் நிச்சயமாய் அறிகின்றவர்களுமாயிருப்பவர்கள். அவர்களுடைய முன் னிலையில் உமக்குக் கேசவர் அர்ஜுனன் இவர்களுடைய கருத்து முழுமையும் சொல்லுவேன்' என்று சொன்னான்.

இவ்விதம் சொல்லக்கேட்ட (அரசனால்) விதுரரைக்கொண்டு வரவழைக்கப்பட்ட காந்தாரியும் வியாஸரும் விரைவில் அவ்விடம் வந்தார்கள்; அந்த ஸபையிலும் பிரவேசிக்கும்படி செய்யப்பட்டார் கள். பேரறிவாளரான கிருஷ்ணத்வைபாயனர், அங்கு வந்தவுடன், ஸஞ்சயனும் புத்திரனை திருதராஷ்டிரனுமாகிய இவர்களுடைய அந்த அபிப்பிராயத்தை அறிந்து, 'ஸஞ்சய! கேட்கிறவனை திருத ராஷ்டிரனுக்கு அவன் வினவுகின்ற எல்லாவற்றையும் உண்மையாகச் சொல்லு. அந்த வாஸுதேவரிடத்திலும் அர்ஜுனனிடத்திலுமுள்ள எல்லாவற்றையும் நீ உள்ளபடி அறிகிறாய்' என்று சொன்னார்.

## அறுபத்தேழாவது அத்யாயம்.

## யாநஸந்திபர்வம். (தொடர்ச்சி.)

(ஸஞ்சயன் சிறந்தவரெல்லாரிலும் வாஸுதேவர் மிகச்சிறந்தவ ரென்று திருதராஷ்டிரனுக்குச் சொல்லியது.)

ஸஞ்யன், 'ஓ! விபுவே! வில்லாளிகளான அர்ஜுனனும் வாஸு தேவரும் சிறந்ததை விரும்புகின்றவர்களும் [1] காமத்தைத்தவிர

[1] 'முன் பிறப்பிற்செய்த வினையாலல்லாமல் தமது இச்சையால் பிறந்தவர்கள்' என்பது பழைய உரையின் கருத்து.

மற்றவை (அறம் பொருள் வீடு)களில் உறுதியாயிருப்பவர்களும் ஸர்வ பாவம் என்கிற (ப்ரம்ம பாவத்திற்கு) ஒத்தவர்களுமாயிருப்பவர்கள். சிறந்த மனமுடையவரான வாஸுதேவருடைய அந்தச் சக்ரமானது விடப்பட்டதுபோல [1] ஒருபாகஅளவு வெளியை அடைந்து [2] மாயையினாலே சுற்றிவருகிறது. கௌரவர்கள்விஷயத்தில் கபடமுடையதும் பாண்டவர்களுக்கு மிகவும் ஸம்மதமும் தேஜஸுகளின் ஸமூகத்தால் பிரகாசிப்பிக்கப்பட்டதுமான அது (பாண்டவகௌரவர்களுடைய) ஸாராஸார பலத்தை அறிவதற்கு ஸாதனமாயிருக்கிறது. மஹாபலசாலியான மாதவர் குரூரர்களாக விளங்கின நரகனையும் சம்பரனையும் கம்ஸனையும் சிசுபாலனையும் விளையாட்டுப்போல ஜயித்துவிட்டார். சிறந்ததான ஸ்வரூபத்தையுடையவரும் மனத்தை வசம் செய்தவருமான புருஷோத்தமரானவர் மனத்தினாலேயே பூமியையும் ஆகாயத்தையும் ஸ்வர்க்கத்தையும் தம்வசமாக்குபவர். அரசரே! ஸாராஸார பலத்தை அறிவதற்காகப் பாண்டவர்களைக் குறித்து அடிக்கடி நீர் என்னைக் கேட்கிறதைச் சுருக்கமாக என்னிடமிருந்து கேளும். ஒருபக்கம் உலகமுழுவதுமிருந்தாலும் மற்றொரு பக்கம் ஜனார்த்தனரிருந்தாலும் ஸாரத்தின் விஷயத்தில் உலகம் முழுமையையும்காட்டிலும் ஜனார்த்தனர் மேலானவர். இந்த உலகத்தை ஜனார்த்தனர் மனத்தினாலேயே சாம்பலாக்குவர். உலகம் முழுமையுமோ ஜனார்த்தனரிடத்தில் ஒன்றும் செய்வதற்குச் சக்தியுள்ளதாகாது. எங்கே ஸத்தியமோ எங்கே தர்மமோ எங்கே லஜ்ஜையோ எங்கே நேர்மையோ அங்கே கோவிந்தர் இருக்கிறார். எங்கே கோவிந்தரோ அங்கே ஜயம் இருக்கிறது. புருஷோத்தமரும் பிராணிகளுக்கு ஆத்மாவுமான ஜனார்த்தனர் விளையாடுகிறவர்போலப் பூமியையும் ஆகாயத்தையும் ஸ்வர்க்கத்தையும் (காரியங்களில்) செல்லச் செய்கிறார். அவர் உலகத்தை மயக்குகிறவர்போலப் பாண்டவர்களை வியாஜமாகச்செய்து அதர்மத்தில் பற்றினவர்களும் மூடர்களுமான உம்முடைய புத்திரர்களை எரிப்பதற்கு விரும்புகிறார். பகவானான கேசவர் காலமாகிற சக்ரத்தையும் ஜகத்தாகிற சக்ரத்தையும் யுகமாகிற சக்ரத்தையும் தம்முடைய யோகத்தினாலே எப்பொழுதும் சுற்றும்படி செய்கிறார். பகவானொருவரே காலத்திற்கும் மிருத்யுவிற்கும் சராசரத்திற்கும் தலைவராகிறார். இதனை உமக்கு உண்மையாக உரைக்கிறேன். மஹாயோகியான ஹரியானவர் எல்லாஉலகத்திற்கும் தலைவராயிருந்தும் துர்ப்பலனான உழவன்போல வேலைகளைச்

1 ஐந்து முழநீளம். 2 வடிவம் அறியப்படாமல்.

செய்ய யத்தனிக்கிறார். கேசவர் (தம்முடைய) அந்த மாயையின் சேர்க்கையினால் உலகங்களை வஞ்சிக்கிறார். அவரையே அடைகின்ற மானிடர்கள் மயக்கத்தை அடைகிறதில்லை' என்றான்.

---

## அறுபத்தெட்டாவது அத்யாயம்.

## யாநஸந்திபர்வம். (தொடர்ச்சி.)

(திருதராஷ்டிரன் பகவானை அறியும் வழியை ஸஞ்சயனைக் கேட்க, வியாஸர் அதனைச் சொல்லும்படி ஸஞ்சயனுக்கு அனுமதி கொடுத்தது.)

திருதராஷ்டிரன், 'ஸஞ்சய! மாதவரை எல்லா உலகங்களுக்கும் மஹேச்வரராக நீ எப்படி அறிகிறாய்? நான் ஏன் அவரை அறியவில்லை? அதனை எனக்குச் சொல்' என்றான். ஸஞ்சயன், 'அரசரே! கேளும். உமக்குப் பக்தியானது இல்லை. எனக்கு [1] பக்தி குறையவில்லை. அஞ்ஞானத்தால் கெடுக்கப்பட்டுப் பக்தியில்லாதவன் கேசவரை அறியான். ஓ! ஐயா! பக்தியினாலே, மூன்று [2] யுகங்களையுடையவரும் (உலகங்களுக்குக்) கர்த்தாவும் (கர்மத்தால்) ஸாதிக்க முடியாதவரும் பிராணிகளுடைய உற்பத்திக்கும் அழிவுக்கும் காரணரும் தேவருமான மதுஸூதனரை அறிகின்றேன்' என்றான்.

திருதராஷ்டிரன், 'ஸஞ்சய! ஜனார்த்தனரிடத்தில் உனக்கு நித்யமாயிருப்பதும் மூன்று யுகங்களையுடைய அவரை நீ அறிவதற்குக் காரணமுமான அந்தப்பக்தியானது எப்படிப்பட்டது?' என்றான். ஸஞ்சயன், 'உமக்கு மங்களமுண்டாகுக. நான் வஞ்சனை செய்வதில்லை. (ஈச்வரார்ப்பணம் செய்யாமல்) தர்மத்தைச் செய்வதில்லை. பக்தியினால் சுத்ததன்மையை அடைந்து சாஸ்திரத்தினாலே ஜனார்த்தனரை அறிகிறேன்' என்றான்.

(அப்பொழுது), திருதராஷ்டிரன், (துரியோதனனை நோக்கி), 'துரியோதன! இந்திரியங்களுக்கீசரான ஜனார்த்தனரைச் சரணம்அடையக்கடவாய். அப்பா! ஸஞ்சயன் நமக்கு ஆப்தன். (ஆகையால்), கேசவரைச் சரணமாக அடை' என்றான். துரியோதனன், 'தேவகீபுத்ரரான பகவான் அர்ஜுனனிடத்தில் ஸ்நேகத்தைச் சொல்லிக்கொண்டு உலகங்களைக் கொல்லப்போகிறாரேயானால் நான் இப்பொழுது (அந்தக்) கேசவரை அடையேன்' என்றான்.

---

1 'வித்யா' என்பது மூலம். 2 ஸ்தூலஸூக்ஷ்மகாரண சரீரங்கள்.

திருதராஷ்டிரன், 'ஏ! காந்தாரி! மிக்க துர்ப்புத்தியுடையவனும் பொறாமைக்காரனும் கெட்டமனமுடையவனும் அகங்காரியும் சிறந்தவர்களுடைய வார்த்தையை மீறுகிறவனுமான உன்னுடைய இந்தப்புத்திரன் கீழேபோகிறான்' என்றான். காந்தாரி, 'ஐஸ்வர்யத்தை விரும்புகிறவனே! கெட்டபுத்தியுள்ளவனே! பெரியோர்களுடைய கட்டளையைக் கடப்பவனே! சிறுபிள்ளைத்தன்மையுள்ளவனே! ஐஸ்வர்யத்தையும் உயிரையும் பிதாவையும் என்னையும்விட்டுப் பகைவருக்கு மகிழ்ச்சியை வளர்ப்பவனும் எனக்குத் துயரத்தைவளர்ப்பவனுமாகிப் பீமஸேனனால் அடிக்கப்பட்டுப் பிதாவின் வார்த்தையை நினைக்கப்போகிறாய்' என்றாள்.

(அப்பொழுது), வ்யாஸர், 'அரசனே! திருதராஷ்டிர! நீ கிருஷ்ணனுக்குப் பிரியனாயிருக்கிறாய். என் வார்த்தையைக்கேள். உனக்கு ஸஞ்சயன் தூதன். இவன் உன்னை நன்மையில் சேர்ப்பிக்கப்போகிறான். இவன் அநாதியும் பரனுமான ஹ்ருஷீகேசரை அறிகிறான். ஆகையால், ஏகாக்ரமனத்துடன் அவனைக் கேட்கவிரும்புகிற (உன்னைப்) பெரியபயத்திலிருந்தும் விடுவிக்கப்போகிறான். விசித்ரவீர்யன்புத்திரா! கோபத்தாலும் மகிழ்ச்சியாலும் சூழப்பட்டவர்களும் [1]பலவிதமானபாசத்தால் கட்டப்பட்டவர்களும் தம்முடைய பொருள்களைக்கொண்டு மகிழாதவர்களுமான மனிதர்கள் காமத்தால் மூடர்களாகி, நடத்துகிறவனான ஒருகுருடனால் மற்றக்குருடர்கள் நடத்தப்படுவதுபோல, தங்கள் கர்மங்களாலே நடத்தப்பட்டு அடிக்கடி யமனுடையவசத்தை அடைகின்றனர். வித்வான்கள் எதனால் செல்லுகின்றார்களோ, இந்த மார்க்கமானது ஒரே ஸ்தானத்தையுடையது. மஹானானவன் அதைக்கண்டு ஸம்ஸாரத்தைத் தாண்டுகின்றான்; அதில் பற்றுகிறதில்லை' என்றார்.

திருதராஷ்டிரன், 'அப்பா! ஸஞ்சய! எந்தமார்க்கத்தினால் ஹ்ருஷீகேசரையடைந்து சிறந்ததான மோக்ஷத்தையடைவேனோ, ஒன்றிலிருந்தும் பயமில்லாததான அந்த மார்க்கத்தை எனக்குச் சொல்' என்றான். ஸஞ்சயன், 'மனத்தை ஜயிக்காதவன் மனத்தை ஜயித்தவரான ஜனார்த்தனரை ஒருகாலும் அறியமாட்டான். ஆத்மாவை அறிவதற்கு இந்திரியங்களை அடக்குவதைக் காட்டிலும் வேறான உபாயம் இல்லை. (விஷயங்களில்) செல்லுகின்ற இந்திரியங்களுடைய விஷயப்பற்றை விடுவதென்பது ஜாக்ரதையாலுண்டாகிறது. ஜாக்ரதையும் கொல்லாமையும், ஐயமின்றி ஞானத்துக்குக்

1 ஆசாபாசம், ஸ்நேகபாசம், கர்மபாசம் என்பன.

காரணமாகும். அரசரே! சோம்பலைவிட்டு இந்திரியங்களை அடக்குவதில் முயற்சியுள்ளவராகக்கடவீர். உம்முடையபுத்தியானது நழுவ வேண்டாம். இந்தப்புத்தியைச் செல்லுமிடங்களிலிருந்து அடக்கும். வேதியர்கள் நிலையான இந்தஇந்திரியங்களை (ஓரிடத்தும் செல்லாமல்) நிலைநிறுத்துவதை ஞானமாக அறிகின்றனர். இதுதான் ஞானமும் வித்வான்கள்செல்லுகின்ற மார்க்கமுமாம். அரசரே! கேசவரானவர் மனிதர்களால் ஜயிக்கப்படாத இந்திரியங்களைக்கொண்டு அடையத்தக்கவரல்லர். [1] ஈஸ்வரரானவர் சாஸ்திரலாபத்தினாலும் யோகத்தினாலும் தத்வவிஷயத்தில் (விளங்கும்படி) அனுக்ரகத்தைச் செய்கிறார்' என்று சொன்னான்.

## அறுபத்தோன்பதாவது அத்யாயம்.

## யாநஸந்திபர்வம். (தொடர்ச்சி.)

**(ஸஞ்சயன் திருதராஷ்டிரனுக்குப் பகவானுடைய நாமங்களுக்குப் பொருள் கூறியதும், ஸமாதானம் செய்வதற்காகக் கண்ணபிரான்வருவதைத் தெரிவித்ததும்.)**

திருதராஷ்டிரன், 'அப்பா! ஸஞ்சய! கேட்கிறவனான எனக்கு மறுபடியும் புண்டரீகாக்ஷரைப்பற்றிச் சொல்லு. (அவருடைய) நாமங்களுடைய பொருளையும் செய்கைகளுடைய பயனையும் அறிந்து புருஷோத்தமரானஅவரை அடையக்கடவேன்' என்றான். ஸஞ்சயன் சொல்லுகிறான்: 'வாஸுதேவருடைய நாமங்களுடைய மங்களகரமான அர்த்தவிவரணமானது என்னால் கேட்கப்பட்டிருக்கிறது. நான் அதில் தெரிந்தமட்டும் (சொல்லுகிறேன்). கேசவரோ வாஸ்தவத்தில் அறியமுடியாதவர். எல்லாப்பிராணிகளும் (அவரிடம்) வஸிப்பதாலுண்டான வஸுத்தன்மையினாலும் தேவஜாதியினாலும் வாஸுதேவராக அறியத்தக்கவர். (எங்கும்) வியாபித்திருப்பதால் விஷ்ணுவாகச்சொல்லப்படுகிறார். ஓ! பாரதரே! (யோகிகளுடைய) மௌனத்தாலும் தியானத்தாலும் (அறியப்படுவதாகிய) ஸம்பந்தத்தால் மாதவராகவும் அறியக்கடவீர். மதுவென்றால் பிருதிவிமுதலான தத்துவம்; ஹாவென்றாலும் ஸூதனரென்றாலும் நாசம்செய்

1 'இந்திரியங்களை வசம்செய்தவன், சாஸ்திரலாபத்தாலும் யோகத்தாலும் தத்வவிஷயத்தில் தெளிவை அடைகிறான்' என்றும் கொள்ளலாம்.

கிறவர். எல்லாத்தத்துவங்களும் (அவரிடம்) ஒடுங்குவதனுலேயே மதுஹாவென்றும் மதுஸூதனனென்றும் சொல்லப்படுகிருர். (க்ருஷ் என்கிற பகுதிக்குக் கீறுதல் என்பது பொருள். பூமியானது பயி ருக்காகக் கலப்பையால் கீறப்படுகிறபடியால்) க்ருஷ் என்கிற சொல் பூமியைச்சொல்லுகிறது; ண என்கிற சொல், ஸுகத்தைச் சொல்லு கிறது. பூமியிலுள்ளவர்களுக்கு ஸுகத்தை உண்டுபண்ணுகிற ஸம் பந்தத்தால் விஷ்ணுவானவர் ஸாத்வதரான க்ருஷ்ணராகிருர். (ஹ்ரு தய கமலமென்கிற) புண்டரீகம் (அவருக்கு) எப்பொழுதும் சிறந்த ஸ்தானம்; [1] அதிலிருந்தும், (அக்ஷ, அக்ஷயம்) நாசமில்லாமையாகிய அந்தத் தன்மையினுல் புண்டரீகாக்ஷராகவும், திருடர்களான ஜனங்க ளைப் பீடிப்பதால் ஜனர்த்தனராகவும் சொல்லப்படுகிருர். எவரிட மிருந்து [2] ஸத்வமானது நழுவுகிறதில்லையோ எந்தக்காரணத் தினுல் ஸத்வத்திலிருந்தும் (அவர்) குறையாமலும் இருக்கின் ருரோ அதனுல் கிருஷ்ணரானவர் ஸாத்வதரென்று சொல்லப் படுகிருர். ஆர்ஷமென்கிற வேதத்தால் விளங்குகிறபடியால் [3] விரு ஷபேக்ஷணர் ஆகிருர். [4] இவர் உண்டுபண்ணுகிற (ஒருவனுல்), உண்டாகிறதில்லை. ஆகையால், சேனையை ஜயிப்பவரான (கிருஷ் ணர்) அஜர். இந்திரியங்களுக்கு நடுவில் தாமே பிரகாசிப்பதால் உதர ரும், அடக்கமிருப்பதால் தாமருமாகவிருப்பவரும் விபுவுமான இவர் தாமோதரராயிருக்கிருர். (ஹ்ருஷ் =) ஹர்ஷத்தாலும் (க =) ஸுகத் தாலும் (ஈமு =) ஸுகவிஷபத்தில் ஸ்வதந்திரமிருப்பதாலும் ஹ்ருஷீ கேசராயிருப்பதை அடைகிருர். ஆகாசத்தையும் பூமியையும் கைக ளால் தரித்துக்கொண்டிருப்பதால் மஹாபாஹு என்று கருதப்படுகி ருர். (அதோ =) கீழே (அக்ஷஜ =) ஒருகாலும் க்ஷயத்தை அடைகிற தில்லாத அந்தக் காரணத்தினுல் அதோக்ஷஜர் ஆகிருர்; நரர்களுக்கு [5] அயனமாயிருப்பதால் நாராயணராகவும் கருதப்பட்டார். இவர் [6] பூர்ணத்தினுலும் [7] ஸதனத்தினுலும் உத்தமராயிருப்பதாலும் புரு ஷோத்தமராஞர். [8] அஸத்தும் [9] ஸத்துமான எல்லாவற்றி

---

1 ஹ்ருதயகமலத்திலிருந்தும் அதனுடையநாசத்தால் நசியாமலிருப்ப தால். 2 பலம். 3 வ்ருஷம் = தர்மம், பா = பிரகாசிப்பிக்கிறது, தர்மத் தைப் பிரகாசிப்பிப்பது வேதம்; அது ஈக்ஷணம்; அதாவது, இவரைப் பார்ப்பதற்கு நேத்திரம் போலிருக்கிறது; ஆகையால், வ்ருஷபேக்ஷணர்.

4 ஒருவராலும் உண்டானவரில்லை என்பது. 5 அடையும் ஸ்தானம்.

6 எங்கும் நிறைந்திருத்தல். 7 இவரிடம் உலக மிருக்கிறதால்.

8 அப்பிரத்யக்ஷவஸ்து. 9 ப்ரத்யக்ஷவஸ்து.

னுடைய தோற்ற ஒடுக்கங்களுக்கும் காரணமாயிருப்பதாலும் எப்பொழுதும் எல்லாவற்றையும் அறிவதாலும் அவரை ஸர்வராகச் சொல்லுகின்றனர். ஸத்யத்தில் கிருஷ்ணர் வைக்கப்பட்டிருக்கிறார். ஸத்யம் அவரிடம் வைக்கப்பட்டிருக்கிறது. கோவிந்தர் [1] ஸத்யத்தைக் காட்டிலும் ஸத்யர்; ஆகையால், நாமாவினால் ஸத்யராகவுமிருக்கிறார். தேவரான அவர் விசேஷமாக வ்யாபிப்பதால் விஷ்ணுவென்றும் ஜயமேயுள்ளவராதலால் ஜிஷ்ணுவென்றும் சொல்லப்படுகிறார்; சாஸ்வதராயிருப்பதால் அனந்தரென்றும் இந்திரியங்களுக்குப் பிரகாசத்தை அளிப்பதால் கோவிந்தரென்றும் சொல்லப்படுகிறார்; உண்மையில்லாததை உண்மைபோலச் செய்கிறார். அதனால், பிரஜைகளை மயங்கச் செய்கிறார். இவ்விதமிருப்பவரும் தர்மத்தில் நிலைத்திருப்பவரும் பகவானும் மகாபாகுவும் அச்சுதருமான மதுஸூதனர் [2] ஹிம்சையில்லாமலிருப்பதற்காக வரப்போகிறாரல்லவா ?' என்றான்.

---

## எழுபதாவது அத்யாயம்.

## யாநஸந்திபர்வம். (தொடர்ச்சி.)

**(கண்ணபிரான் வருவது கேட்டு மகிழ்ந்த திருதராஷ்டிரன் கண்ணுள்ளவர்களைப் புகழ்ந்து கிருஷ்ணருடைய குணங்களைக் கூறியது.)**

திருதராஷ்டிரன், 'ஸஞ்சய! சிறந்தசரீரத்துடன் ஸமீபத்தில் விளங்குகிறவரும், திக்குக்களையும் மூலைத்திசைகளையும் விளங்கச்செய்கிறவரும், பாரதர்களுக்குப் பூஜிக்கத்தக்கதும் ஸ்ருஞ்சயர்களுக்கு நன்மையைச்செய்கிறதும் ஜீவிக்க விரும்புகிறவர்களால் கொள்ளத்தக்கதும் நிந்திக்கத்தகாததும் [3] வெளிப்பட்ட பிராணனையுடையவர்களுக்கு அறியமுடியாத ஸ்வரூபத்தையுடையதுமான வார்த்தையைச் சொல்லுகிறவரும், (சரீரத்துடன்) நன்றாகப் பிரகாசிக்கின்றவரும், ஸாத்வதரும், முக்கியவீரரும், யாதவர்களில் சிறந்தவரும், (அவர்களுக்கு) நாயகரும், பகைவரைக் கலக்குகிறவரும், கொல்லுகிறவரும், பகைவரின் புகழ்களைக் கெடுப்பவருமான வாஸுதேவரைப் பார்க்கப்போகின்றவர்களும்

---

1 தர்மத்தின் பயன். 2 'யுத்தமேற்படாமலிருப்பதற்காக' என்பது கருத்து. 3 மரிக்கப் போகின்றவர்கள்.

கண்படைத்தவர்களுமான அந்தக்கௌரவர்களுடைய (பாக்கியத்திற்கு) ஆசைப்படுகிறேன். மஹாத்மாவும் பகைவரைக்கொல்லுகிறவரும் பிரார்த்திக்கத்தக்கவரும் அஹிம்ஸாரூபமான வார்த்தையைச் சொல்லுகிறவரும் என்னைச்சேர்ந்தவர்களை மோஹிக்கச்செய்கிறவருமான அந்தவிருஷ்ணிச்ரேஷ்டரைக் கௌரவர்கள் சேர்ந்தவர்களாகிப் பார்க்கப்போகிறார்களல்லவா? மிக்கபழமையான முனிவரும் ஆத்மாவையறிந்தவரும் வாக்குக்கு ஸமுத்திரம்போலுள்ளவரும் ஸன்யாஸிகளுக்குக் கலசம்போலக் கையால்பிடிக்கக்கூடியவர்போலிருப்பவரும் கெடுக்கப்படாத மரியாதையையும் நல்லசிறகுகளையுமுடைய கருடனாயிருப்பவரும் பிரஜைகளை ஹரிப்பவரும் உலகத்திற்கு ஸ்தானமும் ஆயிரம்சிரங்களுள்ளவரும் ஆதியும்நடுவும் முடிவும் அற்றவரும் முடிவற்ற புகழுடையவரும் உலகத்தின் [1] சுக்கிரத்தைத் தரிப்பவரும், ஜனனமற்றவரும், நித்யரும், சிறந்தவர்களுக்கெல்லாம் சிறந்தவருமான புராணபுருஷரைச் சரணமாக அடைகின்றேன். மூன்றுஉலகங்களுடைய ஸிருஷ்டியையும் செய்பவரும் தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் நாகர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் அரசர்களுக்கும் பிதாவும் வித்வான்களுக்குள் பிரதானமாயிருப்பவரும் இந்திரனுக்குப் பின்பிறந்தவருமான அவரைச் சரணமடைகின்றேன்' என்றான்" என்று சொன்னான்.

யாநஸந்திபர்வம்முற்றிற்று.

1 வினையாலுண்டானதும் வினையாக இருப்பதுமான புண்யமுதலானவை.

## எழுபத்தோராவது அத்யாயம்.

# பகவத்யாநபர்வம்.

(யுதிஷ்டிரர் ஸமாதானத்துக்காக அஸ்தினபுரம் போய்வரும்படி மாதவரைக் குறிப்பாக வேண்டினதும், அவர் ஸம்மதித்ததும்.)

ஜனமேஜயர், "ஓ! ஸாதுவே! ஸஞ்சயன் கௌரவர்களிடம் சென்றபோது எனது [1] பூர்வ பிதாமஹர்களான பாண்டவர்கள் அவ்விடத்தில் என்ன செய்தார்கள்? மிக்க ஸாதுவே! பிராம்மணஶ்ரேஷ்டரே! எனக்கு இதையெல்லாம் விஸ்தாரமாகச் சொல்லும். பண்டிதரே! பிரயத்தினத்துடன் கேட்க விரும்புகிறேன்" என்று சொன்னார்.

வைசம்பாயனர், "ஓ! பாரதரே! ஸஞ்சயன் திரும்பிச்சென்ற பொழுதோ, தர்மராஜரான யுதிஷ்டிரர் அர்ஜுனனையும் பீமஸேனனையும் மாத்ரியின்புத்திரர்களையும் விராடனையும் துருபதனையும் கேகயர்களுடைய மகாரதர்களையும் அடைந்து, 'நாம், சங்க சக்ர கதா தாரியான வாஸுதேவரை அடைந்து யுத்தத்தில் பீஷ்மரோடும் துரோணரோடும் புத்திமானான பாஹ்லீகரோடும் மற்றக் கௌரவர்களோடும் யுத்தம் செய்யாமலிருக்கும்படி செய்வதற்காகக் கௌரவர்களுடைய ஸபைக்குப் போகும்படி பிரார்த்திப்போம். இதுதான் நமக்கு முதன்மையான விருப்பம். இது உத்தமமான க்ஷேமம்' என்று சொன்னார். இவ்விதம் சொல்லக்கேட்டவர்களும் நல்மனமுடையவர்களும் ஸதஸிலிருப்பவர்களும் (பகைவர்களால்) தாங்க முடியாதவர்களும் புருஷஶ்ரேஷ்டர்களுமான அந்த எல்லா அரசர்களும், பாண்டவர்களுடன், [2] இந்திரனுடன் கூடின தேவர்கள்போல, அப்பொழுதே ஜனார்த்தனரை அடைந்தார்கள். ஜனார்த்தனரை அடைந்து, குந்தியின்புத்திரரும் பாண்டுநந்தனருமான யுதிஷ்டிரர் சத்துருக்களான வீரர்களைக் கொல்லுகிறவரான தாசார்ஹரைநோக்கி, 'மித்திரர்களிடத்தில் அன்புள்ளவரே! மித்திரர்களான (எங்களுக்கு) இதோ (நீர் உபகரிக்கவேண்டிய) அந்த ஸமயம் வந்துவிட்டது. நான் உம்மைத்தவிர எங்களை ஆபத்துக்களிலிருந்தும் கரையேற்றுகிறவர் வேறொருவரையும் பார்க்கவில்லை. நாங்கள் மாதவரான உம்மை அடுத்தன்றோ பயமில்லாதவர்களாகி, வீணாகக் கொழுப்புக்கொண்டவனும் மந்திரிகளோடுகூடினவனுமான துரியோதனனைக் குறித்து

1 பாட்டனுக்குத் தகப்பன்முறையினர். 2 'மருத்வந்தஃ' என்பது மூலம்.

ஸ்வயமே ஸன்னகம்செய்கின்றோம். ஓ! பகைவரை அடக்குபவரே! எல்லா ஆபத்துக்களிலும் விருஷ்ணிகள் காக்கப்படுவது போலவே உம்மால் பாண்டவர்களும் காக்கப்படத்தக்கவர்கள். எங்களைப் பெரிதான பயத்திலிருந்தும் காக்கக்கடவீர்' என்று சொன்னார். ஸ்ரீ பகவானானவர், 'ஓ! புஜபல மமைந்தவரே! இதோ காத்திருக்கிறேன். நீர் எதைச்சொல்ல விரும்புகிறீரோ அதைச் சொல்லும். பாரதரே! நீர் சொல்லுகிற எல்லாவற்றையும் செய்வேன்' என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், 'ஓ! வாஸுதேவரே! மாதவரே! ஸஞ்சயன், என்னை நோக்கி, முதலில் நயமாகவும் (இடையில்) ஸமாதானத்துடன் கலந்து நடுத்தரமாகவும் (முடிவில்) கடுமையாகவும் சொல்லியதும் புத்திரனோடு சேர்ந்த திருதராஷ்டிரர் செய்யவிரும்பினதுமான அவைமுழுமையும் உம்மால் கேட்கப்பட்டன. (அவர்களுடையகொள்கை) நியாயத்தை அடுத்துச் செய்யப்படவில்லை. அதனால், நாங்கள் தூஷிக்கப்பட்டோம். அந்தஸஞ்சயன் திருதராஷ்டிரரின் உயிர்போன்றவன்; அவருடைய மனத்திலுள்ளதை வெளியிட்டான். தூதன், சொன்னபடி சொல்வான். வேறுவிதமாகச் சொல்லுகிறவன் கொல்லப்படத்தக்கவனாவான். லோபத்தையடைந்த அவர் கெட்டஎண்ணத்தினால் தமக்குத் தகாதபடி நடக்கிறவராகி ராஜ்யத்தைக் கொடுக்காமலே எங்களிடம் (வைர) சாந்தியைத் தேடுகின்றார். ஓ! பிரபுவே! நாங்கள் திருதராஷ்டிரருடைய கட்டளையினால் வனங்களில் பன்னிரண்டு வருஷங்களும் மறைவாக ஒருவருஷமும் வஸித்ததும், அவர் எங்களுக்குரிய அந்த [1] ஸங்கேதத்திலிருப்பாரென்றே. ஓ! கிருஷ்ணரே! (அந்த) [2] ஸங்கேதத்தை (வாக்கினாலும்) சொல்லவேயில்லை. எங்களுடைய அந்த ஸங்கேதத்தையோ பிராம்மணர்கள் அறிவார்கள். ஆசைகொண்ட திருதராஷ்டிரராஜர் ஸ்வதர்மத்தை ஆலோசிக்கவில்லை. (புத்திரனுக்கு) வசப்பட்டவரும் புத்திரனிடம் மிக்க பற்றுள்ளவருமாயிருப்பதால் மூடனை (புத்திரனது) கட்டளையை அனுஸரிக்கிறார். ஓ! ஜனார்த்தனரே! துரியோதனனுடைய கொள்கையில் நிற்கின்ற அரசர் லோபத்தையடைந்தவரும் தம்விருப்பத்தைச் செய்பவருமாகி எங்கள்விஷயத்தில் பொய்யாக நடந்துகொள்ளுகிறார். ஓ! ஜனார்த்தனரே! 'அவ்விடத்திலிருக்கிறவளான மாதாவையும் மித்திரர்களையுமோ காக்கத்திறமையுள்ளவனல்லேன்' என்

1 ராஜ்யத்தைக்கொடுப்பது. 2 'நாங்கள் உடன்பாட்டிலிருந்து தவறவில்லை' என்றும் கொள்ளலாம்.

கிற இதைக்காட்டிலும் பெரிய துக்கம் என்னஇருக்கிறது? ஓ! மது ஸூதனரே! கோவிந்தரே! என்னாலே காசிதேசத்தவர்களோடும் சேதிநாடர்களோடும் பாஞ்சாலர்களோடும் மத்ஸியர்களோடும் நாதரான உம்மோடும்கூடி அவிஸ்தலம், விருகஸ்தலம், மாகந்தீ, வாரணாவதம், கடைசியாக ஐந்தாவதான ஏதாவதுஒன்றும் ஆகிய ஐந்து கிராமங்கள் பிரார்த்திக்கப்பட்டன. ஐயா! எவைகளில் சேர்ந்து வஸிப்போமோ அப்படிப்பட்ட ஐந்துகிராமங்களோ நகரங்களோ எங்களுக்குக் கொடுக்கப்படட்டும். எங்களைச்சேர்ந்த பரதவம்சத்தோர்கள் நசிக்கவேண்டாம். அவைகளைக்கூடத் துஷ்டபுத்தியுள்ள இந்தத் துரியோதனன் தன்னிடம் யஜமானத்தன்மையைநினைத்து ஸம்மதிக்கவில்லை. இதைக்காட்டிலும் பெரிதான துக்கம் என்ன இருக்கிறது? நல்லகுலத்தில் பிறந்தவரும் பிராயமுதிர்ந்தவரும் பிறர்தனங்களில் ஆசைகொண்டவருமான அரசருடையலோபமானது அறிவைக் கெடுக்கிறது. அறிவு கெட்டு, லஜ்ஜையைக்கெடுக்கின்றது. லஜ்ஜைகெட்டுத் தர்மத்தைக்கெடுக்கிறது. தர்மம் கெட்டுச் செல்வத்தைக் கெடுக்கிறது. செல்வம்கெட்டு மனிதனை நாசம்செய்கிறது. மனிதனுக்குத் தனமில்லாமையானது வதம். ஓ! கிருஷ்ணரே! தனமில்லாதவனிடமிருந்தும் ஞாதிகளும் ஸுஹ்ருத்துக்களும் பிராம்மணர்களும், மலர்களும் கனிகளுமில்லாத மரத்திலிருந்தும் பக்ஷிகள் விலகுவது போல, விலகுகின்றனர். ஓ! ஐயா! பைத்தியம் கொண்டவனிடமிருந்தும் பதிதனிடமிருந்தும் (ஜனங்கள்) விலகுவதுபோலவும் மரித்த பிராணியைவிட்டு உயிர் விலகுவதுபோலவும் (தனமில்லாதவனிடமிருந்தும்) ஞாதிகள் விலகுகின்றார்களென்பது அவனுக்கு மரணமே. எந்த நிலைமையில் இப்பொழுதுமே (=இரவிலுமே) போஜனம் காணப்படுகிறதில்லையோ உதயத்திலும் போஜனம் காணப்படுகிறதில்லையோ இதைக்காட்டிலும் கொடியபாபமான ஒரு நிலைமையையும் சம்பரன் சொல்லவில்லை. தனத்தைச் சிறந்ததர்மமாகச் சொல்லுகின்றனர். தனத்தில் (யாகம் தானம் முதலியவை) எல்லாம் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. உலகத்தில் தனவான்கள் ஜீவிக்கின்றவர்கள். தனமில்லாத மனிதர்களோ மரித்தவர்களே. எவர்கள் தம்முடைய பலத்தை அடுத்தவர்களாய் மனிதனைத் தனத்திலிருந்தும் [1] இழுத்துவிடுகின்றனரோ அவர்கள் (அவனது) தர்மத்தையும் அர்த்தத்தையும் காமத்தையும் அந்த மனிதனையும் நாசம்செய்கின்றவரே. இந்த (வறிய) நிலைமையைஅடைந்து சில ஜனங்கள் மரணத்தைவிரும்

1 தனமிழந்தவனாக.

பினர். சிலர் (வேறு) கிராமத்திற்கும் சிலர் வனத்திற்கும் சிலர் நாசத்தின்பொருட்டும் போய்விட்டார்கள். சிலர் பித்தர்களாகின்றனர். சிலர் பகைவர்களுடையவசத்தை அடைகின்றனர். சிலர் தனநிமித்தமாகப் பிறர்களுக்கு வேலைக்காரராயிருத்தலை அடைகின்றனர். இந்த மனிதனுக்குத்தனநாசமானது மரணத்தைக்காட்டிலும் பெரிதான ஆபத்தே. அந்தத் தனமன்றோ இவனுக்குத் தர்மத்திலும் காமத்திலும் நிமித்தம்? இவனுக்குத் [1]தர்மத்தைவிட்டுவிலகாத மரணமானது, அநாதியும் உலகங்களுடைய மார்க்கத்தோடுகூடியதுமாயுள்ளது. எங்கும் எல்லாப் பிராணிகளுக்குமுரிய அதனை ஒருவனும் மீறுகிறதில்லை. ஓ! கிருஷ்ணரே! மங்களகரமான செல்வத்தையடைந்து ஸுகமாக விருத்தியடைந்தவனும் (பிறகு) அந்தச்செல்வத்தை இழந்தவனுமாயிருப்பவன் எவ்விதம் துன்புறுத்தப்படுகிறானோ அவ்விதம், இயற்கையினாலேயே தனமில்லாதமனிதன் துன்புறுத்தப்படுகிறதில்லை. (தனவானாயிருந்து தனமிழந்த) அவன் தன்குற்றத்தால் பெரிதான துன்பத்தையடைந்தமையால், அப்பொழுது இந்திரன்முதலியதேவர்களை நிந்திக்கிறான்; தன்னை ஒருவிதத்தாலும் நிந்தித்துக்கொள்ளுகிறதில்லை. இந்தத்துன்பத்தை நிவிருத்திசெய்வதில் எல்லாச் சாஸ்திரங்களும் சக்தியுள்ளவையாகவில்லை. அவன் வேலைக்காரர்களைக் கோபிக்கிறான்; அன்புள்ளவர்களிடம் அஸூயையையடைகிறான். அவ்வப்பொழுது கோபமே அவனையடைகிறது. அவன் மிகவும் மோகத்தையடைகிறான். மோகத்தின் வசத்தையடைந்த அவன் தீய செய்கையை நிரந்தரமாய்ச்செய்கிறான். தீச்செயலையுடையவனாயிருப்பதினாலேயே அந்தக்கொடியசெய்கையால் ஸங்கரத்தை (=ஜாதிக்கலப்பை) விருத்திசெய்கிறான். ஸங்கரம் நரகத்தின்பொருட்டே ஆகிறது. அதுவே, தீயசெயல்களுக்கு எல்லை. ஓ! கிருஷ்ணரே! அவன் விழிப்பை (=மோஹநிவ்ருத்தியை) அடையவில்லையேயானால் மறுபடியும் நரகத்துக்கே செல்லுகிறான். அவனுக்குப் போதமென்பது நல்லறிவே. அறிவாகிய கண்ணுள்ளவன் கரையேறுவான். அறிவை அடைவதிலோ மனிதன் சாஸ்திரங்களையே பார்க்கிறான். சாஸ்திரத்தில் நிலையுள்ளவனே தர்மத்தைப் பார்க்கிறான். அவனுக்கு (அகாரியத்தில்) லஜ்ஜை உத்தமமான ஸாதனம். லஜ்ஜையுள்ளவனே பாவத்தை வெறுக்கிறான். அவனுக்குச் செல்வம் விருத்தியடைகிறது. அந்த மனிதன் செல்வவானாயிருக்கும்வரை

[1] மரணபரியந்தம் தர்மம்செய்தபிறகு ஏற்படும்மரணம், நெடுநாளாகத் தொடர்ந்துவருவதும் ஸ்வர்க்கமார்க்கத்தைச் சேர்ப்பிப்பதுமானது.

யிலும் தர்மத்தில் நிலையுள்ளவனும் மிகவும்சாந்தமான மனமுடைய வனும் எப்பொழுதும் காரியங்களின் முயற்சியைச் செய்கிறவனுமா யிருக்கிறான்; அதர்மத்தில் புத்தியைச் செலுத்துகிறதில்லை; பாப வழியில் செல்லுகிறதுமில்லை. லஜ்ஜையில்லாதவனும் மூடனுமாயிருப் பவன், ஸ்திரீயுமில்லை; புருஷனுமில்லை. இவர்களுக்குத் தர்மத் தில் அதிகாரமில்லை. இவன் சூத்திரன் எப்படியோ அப்படியே. லஜ்ஜையுள்ளவன் தேவர்களையும் பிதிருக்களையும் தன்னையுமே காக் கிறான். அதனால், மோக்ஷத்தை அடைகிறான். அது புண்ணியகர் மங்களுக்கு எல்லை. ஓ! மதுஸூதனரே! அப்படிப்பட்ட இந்த விஷய மானது இராஜ்யத்தை இழந்து இந்த நிலைமையிலிருக்கின்ற என் னிடம் உம்மால் ப்ரத்யக்ஷமாகப் பார்க்கப்பட்டது. அப்படிப்பட்ட நாங்கள் ஒரு நியாயத்தாலும் செல்வத்தை விடத்தக்கவரல்லோம். இந்த விஷயத்தில் முயல்கின்ற எங்களுக்கு வதம் ஏற்பட்டாலும் அது நல்லதே. ஓ! மாதவரே! அப்படியாகையில், நாங்களும் அவர் களும் (வைர) சாந்தியை அடைந்தவர்களும் ஸமமானவர்களுமாகி அந்தச்செல்வத்தை அடைவோமென்பது முதற்பக்ஷம். அந்த விஷ யத்தில் நாங்கள் கௌரவர்களைக்கொன்று அந்த ராஜ்யங்களை அடை வோமென்னும் குரூரமான (யுத்தச்) செய்கையினால் நாசத்தை உண்டுபண்ணுகிற இதானது கடைசி எல்லை. ஓ! கிருஷ்ணரே! ஸம்பந்தமில்லாதவர்களும் அனார்யர்களுமான பகைவர்களுக்குமே கொல்லாமை செய்யத்தக்கது. எங்களுக்கு ஞாதிகளும் மிகவும் அதிகமானவர்களும் ஸஹாயர்களும் குருக்களுமாயிருக்கிற இப்படிப் பட்டவர்கள் விஷயத்தில் சொல்லவும் வேண்டுமா? அவர்களுடைய வதமானது மிகவும் பாவமானது. யுத்தத்தில் என்ன நன்மை இருக் கிறது? (ஆனால்) இந்த க்ஷத்திரியதர்மமானது பாவமானது. நாங் களும் க்ஷத்திரியஜாதியில் பிறந்தவர்கள். அது அதர்மமானாலும் எங் களுக்கு ஸ்வதர்மம். வேறு தொழிலானது நிந்திக்கப்பட்டது. சூத் திரன் சுஶ்ரூஷையைச்செய்கிறான். வைஶ்யர்கள் வ்யாபாரத்தை ஜீவனமாகவுடையவர்கள். நாம் வதத்தால் பிழைக்கின்றோம். பிராம் மணர்களால் பிக்ஷாபாத்திரமானது ஏற்றுக்கொள்ளப்பட்டது. க்ஷத் திரியன் க்ஷத்திரியனைக் கொல்லுகிறான். மத்ஸியம் மத்ஸியத்தால் ஜீவிக்கின்றது. ஓ! தாஶார்ஹரே! நாய் நாயைக்கொல்லுகிறது. தர்ம மானது எவ்விதம் போகிறதென்று பாரும். ஓ! கேசவரே! யுத்தத் தில் எந்நாளும் பாவமுண்டு. யுத்தத்தில் உயிர்கள் நாசத்தையடை கின்றன. பலத்தை நீதியாகச் செய்துகொண்டு யுத்தம்செய்கிறேன்.

பிராணிகளுக்கு வெற்றிதோல்விகளும், அப்படியே, உயிர் வாழ்க்கையும் இறத்தலும் தட்மிச்சையினால் உண்டாகிறதில்லை. ஓ! யதுக்களில் சிறந்தவரே! ஸுகமோ துக்கமோ அகாலத்தில் அடையப்படுகிறதில்லை. ஒருவனுயிருந்தும் அனேகர்களைக் கொல்லுகின்றான். ஒருவனை அனேகர்களும் கொல்லுகின்றனர். (வலிமையில்லாத) அற்பமனிதன் சூரனைக்கொல்லுகின்றான். இகழ்ச்சியோடுகூடியவன் புகழுள்ளவனைக் கொல்லுகின்றான். இரண்டு பேர்களுக்குமே ஜயமானது காணப்படவில்லை. அபஜயமும் இரண்டுபேர்களுக்கும் இல்லை. அப்படிப்போலவே, (யுத்தத்தைவிட்டு) ஓடுவதிலேயும், எளிமையும் பொருளழிவும் மரணமும் காணப்பட்டிருக்கின்றன. எந்த விதத்தாலும் யுத்தம் பாவமே. எவன் அடிக்கிறவனுகி, பதிலடிக்கப்படாமலிருக்கிறான்? ஓ! ஹ்ருஷீகேசரே! அடிக்கப்பட்டவனுக்கோ ஜயாபஜயங்கள் ஸமானம். அபஜயமோ மரணத்தைக்காட்டிலும் வேறுபட்டதேயில்லையென்று நினைக்கிறேன். ஓ! கிருஷ்ணரே! எவனுக்கு ஜயம் ஏற்படுமோ அவனுக்கும் (பணச் செலவு உயிர்ச்சேதம் முதலிய) குறைவு உண்டென்பது நிச்சயம். வேறான சில ஜனங்களும் கடைசியாக இஷ்டமான ஜனத்தைக் கொல்லுகின்றனர். ஐயா! கிருஷ்ணரே! வலிமையற்றவனும், புத்திரர்களையும் உடன் பிறந்தவர்களையும் பாராதவனுமான அவனுக்கு எல்லாவிதத்திலும் உயிருடனிருப்பதில் ஒழிவுண்டாகிறது. எவர்கள் தீரர்களும் லஜ்ஜையுள்ளவர்களும் பூஜ்யர்களும் கருணையையறிந்தவர்களுமோ அவர்களுமே யுத்தத்தில் கொல்லப்படுகின்றனர். குணமவானமனிதன் விடப்படுகிறான். ஜனார்த்தனரே! (அப்படியிருத்தலால்) பகைவர்களானாலும் (அவர்களைக்) கொன்றாலும் எந்நாளும் பச்சாத்தாபமே. இதில் பாவமும் பற்றியிருக்கிறது. (சத்துருக்களில்) மீதியும் மிஞ்சியிருக்கிறது. மிச்சமோ பலத்தை அடைந்து (இவனுடைய) மிச்சத்தை மிஞ்சவிடாது. வைரத்தை முடிக்கவேண்டுமென்கிற விருப்பத்தால் எல்லாவற்றையும் கொல்லுவதில் முயலுகிறான். ஜயமானது வைரத்தை விளைவிக்கிறது. தோல்வியை அடைந்தவன் துக்கத்துடனிருக்கிறான். வெற்றி தோல்விகளைத் தள்ளிவிட்டு மிகவும் சாந்தனுயிருப்பவன் ஸுகமாகத் தூங்குகிறான். பகையுண்டான மனிதனே எந்நாளும் மனவமைதியில்லாமல் ஸர்ப்பத்துடன்கூடிய வீட்டில் தூங்குவதுபோலத் துக்கத்துடன் தூங்குகிறான். எவன் எல்லாவற்றையும் அழிக்கிறானே அவன் புகழை இழக்கிறான். அவன் எல்லாப் பிராணிகளிடத்திலும் சாஸ்வதமான அபகீர்த்தியை அடைகிறான்.

வைரங்களோ நீண்டகாலம் தரிக்கப்பட்டாலும் ஒழிவதில்லை. குலத்தில் ஆண்பிள்ளையிருந்தால், (அவனை) 'உங்கள் வம்சத்திற்கு (இவன் சத்துரு' வென்று) சொல்லுகிறவர்களும் இருக்கின்றனர். கேசவரே! பகையும் பகையால் ஒழிவடைகிறதில்லை; ஹவிஸினால் அக்னிவிருத்தியடைகிறதுபோல அதிகமாகவே விருத்தியடைகிறது. ஆகையால், கடைசியாகக் கலக்கமின்றி வேறுவிதமாக எந்நாளும் சாந்தியானது இல்லை. கலகத்தை அடைய விரும்புகிறவர்களுக்கு ஆண்மையில் வலியதும் மனத்தைவருத்துவதுமான மனக்கவலை என்கிற தோஷம் இடைவிடாததாயிருக்கிறது. அதற்கு அதை விடுவதனாலாவது மரணத்தினாலாவதுதான் சாந்தி ஏற்படும். மதுஸூதனரே! பகைவர்களை வேருடன் அறுப்பதனால் பயனின் முடிவு ஏற்படும். அது மிகவும் குரூரமாகும். அதுவன்றி, (அரசுரிமையை விரும்பாமல்) விடுவதாலுண்டான சாந்தியானது, பகைவர்களுக்கு (வைரமில்லாதவனாயிருக்கிறானா இல்லையா என்கிற) ஸம்சயத்தாலும் எங்களுக்கு லகுவிற் கொல்ல எளியராயிருத்தலாலும் வதமே. ஆகையால், நாங்கள் (வைரத்தை) விடவிரும்பவில்லை. பிரவிருத்திக்கிறவர்களும் யுத்தமில்லாமையை விரும்புகிறவர்களுமாயிருப்பவர்களுக்கும் இந்தச் சாந்தியில் எல்லாவிதத்தாலும் நமஸ்காரத்தாலுண்டான சாந்தியே சிறந்தது. ஸமாதான வசனமானது கெடுக்கப்பட்டால் யுத்தம் வெளிப்படையானது. பராக்கிரமம் இல்லை என்பதில்லை. ஸமாதானத்தைக்கெடுத்தால் (யுத்தம்) குரூரமாக உண்டாகிறது. அது நாய்களின் கூட்டத்திலுண்டாகும் சண்டைபோன்றதென்று பண்டிதர்களால் கருதப்பட்டிருக்கிறது. 1 வாலை அசைத்தல், 2 (பிறகு) உறுமல், 3 (பிறகு) பிரதிசப்தங்கள், 4 (பிறகு) பூமியில் புரளுதல், 5 (பிறகு) பற்களைக்காட்டுதல், 6 (பிறகு) குரைத்தல், பிறகே யுத்தம் ஏற்படுகிறது. ஓ! கிருஷ்ணரே! அந்த நாய்களில், எது பலமுள்ளதோ அது ஜயத்தை அடைந்து அந்த 7 மாம்ஸத்தைத் தின்னுகிறது. மனுஷ்யர்களிலும் இவ்விதமே. ஒருவிசேஷமுமில்லை. எல்லாவிதத்தாலும் பலவான்களுக்குப் பலமில்லாதவர்களிடம் அனாதரவும் விரோதமுமென்பது உசிதம். நமஸ்கரிக்கிறவனே துர்ப்பலனாகிறான். ஓ! ஜனார்த்தனரே! பிதாவும் அரசரும் முதியவருமான திருதராஷ்டிரர் எல்லாவிதத்தாலும் கௌரவத்திற்குத் தக்கவராகின்

1 வால்—நாண். 2 ஸிம்ஹநாதம். 3 வீரவாதம். 4 தோள்தட்டுதல். 5 பற்கடித்தல். 6 தன்னைப்புகழ்தல். 7 ராஜ்யலாபம்.

றனர். ஆகையால், அவர் கௌரவிக்கத்தக்கவரும் பூஜிக்கத்தக்க வருமானவர். ஓ! மாதவரே! திருதராஷ்டிரருக்கோ புத்திரனிடம் அன்பானது மிகுதியாயிருக்கிறது. புத்திரனுடைய வசத்தை அடைந்த அவர் நமஸ்காரத்தையும் தள்ளிவிடுவார். கோவிந்தரே! அப்படியிருக்க, காலத்திற்கு உசிதமாக மேல் எந்தக்காரியத்தை நினைக்கிறீர்? மாதவரே! எப்படி நாங்கள் அர்த்தத்திலிருந்தும் தர்மத்திலிருந்தும் குறைவடையாமலிருப்போம்? ஓ! மதுஸூதனரே! புருஷோத்தமரே! இப்படிப்பட்ட இந்த மிகுதியான ஸங்கடத்தில் உம்மைத் தவிர நான் வேறுயாரைக் கேட்கத்தக்கவன்? ஓ! கிருஷ்ணரே! எங்களுக்கு உம்மைப்போன்ற பிரியனும் (எங்களுடைய) இஷ்டத்தை விரும்புகிறவனும் எல்லாக்கர்மங்களுடைய பலனையும் அறிந்தவனும் எல்லா உறுதியையும் அறிந்தவனுமான (வேறு) எந்த நண்பன் இருக்கிறான்?" என்றார். இவ்விதம்சொல்லக்கேட்ட ஜனார்த்தனர் தர்மராஜரைநோக்கி, 'உங்களிருவர்களுடைய நிமித்தமாகவும் கௌரவர்களுடைய ஸபைக்குப்போவேன். அரசரே! உங்களுடையவிருப்பத்துக்குக் குறைவில்லாமலே அவ்விடத்தில் சமமானது கிடைக்குமேயானால், (அப்பொழுது) எனக்கு மிகப்பெரிதும் பெரிதானபயனுள்ளதுமான புண்ணியமானது அனுஷ்டிக்கப்பட்டதாகும். யுத்தத்திற்கு ஆயத்தமுள்ளவர்களான கௌரவர்களையும் ஸ்ருஞ்சயர்களையும் பாண்டவர்களையும் திருதராஷ்டிரரின் புத்திரர்களையும் இந்த எல்லாப் பூமியையும் மிருத்யுவின்பாசத்திலிருந்தும் விடுவிப்பேன்' என்று மறுமொழி உரைத்தார்.

யுதிஷ்டிரர், 'வாஸுதேவரே! நீர் கௌரவர்களைக் குறித்துப் போகவேண்டுமென்பது என்னுடைய அபிப்பிராயமில்லை. நல்ல வார்த்தையாயிருந்தாலும் துர்யோதனன் உம்முடைய வார்த்தையைச் செய்யமாட்டான். ஓ! மாதவரே! பாரிலுள்ள க்ஷத்திரிய ஸமூகமானது சேர்ந்ததாகித் துர்யோதனனுடையவசத்தை அடைந்திருக்கிறது. நீர் அவர்களுடைய நடுவில் செல்லுதலை நான் விரும்பவில்லை. ஓ! மாதவரே! உமக்கு ஒருகுறைவு ஏற்படுவதனாலுண்டாகும் செல்வமும் தேவத்தன்மையும் எங்களுக்குச் சந்தோஷத்தைச்செய்யா. (அப்படியிருக்க), ஸுகமேது? தேவர்களுடைய எல்லா ஐச்வரியங்களும் ஸந்தோஷிக்கச்செய்யா' என்றார். ஸ்ரீபகவான், 'ஓ! மஹாராஜரே! துர்யோதனன் இவ்விதம் பாபி என்பதை நான் அறிவேன். ஆனாலும், எல்லாவுலகத்திலும் அரசர்களுக்கு நிந்திக்கக் கூடாதவர்களாவோம். எல்லா அரசர்களும் சேர்ந்தாலும் கோபத்தையடைந்தவ

ஞை என்னுடைய யுத்தத்தில், சிங்கத்தினுடைய சண்டையில் மற்ற மிருகங்கள் நிற்கமுடியாததுபோல நிற்கவல்லவராகார். அல்லது, அவர்கள் என்விஷயத்தில் சிறிதேனும் தகாதபடி நடப்பார்களேயா ஞல் அந்த எல்லாக்கௌரவர்களேயும் எரிப்பேனென்பது என்னுடைய உறுதியான எண்ணம். ஓ! பார்த்தரே! அவ்விடம்போவது ஒரு காலும் பயனில்லாததாகாது. ஒருஸமயம், தனலாபமும் ஏற்பட லாம். அல்லது, கடைசியாக நிந்தையில்லாமை ஏற்படுகிறது' என்றார்.

இவ்விதம்சொல்லக்கேட்ட தர்மராஜர், சேர்ந்தவர்களான பிரா தாக்களுடையஸமீபத்தில் புருஷோத்தமரான ஜஞர்த்தனரைநோக்கி மறுமொழி சொல்லலாஞர். 'ஓ! கிருஷ்ணரே! உமக்கு எது ருசிக்கி றதோ அதுவே க்ஷேமம். கௌரவர்களே அடையும். நீர் கார்யத்தை முடித்துக்கொண்டு க்ஷேமத்துடன் திரும்பிவருகின்றதைப் பார்க் கக்கடவேன். ஓ! [1] விஷ்வக்ஸேனரே! பிரபுவே! குருதேசம் சென்று நாங்களெல்லாரும் நல்லமனமுடையவர்களும் நல்ல அறிவுடையவர் களுமாகச் சேர்ந்திருக்கும்படி பரதவம்சத்தோர்களேச் சமனஞ்செய் யும். அர்ஜுனனுக்குப் பிராதாவாகவும் நண்பராகவுமிருக்கிறீர்; எனக் கும் பிரியராயிருக்கிறீர்; அன்புடைமையால் சங்கிக்கத்தகாதவராய் இருக்கிறீர். எங்களுக்கு ஐஶ்வர்யத்தினிமித்தம் க்ஷேமமாகப்போய் வருவீர். எங்களேயும் அறிகிறீர்; பகைவர்களேயும் அறிகிறீர்; விஷ யங்களேயும் அறிகிறீர்; பேசவுமறிகிறீர். கோவிந்தரே! எது எது எங்களுக்கு நன்மையோ அதைஅதைத் துர்யோதனனிடம் சொல் லக்கடவீர். ஓ! கேசவரே! எந்த எந்த வார்த்தையானது தர்மத் துடன்கூடினதும் ஹிதமும் ஒத்ததுமாயிருக்குமோ அதையதை நயமாயிருந்தாலும் கடுமையாயிருந்தாலும் சொல்லும்' என்றார்.

## எழுபத்திரண்டாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

---

(மாதவர், போர் நிச்சயமென்பதையும் உலகத்தாரின் ஸந்தேக நிவிருத்திக்காக ஸமாதானம் பேசப்போவதையும் சொல்லியது.)

ஸ்ரீபகவானவர், 'என்னல் ஸஞ்சயனுடைய வார்த்தையும் கேட்கப்பட்டது; உம்முடைய வார்த்தையும் கேட்கப்பட்டது.

[1] நான்கு பக்கத்திலும் சேனையையுடையவர்.

அவர்களுடையதும் உம்முடையதுமான எல்லா அபிப்ராயத்தையும் அறிகின்றேன். உம்முடைய புத்தியானது தர்மத்தைப்பற்றியதா யிருக்கிறது. அவர்களுடைய புத்தியானது வைரத்தைப்பற்றியதா யிருக்கிறது. யுத்தமில்லாமல் எது அடையப்படுமோ அது உம்மால் நன்கு மதிக்கப்பட்டதாகும். ஓ! அரசரே! இவ்வித [1]நைஷ்டிககர்மா வானது க்ஷத்ரியனுக்குரியதாக இல்லை. க்ஷத்ரியன் பிச்சை யெடுத்து ஜீவிப்பதைச் செய்யக்கூடாதென்று எல்லா ஆஶ்ரமிகளும் சொல்லுகின்றனர். யுத்தத்தில் (ஏற்படும்) ஜயம் அல்லது வத மென்னும் இது, ப்ரம்மாவினால் க்ஷத்ரியனுக்கு ஆஞ்ஞாபிக்கப்பட்ட அனுதியான ஸ்வதர்மம். ஏழைத்தன்மையானது புகழப்படுகிற தில்லை. ஓ! யுதிஷ்டிரரே! ஏழையைப் பின்பற்றிப்பிழைப்பது தகுதி யன்று. தோள்வலி அமைந்தவரே! பராக்கிரமத்தைச் செலுத்தும். பகைவரை வாட்டுபவரே! பகைவரைக் கொல்வீராக. மிக்க பேராசை கொண்டவர்களும் ஸ்நேகம் செய்தவர்களும் நீண்டகாலம் கூட வஸித்தவர்களும் நண்பர்களைச் சேகரித்துக்கொண்டவர்களும் சேனை யைத் திரட்டிக் கொண்டவர்களுமான திருதராஷ்டிரபுத்திரர்கள் உம் மிடத்தில் ஸமமாயிருப்பதைச் செய்வார்களென்பதற்கு உபாயமா னது இல்லை. பீஷ்மர் துரோணர் கிருபர் முதலானவர்களாலே (தாங் கள்) பலமுடையவர்களென்பதையன்றோ நினைக்கின்றனர்? பகை வரை அடக்குபவரே! அரசரே! மென்மையுடன் இவர்களை நீர் உபசரிக்கிறவரையில், இவர்கள் உம்முடைய ராஜ்யத்தை அபகரிப் பார்கள். திருதராஷ்டிர புத்ரர்கள், தயையினாலும் ஏழைமையினாலும் [2] தர்மார்த்தங்களுடைய காரணங்களினாலும் உம்முடைய இஷ்டத் தைச் செய்யத்தக்கவராகார். துரியோதனன் கோபத்தாலே உமக் குச் செய்யக்கூடாததைச் செய்தும் உம்முடையவிஷயத்தில் பச்சாத் தாபத்தை அடையவில்லையென்கிற இதுவே அதைத் தெரிந்துகொள் வதில் உமக்கு நிமித்தம் (=காரணம்). அரசரே! பீஷ்மரும் துரோ ணரும் புத்திமானான விதுரரும் ஸாதுக்களான பிராம்மணர்களும் அரசரும் நகரமாந்தரும் கௌரவ ஶ்ரேஷ்டர்களெல்லாருமே பார்த் திருக்கும்பொழுது உண்மையாகத் தானத்தையே சீலமாகவுடைய வரும் மிருதுவாயிருப்பவரும் அடக்கமுள்ளவரும் தர்மசீலரும் விர தத்தை அனுஸரித்தவருமான உம்மைக் கபடத்தினால் சூதாட்டத்தில்

1 நைஷ்டிகர்களான பிரம்மசாரி ஸந்யாஸிகளுக்குரிய கர்மம்.

2 சொன்னபடி ராஜ்யத்தைக் கொடுத்தல் தர்மம்; கலகமில்லாமல் கொடுத்ததுபோக மீதிராஜ்யத்தை மரிக்காமல் அனுபவித்தல் அர்த்தம்.

ஜயித்தான். அப்பொழுது, குரூரனான அவன் தன்னுடைய அந்தச் செய்கையினால் வெட்கத்தை அடையவுமில்லை. ஓ! அரசரே! அவ் விதமான சீலமும் நடையுமுடைய அவனிடத்தில் அன்புச்செய்யா தீர். ஓ! பாரதரே! அவர்கள் எல்லா உலகத்தாருக்குமே கொல்ல வேண்டியவர்கள். உமக்குக் கொல்லவேண்டியவர்களென்று சொல்ல வும் வேண்டுமா? தகாத சொற்களாலே தம்பிகளுடன்கூடின உம்மை வருத்தப்படுத்தினான். தம்பிகளுடன்கூடக் களித்தவ னும் (தன்னைப்) புகழ்கிறவனுமாகி, 'இதுவரை பாண்டவர்களுக்கு இவ்விடத்திற் சிறிதும் ஸொத்தானது இல்லை. இவர்களுடைய பெயரும் கோத்திரமும்கூட நாளடைவில் மிச்சமிரா. மேலும், இவர்களுக்கு அவமானமும் உண்டாகப்போகிறது. இவர்கள் சூரத் தன்மை முதலியவற்றை இழந்து என்னிடத்தில் மரணத்தை அடையப்போகின்றனர்' என்று சொல்லுகின்றான். அப்பொழுது, சூதாட்டம் நடத்தப்பட்டிருக்கையில் பாபியும் மிக்கதுர்ப்புத்தியுடை யவனுமான துச்சாஸனனால் ராஜமஹிஷியான த்ரௌபதியான வள் அநாதைபோல ஸபையில் கேசத்தைப் பிடித்திழுக்கப் பட்டு அழுகிறவளாகி அரசர்களுடையஸபையில் பீஷ்மர் த்ரோ ணர்களுடைய முன்னிலையில் அடிக்கடி பசுவென்று சொல்லப்பட் டாள். பயங்கரமானபராக்ரமத்தையுடைய எல்லாப்பிராதாக்களும் உம்மால் தடுக்கப்பட்டவர்களும் தர்மமாகிறகயிற்றால் கட்டப்பட்ட வர்களுமாகி (கோபமுதலிய) ஒன்றையும் அடைந்திலர். அவன், நீர் வனஞ்சென்றபிறகு, இவைகளையும் வேறு கடுமையான வார்த்தை களையும் சொல்லி ஞாதிகளுடையமத்தியில் (தன்னைப்) புகழ்ந்து கொண்டான். அழைக்கப்பட்டவர்களாகி அந்த ஸபையிலிருந்த அவர் கள், குற்றமில்லாதவரான உம்மைப்பார்த்து எப்பொழுதும் கண் ணீரால் குரல் தழுதழுத்தவர்களும் அழுகிறவர்களுமாயிருந்தனர். அந்த அரசர்களும் பிராம்மணர்களும் துரியோதனனைப்புகழவில்லை. அங்குள்ளஸபையோர்களெல்லாரும் அவனை நிந்தித்தார்கள். பகை வர்களை வாட்டுகிறவரே! அரசரே! நல்லகுலத்தில் பிறந்தவனுக்கு நிந்தை வதம் (இரண்டிலும்) வதமானது மிக்ககுணமுடையது. கெட்டபிழைப்பான நிந்தைபோ குணமுடையதன்று. அரசரே! மஹாராஜரே! லஜ்ஜையில்லாதவனும் பூமியில் எல்லா அரசர்களா லும் நிந்திக்கப்பட்டவனுமாகிறபொழுதே கொல்லப்பட்டவனாகிறான். இப்படிப்பட்ட நடையுள்ளவனுடைய வதம், வட்டமான மேடை யால் பற்றப்பட்டு நிற்கிறதும் வேர் அறுந்ததுமான மரத்தைச்சாய்ப்

பதுபோல, இலேசாய்ச் சாதிக்கக்கூடியது. மதிகெட்ட இழிவானவன் எல்லா ஜனங்களுக்கும் ஸர்ப்பம்போலக் கொல்லப்படவேண்டிய வன். பகைவர்களை வதைக்கின்றவரே! நீர் இவனைக் கொல்லும். அரசரே! சந்தேகத்தைச் செய்யாதீர். குற்றமற்றவரே! நீர் பிதாவான திருதராஷ்டிரனுக்கும் பீஷ்மருக்கும் நமஸ்காரத்தைச் செய்வீரென் பது எல்லாவிதத்தாலும் உமக்கு உசிதம். எனக்கும் பிடித்திருக்கிறது. அரசரே! நானே சென்று துரியோதனன் விஷயத்தில், 'இவன் ஸாதுவோ அஸாதுவோ' என்கிற ஸந்தேகமுள்ள எல்லாஜனங்களு டைய ஸந்தேகத்தையும் அறுப்பேன். நான் அவ்விடத்தில் அந்த அரசர்களுடைய மத்தியில் எல்லாமனிதர்களுக்கும் ஸாதாரணமான உம்முடைய குணங்களையும், அவனுடைய முறைமையைமீறின நடைகளை யும் நன்றாய்ச்சொல்லுவேன். அவ்விடத்தில் சொல்லுகிற என்னுடைய தர்மார்த்தங்களுடன்கூடியதும் ஹிதமுமான வார்த்தையைப் பல தேசங்களுக்கு அதிபதிகளான எல்லா அரசர்களும் கேட்டு உம்மு டையவிஷயத்தில், 'தர்மாத்மா' என்றும் 'ஸத்தியமான வாக்குடைய வர்' என்றும் அங்கீகரிக்கப்போகின்றனர். அவன்விஷயத்திலும் (அவன்) லோபத்தால் எப்படியிருந்தானென்பதை அறியப்போகின்ற னர். முதியவர்களையும் சிறுவர்களையும் அழைத்துக்கொண்டு நான்கு வர்ணத்தாரும் வந்திருக்கையில் பட்டணத்து ஜனங்களிடத்திலும் தேசத்தார்களிடத்திலும் இவனை நிந்திக்கவே செய்வேன். ஸமா தானத்தை வேண்டுகிறபடியால் நீர் அவர்கள் விஷயத்தில் அதர் மத்தைச் செய்தவராகமாட்டீர். அரசர்கள் கௌரவர்களையும் திருத ராஷ்டிரனையும் நிந்திக்கப்போகின்றனர். உலகத்தினால் அவன் விடப்பட்ட பிறகு, செய்யவேண்டியது என்ன மிச்சமிருக்கிறது? அரசரே! இப்படியே துரியோதனனும் கொல்லப்பட்டவனுக்குச் சமமானபொழுது வேறு என்ன செய்யவேண்டும்? நான் எல் லாக் கௌரவர்களையும் அடைந்து உங்களுடைய பயனைக்கெடுக் காமல் சமாதானத்தைச் செய்ய முயலுவேன். (அவர்களுடைய) செயலையும் கண்டறிவேன். பாரதரே! யுத்தத்தில் பற்றினதான கௌரவர்களுடைய முயற்சியையும் சென்று பார்த்துவிட்டு உம் முடைய ஜயத்தின்பொருட்டுத் திரும்பப்போகிறேன். எல்லாவிதத் தாலும் நான் பகைவருடன் யுத்தத்தையே பிரார்த்திக்கிறேன். அப் படியே, எனக்கு எல்லாநிமித்தங்களும் உண்டாகின்றன. மிருகங் களும் பக்ஷிகளும் கோரமாகக் கத்துகின்றன. முன்ராத்திரிகளில் யானை குதிரைமுதலியவைகளில் கோரமான ரூபங்கள் ஏற்படுகின்

றன. அப்படிப்போலவே, அக்னியும் மிகவும் கோரமான பல வர்ணங்களை அடைகிறது. இப்பொழுது மிக்க பயங்கரனான அந்தகன் மானிடவுலகத்திற்கு நாசத்தைச் செய்கிறதற்காக வந்தவனாகாமற்போனால் (இவை இப்படி ஏற்படா). ஆயுதங்களையும் யந்திரத்தையும் கவசங்களையும் ரதங்களையும் யானைகளையும் குதிரைகளையும் ஸஜ்ஜம் செய்துகொண்டு உம்முடைய எல்லா வீரர்களும் உறுதியைச்செய்தவர்களும் யானை தேர் குதிரைகளில் ஸன்னாகமுடையவர்களுமாயிருக்கட்டும். ஓ! அரசரே! யுத்தத்திற்காக உமக்கு ஸம்பாதிக்க வேண்டிய எல்லாவற்றையும் நிரம்பச் செய்யும். அரசரே! பாண்டவர்களில் சிறந்தவரே! முன் புஷ்களமாயிருந்து சூதாட்டத்தில் அபகரிக்கப்பட்ட உம்முடைய இந்த ராஜ்யத்தைத் துரியோதனன் உயிரோடிருந்துகொண்டு எவ்விதத்திலும் இப்பொழுது உமக்குக் கொடுக்கத்தக்கவனாகான்' என்றார்.

---

எழுபத்துமூன்றாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

**(பீமன் துரியோதனனைத் திருப்திசெய்வது அரிதென்பதையும் எப்படியாவது ஸமாதானமே செய்யவேண்டுமென்பதையும் கோவிந்தநுக்குச் சொன்னது.)**

(அப்பொழுது), பீமஸேனன் சொல்லலானான்: 'ஓ! மதுஸூதனரே! எப்படி எப்படிச்சொன்னால் கௌரவர்களுக்குச் சாந்தியானது ஏற்படுமோ அப்படி அப்படியே சொல்லக்கடவீர். யுத்தத்தால் பயப்படுத்தாதீர். பொறாமையுடையவனும் கோபமுண்டவனும் நன்மையைப் பகைப்பவனும் பெரியமனமுடையவனுமான துரியோதனன் கடுமையாகச் சொல்லத்தக்கவனல்லன். அவனிடம் ஸமாதானமாகவே சொல்லக்கடவீர். இயற்கையினாலேயே பாவபுத்தியுடையவனும் திருடர்களுக்குச் சமமான எண்ணமுள்ளவனும் ஐஶ்வரியமதத்தால் மயங்கினவனும் பாண்டவர்களுடன் பகைகொண்டவனும் தீர்க்காலோசனையில்லாதவனும் கொடுமைக்காரனும் நிந்திப்பவனும் குரூரமானபராக்ரமமுடையவனும் தீராக்கோபமுள்ளவனும் திருப்பமுடியாதவனும் பாவத்தையே உருவமாகவுடையவனும் வஞ்சனையில் ப்ரியமுள்ளவனுமான அவன் செத்தாலும்சாவான்; கலக்கப்படான்; தன்னுடையகொள்கையை விடவே

மாட்டான். ஓ! கிருஷ்ணரே! அப்படிப்பட்டவனுடன் ஸமாதானமானது மிகவும் செய்யமுடியாததென்று நினைக்கிறேன். நண்பர்களுக்கும் விபரீதமாயுள்ளவனும் தர்மத்தைவிட்டவனும் பொய்யில்விருப்பமுள்ளவனுமானதால், நண்பர்களுடைய வார்த்தைகளையும் மனங்களையும் விரோதிக்கவேசெய்வான். கோபத்தின்வசத்தை அடைந்தவனும் தீய தன்மையிலிருப்பவனுமான அவன், புற்களால்மறைக்கப்பட்ட பாம்பானது இயற்கையால் கடித்துப் பாவத்தைச்செய்வதுபோல, இயற்கையால் பாவத்தை அடைகிறான். துரியோதனன், எவ்விதச்சேனை எவ்விதநடை எவ்விதத் தன்மை எவ்வித வன்மை எவ்வித பராக்ரமமுடையவனென்று, எல்லாவிதத்தாலும், உம்மால் அறியப்பட்டவன். முன்பு, புத்திரர்களுடன்கூடின கௌரவர்களும் அப்படியே நாங்களும், இந்திரனைத் தலைவனாகவுடைய தேவர்கள்போல, மனவமைதியுள்ளவர்களும் உறவினர்களுடன் கூடினவர்களுமாகி மகிழ்ந்திருந்தோம். ஓ! மதுஸூதனரே! பாரதர்கள் துரியோதனனுடைய கோபத்தினாலே கோடைக்காலத்தில் அக்கினிகளாலே வனங்கள் எரிக்கப்படுவதுபோல எரிக்கப்படப்போகின்றனர். ஓ! மதுஸூதனரே! ஞாதிகளையும் உறவினர்களுடன்கூடின நண்பர்களையும் வேரோடு களைந்த இந்தப்பதினெட்டு அரசர்கள் பிரஸித்தர்கள். அஸூரர்கள் தேஜஸினால் ஜ்வலிக்கின்றவர்கள்போலச் செழிப்பையடைந்து தர்மத்திற்கு விநாசகாலம் ஏற்பட்டபொழுது, கலியானது உண்டாயிற்று. க. ஹைஹயர்களில் உதாவர்த்தனும், உ. நீபர்களில் ஜனமேஜயனும், ௩. தாலஜங்கர்களில் பஹுளனும், ௪. க்ருமிகளில் கர்வியான வஸுவும், ௫. ஸுவீரர்களில் அஜபிந்துவும், ௬. ஸுராஷ்டிரர்களில் ருஷர்த்திகனும், எ. பலீஹர்களில் அர்க்கஜனும், அ. சீனர்களில் தௌதமூலகனும், ௯. விதேஹர்களில் ஹயக்ரீவனும், க௦. மஹௌஜஸர்களில் வாயுவும், கக. ஸுந்தர வம்சர்களில் பாஹுவும், கஉ. தீப்தாக்ஷர்களில் புரூரவனும், க௩. சேதிமத்ஸியர்களில் ஸஹஜனும், க௪. ப்ரவீரர்களில் விருஷத்வஜனும், க௫. சந்திரவத்ஸர்களில் தாரணனும், க௬. முகுடர்களில் விகாஹனனும், கஎ. நந்திவேகர்களில் சமனும் ஆகிய இவர்கள் யுகமுடிவுகளில் தம் தம் குலங்களில் குலத்தைக்கெடுக்கின்ற பாபிகளும் புருஷாதமர்களுமாய் உண்டானார்கள். கிருஷ்ணரே! இழிவானவனும் பாபபுருஷனுமான இந்தத் [1]துரியோதனனும் கௌரவர்களான எங்களுடையகுலத்திற்குக் காலத்தினால் சேகரிக்கப்பட்ட தணலா

1 'இவனைச் சேர்த்துப்பதினெண்மர் உலகங்களைக்கெடுத்தவர்கள்' என்பது.

யிருப்பவன். ஆகையால், உக்ரமான பராக்ரமத்தையுடைய அவனை நோக்கி, அறம்பொருள்களுடன் கூடியதாகவும் ஹிதமாகவும் அவனுடைய இஷ்டத்தை அனுஸரித்ததாகவும், பலபடவும் கடுமையில்லாமலும் மெள்ளச்சொல்லும். உக்கிரமாகச்சொல்லாதீர். ஓ! கிருஷ்ணரே! நாங்களெல்லாரும் தாழ்ந்தவர்களாகிப் படிந்து நடக்கிறவர்களாயாவது துர்யோதனனை அனுஸரிப்போம். எங்கள் குலத்தில் பிறந்தவர்கள் நசிக்கவேண்டாம். ஓ! வாஸுதேவரே! எப்படியானல், எங்களுக்குக் கௌரவர்களுடன் உதாஸீனமான இருப்பாவது ஏற்படுமோ அப்படியாவது செய்யக்கடவீர். கௌரவர்களைக் கெட்டநீதியானது தொடவேண்டாம். ஓ! கிருஷ்ணரே! முதியவரான பாட்டனரிடம் (இவ்விதம்) சொல்லவேண்டும். ஸபையிலிருப்பவர்களிடமும் சொல்லவேண்டும்; பிராதாக்களுக்கு நல்ல பிராதாக்களையுடைமை உண்டாகட்டும். துர்யோதனன் சமனத்தை அடையட்டும். நான் இவ்விதம் இதைச் சொல்லுகிறேன். அரசருமே புகழ்கிறார். அர்ஜுனன் யுத்தத்தில் விருப்பமில்லாதவனாகவேயிருக்கிறான். அர்ஜுனனிடத்தில் அதிகமான தயையன்றோ இருக்கிறது?' என்றான்.

## எழுபத்து நான்காவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(மாதவர், பீமனை அவனுடைய பிரதிஜ்ஞைமுதலியவற்றை நினைப்பூட்டிப் போருக்கு உத்ஸாகப்படுத்தியது.)

புஜபலமமைந்தவரும் பலராமருக்குத் தம்பியும் சூரஸேன வம்சத்தில் பிறந்தவரும் சார்ங்கமென்னும் வில்லையுடையவருமான கேசவர் முன்னுண்டாகாததும் மென்மையுடன்கூடினதுமான பீமனுடைய இந்தவார்த்தையைக்கேட்டுச் சிரிக்கிறவர்போல, அதை மலையின் லகுத்தன்மைபோலவும் அக்னியில் குளிர்ச்சியைப்போலவும் நினைத்து, அப்பொழுது, தீயைக் காற்று மூட்டுவதுபோல் விருகோதரனை வார்த்தைகளாலே தூண்டுகிறவராகி, உட்கார்ந்திருப்பவனும் தயையினல் மூடப்பட்டவனுமான அவனை நோக்கிச் சொல்லலானர். 'பீமஸேன! நீ மற்றஸமயத்தில் உன்வதத்தை விரும்புகிறவர்களும் குரூரர்களுமான திருதராஷ்டிரரின் புத்திரர்களைக் கொல்ல விருப்பமுள்ளவனுகி யுத்தத்தையே சிலாகிக்கிறாய். பகைவரை வாட்டுகிறவனே! நீ தூங்கவில்லை. விழித்திருக்கிறாய். நோயினல் கூனினவன்போலப் படுக்

கிறாய். அப்படிப்பட்ட உனது கோபத்தால் பெருமூச்சுவிடுகிற வனும் அக்னிபோல் ஸந்தாபத்தை அடைந்தவனுமாய் எப்பொழுதும் கோரமும் அமைதியற்றதும் அமங்களமுமான வார்த்தையைப்பேசு கிறாய். பீம! புகையுடன் கூடிய தீப்போல அமைதியில்லாதமனமுடை யவனாகிச் சுமையால் பீடையடைந்த பலஹீனன்போலப் பெருமூச்சு விட்டுக்கொண்டு ஏகாந்தத்தில் படுக்கிறாய். அதனை அறியாத சில ஜனங்கள் உன்னை பித்தனாகவும் நினைக்கின்றனர். பீம! மரங் களை வேருடன் பிடுங்கிக் கிளைகளையும் முறிக்கிற யானைபோலப் பூமியைக் காலடிகளால் உதைத்துக் கர்ஜிக்கிறவனாகி நாலுபக்கத்தி லும் ஓடுகிறாய். இந்த இடத்திலும் ஜனக்கூட்டத்தில் மகிழவில்லை; தனிமையில் பொழுதுபோக்குகிறாய். பாண்டவ! இரவிலும் பகலி லும் ஒருபோதும் மற்றவரைப் புகழ்கிறாயில்லை. அகாரணத்தில் சிரிக்கிறவனும் ரகஸ்யத்தில் அழுகிறவன்போன்றவனுமாயிருக்கிறாய். முழங்கால்களில் தலையைவைத்துக்கொண்டும் நெடுநேரம்கண்களை மூடிக்கொண்டும் இருக்கிறாய். திரும்பவும், புருவங்களை நெரித்துக் கொண்டு உதடுகளைக் கடிக்கிறவன்போலவும் அடிக்கடி காணப்படு கிறாய். பீம! அவையெல்லாம் கோபத்தால் செய்விக்கப்பட்டன. 'ஸூர்யன் ஒளியைப்பரப்பிக் கிழக்கில்தோன்றி மேற்கில மறைந்து ஒளியுள்ளவனாகவே த்ருவத்தைச் சுற்றுவதுபோல இதை ஸத்யமா கச் சொல்லுகிறேன். இதற்கு வித்தியாசமில்லை. நான் 'கதையுடன் சென்று பொறுமையுடன் துர்யோதனனைக் கொல்வேன்' என்று பிரா தாக்களுடைய மத்தியில் கதையைத் தொட்டு ஸத்தியம் செய்தாய். பகைவரைவாட்டுகிறவனே! அப்படிப்பட்ட உன்னுடைய புத்தியா னது இப்பொழுது ஸமாதானத்தில் வைக்கப்படுகிறது. அந்தோ! பீம! உன்னைப் பயம் வந்தடைந்ததாகையால், யுத்தத்தை விரும்புகிற வர்களுடைய மனங்கள் யுத்தகாலம்நேரிட்டபொழுது மாறுபடுகின் றன. தூக்கத்தினிடையிலும் விழிப்பினிடையிலும் விபரீதமான சகுனங்களைக் காண்கிறாய். ஆகையினாலேதான், சமனத்தையே விரும்புகிறாய். அந்தோ! அலிபோல உன்னிடத்தில் சிறிதும் ஆண் மையைச் சொல்லுகிறாயில்லை. கலக்கத்தை அடைந்திருக்கிறாய். அத னால் உன்மனம் வேறுபாட்டை அடைந்துவிட்டது. உன் நெஞ்சம் நடுங்குகின்றது. உன் மனம் சிதறிவிட்டது. தொடைகள் அசையா மலிருப்பதை அடைந்துவிட்டாய். ஆகையால், ஸமாதானத்தையே விரும்புகிறாய். பார்த்த! மனிதனுடைய சஞ்சலமான மனமானது காற்றின்வேகத்தால் அசைக்கப்பட்ட இலவம்பழத்தின் உட்கட்டுப்

போல அநித்தியமன்றோ. வேறுபட்ட உன்னுடைய இந்தப்புத்தி யானது, [1]கோக்களுடையமனங்களை மாறுபட்டமனிதனுடையவாக்கு (தளரச்செய்வது) போலவும், (வெள்ளமானது) ஓடமில்லாதவர்களை முழுகச்செய்வதுபோவும் பாண்டவர்களுடைய மனங்களை (த்தளர வும்) முழுகவும் செய்கின்றது. ஓ! பீமஸேன! நீ உனக்குத் தகுதி யில்லாத இப்படிப்பட்ட வார்த்தையைச் சொல்லுகிறாயென்பது மலை யின்அசைவுபோல எனக்குப் பெரிய ஆச்சரியமாயிருக்கிறது. பரத வம்சத்தில் பிறந்தவனே! அப்படிப்பட்ட நீ உன் கர்மங்களையும் நற்குடிப்பிறப்பையும் ஆலோசித்துக் கிளம்பு. துக்கத்தை அடை யாதே. வீரனே! உறுதியாயிரு. பகைவர்களை அடக்குபவனே! நீ தளர்ச்சியடைவது உசிதமன்று. க்ஷத்திரியன் பராக்கிரமத்தால் அடையாததை அனுபவிக்கிறதில்லை' என்றார்.

## எழுபத்தைந்தாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(பீமன் தன்திறமையையும் தான் ஸமாதானத்தை விரும்பு வதற்குத் தயையே காரணமென்பதையும் வாஸுதேவருக்குச் சொல்லியது.)

தீராத கோபத்தை யுடையவனும் பொறாதவனுமான பீம ஸேனன், வாஸுதேவர் அவ்விதம் சொல்லியதைக் கேட்டு, நல்ல குதி ரைபோல வேகத்தையடைந்தான்; அதன் பிறகு, சொல்லத்தொடங்கி ஞன். பீமன், 'ஓ! அச்சுதரே! எண்ணத்தை முழுமையும்செலுத் தியவனும் யுத்தத்தில் தவறாதபராக்ரமத்தையுடையவனும் ஒருவித மாகச் செய்யவிரும்புகிறவனுமான என்னை மற்றொருவிதமாக நினைக் கிறீர். ஓ! தாசார்ஹரே! நீண்டகாலம் என்னுடன் பழகியவரான நீர் என்னுடைய உண்மையை அறிகிறீரா? அல்லது, நாலுபக்கத்திலும் வழிகின்ற தடாகத்தில் நீந்துபவன் (அதனாழத்தையறியாதது) போல் என்னை அறியவில்லையா? ஆகையால், (எனக்கு) தகாதவார்த்தை களாலே நீர் என்னைக் குத்துகிறீர். ஓ! மாதவரே! பீம

---

1 'பசுக்களுக்கு மனுஷ்யனுடையவாக்கு ஏற்பட்டதுபோல வேறு பாடாக உனக்கு உண்டான இந்தப்புத்தியானது ஓடமில்லாதவர்களை (வெள்ளம்) முழுகச் செய்வதுபோலப் பாண்டவர்களைக் கவலைக்கடலில் முழுகச் செய்கிறது' என்றும் கொள்ளலாம்.

ஸேனனென்று என்னை அறிகின்ற ஒருவன் நீர் சொல்வதுபோலத் தகாதவார்த்தைகளை எப்படிச் சொல்லுவான்? ஓ! விருஷ்ணிநந்தனரே! ஆகையால், இந்தவார்த்தையைச் சொல்லப்போகிறேன். என்னுடைய ஆண்மையும் பலமும் பிறரோடொப்பானவையல்ல. தானே தன்னைப்புகழ்வதென்பது எல்லாவிதத்தாலும் இழிவானகார்யம். அதிகவார்த்தையால் அடிக்கப்பட்டதால், என்பலத்தைச்சொல்லுகிறேன். ஓ! கிருஷ்ணரே! இந்தப்பிரஜைகளுக்கு இருப்பிடமானவைகளும் அசையாதவைகளும் ஆதாரமில்லாதவைகளும் அளவற்றவைகளும் எல்லாவற்றிற்கும் மாதாபிதாக்களுமான இந்தப்பூமியையும் ஸ்வர்க்கத்தையும் பாரும். இவைகள் கோபமுடையவைகளாகி இரண்டுபாறைகள்போல வேகமாகவருமானாலும் சராசரங்களுடன் கூடின இவைகளை நான் கைகளால் அடக்குவேன். பெரிய பரிகாயுதங்கள்போன்றகைகளுடைய இந்த இடைவெளியைப் பாரும். இவற்றிற்குள் அகப்பட்டு விடுபடுகிறமனிதனை நான் பார்க்கவில்லை. என்றால் எதிர்க்கப்பட்டவனை இமயமலை, கடல், வஜ்ராயுதத்தையுடையவனும் வலாஸுரனைக் கொன்றவனுமான இந்திரன் ஆகிய மூவரும் நேரில் பலத்தைஅடைந்து ரக்ஷிக்கமாட்டார்கள். யுத்தத்துக்குத்தக்கவர்களும் பாண்டவர்களைக்கொல்ல விருப்பமுள்ளவர்களுமான எல்லா அரசர்களையும் கீழே தரையில் உள்ளங்காலினாலேயே மிதித்துவிடுவேன். ஓ! அச்சுதரே! நான் அரசர்களைவென்று வசம்செய்த என்னுடைய வன்மையை நீர் அறியவில்லையென்பதில்லை. ஓ! ஜனார்த்தனரே! அல்லது, என்னைஅறியவில்லையானால் உதயமாகின்றஸூர்யனுடைய ஒளியை அறிவதுபோல நெருங்கிய பலமான யுத்தத்தில் என்னை அறியப்போகிறீர். ஓ! குற்றமற்றவரே! ஊசியினால் புண்ணைக்குத்துவதுபோலக் கடுமையான வார்த்தைகளால் (என்னை) ஏன் குத்துகிறீர்? புத்திக்குஎட்டினபடி இதைச் சொன்னேன். நான் சொன்னதைக்காட்டிலும் என்னை அதிகமாக அறியும். யுத்தத்தில் கூட்டத்தில் கொல்லும்நாள் ஏற்பட்டபொழுது என்னால்கொல்லப்பட்ட யானைகளையும் தேராளிகளையும் குதிரை வீரர்களையும் காலாட்களையும், கோபத்தையடைந்து க்ஷத்திரியஶ்ரேஷ்டர்களைக் கொல்லுகின்ற என்னையும் பார்க்கப்போகிறீர். சிறந்தவர்களையே சிறந்தவர்களையே இழுக்கும் என்னை நீரும் உலகமும் பார்ப்பீர்கள். என்னுடைய அங்கங்கள் சிதறவில்லை. என்மனம் பதறவில்லை. கோபத்தையடைந்த எல்லா உலகத்திலிருந்துமே எனக்குப் பயமானது இல்லை. ஓ! மதுஸூதனரே! மேலே என்னவென்றால், இது கிருபையினாலுண்டான ஸ்நே

கம். எங்களுடைய பாரதர்கள் நசிக்கவேண்டாமென்று எல்லாத் துன்பங்களையும் பொறுக்கிறேன்' என்றான்.

## எழுபத்தாறுவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(கோவிந்தர் பீமனைப் புகழ்ந்து அவனுடையகருத்தை அறிதற்கும் அவனை உத்ஸாகப்படுத்தற்குமே தாம் அவ்விதம் கூறியதாக அவனிடம் சொல்லியது.)

ஸ்ரீபகவானுனவர், 'நான் அபிப்பிராயத்தை அறியும் விருப்பத்துடன் ஸ்நேஹத்தால் இந்த வார்த்தையைச் சொன்னேன்; நிந்தையினாலும் பண்டிதத் தன்மையினாலும் கோபத்தாலும் சொல்லவேண்டுமென்கிற விருப்பத்தாலும் சொல்லவில்லை. நான் உன்னுடைய மகிமையை அறிவேன்; உனக்குள்ள பலத்தையும் அறிவேன்; உன்னுடையசெய்கைகளையும் அறிவேன். உன்னை நான் அவமானம் செய்யவில்லை. பாண்டவ! நீ உன்னிடத்தில் எவ்வித கல்யாணகுணத்தை நினைக்கிறாயோ அதனை நான் உன்னிடத்தில் ஆயிரமடங்கு அதிகமாக நினைக்கின்றேன். பீம! எல்லா அரசர்களாலும் பூஜிக்கப்பட்ட எவ்வித குலத்தில் (உனக்குப்) பிறவியோ அதற்குத்தக்கபடி நீ பந்துக்களோடும் நண்பர்களோடும் இருக்கிறாய். விருகோதர! அறியவிரும்புகிறவர்களா ஸந்தேகிக்கப்பட்ட [1] தேவதர்மம் [2] மானிடதர்மம் இவற்றின்முடிவை உறுதிசெய்கிறார்களில்லை. அந்தத் தர்மமே மனிதனுடைய கார்யாதிகளில் காரணமாகி இவனுடைய கேட்டிலும் அதுவே காரணமாகிறது. மனிதமுயற்சியாலுண்டான செய்கையானது ஸந்தேகிக்கப்பட்ட பயனையுடையதாயிருக்கிறது. தோஷத்தைக்காண்கின்ற கவிகளாலே ஒருவிதமாகத் தீர்மானிக்கப்பட்ட (கர்மங்கள்) வாயுவினுடைய வேகங்கள்போல வேறுவிதமாகச் சுற்றுகின்றன. நன்கு ஆலோசிக்கப்பட்டதும் நியாயத்தினால் உதவிசெய்யப்பட்டதுமாகச் செய்யப்பட்ட மனுஷ்யனுடைய செய்கையானது தெய்வத்தினாலும் தடுக்கப்படுகிறது. பாரத! (தன்னால்) செய்யப்படாததும் தேவதைகளாலுண்டானதுமான குளிர், வெப்பம், மழை, பசி, தாகமென்கிறகாரியங்கள் மனிதமுயற்சியினாலும் தடுக்கப்படுகின்றன. பிராப்தத்தைத்தவிர, மனிதன் தானேசெய்த (பிரா

1 புண்ணியபாவங்களின் பயன். 2 மனிதமுயற்சி.

யச்சித்தம்முதலிய) கர்மத்தினால் அவை நசிப்பதால் மறுபிறப்பில் தடையுண்டாகிறதில்லை. அந்தவிஷயத்தில் பிரமாணமிருக்கிறது. பாண்டவ! உலகத்திற்குத் தொழிலைவிட்டு மற்றவற்றால் பிழைப்பு இல்லை. இவ்விதபுத்தியுடையவனைப் பிரவிருத்திக்கவேண்டும். (முயற்சி, தெய்வம்) இரண்டும் சேரும்போது பயனுண்டாகும். இவ்விதம் தெரிந்துகொண்டவன் தொழிலிலேயே செல்லுகிறான். அந்தக்காரியம் கைகூடாவிடில், மனவருத்தத்தை அடைகிறதில்லை. கைகூடுவதில் ஸந்தோஷத்தையும் அடைகிறதில்லை. பீமஸேன! அதிலுள்ள இந்தநிச்சயத்தை நான் சொல்லவிரும்புகிறேன். பகைவர்களுடன் யுத்தத்தில் உறுதியான வெற்றியானது சொல்லத்தகுந்ததில்லை. சக்தியை மிகவும் இழந்தவனாகக்கூடாது. அப்படிப்போலப் பதார்த்தங்களின் நாசத்தில் துக்கத்தையும் தளர்ச்சியையும் அடையக்கூடாது' என்கிற இந்த விஷயத்தை உனக்குச்சொல்லுகிறேன். பாண்டவ! நாளைவிடிந்ததும் துரியோதனனுடைய ஸமீபம்சென்று உங்களுடையபயனைக் குறையாமலே சமனத்தைச் செய்வதற்கு முயலுவேன். அவர்கள் ஸமாதானத்தைச்செய்வார்களேயானால், அதனால் எனக்கு அழிவற்றபுகழ் உண்டாகும். உங்களுடைய இஷ்டமும் செய்யப்பட்டதாகும். அவர்களுக்கும் பெரிதான நன்மை உண்டாகும். அந்தக்கௌரவர்கள் ஆக்கிரகப்படுவார்களேயானால் என்சொல்லை ஏற்றுக்கொள்ளார். (அப்பொழுது), இந்தவிஷயத்தில் போராகிறகொடியசெயலே ஏற்படும். பீமஸேன! அந்தயுத்தத்தில் உன்னிடத்தில் பாரம் வைக்கப்பட்டதாகும். அர்ஜுனனாலே சுமையானது தாங்கப்படவேண்டும். மற்றவர்கள் உங்களால் காக்கப்படவேண்டும். நானே சண்டைநேர்ந்தபொழுது, அர்ஜுனனுக்கு ஸாரதியாவேன். இது அர்ஜுனனுடைய விருப்பம். நான் யுத்தத்தை விரும்பவில்லை என்பதில்லை. ஆகையால், விருகோதர! நான், தைர்யத்துடன்கூடின வார்த்தையைப் பேசுகின்ற உன்னுடைய புத்தியைப்பற்றிச் சந்தேகமுடையவனாகி உன்னுடைய சக்தியைத் தூண்டினேன்' என்றார்.

---

## எழுபத்தேழாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(அர்ஜுனன் ஸமாதானம் சண்டை இரண்டையும் புகழ்ந்து இஷ்டப்படி ஏதாவதொன்றை நிச்சயிக்கும்படி கிருஷ்ணரிடம் சொல்லியது.)

(அப்பொழுது), அர்ஜுனன் சொல்லுகிறான்: 'ஓ! ஜனார்த்தனரே! யுதிஷ்டிரராலேயே சொல்லவேண்டியதுமுழுதும் சொல்லப்பட்டது. ஓ! பகைவரை வாட்டுபவரே! ஆனாலும், உம்முடைய வார்த்தையைக்கேட்டு எனக்கு (ப்பின்வருமாறு) தோன்றுகிறது. ஓ! பிரபுவே! திருதராஷ்டிரருடைய பேராசையினாலோ, (எங்களுக்கு) நேரிட்டஎளிமையினாலோ, இந்தவிஷயத்தில் ஸமாதானத்தை நீர்செய்யக்கூடியதாக நினைக்கவேயில்லையா? அல்லது, மனிதனுடைய பராக்கிரமத்தைப் பயனில்லாததாக நினைக்கிறீரா? முன்வினையின்றி முயற்சியினால் வலிமையும் உண்டாவதில்லை. (உம்மால்) சொல்லப்பட்ட [1] அப்படிப்பட்ட இந்தவார்த்தையானது அப்படியிருந்தாலும் அது அவ்விதமே ஆகலாம். மேலும், இது இவ்விதம் பார்க்கத்தக்கதுமில்லை. ஒன்றும் செய்ய இயலாததாகவுமில்லை. மேலும், இந்தயுத்தத்தை எங்களுக்கு நாசத்தைச் செய்கிறதாகவும் கஷ்டமானதாகவும் கருதுகிறீர். எவர்களுக்கு ஸாமமுதலிய உபாயங்களால் பயன் உண்டாகவில்லையோ அவர்களுக்கு அவை (தக்கபடி செய்யப்படாமையால்) துன்பத்தைச் செய்கின்றன. ஓ! பிரபுவே! நன்றாக நிறைவேறின (ஸாமமுதலிய) உபாயங்கள் பயனுள்ளவையாகும். (ஆகையால்), கிருஷ்ணரே! எங்களுக்குப் பிறருடன் ஸுகமுண்டாகத்தக்கபடி நடப்பீராக. ஓ! வீரரே! தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் பிரம்மதேவர்போல நீர் பாண்டவர்களும் கௌரவர்களுமான எங்களுக்கு முதன்மையான நண்பர். கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் கெடுதலில்லாததைக் கைக்கொள்ளக்கடவீர். எங்களுக்கு நன்மையான கார்யமானது உமக்குச் செய்யமுடியாததன்றென்று நினைக்கிறேன். ஜனார்த்தனரே! இவ்விதமானால் உமது கார்யம் செய்யுந்தகுதியை அடையும். ஓ! ஜனார்த்தனரே! நீர் சென்று இவ்விதமே செய்வீர். ஓ! வீரரே! அல்லது,

1 'ஸமாதானமென்பது எனக்கு விருப்பமில்லாததாயினும் உமது விருப்பப்படி நேர்ந்தாலும் நேரட்டும்' என்பது.

துராத்மாவாயிருக்கிற அவன் விஷயத்தில் நீர் வேறுசெய்ய விரும்பி னல் அதுமுழுதையும் நீர்விரும்பியபடி செய்யும். எங்களுக்கு அவர்களுடன் ஸௌகமாவது ஏற்படட்டும். அல்லது, உம்மால் செய்யவிரும்பப்பட்டதாவது நேரட்டும். ஓ! கிருஷ்ணரே! விசாரிக் கும்பொழுது, உம்முடைய விருப்பம் எதுவோ அதுவே எங்களுக் குப் பெரிது. ஓ! மதுஸூதனரே! தர்மபுத்திரரிடம் செல்வத்தைப் பார்த்துவிட்டுப் பொறுதவனும் தர்மத்துடன்கூடிய உபாயத்தைக் காணமல் குற்றமான சூதாட்டத்தைச் செய்து குரூரமான உபாயத் தால் (அதைக்) கவர்ந்தவனுமான அந்தத் துர்ப்புத்திக்காரன் புத்திரர் களோடும் பந்துக்களோடும் வதத்தையடையத் தக்கவனல்லனென்ப தில்லை. க்ஷத்திரியர்களுள் பிறந்து வில்லையுந்தரித்த ஆண்மகன் போருக்கு அழைக்கப்பட்டால் பிராணத்தியாகம் நேரிட்டாலும் எப் படித் திரும்புவான்? ஓ! விருஷ்ணிகுலத்தில் பிறந்தவரே! அதர்ம மார்க்கத்தால் ஜயிக்கப்பட்டு வனத்திற்குப் புறப்பட்ட (எங்களைப்) பார்த்து, (நாடு தனதென்னும்) நிச்சயத்தையடைந்த அந்தத் துர் யோதனன் என்னல் கொல்லப்பட வேண்டியவனே. ஓ! கிருஷ் ணரே! மித்திரர் நிமித்தமாக இதனைச் செய்யவிரும்புகிறீரென்பது ஆச்சரியமில்லை. கார்யமானது ஸமாதானத்தினலாவது மற்ற தான (சண்டையினலாவது) எப்படியும் பயனுள்ளதாகலாம். அல் லது, அவர்களுடைய வதமே சிறந்ததென்று நினைக்கிறீரானல், பிறகு, அதுவே சீக்கிரமாகச் செய்யப்படலாம். இதற்குமேல் உம்மால் ஆலோசிக்கத் தக்கதில்லை. கெட்டபுத்தியுள்ளவனை அவன் சபை யின் மத்தியில் துரௌபதியைத் துன்பப்படுத்தினதை அறிகிறீ ரன்றே? அவனுடைய அந்தக்குற்றம் பொறுக்கப்பட்டது. மாத வரே! அப்படிப்பட்டவன் பாண்டவர்களின் விஷயத்தில் ஸரியா யிருப்பானென்கிற எண்ணமானது, உவர் நிலத்தில் விதைக்கப்பட்ட விதை முளையாததுபோல எனக்கு உண்டாகிறதில்லை. ஓ! வார்ஷ் ணேயரே! ஆகையால், நீர் உசிதமாக நினைக்கிறதும் பாண்டவர்க ளான எங்களுக்கு நன்மையும் மேலே செய்யவேண்டியிருப்பது மானதை விரைவில் செய்யும்' என்றான்.

## எழுபத்தேட்டாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(வாஸுதேவர் தண்டனைக்குரிய துரியோதனன் ஸமாதானப் படுத்த முடியாதவனென்றும், யுதிஷ்டிரருடைய விருப் பப்படி தாம் ஸமாதானத்துக்கு முயல்வதாக வும் அர்ஜுனனுக்குச் சொல்லியது.)

ஸ்ரீபகவான், 'மிக்க புஜபலமமைந்தவனே! பாண்டவ! நீ சொல்லுகிற இது உண்மையே. பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக் கும் கெடுதலில்லாததை அங்கீகரிக்கிறேன். ஓ! பீபத்ஸுவே! (ஸமா தானம் யுத்தம்) இரண்டு காரியங்களிலுமுள்ள இவையெல்லாம் என் னுடைய அதீனம். கௌந்தேய! ஸாரமுள்ளதும் தோஷமற்றதும் (உழவு முதலிய செயலாலேயே சீர்திருத்தப்பட்டதுமான) நிலமோ மழையின்றி ஒருகாலும் பயனை விளைவிக்காது. எந்த நிலத்தில் (மழை யால்) ஜலம் பெருகச்செய்யப்பட்டாலோ அதில் முயற்சி வேண்டு மென்று சொல்லுவார்கள். அதிலும், காய்வதைத் தெய்வத்தாற் செய்விக்கப்பட்டதென்று நிச்சயமாய்ப் பார்க்கவேண்டும். அப்படிப் பட்ட இந்த விஷயமானது முன்னோர்களான பெரியோர்களாலும் புத்தியினால் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. உலகத்திலுள்ள ஸாதன மானது தெய்வத்திலும் முயற்சியிலும் சேர்ந்ததாயிருக்கிறது. நானோ அதனை மிகுந்த முயற்சியால் செய்கிறேன். தெய்வச் செயலோ என் னால் ஒருவிதத்தாலும் செய்யமுடியாதது. கெடுமதியை யுடையவ னான அவனோ தர்மத்தையும் உலகத்தையும் தள்ளிவிட்டு நடக்கிறான். தான் செய்த இழிவான அவ்விதமுள்ள அந்தக் காரியத்தினாலும் வருத்தத்தை அடைகிறதில்லை. அப்படியிருந்தும், அவனுக்குச் சகுனியும் ஸூதபுத்திரனான கர்ணனும் ப்ராதாவான துச்சாஸனனு மாகிய மந்திரிகள் மிக்க பாவமான புத்தியை விருத்திசெய்கின்றனர். அர்ஜுன! பந்துக்களுடன்கூடின அந்தத் துர்யோதனனோ வதமின்றி ராஜ்யத்தைக் கொடுத்துச் சமாதானத்தை அடையமாட்டான். [1] தர்ம ராஜரும் நமஸ்காரத்தினாலும் (நாட்டை)விட விரும்புகிறாரில்லை. துர்ப்புத்தியுடையவனான அவனும் யாசிக்கப்பட்டாலும் ராஜ் யத்தைக் கொடுக்கமாட்டான். யுதிஷ்டிரருடைய கட்டளையை அவ

---

1 'தர்மதேவதையின் அம்சமாதலால், தாம் செய்யவேண்டிய கட மையைச் செய்தேவிடுவர்' என்பது குறிப்பு.

னிடம் சொல்லத்தக்கதாக நினைக்கவில்லை. பாரத! பாவியான கௌரவனே தர்மராஜரால் வேண்டுமென்று சொல்லப்பட்ட பயன் எல்லாவற்றையும் செய்யமாட்டான். அதைச் செய்யாதபொழுது, அவன் உலகத்தில் கொல்லப்படத் தக்கவனாவான். பாரத! அவனே எனக்கும் உலகத்திற்கும் கொல்லவேண்டியவனே. அவனால் சிறுபிராயத்தில் எப்பொழுதுமே நீங்கள் எல்லாரும் தீங்கு செய்யப்பட்டீர்கள். கொடியவனும் கெடுமதியுள்ளவனுமான அவனால் உங்கள்ராஜ்யம் மிகவும் பறிக்கப்பட்டது. பாவியான அவன் யுதிஷ்டிரரிடத்தில் செல்வத்தைப்பார்த்துப் பொறுக்கவில்லை. பார்த்த! நானும் அவனால் உன் நிமித்தத்தில் அடிக்கடி பேதிக்கப்பட்டேன். அவனால் செய்ய விரும்பப்பட்ட அந்தக் கெட்டகாரியம் என்னால் ஏற்கப்படவில்லை. தோள்வலியமைந்தவனே! நீயும் அவனுடைய முக்கியமான எண்ணத்தை அறிகிறாயல்லவா? அர்ஜுன! தர்மராஜருடைய இஷ்டத்தைச் செய்யவிரும்புகிறவனான என்னையும் அவனுடைய ஸ்வரூபத்தையும் என்னுடைய பெரிதான அபிப்பிராயத்தையும் நன்றாக அறிகின்ற நீ அறியாதவன்போல இப்பொழுது என்விஷயத்தில் ஏன் சந்தேகிக்கிறாய்? பார்த்த! சிறந்தவையும் தெய்வத்தன்மையுள்ளவையுமான (பாசுபத முதலியவை) உன்னால் அடையப்பட்டன. (யுத்தத்திற்குரிய) ஏற்பாடு செய்யப்பட்டுவிட்டது. பகைவர்களோடு க்ஷேமமானது எப்படி ஏற்படும்? பார்த்த! என்னால் வார்த்தையினாலும் செய்கையினாலும் எது செய்யக் கூடியதோ அதனை நான் செய்வேன். பகைவர்களுடன் ஸமாதானத்தையோ விரும்பவில்லை. சென்றவருஷம் கோக்ரஹண ஸமயத்தில் வழியில் பீஷ்மர் இந்த க்ஷேமத்தை (அவனிடம்) யாசித்து நன்மையைச் சொல்லவில்லையா? எப்பொழுது உன்னால் ஸங்கற்பம் செய்யப்பட்டதோ அப்பொழுதே அவர்கள் அவமானத்தை அடைந்தார்கள். துர்யோதனனே (அதினாலும்) க்ஷணமும் சிறிதேனும் 1 திருப்தியடையவில்லை. எந்த விதத்தாலும் தர்மராஜருடைய கட்டளையை நான் செய்யவே வேண்டும். துராத்மாவான அவனுடைய அதிகமான தீயசெய்கையும் நினைக்கத்தக்கது' என்றார்.

1 'நமக்கு வெற்றியில்லையென்று நினைக்கவேயில்லை' என்பது கருத்து.

## எழுபத்தோன்பதாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(நகுலன் தனக்கு ஸமாதானத்தில் விருப்பமிருப்பதையும் மாதவருக்கு ஸமாதானம்செய்ய வல்லமை இருப்பதையும் அவரிடம் சொல்லியது.)

நகுலன் சொல்லுகின்றான்: 'ஓ! மாதவரே! தர்மத்தையறிந்தவரும் மிக்ககொடையாளியுமான தர்மராஜரால் பலவிதமான வார்த்தைகள் சொல்லப்பட்டன. அவை உம்மாலும் கேட்கப்பட்டனவல்லவா? ஓ! மாதவரே! பீமஸேனனாலும் அரசருடைய அபிப்ராயத்தை அறிந்து ஸமாதானமும் தனது புஜபலமும் வெளியிடப்பட்டன. அப்படியே அர்ஜுனன் சொல்லியதையும் நீர்கேட்டீர். ஓ!வீரரே! உம்மால் உமது அபிப்பிராயமும் அடிக்கடி சொல்லப்பட்டது. ஓ! புருஷோத்தமரே! நீர் இவையெல்லாவற்றையும் தள்ளிவிட்டுப் பகைவரின் கருத்தைக்கேட்டு எது காலத்துக்குரியதென்று நினைக்கிறீரோ அதைச்செய்யக்கடவீர். ஓ! கேசவரே! பகைவரையடக்குபவரே! அந்த நிமித்தத்திற்குத்தக்கபடி கொள்கையானது ஏற்படுகிறது. மனிதன் காலத்திற்குரியதும் முடியக்கூடியதுமானதைச் செய்யவேண்டும். ஒருவிதமாக நினைக்கப்பட்ட அதே விஷயமானது மறுபடியும் வேறுவிதமாகிறது. ஓ! புருஷச்ரேஷ்டரே! உலகத்தில் மனிதர்கள் நிலையில்லாத புத்தியையுடையவர்களாயிருக்கின்றனர். ஓ! கிருஷ்ணரே! நாங்கள் வனத்தில் வஸித்தபொழுது, ஒருவித எண்ணமுள்ளவர்களாயிருந்தனர்; கண்ணில் தென்படாமல் அஜ்ஞாதவாஸம் செய்தபொழுது வேறுவிதமான எண்ணமுள்ளவர்களாயிருந்தனர்; கண்ணில் தென்பட்டவர்களாயிருக்கும்பொழுதோ, மற்றொருவிதமாயிருக்கின்றனர். ஓ! விருஷ்ணிகுலத்தவரே! எங்களுக்கும் இப்பொழுது ராஜ்யத்தில் எவ்விதமான ஆசையிருக்கிறதோ அவ்விதமான ஆசை வனத்தில் சஞ்சரிக்கும்பொழுது இல்லை. ஓ! ஜனார்த்தனரே! வீரரே! நாங்கள் வனவாஸம் முடித்ததைக் கேட்டு, உமது அநுக்கிரகத்தினால், இந்த ஏழு அக்ஷௌஹிணிகள் வந்தன. நினைக்க முடியாத வலிமையையும் ஆண்மையையுமுடையவர்களும் ஆயுதம் தரித்தவர்களுமான இந்தப் புருஷச்ரேஷ்டர்களையோ யுத்தத்தில் பார்த்துவிட்டு இவ்வுலகில் எந்த மனிதன்தான் வருந்தமாட்டான்? அப்படிப்பட்ட நீர், மந்தனான அந்தத் துர்யோ

தனன் மனவருத்தத்தை அடையாமலிருக்கும்படி நன்மொழியை முதலிலும் பயத்தைப் பின்னிட்டும் சொல்லவேண்டும். ஓ! கேசவரே! மாதவரே! யுதிஷ்டிரரையும் பீமஸேனனையும் ஒருவராலும் ஜயிக்கப்படாதவனான அர்ஜுனனையும் ஸஹதேவனையும் என்னையும் உம்மையும் பலராமரையும் மிக்க வீர்யத்தையுடைய ஸாத்யகியையும் புத்திரர்களுடன்கூடின விராடனையும் மந்திரிகளுடன்கூடின துருபதனையும் திருஷ்டத்யும்னனையும் பராக்கிரமசாலியான காசிராஜனையும் சேதிதேசாதிபதியான திருஷ்டகேதுவையும், மாம்ஸத்தாலும் ரக்தத்தாலுமாகிய சரீரமுள்ள எந்த மனிதன் யுத்தத்தில் எதிர்த்துச் சண்டைசெய்வான்? ஓ! புஜபலமிக்கவரே! அப்படிப்பட்ட நீர் தூது போவதனாலே தர்மராஜருக்கு இஷ்டமானபயனையே ஐயமற நிறைவேற்றுவீர். ஓ! குற்றமற்றவரே! விதுரரும் பீஷ்மரும் துரோணரும் பாஹ்லிகரும் உம்மால் சொல்லப்பட்டதைக் கேட்டு நன்மையை அறியக்கூடியவர்கள். அவர்களும், அரசரான இந்தத்திருதராஷ்டிரரையும் கெட்டநடையுள்ளவனும் மந்திரிகளுடன்கூடினவனுமான அந்தத் துர்யோதனனையும் ஸமாதானம் செய்வார்கள். ஓ! ஜனார்த்தனரே! விஷயத்தைச் சொல்லுகிறவரான நீரும் கேட்கிறவரான விதுரரும் விபரீதமாகிற எந்த விஷயத்தை அநுகூலவழியில் நிலைநிறுத்தமாட்டீர்கள்?' என்றான்.

---

## எண்பதாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(கௌரவர் ஸமாதானத்தை விரும்பினலும் யுத்தத்தையே நிச்சயிக்கும்படி ஸஹதேவன் கோவிந்தரிடம் சொல்லியதும், ஸாத்யகி ஸஹதேவன்சொல்லை ஆமோதிக்க வீரர்கள் சிங்கநாதம் செய்ததும்.)

ஸஹதேவன் சொல்லுகிறான் : 'ஓ! பகைவரையடக்குபவரே! அரசரால் சொல்லப்பட்டதானது ஸநாதனமானதர்மம். யுத்தமே நேரும்படி செய்யவேண்டும். ஓ! தாசார்ஹரே! கௌரவர்கள் பாண்டவர்களுடன் ஸமாதானத்தை விரும்பினலும் அவர்களுடன் யுத்தமே நடக்கும்படி செய்யும். ஓ! கிருஷ்ணரே! அந்தப்படி ஸபையை அடைந்த பாஞ்சாலியைப்பார்த்துவிட்டு, துர்யோதனன் விஷயத்தில்அவனைக்கொல்லாமல் என்னுடையகோபமானது எப்படித்

தணியும்? ஓ! கிருஷ்ணரே! பீமார்ஜுனர்களும் தர்மராஜரும் தர்மத்தையனுஸரிக்கிறவர்களாயிருந்தாலும், நான் தர்மத்தைவிட்டுவிட்டும் யுத்தத்தில் அவனுடன் சண்டைசெய்ய விரும்புகிறேன். ஓ! கிருஷ்ணரே! மூடனான துர்யோதனனைநோக்கி, 'கஷ்டமான வனத்திலாவது வஸிக்கவேண்டும்; அல்லது, ஹஸ்தினாபுரம் என்னும் பெயருள்ள நகரத்திலாவது வஸிக்கவேண்டும்' என்று என்வார்த்தையைச்சொல்லும்' என்றான்.

(அப்பொழுது) ஸாத்யகியானவன், 'ஓ! புஜபலமுடையவரே! மகாபுத்திமானான ஸஹதேவன் ஸத்தியத்தைச் சொன்னான். துர்யோதனனைக்கொன்றபொழுதுதான் எனக்குஉண்டான அவ்வித கோபத்திற்குச் சாந்தியானது ஏற்படும். வனத்தில் மரவுரியையும் மான்தோலையும் தரிக்கின்ற (பாண்டவர்களைப்) பார்த்து எனக்குண்டான கோபத்தை நீர் அறியீரா? துக்கத்தையடைந்த பாண்டவர்களைப் பார்த்துவிட்டு உமக்கும் கோபமே உண்டாயிற்று. ஓ! புருஷோத்தமரே! ஆகையால், யுத்தத்தில் கடுமையுள்ளவனும் சூரனுமான மாத்திரியின்புத்திரன் சொன்னவார்த்தையே போர்வீரர்களைவரின் கொள்கையுமாம்' என்றான். மிக்கபுத்திமானானஸாத்யகியானவன் இவ்வித வார்த்தையைச்சொல்ல (அப்பொழுது) அவ்விடத்தில் போர்வீரர்களுடைய மிகவும் பயங்கரமான சிங்கநாதமானது எங்கும் உண்டாயிற்று. எல்லாவீரர்களும் யுத்தம்செய்ய விருப்பமுள்ளவர்களும் ஸாத்யகியைச் சந்தோஷிக்கச் செய்கிறவர்களுமாகி, எங்கும், 'நல்லது; நல்லது' என்று சொல்லிப் புகழ்ந்தார்கள்.

---

## எண்பத்தோராவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

**(த்ரௌபதி சூதாட்டஸபையில் தனக்குநேர்ந்த துயரைச்சொல்லி அழுததும், கோவிந்தர் துர்யோதனுதியரைக் கொல்விப்பதாகச் சொல்லி அவளைத்தேற்றியதும்.)**

துருபதராஜனுடைய புத்திரியும் மிகவுங்கறுத்து நீண்ட கூந்தலையுடையவளுமான த்ரௌபதியானவள், தர்மார்த்தங்களுடன் கூடியதும் நன்மையுள்ளதுமான அரசருடைய வார்த்தையைக் கேட்டுச் சோகத்தால்வருந்தி ஸஹதேவனையும் மகாரதனான ஸாத்யகியையும் நன்கு புகழ்ந்து, உட்கார்ந்திருப்பவரான கண்ணபிரானை நோக்

கிச் சொல்லலானாள். மானமுடையவளான அவள், மிக ஓய்ந்திருப்பவனான பீமஸேனனைப் பார்த்துவிட்டுத் துக்கத்தை அடைந்த மனத்தையுடையவளும் நீர்நிறைந்த கண்களையுடையவளுமாகி, இந்த வார்த்தையைச் சொல்லலுற்றாள்.

'புஜபலம் மிக்கவரும் தர்மத்தை அறிந்தவருமான மதுஸூதனரே! ஜனார்த்தனரே! திருதராஷ்டிரரின் புத்திரனானவன் மந்திரிகளுடன் வஞ்சனையைப் பின்பற்றிப் பாண்டுவின் புத்திரர்களை ஸுகத்தைவிட்டு நழுவச்செய்தானென்பது உமக்குத் தெரியும். தாசார்ஹரே! அரசரான திருதராஷ்டிரர் ஸஞ்சயனிடம் ரகஸ்யத்தில் யுதிஷ்டிரருக்குரியதாகச் சொல்லியனுப்பிய மந்திராலோசனை உமக்குத்தெரியும். ஓ! மிக்கவன்மையுடையவரே! நீண்ட கைகளையுடையவரே! கேசவரே! ஸஞ்சயனிடம், 'அப்பா! எங்களுக்கு அவிஸ்தலம், விருகஸ்தலம், மாகந்தி, வாரணாவதம், கடைசியாக ஐந்தாவதான ஏதாவதொன்று ஆக ஐந்து கிராமங்கள் கொடுக்கக்கடவாய்' என்று இவ்விதம் துர்யோதனனுக்கும் அவனுடைய நண்பர்களுக்கும் சொல்லவேண்டும்' என்று சொன்னதெல்லாம் உமக்குத் தெரியும். ஓ! கிருஷ்ணரே! துர்யோதனன், ஸ்ரீமானும் ஸமாதானத்தை விரும்புகிறவருமான யுதிஷ்டிரருடைய சொல்லைக்கேட்டுச் செய்யவுமில்லை. ஓ! கிருஷ்ணரே! நீர் அங்கே சென்று, துர்யோதனன் ராஜ்யத்தைக் கொடாமலே ஸமாதானத்தை விரும்புவானேயானால், எந்த விதத்தாலும் செய்யக்கூடாது. பாண்டவர்கள், ஸ்ருஞ்சயர்களுடன் சேர்ந்து, கோபத்தை அடைந்ததும் கோரமுமான துர்யோதனனுடைய சேனையை எதிர்க்கச் சக்தியுள்ளவர்களல்லரோ? ஓ! மதுஸூதனரே! நல்ல வார்த்தையினாலும் தைர்யத்தினாலும் தானத்தினாலும் அவர்களிடத்தில் செய்யக்கூடிய காரியம் ஒன்றுமில்லை. ஆகையால், அவர்கள் விஷயத்தில் நீர் தயைசெய்வது தக்கதில்லை. ஓ! கிருஷ்ணரே! ஸாமத்தினாலும் தானத்தினாலும் சமனத்தையடையாத பகைவரிடத்தில் உயிரைக்காப்பவன் தண்டத்தையே பிரயோகிக்கவேண்டும். அச்சுதரே! ஆகையால், அவர்களிடத்தில் உம்மாலும் பாண்டவர்களாலும் ஸ்ருஞ்சயர்களுடன் பெரிதான தண்டமானது சீக்கிரம் பிரயோகிக்கத்தக்கது. ஓ! கிருஷ்ணரே! இது செய்யப்படுமானால் பாண்டவர்களுக்குப் பயனைவிளைவிப்பதும், உமக்கும் புகழைச் செய்வதும், க்ஷத்திரிய ஜாதிக்கு ஸுகத்தையளிப்பதுமாகும். ஓ! தாசார்ஹரே! ஐயா! தன்தர்மத்தை அனுஷ்டிப்பவனான க்ஷத்திரியனாலே எல்லாப் பாபங்களிலும் நிலைத்தவனாயிருந்தாலும் ப்ராம்மணனைத்தவிர

லோபத்தையடைந்த க்ஷத்திரியனோ க்ஷத்திரியனைத்தவிர மற்றவனோ கொல்லத்தக்கவனல்லனோ? முதன்மையாகக் கொடுக்கப்பட்டதைப் புஜிப்பவனான பிராம்மணன் எல்லாவர்ணங்களுக்கும் குருவல்லனோ? ஓ! ஜனார்த்தனரே! கொல்லத்தகாதவனைக்கொன்றால் எவ்விததோஷம் ஏற்படுமோ அது கொல்லவேண்டியவனைக் கொல்லாவிட்டாலும் ஏற்படுவதாகக் காணப்பட்டதென்று தர்மம் தெரிந்தவர்கள் அறிகின்றனர். ஓ! கிருஷ்ணரே! இந்தத்தோஷம் உம்மை அணுகாமலிருக்கும்படி சேனைகளுடன்கூடின பாண்டவர்களோடும் தாசார்ஹர்களோடும் ஸ்ருஞ்சயர்களோடும் செய்யக்கடவீர். ஓ! ஜனார்த்தனரே! விசுவாஸத்தினாலே, சொன்னதையே மறுபடியும் சொல்லப்போகிறேன். ஓ! கேசவரே! பூமியில் என்போல் எந்த ஸ்திரீ இருக்கிறாள்? மாதவரே! நான் துருபதராஜருக்குப் புத்திரியும் அக்னிகுண்டத்தின் நடுவிலிருந்தும் கிளம்பினவளும் திருஷ்டத்யும்னனுக்கு ஸஹோதரியும் உமக்குப் பிரியமான தோழியும் அஜமீட குலத்தையடைந்தவளும் மகாத்மாவான பாண்டுவுக்கு மருமகளும் ஐந்து இந்திரர்களுக்குச் சமமான தேஜஸையுடைய பாண்டு புத்திரர்களுக்கு மஹிஷியுமாயிருப்பவள். எனக்கு ஐந்துவீரர்களாலும் மகாரதர்களான ஐந்து புத்திரர்களுண்டானார்கள். ஓ! கோவிந்தரே! உமக்கு அபிமன்யு எப்படி பந்துவோ தர்மத்தினாலே அவர்களும் அப்படியே. ஓ! கேசவரே! அப்படிப்பட்ட நான், பாண்டுவின் புத்திரர்கள் பார்த்திருக்கையில் நீரும் உயிரோடிருக்கையில், கேசத்தில் பிடிக்கப்பட்டுப் பெரிதான துன்பத்தையடைந்து ஸபையை அடைந்தேன். பாண்டுவின் புத்திரர்களும் பாஞ்சாலர்களும் விருஷ்ணிகளும் ஜீவித்திருக்கும்பொழுது, பாவிகளுடைய ஸபையின் நடுவில் நிற்கிறவளாகித் தாஸியானேன். ஓ! கோவிந்தரே! பாண்டவர்கள் பொறுமையில்லாமலும் செயலற்றும் பார்த்துக்கொண்டிருக்கையில், 'என்னை ரக்ஷியும்' என்று என் மனத்தினால் உம்மைத் தியானித்தேன். கேசவரே! ஜனார்த்தனரே! எந்தத் துக்கத்தில், பூஜ்யரும் மாமனாருமான அரசர், என்னை நோக்கி, 'பாஞ்சாலி! வரத்தைப் பிரார்த்திக்கக்கடவாய்; நீ வரம்பெறத் தக்கவளென்று என்னால் கருதப்பட்டவளாயிருக்கிறாய்' என்கிறவார்த்தையைச் சொன்னாரோ, எந்தத் துக்கத்தில், 'பாண்டவர்கள் தங்களோடும் ஆயுதங்களோடும் தாஸர்களாகாமலிருக்கட்டும்' என்று என்னால் சொல்லப்பட்டு வனவாஸத்தின்பொருட்டு விடுபட்டார்களோ அந்த இவ்விதமான துக்கங்களை நீர் அறிந்திருக்கிறீர். ஓ! தாமரைக்கண்ண

ரே! என்னுடைய கணவர்களுடன்கூடின ஞாதிகளையும் உறவினர்களையும் காப்பீராக. ஓ! கிருஷ்ணரே! நான், பீஷ்மர் திருதராஷ்டிரர் இருவருக்கும் மருகியாகிறேனல்லவா! அப்படிப்பட்ட நான் பலாத்காரத்தினால் தாஸியாகச் செய்யப்பட்டேன். கிருஷ்ணரே! எந்த வில்லும் பலமுமிருக்கும்பொழுது துர்யோதனன் ஒரு முகூர்த்தமாவது ஜீவிக்கிறானோ. அர்ஜுனனுடைய அந்தவில்லாண்மையையும் பீமஸேனனுடையபலத்தையும் இகழவேண்டும். ஓ! கிருஷ்ணரே! நான் உம்மால் அருள்செய்யப்படத்தக்கவளானால், என்னிடம் உமக்குக் கிருபையிருக்குமேயானால், திருதராஷ்டிரரின் புத்திரர்களிடத்தில் எல்லாக் கோபத்தையும் செலுத்தவேண்டும்' என்றாள்.

இவ்விதம் சொல்லிவிட்டு, கறுத்தகடைக்கண்களை உடையவளும் தாமரைமலர்கள்போன்ற கண்களையுடையவளும் யானைபோல நடக்கின்றவளுமான கிருஷ்ணையானவள், பின்னப்பட்டுமிருதுவாயிருப்பதும் கடைசுருண்டுள்ளதும் பார்க்க அழகியதும் மிக்ககருமையானதும் [1] ஸர்வகந்தங்களாலும் வாஸனையுடையதாகச்செய்யப்பட்டதும் எல்லாலக்ஷணங்களும் பொருந்தியதும் பெரியஸர்பம்போலப் பளபளப்பானதுமான கூந்தற்கற்றையைக் கையில்பிடித்துக்கொண்டு தாமரைக்கண்ணரான கிருஷ்ணரண்டையில் சென்று நீர்நிறைந்த கண்களுடன் அவரைநோக்கி வார்த்தைசொல்லலானாள்: 'ஓ! புண்டரீகாக்ஷரே! நீர் துச்சாஸனனுடையகரத்தினாலே பிடிக்கப்பட்ட இந்த கூந்தற்கற்றையை ஸமாதானத்தைவிரும்புகின்ற பகைவருடைய எல்லாக்காரியங்களிலேயும் நினைக்கவேண்டும். ஓ! கிருஷ்ணரே! பீமார்ஜுனர்கள் தீனர்களாய் ஸந்தியைவிரும்புகிறார்களேயானால், பிராயமுதிர்ந்தவரான என்னுடைய பிதாவானவர் மகாரதர்களான புத்திரர்களுடன்சேர்ந்து யுத்தம்செய்வார். ஓ! மதுஸூதனரே! பெரியதானவீர்யத்தையுடையவர்களான என்னுடைய புத்திரர்கள் ஐவருமே அபிமன்யுவைமுன்னிட்டுக்கொண்டு கௌரவர்களுடன் யுத்தம்செய்வார்கள். நான் துச்சாஸனனுடைய கறுத்த கைகள் அறுபட்டுப் புழுதிபுரளுவதைக் காணாமலிருப்பேனேயானால் என்னுடைய மனத்துக்கு ஆறுதல் ஏது? மூள்கின்றதீயைப்போலக் கோபத்தை மனத்தில்வைத்துக்கொண்டு எதிர்பார்க்கின்ற எனக்குப் பதின்மூன்றுவருஷங்கள் சென்றுவிட்டன அல்லவா? என்னுடைய நெஞ்சமானது, பெரியகைகளையுடையவரும் இப்பொழுது தர்மத்தையே நோக்குபவருமான பீமஸேனனுடைய சொற்களாகிற

1 வேறுபாடம்.

முட்களாலே குத்தப்பட்டதாய் வெடிக்கின்றது' என்றாள். நீண்ட கண்களையுடையவளும் பருத்த நீண்ட பின்தட்டுக்களையுடையவளு மான கிருஷ்ணையானவள் கண்ணீரால் தடைப்பட்ட குரலுடன் இவ் விதம் சொல்லிவிட்டு, உருகினதுபோல் மிகவும் உஷ்ணமாயுள்ள கண் ணீரைவடிக்கிறவளும் சேர்ந்தவைகளாயிருக்கிற ஸ்தனங்களை நனைக் கிறவளுமாகி, நடுக்கத்தோடும் கண்ணீரால்தடைப்பட்ட குரலோடும் அழுதாள். நீண்டகைகளையுடைய கேசவர் அவளை ஸமாதானம் செய்து சொல்லலுற்றார். 'ஓ! கிருஷ்ணையே! சீக்கிரத்தில் கௌரவ ஸ்திரீகளழுவதைப் பார்க்கப்போகிறாய். பயந்தவளே! அவர்கள் ஞாதிகளும் பந்துக்களும் கொல்லப்பட்டு இவ்விதம் அழப்போகின்ற னர். கோபமுள்ளநீ எவர்கள்விஷயத்தில் கோபத்தை அடைந்தவ ளாயிருக்கிறாயோ அவர்கள்மித்திரர்களும் சேனைகளும் கொல்லப் படப்போகின்றனர். நானும் யுதிஷ்டிரருடைய கட்டளையினாலும் வினையினால் செய்யப்பட்ட அதிருஷ்டத்தினாலும் பீமன் அர்ஜுனன் நகுலன்ஸகதேவன் ஆகிய இவர்களுடன் அதைச்செய்வேன். திருத ராஷ்டிரரின் புத்திரர்கள் காலத்தின்பக்குவத்தையுடையவர்களாகி என்னுடைய வார்த்தையைக்கேளாதவிஷயத்தில் கொல்லப்பட்டவர்க ளும் நாய்நரிகளுக்கிரையாகச் செய்யப்பட்டவர்களுமாகிப் பூமியில் படுக்கப்போகின்றனர். ஹிமயமலை அசைந்தாலும், பூமி நூறுதுணுக் காலும், ஆகாயம் நக்ஷத்திரங்களோடு விழுந்தாலும் என்வார்த்தை வீணாகாது. கிருஷ்ணையே! கடல்வற்றினாலும் என்சொல் வீணாகாது. ஓ! கிருஷ்ணையே! ஸத்தியமாக உனக்குப் பிரதிஜ்ஞைசெய்கிறேன். கண்ணீரை அடக்கு. சீக்கிரத்தில் உன்பதிகள் பகைவர்களைக்கொன்று செல்வத்தை அடைந்திருப்பதைப் பார்க்கப்போகிறாய்' என்றார்.

---

## எண்பத்திரண்டாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

---

(கோவிந்தர் யுதிஷ்டிரர்முதலியவர்கள் பின்தொடர ஸாத்யகி யுடன் தேரேறி ஹஸ்தினபுரத்துக்குப் புறப்பட்டது.)

அப்பொழுது, அர்ஜுனன், 'ஓ! கேசவரே! நீர் இப்பொழுது கௌரவர்கள் எல்லாருக்கும் சிறந்தவரான நண்பரும் இரண்டு பக் கங்களுக்கும் எந்நாளும் இஷ்டமான ஸம்பந்தியுமாயிருக்கிறீர். பாண் டவர்களால் திருதராஷ்டிரபுத்திரர்களுக்கு க்ஷேமமானது உண்டு

பண்ணத்தக்கது. ஸமர்த்தரான நீர் ஸமாதானத்தையே செய்ய வேண்டும். ஓ! புண்டரீகாக்ஷரே! பகைவர்களைக்கொல்லுகிறவரே! நீர் இங்கிருந்தும் பொறுமைக்காரனான துர்யோதனனை (அடைந்து) பிராதாவான அவனை நோக்கி ஸமாதானத்தினிமித்தம் சொல்ல வேண்டியதைச்சொல்லும். மூடனான அவன் தர்மார்த்தங்களுடன் கூடினதும் மங்களகரமும் கெடுதலில்லாததும் ஹிதமுமாக உம்மால் சொல்லப்பட்டதை ஏற்றுக்கொள்ளாவிடில் தெய்வத்தின் வசத்தை அடைவான்' என்றான்.

ஸ்ரீபகவானானவர், 'தர்மத்திலிருந்தும் விலகாததும், நமக்கு ஹிதமும் கௌரவர்களுக்குக் கெடுதலில்லாததுமாக இருப்பதற்காகவே திருதராஷ்டிரராஜரை அடையவிரும்பி இதோ போகிறேன்' என்றார்.

பிறகு, சரத்ருதுவின்முடிவில் பனியின்தொடக்கத்தில் செழிப்பான பயிர்களால் இனிமையாயிருக்கிற காலத்தில் கார்த்திகை மாஸம் ரேவதி நக்ஷத்திரத்தில் இருள்நீங்கி ஸூர்யன்தெளிவாக உதித்து மைத்திரமென்கிற முகூர்த்தம் வந்து ஸூர்யன் மிருதுவான காந்தியுடன் கூடியிருக்கும்பொழுது, ஸமர்த்தரும் பலசாலிகளில் சிறந்தவருமான ஜனார்த்தனர் பிரஸித்தர்களான பிராம்மணர்களுடைய மங்களத்துக்குத்தக்கவைகளும் புண்யமான சப்தத்தையுடையவைகளும் ஸத்தியமுமான பிரியவசனங்களை, ரிஷிகளுடைய வசனங்களை இந்திரன் கேட்பதுபோலக் கேட்கிறவரும், பிறகு, ஸ்நானம்செய்தவரும் சுத்தமானவரும் அலங்கரிக்கப்பட்டவருமாகி, முற்பகலில் செய்யவேண்டியகர்மாவைச் செய்துவிட்டு, ஸூர்யனையும் அக்கினியையும் துதித்தார். ஜனார்த்தனரானவர், விருஷபத்தைப் பின்பக்கத்தில் தொட்டுப் பிராம்மணர்களை நமஸ்கரித்து அக்கினியைப் பிரதக்ஷிணம் செய்து எதிரில் மங்களவஸ்துவைப்பார்த்துப் பாண்டவருடைய அந்த வார்த்தையை நினைத்துக்கொண்டு, சினிக்குப் [1] பேரனும் உட்கார்ந்திருப்பவனுமான ஸாத்யகியை நோக்கி, 'ரதத்தில் சங்கமும் சக்கரமும் கதையும்பாணப்பெட்டிகளும் சக்திகளுமாகிய எல்லா ஆயுதங்களையும் வைக்கக்கடவாய். துர்யோதனனும் கர்ணனும் சகுனியும் துஷ்டபுத்தியுள்ளவர்கள். பலமில்லாதவனாயிருந்தாலும் பகைவனைப் பலவான் அலக்ஷ்யம் செய்யக்கூடாது' என்றார். பிறகு, சக்கரகதாதரரான கேசவருடைய முன்செல்லும் பரிஜனங்கள் அந்த அபிப்ராயத்தை அறிந்து ரதத்தைப்பூட்டச்செய்து புறப்பட்டார்கள். காலாக்கினி

1 'நப்தா' என்பது மூலம்.

போல ஜ்வலிக்கின்றதும் ஸூர்யசந்திரர்கள்போலப் பிரகாசிக்கிறவட்டில்களாலும் [1] அர்த்தசந்திரன்களாலும் பூர்ணசந்திரன்களாலும் மத்ஸியங்களாலும் மிருகங்களாலும் பக்ஷிகளாலும் பலவிதபுஷ்பங்களாலும் அலங்கரிக்கப்பட்டதும் எங்கும் மணிகளாலும் இரத்தினங்களாலும் விசித்திரமானதும் நடுப்பகலையடைந்த ஸூர்யனுக்குச்சமானமும் பெரிதும் அழகானதோற்றமுடையதும் மணிமயமும் ஸ்வர்ணமயமுமான பலவித அங்கங்களையுடையதும் நல்லகொடியும் நல்லகொடிச்சீலையுமுடையதும் நல்லஸாதனங்களுடையதும் நெருங்கமுடியாததும் புலித்தோலால் மறைக்கப்பட்டதும் பகைவரதுபுகழையழிப்பதும் யாதவர்களுக்கு ஸந்தோஷத்தையுண்டுபண்ணுவதுமான அந்தத்தேரில் குளிப்பாட்டப்பட்டவைகளும் எல்லாஸம்பத்தும் பொருந்தியவைகளுமான சைப்யம் ஸுக்ரீவம் மேகபுஷ்பம் வலாஹகமென்கிற குதிரைகளைப் பூட்டினார்கள். மிக்கமுழக்கத்தையுடைய தேரானது வாஸுதேவருடையமகிமையை அதிகமாகவிருத்திசெய்கிறதாகிக் கருடத்துவஜத்துடன்கூடிற்று. அவர், மேருவின்கொடுமுடிக்குநிகரும் மேகத்துக்கும் துந்துபிக்கும்சமமான முழக்கத்தையுடையதும் இஷ்டப்படி செல்லுகின்ற விமானம்போன்றதுமான அந்தத்தேரில் ஏறினார். பிறகு, புருஷோத்தமரான அவர், ஸாத்யகியை ஏற்றிக்கொண்டு தேரின்முழக்கத்தினால் பூமியையும் ஆகாயத்தையும் ஒலிக்கச்செய்துகொண்டு புறப்பட்டார். பிறகு, (அந்த) ஸமயமானது நொடிக்குள்ளே மேகம் விலகினதாகிவிட்டது. மங்களமான காற்றுப் பின் வீசிற்று; புழுதி தணிந்தது. வாஸுதேவருடைய பிரயாணத்தில் மங்களத்துக்குரியவைகளான மிருகங்களும் பக்ஷிகளும் வலமாகச்சுற்றிக்கொண்டு வரிசைவரிசையாகப் பின்செல்லுகின்றவைகளாயின. [2] ஸாரஸங்களும் [3] சதபத்திரங்களும் அன்னங்களும் மங்களமான அர்த்தத்தைக் கொடுக்கின்ற சப்தங்களுடன் எங்கும் அவரைப் பின்தொடர்ந்தன. மந்திரங்களுடன் கூடின ஆகுதிகளையுடைய மகாஹோமங்களாலே ஹோமஞ்செய்யப்பட்ட அக்கினி வலமாகச்சுழலும் ஜ்வாலையுடையதும் புகையில்லாததுமாயிற்று. வஸிஷ்டர், வாமதேவர், பூரித்யும்னர், கயர், க்ரதர், சுக்ரர், நாரதர், வால்மீகர், மருத்தர், குசிகர், ப்ருகு என்கிற தேவரிஷிகளும் பிரம்மரிஷிகளும் சேர்ந்தவர்களாகி யாதவர்களுக்கு ஸுகத்தையளிப்பவரும் [4] இந்திரனுக்குத் தம்பியுமான கிருஷ்ணரை வலமா

1 அர்த்தசந்திரன் முதலியன; அவைபோன்ற சித்திரப்படங்கள்.

2 குருகு, வெண்ணாரை. 3 கிளி, தச்சன்குருவி.

4 வாமனாவதாரம் செய்தவர் என்பது.

கச் சூழ்ந்துநின்றார்கள். கண்ணபிரானனவர், இவ்விதம் மகாபாக்கியவான்களான ரிஷிகணங்களாலும் பெரியோர்களாலும் பூஜிக்கப்பட்டவராகிக் கௌரவர்களுடைய வீட்டைக் குறித்துப் புறப்பட்டார். தாமரைக்கண்ணரான அச்சுதர் தேவர்களுக்கு நமஸ்காரம்செய்தும் பிராம்மணர்களை மங்கள வசனங்களைச் சொல்லச்செய்தும் ஸாத்தியகியுடன் புறப்பட்டார். புறப்பட்டவரான அவருக்குக் குந்திபுத்ரரான யுதிஷ்டிரர், பின்சென்றார். பீமஸேனனும் அர்ஜுனனும் மாத்திரியின் புத்திரர்களான பாண்டவர்களிருவரும் பராக்கிரமசாலியான சேகிதானனும் சேதிராஜனான திருஷ்டகேதுவும் துருபதனும் காசிராஜனும் மகாரதனான சிகண்டியும் திருஷ்டத்யும்னனும் புத்திரர்களோடும் கேகயர்களோடும் விராடனுமான க்ஷத்திரியர்கள், க்ஷத்திரியஶ்ரேஷ்டரான பகவானைக் காரியத்தை நன்குஸாதிப்பதற்காகப் பின்தொடர்ந்தார்கள். பிறகு, காந்தியையுடைய தர்மராஜரான யுதிஷ்டிரர், கோவிந்தரின் பின்சென்று அப்பொழுது அரசர்களின் ஸமீபத்தில் இந்த வார்த்தையைச் சொல்லலானார். குந்திபுத்திரரான அவர், காமத்தினாலும் பயத்தினாலும் லோபத்தினாலும் பொருள் நிமித்தத்தினாலும் நியாயவிபரீத மாயுள்ளதை அனுசரியாதவரும் ஸ்திரமான புத்தியையுடையவரும் ஆசையற்றவரும் தர்மத்தையறிந்தவரும் தைர்யமுள்ளவரும் எல்லாப் பிராணிகளிலும் அறிவாளரும் எல்லாப் பிராணிகளுக்கும் ஈஶ்வரரும் தேவர்களுக்குத் தேவரும் ஸநாதனரும் எல்லாக் குணங்களும் பொருந்தியவரும் ஸ்ரீவத்ஸமென்கிற மறுவினால் அடையாளம் செய்யப்பட்டவருமான கேசவரை ஆலிங்கனம் செய்துகொண்டு, சொல்லத்தொடங்கினார்.

---

## எண்பத்து மூன்றாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரர், குந்தியை க்ஷேமம் விசாரித்துத் தம் நமஸ்காரத்தைத் தெரிவித்துத் தேறுதல் சொல்லும்படி கோவிந்தரிடம் சொல்லியதும், வழியில் முனிவர் வந்து கௌரவ ஸபைக்குத் தாமும் வருவதாக அவரிடம் சொல்லிச் சென்றதும்.)

யுதிஷ்டிரர், 'ஓ! ஜனார்த்தனரே! பகைவரை வாட்டுபவரே! மாதவரே! அபலையும் இளமைமுதல் எங்களை வளர்த்தவளும் எப்பொழுதும் உபவாஸத்தையும் தவத்தையும் இயல்பாகவுடையவ

ளும் க்ஷேமகார்யத்தில் பற்றுள்ளவளும் தேவதைகள் அதிதிகள் இவர்களுடைய பூஜைகளிலும் குருக்களுடைய பணிவிடையிலும் பற்றுள்ளவளும் அன்புள்ளவளும் பிரியமான புத்திரர்களையுடையவளும் துர்யோதனனிடமிருந்துண்டான பயத்திலிருந்தும், பெரிதான மிருத்தியுவின் தொந்தரையிலிருந்தும், தாண்டமுடியாத கடலிலிருந்தும் தோணியைக் காப்பதுபோல எங்களைக் காத்தவளும் எங்கள் நிமித்தம் எப்பொழுதும் துக்கங்களை அனுபவித்தவளும் துக்கத்திற்குப் பாத்திரமல்லாதவளுமான எங்கள் மாதாவிடம் ஆரோக்யத்தை வினவக்கடவீர். புத்திரசோகத்தால் வியாபிக்கப்பட்ட அவளை மிகவும் தேற்றுவீராக. நீர் பாண்டவர்களின் பெயர்களைச் சொல்லிக்கொண்டு நமஸ்கரித்துத் தழுவக்கடவீர். பகைவரை அடக்குபவரே! சூதுவாது இல்லாதவளும் துக்கத்திற்குத் தகாதவளுமான அவள் விவாகம் முதல் மாமனார்களுடைய (வீட்டில்) துக்கங்களைப் பார்த்துக்கொண்டு துக்கத்தையே அனுபவிக்கிறாள். ஓ! பகைவரை அடக்குபவரே! துக்கங்கள் நீங்கக்கூடியதும், கிலேசத்தை அடைந்தவளான மாதாவுக்கு நான் ஸுகத்தைக் கொடுக்கக்கூடியதுமான ஸமயம் எப்பொழுதாவது ஏற்படுமா? ராஜ்யத்தை விட்டுச்செல்லுகின்ற நாங்கள் பின் ஓடிவருகின்றவளும் எளிமையுற்றவளும் புத்திரர்களிடம் ஆசையுள்ளவளும் அழுகிறவளுமான அவளைத் தள்ளிவிட்டுக் காடு சென்றோம். ஓ! பூஜிக்கப்பட்டவரே! கேசவரே! அவள் துக்கங்களால் நிச்சயம் மரித்திருப்பாள்; ஜீவித்திருக்கிறாளேயானால், புத்திரர்களுடைய அவ்விதமான மனவருத்தங்களால் மிகவும் பீடையடைந்தவளான அவளைப் பூஜைசெய்யும். ஓ! கிருஷ்ணரே! விபுவே! என்வசனத்தால் அவளை நமஸ்கரிக்கவேண்டும். குருகுலத்திற்பிறந்தவரான திருதராஷ்டிரரையும் பிராயத்தினால் மேலான அரசர்களையும் என்வசனத்தால் வணங்குவீராக. ஓ! ஜனார்த்தனரே! பீஷ்மரையும் துரோணரையும் கிருபரையும் மஹாராஜரான பாஹ்லிகரையும் அச்வத்தாமாவையும் ஸோமதத்தனையும் எல்லாப்பாரதர்களையும் தனித்தனியாகப் பிராயத்துக்குத் தக்கபடியும் ஸ்தானத்திற்குத் தக்கபடியும் அடையக்கடவீர். ஓ! மதுஸூதனரே! பேரறிவாளரும் கௌரவர்களுடைய மந்திரத்தன்மையைத் தரிக்கிறவரும் ஆழமான புத்தியையுடையவரும் மர்மங்களை அறிந்தவருமான விதுரரையும் தழுவும்' என்றார்.

யுதிஷ்டிரர் அந்த அரசர்களின் மத்தியில் கேசவரை நோக்கி இவ்விதம் சொல்லிவிட்டு, அவரால் அநுமதி கொடுக்கப்பட்டு

அவரைப்பிரதக்ஷிணஞ்செய்து திரும்பினர். பீபத்ஸுவோ, நடந்து கொண்டே, நண்பரும் புருஷோத்தமரும் பகைவீரர்களைக் கொல்லு கிறவரும் ஒருவராலும் ஜயிக்கப்படாதவருமான தாசார்ஹரை நோக்கி, 'ஓ! விபுவே! கோவிந்தரே! நீண்ட கைகளையுடைய வரே! முன் ஆலோசனையினிறுதியில் எங்களுடைய பாதி ராஜ்யத்தின்விஷயமாய் எல்லா அரசர்களும் அறிய எது நடந்ததோ அதைத் தடையில்லாமல் உபசரித்தும் அவமதியாமலும் திருதராஷ் டிரபுத்திரன் கொடுப்பானேயானல் (அப்பொழுது) எனக்குப்பிரிய முண்டாகும்; பெரிதான பயத்திலிருந்தும் (அவனும் அவனைச் சேர்ந் தவர்களும்) விடுபடுவார்கள்; ஓ! ஜனார்த்தனரே! உபாயத்தை அறி யாதவனான (அவன்) இதற்கு மாறாகச் செய்வானானல் நிச்சயமாக க்ஷத்திரியர்களை நாசம்செய்வேன்' என்று சொன்னான்.

பாண்டவனான தனஞ்சயன் இவ்விதம் சொல்லியபொழுது, பாண்டவனான பீமஸேனன் மிகச் சந்தோஷித்தான்; கோபத்தின் வசப்பட்டு அடிக்கடி ஆடினன். குந்திபுத்திரனான அவன் தனஞ்சய னுடைய வார்த்தையைக்கேட்டு மிக்கஸந்தோஷத்தால் கர்வமடைந்த மனமுடையவனும் சலிக்கிறவனுமாகி மிகஆரவாரித்தான். அவ னுடைய அந்தமுழக்கத்தைக்கேட்டு வில்லாளிகள் மிக நடுங்கினார்கள். எல்லாவாகனங்களும் மலமூத்திரங்களை விட்டன. அவ்விடத்தில் கேசவரிடம் இவ்வாறு சொல்லி நிச்சயத்தையும் அவ்விதமேசொல்லி விட்டு, ஜனார்த்தனரான அவரைத் தழுவிக்கொண்டு அநுமதிபெற்றுத் திரும்பினன். அந்த எல்லா அரசர்களும் திரும்பினபொழுது, சைப்யம் ஸுக்ரீவம் என்கிற வாகனங்களையுடையவரான ஜனார்த்தனர் ஸந்தோஷத்தையடைந்து வேகமாகச் சென்றார். வாஸுதேவருடைய அந்தக்குதிரைகள் தாருகனால் ஓட்டப்பெற்று ஆகாயத்தைவிழுங்கு வன போலவும் மார்க்கத்தைக் குடிப்பனபோலவும் சென்றன.

பிறகு, மிக்க புஜபலமுள்ளகேசவர் பிராம்மணஜாதிக்குரிய ஒளியினல் விளங்குகிறவர்களும் வழியின் இருபக்கத்திலுமிருப் பவர்களுமான ரிஷிகளை வழியில் பார்த்தார். அந்த ஜனார்த்தனர், ரதத்திலிருந்தும்வேகமாகஇறங்கி உண்மையான நடையையுடையவர் களான எல்லாமுனிவர்களையும் வணங்கிப் பூஜித்து உரைக்கலானர். 'உலகங்களில் க்ஷேமமா? தர்மமானது நன்கு அநுஷ்டிக்கப்பட்டதா யிருக்கிறதா? மூன்றுவர்ணங்களும் பிராம்மணர்களுடைய கட்டளையில் இருக்கின்றனவா? பிதிருக்கள் தேவதைகள் அதிதிகளுடையபூஜையா னது நன்குசெய்யப்பட்டுவருகிறதா?' (என்றுவினவி,) அவர்களுக்கு

அந்தப்பூஜையைச்செய்துவிட்டுச் சொல்லலானர். 'ஓ! பூஜ்யர்களே! நீங்கள் எவ்விடத்தில் ஸித்திபெற்றவர்கள்? இவ்விடத்தில் உங்களுடைய [1] எல்லை எது? பகவான்களான உங்களுடைய கார்யம் என்ன? உங்களுக்கு நான் என்ன செய்யவேண்டும்? எந்தப்பிரயோஜனத்திற்காகப் பகவான்களான நீங்கள் பூதலத்தை அடைந்தீர்கள்?' என்றார். இவ்விதம் கேசவரால்கேட்கப்பட்டவர்களும் கடுமையான விரதத்தையுடையவர்களும் அதஸ்ஸிரஸ், ஸர்ப்பமாலீ, மகரிஷியான தேவலர், அர்வாவஸு, ஸுஜானு, மைத்திரேயர், சுனகர், பலி, பகர், தால்ப்யர், ஸ்தூலசிரஸ், கிருஷ்ணத்வைபாயனர், ஆபோததௌம்யர், தௌம்யர், ஆணிமாண்டவ்யர், கௌசிகர், தாமோஷ்ணீஷர், த்ரிஷவணார், பர்ணாதர், கடஜானுகர், மௌஞ்சாயனர், வாயுபக்ஷர், பாராசர்யர், சாலிகர், சீலவான், அசனி, தாதா, சூன்யபாலர், அக்ருதவ்ரணர், ச்வேதகேது, கஹோளர், மிக்க தவத்தையுடைய (பரசு) ராமர், நாரதர் முதலானவர்களுமான எல்லாமுனிவர்களும் கேசவரைக்குறித்துச் சந்தோஷித்தனர். தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் பதியான இந்திரனுக்கு நண்பரான பரசுராமர், மதுஸூதனரான கோவிந்தரைநெருங்கித் தழுவிக்கொண்டு சொல்லலானர். 'ஓ! தாசார்ஹரே! பெரியஅறிவுள்ளவரே! புண்யத்தைச்செய்தவர்களான தேவரிஷிகளும் மிக்க கேள்வியறிவையுடைய பிராம்மணர்களும் தவசிகளான ராஜரிஷிகளும்(உம்மைப்) பூஜிக்கின்றனர். பழமையானதேவாஸுரர்களின்கூட்டத்தைப் பார்த்தவர்களான அவர்கள், எங்குமிருந்து (வந்து) சேர்ந்ததும் பூமியிலுள்ளதுமான க்ஷத்திரியஜாதியையும் ஸபையை அடைந்த அரசர்களையும் ஸத்தியரும் ஜனார்த்தனருமான உம்மையும் பார்க்க விரும்புகின்றனர். ஓ! கேசவரே! பெரியதும் பார்க்கவேண்டியதுமான இந்தக்கூட்டத்தைப்பார்க்க விரும்புகின்றோம். ஓ! மாதவரே! பகைவரைவாட்டுகிறவரே! அரசர்களுடைய மத்தியில் கௌரவர்களிடத்தில் உம்மால் சொல்லப்பட்டவைகளும் தர்மார்த்தங்களுடன் கூடினவைகளுமான வார்த்தைகளைக் கேட்கவிரும்புகின்றோம். ஓ! மாதவரே! இன்பமாக உம்மால் சொல்லப்பட்ட வார்த்தைகளையும் கௌரவர்களுடைய மறுமொழிகளையும் கேட்கவிரும்புகின்றோம். ஓ! யாதவஸ்ரேஷ்டரே! பீஷ்மர் துரோணர்முதலியவர்களும் மிக்கமதியையுடையவிதுரரும் நீருமே ஸபையில் வரப்போகின்றீர்கள். ஓ! கோவிந்தரே! மாதவரே! ஸத்தியமும் ஹிதமும் திவ்யமுமான உம்முடைய வார்த்தைகளையும் அவர்களுடைய வார்த்தைகளையும் கேட்கவிரும்பு

1 'நீங்கள் போகவேண்டிய எல்லை' என்பது கருத்து.

கின்றோம். ஓ! மஹாபாஹுவே! அனுமதி கேட்கிறோம். நாங்கள் மறுபடியும் பார்ப்போம். ஓ! வீரரே! நிர்விக்கினமாகப்போம். ஸபையை அடைந்தவரும் திவ்வியமான ஆஸனத்திலிருப்பவரும் பல பராக்கிரமத்துடன் கூடினவருமான உம்மைப் பார்ப்போம்' என்றார். ஓ! அரசரே! பகைவரைவாட்டுபவரே! புறப்பட்டவரும் புஜபல முள்ளவருமான தேவகிபுத்திரரைப் பகைவீரர்களைக்கொல்லுகிறவர்களும் ஆயுதபாணிகளுமான பத்துமகாரதர்களும் ஆயிரங்காலாட்களும் ஆயிரங்குதிரைவீரர்களும் விஸ்தாரமான உணவுப்பொருள்களும் நூற்றுக்கணக்காகச் சிறந்தவர்களான வேலைக்காரர்களும் பின் தொடர்ந்தார்கள்" என்றார்.

## எண்பத்துநான்காவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(கோவிந்தர் போம்பொழுது கௌரவர்களின் தோல்வியைக் குறிக்கும் துர்நிமித்தங்களும் கோவிந்தருக்கு வெற்றியைக்குறிக்கும் நன்னிமித்தங்களும் உண்டானதும், கோவிந்தர் விருகஸ்தலம்சென்று பிராம்மணரால் உபசரிக்கப்பெற்று அவர்களை உண்பித்துத் தாமும் உண்டு அங்கே இரவில் தங்கியதும்.)

ஜனமேஜயர், "தாசார்ஹகுலத்தில் பிறந்தவரும் மகாத்மாவுமான மதுஸூதனர் எவ்விதம் புறப்பட்டார்? மிக்கபராக்கிரமத்தையுடைய அவர் போகும்போது என்னசகுனங்கள் உண்டாயின?" என்று கேட்டார்.

வைசம்பாயனர், "மகாத்மாவான அவருடைய பிரயாணத்தில் எந்த நிமித்தங்கள் ஏற்பட்டனவோ [1] தேவஸம்பந்தமுள்ளவைகளும் [2] உத்பாதத்தாலுண்டானவைகளுமான அவையெல்லாவற்றையும் என்னிடம் கேளும். மேகமில்லாமலிருக்கையில் மின்னலுடன் இடியின் சப்தமானது உண்டாயிற்று. அதனை அடுத்து மேகமில்லாமலே [3] பர்ஜன்யன் அதிகமாகவர்ஷித்தான். கிழக்கே சென்ற ஸிந்து முதலான ஏழுநதிகள் மேற்கு நோக்கிச் சென்றன. எல்லாத்திக்குகளும் விபரீதமாகத் தோன்றின. ஒன்றும் அறியப்படவில்லை. அர

1 நல்லசகுனங்கள். 2 அபசகுனங்கள்.

3 இந்தப் பர்வம் 249-ம் பக்கமும் துரோணபர்வம் 590-ம் பக்கமும் குறிப்புக்களில் காண்க.

சரே! அக்கினிகள் நன்றாக ஜ்வலித்தன. பூமி சலித்தது. நூற்றுக் கணக்கான கிணறுகளும் குடங்களும் ஜலத்தை வழியவிட்டன. இந்த உலகமெல்லாம் இருளால் நிரம்பியதுமாயிற்று. அரசரே! புழுதியினால் திக்குக்களும் மூலைத்திசைகளும் அறியப்படவில்லை. ஆகாயத்தில் பெரிதான சப்தமுண்டாயிற்று. [1]சரீரம் காணப்பட வில்லை. அரசரே! அது எல்லாத் தேசங்களிலும் ஆச்சரியம்போல ஆயிற்று. தென்மேற்கிலுண்டானதும் கடுமையானதும் இடியின் சப்தம் போன்ற சப்தத்தையுடையதுமான காற்றானது ஹஸ்தின பட்டணத்தைப் பேதித்தது; மரங்களைக் கூட்டம் கூட்டமாக ஒடித் தது. பாரதரே! வார்ஷ்ணேயர் எந்த எந்த மார்க்கத்தில் சென்றாரோ அங்கங்கே ஸுகமான காற்று உண்டாயிற்று. எல்லாம் சுபகரமாகவே இருந்தன. மலர்மாரி பெய்தது. தாமரைமலர்கள் அதிகமாகச் சொரிந்தன. வழியானது மேடுபள்ளமில்லாமலும் துன்பமில்லா மலும் நாணலும் முள்ளுகளுமில்லாமலுமிருந்தது. தனங்களையளிக் கின்ற அவர், அங்கங்கே பிராம்மணர்களாலே ஆயிரக்கணக்காகச் சொற்களால் துதிக்கப்பெற்று மதுபர்க்கங்களாலும் தனங்களாலும் உபசரிக்கப்பட்டார். மாதர்கள் மகாத்மாவும் எல்லாப்பிராணிகளு டைய உள்ளத்திலும் பற்றுள்ளவருமான அவரை மார்க்கத்தில் அடைந்து வனத்திலுண்டானவைகளும் நல்லவாஸனையுள்ளவைகளு மான புஷ்பங்களாலே இறைத்தார்கள். பரதஸ்ரேஷ்டரே! அவர் அழகுள்ளதும் எல்லாப்பயிர்களும் நிரம்பியதும் ஸுகமானதும் சிறந்த தர்மங்களுடன் கூடினதுமான சாலிபவனமென்கிற கிரா மத்தை அடைந்தார். அவர், பல பசுக்களையுடையவைகளும் அழகு பொருந்தியவைகளும் மனத்திற்கு இன்பத்தைச் செய்பவைகளுமான கிராமங்களையும் பட்டணங்களையும் பலவித ராஜ்யங்களையும் பார்த் துக்கொண்டு சென்றார். பிறகு, உபப்லாவ்யத்திலிருந்தும் எந்நாளும் ஸந்தோஷத்தையடைந்தவர்களும் நல்ல மனத்தையுடையவர்களும் பரதவம்சத்தரசர்களால் காக்கப்பட்டவர்களும் பரராஜ்யங்களுக் குப் பயப்படாதவர்களும் துன்பங்களை அறியாதவர்களும் நகர வாஸிகளுமான ஜனங்கள் [2]விஷ்வக்ஸேனரானபகவானைப் பார்க்கும் விருப்பத்தால் கூட்டமாக வழியில் வந்து நின்றார்கள். அவர்களெல்லா ருமோ, ஜ்வலிக்கின்ற அக்கினிபோல் வருகின்றவரும் பூஜைக்குரிய வரும் (தங்கள்) தேசத்திற்கு அதிதியும் ஸமீபம் வந்தவருமான பிரபு வைப் பூஜித்தார்கள். பகைவீரர்களைக் கொல்லுகிறவரும் மதுஸூத

1 வேறுபாடம். 2 நாற்புறமும் சேனையால் சூழப்பட்டவர்.

னருமான கேசவர் விருகஸ்தலத்தையடைந்து, ஸூர்யகிரணங்கள் சிதறி ஆகாயம்சிவந்தபிறகு, கூடவந்தவர்களெல்லாரையும் நோக்கி, 'நாம் யுதிஷ்டிரருடைய கார்யத்திற்காக இவ்விடத்தில் வஸிப் போம்' என்று சொன்னர். அவருடைய அந்தக் கருத்தைஅறிந்து (அந்த) மனிதர்கள் க்ஷணகாலத்தில் விடுதியை அமைத்துச் சுவை யுள்ள அன்னபானங்களை ஸித்தம் செய்தார்கள். பகவானும், ரதத்தி லிருந்தும் இறங்கி விதிப்படி சுத்தியைச் செய்துகொண்டு தேரை அவிழ்க்கும்படி கட்டளையிட்டு ஸந்தியாவந்தனம் செய்தார். தாருக னும் குதிரைகளை அவிழ்த்துவிட்டுச் சாஸ்திரப்படி அவைகளுக்குத் தேய்ப்பு முதலான பணிகளைச்செய்து பூட்டுவார்முதலிய எல்லாவற் றையும் அவிழ்த்தான். அவிழ்த்து, அந்தக்குதிரைகளைப் புரளவிட் டான். அரசனே! அந்தக்கிராமத்திலுள்ள பிரதானர்களும் பூஜ்யர்க ளும் நல்ல குலத்திலுண்டானவர்களும் (அகார்யத்தில்) லஜ்ஜையுள்ள வர்களும் பிராம்மண விருத்தியை அடுத்திருப்பவர்களுமான பிராம் மணர்கள் மகாத்மாவும் பகைவர்களைச் சிக்ஷிப்பவருமான ஹ்ருஷீ கேசரை அடைந்து நியாயப்படி ஆசீர்வாதமங்களத்துடன் பூஜையைச் செய்தார்கள். அவர்கள் எல்லா உலகங்களிலும் பூஜிக்கப்பட்டவரான தாசார்ஹரைப் பூஜித்துவிட்டு, மகாத்மாவான அவர்பொருட்டுக் குணங்கள் பொருந்திய வீடுகளைத் தெரிவித்தார்கள். பிரபுவானவர், அவர்களை நோக்கி, 'திருப்தி' யென்று சொல்லிவிட்டுத் தகுதிப்படி பூஜித்து அவர்களுடைய கிருகங்களில் பிரவேசித்து மறுபடியும் அவர் களுடன் வெளியில் வந்தார். கேசவரானவர் அவ்விடத்தில் பிராம் மணர்களை மிகவும் திருப்தியாகப் போஜனம் செய்வித்து (தாமும்) போஜனம் செய்து அவர்களெல்லாருடனும் அந்த ராத்திரி ஸுகமாக

## எண்பத்தைந்தாவது அத்யாயம்.

## பகவத் யாநபர்வம். (தொடர்ச்சி.)

---

**(கோவிந்தர்வரவையறிந்த திருதராஷ்டிரன்கட்டளையால் துர் யோதனன் கோவிந்தரை உபசரிப்பதற்காக வழியில் ஸபைகளை அமைத்ததும், அவர் அவற்றைப் பாராமலே சென்றதும்.)**

அப்பொழுது, திருதராஷ்டிரன் தூதர்களாலே மதுஸூதனர் வருவதாக அறிந்து பெரிய புஜங்களையுடையவரான பீஷ்மரையும்

துரோணரையும் ஸஞ்சயனையும் மகாபுத்திமானன விதுரரையும் [1] பூஜித்துச் சொன்னான். மந்திரிகளுடன்கூடிய துரியோதனனையும் நோக்கி மயிர்சிலிர்ப்புடன் இந்த வார்த்தையைச் சொல்லலானான். 'குருநந்தன! நூதனமாக, பெரிதான ஆச்சரியமானது கேட்கப்படு கிறது. வீடுகள்தோறும் மாதர்களும் சிறுவர்களும் முதியவர்களும் சொல்லுகின்றனர். சிலர் புகழ்ந்து சொல்லுகின்றனர். வந்தவர்களான சிலர் அப்படியே சொல்லுகின்றனர். நாற்சந்திகளிலும் ஸபைகளிலும் வெவ்வேறான பேச்சுக்கள் நடக்கின்றன. பராக்கிரமத்தோடுகூடிய வாஸுதேவர் பாண்டவர்கள் நிமித்தம் வரப்போகிறார். அந்த மது ஸூதனர், எல்லாவிதத்தாலும் நமக்கு மதிக்கத்தக்கவரும் பூஜிக்கத் தக்கவருமானவர். உலகத்தின் இருப்பு அவரிடமன்றோ இருக் கிறது? அவர் பிராணிகளுக்கு ஈஸ்வரரல்லரோ? தைர்யமும் வீர்ய மும் புத்தியும் காந்தியும் அந்த மாதவரிடத்தில் இருக்கின்றன. நரர்க ளில் சிறந்தவரான அவர் பூஜிக்கப்படவேண்டும். அதுவன்றோ ஸநா தனமான தர்மம். அவர் பூஜிக்கப்பட்டால் ஸுகத்தையளிப்பவரா வார்; பூஜிக்கப்படாத விஷயத்தில் அஸுகத்தை அளிப்பவராவார். பகைவரை அடக்குகிறவரான அவர் உபசாரங்களால் ஸந்தோஷிப்பா ரானால் அவரிடமிருந்தும் எல்லா அரசர்களுமிருக்கையில் எல்லா இஷ் டங்களையும் அடைவோம். பகைவரை வாட்டுபவனே! அவருடைய பூஜையினிமித்தம் இப்பொழுதே ஏற்பாடுசெய். மார்க்கத்தில் அநுப விக்கத்தக்க எல்லாப்பொருள்களுடனும்கூடின ஸபைகள் செய்யப் படட்டும். பெரிய கைகளையுடையவனே! காந்தாரியின் புத்திரா! அவருக்கு உன்னிடம் அன்புண்டாகும்படி செய். பீஷ்மரே! எப்படி நினைக்கிறீர்?' என்றான்.

அப்பொழுது, பீஷ்மர்முதலான எல்லாரும் அரசனான திருதராஷ்டிரனை நோக்கி, அவனுடைய அந்த வார்த்தையைக் கொண்டாடி 'சிறந்தது' என்று சொன்னார்கள். அப்போது, துர்யோ தனராஜன் அவர்களுடைய ஸம்மதத்தை அறிந்து ஸபைகளுக்குரிய ரமணீயமான இடங்களைக் குறிப்பிடத் தொடங்கினான். பிறகு, ரமணீயமான இடங்கள்தோறும் வெவ்வேறாக ஸகலரத்னங்களாலும் நிறைக்கப்பட்ட அனேகம் ஸபைகளைச்செய்தார்கள். பிறகு, அரசன் (அந்த ஸபைகளில்) விசித்ரமானவைகளும் பலவித குணங்களுள்ள

---

1 பீஷ்மத்ரோணர்களுக்கு நமஸ்காரம் முதலியன பூஜை; ஸஞ்சய விதுரர்களுக்குப் புகழ்ச்சி பூஜை.

வைகளுமான ஆஸனங்களையும் ஸ்திரீகளையும் சந்தனங்களையும் ஆப ரணங்களையும் மெல்லிய வஸ்திரங்களையும் குணமுள்ளவைகளும் பல

யும் நல்லவாஸனையுள்ள மாலைகளையும் அமைத்தான். குருவம்சத் தாசனனவன் சிறப்பாக விருகஸ்தலமென்கிற கிராமத்தில் வாஸத் திற்காகப் பலரத்னங்களுள்ளதும் மனத்தை மகிழ்விப்பதுமான ஸபையைச் செய்தான். தேவர்களுக்கேற்றவையும் மானிடசக்தியை மிஞ்சியவையுமான இவையெல்லாவற்றையும் செய்துவிட்டுத் துர்யோ தனராஜன் திருதராஷ்டிரனிடம் தெரிவித்தான். தாமார்ஹரான கேசவர் அந்த எல்லா ஸபைகளையும் பலவிதமான ரத்னங்களையும் (கண்ணால்கூட) பாராமலே கௌரவர்களுடைய அந்த வீட்டண்டை சென்றார்.

## எண்பத்தாறுவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(கோவிந்தரின் வரவு கேட்டு மகிழ்ந்த திருதராஷ்டிரன் அவருக்குத் தேர் யானை முதலியன கொடுப்பதாக விதுரரிடம் சொல்லியது.)

திருதராஷ்டிரன், 'விதுரா! ஜனார்த்தனர் உபப்லாவ்யத்தி லிருந்தும் இவ்விடம் அருகில் வந்துவிட்டார். விருகஸ்தலத்தில் வஸிக்கிறார். அவர் காலையில் இவ்விடம் வருகிறார். ஜனார்த்தனரான வர் ஆஹுகர்களுக்கு அதிபதியும் ஸாத்வதர்களெல்லாரிலும் சிறந்த வரும் பெரியமனத்தையுடையவரும் பெரியபுத்தியுடையவருமாயிருப் பவர். மாதவரானவர் செழிப்பான விருஷ்ணிராஜ்யத்தை ஆளுகின்ற வரும் ரக்ஷிக்கிறவருமானவர். பகவானன அவர் மூன்று உலகங்களுக் கும் பிரபிதாமஹர். ஆதித்யர்களும் வஸுக்களும் ருத்திரர்களும் பிரு கஸ்பதியினுடைய புத்தியை அடுத்திருப்பதுபோல நல்ல மனத்தை யுடைய விருஷ்ணிகளும் அந்தகர்களும் எவருடைய புத்தியை அடுத் திருக்கின்றனரோ மகாத்மாவான அந்த மாதவருக்கு உன்னுடைய முன்னிலையில் பூஜையை நடத்தப் போகின்றேன். தர்மத்தைபுணர்ந்த வனே! அதனை நான் சொல்லுகிறேன்; கேள். ஒரே நிறமுள்ளவை களும் நன்றாக அமைக்கப்பட்ட (கடிவாளம் முதலிய) ஸாதனங்க

ளுள்ளவைகளும் பாஹ்லிகதேசத்தில் பிறந்தவைகளுமான நந்நான்கு சிறந்த குதிரைகள் கட்டிய பொன்மயமான பதினறு தேர்களை அவருக்குக் கொடுக்கப்போகிறேன். கௌரவ! எந்நாளும் மதங் கொண்டவைகளும் கலப்பைக்கால்போன்ற தந்தங்களுள்ளவைகளும் (கொம்பால்) இடிக்கின்றவைகளும் ஒவ்வொன்றும் எட்டுமாவுத்தர்களையுடையவைகளுமான எட்டுயானைகளைக் கொடுக்கப்போகின்றேன். ப்ரஸவிக்காதவர்களும் சுபமானவர்களும் பொன்போன்ற ஒளியையுடையவர்களுமான நூறு வேலைக்காரிகளையும் அவ்வளவு வேலைக்காரர்களையும் கொடுக்கப்போகின்றேன். ஸுகமான ஸ்பர்சமுள்ளவையும் மலையரசர்களால் காணிக்கையாகக் கொடுக்கப்பட்டவையுமான பதினெண்ணாயிரம் ஆட்டின் கம்பளத்தையும் அவருக்குக் கொடுப்பேன். சீனதேசத்திலுண்டான தோல்கள் ஆயிரமிருக்கின்றன. (அவைகளில்), கேசவர் எவ்வளவுக்குத் தகுதியுள்ளவரோ அவ்வளவு அவருக்குக் கொடுக்கப்போகின்றேன். நல்ல ஒளியுள்ளதும் களங்கமற்றதுமான இந்த மணியானது பகலிலும் இரவிலும் பிரகாசிக்கின்றது. இதனையும் அவருக்குக் கொடுக்கப் போகிறேன். அதற்குக் கேசவர் தக்கவரல்லரோ? கோவேறுகழுதைகள் பூட்டின வாகனமானது, ஒரு பகலில் பதினன்குயோசனை ஓடுகின்றது. அதனையும் நான் அவருக்குக் கொடுக்கப் போகிறேன். அவருக்கு அளிக்கப்பட்ட வாகனங்களெவ்வளவோ அவற்றைச் சேர்ந்த ஆட்கள் எவ்வளவோ அவற்றிற்கு எட்டுமடங்கான ஆகாரத்தையும் அவருக்கு நான் எப்பொழுதும் கொடுப்பேன். துர்யோதனனைத்தவிர என்னுடைய எல்லாப் புத்திரர்களும் பௌத்திரர்களும் நன்றாக அலங்கரிக்கப்பட்டவர்களாக மெருகிடப்பட்ட தேர்களுடன் தாசார்ஹரை எதிர்கொள்ளப்போகின்றனர். நன்றாக அலங்கரிக்கப்பட்டவர்களும் கல்யாண குணமுடையவர்களுமான சிறந்த வேசிகள் ஆயிரக்கணக்காக மகாபாக்கியவானை கேசவரை நடந்தே எதிர்கொள்ளப்போகின்றனர். நகரத்திலிருந்து ஜனார்த்தனரைப் பார்ப்பதற்குப்போகிற கல்யாணிகளான கன்னிகைகள் அனைவரும் மூடிக்கொள்ளாதவர்களாக எதிர்கொள்ளப்போகின்றனர். மகளிர் ஆடவர்கள் சிறுவர்களுடன், நகரமானது, மகாத்மாவான மதுஸூதனரை, ஜனங்கள் ஸூர்யனைப் பார்ப்பதுபோலப் பார்க்கட்டும். எல்லாத்திக்குக்களிலும் பெரிய கொடிமரங்களும் கொடிச்சீலைகளும் கட்டப்படட்டும். அவர் வருகிற மார்க்கமானது ஜலம்விட்டு நனைத்துப் புழுதியில்லாமல்செய்

யப்படட்டும். [1]துச்சாஸனனுடைய மாளிகையானது துர்யோதன னுடைய மாளிகையைக்காட்டிலும் சிறந்தது. அது, இப்பொழுது, சீக்கிரமாக நன்கு சுத்தம்பண்ணப்பட்டதும் அலங்கரிக்கப்பட்டது மாகச் செய்யப்படட்டும். அதுவே, அழகான உருவமுடைய மேல்மாடிகளால் விளங்குகிறதும் மங்களமும் ரமணீயமும் [2]எல்லா ருதுக்களையுமுடையதும் மிகப்பெருஞ் செல்வங்களுள்ளதுமாயிருக் கிறது. இந்த வீட்டிலும் என்னுடைய வீட்டிலும் துர்யோதன னுடைய வீட்டிலும் எல்லா ரத்தினங்களுமிருக்கின்றன. வாஸு தேவர் எது எதற்குத் தக்கவராகிறாரோ அதை அதை ஸம்சயமில்லா மல் கொடுக்கவேண்டும்' என்று கூறினான்.

## எண்பத்தேழாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(திருதராஷ்டிரன் கோவிந்தருக்குத் தேர்முதலியன கொடுப்ப தாகச்சொன்னது வஞ்சித்தற்கென்றும் ஸாமமுதலிய உபாயங்களுக்கு அவர் வசப்படாரென்றும், அவர் விரும்பியதைச் செய்து அவரைக்கௌரவிக்க வேண்டுமென்றும் விதுரர் சொல்லியது.)

விதுரர், 'ஓ! அரசரே! மூன்று உலகத்திற்கும் வெகுமானிக் கப்பட்டவரும் மிக்கஸாதுவுமாயிருக்கிறீர். பாரதரே! உலகத்திற்குப் பூஜிக்கப்பட்டவரும் ஸம்மதிக்கப்பட்டவருமாயிருக்கிறீர். இவ்விதம் நடந்திருக்கும்போது முதுமைப்பருவத்தில் இருந்துகொண்டு நீர் இவ் விதம் சொன்னீராகையால் சாஸ்திரத்தினாலோ நல்ல உள்ளத்தி னாலோ மிகவும் உறுதியுள்ளகிழவரே ஆகிறீர். அரசரே! சந்திர னிடத்தில்கலைபோலவும் ஸூர்யனிடத்தில் ஒளிபோலவும் ஸமுத் திரத்தில் பெரிய அலைபோலவும் உம்மிடத்தில் தர்மம் இருக்கிற தென்று நிச்சயித்திருக்கின்றனர். ஓ! அரசரே! உம்முடைய குண ஸமூகங்களாலே உலகமானது எப்பொழுதுமே ஸந்தோஷத்தை அடைந்ததாயிருக்கிறது. பந்துக்களுடன்கூடிக் குணங்க

1 துச்சாஸனன் பெரிய குற்றவாளியாதலால் அவனிடம் பகவானுக்கு வருத்தம் விலக வேண்டுமென்பது அவனுடைய கபடமான கருத்து.

2 'எல்லாருதுக்களிலும் உண்டாகும் மலர்களும் கனிகளும் எப் பொழுது மிருக்கின்றன' என்பது கருத்து.

பதில் எந்நாளும் முயற்சிசெய்யும். அரசரே! ருஜுத்தன்மையை அடையும். அற்பத்தன்மையால், மிகவும்பிரியர்களான புத்திரர்களை யும்பௌத்திரர்களையும் நண்பர்களையும் மிருதியாக நாசம்செய்யாதீர். அரசரே! அதிதியானகிருஷ்ணருக்கு நீர் மிருதியாகக் கொடுக்க விரும்புகிறதையும் மற்றதையும் பூமியையும் அந்தக்கோவிந்தர் அடையத்தக்கவரே ஆகிறார். ஆனால், நீர் அவருக்குத் தர்மத்தை உத் தேசித்தோ அல்லது அவருடைய பிரியத்தினிமித்தமோ இதைக் கொடுக்க விரும்புகிறீரில்லை. [1] ஸத்தியத்துடன் என்னைத் தொடு கிறேன். இந்த அதிகதக்ஷிணையானது உண்மையாகவே இந்திரஜாலம். இது வஞ்சனை. அரசரே! வெளிக்காரியத்தினால் மறைக்கப்பட்ட உம்முடைய அபிப்பிராயத்தை நான் அறிகிறேன். அரசரே! ஐந்து பாண்டவர்களும் சிறியவைகளான ஐந்துகிராமங்களையே அடைய விரும்புகின்றனர். அவர்களுக்கு அவைகளைக் கொடுக்கவிரும்புகிறீ ரில்லை. ஆகையால், ஸமாதானத்தைச் செய்யமாட்டீர். பொருளி னாலேயே மகாபாகுவானகிருஷ்ணரை நீர் அபகரிக்கவிரும்புகிறீர். இந்த உபாயத்தினாலே பாண்டவர்களைவிட்டு (அவரைப்) பிரிக்கவும் விரும்புகிறீர். அவர் தனத்தினாலும் முயற்சியினாலும் வசைமொழியி னாலும் அர்ஜுனனைவிட்டுவேறானவராகப் பண்ணுதற்கு இயலாதவர். இதனை உமக்கு உண்மையாகச் சொல்லுகிறேன். [2] கிருஷ்ணருடைய பெருமையை அவன் அறிவான். அவனுடைய பலமான பக்தியை இவரும் அறிவார். ஆகையால், உயிருக்குச்சமமான தனஞ்சயன் விடத்தக்கவனல்லனென்று நினைக்கிறேன். ஜனார்த்தனரானவர் ஜலங் களால் பூர்ணமாயிருக்கிற கும்பத்தைக்காட்டிலும் [3] வேறானதும் பாதப்ரக்ஷாளனத்தைக் காட்டிலும் [4] வேறானதும் குசலப்பிரஶ்னத் தைக்காட்டிலும் [5] வேறானதுமானவற்றைப் பார்க்கவே மாட்டார். அரசரே! பூஜைக்குத்தக்கவரும் மகாத்மாவுமான அவருக்கு எது பிரியமான ஆதித்தியமோ அது அவருக்குச் செய்யப்படட்டும். இந்த ஜனார்த்தனர் பூஜைக்குத்தக்கவரல்லரோ? அரசரே! கேசவர் எந்தப் பொருளுக்காக நன்மையை விரும்பிக் குருதேசத்தைநோக்கி வருகி

---

1 'மார்பில் கையைவைத்துப் பிரமாணம் செய்கிறேன்' என்பது கருத்து.

2 'கிருஷ்ணனுடைய பெருமையையும் அறிவேன்; அவரிடம் அர் ஜுனனுக்குண்டான உறுதியான பக்தியையும் அறிவேன்' என்றும் கொள்ளலாம்.

3 திரவ்யம். 4 அன்னபானாதி. 5 ஸ்தோத்திராதி.

ரோ அதையே இவருக்கு உதவக்கடவீர். ஓ! ராஜஸ்ரேஷ்டரே! தாசார்ஹரானவர் உமக்கும் துரியோதனனுக்கும் பாண்டவர்களுக்கும் ஸமாதானத்தை விரும்புகிறார். அவருடைய அந்த வார்த்தையைச் செய்யும். அரசரே! நீர் பிதாவாயிருக்கிறீர்; அவர்கள் புத்திரர்கள். நீர் முதியவர்; அவர்கள் குழந்தைகள். அவர்களிடம் பிதாவைப் போலிரும்; அவர்களோ புத்திரர்கள்போலிருக்கின்றனர்' என்றார்.

## எண்பத்தெட்டாவது அத்யாயம்.

## பகவத்யானபர்வம். (தொடர்ச்சி)

(துரியோதனன் கோவிந்தர் வசப்படுத்தமுடியாதவராகையால் அவருக்குப் பொருள்கொடுக்கவேண்டாமென்றதும், பீஷ்மர் கோவிந்தர் அவமதிக்கமுடியாதவரென்று அவர் சொல்லியதைச்செய்யச் சொல்லியதும், துரியோதனன் கோவிந்தரைக்கட்ட உபாயம்கேட்டதும், திருதராஷ்டிரன் துரியோதனனை நிந்தித்ததும், பீஷ்மர் துரியோதனனை நிந்தித்து ஸபையினின்றும் சென்றதும்.)

துரியோதனன் சொல்லுகின்றான்: 'அச்சுதரான கிருஷ்ணர் விஷயத்தில் விதுரர்சொன்னதெல்லாம் உண்மையே. பார்த்தர்களைக்குறித்து அன்புள்ளவராயிருப்பதால் ஜனார்த்தனர் (நம்மிடம்) சேர்க்கமுடியாதவரல்லரோ? ராஜஸ்ரேஷ்டரே! ஜனார்த்தனர்விஷயத்தில் பூஜைசெய்து பலவிதமாக (நாம்) கொடுக்கவேண்டியபொருளை (இந்நிலைமையில்) ஒருபொழுதும் கொடுக்கக்கூடாது. ஏனென்றால், தேசமும் காலமும் அந்தப்படி ஒத்தனவாயில்லை. கேசவர் தகுதியுள்ளவரல்லரென்பதில்லை. அரசரே! (ஆனாலும்), கிருஷ்ணரானவர், 'பயத்தினாலே என்னைப் பூஜிக்கிறான்' என்று நினைப்பார். அரசரே! (மேலும்), க்ஷத்திரியனுக்கு எந்தக்காரியத்தில் அவமானம் வருமோ அந்தக்காரியத்தை வித்வானாயிருக்கும் அவன் செய்யக்கூடாதென்பது என்னுடைய உறுதியான எண்ணம். உலகத்தில் விசாலமான கண்களையுடைய அந்தக்கிருஷ்ணரோ மூவுலகங்களுக்குமே எல்லாவிதத்தாலும் மிகவும் பூஜ்யரென்று எனக்குத்தெரியும். ஓ! பிரபுவே! அவருக்கோ கொடுக்கத்தகாதது இராது. கார்யத்தினுடையபோக்கு அப்படிப்பட்டது. நன்குதொடங்கப்பட்ட போரானது போர் நடவாமல் ஒழிவடையாதன்றோ?' என்றான்.

கௌரவர்களுக்குப் பிதாமஹரான பீஷ்மர், அவனுடைய அந்த வார்த்தையைக்கேட்டு விசித்ரவீர்யன்புத்திரனை அரசனை நோக்கி இந்தவார்த்தையைச் சொல்லத் தொடங்கினர்: 'ஜனார்த்தனரானவர் பூஜிக்கப்படாதவரானாலும் கோபத்தை அடையார். கேசவரானவர் அவமதிக்கப்பட்டாலும் அவமானம்செய்தவர்களை அவமதியார். அவரை அவமதிப்பது இயலாது: அவர் அவமதிக்கப்படத்தக்கவரல்லரன்றோ? ஓ! புஜபலமுள்ளவனே! எந்தக்காரியமானது (அவர்) மனத்தினால் செய்யக்கூடியதாயிருப்பதை அடைந்ததோ அது ஒருவனாலும் எல்லாஉபாயங்களாலும் மாற்றுவதற்கு முடியாதது. வாஸுதேவரை நிமித்தமாகக்கொண்டு, பாண்டவர்களோடு ஸமாதானத்தைச்செய்து, பெரியகைகளையுடைய அவர் சொல்லுவதைச் சங்கையில்லாமல் செய்யவேண்டும். தர்மாத்மாவான ஜனார்த்தனர் தர்மத்தைவிட்டு விலகாமலும் அர்த்தத்தினின்றும் விலகாமலும் உறுதியாகவும் சொல்லப்போகிறார். அவரிடத்தில் நீ பந்துக்களுடன் பிரியமான வார்த்தைகளைச்சொல்லவேண்டும்' என்றார்.

துர்யோதனன், 'ஓ! அரசரே! பிதாமஹரே! நான் முழுச்செல்வத்தையும் அனுபவிக்கவல்லவனாயிருப்பதால் உயிருள்ளவரையில் அவர்களுடன் சேர்ந்து இதை அனுபவியேன். என்னால் உறுதிசெய்யப்பட்ட இந்தப் பெரியகாரியத்தையோ கேளும். பாண்டவர்களுக்கு முக்யமானகதியாயிருக்கிற ஜனார்த்தனரைக் கட்டப்போகிறேன். அவர் கட்டுப்பட்டால் விருஷ்ணிகளும் பூமியும் பாண்டவர்களும் எனக்கு வசமாகிவிடுவார்கள். அந்தக்கோவிந்தரும் காலையில் இங்கே வருவார். இந்தவிஷயத்தில் அவர் சிறிதும் அறியாமலும் ஒருவிதமான அபாயமும் ஏற்படாமலுமிருக்கும்படியான உபாயங்களை நீர் எனக்குச் சொல்லும்' என்றான். கேசவர்விஷயத்தில் கோரமாகச்சொல்லப்பட்ட அவனுடைய அந்தவார்த்தையைக் கேட்டுத் திருதராஷ்டிரன் மந்திரிகளுடன் வருத்தமுற்றவனும் மனம் வாடினவனுமானான். பிறகு, அவன் துர்யோதனனை நோக்கி, 'ஜனங்களைக்காப்பவனே! இவ்விதம் சொல்லாதே. இது ஸநாதனமான தர்மமன்று. ஹ்ருஷீகேசரானவர் தூதுவந்தவரும், நமக்கு ஸம்பந்தியும் நண்பரும் கௌரவர்கள்விஷயத்தில் குற்றம் செய்யாதவருமல்லரோ? அவர் எப்படி கட்டப்படத்தக்கவராவார்?' என்கிற இந்த வார்த்தையைச் சொன்னான்.

(அப்பொழுது), பீஷ்மர், 'திருதராஷ்டிரா! மிக்க மந்தபுத்தியையுடையவனான உனது இந்தப்புத்திரன் விபரீதனாகத் தீமையையே

வேண்டுகிறான். வேண்டியவர்களால் வேண்டப்பட்டும், வேண்டத் தக்கதை வேண்டவேயில்லை. இவன் பாவியும் பாவிகளுடைய சேர்க்கையையுடையவனும் அன்பர்களுடைய வார்த்தைகளைத் தள்ளி விட்டுக் கெட்டமார்க்கத்திலிருக்கிறவனுமாயிருக்க, நீயும் இவனை அநுஸரிக்கிறாய். மிக்க கெட்டபுத்தியுள்ள உனது இந்தப்புத்திரன், பிறரை வருத்தாதசெயல்களையுடைய கேசவரை எதிர்த்து, மந்திரி களுடன் நொடிப்பொழுதில் இல்லாமல் போகப்போகிறான். பாவியும் குரூரனும் தர்மத்தைவிட்டவனும் துர்ப்புத்தியுள்ளவனுமான இவ னுடைய அனர்த்தத்தோடுகூடிய வார்த்தைகளை ஒருவிதத்தாலும் கேட்பதற்கு நான் விரும்பவில்லை' என்றார். இவ்விதம் சொல்லி விட்டு, பரதர்களிற் சிறந்தவரும் பிராயமுதிர்ந்தவரும் தவறாத பராக்ரமத்தையுடையவருமான பீஷ்மர் மிக்க கோபத்தோடு எழுந் திருந்து அங்கிருந்தும் புறப்பட்டார்.

---

எண்பத்தோன்பதாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(கோவிந்தர் ஹஸ்திநபுரம் அடைந்து திருதராஷ்டிரன் அரண்மனை சென்று பூஜிக்கப்பெற்று விதுரர்மாளிகைக்குச் சென்றது.)

மாதவரோ, விடியற்காலத்தில் எழுந்திருந்து காலையில் செய்ய வேண்டியவற்றைச் செய்துவிட்டுப் பிராம்மணர்களால் அநுமதி கொடுக்கப்பெற்று நகரத்தைக் குறித்துப் புறப்பட்டார். விருக ஸ்தலத்தில் வஸிப்பவர்களான அவர்களெல்லாரும், புறப்பட்டவ ரும் பெரியகைகளையுடையவரும் மிக்கபலமுடையவருமான அவ ரிடம் அநுமதிபெற்றுத் திரும்பினார்கள். மிக்க புஜபலமுள்ள புண்டரீகாக்ஷர் ரத்தினங்களையும் தனங்களையும் கொடுத்து அவர் களை அனுப்பிவிட்டுக் கௌரவருடைய ஸபையை நோக்கிச் சென் றார். துர்யோதனனைத்தவிர, திருதராஷ்டிரன்புத்திரர்களும் பீஷ்மர் துரோணர்முதலிய எல்லாரும், நன்கு அலங்கரித்துக்கொண்டு, வருகின்ற அவரை எதிர்கொண்டார்கள். அரசரே! வெகுபேர் களான பட்டணத்து ஜனங்களும், ஹ்ருஷீகேசரைப் பார்க்க விருப்பமுள்ளவர்களாகி, சிலர் பலவிதமான வாகனங்களாலும் சிலர் கால்களாலும் சென்று எதிர்கொண்டார்கள். அவர் வருத்தமில்லாத செய்கைகளையுடைய பீஷ்மரோடும் துரோணரோடும் திருதராஷ்டிர

புத்திரர்களோடும் மார்க்கத்தில் சேர்ந்து அவர்களால் சூழப்பட்டவராகி நகரம்சென்றார். அவரைக் கௌரவிப்பதற்காகப் பட்டணம் நன்றாக அலங்கரிக்கப்பட்டும் ராஜமார்க்கமும் பலரத்னங்களால் இழைக்கப்பட்டும் இருந்தன. அரசரே! பரதஸ்ரேஷ்டரே! அப்பொழுது வாஸுதேவரைப் பார்க்கும் விருப்பத்தால் பெண்பாலோ முதியவனோ இளைஞனோ ஒருவரும் வீட்டிலிருக்கவில்லை. மஹாராஜரே! ஹ்ருஷீகேசர் பிரவேசிக்கின்ற அந்தக்காலத்தில், அந்த ராஜமார்க்கத்தில் மனிதர்கள் [1]பூமியை அடைந்தவர்களாகித் துதித்தார்கள். மிகப்பெரியமாளிகைகளும், சிறந்தவர்களான மகளிரால் நிறைந்தவைகளாகிப் பாரத்தினாலே பூமியில் சலிக்கின்றவைகள் போலக் காணப்பட்டன. அப்படியிருக்கையில் சிறந்தகதியையுடையவைகளான வாஸுதேவருடைய அந்தக்குதிரைகள் மனிதர்களால் சூழப்பட்ட ராஜமார்க்கத்தில் மிகவும் தடைப்பட்ட கதியுடையவைகளாயின. பகைவர்களைத் துன்பப்படுத்துகிறவரான அந்தப்புண்டரீகாக்ஷர் வெண்மையான மேன்மாடிகளாலே சோபிக்கும்படி செய்யப்பட்ட திருதராஷ்டிரனுடைய அரண்மனையில் பிரவேசித்தார். பகைவரைச்சிக்ஷிப்பவரான கேசவர், ராஜமாளிகையினுடைய மூன்றுகட்டுக்களைத் தாண்டி விசித்ரவீர்யன் புத்திரனை அரசனை நோக்கிச் சென்றார். தாசார்ஹர் தன்னைநோக்கிவரும்பொழுது, அறிவையே கண்ணாகவுடையவனும் மிக்கபுகழையுடையவனுமான அரசன் சீக்கிரமாகவே பீஷ்மர் துரோணர்களுடன் எழுந்திருந்தான். கிருபரும் ஸோமதத்தனும் மகாராஜனான பாஹ்லிகனுமாகிய எல்லாரும் ஜனார்த்தனரைக் கௌரவிப்பதற்காக ஆஸனங்களிலிருந்தும் எழுந்தனர். பிறகு, வாஸுதேவர், புகழுள்ள திருதராஷ்டிரராஜனை அடைந்து, பீஷ்மருடன்கூடிய அவனைக் காலவிளம்பமின்றி வார்த்தைகளால் பூஜித்தார். அவர்களிடம் மதுஸூதனரான மாதவர் தர்மத்தின் முறையையுடையதான அந்த வார்த்தையைச் சொல்லிவிட்டுப் பிராயமுறைப்படி அரசர்களுடன் கூடினார். பிறகு, அவர், புகழுடையவரான துரோணரையும் அவர்புத்ரரையும் பாஹ்லிகனையும் கிருபரையும் ஸோமதத்தனையும் அடைந்தார். அவ்விடத்தில் உறுதியுள்ளதும் சுத்தப்படுத்தப்பட்டதும் ஸுவர்ணமயமுமான பெரிய ஆஸனம் இருந்தது. அச்சுதர் திருதராஷ்டிரனுடைய உத்தரவினால் அதில் உட்கார்ந்தார். பிறகு, ஜனார்த்தனரின்பொருட்டுத் திருதராஷ்டிரனுடைய புரோகிதர்கள் கோவையும் மதுபர்க்கத்தையும்(பாத்ய) ஜலத்

1 'வாகனங்களில் சென்றவர்கள் பூமியில் இறங்கி நின்றார்கள்' என்பது.

னதையும் முறைப்படி கொண்டுவந்தனர். ஆதித்யம் செய்யப்பெற்ற கோவிந்தரோ எல்லாக் கௌரவர்களையும் பரிஹஸிக்கிறவரும் ஸம்பந்திமுறையைச் செய்கிறவரும் கௌரவர்களால் சூழப்பட்டவருமாயிருந்தார். (எல்லாராலும்) அர்ச்சிக்கப்பட்டவரும் திருதராஷ்டிரனால் பூஜிக்கப்பட்டவரும் பெரியபுகழுடையவரும் பகைவரைச் சிக்ஷிப்பவருமான அவர், (அந்த) அரசனிடம் அனுமதிபெற்றுக்கொண்டு வெளியே புறப்பட்டார். கௌரவர்களுடைய சபையில் அந்தக் கௌரவர்களுடன் முறைப்படி சந்தித்தபின் மாதவரானவர் அழகான விதுரருடைய மாளிகையை அணுகினார். விதுரரானவர் எல்லா மங்களத்திரவியங்களோடும் எதிர்கொண்டுவந்து ஜனார்த்தனரான தாசார்ஹரை எல்லா இஷ்ட வஸ்துக்களாலும் அர்ச்சித்தார். எல்லாத் தர்மங்களையும் உணர்ந்தவரும் அறிவில் மிகச்சிறந்தவரும் ஞானியுமான விதுரர், அன்புள்ளவரும் தர்மத்தையும் அர்த்தத்தையும் நித்தியமாகக்கொண்டவரும் கோபமில்லாதவரும் புத்திமானுமான கோவிந்தர் பிரீதியை அடைந்தவராயிருக்கும் ஸமயத்தில், அவருக்குச் செய்யவேண்டிய ஆதித்யங்களைச் செய்துவிட்டு, மதுஸூதனரான அவரை நோக்கிப் பாண்டவர்களின் க்ஷேமத்தை வினவினார். எல்லாவற்றையும் பிரத்யக்ஷமாகப் பார்த்தவரான தாசார்ஹர், அந்த விதுரருக்குப் பாண்டவர்களுடைய எல்லாச் செய்கையையும் விஸ்தாரமாகச் சொல்லினர்.

---

## தொண்ணூறுவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

**(கோவிந்தர் குந்தியைக்கண்டதும், அவள் பாண்டவரின் க்ஷேமத்தை வினவித் தான் அனுபவித்ததுன்பங்களைக் கூறி வருந்தியதும், கோவிந்தர் அவளைத்தேற்றி அனுமதிபெற்றுத் துரியோதனன் அரண்மனைக்குச் சென்றதும்.)**

பிறகு, பகைவர்களை வாட்டுபவரான அந்த ஜனார்த்தனர், விதுரரைச் சந்தித்தபிறகு, பிற்பகலில், அத்தையான குந்தியைக் குறித்து சென்றார். அந்தக்குந்தியானவள் பிரகாசிக்கின்ற சூரியனுக்கு ஒப்பான ஒளியையுடையவராக வருகின்ற வாஸுதேவரைப் பார்த்தவுடன், அவர் கழுத்தைக்கட்டிக்கொண்டு புத்திரர்களை நினைத்துக் கதறினாள். அவள் அந்தப்பலசாலிகளான பாண்டவர்களுடைய மத்தியில் (அவர்களுடன்) ஸஞ்சரித்தவரும் விருஷ்ணிவம்சத்தில் பிறந்த

வருமான கோவிந்தரை நெடுங்காலத்திற்குப்பிறகு பார்த்தமையால், கண்ணீர்சொரிந்தாள். அவள் யுத்தம் செய்பவர்களுக்குப் பதியும் ஆதித்தியம்செய்யப்பெற்றவரும் உட்கார்ந்தவருமான கண்ணபிரானை நோக்கிக் கண்ணீரால் நிறைந்ததும் சுண்டினதுமான முகத்துடனும் தழுதழுத்தகுரலுடனும் சொல்லலுற்றாள்.

'இளமைமுதற்கொண்டே குருக்களுடைய பணிவிடையில் பற்றுள்ளவர்களும், ஒருவருக்கொருவர் நண்பர்களும் (நல்லாராலும்) அன்புக்கொள்ளப்பட்டவர்களும் ஸமமான ஞானமுடையவர்களும் ஜனங்களுக்குப் பழகுவதற்குத் தக்கவர்களுமான இந்தப்பாண்டவர்கள் வஞ்சனையினால் 'ராஜ்யத்திலிருந்து நழுவும்படி செய்யப்பட்டு நிர்ஜனமான (வனத்தை) அடைந்தார்கள். கோபத்தையும் மகிழ்ச்சியையும் விலக்கினவர்களும் பிராம்மணர்களுக்கு ஹிதமானவர்களும் உண்மையையே உரைப்பவர்களுமான பார்த்தர்கள் (ராஜ்யமுதலிய) இஷ்டவஸ்துவையும் ஸுகானுபவத்தையும்விட்டு அழுகிறவளான என்னையும் விட்டு வனம்சென்று என்னுடையமனத்தை அடியோடு கவர்ந்தார்கள். அப்பா! கேசவ! சிங்கங்களாலும் புலிகளாலும் யானைகளாலும் சூழப்பட்ட பெருங்காட்டில் அதற்குத் தகாதவர்களும் மகாத்மாக்களுமான பாண்டவர்கள் எவ்விதம் வஸித்தார்களோ? சிறுவர்களும் பிதாவை இழந்தவர்களும் என்னால் எப்பொழுதும் பிரியமாக வளர்க்கப்பட்டவர்களுமான அவர்கள் பெரியகாட்டில் தாய்தந்தைகளைப் பாராமல் எப்படி வஸித்தார்களோ? கேசவ! பாண்டவர்கள் சிறுபிராயமுதற்கொண்டு சங்கம்துந்துபி இவற்றினுடைய பெரியசப்தங்களாலும் மிருதங்கங்களாலும் புல்லாங்குழல்களுடைய சப்தங்களாலும் எழுப்பப்பட்டார்கள். ஜனார்த்தன! எவர்கள் அப்பொழுது யானைகளின் பிளிறலினாலும் குதிரைகளுடைய கனைப்பினாலும் தேருருளைகளுடைய ஒலிகளாலும் வேணு வீணைகளுடைய ஒத்தநாதத்துடன்கூடியதும் புண்யாஹகோஷத்துடன் கலந்ததுமான சங்கம் பேரிகளின் முழக்கத்தினாலும் பிராம்மணர்களால் கொண்டாடப்படுகிறவர்களாகி எழுப்பப்பட்டார்களோ, வஸ்திரங்களாலும் ரத்தினங்களாலும் ஆபரணங்களாலும் ப்ராம்மணர்களைப் பூஜிக்கின்றவர்களும், பூஜிக்கத்தக்கவர்களும் பூஜிக்கப்பட்டவர்களும் துதிக்கின்றவர்களுமான (அவர்களாலே) மகிழ்விக்கப்பட்டவர்களுமான எவர்கள் மகாத்மாக்களான பிராமணர்களுடைய மங்களத்துடன் கூடியவாக்குக்களாலே உப்பரிகைகளில் எழுப்பப்பட்டார்களோ, அவர்கள் பெரியகாட்டில் மான்தோல்களில் படுத்துத் துஷ்டமிருகங்களு

டைய குரூரமான சப்தத்தைக்கேட்டு அதற்குத் தகாதவர்களானபடி யால் நித்திரையை அடைந்திரார். மதுஸூதன! இன்பமான பேரி மிருதங்கங்களின்சப்தங்களாலும் வேணுசங்கங்களுடைய சப்தங்க ளாலும் மகளிருடைய பாடலோசைகளாலும் துதிக்கின்றவந்திமாகத ஸூதர்களாலும் எழுப்பப்பட்டவர்கள் பெருங்காடுகளில் கொடிய மிருகங்களுடைய 'சப்தத்தினால் எவ்விதம் எழுப்பப்பட்டார்கள்? கிருஷ்ண! லஜ்ஜையுடன் கூடினவனும் தவறாத தைரியத்தையுடைய வனும் அடக்கமுடையவனும் பிராணிகளிடம் தயையுள்ளவனும் விருப்புவெறுப்புக்களை வசப்படுத்திப் பெரியோர்களின் வழியைப் பின்பற்றியிருப்பவனும் அம்பரீஷன், மாந்தாதா, யயாதி, நகுஷன், பரதன், திலீபன், உசீநரனின்புத்திரனான சிபி என்கிற முற் காலத்து ராஜரிஷிகளுடைய தாங்கமுடியாத சுமையைத் தாங்குகிற வனும் நற்குணநற்செய்கைகளையுடையவனும் தர்மத்தையுணர்ந்த வனும் ஸத்தியமான ப்ரதிஜ்ஞையுடையவனும் எல்லாக்குணங் களும் பொருந்தியவனும் மூவுலகத்திற்கும் அரசனாகக்கூடியவனும் பகைவர்களை உண்டாகாதவனும் தர்மத்தில் புத்தியையுடை யவனும் களங்கமற்ற பொன்னையொத்த காந்தியையுடையவனும் தர்மத்தினாலும் சாஸ்திரத்தினாலும் நடையினாலும் எல்லாக்கௌரவ வர்களிலும் சிறந்தவனும் பார்க்கப்பிரியமாயிருப்பவனும் நீண்ட புஜங்களையுடையவனுமான யுதிஷ்டிரன் எப்படி இருக்கிறான்? மது ஸூதனா! ஜனார்த்தனா! பதினாயிரம் யானையின் பலமுடையவனும்வாயு வுக்கு நிகரான வேகமுள்ளவனும் மிக்கபலசாலியும் எப்பொழுதும் பகைவரைப் பொறாதவனும் பிராதாவுக்குப் பிரியமாயிருப்பவனும் பிரியத்தைச் செய்பவனும் குரோதவசர்களையும் ஞாதிகளுடன் கூடின கீசகனையும் ஹிடிம்பனையும் பகனையும் கொன்றவனும் சூரனும் பராக் கிரமத்தில் இந்திரனை ஒத்தவனும் பலத்தில் வாயுவுக்குச்சமானனும் கோபத்தில் ருத்திரருக்குநிகரானவனும் அடிப்பவர்களில் சிறந்தவ னும் பாண்டவனும் பொறாதவனும் பகைவர்களை வாட்டுகிறவனும் கோபத்தையும் பலத்தையும் பொறுமையையும்விட்டு மனத்தை ஜயித்தவனாகிப் பிராதாவினுடைய கட்டளையிலிருக்கின்றவனும் ஒளி மிகுந்தவனும் மகாத்மாவும் மிகவும் சிறந்தவனும் அளவற்ற வல்லமை யுடையவனும் பயங்கரமான தோற்றமுடையவனுமான அந்தப் பீமஸேனனைப்பற்றிச் சொல்லு. விருஷ்ணிகுலத்திலுதித்தவனே! விருகோதரன் இப்பொழுது எப்படியிருக்கிறான்? கிருஷ்ண! பரிகம் போன்ற கைகளையுடையவனும் பலசாலியும் பாண்டவர்களுக்கு நடுவி

ளுள்ளவனுமான அவன் எப்படி இருக்கிறான்? காலம்சென்றவனும் ஆயிரம்கைகளுள்ளவனுமான அர்ஜுனனையுமே எந்நாளும் அவமதிக்க விரும்புகிற இரண்டுகைகளையுடையவனும் ஒரே வேகத்தினால் ஐந் நூறுபாணங்களை விடுகிறவனும் பாணத்திலும் அஸ்திரத்திலும் கார்த்தவீர்யனென்கிற அரசனுக்கு நிகரானவனும் ஒளியினால் சூர்யனுக்குச் சமானனும் அடக்கத்தில் மகரிஷிகளுக்கு நிகரானவனும் பொறுமையில் பூமியை ஒத்தவனும் மஹேந்திரனுக்குச் சமமான பராக்கிரமமுடையவனும் வீர்யத்தினாலே எல்லா அரசர்களிடமிருந்தும் பெரிதும் விளங்குகின்றதும் பிரஸித்தமுமான மேலானராஜ்யத்தைக் கௌரவர்களுக்காகக் கவர்ந்தவனும் எல்லாப்பாண்டவர்களும் அடுத்திருக்கும் கைவன்மையுள்ளவனும் எல்லாத் தேராளிகளிலும் சிறந்தவனும் தவறாதபராக்கிரமத்தையுடையவனும் பாண்டுபுத்ரனுமான அர்ஜுனன் எப்படிஇருக்கிறான்? அச்சுத! போரில் எதிர்த்த ஒருவனையும் உயிருடன் மீண்டுபோகவிடாதவனும் எல்லாப்பிராணிகளையும் வெல்லுகிறவனும் எல்லாப்பிராணிகளுக்கும் வெல்லமுடியாதவனும் தேவர்களுக்கு இந்திரன்போலப் பாண்டவர்களுக்கு அடுக்குமிடமாயிருப்பவனும் உனக்கு ஸகோதரன் போன்றவனும் நண்பனுமாயிருக்கிற தனஞ்சயன் இப்பொழுது எப்படி இருக்கிறான்? கிருஷ்ண! ஸஹதேவனானவன், எல்லாப் பிராணிகளிடத்திலும் தயையுள்ளவனும் லஜ்ஜையைப் பாராட்டுகிறவனும் சிறந்த அஸ்திரங்களை அறிகின்றவனும் மென்மைக் குணமுடையவனும் மென்மையான சரீரமுடையவனும் தர்மசீலமுடையவனும் எனக்குப்பிரியமானவனும் பெரிய வில்லுடையவனும் சூரனும் யுத்தத்தில் விளங்குகிறவனும் உடன்பிறந்தார்களுக்குப் பணிவிடை செய்பவனும் தர்மத்திலும் அர்த்தத்திலும் ஸமர்த்தனும் தருணனுமாயிருப்பவன். மதுஸூதன! நல்ல நடையுடையவனும் மகாத்மாவுமான அவனுடைய நடையை ஸகோதரர்கள் எப்பொழுதுமே கொண்டாடுகின்றனர். மூத்தோர்களைச் செழிக்கச் செய்கிறவனும் வீரனும் யுத்தம் செய்கிறவர்களுக்குப் பதியும் எனக்குப் பணிவிடைசெய்பவனும் மாத்திரியின் புத்திரனுமான அவனைப்பற்றி எனக்குச் சொல்லு. கிருஷ்ண! மிருதுவான சரீரத்தையுடையவனும் தருணனும் சூரனும் அழகிய தோற்றமுள்ளவனும் பாண்டவனும் எல்லாப் பிராதாக்களுக்குமே வெளியில் ஸஞ்சரிக்கின்ற இனியஉயிர்போன்றவனும் விசித்திரமாக யுத்தம் செய்பவனும் பெரிய வில்லுடையவனும் மிக்க பலமுடையவனும் ஸுகமாக வளர்க்கப்பட்டவனும் எனது குழந்தையுமான அந்த நகு

லன் க்ஷேமமா? தோள்வலியமைந்தவனே! ஸுகத்திற்குத் தக்கவனும் துக்கத்திற்குத் தகாதவனும் மென்மையான சரீரமுடையவனும் மகாரதனுமான நகுலனை மறுபடியும் எப்போதாவது பார்ப்பேனு? வீர! ஒரு நொடிப்பொழுதுகூட நகுலனைப் பிரிந்து தைரியத்தை அடையேன். அப்படிப்பட்டவள் இப்பொழுது ஜீவிக்கிறேன். என்னைப் பார். ஜனார்த்தன! நல்ல குலத்தில் பிறந்தவளும் அழகு பொருந்தியவளும் எல்லாக் குணங்களோடும் கூடினவளுமான திரௌபதியானவள் எனக்கு எல்லாப் புத்திரர்களையுங்காட்டிலும் மிகவும் பிரியமானவள். புத்திரர்களால் கிடைக்கும் லோகத்தைக்காட்டிலும் பதிகளால் கிடைக்கும் லோகத்தை விரும்புகிறவளும் உண்மையே உரைக்கிறவளுமான (அவள்) பிரியமான புத்திரர்களை விட்டுப் பாண்டவர்களை அனுஸரிக்கின்றுள். அச்சுத! பெரியவம்சத்தில் பிறந்தவளும் விரும்பத்தக்க எல்லாப் போக்யவஸ்துக்களாலும் மிகவும் பூஜிக்கப்பட்டவளும் ராஜமாதேவியும் ஸகலகல்யாணங்களையும் உடையவளுமான திரௌபதியானவள் எப்படி இருக்கிறுள்? சூரர்களும் அக்னிக்குச் சமானர்களும் (பகைவர்களை) அடிக்கின்றவர்களும் பெரியவில்லுடையவர்களுமான ஐந்துபதிகளையுடையவளாயிருந்தும், அவள் துக்கத்தை அடைகின்றுள். பகைவர்களை அடக்குகின்றவனே! ஸத்தியத்தையே உரைப்பவளும் மிகவும் கிலேசத்தை அடைந்தவளுமான திரௌபதியைப் புத்திரர்முதலானவர்களுடன் நான் பாராமலிருப்பது இது பதினான்காவது வருஷம். அவ்விதம் (பரிசுத்தமான) நடையுடையவளான திரௌபதியானவள் அழிவற்ற ஸுகத்தையடையவில்லையேயானல் மனிதன் புண்ணியகர்மங்களினால் ஸுகத்தை அடைகிறுனென்பது நிச்சயமில்லை. எனக்குத் திரௌபதியைக்காட்டிலும் அர்ஜுனனும் யுதிஷ்டிரனும் பீமஸேனனும் நகுலஸஹதேவர்களும் பிரியர்களல்லர். ஸபையை அடைந்தவளான அவளைப் பார்த்தேனென்பதையும், ஸ்திரீகளுக்குரிய தர்மத்தோடிருப்பவளும் கோபம்போராசைகளைப் பின்பற்றினவனை துஷ்டனாலே இழுத்துவரப்பட்டவளும் ஒற்றைவஸ்திரத்துடன் ஸபையை அடைந்தவளும் மாமனார்களுடைய ஸமீபத்தையடைந்தவளுமான திரௌபதியை எல்லாக்கௌரவர்களும் பார்த்தார்களென்பதையும் காட்டிலும் அதிகமான துக்கம்ஒன்றும் எனக்கு முன்னம் உண்டானதில்லை. அவ்விடத்திலேயேயிருந்த திருதராஷ்டிரரும், மஹாராஜரான பாஹ்லிகரும், கிருபரும், ஸோமதத்தனும், கௌரவர்களும் செயலற்றிருந்தார்கள். அந்த ஸபையிலுள்ள எல்லாரிலும் விதுரரை

நான் கொண்டாடுகின்றேன். மனிதன் ஒழுக்கத்தாலன்றோ சிறந்தவனாகிறான்; செல்வத்தாலுமில்லை; கல்வியினாலுமில்லை. கிருஷ்ண! பேரறிவாளரும் ஆழ்ந்த எண்ணமுள்ளவரும் மகாத்மாவுமான அந்த விதுரருடைய சீலமாகிற அலங்காரமானது உலகங்களில் பரவி இருக்கிறது' என்றாள்.

அவள், வந்தவரான கோவிந்தரைப் பார்த்ததனால் சந்தோஷத்தையடைந்தவளும் சோகத்தால் பீடை அடைந்தவளுமாகிப் பலவிதமான எல்லாத்துக்கங்களையுமே சொல்லலானாள். அவள், 'பகைவர்களை அடக்குபவனே! முன்னோர்களான கெட்ட அரசர்களாலே செய்யப்பட்ட சொக்கட்டான் விளையாட்டும் வேட்டையும் இவர்களுக்கு ஸுகத்தை அளிக்குமா? பகைவரைவாட்டுகிறவனே! கிருஷ்ணையானவள் ஸபையில் கௌரவர்களுக்கு எதிரில் திருதராஷ்டிரபுத்திரர்களாலே மரணத்திற்குச் சமமாகத் துன்பத்தை அடைந்ததும், நகரத்திலிருந்தும் வெளியாக்கப்பட்டதும் (வனத்தைக் குறித்துச்) சென்றதும் என்னை எரிக்கின்றன. ஜனார்த்தன! பலவிதமான துக்கங்களுக்கு இருப்பிடமாயிருக்கிறேன். மாதவ! பாலர்களுடைய அஜ்ஞாதவாஸமும் (ராஜ்யத்தைக்கொடாததான) நிர்ப்பந்தமும் ஏற்பட்டன. பகைவரைவாட்டுபவனே! இப்போது, பதினான்குவருஷம் துரியோதனனாலே புத்திரர்களுடன்கூட அவமதிக்கப்பட்டேனென்பது எனக்கு மிகுதியான துன்பமாகாது. (ஸுகமானது) புண்ணியபலத்தின் நாசரூபமாகுமேயானால், துக்கத்திலிருந்தும் (பாபம்தொலைவதால்) எங்களுக்கு ஸுகமே ஏற்படும். கிருஷ்ண! எனக்கு ஒருபொழுதும் பாண்டவர்களிடத்திலும் திருதராஷ்டிர புத்திரர்களிடத்திலும் தாரதம்யம் உண்டாகவில்லை. அந்த ஸத்தியத்தினால், பாண்டவர்களுடன் உன்னைச் சத்துருக்களைக்கொன்றவனும் ஜயலக்ஷ்மியினால் வரிக்கப்பட்டவனும் (நடக்கப்போகின்ற) இந்தயுத்தத்திலிருந்தும் விடுபட்டவனுமாகப் பார்க்கக்கடவேன். இவர்கள் பிறரால் வெல்லமுடியாதவர்கள். இவர்களுடையவை எல்லாம் அப்படிப்பட்டவையே. ஆனால், தாதாவென்று பிரஸித்திபெற்றவர்களால் தனம்கொடுக்கப்படுவதுபோல எவரால் குந்திபோஜருக்கு நான் கொடுக்கப்பட்டேனோ அந்தத்தந்தையையே நிந்திப்பேன்; என்னையும்நிந்தியேன்; துரியோதனனையும் நிந்தியேன். (குந்திபோஜருக்கு) நண்பரான உன்னுடையபிதாமஹர் சிறுமியும் கையில் பந்துவைத்து விளையாடுகிறவளுமான என்னை (த்தமக்கு) நண்பரும் மகாத்மாவுமான குந்திபோஜருக்குக் கொடுத்தார். பகை

வரை வாட்டுபவனே ! கிருஷ்ண ! அப்படிப்பட்ட நான் பிதாவினாலும் மாமனார்களாலும் அவமதிக்கப்பட்டவளாகி மிகுந்ததுக்கத்தை அடைந்தேன். என்பிழைப்புக்கு என்ன பயன் ? அர்ஜுனனைப் பெற்றபொழுது இராத்திரியில் எந்தவாக்கு என்னைநோக்கி, 'உன்னுடையபுத்திரன் பூமியை ஜயிக்கப்போகிறான் ; இவனுடைய புகழ் ஸ்வர்க்கத்தைத்தொடும் ; குந்திபுத்ரனான தனஞ்சயன் பிராதாக்களுடன் பெரிதானயுத்தத்தில் கௌரவர்களைக்கொன்று ராஜ்யத்தை அடைந்து மூன்று அஸ்வமேதங்களைச்செய்யப்போகிறான்' என்று சொல்லிற்றோ, அந்தவார்த்தையைப்பற்றி நான் குற்றங் கூறவில்லை. (எல்லாவற்றையும்) செய்கிறவனும், மஹானுமான கிருஷ்ணனுக்கு நமஸ்காரம். தர்மம் பிரஜைகளை எந்நாளும் தரிக்கின்றது. கிருஷ்ண ! தர்மமிருக்குமேயானால் அந்தவாக்குச் சொன்னபடியே நீயும் எல்லாவற்றையும் செய்துமுடிப்பாய். மாதவ ! துயரத்தைக் (கொடுப்பதில்) என்னைப் புத்திரர்களை விட்டிருப்பது எரிப்பதுபோல, வைதவ்யமும் தனநாசமும் (சத்துருக்களுடைய) வைரமும் எரிக்கவில்லை. காண்டீவமென்கிற வில்லையுடையவனும் ஆயுதமெடுத்தவர்கள் எல்லாரினும் மிகச்சிறந்தவனுமான தனஞ்சயனைப் பாராத எனது மனத்திற்கு (த்தாப) சாந்தி ஏது ? கோவிந்த ! இதுவரை பதினான்கு வருஷம் யுதிஷ்டிரனையும் தனஞ்சயனையும் இரட்டையர்களையும் விருகோதரனையும் பாராத எனது மனத்திற்கு ஆறுதல் ஏது ? ஜனார்த்தன ! மனிதர்கள், உயிருடன் காணாமற்போனவர்களுக்கு (ப்பன்னிரண்டு வருஷங்களாகிவிட்டால்) ஸ்ராத்தம் செய்கின்றனர். எனக்கு அவர்களும் அவர்களுக்கு நானும் மரித்தவர்களாயிருக்கிறோம். மாதவ ! அரசனும் தர்மாத்மாவுமான யுதிஷ்டிரனை நோக்கி, 'புத்திரா ! உனக்கு மிக்க தர்மம் குறைந்து போகிறது ; வீணாக்காதே' என்று (நான் சொன்னதாகச்) சொல்லு. வாஸுதேவ ! எவள் பிறரை அடுத்தவளாய்ப் பிழைக்கிறாளோ அவளை நிந்திக்கவேண்டும். கெஞ்சிப் பிழைக்கும் பிழைப்பைக்காட்டிலும் நிலையற்ற பிழைப்பே மேலானது. பிறகு, தனஞ்சயனையும் எந்நாளும் முயற்சியுள்ள விருகோதரனையும் நோக்கி, 'க்ஷத்திரியஸ்திரீயானவள் எதற்காக (ப்புத்திரனை) ப்பெறுகிறாளோ அதற்குரிய காலம் இப்பொழுது வந்துவிட்டது. அந்தக்காலம் வந்தும் அது வீணாகப் போக்கப்படுமானால் உலகத்தில் மதிக்கப்பட்டவர்களாயிருந்தும் மிகுந்த கொடுஞ்செயலைச் செய்தவர்களாவீர்கள். கொடுஞ்செய்கையுள்ள உங்களைப் பலவர்ஷங்கள் (எந்நாளும்) விட்டுவிடுவேன். காலம் நேரிட்டபொழுதோ உயிரும் விடத்தக்கதென்று

சொல்லு. எப்பொழுதும் க்ஷத்திரிய தர்மத்தில் பற்றுள்ளவர்களான மாத்திரியின் புத்திரர்களிடம், 'உயிரைக்காட்டிலும் பராக்கிரமத்தால் ஸம்பாதிக்கப்பட்ட போகங்களையே வேண்டுங்கள்' என்று சொல்லு. புருஷோத்தமனே! பராக்கிரமத்தால் ஸம்பாதிக்கப்பட்ட செல்வங்களல்லவோ க்ஷத்திரிய தர்மத்தால் ஜீவிப்பவனான மனிதனுடைய மனத்தை எப்பொழுதும் ஸந்தோஷிக்கச் செய்கின்றன. புஜபலமிக்கவனே! ஆயுதமெடுத்தவர்களெல்லாரிலும் சிறந்தவனும் பாண்டுவின்புத்திரனும் வீரனுமான தனஞ்சயனை அடைந்து,' திரௌபதியின் மார்க்கத்தில் நட' என்று சொல்லு. உன்னால் அவர்கள் நன்கு அறியப்பட்டவர்களல்லரோ? அந்தகர்கள்போல அந்தப்பீமார்ஜுனர்கள் சினமடைந்தால் தேவர்களையும் பரலோகமடையச் செய்வார்களல்லரோ? அந்தக்கிருஷ்ணை ஸபையை அடைந்தாளென்கிற அவமானம் அவர்களுக்கே. துச்சாஸனனும் கர்ணனும் கடுமையான வார்த்தைகளைச் சொன்னார்கள். துர்யோதனன் தன்மதிப்புள்ள பீமஸேனனை [1] எதிர்த்தான்; அதற்குண்டான பயனைக் கௌரவர்களில் சிறந்தவர்கள் பார்த்துக்கொண்டிருக்கையில் பார்ப்பான். விருகோதரனானவன், பகைமைகொண்டால் தணியமாட்டானல்லனோ? பகைவரை மெலிவிக்கின்ற அவன் பகைவர் கூட்டங்களை நாசம் செய்கிறவரையில் வெகுகாலமானாலும் அவனுடைய வைரம் தணியாதன்றோ? எனக்கு ராஜ்யத்தை அபகரித்ததும் துக்கத்திற்குக் காரணமாகவில்லை. சூதாட்டத்தில் அபஜயமும் துக்கத்திற்குக் காரணமாகவில்லை. புத்திரர்கள் காடுசென்றதும் துக்கத்திற்குக் காரணமாகவில்லை. பெருந்தன்மைபொருந்தியவளும் யுவதியுமான அவள் ஒற்றைவஸ்திரத்துடன் ஸபையை அடைந்து கடுமையான வார்த்தைகளைக் கேட்டாளென்பதைக்காட்டிலும் எது பெரிதான துக்கம்? வீட்டுக்கு விலக்கானவளும் சிறந்த இடையையுடையவளும் எப்பொழுதும் க்ஷத்திரியதர்மத்தில் பற்றுள்ளவளுமான கிருஷ்ணையானவள் நாதர்களுள்ளவளாயிருந்தும், அந்தஸமயத்தில், [2] நாதனை அடையவில்லை. மதுஸூதன! புத்ரருடனிருக்கும் எனக்கு நீயும் பலவான்களில் சிறந்தவனான பலராமனும் மகாரதனான பிரத்யும்னனும் நாதர்கள். புருஷோத்தமனே! அப்படிப்பட்ட நான், அணுகமுடியாத பீமன் உயிருடனிருக்கையில், அர்ச்சுனனும் ஓடாமலிருக்கையில், இவ்விதமான துயரத்தைப் பொறுப்பேனா?' என்றாள். அதன்பிறகு, புத்திரர்கள் விஷயமான

1 'நிந்தித்தான்' என்பது கருத்து. 2 காப்பாற்றுகிறவன்.

மனவருத்தத்தால் வியாபிக்கப்பட்டவளும் துக்கிக்கின்றவளும் தமது பிதாவுக்குத் தங்கையுமான குந்தியை அர்ஜுனனுக்குத் தோழரான வாஸுதேவர் தேற்றலானார்.

வாஸுதேவர், 'அத்தையே! உலகங்களில் உன்னைப்போன்ற ஸ்திரீ யாரிருக்கிறாள்? சூரஸேனராஜருக்குப் புத்திரியும் மகாகுலத்தில் பிறந்தவளுமான நீ ஒருமடுவிலிருந்து மற்றொருமடுவை அடைவதுபோல அஜமீடகுலத்தை அடைந்தவளாயிருக்கிறாய். ராஜமாதேவியும் ஸகல கல்யாணங்களும் அமைந்தவளும் பர்த்தாவினால் மிகவும் பூஜிக்கப்பட்டவளும் வீரர்களைப்பெற்றவளும் வீரரின் மனைவியுமான நீ ஸகலகுணங்களும் பொருந்தினவளாயிருக்கிறாய். ஓ! பேரறிவுள்ளவளே! உன்னைப்போன்றவள் ஸுகதுக்கங்களைப் பொறுக்கத் தக்கவள். பார்த்தர்கள், நித்திரை சோம்பல் கோபம் ஸந்தோஷம் பசி தாகம் பனி வெய்யில் இவைகளை ஜயித்து எந்நாளும் வீரர்களுக்குரிய ஸுகத்தில் பற்றினவர்களாயிருக்கின்றனர். பார்த்தர்கள் எந்நாளும் கிராம்ய (= அற்ப) மான ஸுகத்தைவிட்டு வீரர்களுக்குரிய ஸுகத்தில் பிரியமுள்ளவர்களாயிருக்கின்றனர். மிக்க ஊக்கமுடையவர்களும் மிக்க பலசாலிகளுமான அவர்கள் ஸ்வல்பத்தால் மகிழார். தீரர்கள் (குளிர்காற்றுமுதலான) அதிகமான துன்பங்களையும் மிகுதியான இம்மைப் போகங்களையும் (அனுபவித்து) [1] முடிவாயுள்ளதை ஸேவிக்கின்றனர். கிராம்ய (= அற்ப) ஸுகத்தில் பிரியமுள்ளவர்கள் (அற்பச் செல்வமாகிய) மத்தியமத்தை ஸேவிக்கின்றனர். தீரர்கள் முடிவானவைகளில் மகிழ்கின்றனர். அவர்கள் நடுத்தரமானவைகளில் மகிழவில்லை. அந்தம் நடுத்தரம் இரண்டில் அந்தத்தின் பிராப்தியை ஸுகமாகவும் நடுத்தரத்தின்பிராப்தியைத் துக்கமாகவும் சொல்லுகின்றனர். பாண்டவர்கள் கிருஷ்ணையுடன் உன்னை நமஸ்கரிக்கின்றனர். அவர்கள் தங்களைக் குசலமுடையவர்களாகத் தெரிவித்து ரோகமில்லாமையைச் சொன்னார்கள். நீ, சீக்கிரத்தில், ரோகமற்றவர்களும் எல்லா உலகத்துக்கும் அரசர்களும் பகைவர்களைக்கொன்றவர்களும் வெற்றிமடந்தையால் சூழப்பட்டவர்களும் விருப்பமனைத்தும் நிறைவேறினவர்களுமான பாண்டவர்களைப் பார்க்கப்போகிறாய்' என்றார்.

இவ்விதம் தேறுதல்செய்யப்பட்டவளான குந்தியானவள் புத்திரர்கள் விஷயத்தில் உண்டான மனவருத்தங்களால் தளர்ச்சி அடைந்தவளாகிப் புத்திரநாசத்தாலுண்டான மயக்கத்தையடக்கிக்

1 நாட்டை அல்லது காட்டை அடைகின்றனர்.

கொண்டு, ஜனார்த்தனரை நோக்கி, 'மதுஸூதன! கிருஷ்ண! பகைவரை வாட்டுபவனே! நீண்ட கைகளையுடையவனே! எது எது அவர்களுக்கு நன்மையாகுமோ, நீ எப்படி எப்படி நினைக்கிறாயோ அதை அதைத் தர்மத்துக்குக் குறைவில்லாமலும் வஞ்சனையில்லாமலும் அப்படி அப்படிச் செய். கிருஷ்ண! ஸத்தியத்திலும் குலத்திலும் மித்திரர்களிடத்தில் உறுதியாயிருப்பதிலும் புத்தியிலும் பராக்கிரமத்திலும் உறுதியாகவுள்ள உன்னுடைய பெருமையை அறிந்தவளாயிருக்கிறேன். எங்கள் குலத்தில் நீயே தர்மம். நீயே ஸத்தியம். நீயே பெரியதவம். நீயே காப்பவன். நீயே பெரிய பிரம்மம். எல்லாம் உன்னிடம் நிலைத்திருக்கின்றன. நீ சொல்லிய படியே இது உன்னிடத்தில் உண்மையாகும். (ஒருவராலும்) ஜயிக்க முடியாதவனே! மாதவ! விருஷ்ணிகுலத்தில் பிறந்தவனே! கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் உலகங்களுக்கும் இந்த எல்லாவற்றிற்கும் நீயே கதியாயிருக்கிறாய். கேசவ! உன்னுடைய பிரபாவமும் புத்தியின்வீர்யமும் அப்படிப்பட்டவை' என்று (மறுமொழி) உரைத்தாள். மிக்கபுஜபலமுள்ள கிருஷ்ணரும் அவளிடம் சொல்லிக் கொண்டு, (அவளைப்) பிரதக்ஷிணமும் செய்துவிட்டு, துரியோதனனுடைய மாளிகையைக்குறித்துப் புறப்பட்டார்.

## தொண்ணூற்றோராவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(துரியோதனன் கோவிந்தரைக் கௌரவித்து விருந்துக்கழைக்க அவர் மறுத்ததும், அவன் காரணம்கேட்க அவர் உத்தரம்கூறி விதுரர்மாளிகை சென்று விருந்து உண்டதும்.)

பகைவர்களை அடக்குகிறவரும் சூரனுக்குப் பௌத்திரருமான கோவிந்தர் குந்தியினிடம் அனுமதிபெற்று, (அவளை) வலம்வந்து, துரியோதனனுடைய அரண்மனையை நோக்கிச்சென்றனர். அவர், சிறந்தகாந்தியுள்ளதும் இந்திரனுடைய வீட்டிற்கு ஒப்பானதும் பலவிதமான ஆஸனங்களுடன்கூடினதுமான (அந்தக்கிருகத்தில்) நுழைந்தார். மிக்க புகழையுடைய அவர், வாசலிலிருப்பவர்களால் தடுக்கப்படாமல் அந்தமாளிகையினுடைய மூன்றுகட்டுக்களையும் தாண்டி, பிறகு ஜலத்தைச்சுமக்கின்ற மேகத்திற்கு நிகரானதும் பர்வதத்

தின் கொடுமுடி போலுயர்ந்ததும் ஒளியினால் விளங்குகிறதுமான உப்பரிகையில் ஏறினார். அவ்விடத்தில் ஆயிரம் அரசர்களாலும் கௌரவர்களாலும் சூழப்பட்டவனும் நீண்டபுஜங்களையுடையவனும் ஆஸனத்திலிருப்பவனுமான துரியோதனனைப் பார்த்தார். அவர் அவனுடைய ஸமீபத்தில் ஆஸனத்திலிருப்பவர்களான துச்சாஸனன் கர்ணன் ஸௌபலபுத்திரனான சகுனி இவர்களையும் கண்டார். தாசார்ஹரானமதுஸூதனர் வரும்பொழுது, பெரும்புகழுடைய துரியோதனன் மந்திரிகளுடன் அவரைப் பூஜிக்கிறவனாகி எழுந்திருந்தான். அவ்விடத்தில் விருஷ்ணிகுலத்தில் பிறந்தவரான கேசவர், மந்திரிகளுடன்கூடின துரியோதனனோடும் மற்ற அரசர்களோடும் பிராயத்திற்குத்தக்கபடி கண்டுபேசினார். அவ்விடத்தில் அவர் பொன்மயமானதும் நன்கு அலங்கரிக்கப்பட்டதும் பலவிதமான விரிப்புக்கள் விரிக்கப்பட்டதுமான மஞ்சத்தில் இருந்தார். அப்பொழுது, துரியோதனன் அந்தஜனார்த்தனரிடம் கோவையும் மதுபர்க்கத்தையும் (பாத்திய) ஜலத்தையும் விடுதியையும் ராஜ்யத்தையும் தெரிவித்தான். துரியோதனனுடைய கட்டளையினாலே, எல்லாரத்தினங்களாலும் அலங்கரிக்கப்பட்ட ஸர்வதோபத்ரமென்கிற ஆஸனமானது கோவிந்தருக்காகவே நன்கு அமைந்ததாயிருந்தது. அந்த ஆஸனத்திலிருப்பவரும் தெளிவான ஆதித்யனுக்கொப்பான காந்தியுடையவருமான கோவிந்தரை எல்லாக் கௌரவர்களும் அரசர்களோடுகூடிச் சூழ்ந்திருந்தனர். அப்பொழுது, துரியோதனராஜன் வெற்றியடைகிறவர்களில் சிறந்தவரான வார்ஷ்ணேயரைப் போஜனத்திற்கு அழைத்தான்; அவர் ஏற்றுக்கொள்ளவில்லை. பிறகு, குருவம்சத்தில் பிறந்த துரியோதனன், கௌரவர்களுடையஸபையில் கர்ணனைக் கலந்துகொண்டு கேசவரை நோக்கி, முதலில் மென்மையாகவும் முடிவில் மோசமுள்ளதாகவும் சொல்லலானான்.

'ஓ! ஜனார்த்தனரே! உமக்காகச் சேகரிக்கப்பட்ட அன்னங்களையும் பானங்களையும் வஸ்திரங்களையும் சயனங்களையும் நீர் என்ன காரணத்தால் அங்கீகரிக்கவில்லை? மாதவரே! இருவருக்கும் உதவியைச்செய்பவரும் இருவருடைய நன்மையிலும் பற்றுள்ளவரும் (இருவருக்கும்) ஸம்பந்தியும் திருதராஷ்டிரருக்குப் பிரியருமாயிருக்கிறீர். ஓ! கோவிந்தரே! எல்லா விதத்திலும் தர்மார்த்தங்களை உள்ளபடி அறிகிறீர். சக்கரத்தையும் கதையையும் தரிப்பவரே! (அப்படியிருக்க) பெற்றுக்கொள்ளாத அந்த விஷயத்தில் காரணத்தைக்கேட்க விரும்புகிறேன்' என்றான்.

இவ்விதம் சொல்லப்பட்டவரும் பெரிய மனத்தையுடையவரும் புண்டரீகாக்ஷருமான கோவிந்தர், மாரிக்காலத்தில் கிளம்பின மேகத்திற்கு நிகரானத்வனியையுடையவராய் நீண்டகையை உயர்த்திக்கொண்டு, அரசனை நோக்கி, உரக்க உச்சரிக்கப்பட்டதும் உள்ளே விழுங்கப்படாததும் விடப்படாததும் (ஒன்றோடொன்று) நெருங்காததும் காரணத்துடன்கூடியதும் மிகச்சிறந்ததுமான வாக்கியத்தை மறுமொழியாக உரைத்தனர். கேசவர், 'பாரத! தூதர்கள் காரியம்நிறைவேறினபிறகு புஜிக்கின்றனர்; பூஜையையுமே பெறுகின்றனர். (ஆகையால், நான் வந்த) காரியம் நிறைவேறினபிறகு, மந்திரிகளுடன் என்னை நன்கு பூஜிப்பாய்' என்றார். இவ்விதம் சொல்லியதைக்கேட்ட துரியோதனன், ஜனார்த்தனரைநோக்கி, 'மதுஸூதனரே! தாசார்ஹரே! எங்கள்விஷயத்தில் உம்மாலே தகாதகார்யம் நினைக்கத்தக்கதில்லை. காரியத்தை நிறைவேற்றிக் கொண்டவரோ (காரியத்தை நிறைவேற்றிக்) கொள்ளாதவரோ உம்மை நாங்கள் பூஜிக்கமுயல்கிறோம்; (செய்யக்) கூடியவர்களாகவில்லை. மதுஸூதனரே! புருஷர்களிற் சிறந்தவரே! எங்களால் செய்யப்பட்ட பூஜையை விரும்பி ஏற்றுக்கொள்ளாத காரணத்தை நாங்கள் அறியவில்லை. கோவிந்தரே! எங்களுக்கு உம்முடன் வைரமில்லை; சண்டையுமில்லை. அப்படியிருக்க, நீர் இதை நன்கு ஆலோசித்து இவ்விதம் சொல்லுவது தகாது' என்று மறுமொழி கூறினன். இவ்விதம் சொல்லக்கேட்டவரும் தாசார்ஹருமான ஜனார்த்தனர் மந்திரிகளுடன்கூடின துரியோதனனைப் பார்த்துச் சிரித்துக்கொண்டு மறுமொழி உரைக்கலானார். 'அரசனே! நான் விருப்பாலும் வெறுப்பாலும் பகையாலும் பொருள்நிமித்தத்தாலும் கபடத்தாலும் லோபத்தாலும் எவ்விதத்தாலும் தர்மத்தை விடேன். அன்னங்கள் ஸந்தோஷத்திலாவது புஜிக்கத்தக்கன; அல்லது, ஆபத்திலாவது புஜிக்கத்தக்கன. நீ இப்பொழுது ஸந்தோஷத்தை அடையவுமில்லை; நாங்களும் ஆபத்தையடையவுமேயில்லை; சத்துருவின் அன்னமானது புஜிக்கத்தக்கதில்லை. பகைவனுக்குப் போஜனம் செய்துவைக்கவே கூடாது. அரசனே! பாண்டவர்களைப் பகைக்கிறாய். பாண்டவர்கள் என்னுடைய பிராணன்கள் அல்லவா? அரசனே! நண்பர்களை அனுஸரிக்கிறவர்களும் பிராதாக்களும் எல்லாக் குணங்களும்பொருந்தியவர்களுமான பாண்டவர்களைப் பிறந்தது முதல் அகாரணமாகப் பகைக்கிறாய். அகாரணமாகவே அவர்களைப் பகைப்பது உசிதமன்று. பாண்டவர்கள் தர்மத்திலிருக்கின்றனர்.

அவர்களை யார் என்ன சொல்லத்தக்கவன்? அவர்களைப் பகைப்பவன் என்னைப் பகைப்பவனே. அவர்களை அனுஸரிப்பவனே என்னை அனுஸரிப்பவன். என்னைத் தர்மத்தில் நடப்பவர்களான பாண்டவர்களுடன் ஒரே ஆத்மாவாயிருப்பதை அடைந்தவனாக அறியக்கடவாய். எவன் ஆசையையும் கோபத்தையும் பின்பற்றினவனாகி அறியாமையால் குணவானை விரோதிக்க விரும்புகிறானோ விரோதமும்செய்கிறானோ அவனை மனிதர்களில் அதமனாகச் சொல்லுகின்றனர். மனத்தை ஜயிக்காதவனும் கோபத்தைஜயிக்காதவனுமான எவன் கல்யாணகுணங்களையுடைய ஞாதிகளை அறியாமையாலும் பேராசையாலும்[1] பகைக்கிறானோ, அவன் வெகுகாலம் செல்வத்துடன் நிலைக்கிறதில்லை. இதுநிற்க. எவன், மனத்திற்குப் பிரியமில்லாதவர்களாயிருந்தாலும், குணங்களுடன்கூடியவர்களைப் பிரியத்தினால் வசம்செய்கின்றானோ அவன் வெகுகாலம் புகழில் நிலைக்கிறான். இந்த எல்லா அன்னமும் குற்றமுள்ளதென்று சொல்லப்பட்டிருப்பதால் புஜிக்கத்தக்கதில்லை. விதுரரொருவருடைய (அன்னம்தான்) புஜிக்கத்தக்கதென்று என்னுடைய எண்ணம் வைக்கப்படுகிறது' என்றார்.

புஜபலம் அமைந்த(அவர்) பொறுதவனான துரியோதனனை நோக்கி இவ்விதம் சொல்லிட்டுத் துரியோதனனுடைய சுத்தமான மாளிகையிலிருந்தும் வெளிவந்தார். வெளியில் வந்ததும், நீண்டகைகளையுடையவரும் பெரியமனத்தையுடையவருமான அவர் சயனத்திற்காக மகாத்மாவான விதுரருடையவீட்டை அடைந்தார். தோள்வலியமைந்தவரும் விதுரருடையமாளிகையிலிருப்பவருமான அவரைத் துரோணரும் கிருபரும் பீஷ்மரும் பாஹ்லிகரும் கௌரவர்களும் வந்தடைந்தனர். அந்தக்கௌரவர்கள் லக்ஷ்மீபதியும் வீரருமான மதுஸூதனரை நோக்கி, 'ஓ! வார்ஷ்ணேயரே! நாங்கள் உமக்கு ரத்தினங்களோடுகூடிய மாளிகைகளைத் தெரிவிக்கிறோம்' என்றனர். மிக்கவல்லமையுடையவரான மதுஸூதனர் அந்தக்கௌரவர்களை நோக்கி, 'நீங்களெல்லோரும் செல்லுங்கள். எனக்கு எல்லாப்பூஜையும் செய்யப்பட்டது' என்று சொன்னார். கௌரவர்கள் சென்றபிறகு, அப்பொழுது, விதுரர் முயற்சியுடையவராய் (ஒருவராலும்) வெல்லப்படாதவரான கிருஷ்ணரை எல்லா இஷ்டவஸ்துக்களாலும் பூஜித்தார். பிறகு, விதுரர் மகாத்மாவான கேசவருக்குப் பரிசுத்தமானவைகளும் குணமுள்ளவைகளும் பலவகைகளுமான

---

1 'த்விஷதெ' என்பதுமூலம்.

அன்னபானங்களைக் கொணர்ந்துவைத்தார். மதுஸூதனரான கிருஷ்ணர் அவைகளாலே முதலில் பிராம்மணர்களைத் திருப்தியடைவித்து வேதவித்துக்களான அவர்களுக்குச் சிறந்ததிரவியங்களையும் அளித்தார். பிராம்மணஸ்ரேஷ்டர்கள் பூஜித்துவிட்டுச் சிறந்த ஆஸனத்தில் உட்கார்ந்திருக்கையில், விதுரர், சுத்தரும் அடங்கினவருமாகி, அன்னத்தைக்கொடுத்தார். அவர், மிக்கப்ரீதியுடன், 'ஓ! கோவிந்தரே! [1]நடந்தவைகளைக்கொண்டு ஸந்தோஷியும். இது எங்களுடைய சிறந்தபொருள். இப்படியல்லாமல், வேறு சிறந்தபொருளால் யார் உம்மைப் பூஜிக்கத்தகுதியுள்ளவனாகிறான்?' என்று இவ்வித வார்த்தையைச் சொன்னார். பிறகு, அவர், தேவர்களுடன் இந்திரன்போலக் கூடவந்தவர்களுடன் சுத்தமானவைகளும் குணங்களுடன்கூடினவைகளுமான விதுரருடைய அன்னங்களை அருந்தினார். போஜனம்செய்தவரும் உட்கார்ந்திருப்பவரும் வெல்லப்படாதவருமான அந்தக்கேசவரைப் பலவிதமானவர்களும் நல்லசப்தமுடையவர்களுமான ஸூதர்களும் மாகதர்களும் துதித்தார்கள்.

---

## தொண்ணூற்றிரண்டாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

**(விதுரர், பீஷ்மர்முதலியோரிருந்தலால் துரியோதனன் கர்வமுற்றிருப்பதையும் அவனுடைய தீயொழுக்கத்தையும் அவனிடம் ஸமாதானம் பயனற்றதென்பதையும் துஷ்டர்நிரம்பின துரியோதன ஸபையில் கோவிந்தர் பிரவேசிப்பது தமக்கு ஸம்மதமன்றென்பதையும் அவருக்குச் சொல்லியது.)**

விதுரர், ராத்திரியில் போஜனம்செய்து இளைப்பாறினவரான கேசவரைநோக்கிச் சொல்லலானார்: 'கேசவரே! உம்முடைய இந்த வரவானது நல்லகாரியமன்று. ஓ! ஜனார்த்தனரே! துரியோதனன் அர்த்தத்தையும் தர்மத்தையும் மீறினவனும் மூடனும் கோபமுடையவனும் (பிறர்) மானத்தைக் கெடுக்கிறவனும் (தனக்கு) மதிப்பை விரும்புகிறவனும் பெரியோர்களுடைய கட்டளையைக் கடப்பவனுமானவன். ஜனார்த்தனரே! மந்தனான அவன் தர்மசாஸ்திரத்தை மீறி

---

1 'ஸம்வ்ருதைஃ' என்பது மூலம். 'அரசருக்கு ஏற்றவையல்லாமையால், மறைக்கப்பட்டவை' என்பது குறிப்புரை. இது அதிக பாடம்; இங்கு, 'ஸம்வ்ருத்தைஃ' என்ற பாடம் கொள்ளப்பட்டது.

னவனும் மூடனும் துஷ்டபுத்தியுள்ளவனும் கர்வத்தை அடைந்த வனும் நன்மைகளில் திருப்ப முடியாதவனுமானவன். காமத்தையே வடிவமாகக்கொண்டவனும் தானே அறிவாளியென்கிற அபிமான முள்ளவனும் மித்திரர்களுக்குத் துரோகஞ்செய்பவனும் எல்லா ரிடத்திலும் சங்கைப்படுகிறவனும் (ஒருவனுக்கும் ஒரு நன்மை யையும்) செய்யாதவனும் செய்ந்நன்றி மறப்பவனும் தர்மத்தை விட்டவனும் பொய்யில் பிரியமுள்ளவனும் மூடனும் புத்தி திருத் தப்படாதவனும் இந்திரியங்களை அடக்கவல்லவனாகாதவனும் காமங் களை அநுஸரிப்பவனும் எல்லாக்கார்யங்களிலும் உறுதியில்லாத வனும் இவைகளோடு மற்றும் பல குற்றங்களுமுள்ளவனுமான அவன், உம்மால் சொல்லப்பட்டாலும், படபடத்தவனானதால், நன் மையை ஏற்றுக்கொள்ளமாட்டான். அவன் பீஷ்மரிடமும் துரோ ணரிடமும் கிருபரிடமும் கர்ணனிடமும் துரோணபுத்ரரிடமும் ஜயத்ரதனிடமும் ('இவர்கள் எனக்கு ராஜ்யத்தை வென்று தருவர்' என்று) மிகுதியாக நம்பிக்கையை வைத்திருக்கிறான்; ஸமாதானத் தில் மனத்தைச்செலுத்தவில்லை. ஜனார்த்தனரே! பீஷ்மர் துரோ ணர் முதலியவர்களைப் பார்த்தர்கள் எதிர்த்துப்பார்க்கவும் திறமை யுள்ளவரல்லரென்பது கர்ணனுடன் கூடின திருதராஷ்டிரபுத்ரர்க ளின் நிச்சயம். மதுஸூதனரே! மூடனும் திறமையற்றவனுமான அவன் பூமியிலுள்ள சேனைகளைத் திரட்டிக்கொண்டு தன்னைக் காரி யத்தை நிறைவேற்றினவனாக எண்ணுகிறான். கர்ணன் ஒருவனே பகைவர்களை வெல்லுவதற்கு வல்லவனென்பது துர்ப்புத்தியுள்ள துர்யோதனனுடைய உறுதி. அவன் ஸமாதானத்தை அடையான். ஓ! கேசவரே! திருதராஷ்டிரபுத்திரர்கள் எல்லாருமே, கௌரவர் களுக்கும் பாண்டவர்களுக்கும் விரோதம்விலகி ஸஹோதர ஸ்நேக முண்டாவதற்காக விரும்பிப் பிரயத்தினஞ்செய்கின்ற உம்மை அநு தரவுசெய்து, 'நாம் பாண்டவர்களுக்கு உசிதப்படி ஒன்றையுங்கொடுக் கக்கூடாது' என்று ஒரே மதியாயிருக்கின்றனர். இவ்விதம் நிச்சயம் செய்தவர்களான அவர்களிடத்தில் வார்த்தையானது பயன்பெறாததா கும். ஓ! மதுஸூதனரே! எவர்களிடத்தில் நல்லவார்த்தையும் கெட்ட வார்த்தையும் ஸமமாகுமோ அவர்களிடத்தில் விவேகியாயிருப்பவன் செவிடர்களிடத்தில் பாடகன்பாடுவதுபோல (ஒன்றையும்) புலம்பக் கூடாது. ஓ! மாதவரே! சண்டாளர்களிடத்தில் தத்வத்தை உபதேசிக் கும் பிராம்மணன்போல, அறியாதவர்களிடத்திலும் மூடர்களிடத்தி லும் மரியாதையில்லாதவர்களிடத்திலும் உண்மையான வார்த்தையை

உரைக்கின்றவன் நிந்திக்கப்படத் தக்கவனாவான். பலத்துடனிருப்பவனும் மூடனுமான அப்படிப்பட்ட இவன் உமது வார்த்தையைச்செய்யான். அவனிடத்தில் சொல்லப்பட்ட உமது வார்த்தையானது பயனில்லாததாகும். ஓ! கிருஷ்ணரே! நன்றாக உட்கார்ந்திருப்பவர்களும் பாவபுத்தியுடையவர்களுமான அவர்களெல்லாருடைய மத்தியிலும் நீர் பிரவேசிப்பது எனக்குப் பிடிக்கவில்லை. ஓ! கிருஷ்ணரே! துர்ப்புத்தியுள்ளவர்களும் சிஷ்டரல்லாதவர்களும் துஷ்ட எண்ணமுடையவர்களுமான பலபேர்களுடையமத்தியில் (அவர்களுக்கு) விபரீதமான உமது வார்த்தையை அவர்கள் ஏற்றுக்கொள்ளார்களாகையால் (எனக்குப்) பிடிக்கவில்லை. பெரியோர்களை ஸேவியாததாலும் தனத்தின் கொழுப்பினாலும் பொறாமையாலும் மோகத்தை அடைந்தவனான அவன் உம்மிடமிருந்தும் நன்மையைக் கிரகிக்க மாட்டான். ஓ! மாதவரே! இவனுக்குப் [1] பலத்துடன் கூடிய பலத்தைச் சொல்வீரானாலும் இவனுக்கு உம்மிடத்தில் பெரிய சங்கையிருப்பதால் உம்முடையவார்த்தையைச் செய்யமாட்டான். ஓ! ஜனார்த்தனரே! இதானது இப்பொழுது தேவர்களுடன் கூடின இந்திரனாலும் யுத்தத்தால் முடியக்கூடியதில்லை யென்று திருதராஷ்டிரபுத்திரர்கள் எல்லாரும் நிச்சயித்திருக்கின்றனர். இவ்விதம் உறுதியுள்ளவர்களும் ஆசையையும் கோபத்தையும் கொண்டவர்களுமான அவர்களிடத்தில் உம்முடைய வார்த்தையானது ஸாமர்த்தியமுள்ளதாயினும் ஸாமர்த்தியமில்லாததாகிவிடும். மந்தனும் மூடனுமான துர்யோதனன், யானைப்படையின் மத்தியிலும் தேர்ப்படை குதிரைப்படைகளின் மத்தியிலும் நின்றுகொண்டு பயம் நீங்கினவனாகி, 'என்னால் இந்தப் பூமி முழுவதும் ஜயிக்கப்பட்டது' என்று நினைக்கிறான். திருதராஷ்டிரருடைய புத்திரனானவன் பூமியில் பகையின்றியிருக்கிற பெரியராஜ்யத்தைப் பிரார்த்திக்கிறான். அவனிடத்தில் [2] கேவலமான ஸமாதானமானது அடையத்தக்கதில்லை. அடையப்பட்டதாயிருக்கிறபொருளை (த்தனக்கு) நிலைத்துவிட்டதாக நினைக்கிறான். இந்தப்பூமியானது காலத்தினால் பக்குவமாகி எங்கும் சிதறிவிட்டது. பாரிலுள்ள எல்லாவீரர்களும் பூமிபாலர்களுடன்சேர்ந்த க்ஷத்திரியர்களும் துர்யோதனனிமித்தமாகப் பாண்டவர்களுடன் போர்புரிய விருப்பமுள்ளவர்களாக வந்திருக்கிறார்கள். ஓ! கிருஷ்ணரே! வீரர்களான இந்த அரசர்களெல்லா

---

1 'பலவானான உனக்கு நானும் உபபலமாயிருக்கிறேனென்று சொன்னாலுமே' என்பது. 2 கலகமின்றி.

ரும் முன் உம்முடன் பகைபாராட்டி [1] ஸாரத்தை அபகரிக்கப் பட்டவர்களாகி உம்மிடம் பயத்தினால் கர்ணனுடன் சேர்ந்து திருத ராஷ்டிரருடைய புத்திரர்களை அடுத்தவர்களாயிருக்கின்றனர். போர்ச்

வர்களும் பாண்டவர்களோடு சண்டைசெய்வதற்குச் சந்தோஷத்தை அடைந்தவர்களும், மரணமாவது வெற்றியாவது (நேரட்டும்) என்று ஒரே எண்ணத்தைக்கொண்டவர்களும் காமத்தையே உருவமாக வுடையவர்களும் கோபத்தின் வசத்தையடைந்தவர்களும் அடக்க மற்றவர்களுமாயிருக்கின்றனர். ஓ! தாசார்ஹரே! வீரரே! நீர் அவர் களுடைய மத்தியில் செல்வீரேயானால் அது எனக்கு ஸம்மதமில்லை. ஓ! பகைவரைவாட்டுபவரே! நன்றாக உட்கார்ந்திருப்பவர்களும் அனேகர்களும் துஷ்ட எண்ணமுள்ளவர்களுமான அந்தப்பகைவர் களுடைய நடுவை எப்படி அடைவீர்? ஓ! புஜபலமுள்ளவரே! எல்லா விதத்தாலும் நீர் தேவர்களாலும் ஸஹிக்கமுடியாதவரே. ஓ! பகைவ ரைக்கொல்லுகிறவரே! உம்முடையபெருமையையும் ஆண்மையை யும் புத்தியையும் அறிகிறேன். ஓ! மாதவரே! எனக்குப் பாண்டவர் களிடம் உள்ளபிரியத்தைக்காட்டிலும் உம்மிடத்தில் இன்னும் அதிக மான ப்ரியமிருக்கிறது. நான் அன்பினாலும் நன்மதிப்பினாலும் நட்பி னாலும் சொல்லுகிறேன். ஓ! புண்டரீகாக்ஷரே! எனக்கு உம் முடையதரிசனத்தினாலுண்டான பிரியத்தை உம்மிடத்தில் நான் எடுத்துச்சொல்லுவானேன்? நீர் தேகிகளுக்கு அந்தராத்மாவா யிருக்கிறீர் அன்றோ?" என்றார்.

## தொண்ணூற்றுமூன்றாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(கோவிந்தர் விதுரர்சொல்லைப் புகழ்ந்து தாம் வந்தது உலகம் பழி சொல்லாமலிருத்தற்காகவென்று விதுரருக்குச் சொல்லியது.)

புருஷோத்தமரான மதுஸூதனர், வணக்கத்துடன்கூடிய விதுரருடையவார்த்தையைக் கேட்டு, இனிமையான இந்தவார்த் தையை உரைக்கலானார். 'பேரறிவாளன் சொல்லுவதுபோலவும் ஸமர்த்தனானவன் சொல்லுவதுபோலவும் உம்மைப்போன்ற பூஜ்ய

1 பலம் அல்லது பொருள்.

ரானவர் என்னைப்போன்ற நண்பனைநோக்கிச் சொல்லுவதுபோலவும், நீர் என்னைநோக்கி, உமக்குழைத்ததான தர்மத்தோடும் அர்த்தத் தோடும்கூடி, உண்மையாயிருக்கிற வார்த்தையை மாதாபிதாக்கள் போலச் சொன்னீர். என்னைநோக்கி நீர் சொல்லியது ஸத்தியமும் இச்சமயத்திற்குத் தக்கபடி நேரிட்டதும் உசிதமுமாயுள்ளது. இது உண்மையே. ஓ! விதுரரே! என் வரவின் காரணத்தை ஜாக்கிரதை யாகக் கேளும். ஓ! க்ஷத்தாவே! துர்யோதனனுடைய துர்ப் புத்தியும் க்ஷத்திரியர்களுடைய வைரமுமாகிய இவை எல்லா வற்றையும் நான் அறிந்துகொண்டே இப்பொழுது கௌரவர்களை அடைந்தேன். நிலைமாறினதும் குதிரைகள்தேர்கள்யானைகளோடு கூடியதுமான எல்லாப்பூமியையும் எவன் மிருத்தியுவின்பாசத்திலிருந் தும் விடுவிக்கிறானோ அவன் உத்தமமான தர்மத்தையடைவான். சக்திக்குத்தக்கபடி தர்மகார்யத்தில் முயற்சிசெய்தமனிதன் (அந்தக் கார்யம்) கைகூடப்பெறாவிடினும் அதற்குரியபுண்ணியத்தை அடைந் தவனாகிறான். இதில் எனக்கு ஸந்தேகமில்லை. 'மனத்தால் பாவத் தைச்சிந்தித்தும் கார்யத்தினால் (செய்ய) விரும்பாதவன் அதன்பயனை அடைகிறதில்லை' என்று தர்மம்தெரிந்தவர்கள் அறிகின்றனர். ஓ! க்ஷத்தாவே! அப்படிப்பட்ட நான் கபடமின்றி யுத்தத்தில் நசிக்கப் போகின்றவர்களான கௌரவர்களுக்கும் ஸ்ருஞ்சயர்களுக்கும் ஸமா தானத்தைக்குறித்து முயல்வேன். மிக்க கோரமான அப்படிப் பட்ட இந்த ஆபத்தானது கர்ணனாலும் துர்யோதனனாலும் செய்யப் பட்டதாகிக் கௌரவர்களிடத்திலேயே கிளம்பினதாயிருக்கிறது. இவர்களெல்லாருமோ அவர்களைத்தொடர்ந்திருக்கின்றார்கள். எவன் ஸங்கடத்தில் கஷ்டப்படுகிற மித்திரனைச் சக்திக்குத்தக்கபடி தேற்றி அவனுக்கு உபகரிக்கவில்லையோ அவனை வித்வான்கள் கொடியவனாக அறிகின்றனர். தலைமயிர்பிடித்துச் சண்டையேற்படும்வரை மித்தி ரனை அகார்யத்திலிருந்தும் திருப்புவதற்காக இயன்றமட்டும் முயல் பவன் எவனுக்கும் தூஷிக்கப்படத்தகாதவனாகிறான். ஓ! விதுரரே! ஆகையால், ஸாமர்த்தியமுள்ளதும் சுபமும் அறம்பொருள்களோடு கூடியதும் ஹிதமுமான வார்த்தையைத் துர்யோதனன் மந்திரிகளு டன் ஏற்றுக்கொள்ளத் தக்கவனாகிறான். நான் கபடமில்லாமல் திருதராஷ்டிரரின் புத்திரர்களுக்கும் பாண்டவர்களுக்கும் பூமியி லுள்ள அரசர்களுக்கும் ஹிதத்தைச்செய்ய அன்றோ முயலப் போகிறேன்? நன்மைக்காக முயல்கிறவனான என்னைக்குறித்துத் துர்யோதனன் சங்கிப்பானேயானாலும் என்னுடைய மனத்துக்குப்

பிரீதியும் கடனில்லாமையும் ஏற்படும். ஞாதிகளுக்கு ஒருவருக்கொருவர் விரோதம் ஏற்பட்டபொழுது, எல்லா முயற்சியினாலும் மத்தியஸ்தனாயிருப்பதை அடையாத மித்திரனைப் பண்டிதர்கள் (மித்திரனாகக்) கருதுவதில்லை. அதர்மத்திலிருப்பவர்களும் மூடர்களும் நண்பரல்லாதவர்களுமாயிருப்பவர்கள் என்னை, 'போருக்கு முயன்றவர்களான, கௌரவர்களையும் பாண்டவர்களையும், கிருஷ்ணன் சக்தியுள்ளவனாயிருந்தும் தடுக்கவில்லை' என்று சொல்லமாட்டார்கள். தவிரவும், நான் இருவருடைய விருப்பத்தையும் நிறைவேற்றுகிறவனாக வந்தேனென்று அந்த விஷயத்தில் முயற்சியைச் செய்து மனிதர்களிடத்தில் குற்றம் சொல்லத்தகாதவனாயிருப்பதை அடைவேன். அறம்பொருள்களோடு கூடினதும் கெடுதலில்லாததுமான என்னுடைய வார்த்தையையோ மூடனான துர்யோதனன் கேட்டு ஏற்றுக்கொள்ளாமலிருப்பானேயானால் தெய்வத்தின் வசத்தையடைவான். ஓ! மகாத்மாவே! பாண்டவர்களுடைய அர்த்தத்தைக்கெடுக்காமல் உள்ளபடி கௌரவர்களுக்கு ஸமாதானத்தைச் செய்வேனேயானால், என்னால் புண்ணியமானது செய்யப்பட்டதாகும். கௌரவர்களும் மிருத்யுவின் பாசத்திலிருந்தும் விடுபடுவார்கள். மேலும், சொல்லுகிறவனான என்னுடைய நீதியுடன்கூடியதும் தர்மத்திற்கிருப்பிடமும் பயனுள்ளதும் கெடுதியில்லாததுமான வார்த்தையைத் திருதராஷ்டிரரின் புத்திரர்கள் உற்றுநோக்குவார்களானால் ஸமாதானத்திற்காக வந்தவனான என்னையும் கௌரவர்கள் பூஜிப்பார்கள். மேலும், எல்லா அரசர்களும் சேர்ந்தும், கோபத்தையடைந்தவனான எனக்குமுன்னே, சிங்கத்தின் முன்னே இதரமிருகங்கள் போல, நிற்பதற்கும் வல்லவர்களல்லர்' என்றார். யாதவர்களுக்கு ஸுகத்தை அளிப்பவரும் விருஷ்ணிகளில் சிறந்தவருமான அவர் இவ்விதவார்த்தையைச் சொல்லிவிட்டு, அப்பொழுது, [1] தொடுதற்கு மெதுவாயிருக்கிற படுக்கையில் படுத்தார்.

1 'ஸுகஸ்பர்ஸே' என்பது மூலம்.

## தொண்ணூற்று நான்காவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(மறுகாலையில் சகுனி துரியோதனன் முதலியோர் அழைக்க ஸ்ரீ கோவிந்தர் விதுரருடன் ஸபைக்குச் சென்றதும், ஆகாயத்தில் வந்த நாரதர் முதலியோரை மாதவர் சொற்படி பீஷ்மர் பூஜித்தவுடன் கோவிந்தர் முதலியோர் உட்கார்ந்ததும்.)

அப்பொழுது, புத்திமான்களான அவர்கள் அந்தப்படி பேசிக்கொண்டிருக்கும்பொழுதே, மங்களமானதும் நக்ஷத்திரங்களுடன் கூடினதுமான அந்தராத்திரியானது சென்றது. [1] உசிதமான கதைகளாலே ஆசையுள்ளவரும் இதரவிஷயத்தில் விருப்பமில்லாதவரும் அளவற்ற பராக்கிரமத்தையுடையவருமான கோவிந்தர் அறம்பொருளின்பங்களுடன் கூடினவைகளும் விசித்திரமான பொருளையுடைய சொற்களையும் எழுத்துக்களையுமுடையவைகளுமான மஹாத்மாவான விதுரருடைய பலவித வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டிருக்கும்பொழுது, அந்தராத்திரியானது சென்றுவிட்டது. பிறகு, நல்லகுரலுள்ளவர்களும் பலருமான ஸூதர்களும் மாகதர்களும் சங்கதுந்துபிகளுடைய முழக்கங்களுடன் கேசவரை எழுப்பினார்கள். பிறகு, ஸாத்வதர்களுக்கெல்லாம் தலைவரும் தாசார்ஹருமான ஜனார்த்தனர் எழுந்திருந்து காலைக்கடன்களெல்லாவற்றையும் செய்தார். அந்த மாதவர் ஸ்நானஜபங்களைச்செய்து அக்னியில் ஹோமம்பண்ணி நன்றாக அலங்கரித்துக்கொண்டு, பிறகு, உதயமாகிற ஆதித்தியனைத் துதித்தார். பிறகு, துரியோதனனும் ஸுபலபுத்திரனை சகுனியும், ஸந்தியை உபாஸிக்கிறவரும் தாசார்ஹரும் வெல்லப்படாதவருமான கண்ணரே! திருதராஷ்டிரரும் பீஷ்மர் முதலான கௌரவர்களும் பாரிலுள்ள எல்லா அரசர்களும் ஸபையை அடைந்து, ஸ்வர்க்கத்தில் தேவர்கள் இந்திரனை ப்ரார்த்திப்பதுபோல, உம்மைப்ரார்த்திக்கின்றனர்' என்று அவரிடம்சொன்னார்கள். கோவிந்தரானவர் மிக்க இனிமையான நல்லவார்த்தையினால் அவர்களைப் புகழ்ந்தார். பிறகு, ஸூர்யன் நன்றாக உதித்தபொழுது, பகைவரை வாட்டுபவரான ஜனார்த்தனர் பிராம்மணர்களுக்குப் பொன்னையும் ஆடைகளையும் பசுக்களையும் குதிரைகளையும் தானம்செய்தார். அப்பொழுது, ரத்தினங்களைத் தானம்செய்தவரும் வெல்லப்படாத

1 'அவற்றைக்கேட்டு மகிழ்ந்தார்' என்பது.

வரும் நிற்பவருமான தாஸார்ஹரை அணுகி, ஸாரதியானவன் வணங்கினன். உலகத்தில் பிரஸித்திபெற்ற அவருடைய சிறந்த ரதமானது சைப்யம் ஸுக்ரீவம் மேகபுஷ்பம் வலாஹகமென்கிற குதிரைகள் பூட்டப்பட்டு விளங்கிற்று. சைப்யமோ கிளியின்சிறகுபோன்ற காந்தியுள்ளது. ஸுக்ரீவமானது பலாசம்பூ நிறமுள்ளது. மேகபுஷ்பமானது மேகவர்ணமுள்ளது. வலாஹகமோ வெளுத்தநிறமுள்ளது. சைப்யமானது தேரை வலப்பக்கத்தில் நின்று இழுத்தது; ஸுக்ரீவமானது இடப்பக்கத்தில் (நின்று) இழுத்தது; மேகபுஷ்பமும் வலாஹகமும் அவைகளுக்குப் பின்புறத்தில் நின்று இழுத்தன. விஸ்வகர்மாவினல் செய்யப்பட்ட சிகரத்தையுடையதும் திரளான ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்டதும் (அந்தத்தேரில்) அமைக்கப்பட்டதுமான கொடிமரமானது விளங்கிற்று. நாகங்களுக்குப்பகையான கருடன் பலவானை அந்தக் கோவிந்தருடைய அந்தக் கொடிமரத்திலுள்ள கொடியில் ஸூர்யனைத் தொடுகிறவன்போலிருந்துகொண்டு விளங்கினன். புகழ்பெற்ற அவருடைய சிறந்ததேரானது மிக்க பிரகாசமுள்ள அந்தக்கருடத்வஜத்தால் விளங்கிற்று. அந்தச் சிறந்ததேரானது, கிரணங்களின்கற்றைகளாலும் கொடிச்சீலைகளாலும் ஸ்வர்ணமயமான (கருடத்) துவஜத்தினலும் காலைஸூர்யன் உதித்ததுபோலிருந்தது. விஸ்வகர்மாவினல் நன்றாகச்செய்யப்பட்ட பக்ஷித்துவஜத்துடன் கூடின மேற்கட்டிகளாலும், பொன்வலைகளால் செய்யப்பட்ட உள்ளிடங்களாலும், கம்பங்களால்வகுக்கப்பட்ட வழிகளாலும், பவழங்களாலும் மணிகளாலும் முத்துக்களாலும் வைடூர்யங்களாலும் விளங்குகின்ற வால்மயிர்க்கயிற்றில் கோக்கப்பட்ட துவாரங்களையுடைய சலங்கைகளின் நூற்றுக்கணக்கான கூட்டங்களாலும் பொன்மயமான தாமரைமலர்க் கொத்துக்களாலும், ஸ்வர்ணமயமான புலி சிங்கம் பன்றி விருஷபம் மான் பக்ஷி நக்ஷத்திரம் ஸூர்யன் யானை இவைகளாலும், மூக்கணைகள் திரும்புகின்ற ஸந்திகளில் வைர அங்குசங்களுடன் கூடின விமானங்களாலும் அலங்கரிக்கப்பட்டதும் உயரமாயும் பெரியதாயுமிருக்கிற உருளைக்குடத்தையுடையதும் மேகம்போலப் பெரிய ஒலியையுடையதுமான (சிறந்த) ரதமானது விளங்கிற்று. பிறகு, சுத்தமும் பெரிதும் சலங்கைகளுடன் கூடியதும் உத்தமமான குதிரைகள் பூண்டதுமான ரதத்துடன் தாருகன் சீக்கிரமாக வந்தான். பெரியமனத்தையுடையவரும் ஜனார்த்தனரும் சௌரியும் எல்லாயாதவர்களுக்கும் மகிழ்ச்சியைச் செய்பவருமான மாதவர் திவ்யமும் பெரியமேகம்போலப் பேரொலியுடையதும்

எல்லாரத்னங்களாலும் அலங்கரிக்கப்பட்டதுமான அந்த ரதம் ஸமீபத்தில் வந்ததை அறிந்து, அக்னியையும் பிராம்மணர்களையும் பிரதக்ஷிணஞ்செய்து கௌஸ்துபமென்கிற மணியைப்பூண்டு சிறந்ததான காந்தியினால் ஜ்வலிக்கிறவரும் கௌரவர்களால் சூழப்பட்டவரும் விருஷ்ணிகளால் காக்கப்பட்டவருமாகி ரதத்தில் ஏறினார். எல்லாத்தர்மங்களையும் அறிந்தவரான விதுரர், எல்லாப் பிராணிகளுக்கும் ஸ்ரேஷ்டரும் புத்திமான்களெல்லாரிலும் சிறந்தவருமான தாசார்ஹரைத்தொடர்ந்து ஏறினார். பிறகு, துரியோதனனும் ஸுபலபுத்திரனைசகுனியும் இரண்டாவது ரதத்திலேறிப் பகைவரை வாட்டுபவரான கோவிந்தரைப் பின்தொடர்ந்தார்கள். ஸாத்யகியும் கிருதவர்மாவும் விருஷ்ணிகளிலுள்ள மற்றாதிகர்களும், யானைகுதிரைதேர்களோடு கிருஷ்ணரைப் பின்தொடர்ந்தனர். ஓ! அரசரே! செல்லுகின்ற அவர்களுடைய பொன்னாபரணம்பூண்ட சிறந்த குதிரைகள் பூட்டப்பட்டவைகளும் ஒலிக்கின்றவைகளும் விசித்திரமுமான தேர்கள் விளங்கின. புத்திமானான வாஸுதேவர் காந்தியால் ஜ்வலிக்கிறவராகி, புழுதிபோக்கி ஜலம் தெளிக்கப்பட்டதும் (அந்த அந்த) ஸமயத்தில் ராஜரிஷிகளால் ஸஞ்சரிக்கப்பட்டதுமான ராஜமார்க்கத்தை அடைந்தார். பிறகு, மாதவர் புறப்பட்டபொழுது, [1] ஏகபுஷ்கரவாத்தியங்கள் வாசிக்கப்பட்டன. சங்கங்களும் மற்றுமுள்ளவாத்தியங்களும் வாசிக்கப்பட்டன. எல்லாஉலகத்திலும் சிறந்த வீரர்களும் சிங்கத்திற்கொப்பான பராக்கிரமமுடையவர்களும் பகைவரை வாட்டுகிறவர்களுமான இளையவர்கள் சௌரியின் தேரைச்சூழ்ந்துகொண்டு சென்றார்கள். பிறகு, விசித்திரமும் ஆச்சரியகரமுமான ஆடையுடையவர்களும் கத்தி பட்டாக்கத்திகளான ஆயுதங்களைத் தரிக்கின்றவர்களுமான மற்றும் அனேகமாயிரம் பேர்கள் கிருஷ்ணருக்கு முன் செல்லுகிறவர்களானார்கள். அவ்விடத்தில் ஐந்நூறுயானைகளும் ஆயிரக்கணக்கான தேர்களும் இருந்தன. வீரரும் ஜயிக்கப்படாதவருமான வாஸுதேவர் போகும்பொழுது, (அவைகள்) பின் தொடர்ந்தன. ஓ! பகைவர்களைச் சிக்ஷிப்பவரே! சிறுவர்களோடும் முதியவர்களோடும் மாதர்களோடும் கௌரவர்களுடையபட்டணமானது ரதவீதியை அடைந்து ஜனார்த்தனரைப் பார்க்க விருப்பமுள்ளதாயிற்று. மேலும், திண்ணையை அடைந்தமகளிரால் பெரும்பாலும் நிரம்பிய வீடுகள், பாரத்தினால்

[1] 'ஒரு புறத்தில் அடிக்கப்படும் தோற்கருவி; காகளவாத்யங்கள்' என்பது பழைய உரை.

சலிக்கின்றவைகள்போல இருந்தன. அவர் கௌரவர்களால் பூஜிக்கப் பட்டவரும் இன்பமானகதைகளைக் கேட்கிறவரும் உசிதமாகப் பிரதி உபசாரம்செய்கிறவருமாகப் பார்த்துக்கொண்டே மெல்லச்சென்றார். பிறகு, ஸபையை அடைந்து, கேசவருக்குப்பின் செல்பவர்கள் சங்கங் கள் புல்லாங்குழல்களுடைய பெரியகோஷங்களாலே எல்லாத்திக் குக்களையும் முழக்கினார்கள். பிறகு, அளவற்றபராக்கிரமமுள்ள அரசர்களுடைய அந்தஸபைமுழுமையும் கோவிந்தர்வருவதில் ஆசையாலுண்டான ஸந்தோஷத்தினால் மிகவும் சலித்தது. பிறகு, கிருஷ்ணர் ஸமீபத்தையடைந்தபொழுது, அரசர்கள் மேகத்தின் முழக்கத்திற்குநிகரான அந்தத்தேரொலியைக்கேட்டு மிகவும் மகிழ்ந் தனர். எல்லாஸாத்வதர்களிலும் சிறந்தவரான சௌரியானவர் ஸபையின் வாயிலையடைந்து கைலையின்கொடுமுடிக்குநிகரான தேரிலி ருந்தும்இறங்கியபிறகு, புதிதானமேகத்திற்குநிகரானதும் ஒளியால் ஜ்வலிக்கிறதுபோலிருப்பதும் இந்திரனுடைய ஸபைபோலவிளங்குகி றதுமான ஸபையில் பிரவேசித்தார். ஓ! அரசரே! மிக்கபுகழையுடைய அவர் விதுரரையும் ஸாத்யகியையும் கையில்பிடித்துக்கொண்டு காந்தியினாலே ஸூர்யன் நக்ஷத்திரங்களை மழுங்கச்செய்வதுபோலக் கௌரவர்களை மழுங்கும்படிசெய்தார். வாஸுதேவருடையமுன்னே கர்ணன் துரியோதனன் இருவரும் உட்கார்ந்தனர். பின்னே, விருஷ்ணிகளும் கிருதவர்மாவும் உட்கார்ந்தனர். பிறகு, பீஷ்மர் துரோணர்முதலியஎல்லாரும் திருதராஷ்டிரனைமுன்னிட்டு ஜனார்த் தனரைப்பூஜிக்கிறவர்களாகி ஆஸனங்களிலிருந்தும் கிளம்பினார்கள். ஓ! அரசரே! வாஸுதேவர் நேரில்வரும்பொழுது, அறிவையே கண் ணாக உடையவனும் பெரும்புகழையுடையவனுமான திருதராஷ்டிரன் பீஷ்மத்துரோணர்களோடுகூடவே எழுந்திருந்தான். ஜனங்களுக்கு ஈஸ்வரனான திருதராஷ்டிரமஹாராஜன் எழுந்தபோது, நாலுபக்கத் திலுமுள்ள அந்த ஆயிரம் அரசர்களும் எழுந்தனர். அவ்விடத்தில் கோவிந்தருக்காகத் திருதராஷ்டிரனுடையகட்டளையினாலே பொன் னால் அலங்கரிக்கப்பட்ட ஸர்வதோபத்திரமென்கிற ஆஸனமானது அமைக்கப்பட்டது. தர்மாத்மாவான மாதவரானவர் மந்தஹாஸத் துடன் அரசனையும் பீஷ்மத்துரோணர்களையும் மற்ற அரசர்களையும் நோக்கிப் பிராயத்தின்முறைப்படி பேசினார். அவ்விடத்தில் பாரி லுள்ள எல்லா அரசர்களும் கௌரவர்களும், ஸபையை அடைந்த ஜனார்த்தனரான கேசவரை நன்கு பூஜித்தார்கள். பகைவரை வாட்டு பவரும் பகைவர் பட்டணங்களை ஜயிக்கின்றவருமான அந்தத்

தாசார்ஹர் அவ்விடத்தில் அரசர்களுடைய மத்தியில் இருந்து கொண்டு ஆகாயத்திலிருக்கின்ற ரிஷிகளைப்பார்த்தார். தாசார்ஹ ரான அவர், நாரதர்முதலான அந்த ரிஷிகளைப் பார்த்து, பிறகு, சந்தனுவின்புத்திரரான பீஷ்மரை நோக்கி, 'ஓ! அரசரே! அரசர்களுடைய ஸபையைப் பார்ப்பதற்கு ரிஷிகள் வந்தனர். ஆஸனங்களோடும் அதிகமான பூஜையோடும் அவர்களை அழைக்கவேண்டும். அவர்கள் உட்காராமலிருக்கும்பொழுது ஒருவரும் உட்காரக்கூடாது. ஆத்மாவைத் தியானம்செய்பவர்களான முனிவர்களுக்குச் சீக்கிரம் பூஜையைச்செய்யுங்கள்' என்று மெதுவாகச் சொன்னார். பீஷ்மரானவர், ஸபையின்வாயிலை அடைந்தவர்களான ரிஷிகளைப்பார்த்துப் பிறகு விரைவுசெய்கிறவராகி வேலைக்காரர்களைப்பார்த்து, 'ஆஸனங்கள்' என்று ஏவினார். பிறகு, சுத்தமானவைகளும் பெரியவைகளும் விரிவானவைகளும் ரத்தினங்களாலும் பொன்னாலும் பலவர்ண முள்ளவைகளுமான ஆஸனங்களை அங்கங்கிருந்து கொண்டுவந்தனர். ஓ! பாரதரே! அவர்கள் அந்த ஆஸனங்களிலிருந்து அர்க்யத்தைப் பெற்றுக்கொண்ட பிறகு, கோவிந்தர் ஆஸனத்திலிருந்தார். அரசர்களும் உசிதப்படி தங்கள் தங்கள் ஆஸனத்தில் உட்கார்ந்தனர். துச்சாஸனன் ஸாத்தியகிக்கு உத்தமமான ஆஸனத்தைக்கொடுத்தான். விவிம்சதியானவன் கிருதவர்மாவுக்குப் பொன்மயமான பீடத்தைக் கொடுத்தான். மகாத்மாக்களும் பொறுதவர்களுமான கர்ண துரியோதனரிருவருமோ மாதவருக்கு ஸமீபத்தில் ஒரே ஆஸனத்தில் இருந்தார்கள். ஓ! அரசரே! காந்தாரதேசத்திற்கரசனான சகுனிராஜன் புத்திரனோடு காந்தாரர்களால் பாதுகாக்கப்பட்ட ஆஸனத்திலிருந்தான். மகாபுத்திமானான விதுரரோ [1]சுக்லவர்ணத்தோடு எதிர்ப்பதான மான்தோல்விரித்த மணிபீடத்தில் கிருஷ்ணருடைய ஆஸனத்தைத் தொட்டுக்கொண்டு இருந்தார். ஜனார்த்தனரான கோவிந்தரைப்பார்க்கின்ற அந்த அரசர்களெல்லாருமே அவரை நெடுநேரம் பார்த்தும் அமிருதத்திலிருந்து திருப்தியடையாததுபோலத் திருப்தியடையவில்லை. காயாம்பூப்போல விளங்குகிறவரும் பொன்னிறமான ஆடையை உடையவருமான ஜனார்த்தனர் ஸபையின்மத்தியில் ஸ்வர்ணத்திற்பதிக்கப்பட்ட மணிபோல விளங்கினார். பிறகு, எல்லாரும் கோவிந்தரை அடைந்தமனத்தையுடையவராகி மௌனமாயிருந்தனர். அங்கே, ஓரிடத்திலும் ஒரு மனிதனும் ஒன்றையும் சொல்லவில்லை.

---

1 மிக்கவெண்மையான என்பது கருத்து.

## தொண்ணூற்றைந்தாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(கோவிந்தர் தாம் ஸமாதானம் செய்யவந்ததையும் ஸமாதானத்தினுடைய இவற்றின் குண நற்றங்களையும் பாண்டவரின் விண்ணப்பத்தையும் திருதராஷ்டிரனிடம் தெரிவித்து இஷ்டப்படி செய்யச்சொல்லியது.)

உட்கார்ந்திருப்பவர்களான அந்த எல்லா அரசர்களும் மௌனமாயிருந்தபொழுது, அழகானபற்களையுடையவரும் துந்துபிக்குச் சமமான த்வனியையுடையவருமான கிருஷ்ணர் வார்த்தையைச் சொல்லத்தொடங்கினர். அவர் வேனிற்காலத்தின் முடிவில் மேகம்போலச் சபைமுழுதையும் கேட்கச்செய்துகொண்டு திருதராஷ்டிரனைப் பார்த்துச் சொல்லலானர்:

'ஓ! பாரதரே! வீரர்களுக்கு நாசமில்லாமலே கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் ஸமாதானம் ஏற்படவேண்டுமென்பதை யாசிப்பதற்காக வந்தேன். அரசரே! உமக்கு க்ஷேமத்திற்குரிய வேறுவார்த்தை சொல்லவேண்டுவதில்லை. பகைவர்களைச் சிக்ஷிப்பவரே! அறியவேண்டியதெல்லாம் உமக்குத்தெரிந்தே இருக்கிறதன்றோ. அரசரே! கல்வியும் நல்லநடையும் பொருந்தினதும் எல்லாக்குணங்களோடும்கூடினதுமான இந்தக்குலமானது இப்பொழுது எல்லா அரசகுலங்களிலும் சிறப்புற்றதாயிருக்கிறது. ஓ! பாரதரே! 1 கிருபை, 2 அனுகம்பை, 3 கருணை, 4 க்ரூரமின்மை, நேராயிருத்தல், பொறுமை, ஸத்யம் ஆகிய இவை கௌரவர்களிடம் விசேஷமாயுள்ளன. ஓ! அரசரே! இவ்விதமான தன்மையுள்ளதாகநிற்கின்ற அப்படிப்பட்ட பெரிதான இந்தக்குலத்தில் முக்கியமாக உம்முடைய நிமித்தமாய்த் தகாதசெயல் செய்யத்தக்கதன்று. ஓ! கௌரவர்களில் சிறந்தவரே! ஐயா! சிறந்தவரான நீரோ வெளிப்படையான (சூதாட்டம் முதலிய) வைகளிலும் ரகஸ்யமான (அரக்குமாளிகை முதலிய) வைகளிலும் கபடமாக நடப்பவர்களான கௌரவர்களைத் தாங்குபவர். ஓ! கௌரவரே! துரியோதனன் முதலிய அப்படிப்பட்ட உமது புத்திரர்கள், அறத்தையும் பொருளை

1 பிறருக்கு ஸுகத்தையுண்டுபண்ணுவதில் முயற்சி. 2 பிறர்துக்கத்தைப்பார்த்து நடுங்குதல். 3 பிறர்துக்கத்தை நீக்கமுயலுதல். 4 பிறருக்குத் துன்பம் விளைவியாமை.

யும் பின்புறத்தில்தள்ளி, முக்கியமான தங்கள் பந்துக்கள்விஷயத்தில் குரூரர்கள்போலப் பயிற்றப்படாதவர்களும் மரியாதைபோனவர்களும் பேராசையால் கவரப்பட்ட மனத்தையுடையவர்களுமாகி நடக்கின்றனர். ஓ! புருஷஶ்ரேஷ்டரே! அதை நீர் அறிகிறீர். ஓ! கௌரவரே! மிக்ககோரமும் கௌரவர்களிடத்திலேயே கிளம்பினதுமான அப்படிப்பட்ட இந்த ஆபத்தானது உதாஸீனம் செய்யப்பட்டால் பூமியைக்கொல்லப்போகிறது. ஓ! பாரதரே! நீர் விரும்பினால் இது தணியச்செய்யக்கூடியது. ஓ! பாரதஶ்ரேஷ்டரே! இந்தவிஷயத்தில் அடக்குதலானது செய்யமுடியாததில்லை என்று நான் எண்ணுகிறேன். பிரஜைகளுக்கெல்லாம் பதியான அரசரே! அடக்குதலானது உமக்கும் எனக்கும் வசமாயிருக்கிறது. ஓ! கௌரவ்யரே! நீர் புத்திரர்களை அடக்கும். நான் மற்றவர்களான பாண்டவர்களைத் தணியச்செய்வேன். ஓ! ராஜஶ்ரேஷ்டரே! உமது கட்டளையோ வம்சத்தோடுகூட (உமது) புத்திரர்களாலேசெய்யத்தக்கது. அரசரே! உம்முடைய ஆணையிலிருப்பவர்களான இவர்களுக்கும் மிக்கநன்மை உண்டு. உமக்கும் நன்மையானது; பிறகு, பாண்டவர்களுக்கும் நன்மையானதே. ஓ! பிரஜைகளைக் காப்பவரே! நீரே பயனில்லாத வைரத்தை ஆலோசித்து, அடக்குவதில் செல்லுகின்ற உம்முடைய கட்டளையை விரும்புகின்றவர்களைச் சேர்த்துக்கொள்ளும். ஜனங்களுக்கு ஈஶ்வரரே! பாரதர்கள் உமக்கே உதவி செய்பவர்களாயிருப்பார்கள். அரசரே! பாண்டவர்களால் ரக்ஷிக்கப்பட்டவராகித் தர்மத்திலும் அர்த்தத்திலும் இரும். ஓ! வேந்தரே! அப்படிப்பட்டவர்கள் முயன்று தேடினாலும் கிடையார். மஹாத்மாக்களான பாண்டவர்களால் காக்கப்படுகிற உம்மை வெல்லுதற்குத் தேவர்களோடுகூடின இந்திரனும் வல்லவனல்லன். அரசர்கள் எப்படிவல்லவராவர்? ஓ! பாரதஶ்ரேஷ்டரே! பீஷ்மரும் துரோணரும் கிருபரும் கர்ணனும் விவிம்சதியும் அஶ்வத்தாமாவும் விகர்ணனும் ஸோமதத்தனும் பாஹ்லிகனும் ஸைந்தவனும் கலிங்கனும் காம்போஜனான ஸுதக்ஷிணனும் யுதிஷ்டிரரும் பீமஸேனனும் அர்ஜுனனும் நகுலஸஹதேவர்களும் மிக்க பராக்கிரமத்தையுடையவனான ஸாத்யகியும் மஹாரதனான யுயுத்ஸுவும் இருக்கின்ற இடத்தில், எவன் விபரீதபுத்தியையுடையவனாகி அவர்களுடன் யுத்தம் செய்வான்? ஓ! பகைவர்களைக்கொல்லுகிறவரே! மேலும், கௌரவர்களோடும் பாண்டவர்களோடும்கூடின நீர் உலகத்திற்கு ஈஶ்வரராக இருப்பதையும் பகைவர்களால் வெல்லமுடியாமலிருப்பதையும்

அடைவீர். ஓ! பூபதியே! பகைவரை வாட்டுபவரே! அப்படிப் பட்ட உம்முடன், உமக்குஸமமான அரசர்களும் மேலான அரசர் களும் சேர்ந்துகொள்ளுவார்கள். அப்படிப்பட்ட நீர் புத்திரர்க ளாலும் பௌத்திரர்களாலும் பிதாக்களாலும் பிராதாக்களாலும் நண் பர்களாலும் எங்கும் காக்கப்பட்டவராக ஸுகமாக ஜீவிப்பதற்குத் தக்கவராவீர். ஓ! பூபதியே! இவர்களையே முன்னிட்டுக்கொண்டும் (முன்போல அவர்களை உபசரித்துக்கொண்டும்) அகண்டமான பூமி முழுமையையும் அனுபவிப்பீர். ஓ! பாரதரே! பாண்டவர்களும் உம்முடையபுத்திரர்களுமான எல்லாரோடும்கூடி மற்றப்பகைவர் களை வெல்லுவீர். இதெல்லாம் உம்முடைய சொந்தக்காரியமே. ஓ! பகைவரைவாட்டுபவரே! அரசரே! புத்திரர்களோடும் மந்திரிக ளோடும் சேருவீரானல் அவர்களாலேயே தேடப்பட்ட பூமியை அனுபவிப்பீர். ஓ! மஹாராஜரே! யுத்தத்திலோ பெரியநாசமானது காணப்படுகிறது. ஓ! அரசரே! இருபக்கத்திலும் அழிவே ஏற் படுவதில் என்ன தர்மத்தைப் பார்க்கிறீர்? ஓ! அரசரே! பாரதஶ்ரேஷ்டரே! சண்டையில் பாண்டவர்கள் கொல்லப்பட்டாலும் அல்லது மஹாபலசாலிகளான புத்ரர்கள் கொல்லப்பட்டாலும் என்ன ஸுகத்தை அடைவீர்? அதனைச் சொல்லும். பாண்டவர்களும் உமது புத்திரர்களுமாகிய எல்லாரும் சூரர்களும் அஸ்திரங்களைப் பயின்ற வர்களும் யுத்தத்தை விரும்புகின்றவர்களுமாயிருக்கின்றனர். அவர் களைப் பெரிய பயத்திலிருந்தும் காக்கக்கடவீர். யுத்தத்தில் நாசத்தை அடைந்தவர்களான எல்லாக்கௌரவர்களையும் பாண்டவர்களையும் இரண்டு பக்கத்திலும் தேராளிகளால் கொல்லப்பட்ட சூரர்களான தேராளிகளையும் நாம் பார்க்கவேண்டாம். ஓ! ராஜஶ்ரேஷ்டரே! பாரிலுள்ள அரசர்கள் சேர்ந்து பொறுமையின் வசத்தை அடைந்த வர்களாகி இந்தப்பிரஜைகளை நாசம்செய்துவிடுவார்கள். அரசரே! இந்த உலகத்தைக் காப்பீராக. இந்தப்பிரஜைகள் நசிக்கவேண் டாம். ஓ! குருநந்தனரே! நீர் நல்லதன்மையை அடைந்தால் அவை மிச்சமாயிருக்கும். ஓ! அரசரே! எல்லாரும் சுத்தர்களும் கொடை யாளிகளும் அகாரியத்தில் வெட்கமுடையவர்களும் பூஜ்யர்களும் நல்ல குலத்திற்பிறந்தவர்களும் ஒருவருக்கொருவர் உதவுகின்றவர் களுமாயிருக்கின்றனர். அவர்களைப் பெரிதான பயத்திலிருந்தும் காக்கக்கடவீர். ஓ! பாரதஶ்ரேஷ்டரே! இந்த அரசர்கள் க்ஷேமத்து டன் ஒருவரோடொருவர்சேர்ந்து பொறுமையையும் பகைமையையும் தள்ளி நல்ல ஆடைகளுடுத்து மாலைகள்சூடிப் பூஜிக்கப்பட்டவர்க

ளாய்ச் சேர்ந்து போஜனம்செய்தும் பானம்செய்தும், அவரவர்கள் வீட்டுக்குத் திரும்பிச்செல்லட்டும். ஓ! பரதஸ்ரேஷ்டரே! பாண்டவர்களிடத்தில் முன்இருந்ததுபோன்ற அன்பே முதுமைப்பருவமான இப்பொழுதும் உமக்கு இருக்கட்டும். சேர்ந்துகொள்ளும். ஓ! பரதஸ்ரேஷ்டரே! சிறுவர்களும் தந்தையை இழந்தவர்களுமான அவர்கள் உம்மாலேயே வளர்க்கப்பட்டார்கள். நியாயப்படி அவர்களையும் புத்திரர்களையும் காப்பீராக. அவர்கள் துன்பங்களில் விசேஷமாக உம்மால்தானே காக்கப்படத்தக்கவர்கள்? ஓ! பரதஸ்ரேஷ்டரே! உம்முடைய அறமும் பொருளும் அழியவேண்டாம். ஓ! அரசரே! பாண்டவர்கள் உம்மைவணங்கி அருள்வரச்செய்து சொல்லுகின்றனர்: 'உம்முடைய உத்தரவினால் நாங்கள் பின் தொடர்ந்து வந்தவர்களுடன் துக்கத்தை அனுபவித்தோம். இந்தப் பன்னிரண்டு வருஷங்கள் நாங்கள் வனத்தில் வஸித்தோம். அப்படியே பதின்மூன்றாவது ஒருவருஷம் ஜனங்களோடுகூடின இடத்தில் மறைந்து வஸித்தோம். ஓ! ஐயா! நம்முடைய பிதா அந்தப்பிரதிஜ்ஞையில் இருப்பாரென்று உறுதிசெய்துகொண்டு ஸங்கேதத்தை விடாமலிருந்தோம். எங்களுடைய [1] அதையும் பிராம்மணர்கள் அறிவார்கள். ஓ! பரதஸ்ரேஷ்டரே! ஸங்கேதத்திலிருப்பவர்களான எங்களுக்குரிய ஸங்கேதத்திலிருக்கக்கடவீர். ஓ! அரசரே! எந்நாளும் மிக்க துன்பத்தை அடையும்படி செய்யப்பட்ட நாங்கள் எங்களுடைய ராஜ்யத்தின்பாகத்தை அடையக்கடவோம். தர்மத்தையும் அர்த்தத்தையும் நன்கு அறிகின்றவரான நீர் எங்களை நன்றாகக் காக்கவேண்டும். உம்மிடத்திலுள்ள பெரியவரென்னும் தன்மையைக் கருதிப் பலதுன்பங்களைப் பொறுத்தோம். அப்படிப்பட்ட நீர் எங்கள்விஷயத்தில் தாய்தந்தைகள்போல இருக்கக்கடவீர். ஓ! பாரதரே! குருவின்விஷயத்தில் சிஷ்யனுடைய பெரிதான செய்கையை உம்முடையவிஷயத்தில் நாங்கள் செய்துகொண்டிருக்கிறோம். நீரும் எங்கள்விஷயத்தில் அவ்விதமே (குருவின்பெரிதான செய்கையைச்) செய்துகொண்டிருக்கவேண்டும். [2] வழிதவறிஇருக்கிற நாங்கள் பிதாவினால் நிலைபெறுத்தத்தக்கவர்களல்லரோ? எங்களை நல்ல வழியில் நிலைநிறுத்துவீராக. தர்மமாகிற நல்லநெறியில் இருக்கக்கடவீர்' என்று சொன்னார்கள். ஓ! பரதஸ்ரேஷ்டரே! உம்முடைய புத்திரர்களான பாண்டவர்கள் இந்தஸபையையும் உத்தேசித்து, 'தர்மத்தை அறிந்தவர்களான ஸபையோர்களிருக்கின்ற இந்த

1 ப்ரதிஜ்ஞையைக்காத்தல். 2 அரசர்களுக்குரிய பாலனமார்க்கம்.

ஸபையில் தகாதகார்யம் செய்யத்தக்கதன்று' என்றும் சொன்னார்கள். 'எந்தஸபையில் ஸபையோர்கள் பார்த்திருக்கத் தர்மம் அதர்மத்தாலும் மெய் பொய்யாலும் கெடுக்கப்படுகின்றனவோ அந்தஸபையில் ஸபையோர்கள் கெடுக்கப்படுகின்றனர். எவ்விடத்தில் தர்மம் அதர்மத்தால் அடிக்கப்பட்டு ஸபையை அடைகிறதோ அவ்விடத்திலுள்ள ஸபையோர்கள் அதர்மத்தால் அடிக்கப்பட்டவர்களாகி இந்தத் தர்மத்திலுள்ள கெடுதியைப் போக்குகிறதில்லை. நதியானது கரையில் முளைத்த மரங்களைத் தள்ளுவதுபோலத் தர்மமானது அவர்களைத் தள்ளிவிடுகிறது' என்றும் சொன்னார்கள். ஓ! பரதஸ்ரேஷ்டரே! தர்மத்தை அநுஸரிப்பவர்களும் காலத்தை எதிர்பார்த்து மௌனத்துடன் ஆலோசித்துக்கொண்டிருப்பவர்களுமான பாண்டவர்கள் தர்மத்தைவிட்டுவிலகாததும் நியாயத்தைவிட்டு விலகாததுமான ஸத்தியத்தைச்சொல்லுகின்றனர். ஓ! ஜனங்களுக்குத் தலைவரே! கொடுப்பதைத் தவிர வேறு என்ன நீர் சொல்லக்கூடியது? ஸபையிலிருக்கின்ற அரசர்களை தர்மார்த்தங்களை உறுதிசெய்துகொண்டே சொல்லட்டும். ஓ! புருஷஸ்ரேஷ்டரே! பரதர்களில் சிறந்தவரே! நான் சொல்வது ஸத்யமானால் இந்த அரசர்களை யமபாசத்திலிருந்து விடுதல் செய்யும்; ஆறுதலை அடையும்; கோபத்தின்வசத்தை அடையாதீர். ஓ! பகைவரை வாட்டுபவரே! அந்தப்பாண்டவர்களுக்கு உசிதமாகப் பிதாவைச்சேர்ந்த பாகத்தைக் கொடுத்துப் பிறகு புத்திரர்களுடன் விருப்பம் நிறைவேறினவராகிப் போகங்களை அநுபவிப்பீராக. ஓ! அரசரே! அஜாதசத்ருவானவர் எப்பொழுதும் ஸத்துக்களுடைய தர்மத்திலிருப்பதையும் புத்திரனோடுகூடின உம்மிடத்தில் (அவருக்கு) இருக்கிற இருப்பையும் அறிகிறீர். (உம்மால்) எரிக்கும்படி செய்யப்பட்டும், வெளியில் துரத்தப்பட்டும், மறுபடியும் உம்மையே அடுத்தார்கள். ஓ! அரசரே! புத்திரனுடன் சேர்ந்த உம்மாலேயே அவர் இந்திரப்பிரஸ்தத்துக்குத் துரத்தப்பட்டார். அவர்கள் அங்கே விலகியிருந்துகொண்டு எல்லா அரசர்களையும் வசஞ்செய்து [1] உம்மை எதிர்பார்க்கிறவர்களாகச் செய்தார்கள்; உம்மை மீறியிருக்கவில்லை. இவ்விதம் இருக்கின்ற அவர்களுடைய ராஜ்யங்களையும் தனத்தையும் தான்யத்தையும் பறித்துக்கொள்ள விரும்பின சகுனியினால் மிக்ககபடமானது செய்யப்பட்டது. அறிய முடியாத மனத்தையுடையவரான அந்தயுதிஷ்டிரர் அந்தநிலைமையை அடைந்தும் ஸபையை அடைந்தவளான கிருஷ்ணையைப் பார்த்தும்

1 உமக்கு வசமாக.

க்ஷத்திரிய தர்மத்திலிருந்தும் அசையவில்லை. ஓ! பாரதரே! நானோ தர்மத்தினாலும் அர்த்தத்தினாலும் ஸுகத்தினாலுமே உமக்கும் அவர்களுக்கும் நன்மையைவிரும்புகிறேன். அரசரே! பிரஜைகளை நாசம் பண்ணுகிறீர். ஓ! அரசரே! உமது நன்மையைத் தீமையாகவும் தீமையை நன்மையாகவும் நினைக்கிறீர். ஆனாலும், மிக்ககோபத்தில் சென்றவர்களான புத்திரர்களை அடக்கும். ஓ! அரசரே! பகைவர்களை அடக்குகின்றவர்களான பாண்டவர்கள் (உமக்குப்) பணிவிடை செய்வதற்கானாலும் இருக்கிறார்கள்; யுத்தம் செய்வதற்கானாலும் இருக்கிறார்கள். ஓ! பகைவரை வாட்டுபவரே! எது உமக்கு மிக்க உறுதியானதோ அதில் இரும்' என்றார். அவருடைய வார்த்தையை எல்லா அரசர்களும் மனத்தால் நன்கு புகழ்ந்தனர். அந்த ஸபையில் ஒருவரும் முதலில் வார்த்தையைச் சொல்லுவதற்குத் தொடங்கவில்லை.

---

## தொண்ணூற்றாறுவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(பரசுராமர் தர்போத்பவன்கதையையும் கிருஷ்ணார்ஜுனர்கள் நரநாராயணரின் அவதாரம் என்பதையும் சொல்லியது.)

மகாத்மாவான வாஸுதேவரால் அந்தவார்த்தையானது சொல்லப்பட்டபொழுது, ஸபையிலுள்ள எல்லாரும் அசையாதவர்களும் மயிர் சிலிர்த்தவர்களுமாயிருந்தார்கள். அவர்களில் எந்த ஆண்பிள்ளை மறுமொழி உரைக்க ஊக்கத்தை அடைகிறானென்று அந்த எல்லா அரசர்களும் மனத்தால் சிந்தித்தார்கள். அவ்விதம் அந்த எல்லா அரசர்களும் மௌனமாயிருந்தபொழுது, ஜமதக்னியின் புத்திரரான பரசுராமர் கௌரவர்களுடைய ஸபையில் இந்தவார்த்தையை உரைக்கலானார்.

'உதாரணத்தோடுகூடிய என்னுடைய உண்மையான இந்தவார்த்தையைச் சங்கையில்லாதவனாகக் கேட்கக்கடவாய். அதைக்கேட்ட பிறகு, 'நல்லது' என்று (நினைக்கிறாயானால்) நன்மையான அதனை அங்கீகரிக்கக்கடவாய். முற்காலத்தில் தம்போத்பவனென்கிற [1]ஸார்வபௌமனான அரசன் ஒருவன் இருந்தான். அவன் அகண்டமாக எல்லாப்பூமியையும் அனுபவித்தானென்று நமக்குக்கேள்வி. வீரியத்தையுடையவனும் மகாரதனுமான அவன் எந்நாளும் ராத்திரியின்

---

1 பூமிமுழுதுக்கும் அரசன்.

முடிவில் விடியற்காலத்தில் எழுந்திருந்து பிராம்மணர்களையும் க்ஷத்திரியர்களையும் வைஸ்யர்களையும் நோக்கி, 'யுத்தத்தில் (எனக்கு) மேலாகவோ ஸமமாகவோ பிராம்மணனோ க்ஷத்ரியனோ வைஸ்யனோ சூத்திரனோ ஆயுதமெடுத்தவன் ஒருவனிருக்கிறானா?' என்றுகேட்பவனானான். அந்த அரசன் மிக்ககொழுப்பினால் மதங்கொண்டு மற்ற ஒருவனையும் மதியாமல் இவ்விதம்சொல்லிக்கொண்டு இந்தப் பூமியில் ஸஞ்சரித்தான். (அப்பொழுது) வித்வான்களும் ஏழைமையில்லாதவர்களும் யாரிடமிருந்தும் பயமில்லாதவர்களுமான பிராம்மணர்கள், அடிக்கடி, தன்னைப்புகழ்கிறவனான அந்த அரசனைத் தடுத்தார்கள். அவன் தடுக்கப்பட்டும், அடிக்கடி பிராம்மணர்களை நோக்கி வினவினான். அப்பொழுது, தவமுடையவர்களும் மகாத்மாக்களும் வேதத்தில் உறுதியான நம்பிக்கைவைத்தவர்களும் இருபிறப்பாளர்களுமான பிராம்மணர்கள், கோபத்தால் ஜ்வலித்தவர்களாகி, அதிககர்வமுடையவனும் தனத்தால் மதித்தவனும் (எனக்குநிகர்யாரென்று) சொல்லுகிறவனுமான அந்த அரசனை நோக்கி, 'அரசனே! யுத்தத்தில் அனேகர்களை வென்றவர்களாயிருக்கும் இரண்டு புருஷஸ்ரேஷ்டர்களுக்கு நீ ஒருகாலும் நிகராகமாட்டாய்' என்று சொன்னார்கள். அவ்விதம் சொல்லக் கேட்ட அந்த அரசனோ, மறுபடியும் அந்தப் பிராம்மணர்களை நோக்கி, 'அந்தவீரர்கள் எங்கே இருக்கிறார்கள்? எவ்விடத்தில் பிறந்தவர்கள்? என்ன தொழிலுடையவர்கள்? அவர்கள் யார்?' என்று கேட்டான். பிராம்மணர்கள், 'அரசனே! நரனென்றும் நாராயணனென்றும் இரண்டுதவசிகள் மானிடவுலகத்தில் வந்தார்களென்று எங்களுக்குக் கேள்வி; அவர்களுடன் யுத்தம்செய். அந்த நரநாராயணர்களிருவரும் மகாத்மாக்களென்று கேள்விப்படுகிறோம். 'அவர்கள் கந்தமாதனபர்வதத்தில் கோரமும் சுட்டிச்சொல்ல முடியாததுமான தவத்தைச்செய்கின்றனர்' என்கிறார்கள்' என்றார்கள்.

அந்த அரசன் பொறாதவனாகி ஆறுஅங்கங்களோடுகூடின பெரிய சேனையைச் சேர்த்துக்கொண்டு, ஜயிக்கப்படாதவர்களான அவர்களிருக்குமிடம்சென்றான். அவன் மேடுபள்ளமுள்ளதும் கோரமுமான கந்தமாதனமலையை அடைந்து தேடுகிறவனாகி, வனத்தை அடைந்தவர்களான அந்தத்தவசிகளை அடைந்தான். பசியாலும் தாகத்தாலும் இளைத்திருப்பவர்களும் நரம்புகள் நிறைந்தவர்களும் குளிர்காற்று வெய்யில்களாலே இளைக்கச்செய்யப்பட்டவர்களுமான அந்தப்புருஷஸ்ரேஷ்டர்களைப் பார்த்து அருகில்சென்று வணங்கி ஆரோக்யத்தை வினவினான். அவர்கள் அந்த அரசனைக் கிழங்குகளாலும்

பழங்களாலும் ஆஸனத்திலும் ஜலத்திலும் பூஜித்துவிட்டு, 'என்ன காரியம் செய்யவேண்டும்?' என்று கேட்டார்கள். பிறகு, அவன் மறுபடியுமே அந்த (முன்சொல்லிய) சொல்லையே சொன்னான். 'பூமியானது என்னுடைய கைகளால் ஜயிக்கப்பட்டது; எல்லாப்பகைவர்களும் கொல்லப்பட்டார்கள்; உங்களோடு யுத்தத்தைவிரும்பி மலையை அடைந்தேன்; நெடுநாளாக என்னால் விரும்பப்பட்ட இந்த அதிதிபூஜையானது செய்யப்படலாம்' என்றான்.

நரநாராயணர்கள், 'ஓ! அரசரிற் சிறந்தவனே! இந்த [1] ஆஶ்ரமமானது கோபமும் லோபமும் விலகினது. இந்த ஆஶ்ரமத்தில், யுத்தமில்லை. ஆயுதமேது? ஒழுங்கீனம் ஏது? வேறிடத்தில் யுத்தத்தை விரும்பு. பூமியில் க்ஷத்திரியர்கள் பலர் இருக்கிறார்கள்' என்றார்கள். அவ்விதம் சொல்லப்பட்டும், மறுபடியுமே சொன்னான். ஓ! பாரத! அடிக்கடி பொறுக்கப்பட்டும், நயமொழி சொல்லப்பட்டும், தம்போத்பவன் யுத்தத்தைவிரும்புகிறவனாகித் தாபஸர்களை அழைக்கவே செய்தான். ஓ! பாரத! பிறகு, நரரானவர் ஒருபிடி (சிழ்கம்புல்) ஈர்க்குக்களை எடுத்துக்கொண்டு, 'யுத்தத்தில் விருப்பமுள்ளவனே! க்ஷத்திரிய! வா. யுத்தம்செய். எல்லா அஸ்திரங்களையும் எடுத்துக்கொள். சேனையைச் சேர். நீ பிராம்மணர் முதலான ஜனங்களைக் கொழுப்பினால் அழைக்கிறபடியால் நான் இனிமேல் உனக்கு யுத்தத்தில் உண்டான ஊக்கத்தைப் போக்குவேன்' என்றார். தம்போத்பவன், 'ஓ! தவஸியே! நம்மிடத்தில் இந்த அஸ்திரத்தை உசிதமாகநினைக்கிறீரேயானால், நான் யுத்தத்தைவிரும்பி வந்தவனாதலால், [2] இதனாலேயும் உம்முடன் யுத்தம்செய்வேன்' என்றான். இவ்விதம் சொல்லிவிட்டு, சேனையுடன்கூடின தம்போத்பவன் அந்தத் தாபஸரைக் கொல்லவிருப்பமுள்ளவனாகி எங்கும்அம்புமாரியை இறைத்தான். அந்த முனியானவர் அவனால் இறைக்கப்பட்ட கோரமும் பகைவரை அறுக்கின்றவைகளுமான அந்தப்பாணங்களைச் சிழ்கீர்க்குக்களால் வீணாகச்செய்து (அந்தஈர்க்குக்களை) இறைத்தார். பிறகு, ஒருவராலும் ஜயிக்கப்படாதவரான அவர் அவன்பொருட்டுக் கோரமும் பதில்தொடுக்கமுடியாததுமான ஐஷீகாஸ்திரத்தை விட்டார். அது ஆச்சர்யமாயிருந்தது. பயத்தை உண்டுபண்ணும்நிமித்தமாக அடிக்கின்ற அந்த முனிவர் மாயையினால் பகைவர்களுடையகண்களையும் காதுகளையும் மூக்குகளையும் ஈர்க்குக்களால் இறைத்தார்.

---

1 நாங்களடைந்திருக்கும்வானப்பிரஸ்தாஶ்ரமம்.

2 ஈர்க்குக்களுக்குப் பிரதியாகவும் என்பது கருத்து.

அந்த அரசன் ஈர்க்குக்களால் நிறைக்கப்பட்டதும் வெளுத்ததுமான ஆகாயத்தைப் பார்த்து (அவருடைய) பாதங்களில் விழுந்தான்; 'எனக்கு க்ஷேமமுண்டாகட்டும்' என்றும் சொன்னான். ஓ! அரசனே! சரணத்தைவிரும்புகிறவர்களுக்குச் சரணமளித்ததற்குத் தக்கவரான நாரானவர் அவனைநோக்கிச் சொல்லலானார். 'பிராம்மணர்களுக்கு நல்லவனும் தர்மசிந்தையுள்ளவனுமாயிருக்கக்கடவாய். மறுபடியும் இவ்விதம் செய்யாதே. அரசனே! ஓ! ராஜஸ்ரேஷ்டனே! மனத்தினால் க்ஷத்திரியதர்மத்தை நினைக்கிறவனும் பகைவர்களுடையபட்டணங்களை ஜயிப்பவனுமாயிருப்பவன் இவ்விதமனிதனாயிருக்கக்கூடாது. கொழுப்புடன்கூடினவனாகி, மிகவுந்தாழ்ந்தவனையோ சிறந்தவனையோ ஒருவரையும் ஒருவிதத்தாலும் நிந்தியாதே. அரசனே! இது உனக்கு ஸ்திரமாயிருக்கட்டும். ஸுமுகனே! அரசனே! அறிவைச் செலுத்தினவனும் லோபம் நீங்கினவனும் அகங்காரமற்றவனும் மனமடங்கினவனும் இந்திரியங்களைச்சிக்ஷித்தவனும் பொறுமையுள்ளவனும் மென்மையுள்ளவனுமாகப் பிரஜைகளைப் பரிபாலனம் செய். இனிமேலும், பலாபலத்தைஅறியாமல் ஒருவனையும் அவமதியாதே. உத்தரவுபெற்றுக்கொண்டு க்ஷேமமாகப்போ. மறுபடியும் இவ்விதம் செய்யாதே. எங்கள்சொல்லால் பிராம்மணர்களை க்ஷேமத்தை மிகவும் கேள்' என்றார். பிறகு, அரசன் மகாத்மாக்களான அவர்களுடைய பாதங்களில் வணங்கித் தன்பட்டணத்தைக் குறித்துத்திரும்பி வந்தான். தர்மத்தைப் பெரிதும் கைக்கொண்டான்.

முன்காலத்தில், நரரால் செய்யப்பட்ட அந்தச்செய்கையே மிகப் பெரிது. அவரைக்காட்டிலும் பலமடங்கு அதிகமான குணங்களாலே நாராயணர் சிறந்தவராயிருந்தார். அரசனே! ஆகையினால், விற்களில் சிறந்ததான காண்டீவத்தில் அஸ்திரம்தொடுக்கப்படுமுன்னரே நீ கர்வத்தை விட்டுவிட்டுத் தனஞ்சயனை அடையக்கடவாய். யானைகுதிரைமுதலியவைகளுடைய முகப்பிலேயே தூங்கச்செய்கிற ப்ரஸ்வாபமென்கிற காகுதிகாஸ்திரம், பீரங்கிச்சப்தத்தால் கிளி கூட்டில் பதுங்குவதுபோலத் தேர்முதலியவைகளில் பதுங்கச்செய்கின்ற மோஹனமென்கின்ற சுகாஸ்திரம், ஸ்வர்க்கத்தைக் கண்ணில் காண்பிக்கின்றதுபோன்ற உன்மாதனம் என்னும் நாகாஸ்திரம், விட்டமாத்திரத்தில் மேல் விழுந்து மலமூத்திரங்களை விடச்செய்கின்ற த்ராஸனமென்னும் அக்ஷிஸந்தர்ஜனாஸ்திரம், இடைவிடாமல் ஆயுதங்களைப்பொழிகின்ற ஐந்திர முதலிய தேவர்களுடைய ஸந்தானாஸ்திரம், நர்த்தனம் செய்

விக்கின்ற பைசாசம் என்னும் நர்த்தகாஸ்திரம், அழிவைச்செய்கின்ற ராக்ஷஸமென்னும் கோராஸ்திரம், வாயில் பாஷாணத்தைப்போட்டுக்கொண்டு மரிக்கச்செய்கிற யாம்யமென்னும் எட்டாவதான ஆஸ்யமோதகாஸ்திரம் ஆகியவைகளாலே அடிக்கப்பட்ட எல்லாமனிதர்களுமே மரணத்தையடைகின்றார்கள். மனிதர்கள் (நாகத்தால்) பயித்தியம்பிடித்துக் குதித்தல்முதலியவற்றைச் செய்கின்றனர். (சுகத்தினால்) அறிவு அழிந்து நினைவு மறந்துபோகின்றனர். (காகுதிகத்தால்) தூங்குகின்றனர். (ஸந்தானத்தால்) திகைத்துத் திரிகின்றனர். (கோரத்தினால்) வாந்திசெய்கின்றனர். (அக்ஷிஸந்தர்ஜனத்தினால்)மூத்திரத்தை விடுகின்றனர். (ஆஸ்யமோதகத்தால்) எப்பொழுதும் அழுகின்றனர். (நர்த்தகத்தால்) சிரிக்கின்றனர். காமக்ரோதங்கள் லோபமோகங்கள் மதமானங்கள் மாத்ஸர்யாகங்காரங்கள் இவைகள் முறையே அந்தக் காகுதிகமுதலியவற்றின் குணங்களாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. எல்லாஉலகங்களையும் படைப்பவரும் எல்லா உலகங்களுக்கும் ஈஸ்வரரும் எல்லாக்கர்மங்களையும் அறிந்தவருமான நாராயணரைப் பந்துவாகவுடைய அர்ஜுனன் யுத்தத்தில் பிறரால் தாங்கமுடியாதவன். பாரத! மூவுலகங்களிலும் எவன் வானரக்கொடியுடையவனும் வீரனுமான தனஞ்சயனை வெல்லுவதற்கு மனவெழுச்சியை அடைகிறான்? யுத்தத்தில் அவனுக்கு நிகரானவன் இல்லை. பார்த்தனிடமுள்ள குணங்கள் கணக்கிடமுடியா. ஜனார்த்தனர் அவனிலும் சிறந்தவர். குந்திபுத்ரனான தனஞ்சயனை நீயே நன்கு அறிகிறாய். ஓ! மஹாராஜனே! மிக்க வீரர்களும் புருஷஸ்ரேஷ்டர்களுமான அர்ஜுனனையும் கேசவரையும் அந்த நரநாராயணர்களாகவே அறியக்கடவாய். பாரத! இதனை இவ்விதம் அறிந்து, என்னிடமும் சங்கைப்படாமலுமிருக்கிறாயானால், கொண்டாடத்தக்க புத்தியை அடைந்து பாண்டவர்களுடன் ஸமாதானத்தை அடைவாய். பரதஸ்ரேஷ்ட! 'எனக்குப் பேதம் ஏற்படவேண்டாம்' என்று நன்மையை நினைக்கிறாயானால் ஸமாதானத்தை அடை. யுத்தத்தில் மனத்தைச் செலுத்தாதே. கௌரவர்களில் சிறந்தவனே! உங்களுடைய குலமும் உலகத்தில் பிரசித்திபெற்றது; அது அப்படியே இருக்கட்டும்; உனக்கு க்ஷேமமுண்டாகட்டும். உன்கார்யத்தையே உற்று நோக்கக்கடவாய்' என்றார்.

---

## தொண்ணூற்றேழாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(கண்வர் துரியோதனனுடைய வலிமைச் செருக்கைப் போக்க மாதலியின் கதையைத் தொடங்கினதும், மாதலி குணகேசிக்கு வரன்தேடிப் பாதாளம் சென்றதும்.)

பரசுராமருடைய வார்த்தையைக்கேட்டுப் பகவானான கண்வ ரிஷியும், கௌரவர்களுடைய ஸபையில் துரியோதனனை நோக்கி, இந்த வார்த்தையைச் சொல்லலானார். 'உலகங்களுக்குப் பாட்டனா ரான பிரம்மாவானவர் குறைவில்லாதவரும் அழிவில்லாதவருமா யிருப்பவர். பகவான்களான அந்த நரநாராயணர்களென்கிற ரிஷி களும் அப்படியே. எல்லாத்தேவர்களிலுமோ விஷ்ணு ஒருவரே ஸநாதனரும் எவராலும் வெல்லமுடியாதவரும் அழிவில்லாதவரும் என்னாளும் இருப்பவரும் ஸமர்த்தரும் ஈச்வரருமாயிருப்பவர். மற் றவர்களோ, பிரளயகாலத்தில் மரணமுடையவர்கள். சந்திர ஸூர் யர்களும் பூமியும் ஜலமும் வாயுவும் அக்கினியும் ஆகாயமும் கிரகங் களும் நக்ஷத்திரங்களின் கூட்டங்களும் அப்படியே. அவர்களெல் லாரும் எப்பொழுதும் ஜகத்தினுடைய நாசத்தின் முடிவில் மூவுல கத்தையும் விட்டுவிட்டு நாசத்தை அடைகின்றனர்; மறுபடியும் மறு படியும் படைக்கவும்படுகின்றனர். மானிடர்களான மற்றவர்களும் விலங்குப்பிறவியை அடைந்தமிருகங்களும் பக்ஷிகளும் ஜீவலோ கத்திலுள்ள மற்றும் ஸஞ்சரிப்பவைகளும் சிறிதுநேரத்தில் மரணத்தை உடையன. அரசர்களோ, பெரும்பாலும், செல் வத்தை அநுபவித்து யௌவனமுள்ளவர்களாகவே ஆயுளின் நாசத் தில் புண்ணியபாவங்களை அனுபவிப்பதற்குச் செல்லுகின்றனர். அப்படிப்பட்ட நீ இவ்வுலகில் தர்மபுத்திரருடன் ஸமாதானத்தைச் செய்யத்தக்கவன். பாண்டவர்களும் கௌரவர்களுமே பூமியைப் பரிபாலனம் செய்யட்டும். ஓ! துர்யோதன! 'நானே பலவான்' என்று நினைக்கக்கூடாது. ஓ! புருஷச்ரேஷ்டனே! பலவான்களைக் காட்டிலும் பலவான்கள் காணப்படுகின்றனரல்லவா? ஓ! கௌரவ! பலமானது பலவான்களுடையமத்தியில் பலமாகிறதில்லை. தேவர் களுடைய பராக்கிரமம்போன்ற பராக்கிரமத்தையுடையவர்களான அந்தப்பாண்டவர்கள் எல்லாரும் பலவான்களல்லரோ? இந்த விஷ யத்திலும் கன்னிகையைக் கொடுக்க விருப்பமுள்ளவனும் வரனைத்

தேடுகிறவனுமான மாதலியினுடைய பழமையான இந்தச் சரித்திரத்தைச் சொல்லுகின்றார்கள். அது வருமாறு:

மூவுலகத்திற்கும் அரசனான இந்திரனால் நன்குமதிக்கப் பெற்றவனான மாதலியென்கிற ஸாரதி இருக்கிறான். அவனுக்கு வீட்டில் ரூபத்தால் உலகத்தில் பிரசித்தியடைந்தவளான ஒரே கன்னிகை. தேவர்களுக்குரிய ரூபத்தோடுகூடிய அவள் குணகேசியென்னும் பெயரால் புகழடைந்து சரீரத்தினாலும் காந்தியினாலுமே மற்றப்பெண்களை மிஞ்சியிருந்தனள். அரசனே! மாதலியானவன் அந்தக்கன்னிகையின் தானகாலத்தைஅறிந்து, அதில்மனம் பற்றிக் கவலைப்பட்டுப் பத்தினியுடன் ஆலோசிக்கலானான். 'மிக்க சீலமுடையவர்களும் மேன்மைபொருந்தினவர்களும் புகழுள்ளவர்களும் மெதுத்தன்மையுடையவர்களுமாயிருந்தாலும், மனிதர்களுடைய குலத்தில் கன்னிகைகளை வாழ்க்கைப்படுத்தலை நிந்திக்கவேண்டும். ஸாதுக்களுடைய கன்னிகைகூடத் தாயின்குலம் தந்தையின்குலம் கணவனின்குலமாகிய மூன்று குலங்களையும் ஸந்தேகிக்கப்பட்டனவாகச் செய்கிறாள். தேவலோகமும் மனுஷ்யலோகமும் [1] மானிடநேத்திரத்தினாலேயே சென்றே தேடப்பட்டன. (அவைகளில்) எனக்கு வரன் பிடிக்கவில்லை' என்று ஆலோசித்தான். வரன் நிமித்தத்தில், அவன் தேவர்களையும் அஸுரர்களையும் கந்தருவர்களையும் மனிதர்களையும் அப்படியே அநேகம்ரிஷிகளையும் விரும்பவில்லை. அவன் ராத்திரியில் ஸுதர்மை என்கிற மனைவியுடன் ஆலோசித்து, நாகலோகம்செல்லுவதில் புத்தியைச் செலுத்தினான். 'தேவர்களிலும் மனிதர்களிலும் ரூபத்தால் குணகேசிக்குஸமமான ஒரு வரனும் என்னால் காணப்படவில்லை. நாகர்களில் நிச்சயமாயிருப்பான்' என்று ஆலோசித்து ஸுதர்மையிடம் அநுமதிபெற்று அவன் [2] ஸுதர்மை என்கிற ஸபையையும் பிரதக்ஷிணம்செய்து கன்னிகையையும் உச்சிமோந்து பூதலத்தை அடைந்தான்.

1 'மனிதஞானத்தினாலேயே' என்பது பழையவுரை.

2 'ஸுதர்மாம்' என்பது மூலம். 'அவளை ப்ரதக்ஷிணம் செய்து' என்பது இங்கிலிஷ்மொழிபெயர்ப்பு.

## தொண்ணூற்றெட்டாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(மாதலி நாரதரை வழியில்சந்தித்து அவருடன் வருணனிடம்சென்று உபசரிக்கப்பெற்றுச் செல்லுகையில், நாரதர் வருணலோகத்திலுள்ள பொருள்களின் குணங்களை மாதலிக்குச் சொல்லியது.)

மாதலி வழியில் சென்றுகொண்டிருக்கையில், வருணனைப் பார்ப்பதற்காகப் போகின்றவரான நாரதமஹரிஷியைத் தற்செயலாகச் சந்தித்தான். பிறகு, நாரதர் அவனைநோக்கி, 'நீ எங்கே போவதற்கு முயற்சி செய்கிறாய்? ஸூத! உன்கார்யத்தினாலேயா? அல்லது, இந்திரனுடைய கட்டளையினாலேயா?' என்று கேட்டார். வழியில் செல்லுகின்ற நாரதரால் இவ்விதம் நன்கு வினவப்பட்ட மாதலி, தன்கார்யம் எல்லாவற்றையும் உள்ளபடி அவரிடம் சொன்னான். பிறகு, அந்தமுனிவர் அவனைநோக்கி, 'சேர்ந்துபோவோம்; நானும் வருணனைப் பார்ப்பதற்காக ஸ்வர்க்கத்திலிருந்து புறப்பட்டேன். நான் உனக்குப் பூதலத்தைக்காண்பித்து எல்லாவற்றையும் சொல்வேன். ஓ! மாதலியே! அவ்விடத்தில் ஒரு வரனைப்பார்த்து நிச்சயிப்போம்' என்று சொன்னார். மஹாத்மாக்களான அந்த நாரத மாதலிகளிருவரும் பூமியினுள் (அதாவது பாதாளத்தில்) புகுந்து லோகபாலனான வருணனைப் பார்த்தார்கள். அவ்விடத்தில் நாரதரானவர் தேவரிஷிகளுக்கு உசிதமான பூஜையை அடைந்தார். மாதலியும் இந்திரனுக்கு உசிதமான பூஜையை அடைந்தான். ஸந்தோஷத்தைஅடைந்த மனமுள்ளவர்களும் காரியமுள்ளவர்களுமான அவ்விருவரும் வருணனிடம் சொல்லிக்கொண்டு அவனால் அனுமதிபெற்று நாகலோகத்தைக்குறித்துப் புறப்பட்டார்கள். பூமிக்குள்ளே வஸிக்கின்ற எல்லாப் பிராணிகளையும் அறிகின்ற நாரதர் ஸாரதிக்கு எல்லாவற்றையும் மிச்சமின்றி விவரித்துக் கூறினர். நாரதர், 'ஓ! ஸூத! புத்திரர்களாலும் பௌத்திரர்களாலும் சூழப்பட்டவனாகி வருணனானவன் உன்னால் பார்க்கப்பட்டான். வருணனுடைய ஸ்தானமானது எங்கும் மங்களகரமும் செழிப்புள்ளதுமாயிருப்பதைப் பார். இவ்விடத்தில் ஜலங்களுக்குப் பதியான வருணனுடைய இந்தப்புத்திரனானவன் பெரிய அறிவைபுடையவன். இவனே

நன்னடையாலும் தூய்மையினாலும் சிறந்தவன். இந்த வருணனுக்கு இஷ்டமாயிருப்பவனும் தாமரைமலர்கள்போன்ற கண்களையுடையவ னும் சிறந்தரூபமுடையவனும் பார்க்கத்தக்கவனுமான இந்தப் புஷ்கரன் சந்திரனுடையபுத்திரியினால் பர்த்தாவாக வரிக்கப்பட்டான். ரூபத்தால் லக்ஷ்மிபோன்ற ஜ்யோத்ஸ்னாகாலியென்னும் இரண்டாவது (சந்திர) புத்திரியால், ச்ரேஷ்டனான அதிதியின் ஜ்யேஷ்டபுத்திரன் பர்த்தாவாகச்செய்துகொள்ளப்பட்டான். இந்திரன் தோழனே! முழுதும்பொன்னாலாகியதும் தேவர்கள் இதையடைந்து ஸுரர்களானது மான வருணனுடையவீட்டைப் பார். மாதலியே! தவிரவும், இதோ ராஜ்யம்கவரப்பட்ட அஸுரர்களுடைய எல்லாஆயுதங்களும் ஜ்வலிக்கின்றவைகளாகக் காணப்படுகின்றன. மாதலியே! இவைகள் ஸ்மரணத்தினால் பிரயோகிக்கப்பட்டவைகளும் தேவர்களால் அவமதிக்கப்பட்டவைகளுமாய் நசியாமல் திரும்பிவந்தனவாம். மாதலியே! இவ்விடத்தில் திதியின் வம்சத்திலுண்டானவர்களும் ராக்ஷஸ ஜாதியில் உண்டானவர்களும் அஸுரர்களாலே திவ்யமான ஆயுதத்தை யுடையவர்களாகச் செய்யப்பட்டிருந்தனர். இதோ வருணனைச் சேர்ந்தமடுவில் பெரியஜ்வாலையையுடைய அக்கினியானவன் விழித்துக்கொண்டிருக்கிறான். புகையில்லாத அக்கினியுடன் விஷ்ணுவின் சக்ரமானது கட்டப்பட்டது. இதோ காண்டீ என்கிற கட்கமிருகத்தின் கொம்பினால் செய்யப்பட்டதும் எல்லாவற்றின் ஸம்ஹாரத்திற்காகவும் ஸம்பாதிக்கப்பட்டு எந்நாளும் தேவர்களால் காக்கப்படுவதுமான இந்த வில் காண்டீவமென்கிற பெயர் கொண்டது. எப்பொழுதும் லக்ஷம் விற்களுடைய பலத்தினால் நிறைந்ததாயிருக்கிற இந்த வில்லானது கார்யமேற்பட்டபொழுது அந்த அந்த (க்கார்யத்திற்குத் தக்கபடி அதிக) பலத்தையும் தரிக்கிறது. வேதத்தைச் சொல்லிக்கொண்டிருக்கிற பிரம்மாவினால் இது முதலில் படைக்கப்பட்டு உக்கிரமாகி ராக்ஷஸர்களுக்குச் சமமான அரசர்களில் சிக்ஷிக்கமுடியாதவர்களையும் சிக்ஷிக்கிறது. பெரிதும் அரசர்களுடைய கூட்டத்தால் பிரகாசிக்கச்செய்யப்பட்டதும் பெரிதான அபிவிருத்தியை உடையதுமான இந்தவில்லை வருணனுடைய புத்திரர்கள் தாங்குகின்றனர். இதோ வருணனுடைய குடையானது, குடைவைக்கின்ற வீட்டிலிருந்துகொண்டு மேகம்போல் எங்கும் குளிர்ந்தஜலத்தைப் பொழிகின்றது. குடையிலிருந்தும் விழுந்ததும் சந்திரன்போல நிர்மலமுமான இந்த ஜலமானது இருளால் சூழப்பட்டுக் காணப்படாதபடி இருக்கிறது. மாதலியே! இவ்விடத்தில் பார்க்கவேண்டிய ஆச்சரி

யங்கள் பல உண்டு. உன் கார்யத்திற்குத் தடைநேரிடுமாகையால், போவோம். தாமதம் வேண்டாம்.

தொண்ணூற்றேழாவது அத்யாயம்.

# பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(நாரதர் மாதலிக்குப் பாதாளத்திலுள்ளபொருள்களைக்காட்டி அவற்றின் குணங்களைச் சொல்லியதும், அவன் அந்த வரன் ஒன்றும் தனக்குப் பிடிக்கவில்லை என்றும் வேறிடம் செல்லவேண்டுமென்றும் சொல்லியதும்.)

இதுவோ, நாகலோகத்தின் நடுவிலிருப்பதும் பாதாளமென்று பெயர் பெற்றதும், தைத்தியர்களாலும் தானவர்களாலும் அடையப் பட்டதுமான பட்டணம். பூமியிலுள்ள சிலஜங்கமங்கள் ஜலத் தோடுகூட இதை அடைந்து பெரிதான சப்தத்தையுடைய இதில் பிரவேசித்துப் பயத்தால் பீடிக்கப்பட்டுச் சப்திக்கின்றன. இதில் ஜலங்களைப்புஜிக்கிறவனும் [1] அஸுரஜாதியுமான அக்கினியானவன் எப்பொழுதும் ஜ்வலிக்கிறான். அவன், தன்செயலால் தரிக்கப்பட்ட ஸ்வரூபத்தையுடைய தன்னை (த்தேவர்களால்) கட்டப்பட்டதாக நினைத்துக்கொண்டிருக்கிறான். இதில் தேவர்கள் அமிருதத்தைப் பானம்செய்து பகைவர்களைக் கொன்று (அமிருதத்தை) வைத்திருக் கின்றனர். [2] இங்கிருந்துதான் சந்திரனுக்கு க்ஷயமும் விருத்தியும்

1 வடவாமுகாக்னி அஸுரத்தன்மையுள்ளதென்பது இங்கிலிஷ் மொழிபெயர்ப்பின் கருத்து.

2 'பந்துவடிவமான பூகோளத்தைச் சுற்றிவருகிற சூரியனுக்காவது சந்திரனுக்காவது பூகோளத்தின் ஒரு புறத்தால் மறைவுவருவதால் சில ஸமயத்தில் அவை மனிதர்களுக்குத் தெரியாமல் போகின்றன. அவற் றில் சூரியன் தெரியாத ஸமயமே அப்படிக் காணாதவர்களுக்கு ராத்ரி யாகிறது. பூகோளத்தின் உச்சியிலும் அடியிலுமிருப்பவர்கள் எப் பொழுதுமே சூரியன்முதலியவற்றைப் பார்க்கிறார்கள். அவ்விடத்தில் ஜலமயமாயிருக்கிற சந்திரமண்டலமானது ஒளிவடிவமாயிருக்கிற சூரிய கிரணங்களால் ஒளியுள்ளதாகச் செய்யப்படுகிறது. அவற்றுக்கும் சந்திர

காணப்படுகின்றன. [1] இதில் ஸுவர்ணனென்கிற [2] ஆதித்தியன் பர்வ காலந்தோறும் குதிரையின் சிரம்போன்ற சிரத்தையுடையவனாகிச் சப்தங்களாலே உலகத்தை நிரப்பிக்கொண்டு கிளம்புகிறான். ஜல சரீரமுள்ள சந்திரன் முதலிய எல்லாம் மிகுதியாக இதில் விழுகின்ற காரணத்தால் உத்தமமான இந்தப்பட்டணம் [3] பாதாள மென்றே சொல்லப்படுகின்றது. உலகத்திற்கு ஹிதமான ஐராவதமானது இதிலிருந்தும் குளிர்ந்த ஜலத்தை எடுத்து மேகங்களில் விடுகின்றது. அதுதான் இந்திரன் பொழிகின்ற ஜலம். யானையரசான ஐராவதம், வாமனம், குமுதம், அஞ்சன மென்கிற சிறந்தயானைகள் ஸுப்ரதீகத்தினுடைய வம்சத்தில் பிறந்தவை. இவ்விடத்தில் பலவித வடிவையுடையவைகளான திமிகளும் அனேக ரூபங்களையுடைய நீர் வாழ்பிராணிகளும் ஜலத்தில் சந்திரகிரணத்தைப் பானம் பண்ணிக் கொண்டு வஸிக்கின்றன. ஸூத! இவ்விடத்தில் பாதாளதலத்தை அடுத்த பிராணிகள், பகலில் ஸூர்யகிரணங்களால் பிளக்கப்பட்டு மரணத்தை அடைந்தவைகளாகி ராத்திரியில் மறுபடியும் பிழைக்

னுக்கும் எவ்வளவுக்கெவ்வளவு விலக்கமிருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு சந்திரன் பிரகாசிக்கிறது. எவ்வளவுக்கெவ்வளவு நெருக்க மிருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு சூரியனுக்கு முன்னிருக்கும் அக்னிமுதலிய தேவர்களால் சந்திரன் நமதுபார்வைக்கு மறைக்கப்படுகிறது. இதைநோக்கியே, 'முதற்கலையை அக்நி பருகுகிறது. இரண்டாவது கலையைச் சூரியன் பருகுகிறது' என்பது முதலிய சாஸ்திரம் ஏற்பட்டிருக்கிறது. இங்கு, குடிப்பதென்பதும் எதிரிலிருப்பதால் திருப்திப்படுவது மட்டுமே. பாதாள நாபி (பூகோளத்தின் அடி) யிலிருப்பவர்களுக்கும் மேருவின் உச்சியிலிருப்பவர்களுக்குப்போல எப்பொழுதும் சந்திரன் பூர்ணமாகவே தெரிகிறது. அவர்கள் பார்க்குமிடத்தில் அக்நி முதலியவற்றால் மறைவில்லை. பாதாளநாபிஸ்தானமாகிய இவ்விடத்திலிருந்து 'சந்திரனுக்குத் தேய்வும் வளர்ச்சியும் காணப்படா' என்பது பொருள். 'நத்ருஶ்யதே' என்பது பாடமாயிருந்து, 'ப்ரத்ருஶ்யதே' என்று கைதவறியும் எழுதப்பட்டிருக்கலாம் என்பது பழையவுரை.

1 'இங்கு, வேதஸ்வரூபியான ஹயக்ரீவரென்னும் தேவர் (வேத) வாக்குக்களால் உலகத்தை நிரப்பிக்கொண்டு யுகஸந்திகளில் ஆவிர்ப்பவிக்கிறார்' என்பது பழையஉரை. 2 'ஆதித்ய:' என்பதற்கு, 'அதிதிபுத்ரரான விஷ்ணு' என்பது பொருள்.

3 'சந்திரகாந்தம் போல ஜலத்தைப் பெருக்குகின்றன. ஆகையால், 'பதஜ்ஜல' என்பது 'பாதாள' என்றாயிற்று' என்பது பழையஉரை. அலம்—மிகுதியாக, பாத—விழுகின்றன என்றுமாம்.

கின்றன. இவ்விடத்தில் சந்திரன் எந்நாளும் உதிக்கிறவனுகிக் கிரணங்களாகிற கைகளால் அமிருதத்தையும் தொட்டுத் தேகிகளை யும் தொட்டுப் பிழைக்கச்செய்கின்றுன். இங்கு அதர்மத்தில் பற றுள்ளவர்களான அஸுரர்கள் காலத்தினுல் பீடிக்கப்பட்டவர்களும் கட்டப்பட்டவர்களும் இந்திரனுல் செல்வம் அபகரிக்கப்பட்டவர் களுமாகி வஸித்தனர். இவ்விடத்தில், எல்லாப்பூதங்களுக்கும் மஹேஸ்வரரான பூதபதிஎன்பவர் எல்லாப்பூதங்களுடைய க்ஷேமத் தின்பொருட்டும் உத்தமமான தவத்தைச்செய்தார். இவ்விடத்தில் கோவ்ரதத்துடன்கூடினவர்களும் தங்கள் வேதாத்தியயனத்தினுல் ஶ்ரமத்தை அடைந்தவர்களும் பிராணனைவிட்டவர்களும் ஸ்வர்க் கத்தை ஜயித்தவர்களும் வேதியர்களுமான மகரிஷிகள் வஸிக்கின்ற னர். இவ்வுலகில் எந்நாளும் ஏதாவது ஒன்றை உடுத்து ஏதாவ தொன்றைப்புஜித்து எங்குவேண்டுமோ அங்குச் சயனித்துக்கொண் டிருப்பவன் கோவிரதமுள்ளவனுகச் சொல்லப்படுகின்றுன். மாத லியே! பார். இவ்விடத்தில் எவனுவது ஒருவன், உனக்குக் குணத்தினுல் வரனுகப் பிடித்திருந்தால் முயற்சிசெய்து அவனை அடைந்து பிரார்த்திக்கிறேன். ஜலத்தில் வைக்கப்பட்டதும் ஒளியி னுல் ஜ்வலிக்கிறதுமான இந்த அண்டமானது பிரஜைகளுடைய பிர ளயம்வரையில் வெடிக்கிறதில்லை; அசைகிறதுமில்லை. இதனுடைய உற்பத்தியையும் நாசத்தையும் சொல்ல நான் கேட்டதில்லை. இதன் மாதாவையும் பிதாவையும் ஒருவரும் அறியார். ஓ! மாத லியே! இங்கிருந்தன்றோ, பிரளயகாலத்தில் பெரியதான அக் கினியானது கிளம்பிச் சராசரங்களுடன்கூடிய மூவுலகம்முழுமையும் எரிக்கப்போகிறது' என்றுர். மாதலியோ நாரதருடைய வார்த்தை யைக்கேட்டபிறகு, 'இவ்விடத்தில் எனக்கு ஒருவனும் திருப்தியா யில்லை. வேறிடம் செல்லும். தாமதம் வேண்டாம்' என்றுன்.

---

## நூறுவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(நாரதர் ஹிரண்யபுரம்சென்று அஸுரர்களில் வரன்தேடும்படி மாதலிக்குச் சொல்லியதும், அவன் அஸுரர்களுக்கும் தேவர்களுக்கும் பகையாயிருந்தலால் பகைவர் பக்கத்து உறவு வேண்டாமென்றதும்.)

நாரதர், 'அனேகம் மாயைகளோடு ஸஞ்சரிக்கின்ற தைத்தியர்களையும் தானவர்களையும் சேர்ந்ததும் ஹிரண்யபுரமென்று பிரஸித்திபெற்றதும் பெரிதும் சிறந்ததுமான இந்தப்பட்டணமானது, விஸ்வகர்மாவினால் மிக்க ப்ரயத்தினத்தோடு நிர்மாணம்செய்யப்பட்டதும் மயனால் மனத்தால் ஸ்ருஷ்டிக்கப்பட்டதுமாகப் பாதாளப்ரதேசத்தை அடுத்திருக்கிறது. இதில், முற்காலத்தில் மிக்க வலிமையுள்ளவர்களும் சூரர்களும் வரமளிக்கப்பட்டவர்களுமான தானவர்கள் ஆயிரம்மாயைகளைச் செய்துகொண்டு வசித்தனர். இவர்கள் இந்திரனாலோ மற்ற யமனாலோ வருணனாலோ குபேரனாலோ வசபடுத்தப்பட முடியார். ஓ! மாதலியே! இதில் காலகஞ்சர்களென்கிற அஸுரர்களும் விஷ்ணுவின் பாதத்திலுண்டான நைருதர்களும் பிரம்மாவின் பாதத்திலுண்டான யாதுதானர்களும் தெற்றுப்பற்களும் பயங்கரமான வேகமும் வாயுவுக்கு நிகரான வேகபராக்கிரமங்களும் மாயையின் பலமும் யுத்தத்தில் கெட்டமதமுமுடைய நிவாதகவசர்களென்கிற தானவர்களும் வஸிக்கின்றனர். இந்திரனவன் இவர்களைக் கொல்ல வல்லவனாகவில்லையென்பதை நீ அறிகிறாய். ஓ! மாதலியே! நீயும் உன் புத்திரன் கோமுகனும் இந்திராணிக்குப் பதியான தேவராஜனும் அவன்புத்திரன் ஜயந்தனும் பலமுறை பங்கப்பட்டீர்கள். ஓ! மாதலியே! பொன்மயமானவைபும் வெள்ளிமயமானவையும் சிற்பவிதிப்படி வேலைகளுடன் கூடினவையும் சேர்ந்துஅமைந்தவையுமான வீடுகளைப் பார். வைடூர்ய மணிகளாலே விசித்திரமானவைகளும் பவழங்களால் செய்யப்பட்டு ரமணீயமானவைகளும் ஸூர்யகாந்தக்கற்களால் செய்யப்பட்டுச் சுத்தமானவைகளும் உயர்ந்த வஜ்ரங்களால் ஜ்வலிக்கின்றவைகளும் பத்மராகமயமாயிருப்பவைகளுமாய் மண்ணாற் கட்டப்பட்டவைகள்போல விளங்குகின்றன. மேலும், கல்லாலமைந்தவைகள்போலவும் மரத்தாலமைந்தவைகள்போலவும்

காணப்படுகின்றன. ஸூர்யனுக்கு நிகரான ரூபமுடையவைகளும் எரிகின்ற தீயை ஒத்தவைகளும் மணிகளின் திரள்களால் விசித்திரமானவைகளும் உயர்ந்தவைகளும் நெருக்கமானவைகளுமாக விளங்குகின்றன. ஒத்த அளவோடும் சிறப்போடுமமைந்த இவைகளை ரூபத்தாலும் திரவியத்தாலும் குணத்தாலும் எடுத்துரைக்க முடியாது. அஸுரர்களுடைய விளையாட்டுக்காக அமைக்கப்பட்ட இடங்களையும் படுக்கைகளையும் ரத்தினங்களோடுகூடியவைகளும் விலையுயர்ந்தவைகளுமான பாத்திரங்களையும் ஆஸனங்களையும் பார். மேகம்போல் விளங்குகின்ற மலைகளையும் அருவிகளையும் இஷ்டப்படி பூத்துப் பலங்களை அடைந்து இஷ்டப்படி ஸஞ்சரிக்கின்ற மரங்களையும் பார். ஓ! மாதலியே! இவ்விடத்தில் உனக்குத் திருப்தியான வரன் இருப்பான். அல்லது, உனக்கு விருப்பமானால், பூமியின் வேறு திக்குக்குச் செல்லுவோம்' என்றார்.

மாதலியோ, அந்த விதம் சொல்லுகின்ற அவரை நோக்கி, 'ஓ! தேவரிஷியே! தேவர்களுக்கு விருப்பமில்லாததை நான் செய்யவே கூடாது. பிராதாக்களான தேவர்களும் தானவர்களும் எந்நாளும் தொடர்ச்சியான பகையை உடையவர்களல்லரோ? நான் பகைவர் பக்கத்தோடு ஸம்பந்தத்தை எப்படிவிரும்புவேன்? வேறு இடத்திற்கு நன்கு செல்லுவோம். தானவர்களைப் பார்ப்பதற்குத் தக்கவனல்லேன். உம்முடைய உள்ளம் ஹிம்ஸைசெய்பவர்களான அஸுரர்களிடம் பிரியமுள்ளதென்று எண்ணுகிறேன்' என்றான்.

## நூற்றோராவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

---

(நாரதர் கருடலோகம்போய் அங்குள்ள பக்ஷிகளின் பெயரையும் குணங்களையும் சொன்னதும் அந்த வரன் பிடிக்காவிட்டால் வேறிடம் செல்லலாமென்பதையும் மாதலிக்குச் சொல்லியது.)

இது பாம்புகளைத் தின்னுகின்ற பறவைகளான கருடர்களுடைய உலகம். இவர்களுக்குச் சண்டையிலும் நடையிலும் சுமத்தலிலும் ச்ரமமானது இல்லை. ஓ! ஸூத! மாதலியே! கருடனுடைய புத்திரர்களான ஸுமுகன், ஸுநாமா, ஸுநேத்திரன், ஸுவர்ச்சஸ்,

ஸுருக், பக்ஷிகளுக்கு அரசனான ஸுபலனென்கிற ஆறுபேர்களால் இந்தக் குலமானது விரிவை அடைந்திருக்கிறது. பிறகு, காஸ்யபருடைய வம்சத்தில் பிறந்தவர்களும் ஐஸ்வர்யத்தை விருத்திசெய்பவர்களும் விநதையின் குலத்தை வளரச்செய்கிறவர்களுமான (அவர்களாலே) பக்ஷிராஜனுடைய ஆயிரமும் நூறுமான நற்குலங்கள் வேகமாக விருத்திசெய்யப்பட்டன. இவர்களெல்லாரும் செல்வம் நிரம்பினவர்கள். எல்லாரும் ஸ்ரீவத்ஸமென்கிற அடையாளமுள்ளவர்கள். தவிர, எல்லாரும் செல்வத்தையடைய விருப்பமுள்ளவர்களாய் வலிமைகளைத் தரிக்கின்றனர். தயையில்லாதவர்களும் பாம்புகளைத் தின்பவர்களுமான இவர்கள் செய்கையினால் க்ஷத்திரியர்கள். ஞாதிகளை நாசம் செய்வதால் பிராம்மணத்தன்மையை அடையாதவர்கள். பிரதானர்களின் முறைப்படி இவர்களின்பெயர்களைச் சொல்லுவேன்; கேள். மாதலியே! விஷ்ணுவினால் அங்கீகரிக்கப்பட்ட இந்தக்குலமானது புகழத்தக்கதன்றோ? இவர்களுக்குத் தெய்வம் விஷ்ணு. விஷ்ணுவே இவர்களுக்குப் புகலிடம். இவர்களுடைய மனத்திலும் எப்பொழுதும் விஷ்ணுவே இருக்கிறார். எப்பொழுதும் விஷ்ணுவே கதி. ஸுவர்ணசூடன், நாகாசி, தாருணன், சண்டதுண்டகன், அநிலன், அநலன், விசாலாக்ஷன், குண்டலி, பங்கஜித், வஜ்ரவிஷ்கம்பன், வைநதேயன், வாமனன், வாதவேகன், திசாசக்ஷுஸ், நிமேஷன், அநிமிஷன், த்ரிராவன், ஸப்தராவன், வால்மீகி, தீபகன், தைத்யத்வீபன், ஸரித்வீபன், ஸாரஸன், பத்மகேதனன், ஸுமுகன், சித்ரகேது, சித்ரபர்ஹன், அநகன், மேஷஹ்ருத், குமுதன், தக்ஷன், ஸர்ப்பாந்தன், ஸோமபோஜனன், குருபாரன், கபோதன், சூர்யநேத்திரன், சிராந்தகன், விஷ்ணுதர்மா, குமாரன், பரிபர்ஹன், ஹரி, ஸுஸ்வரன், மதுபர்க்கன், ஹேமவர்ணன், மாலயன், மாதரிஸ்வா, நிசாகரன், திவாகரன் என்னும் இந்தக்கருடபுத்ரர்கள் இந்த ப்ரதேசத்தில் (ஓரிடத்தில்) வசிப்பவர்கள் மட்டுமே என்னால் சொல்லப்பட்டனர். (அவர்களுள்ளும்) தலைமைபெற்றவர்களும் புகழுள்ளவர்களும் பலவான்களும்மட்டுமே சொல்லப்பட்டனர். ஓ! மாதலியே! இவ்விடத்தில் ஒரு பிடித்தமுமில்லையானால் வா; போவோம். வரன் கிடைக்கும் தேசத்திற்கு உன்னை அழைத்துக்கொண்டு போகிறேன்.

---

## நூற்றிரண்டாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(நாரதர் ரஸாதலஞ்சென்று அங்குள்ள ஸுரபிவம்சத்தின் பெருமையை மாதலிக்குச் சொல்லியது.)

இது ஏழாவதான ரஸாதலமென்கிற பாதாளம். இதில் கோக்களுக்கெல்லாம் மாதாவும் அமிருதத்திலிருந்துண்டானதுமான [1] ஸுரபியானது, பூமியின் ஸாரமான புல்முதலியவற்றிலுண்டானதும் ஆறுரஸங்களின் ஸாரத்தைக்கொண்டு மிகச்சிறந்த ஒருரஸமுமான பாலை எப்பொழுதும் பெருக்கிக்கொண்டிருக்கிறது. குற்றமற்றதான இது, முன்பு அமிருதத்தினால் திருப்தியை அடைந்தவரும் ஸாரத்தைக் கக்கினவருமான பிதாமஹருடைய முகத்திலிருந்தும் உண்டாயிற்று. பூமியினிடத்தில் விழுந்ததான இதனுடைய பாலின் தாரையினால் செய்யப்பட்ட மடுவானது பாற்கடலென்று மிக்கபரிசுத்தமாகச் சொல்லப்படுகிறது. நுரையால் பூத்திருப்பதுபோன்ற (இந்தக்கடலினது) நுரையினால் நிரம்பிய கரையில், (அந்த நுரையைக்) குடித்துக்கொண்டு, பேனபர்களென்கிற முனிச்ரேஷ்டர்கள் வஸிக்கின்றார்கள். மாதலியே! [2] பேனத்தை அருந்துகிறவர்களும் பேனபர்களென்று பிரஸித்திபெற்றவர்களுமான அவர்கள் தங்களிடமிருந்து தேவதைகள் பயப்படும்படி உக்கிரமான தவத்திலிருக்கின்றனர். மாதலியே! இதைச்சேர்ந்த வேறுநான்கு பசுக்கள் திக்குக்களைக்காப்பவைகளும் திக்குக்களைத்தரிப்பவைகளுமாய் எல்லாத்திக்குக்களிலும் வஸிக்கின்றன. ஸுரூபை என்கிற காமதேனுவானது கீழ்த்திக்கைத்தரிக்கிறது. ஹம்ஸிகையென்பது மற்றத் தென்திசையைத்தரிக்கிறது. மாதலியே! மிக்கபெருமை வாய்ந்ததும் பலவடிவங்களையுடையதுமான ஸுபத்ரையானது எந்நாளும் வருணனைச்சேர்ந்த மேற்குத்திக்கைத் தரிக்கிறது. மாதலியே! ஸர்வகாமதுகையென்பது தர்மமுடையதும் குபேரனாலடையப்பட்டதுமான வடதிக்கைத் தரிக்கிறது. மாதலியே! அஸுரர்களோடுகூடிய தேவர்களாலே மந்தரபர்வதத்தை மத்தாகச்செய்து, கடலில் இவைகளுடைய பாலுடன் கலந்த பாலைக்கடைந்து, வாருணிதேவியும் லக்ஷ்மியும் அமிருதமும் உச்சைஃச்ரவமென்கிற சிறந்த குதிரையும் மணிகளில்சிறந்ததான கௌஸ்துபமும் எடுக்கப்பட்ட

1 காமதேனு, 2 பேனம் = நுரை

னர். காமதேனுவானது, தன்பாலை [1] ஸுதையை அருந்துகிறவர்கள் விஷயத்தில் ஸுதையாகவும், [2] ஸ்வதையைப் புஜிக்கிறவர்கள் விஷயத்தில் ஸ்வதையாகவும் [3] அமிருதத்தை அருந்துகிறவர்கள் விஷயத்தில் அமிருதமாகவும் பெருக்குகிறது. இந்தவிஷயத்தில் பாதாளவாஸிகளாலே முன்பு கானம்செய்யப்பட்டதும் உலகத்தில் வித்வான்களால் கானம் செய்யப்படுகிறதுமான பழமையான காதையானது கேட்கப்படுகிறது. அதன் பொருள், 'ரஸாதலப்பிரதேசத்தில் வஸிப்பதுபோல நாகலோகத்திலும் ஸ்வர்க்கத்திலும் ஸ்வர்க்கத்திலுள்ள விமானத்திலும் வஸிப்பது ஸுகமில்லை' என்பது.

---

நூற்றுமூன்றுவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(நாரதர் மாதலியைப் போகவதிக்கு அழைத்துப்போய் வரன்பார்க்கச் சொல்லியதும், அவன் ஸுமுகன் என்பவனைத் தனக்குப் பிடித்திருப்பதாகச் சொல்லி அவனுடைய வரலாற்றை நாரதரால் அறிந்து அந்தவரனை நிச்சயித்துத் தரும்படி நாரதரை வேண்டினதும்.)

இது வாஸுகியினால்காக்கப்பட்ட போகவதிஎன்கிற பட்டணம். இது சிறந்ததான தேவராஜனுடைய அமராவதிபோன்றது. தவத்தால் உலகத்தில் முக்கியமாயிருப்பவனும் மிக்கபெருமையுள்ள பூமியை எப்பொழுதும் தரிப்பவனும் ச்வேதமலைக்கு நிகரான வடிவத்தைஉடையவனும் சிறந்த ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவனும் ஆயிரம் சிரங்களைத் தரிப்பவனும் ஜ்வாலையுடன்கூடின நாக்குக்களையுடையவனும் மிக்கவலிமையடைந்தவனுமான சேஷனென்கிற நாகன் இதோ இருக்கிறான். இவ்விடத்தில் பலவிதமான வடிவத்தையுடையவர்களும் பலவிதமான ஆபரணங்களை உடையவர்களும் ஸுரஸையினுடைய புத்திரர்களும் நாகரத்தினம், ஸ்வஸ்திகாரேகை, சக்ரரேகை, கமண்டலுரேகை இவைகளை அடையாளமாக உடையவர்களும் ஆயிரக்கணக்கானவர்களும் பலசாலிகளும் எல்லாரும் இயற்கையாகவே பயங்கரர்களுமான நாகர்கள் துன்பம்நீங்கினவர்களாக வஸிக்கின்றனர். சிலர் ஆயிரம் தலையுள்ளவர்கள். சிலர் ஐந்நூறுதலையுள்ளவர்கள். சிலர் நூறு தலையுள்ளவர்கள். சிலர் மூன்றுதலையுள்ளவர்கள். சிலர் பத்துத் தலையுடையவர்கள். சிலர்

---

1 நாகருணவு. 2 பிதிருருணவு. 3 தேவருணவு.

ஏழு தலையுடையவர்கள்; பெரிய படமும் பெரிய சரீரமும் மலை போல விரிவான உடலுமுடையவர்கள். இவ்விடத்தில் ஒரு வம்சத்தி லுள்ள நாகர்கள் பல ஆயிரங்களும் பத்துலக்ஷங்களும் பத் துக்கோடிகளுமாயிருக்கின்றனர். (அவர்களைச்) சிறந்தவர்களின் முறையாக, என்னிடமிருந்து கேள். வாஸுகி, தக்ஷகன், கார்க் கோடகன், தனஞ்சயன், காளீயன், நகுஷன், கம்பளன், அச்வ தரன், பாஹ்யகுண்டன், மணி என்கிற நாகன், ஆபூரணன், ககன், வாமனன், ஏலபத்திரன், குகுரன், குகுணன், ஆர்யகன், நந்தகன், கலசன், போதகன், கைலாஸகன், பிஞ்சரகன், ஐராவதனென்கிற நாகன், ஸுமனோமுகன், ததிமுகன், சங்கன், நந்தன், உபநந்தகன், ஆப்தன், கோடரகன், சிகி, நிஷ்டூரிகன், திந்திரி, ஹஸ்திபத்திரன், குமுதன், மால்யபிண்டகன், பத்மர் இருவர், புண்டரீகன், புஷ்பன், முத்கரபர்ணகன், கரவீரன், பீடரகன், ஸம்வ்ருத்தன், வ்ருத்தன், பிண்டாரன், பில்வபத்ரன், மூஷிகாதன், சிரீஷகன், திலீபன், சங்க சிர்ஷன், ஜ்யோதிஷ்கன், அபராஜிதன், கௌரவ்யன், திருதராஷ்டி ரன், குஹுரன், க்ருசகன், விரஜஸ், தாரணன், ஸுபாகு, முகரன், ஜயன், பதிரன், அந்தன், விசுண்டி, விரஸன், ஸுரஸன் என்கிற இவர்களும், மற்றும் பலபேர்களும் கச்யபருடைய புத்திரர்களாகக் கருதப்பட்டனர். மாதலியே! இவர்களில் ஒருவரன் உனக்குப் பிடிக்கிறதா? பார்' என்றார்.

மாதலியோ, வேறிடத்து நினைவில்லாதவனாகி இடைவிடாமல் ஒருவனை ஊன்றிப்பார்த்து, நாரதரை நோக்கி வினவினான்; அவனி டம் அன்புள்ளவனுமானான். மாதலி, 'ஓ! தேவரிஷியே! கௌரவ் யனுக்கும் ஆர்யகனுக்கும் எதிரிலிருப்பவனும் காந்தியுள்ளவனும் அழகு பொருந்தியவனுமான இவன் எவனுடைய குலத்தின் குழந் தை? இவனுடைய தந்தை யார்? தாய் யார்? இவன் எந்தநாகத்தைச் சேர்ந்தவன்? பெரிதான த்வஜம்போலிருப்பவனான இவன் எந்த வம் சத்தைச் சேர்ந்தவன்? ஊக்கமுடைமையினாலும் தைர்யத்தினாலும் ரூபத்தினாலும் பிராயத்தினாலும் குணகேசிக்குச் சிறந்த பதியாக என்மனத்தில் புகுந்தான்' என்றான்.

நாரதர், அப்பொழுது, ஸுமுகனைப்பார்த்து, மனத்தில் அன்பு வைத்தவனான மாதலியை நோக்கி, (அந்தநாகனுடைய) பெருமையை யும் உற்பத்தியையும் செய்கையையும் தெரிவித்தார்.

'மாதலியே! இவன் ஐராவதனுடைய குலத்தில் பிறந்த ஸுமுக னென்கிற நாகச்ரேஷ்டன். ஆர்யகனுடைய மகனுக்குமகனும் வாம

னுடைய மகளுக்கு மகனுமாகக் கருதப்பட்டவன். மாதலியே! இவனுக்குத் தந்தையான சிகுரனென்கிற நாகன் சீக்கிரம் கருடனால் மரணத்தை அடையும்படி செய்யப்பட்டான்' என்றார். பிறகு, மாதலி மனத்தில் ப்ரீதியடைந்து நாரதரை நோக்கி, 'ஓ! ஐயா! நாகர்களில் சிறந்தவனான இவன் எனக்கு மருமகனாவதில் எனக்கு விருப்பமிருக்கிறது. இவன்விஷயத்தில் முயற்சிசெய்யக் கடவீர். ஓ! முனிவரே! இவனிடத்தில் பிரீதியுடையவனாயிருக்கிறேன். பிரியமான புத்ரியை இந்நாகனுக்குக் கொடுப்பதற்கு விரும்புகிறேன்' என்றான்.

---

## நூற்றுநான்காவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(நாரதர் ஆர்யகனைப் பேரனுக்காகக் குணகேசியை வாங்கிக்கொள்ளச் சொல்லியதும், ஆர்யகன் ஸுமுகனைத் தின்பதாகக் கருடன் செய்த பிரதிஜ்ஞையைச் சொல்லியதும், மாதலி ஸுமுகனைக் காப்பதற்காக அவனுடனும் நாரதருடனும் இந்திரனிடம் சென்றதும், நாரதர் விஷ்ணுவிடம் தெரிவிக்க அவர் ஸுமுகனுக்கு அமிர்தங் கொடுக்கும்படி இந்திரனுக்குச் சொல்லியதும், இந்திரன் அமிர்தம் கொடாமலே ஆயுளைக் கொடுத்ததும், மணம் நிறைவேறியதும்.)

குருநந்தன! முனிசிகாமணியாகிய நாரதர், மாதலியினுடைய வார்த்தையைக் கேட்டுத் தேவன்போல விளங்கும் அந்த ஆர்யகனை நோக்கி, 'இவன் மாதலியென்கிற ஸூதன்; இந்திரனுக்கு வேண்டினவனான நண்பன்; தூயவனும் சீலமும் குணமுமுடையவனும் தேஜஸ்ஸையுடையவனும் வீர்யமுடையவனும் பலசாலியுமானவன். இவன் இந்திரனுக்கு நண்பனும் மந்திரியும் ஸாரதியுமானவன். யுத்தந்தோறும் இந்திரனுக்குச் சிறிதுவித்தியாஸமேயுள்ள வல்லமையுடையவன். இவன் தேவர்களுக்கும் அஸுரர்களுக்குமுண்டான யுத்தங்களில் ஆயிரம் குதிரைகள் பூட்டப்பட்டதும் ஜயத்தையே சீலமாகவுடையதுமான சிறந்த ரதத்தை மனத்தினாலேயே ஓட்டுகிறான். இவன் குதிரைகளால் ஜயித்தவர்களை இந்திரன் கைகளால் ஜயிக்கிறான். இவன் முந்தி [1] அடித்தவனை இந்திரன் அடிக்கிறான். இவனுக்குச்

1 தேரோட்டும் திறமையினால் எதிரிகளை அகப்படுத்துகிறானென்பது.

சிறந்த தொடைகளையுடையவளும் ரூபத்தினால் பூமியில் நிகரற்றவளும் ஸத்தியம், சீலம், குணம் இவைகளை உடையவளும் குணகேசி என்று புகழ்பெற்றவளுமான ஒரு கன்னிகை இருக்கிறாள். தேவன்போன்ற காந்தியுள்ளவனே! முயற்சியுடன் மூவுலகமும் ஸஞ்சரிக்கின்ற அப்படிப்பட்ட இவனுக்கு ஸுமுகனென்கிற உன்னுடைய பௌத்ரன் தன் புத்திரிக்குப் பதியாக ருசித்திருக்கிறான். நாகச்ரேஷ்டனே! உனக்கும் நன்கு திருப்தியாயிருந்தால் தாமதம் வேண்டாம். ஆர்யக! கன்னிகையைப் பெற்றுக்கொள்ளுகிற விஷயத்தில் சீக்கிரம் புத்தியைச் செலுத்தக்கடவாய். விஷ்ணுவினுடைய கிருகத்தில் லக்ஷ்மிபோலவும் அக்கினியினுடைய கிருகத்தில் ஸ்வாஹாதேவிபோலவும் உன்னுடைய கிருகத்தில் அழகிய இடையையுடையவளான குணகேசியானவள் இருக்கட்டும். ஆகையால், நீ இந்திரனுக்கு இந்திராணிபோல அவளுக்கு நிகரான பௌத்திரன்நிமித்தமாக (அவனுக்கு) நிகரான குணகேசியைப் பெற்றுக்கொள். தந்தையை இழந்தவனாயிருந்தாலும், உன்னிடத்திலும் ஐராவதனிடத்திலுமுள்ள குணத்தினாலும் நன்மதிப்பினாலும் ஸுமுகனுடைய சீலம் தூய்மை அடக்கம்முதலிய குணங்களாலும் இந்த ஸுமுகனை வரிக்கிறோம். இந்த மாதலி தானேவந்து கன்னிகையைக் கொடுப்பதற்கு யத்தனித்திருக்கிறான். நீயும் அவனுக்கு மரியாதையைச் செய்யத்தக்கவன்' என்றார்.

அந்த ஆர்யகனோ, பௌத்திரனை வரிப்பதாலும் புத்திரன் இறந்ததாலும் ஸந்தோஷத்தையும் தீனத்தன்மையையும் அடைந்தவனாகி, நாரதரை நோக்கி, 'ஓ! மஹரிஷியே! உம்முடைய வார்த்தையை நான் கௌரவிக்கப்பட்டதாக நினைக்கவில்லை. இந்திரனுக்கு ஸகாவாகச் சேர்ந்தவனான இவன் எனக்கு ஸம்மதனாகான். ஓ! மகாமுனிவரே! காரணம் துர்ப்பலமாயிருப்பதனால் மாத்திரம் ஆலோசிக்கிறேன். ஓ! ஐயா! மிக்ககாந்தியுடையவரே! இவனுடைய தேகத்தை உண்டுபண்ணின என்னுடைய புத்திரன் கருடனால் தின்னப்பட்டான். அதனால், நாங்கள் துக்கத்தை அடைந்தவர்களாயிருக்கிறோம். ஓ! பிரபுவே! செல்லுகிறவனான அந்தக் கருடன், மறுபடியுமே, 'மற்றொரு மாஸத்தில் ஸுமுகனையும் பக்ஷிப்பேன்' என்று சொன்னான். அது அப்படியே நிச்சயமாக நேரும். அந்தக் கருடனுடைய உறுதியை அறிவோம். அந்தக்கருடனுடைய வார்த்தையினாலேயே என்னுடைய ஸந்தோஷம் நசித்துவிட்டது' என்றான்.

மாதலியோ, அவனை நோக்கி, ' இவனிடத்தில் நான் புத்தியைச் செலுத்திவிட்டேன். உன்னுடைய பௌத்திரனை ஸுமுகனை நான் மருமகனாக வரித்துவிட்டேன். அப்படிப்பட்ட இந்த நாகன் என்னோடும் நாரதரோடும் மூவுலகங்களுக்கும் தலைவனும் தேவர்களுக்குப் பதியுமான இந்திரனை அடைந்து பார்க்கக்கடவன். மற்றக் காரியத்தைக்கொண்டு இவனுடைய ஆயுளைத் தெரிந்துகொள்ளுவேன். சிறந்தவனே! கருடனைத் தடுப்பதிலும் முயற்சிசெய்வேன். ஸுமுகனும் கார்யத்தை ஸாதிப்பதற்கு என்னுடன் தேவராஜனை அடையக்கடவன். ஓ! நாக! உனக்கு க்ஷேமமுண்டாகுக' என்றான்.

பாரத! ஆர்யகனாலே, 'போகலாம்' என்று அநுமதி கொடுக்கப்பட்டவுடன், மிக்க ஒளியையுடைய அவர்களெல்லாருமே ஸுமுகனை அழைத்துக்கொண்டு, தேவர்களுக்கு அரசனும் மிக்க காந்தியையுடையவனும் உட்கார்ந்திருப்பவனுமான இந்திரனைக் கண்டார்கள். அவ்விடத்தில், நான்கு கைகளையுடையவரும் பகவானுமான விஷ்ணுவானவர் கார்யவசத்தால் இருந்தார். அவரிடம், நாரதர் மாதலியைப்பற்றிய எல்லாவற்றையும் சொன்னார். பிறகு, திருமாலானவர், உலகங்களுக்குத் தலைவனான இந்திரனை நோக்கி, 'இவனுக்கு அமிர்தத்தைக் கொடுத்துத் தேவர்களுக்குச் சமமாகச் செய். வாஸவ! மாதலியும் நாரதரும் ஸுமுகனுமே உன்னுடைய இச்சையினால் விரும்பியபடி இந்த இஷ்டத்தை அடையட்டும்' என்றார். பிறகு, இந்திரன், கருடனுடைய பராக்ரமத்தை ஆலோசித்து விஷ்ணுவைநோக்கியே, 'நீரே இதனைக்கொடும்' என்று சொன்னான். (அப்பொழுது) விஷ்ணுவானவர், 'ஓ! விபுவே! நீ சராசரங்களான எல்லா உலகங்களுக்கும் ஈசன். உன்னால் கொடுக்கப்பட்டதைக் கொடுக்கப்படாததாகச் செய்ய எவன் துணிவான்?" என்றார்.

பிறகு, வலனையும் விருத்ராஸுரனையும் கொன்றவனான இந்திரன் அந்தநாகனுக்குச் சிறந்ததான ஆயுளைக்கொடுத்தான். அவனுக்கு அமிருதபானத்தையோ செய்விக்கவில்லை. ஸுமுகனோ வரத்தை அடைந்து முகத்தில் தெளிவுடையவனானான். இஷ்டப்படி தாரத்தைப்பெற்றுக்கொண்டு தன்வீட்டைநோக்கியும் சென்றான். நாரதரும் ஆர்யகனும் காரியத்தை முடித்துக்கொண்டு ஸந்தோஷத்தை அடைந்து மிக்க காந்தியுடையவனான தேவராஜனைப் பூஜித்துவிட்டுச் சென்றார்கள்.

## நூற்றைந்தாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(கருடன் கோபமுற்று இந்திரோபேந்திரரிடம் வந்து கர்வமாகப் பேசியதும், திருமால் கருடனுடைய கர்வத்தைப் போக்குதற்காகத் தமது வலக்கையைத் தாங்கச்செய்ததும், கருடன் தாங்கமாட்டாமல் க்ஷமிக்கவேண்டினதும், கண்வர் கதையைமுடித்துத் துரியோதனனைக் கர்வத்தைவிட்டுப் பாண்டவர்களுடன் நட்புக்கொள்ளச் சொல்லியதும், அவன் தொடைதட்டி நகைக்க, 'தொடையிலேயே மரணம்நேரும்' என்று அவர் அவனைச் சபித்ததும்.)

பாரத! அப்பொழுது மிக்க பலசாலியான கருடன், நாகனுக்கு இந்திரன் ஆயுளைக்கொடுத்ததை நடந்தபடி கேட்டான். பக்ஷியான கருடன் மிக்க சினத்துடன் சிறகுகளின் பெரிய காற்றினால் மூவுலகங்களையும் நிறைத்துக்கொண்டு இந்திரனை விரைவாக அடைந்தான். கருடன் சொல்லுகிறான் :

'பகவானே! (என்னை) அவமதித்து என்னுடைய ஜீவனமானது (உன்னால்) ஏன் கெடுக்கப்பட்டது? எனக்கு இஷ்டப்படி செய்ய வரத்தையளித்துவிட்டு, திரும்பவும் தவறினவனாகிறாய். எல்லாப் பிராணிகளுக்கும் ஈச்வரனான பிரம்மாவினாலே எனக்கு இயற்கையாகவே எல்லாப்பிராணிகளும் ஆஹாரமாகச் செய்யப்பட்டன. (அது) உன்னால் ஏன் தடுக்கப்படுகிறது? இந்தப் பெரிய நாகன் (என்னால்) வரிக்கப்பட்டான். இவனால் எனக்கு ஸமயமும் குறிக்கப்பட்டது. தேவ! நான் இவனைக்கொண்டு எனது பெரிய குடும்பத்தைப் போஷிக்கவேண்டும். இது அவ்விதம் இருக்கையில், வேறொருவனைக் கொல்ல விரும்பமாட்டேன். தேவராஜ! விரும்பியதை விரும்பியபடி செய்துகொண்டு விளையாடுகிறாய். (ஆகையால்), நானும் எனது வேலைக்காரர்களும் என் வீட்டிலுள்ள போஷிக்கப்படத்தக்கவர்களும் பிராணனை விடுவோம். வாஸவ! பிரீதியுடன் கூடினவனாவாய்' என்றான். கருடனுடைய வார்த்தையைக்கேட்டு, அப்பொழுது, ஸுமுகன் துர்முகன் (=விகாரப்பட்ட முகமுள்ளவன்) ஆகி ரூபத்தை விட்டு விட்டு நிறம்மாறி ஸர்ப்பத்தின் ரூபத்தைத்தரிக்கிறவனானான். பிறகு, விஷ்ணுவின் ஸமீபத்தை அடைந்து பாதபீடத்தைச் சுற்றிக்கொண்டான்.

இந்திரன், 'கருடா! (இது) என் செய்கையில்லை. நீ என்னைக் கோபிக்கவேண்டாம். அந்த ஸுமுகன் ஸமர்த்தரான விஷ்ணுவினாலே அபயமளிக்கப்பட்டான்' என்றான். கருடன், இந்திரன் சொன்னவார்த்தையைக்கேட்டு, 'வலாஸுரனையும் விருத்திராஸுரனையும் கொன்றவனே! மூவுலகங்களுக்கும் ஈச்வரனாயிருந்தும் பிறனுக்கு அடிமையாயிருப்பதை அடைந்த எனக்கு இதுவுமே தகும்; (இதற்கு) மேலும் தகும். தேவர்களுக்கும் ஈசனாயிருப்பவனே! நீ இருக்கும்பொழுது எனக்கு விஷ்ணு காரணம் இல்லை. வாஸவ! மூவுலகங்களுக்கும் அரசனே! உன்னிடத்திலன்றோ ராஜ்யம் சாச்வதமாயிருக்கிறது? எனக்கும் தக்ஷனுடைய புத்திரி தாய்; காச்யபர் தந்தை. நானும் பலத்தினாலே எல்லா உலகங்களையும் தாங்கவும் சக்தியுள்ளவன். எனக்கும் எல்லாப் பிராணிகளாலும் தாங்கமுடியாத பெரிய பலமிருக்கிறது. என்னாலும், அஸுரர்களுடன் நடந்த போரில் பெரிய வேலையானது செய்யப்பட்டது. என்னாலும் ச்ருதச்ரீ, ச்ருதஸேனன், விவஸ்வான், ரோசனமுகன், ப்ரஸ்ருதன், காலகாக்ஷன் என்கிற அஸுரர்கள் கொல்லப்பட்டார்கள். நான் யத்தனத்தினால் துவஜத்தின் ஸ்தானத்தைஅடைந்து பணிவிடை செய்வதாலும் உனது தம்பியைச்சுமப்பதனாலுமே என்னை அவமதிக்கிறாய். சிறந்தவனாயிருந்துகொண்டு இவரைப் பந்துக்களோடு சுமக்கின்ற என்னைக்காட்டிலும் பாரத்தைச் சுமக்கின்றவன் வேறு எவன் இருக்கிறான்? எனக்கு நிகரான சிறந்த பலமுடையவன் வேறு எவன் இருக்கிறான்? வாஸவ! நீ என்னை அவமதித்து ஆகாரத்திலிருந்தும் திருப்பினபடியால், உன்னாலும் இவராலும் என்னுடைய கௌரவமானது அழிந்துவிட்டது' என்று சொல்லி, (விஷ்ணுவைநோக்கி) 'அதிதியினிடம் பிறந்த பலபராக்கிரமசாலிகளான இவர்களெல்லாரிலும் பலத்தினால் நீர் மிக்கபலமுள்ளவரல்லவா? அப்படிப்பட்ட உம்மை நான் ச்ரமமில்லாமல் சிறகின் ஒரு பாகத்தினால் சுமக்கிறேன். ஓ! ஐயா! நீர் இதில் யார் பலவானென்று மெள்ள ஆலோசியும்' என்றான்.

அவ்விதம் சொல்லப்பட்ட விஷ்ணுவானவர், முடிவில் குரூரமான அந்தப்பக்ஷியின் வார்த்தையைக்கேட்டு, கலக்கமுடியாதவனான கருடனைக் கலங்கச்செய்கிறதற்காக, 'கருடா! துர்ப்பலனான உன்னைப் பலமுடையவனாக நினைக்கிறாய். பக்ஷியே! நம்முடைய எதிரில் நீ உன்னைத் துதித்ததுபோதும். மூவுலகமும் முழுமையும் என்சரீரத்தைத் தாங்குவதில் சக்தியில்லாதது. நானே என்னால் என்னையும் உன்னையும் தாங்குகிறேன். நீ கைகளால் என்னைச் சுமக்கவில்லை.

நீ புகழ்ந்துகொள்வது வீண். நீ என்னுடைய இந்தவலக்கை ஒன்றை மட்டும் சுமக்கக்கடவாய். இந்த ஒன்றைச் சுமப்பாயானால் நீ புகழ்ந்து கொள்வது பயனுள்ளதாகும்' என்றார். பகவான் இவ்விதம் சொல் லிவிட்டு அவனுடைய தோளில் கையைவைத்தார். அவன் வைக்கப் பட்ட அந்தப்பாரத்தைப் பலத்தால் சுமப்பதற்குச் சக்தியுடையவ னாகவில்லை. அவன் பாரத்தால் பீடிக்கப்பட்டுச் சோர்வை அடைந்து அறிவிழந்து விழுந்தான்; பர்வதங்களோடுகூடப் பூமி முழுமைக்கும் எவ்வளவு பாரமுள்ளதோ அவ்வளவுபாரத்தைக் கையொன்றுக்கு இருப் பதாக நினைத்தான். பலசாலிகளில் சிறந்தவரான (அந்த)அச்சுதர் இவ னைப் பலத்தினால் பீடிக்கவில்லை. அதனால், அவர் அவனுடைய உயிரை நசிக்கச்செய்யவில்லை. அப்பொழுது,பக்ஷியானஅவன்,மிக்கபாரத்தால் பீடிக்கப்பட்டு வாயைத் திறந்துகொண்டு சரீரம் நைந்து சோர்ந்து அறிவுநழுவி இறகுகளை உதிர்த்தான். அறிவுநழுவினவனும் சோர்வை அடைந்தவனும் தீனனுமான அந்தக்கருடன் விஷ்ணுவைத் தலையால் வணங்கி [1] ஒரு வார்த்தை சொல்லத்தொடங்கினான். 'ஓ! பகவானே! உலகத்தின் ஸாரத்திற்கு நிகரான பருத்த புஜத்தை ஸ்வபாவமாக வைத்ததினாலேயே பூமியில் தேய்க்கப்பட்டேன். ஓ! தேவரே! தளர்ச்சி அடைந்தவனும் நினைவு குறைந்தவனும் பலத்தின் அழி வினால் எரிக்கப்பட்டவனும் துவஜத்தில் வஸிக்கின்ற பறவையுமான என் விஷயத்தில் நீர் பொறுக்கவேண்டும். ஓ! தேவரே! விபுவே! சிறந் ததான உம்முடையபலம் என்னால் அறியப்படவில்லை. அதனால், நான் என் பலத்தைப் பிறருடையதற்கு ஸமமாக நினைக்கவில்லை' என்றான்.

பிறகு, அந்தப் பகவான் கருடனுக்கு அருளைச் செய்தார்; அப் பொழுது ஸ்நேஹத்தினால் அவனைநோக்கி, 'இனிமேல் இவ்விதம்செய் யாதே' என்றும் சொன்னார்; காற்கட்டைவிரலால் ஸுமுகனைக் கருடனுடைய மார்பில் எறிந்தார். ராஜஸ்ரேஷ்டனே! அதுமுதற் கொண்டு, (அவன்) ஸர்ப்பத்தோடு கூடியிருக்கிறான். அரசனே! பலவானும் பெரிய புகழையுடையவனும் விநதையின் புத்திரனு மான கருடன் இவ்விதம் விஷ்ணுவின் பலத்தால் ஆக்கிரமிக்கப் பட்டுக் கர்வநாசத்தை அடைந்தான். காந்தாரியின் புத்திர! குழந்தாய்! அதுபோல நீயும் வீரர்களான அந்தப்பாண்டுவின் புத்தி ரர்களைப் போர்நிமித்தமாக எதிர்க்காதவரையில் ஜீவிப்பாய். அடிப் பவர்களில் சிறந்தவனும் வாயுவின் புத்திரனும் மிக்கபலசாலியுமான பீமனும் இந்திரன் புத்திரனான தனஞ்சயனும் யுத்தத்தில் யாரைத்

1 அதிகம் பேசவும் முடியாதவனானானென்பது.

தான் கொல்லார்? விஷ்ணுவும் வாயுவும் இந்திரனும் தர்மராஜனும் அந்த அப்ஸ்வினீதேவர்களிருவருமான இந்தத் தேவர்கள் உன்னால் என்ன காரணத்தால் பார்க்கக்கூடியவராவார்கள்? ராஜபுத்திர! ஆகையால், உனக்கு விரோதம் போதும். ஸமாதானத்தை அடையக் கடவாய். வாசுதேவராகிற துறையினாலே குலத்தைக் காக்கத்தக்கவனாகிறாய். பெரிய தவத்தையுடைய இந்த நாரதர், அப்பொழுது, விஷ்ணுவினுடைய பேராற்றல் முழுமையையும் நேரில் பார்த்தவர். சக்கரத்தையும் கதையையும் தரிப்பவரான இந்தக்கிருஷ்ணர் அவரே' என்றார். அப்பொழுது, துர்யோதனனே அதைக்கேட்டுப் பெருமூச்சுவிட்டுப் புருவம் வளைந்த முகத்துடன் கர்ணனைப் பார்த்துச் சப்தத்துடன் சிரித்தான். துஷ்டபுத்தியுடையவனான அவன் கண்வரிஷியினுடைய அந்த வார்த்தையை வீணாகச்செய்து யானைத்துதிக்கைக்கு நிகரான வடிவத்தையுடைய தொடையில் அடித்துக்கொண்டு, 'ஓ! மஹரிஷியே! எவ்விதமாகக் கடவுளால் படைக்கப்பட்டேனோ, எது நேருமோ, எது எனக்குக் கதியோ அப்படியே இருக்கிறேன். பிதற்றலானது என்னசெய்யும்?' என்று சொன்னான். பிறகு, கண்வர் சினமுற்று அறிவிலியான துர்யோதனனை நோக்கி, 'நீ தொடையில் அடித்துக்கொண்டபடியால், (உனக்குத்) தொடையில் மரணம் ஏற்படும்' என்றார்" என்று சொன்னார்.

## நூற்றுநாலாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

**(நிர்ப்பந்தம் தீமைக்குக் காரணமென்பதை விளக்க நாரதர் காலவர் கதையைத் தொடங்கியதும், விஸ்வாமித்திரர் நிர்ப்பந்தம் செய்த காலவரை ஒருபுறம் பச்சைக் காதுள்ள வெள்ளைக் குதிரைகள் எண்ணூறு தரச் சொல்லியதும்.)**

ஜனமேஜயர், "தீயசெய்கையில் பற்றுள்ளவனும் பிறர் பொருளில் லோபத்தால் புத்திமயக்கத்தை அடைந்தவனும் கீழானவர்களிடத்தில் பற்றுள்ளவனும் மரணத்தில் உறுதியைச் செய்தவனும் ஞாதிகளுக்குத் துக்கத்தைச் செய்பவனும் உறவினர்களுக்குச் சோகத்தை விருத்திசெய்பவனும் நண்பர்களுக்குத் துன்பத்தைக் கொடுப்பவனும் பகைவருக்கு ஸந்தோஷத்தை விருத்திசெய்பவனும் கெட்டமார்க்கத்தில் இருப்பவனுமான இவனை, இந்தவிஷயத்தில், உற

வினரோ நட்புடைமையால் நண்பனே ஸ்நேஹிதரான பகவானே பிதாமஹரான [1] பீஷ்மரோ ஏன் தடுக்கவில்லை?" என்று கேட்டார்.

வைசம்பாயனர் சொல்லுகின்றார்: "பகவானாலும் தகுதியான வார்த்தையானது சொல்லப்பட்டது; பீஷ்மராலும் சொல்லப்பட்டது; நாரதராலும் பலவிதமாகச் சொல்லப்பட்டது. அவற்றைக் கேளும். நாரதர், 'குருநந்தன! (சொன்னதைக்) கேட்பவனான நண்பன் கிடைப்பது அரிது. ஹிதனான நண்பன் கிடைப்பதும் அரிது. நண்பன் எந்தத் தன்மையில் இருக்கிறானே அந்தத் தன்மையில் உறவினனும் இருக்கிறதில்லை. நண்பர்கள் (சொல்வதைக்) கேட்பது உசிதமென்றும் பார்க்கிறேன். நிர்ப்பந்தமானதுசெய்யத்தக்கதுமில்லை. நிர்ப்பந்தமோ மிகக்குரூரமானது. இந்தவிஷயத்திலும் நிர்ப்பந்தத்தால் காலவர் அடைந்த அபஜயரூபமான இந்தப் பழைய சரித்திரத்தைச் சொல்லுகிறார்கள்.

அரசனே! பாரத! முற்காலத்தில் தர்மமானது தவஞ்செய்கிறவரான விஸ்வாமித்திரரைப் பரீக்ஷிக்கவேண்டுமென்கிற விருப்பத்தினாலே தான் ஸப்தரிஷிகளிலொருவருடைய வேஷத்தை அடைந்து பகவானான வஸிஷ்டரிஷியாகிப் பசியையடைந்து புஜிக்க விருப்பத்துடன் அந்தக் கௌசிகருடைய ஆஸ்ரமத்தைஅடைந்தது. உடனே, விஸ்வாமித்திரர் பரபரப்பை அடைந்து முயற்சியுடன் பரமான்னத்தின் சருவைப் பக்குவம் செய்தார். (தருமமாகிய) அவர் மற்றத் தவசிகளால் கொடுக்கப்பட்ட அன்னத்தைப் புஜித்தபடியால் அவரை எதிர்பார்க்கவில்லை. பிறகு, விஸ்வாமித்திரரும் மிகவும் உஷ்ணமாயிருக்கும் அன்னத்தை எடுத்துக்கொண்டு அருகிற்சென்றார். (தர்மமாகிய) பகவானானவர், 'நான் புஜித்தாகிவிட்டது. நீ நான் வருமளவும் நில்' என்று சொல்லிவிட்டுச் சென்றார். அரசனே! பிறகு, மிக்க காந்தியுடையவரும் கடுமையான விரதத்தையுடையவருமான விஸ்வாமித்திரர் நின்றுகொண்டே தலையில் அன்னத்தை வைத்துக் கைகளால் பிடித்துக்கொண்டு காற்றை அருந்துகிறவராகிச் செயலற்று ஆஸ்ரமத்தின் அருகில் கட்டைபோலிருந்தார். காலவமுனிவர், பெரியவரென்னும் எண்ணத்தினாலும் பூஜிக்கத் தக்கவரென்னும் எண்ணத்தினாலும் ஸ்நேஹத்தினாலும் பிரியத்தைச்செய்யும் விருப்பத்தினாலும் கௌசிகருக்குப் பணிசெய்வதில் முயற்சிசெய்தார். பிறகு, நூறுவருஷங்கள் பூர்ணமானபொழுது மறுபடியும் தர்மம் வஸிஷ்டருடைய வேஷத்தைத் தரித்துக்கொண்டு

---

[1] 'பகவானும் பிதாமஹருமான வியாஸர்' என்பது பழைய உரை.

போஜனத்தில் விருப்பத்தால் கௌசிகரை அடைந்தது. தர்மமாகிய அந்தமுனிவர், மகரிஷியும் புத்திமானுமான விஸ்வாமித்திரர் வாயுவைப் பக்ஷித்துத் தலையால் அன்னத்தைச் சுமந்துகொண்டு நிற்பதைப் பார்த்து, பிறகு, அப்படியே உஷ்ணமும் அப்படியே புதிதுமாயிருக்கிற அன்னத்தை வாங்கிப் புஜித்துவிட்டு, அவரை நோக்கி, 'ஓ! பிரம்மரிஷியே! பிரீதி அடைந்தவனாயிருக்கிறேன்' என்று சொல்லிவிட்டுச் சென்றார். விஸ்வாமித்திரர் அப்படியே தர்மத்தின் வசனத்தினால் க்ஷத்திரியத்தன்மை விலகிப் பிராம்மணத்தன்மையை அடைந்து பிரீதி அடைந்தவரானார்.

(பிறகு), விஸ்வாமித்திரர், தவத்தில் சிறந்த காலவரென்கிற சிஷ்யருடைய பணிவிடையினாலும் பக்தியினாலும் பிரீதியடைந்தவராகி, 'குழந்தாய்! காலவ! நான் அனுமதிகொடுத்துவிட்டேன். இஷ்டப்படி செல்' என்று சொன்னார். இவ்விதம் சொல்லப்பட்ட காலவர், ஸந்தோஷத்தை அடைந்து முனிவர்களில் சிறந்தவரும் மிக்க காந்தியுடையவருமான விஸ்வாமித்திரரை நோக்கி, மதுரமான வார்த்தையினால், 'ஓ! கௌரவத்தை அளிப்பவரே! உமக்குக் குருவின் செயலாகிற [1] அத்தியாபனத்திற்காக என்ன தக்ஷிணைகளைக் கொடுக்கவேண்டும்? தக்ஷிணைகளோடுகூடிய காரியமன்றோ நிறைவேறுகிறது? தக்ஷிணைகளைக் கொடுப்பவனல்லவோ [2] மோக்ஷத்துடன் கூடுகிறான்? ஸ்வர்க்கத்தில் யாகத்தின் பயனைத் தருவதும் அந்தத் தக்ஷிணையே. தக்ஷிணையானது சாந்தியாக (= இடையூறுகளைப் போக்குவதாகச்) சொல்லப்படுகிறது. பகவானான நீர் குருவுக்காக நான் எதைக் கொடுக்கவேண்டுமென்பதைச் சொல்லவேண்டும்' என்று கேட்டார். அந்தக் காலவர் பணிவிடையால் ஶ்ரமத்தை அடைந்ததை அறிந்த பகவானான அந்த விஸ்வாமித்திரரோ, அவரை நோக்கி, அடிக்கடி, 'போ, போ' என்று ஏவினார். விஸ்வாமித்திரரால் அடிக்கடி, 'போ, போ' என்று சொல்லப்பட்ட காலவர், 'எதைக் கொடுக்கவேண்டும்?' என்று பலமுறை கேட்டார். தவமுடையவரான காலவருடைய மிக்க நிர்ப்பந்தத்தால் விஸ்வாமித்திரர், சிறிது கோபங்கொண்டு, 'காலவ! ஒருபக்கத்தில் பச்சைக் காதுள்ளவைகளும் சந்திரனுக்குச் சமமான காந்தியுள்ளவைகளுமான எண்ணூறு குதிரைகளை எனக்குக் கொடு; போ; தாமதம் வேண்டாம்' என்று சொன்னார்.

---

1 கல்வி கற்பித்தல். 2 'பயனை அடைவது' என்பது பழையவுரை.

## நூற்றேழாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(காலவர் விஶ்வாமித்திரர் விரும்பின குதிரைகளை அடைய விஷ்ணுவை உபாஸித்ததும், கருடன் காலவரை வேண்டுமிடந்துக்கு அழைந்துப் போவதாகச் சொல்லியதும்.)

அப்பொழுது, புத்திமானுன அந்த விஶ்வாமித்திரரால் இவ் விதம் சொல்லப்பட்ட காலவர், பிறகு, உட்காரவில்லை; படுக்கவில்லை; உண்ணவில்லை. துர்யோதன! அப்பொழுது, அந்தக்காலவர், தோலும் எலும்புமானவரும் வெளுத்தவரும் கவலையால் சோகத்தில் அழுந்தினவரும் மிகவும் துக்கிக்கிறவரும் கோபத்தால் எரிக்கப்பட்டவரும் துக்கத்தை அடைந்தவருமாகித் துக்கத்தால் புலம்பினர்: 'எனக்குச் செல்வவான்களான நண்பர்கள் எங்கே இருக்கிறார்கள்? செல்வம் ஏது? பொருள்வரவு ஏது? சந்திரன்போல வெளுப்பான எண்ணூறு குதிரைகள் எப்படிக் கிடைக்கும்? இனி, எனக்குப் போஜனத்தில் ஶ்ரத்தை ஏது? எனக்கு ஸுகத்தில் ஶ்ரத்தை ஏது? எனக்கு உயிரில் ஆசையும் அற்றுவிட்டது. எனக்கு உயிர்வாழ்க்கையால் என்ன பயன்? நான் கடலின் அக்கரையிலாவது பூமியின் தூரத்திலும் தூரத்திலாவது சென்று சரீரத்தை விடுகிறேன். எனக்கு உயிரால் என்ன பயன்? தனமற்றவனும் விருப்பம் நிறைவேறாதவனும் பலவிதமான பயன்களைவிட்டவனும் கடனைச் சுமப்பவனுமான எனக்கு [1] இச்சை நிறைவேறாததால் ஏது ஸுகம்? நண்பர்களுடைய தனத்தைப் புஜித்து இஷ்டமானபடி ஸ்நேகத்தைச்செய்து பிரதியுபகாரம் செய்யச் சக்திஇல்லாதவனுக்கு உயிரைக்காட்டிலும் மரணமும் சிறிது பிரியமானது. செய்வேனென்று உறுதிகூறிச் செய்யவேண்டிய அதைச் செய்யாமற் பொய்வார்த்தையால் எரிக்கப்பட்டவனுடைய இஷ்டாபூர்த்தமானது நசிக்கிறது. பொய்யுடையவனுக்கு [2] அழகுகிடையாது. பொய்யுடையவனுக்கு ஸந்ததி கிடையாது. பொய்யுடையவனுக்குத் தலைமை கிடையாது. நல்லகதியே ஏது? நன்றிகெட்டவனுக்குப் புகழ் ஏது? ஸ்தானம் ஏது? ஸுகம் ஏது? நன்றிகெட்டவன் நம்பக்கூடாதவன் அல்லனே? நன்றிகெட்டவனுக்குப் பிராயச்சித்தம் இல்லை. தனமில்லாத பாவியானவன் ஜீவிக்கிற

1 'முயற்சி இல்லாமையால்' என்பது பழைய உரை.

2 'இருந்தும் இறந்தவனே' என்பது பழைய உரை.

இல்லை. பாவிக்குக் குடும்பத்தைத் தரித்தல் ஏது? நன்றியைக் கொல்லுகிற பாவியானவன் நிச்சயமாக நாசத்தை அடைவான். குருவினிடம் காரியத்தை முடித்துக்கொண்டு சொன்னபடி செய்யாதவனான நான் பாவியும் நன்றிகெட்டவனும் ஏழையும் பொய்யுடையவனுமானவன். அப்படிப்பட்ட நான் பெரிய முயற்சியைச் செய்து பிராணனை விடப்போகிறேன். முன் நான் தேவர்களிடம் ஒன்றையும் பிரார்த்தித்ததில்லை. எல்லாத் தேவர்களும் என்னை யாகசாலையில் கௌரவிக்கின்றனர். நானோ தேவர்களில் சிறந்தவரும் தேவரும் மூவுலகங்களுக்கும் ஈச்வரரும் துன்பத்தைப் போக்குபவரும் கதியுடையவர்களுக்குச் சிறந்த கதியாயிருப்பவருமான விஷ்ணுவைச் சரணமாக அடைகிறேன். எவரிடமிருந்து தேவாஸுரர்களனைவரையும் அடைந்துள்ள போகங்கள் ஏற்படுகின்றனவோ, யோகியும் அழிவற்றவருமான அந்த விஷ்ணுவை வணங்கித் தரிசிக்க விரும்புகிறேன்' என்று சொன்னார்.

இவ்விதம் சொன்னவுடன், அவருக்கு நண்பனும் விநதையின் புத்திரனுமான கருடன் காட்சியளித்தான். ஸந்தோஷத்தை அடைந்தவனாகி, அவரை நோக்கிப் பிரியத்தைச் செய்யும் விருப்பத்தால், 'நீ எனக்கு நண்பனாகக் கருதப்பட்டவன்; நண்பர்களுக்கெல்லாம் நண்பனாகக் கருதப்பட்டவன். நண்புடையவன் விபவமிருக்கும்போது ஒரு பொருளை அடையவிருப்பமுள்ள நண்பனுக்கு அதனைச் சேர்ப்பிக்கத்தக்கவன். ஓ! வேதியனே! எனக்கு விபவமுமிருக்கிறது. ஓ! பிராம்மண! முன் உன் நிமித்தம் விஷ்ணுவிடம் சொல்லியும் இருக்கிறேன். அவரால் என்னுடைய இஷ்டமும் செய்யப்பட்டது. அப்படிப்பட்ட நீ வா; போவோம். ஸுகமாக உன்னை அழைத்துப் போகிறேன். காலவ! பூமியினுடைய அக்கரையிலுள்ள தேசத்தையும் அடைவாய். தாமதம் வேண்டாம்.

## நூற்றெட்டாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

---

**(கருடன் காலவரைக் கிழக்குமுதலான திசைகளுக்கு அழைத்துச் செல்வதாகச் சொல்லிக் கீழ்த்திசையின் சிறப்பைச் சொல்லியது.)**

காலவ! ஞானகாரணரான தேவராலே உத்தரவளிக்கப்பட்டேன்; இஷ்டத்தைச் சொல்லு. முதலில், எந்தத் திசையைப் பார்ப்

பதற்குச் செல்லுவோம்? ஓ! பிராம்மணஸ்ரேஷ்ட! காலவ! நான் கிழக்குத்திக்கையோ அல்லது தெற்குத்திக்கையோ அல்லது மேலைத் திக்கையோ அல்லது வடதிக்கையோ எதை அடையவேண்டும்? பிராம்மணஸ்ரேஷ்ட! எல்லாஉலகங்களையும் விருத்திசெய்கிற ஸூர்யன் முதலில் எந்தத் திக்கில் உதயமாகிறானே, எதில் ஸந்தியாகாலத்தில் ஸாத்யர்களுடைய தவமானது நடக்கிறதோ, எதில் முதலில் இந்த உலகத்தை வியாபித்த மதியானது உண்டாயிற்றோ, எதில் யாகத்திற்குக் கண்கள் போன்ற அக்நீஷோமதேவதைகளைச் சேர்ந்த ஆஜ்ய பாகங்கள் ஏற்பட்டிருக்கின்றனவோ, எதில் இந்த யாகமும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறதோ, எந்தத்திக்கில் செய்யப்பட்ட கர்மாவும் ஹோமம்செய்யப்பட்ட ஹவிஸும் எல்லாத் திக்குக்களிலும் பரவுகின்றனவோ அப்படிப்பட்ட இந்தக் கிழக்குத்திசை, பகலுக்கும் (ஸூர்ய) கதிக்கும் வாயில். இதில் முன்பு தக்ஷபுத்ரிகள் ஸ்திரீப்ரஜைகளைப் பெற்றார்கள். எந்தத் திக்கில் காஸ்யபருடைய புத்திரர்கள் விருத்தியடைந்தார்களோ, எதில் இந்திரன் தேவராஜனாக அபிஷேகம் செய்யப்பட்டானே அப்படிப்பட்ட இதனைத் தேவர்களுடைய செல்வமானது மூலமாகவுடையது. ஓ! பிராம்மணஸ்ரேஷ்ட! இதில் தேவர்களால் தவம் செய்யப்பட்டது. ஓ! பிராம்மண! இந்தக் காரணத்தினால் இது பூர்வதிக்கென்று சொல்லப்படுகின்றது. மிக முந்தின காலத்தில், முதலிலேயே தேவர்களால் சூழப்பட்டதினாலேயே இதை எல்லாத்திக்குக்களுக்கும் பூர்வதிக்காகச் சொல்லுகின்றனர். ஸுகத்தை அடைய விருப்பமுள்ளவன் இதில் முதலில் எல்லாத் தேவகார்யங்களையும் செய்யவேண்டும். இதில் முதலில் உலகங்களைப் படைக்கிறவரான பகவான் வேதங்களைக் கானஞ்செய்தார். இங்கேயே ஸூர்யனாலே பிரம்மவாதிகளிடம் ஸாவித்ரியானது சொல்லப்பட்டது. ஓ! பிராம்மணஸ்ரேஷ்ட! இதில் ஸூர்யனாலே யஜுஸுகள் யாஜ்ஞவல்கியருக்குக் கொடுக்கப்பட்டன. இதில் ஸோம (ரஸம்) வரத்தையடைந்து யாகங்களில் தேவர்களால் பானம்செய்யப்படுகிறது. இந்தத்திக்கில் அக்னிகள் திருப்தியடைந்தவைகளாகித் தமது காரணமான ஸோமம், நெய், பால்முதலியவற்றை அருந்துகின்றன. இந்தத்திக்கில் வருணன் பாதாளத்தை அடைந்து செல்வத்தை அடைந்தான். ஓ! பிராம்மணஸ்ரேஷ்ட! இந்தத்திக்கில் முன்பு பழைய வஸிஷ்டருடைய பிறப்பும் இருப்பும் (நிமிசாபத்தால்) இறப்பும் விளங்குகின்றன. இதில் ஓங்காரத்திற்குப் பதினாயிரம் வழிகள் உண்டாகின்றன. எதில் தூமபர்களென்கிற

முனிவர்கள் ஹவிஸின் தூமத்தை அருந்தினார்களோ, எதில் இந்திரனாலே தேவதைகள் விஷயத்தில் யஜ்ஞபாகநிமித்தமாக ஏற்படுத்தப்பட்ட வராஹமுதலிய காட்டுமிருகங்கள் பல வதஞ்செய்யப்பட்டனவோ, அப்படிப்பட்ட இந்தத்திக்கில் ஸ்தாபிக்கப்பட்ட நன்றிகெட்ட மனிதர்களும் அஸுரர்களுமாகிய இவர்எல்லாரையும், ஸூர்யன் உதயமாகிறவனாகிக் கோபத்தினால் கொல்லுகிறான். இது மூவுலகங்களுக்கும் ஸ்வர்க்கத்திற்கும் ஸுகத்திற்கும் வழி. இது திக்குக்களுடைய பூர்வ பாகம். விரும்புகிறாயேயானால் இதில் பிரவேசிப்போம். நான் எவனுடைய வார்த்தையில் இருக்கிறேனோ அவனுடைய கார்யமானது எனக்குப் பிரியமல்லவா? காலவ! சொல்லு; போவேன். மற்றத் திக்குக்களைப்பற்றியும் கேள்.

---

## நூற்றேழ்பதாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(கருடன் தென்திசையின் சிறப்பைக் காலவனுக்குச் சொல்லியது.)

இது முன்பு ஸூர்யனாலே வேதத்திற் சொல்லப்பட்ட விதியினாலே குருவுக்குத் தக்ஷிணையாகக் கொடுக்கப்பட்டது. அதனால், தக்ஷிணதிக்கென்று சொல்லப்படுகின்றது. இதில் இந்தமூவுலகத்தினுடைய பித்ருக்களின் பாகமும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. ஓ! பிராம்மண! இதில் (ஆவியையருந்துகின்ற) ஊஷ்மபரென்கிற தேவர்களுடைய இருப்பிடமிருக்கிறதாகக் கேட்கிறோம். இதில் விச்வே தேவர்கள் பித்ருக்களுடன் எப்பொழுதும் உலகங்களில் பூஜிக்கப்பட்டு ஸமமான பாகத்தை அடைந்திருக்கிறார்கள். பிராம்மண! இதைத் தேவனான தர்மத்தினுடைய இரண்டாவது வாயிலாகச் சொல்லுகின்றனர். காலத்தின் நிச்சயமானது [1] த்ருடிக்கணக்காகவும் லவக்கணக்காகவும் கணிக்கப்படுகிறது. இதில் தேவரிஷிகளும் பித்ருலோகத்து ரிஷிகளும் அப்படியே ராஜரிஷிகளுமாகிய அனைவரும் வருத்தம்நீங்கியவர்களாகி எந்நாளும் வஸிக்கின்றார்கள். இதில் தர்மமும் ஸத்தியமும் (பிராணிகள்செய்த) வினையும் தெளிவாய்ச் சொல்லப்படுகின்றன. ஓ! பிராம்மணச்ரேஷ்ட! இது முடிவையடையுந்தன்மையுள்ள [2] கர்மங்களுக்குக் கதியானது. ஓ!

---

1 த்ருடி இரண்டுகொண்டது லவம். 2 'இறந்தவர் இருவினைப் பயனை அனுபவிக்க இடமாயிருப்பது' என்பது பழையவுரை.

பிராம்மணஶ்ரேஷ்ட! இது எல்லாரும் அடைகின்ற திக்கு. இது, [1] அஜ்ஞானத்தால் வியாபிக்கப்பட்டது. அதனால், ஸுகமானது அடையப்படுகிறதில்லை. பிராம்மணஶ்ரேஷ்ட! இதில் கெட்ட செய்கையுள்ளவர்களாகப் படைக்கப்பட்ட பல்லாயிரம் அரக்கர்கள் பாவிகளாலேயே பார்க்கத்தக்கவர்களா யிருக்கின்றனர். ஓ! பிராம்மண! இதில் மந்தரபர்வதத்தின் புதர்களில், பிராம்மணரிஷிகளின் இருக்கைகளில், கந்தர்வர்கள் மனத்தையும் புத்தியையும் கவர்கின்ற காதைகளைப் பாடுகின்றனர். இதில், ரைவதரானவர், காதைகளுடன் கானம் பண்ணப்பட்ட ஸாமங்களைக் கேட்டுப் பத்னிகளை விட்டும் மந்திரிகளை விட்டும் ராஜ்யத்தைவிட்டும் வனத்தை அடைந்தார். ஓ! பிராம்மண! இதில் ஸாவர்ணிமனுவினுலும் யவக்ரீதருடைய புத்ரனுலும் எந்த எல்லையை ஸூர்யன் அதிக்ரமிக்கிறதில்லையோ அந்த எல்லையானது ஸ்தாபிக்கப்பட்டது. இதில் ராக்ஷஸர்களுக்கு அரசனும் புலஸ்திய வம்சத்திற் பிறந்தவனும் மஹாத்மாவுமான இராவணன் தவத்தைச்செய்து, தேவர்களால் கொல்லப்படாமலிருப்பதை வரித்தான். இதில் நடந்த தவத்தினுல் விருத்திரனும் இந்திரனுக்குச் சத்ருவாயிருப்பதை அடைந்தான். எல்லாருடைய பிராணன்களும் இதனையடைந்து மறுபடி [2] ஐந்தாயிருப்பதை அடைகின்றன. ஓ! காலவ! இதில், பாவச்செய்கைகளையுடையமனிதர்கள் (நரகத்தில்) வேவிக்கப்படுகிறார்கள். இதில் வைதரணீ என்கிற நதியானது வைதரணீ நரகத்திற்குரியவர்களாலே அடையப்பட்டிருக்கிறது. பிராணியானது இதில் சென்று ஸுகத்தின் [3] முடிவையும் துக்கத்தின் முடிவையும் அடைகிறது. இந்தத் திக்கில் ஸூர்யன் திரும்பினவனுகி நல்ல ரஸத்தையுடைய ஜலத்தைப் பெருக்குகிறான்; வடதிக்கை அடைந்தோ பனியை விடுகிறான். ஓ! காலவ! நான் முன்காலத்தில் இந்தத்திக்கில் பசியால் பீடையடைந்து எங்கும் தேடி யுத்தம்செய்கின்ற பெரியயானை ஆமை இரண்டையும் அடைந்தேன். இதில் கபில தேவரென்று அறியப்பட்டவரும் ஸகரராஜனுடைய புத்திரர்களைத் துன்புறுத்தினவருமான சக்ரதனு என்கிற மஹரிஷியானவர், ஸூர்யனிடமிருந்தும் உண்டானார். இதில் ஸித்தியடைந்தவர்களும் வேதங்களின் கரையை அடைந்தவர்களுமான சிவர்களென்கிற பிராம்மணர்கள் எல்லா வேதங்களையும் அத்யயனஞ்செய்து அழிவில்லாத மோக்ஷத்தை அடைந்தனர். இதில், போகவதி என்கிற பட்டணமானது

1 'இருளால்' என்பது பழையவுரை. 2 தேகத்தை அடைவதை.
3 'ஸ்வர்க்கநரகானுபவங்களை' என்பது கருத்து.

வாஸுகியினாலும் தக்ஷகனென்கிற நாகத்தினாலும் அப்படியே ஐராவதனாலும் காக்கப்பட்டிருக்கிறது. இதில் மரணகாலத்தில் நேரில் ஸூர்யனாலும் அக்கினியினாலுங்கூட விலக்கமுடியாத பெரிய இருள் அடையப்படுகிறது. ஓ! காலவ! அந்த இருளிலும் உன்னுடைய ஸஞ்சாரத்திற்கு இதோ வழி இருக்கிறது. போகவேண்டுமானால் என்னிடம் சொல். வேறான மேலைத்திக்கைப்பற்றியும் கேள்.

---

## நூற்றுப்பத்தாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(கருடன் மேற்றிசையின் சிறப்பைக் காலவருக்குக் கூறியது.)

இதுவோ, ராஜாவும் [1] திக்குக்குப் பதியுமான வருணனுக்கு இஷ்டமான திக்கு. எப்பொழுதும், ஜலாதிபதிக்கு இருப்பிடமும் ஆதியுமானது. இதில், ஸூர்யன் பகலின் பின்பாகத்தில் கிரணங்களை விடுகிறான். ஓ! பிராம்மணச்ரேஷ்ட! (அதனால்) இந்தத்திக்கு, பச்சிமை என்று எங்கும் கியாதியடைந்திருக்கிறது. பகவானும் தேவருமான காச்யபர் இதில் ஜலத்தைக் காப்பதற்கு ஜலஜந்துக்களுக்கு அரசனாக வருணனுக்கு அபிஷேகஞ்செய்தார். இதில்,ஸோமனானவன் வருணனைச் சேர்ந்த ஆறுவிதமான எல்லாச் சுவைகளையும் அருந்தி வளர்பிறையின் தொடக்கத்தில் தருணனாயும் இருளை நிவிருத்தி செய்கிறவனுமாக உண்டாகிறான். ஓ! பிராம்மண! இதில் அஸுரர்கள் வாயுவினால் கட்டப்பட்டுப் பின்னிடச்செய்யப்பட்டு அப்பொழுது பெருமூச்சுவிட்டுப் பெருங்காற்றுக்களால் பீடையடைந்து தூங்கினார்கள். இதில், ஸ்நேகத்தோடுகூடிய ஸூர்யனைப் பச்சிம ஸந்தியானது பரவுவதற்குக் காரணமாக, அஸ்தமென்கிற பர்வதமானது ஏற்றுக்கொள்ளுகின்றது. இதிலிருந்து பகலின்முடிவில் ராத்ரியும் நித்திரையும் பிராணிக்கூட்டத்தினுடைய ஆயுளின் பாதியைக் கவர்வதற்குப்போல வெளிக்கிளம்பி உண்டாகின்றன. இதில், இந்திரனானவன், மருத்துக்களுடைய கணம் பிறப்பதற்குக் காரணமான தன் கர்ப்பத்தைத் தரிப்பவளும் நித்திரை செய்பவளுமான திதிதேவியைக் [2] கர்ப்பமழிந்தவளாகச் செய்தான். இந்தத்திக்கில் இமயமலையின் வேரானது (கடலுக்குள்முழுகிக்கிடக்

---

1 'அரசனானவருணனுக்கும் ஸூர்யனுக்கும்' என்பது பழையவுரை,

2 அவள் கர்ப்பத்தை அழித்தான்' என்பது.

கிற) சாஶ்வதமான மந்தரமலையை அடைகிறது. ஆயிரம் வருஷங்களானாலும் இதன் (அடியின்) முடிவு அடையப்படுகிறதில்லை. இதில் ஸ்வர்ணமயமான மலையை உடையதும் பொன்மயமான தாமரை மலர்களை யுடையதுமான கடலினுடைய கரையில் வந்து காமதேனுவானது பாலைப்பெருக்குகிறது. இதில், கடலினுடைய நடுவில் ஸூர்யனுக்கு நிகரானவனும் ஸூர்யசந்திரர்களைக் கொல்ல விரும்புகிறவனுமான ராகுவினுடைய உடற்குறையானது காணப்படுகிறது இதில் [1] நரையில்லாமல் கறுத்த ரோமங்களையுடையவரும் கானம் செய்பவரும் காணமுடியாதவரும் இவ்விதரென்று அறிய முடியாதவருமான ஸுவர்ணசிரரென்கிற முனிவருடைய பெரிய சப்தமானது கேட்கப்படுகிறது. இதில் ஹரிமேதரென்கிற முனிவருடைய த்வஜவதி யென்கிற குமாரியானவள், 'நில்லு, நில்லு' என்கிற ஸூர்யனுடைய கட்டளையினால் ஆகாயத்தில் நின்றுகொண்டிருந்தாள். ஓ! காலவ! இதில், வாயுவும் அக்கினியும் ஜலமும் ஆகாயமும், பகலிலும் இரவிலுமுண்டான கஷ்டமான ஸ்பரிசத்தை நீங்குகின்றன. இது முதற்கொண்டு ஸூர்யனுடைய கதியானது குறுக்கே திரும்புகிறது. இதில் எல்லாச்சோதிகளும் [2]ஸூர்யமண்டலத்தில் பிரவேசிக்கின்றன. இருபத்தெட்டு இரவுகள் ஸூர்யனுடன் சுற்றிவிட்டு மறுபடியும் சந்திரனுடைய சேர்க்கைபோன்ற சேர்க்கையினின்று மீண்டு ஸூர்யனிடமிருந்தும் வெளிவருகின்றன. இதில், எங்நாளும் கடலைப் பெருக்குவதான நதிகளின் உற்பத்தி ஏற்படுகிறது. இங்குள்ள கடலில் மூவுலகத்திற்கும் போதுமான ஜலம் இருக்கின்றது. இதில் ஸர்ப்பங்களுக்கு அரசனான அனந்தனுடைய வீடும் இருக்கிறது. இதில் ஆதியந்தமற்றவரான விஷ்ணுவினுடைய உத்தமமான ஸ்தானம் இருக்கிறது. இதில், அக்கினிக்கு நண்பனான வாயுவினுடைய ஸ்தானமும் இருக்கிறது. இங்கே, மரீசிமஹர்ஷியின் புத்ரரான கஶ்யபமஹர்ஷியின் இருப்பிடமுமிருக்கிறது. உனக்கு இந்த மேலைமார்க்கமானது சுருக்கமாகச் சொல்லப்பட்டது. ஓ! காலவ! பிராம்மணஶ்ரேஷ்ட! (உன்னுடைய) கருத்து என்ன? சொல்; போவோம்.

---

1 எங்நாளும் தருணரென்பது.

2 'விசதி' என்று பாடங்கொண்டு, 'ஸூர்யன் ஜ்யோதிகளில் பிரவேசிக்கிறான்' என்பது பழையவுரை.

நூற்றுப்பதினோராவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(கருடன் காலவருக்கு வடதிசையைப்பற்றிச் சொல்லி, விரும்பின இடம் செல்லத் தன் முதுகின்மீது ஏறச் சொல்லியது.)

ஓ! பிராம்மண! ஒருவன் பாவத்திலிருந்தும் கரையேற்றப்படுகிற காரணத்தினாலும் க்ஷேமங்களை அடைகிற காரணத்தினாலும் இந்த [1] உத்தாரணத்தின் வன்மையினால் (இந்தத் திக்கு) உத்தரை யென்று சொல்லப்படுகிறது. ஓ! காலவ! இது சிறந்ததும் ஸ்வர்ணமயமுமான ஸ்தானத்திற்கு வழியானது. மேலைத்திக்குக்கும் கீழைத்திக்குக்கும் நடுவாகக்கருதப்பட்டிருக்கிறது. ஓ! பிராம்மணஶ்ரேஷ்ட! சிறந்ததான இந்த வடதிக்கிலே, பிரியமான தோற்றமில்லாதவனும் மனத்தையடக்காதவனும் அதர்மமுள்ளவனுமான மனிதன் வஸிக்கிறதில்லை. இதில், நாராயணரான கிருஷ்ணரும் நரர்களில் சிறந்தவரான ஜிஷ்ணுவும் அப்படியே சாஸ்வதரான பிரம்மாவும் பதரிகாஶ்ரமமென்னுமிடத்தில் இருக்கின்றார்கள். இதில், இமயமலையினுச்சியில் [2] ப்ரகிருதியுடன் கூடின புருஷரும் ஊழித்தீப்போன்ற காந்தியுடையவருமான மஹேஶ்வரர் எந்நாளும் இருக்கிறார். அவர் நரரையும் நாராயணரையும் தவிர, முனிவர் கூட்டங்களாலும் அப்படியே இந்திரன் முதலான தேவர்களாலும் கந்தருவர்களாலும் யக்ஷர்களாலும் ஸித்தர்களாலும் பார்க்கப்படத் தக்கவரல்லர். இவ்விடத்தில், ஆயிரங்கண்களும் ஆயிரங்கால்களும் ஆயிரம் தலைகளுமுடையவரும் அழிவற்றவரும் ஸ்ரீமானும் ஒப்பற்றவருமான விஷ்ணுவானவர் மாயையினால் பார்க்கிறார். இதில் சந்திரனனவன் பிராம்மணர்களுக்கு அரசனாக அபிஷேகம் செய்யப்பட்டான். ஓ! வேதத்தை அறிந்தவர்களிற் சிறந்தவனே! இதில், மஹாதேவரானவர் ஆகாயத்திலிருந்தும் நழுவி விழுந்ததான கங்கையைத் தரித்து மனுஷ்யலோகத்தில் கொடுத்தார். இவ்விடத்தில், தேவியானவள் மஹாதேவரை அடையவிரும்பித் தவம்புரிந்தாள்; இதில், காமமும் கோபமும் இமயமலையும் உமையும் நன்குவிளங்கினார்கள். ஓ! காலவ! இந்தத்திக்கில் குபேரனும், ராக்ஷஸர்களுக்கும் யக்ஷர்களுக்கும் கந்தர்வர்களுக்கும் அதிபதியாகக் கைலாஸத்தில் அபிஷேகம் செய்யப்பட்டான். இதில், அழகான சைத்ரரதமென்கிற உத்யானமிருக்கிறது. இதில், வைகானஸர்க

---

[1] தூக்கி விடுதல். [2] 'உமையுடன்' என்பது பழையவுரை.

னுடைய ஆச்ரமமிருக்கிறது. ஓ! பிராம்மணச்ரேஷ்ட! இந்தத்திக்கில், மந்தாகினியும் மந்தரபர்வதமும் இருக்கின்றன. இதில், ஸௌகந்திக புஷ்பவனமானது நைருதர்களாலே காக்கப்படுகிறது. இங்கே, [1] பசும்புல் அடர்ந்த வாழைத்தோட்டமிருக்கிறது. இங்கே! ஸந்தானகங்களென்கிற விருக்ஷங்கள் இருக்கின்றன. ஓ! காலவ! இங்கே நித்யம் யோகத்துடன் கூடினவர்களும் இஷ்டப்படி ஸஞ்சரிப்பவர்களுமான ஸித்தர்களுக்குத் தகுந்தவைகளும் இஷ்டமான போகங்களை உடையவைகளுமான விமானங்கள் இருக்கின்றன. இங்கே, அந்த ஸப்த ரிஷிகளும் அப்படியே அருந்ததி தேவியும் இரவும் பகலும் இருக்கின்றனர். இங்கே, பிரம்மாவானவர் யாகத்தை மேற்கொண்டு நிலையாயிருந்துகொண்டிருக்கிறார். இங்கே, நக்ஷத்திரங்களும் சந்திர ஸூர்யர்களும் எங்நாளும் [2] சுற்றுகின்றனர். ஓ! பிராம்மணச்ரேஷ்ட! இங்கே, மஹாத்மாக்களும் ஸத்யவாதிகளுமான தாமர்களென்கிற முனிவர்கள் [3] கங்கையினுடைய பெரிய துவாரத்தைக் காக்கின்றனர். அவர்களுடைய வடிவமும் உறுப்புக்களின் அமைப்பும் அவர்கள் செய்யும் தவமும் அறியப்படுகிறதில்லை. ஓ! காலவ! (அவர்களுக்கு) ஆயிரம் சதுர்யுகங்கள் இஷ்டப்படி அனுபவிக்கத் தக்கவைகளாயிருக்கின்றன. ஓ! பிராம்மணச்ரேஷ்ட! காலவ! மனிதன் அந்த இடத்திலிருந்து மேல்மேல் செல்லச் செல்ல (பனியால்) நசிக்கிறான். ஓ! பிராம்மணச்ரேஷ்ட! இதானது தேவரான நாராயணரையும் ஜயத்தைச் சீலமாகக் கொண்டவரும் அழிவற்றவருமான நரரையுந்தவிர, மற்றொருவராலும் (இதுவரை) அடையப்படவில்லை. இங்கே, கைலாஸமென்று ஒன்று சொல்லப்பட்டிருக்கிறது. அது குபேரனுடைய ஸ்தானம். இங்கே, வித்யுத்பிரபைகளென்கிற பத்து அப்ஸரஸுகள் உண்டானார்கள். ஓ! பிராம்மண! இங்கே, மூன்று உலகங்களையும் அளக்கும்பொழுது அடிவைத்த விஷ்ணுவினாலே விஷ்ணுபதம் என்பது செய்யப்பட்டதாகி இந்த வடதிக்கை அடுத்திருக்கிறது. ஓ! பிராம்மணச்ரேஷ்ட! பிரம்மரிஷியே! இவ்விடத்தில் ஜாம்பூநதமென்கிற தடாகத்தோடுகூடிய உசீர பீஜமென்கிற க்ஷேத்திரத்தில் மருத்தனென்கிற அரசனால் யாகம் செய்யப்பட்டது. இவ்விடத்தில், மஹாத்மாவான ஜீமூதரென்கிற பிராம்மணரிஷிக்கு ஹிமவானைச் சேர்ந்ததும் பரிசுத்தமும்

---

1 'சாத்வலமென்னும் தேவதை கொடிமரம்போல உயர்ந்துநிற்கிறது' என்பது பழையவுரை. 2 திரும்புகின்றனர். 3 'கங்காத்வாரமென்கிற தீர்த்தத்தை ஸேவிக்கின்றனர்' என்பது கருத்து.

களங்கமற்றதுமான பொற்புதையல் நேரில் அகப்பட்டது. அந்த மஹரிஷியானவர் முன்னம் அதிகமான தம்முடைய தனம் முழுமையையும் பிராம்மணர்களுக்குத் தானம் செய்துவிட்டுத் தனத்தைப் பிரார்த்தித்தபடியால் அந்தத் தனம் ஜீமூதரைச் சேர்ந்ததாயிற்று. ஓ! பிராம்மணஸ்ரேஷ்ட! காலவ! இவ்விடத்தில் ஸந்நாளும் உதயத்திலும் ஸாயங்காலத்திலும் திக்குப் பாலகர்கள், 'யார் செய்யவேண்டிய காரியம் எது?' என்று கூக்குரலிடுகின்றனர். ஓ! பிராம்மணஸ்ரேஷ்ட! இந்தத்திக்கானது இவ்விதக்குணங்களாலும் மற்றக்குணங்களாலும் சிறந்ததாகி உத்தரையென்று எங்கும் புகழ்பெற்றிருக்கிறது; எல்லாக் கருமங்களுக்கும் சிறந்ததாயுமிருக்கிறது. ஓ! ஐயா! கிரமமாக இந்த நான்கு திக்குக்களும் உனக்கு விரிவாகச் சொல்லப்பட்டன. எந்தத் திக்குக்குப் போகவிரும்புகிறாய்? ஓ! பிராம்மணஸ்ரேஷ்ட! நான் உனக்குத் திக்குக்களையும் பூமியையும் முழுமையும் காண்பிப்பதற்கு முயற்சியுள்ளவனாயிருக்கிறேன். ஆதலால், என்மேல் ஏறு' என்றான்.

## நூற்றுப்பன்னிரண்டாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(கருடவேகம்பொறுதகாலவர் தருதக்ஷிணை கொடாமலே மரணம்நேருமோ என்று அஞ்சித் துயருற்றதும், கருடன் முன்னரே சொல்லாததால் வேகமாகச்செல்ல நேர்ந்ததென்றும்விருஷபமலையில் களைப்பாறித் திரும்புவோமென்றுஞ் சொல்லியதும்)

காலவர் சொல்லுகின்றார்: 'ஓ! கருட! ஸர்ப்பஸ்ரேஷ்டர்களுக்குப் பகையாயிருப்பவனே! நல்ல சிறகுகளையுடையவனே! விநதையின் புத்திர! தார்க்ஷ்ய! என்னைத் தர்மத்தின் கண்களிருக்கின்ற கீழ்த்திக்கில் கொண்டுபோ. முதலிற் சொல்லப்பட்ட இந்தத் திக்குக்கு முதலில் போ. இந்தத்திக்கில் தேவதைகளுடைய ஸாந்நித்யத்தைச் சொன்னாயன்றோ? இதில், நீ ஸத்தியமும் தர்மமுமிருப்பதாக நன்கு சொன்னாய். ஓ! அருணனுக்குத் தம்பியே! நானோ, எல்லாத் தேவர்களோடும் சேருதற்கு விரும்புகிறேன்; அந்தத்தேவர்களை அடிக்கடி பார்ப்பதற்கும் விரும்புகிறேன்' என்றார்.

கருடன், அந்தப் பிராம்மணரை நோக்கி, 'ஏறு' என்று சொன்னான். பிறகு, காலவரென்கிற அந்த முனிவர் உடனே கருடன்மேல்

ஏறினர். காலவர், 'ஓ! ஸர்ப்பங்களைப் பக்ஷிக்கின்றவனே! செல்லு கின்ற உன்னுடைய ரூபமானது முற்பகலில் ஆயிரம் கிரணங்களை யுடையவனும் ஒளியைச் செய்கிறவனுமான ஸூர்யனுடைய ரூபம் போலக் காணப்படுகிறது. ஓ! பக்ஷியே! சிறகுகளின் காற்றினால் சாய்க்கப்பட்டவைகளும் பின் செல்லுகின்றவைகளுமான மரங்கள் செல்வதை, கூடப்புறப்பட்டவைகள் செல்வதைப்போலப் பார்க்கி றேன். ஓ! ஆகாயத்தில் ஸஞ்சரிப்பவனே! நீ சிறகுகளின் காற்றி னாலே பூமியைக் கடல் மலைகள் தோப்புக்கள் காடுகளுடன் இழுக்கின் றவன்போல விளங்குகிறாய். சிறகுகளின் மிக்க காற்றினாலும் வாயுவி னாலும் ஜலமானது எப்பொழுதும் மீன்களோடும் நீர்யானைகளோடும் முதலைகளோடும் ஆகாயத்தில் எற்றப்படுவதுபோல இருக்கிறது. ஸம மான முகமும் உருவமுமுடைய மீன்களையும் அப்படியே திமிகளையும் திமிங்கிலங்களையும் நீர்யானைகளையும் நீர்க்குதிரைகளையும் மனிதமுகங் களையுடைய நீர்மனிதர்களையும் கசக்கப்பட்டவர்கள்போல நான் பார்க்கின்றேன். பெருங்கடலினுடைய முழக்கங்களாலே என் காது கள் செவிடாகச் செய்யப்பட்டன. என் காது கேட்கிறதில்லை; கண் பார்க்கிறதில்லை. [1] காரணம் தெரியவில்லை. அப்படிப்பட்ட நீ ப்ரம் மஹத்தி வருமென்பதை நினைத்து மெதுவாகச் செல். அப்பா! பக்ஷியே! ஸூர்யன் தெரியவில்லை. திக்குக்கள் தெரியவில்லை. ஆகா யம் தெரியவில்லை. இருளையே பார்க்கிறேன். உன்னுடைய சரீரத் தைப் பார்க்கவில்லை. ஓ! முட்டையிலுண்டானவனே! நான் உன் னுடைய கண்களை உத்தமஜாதி மணிகளைப்போலப்பார்க்கிறேன். உன் னுடைய சரீரத்தையாவது என்னுடைய சரீரத்தையாவது பார்க்க வில்லை. அடிக்கடி சரீரத்திலிருந்துமுண்டான அக்னியையோ பார்க் கிறேன். அது கண்களை மங்கச்செய்து மறுபடியும் சீக்கிரத்தில் அவிந்துவிடுகிறது. ஓ! விநதையின் புத்திரனே! ஆகையால், செல் வதிலுள்ள மிக்க வேகத்தை அடங்கச் செய். பாம்புகளைத் தின் பவனே! (இங்ஙனம் செல்லுவதில்) எனக்குச் சிறிதும் ப்ரயோஜன மில்லை. ஓ! மிக்க பாக்கியமுடையவனே! திரும்பு. உன்னுடைய வேகத்தை நான் தாங்கவில்லை. இவ்வுலகில் குருவின்பொருட்டு ஒரு பக்கம்பச்சைக் காதுள்ளவைகளும் வெண்மை நிறமுள்ளவைகளும் சந்திரனுக்கு நிகரான காந்தியுள்ளவைகளுமான எண்ணூறு குதிரை கள் (கொடுப்பதாகப்) பிரதிஜ்ஞை செய்யப்பட்டது. ஓ! பக்ஷியே! அவைகளை அடைவதற்குரிய மார்க்கத்தைக் காணவேயில்லை. ஆத

1 'என்ப்ரயோஜனத்தை நான் அறியவில்லை' என்பது பழையவுரை.

லால், என்னாலே என்னுடைய உயிரை விடுவதில் இந்தவழி காணப்பட்டது. எனக்குச் சிறிதும் தனமில்லை. தனத்தையுடைய நண்பனுமில்லை. இது மிக்க தனத்தினாலும் நிறைவேறக் கூடியதாயுமில்லை' என்றார்.

இவ்விதம் காலவர் பலவாறு தீனமாகச் சொல்ல, அப்பொழுது, கருடன் சென்றுகொண்டே சிரிப்புடன் மறுமொழி சொல்லலானான்: 'ஓ! பிராம்மணரிஷியே! சரீரத்தை விடவிரும்புகிற நீ அதிக அறிவுஉடையவனாயில்லை. காலகதியும் இஷ்டப்படி அடையக்கூடியதன்று. காலம் சிறந்த ஈசுவரனன்றோ? ஏன் என்னை நீ இந்த விஷயத்தில் முன்னமே கேட்கவில்லை? இது முடியக்கூடிய பெரிய உபாயமானது இதிலேயே இருக்கிறது. ஓ! காலவ! ஆகையால், இதோ ஸமுத்திரத்திற்குச் சமீபத்தில் ரிஷபமென்கிற மலையானது இருக்கிறது; அதில் இளைப்பாறி ஆகாரம் செய்துவிட்டுத் திரும்புவோம்' என்றான்.

## நூற்றுப்பதின்மூன்றாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(கருடனும் காலவரும் ரிஷபகிரி உச்சியில் சாண்டிலியைக்கண்டு அவளிட்ட உணவை உண்டு உறங்கியதும், காலவர் விழித்துக் கருடனது சிறகு உதிர்ந்திருக்கக்கண்டு வினவ, கருடன் சாண்டிலியை விஷ்ணுமுதலானவரிடம் கொண்டுபோகக் கருதியதாகச் சொல்லி க்ஷமிக்கும்படி வேண்டினதும், அவளருளால் சிறகடைந்த கருடனுடன் காலவர் செல்லுகையில் விசுவாமித்திரர் வந்து குதிரைகளைப்பற்றி மறுபடியும் சொல்லியதும்.)

பிறகு, பிராம்மணரும் கருடனும் ரிஷபமலையினுடைய கொடுமுடியிலிறங்கி, அவ்விடத்தில் தவம் செய்துகொண்டிருப்பவளான சாண்டிலி என்கிற பிராம்மண ஸ்திரீயைக் கண்டார்கள். கருடனும் காலவரும், அவளை வணங்கிப் பூஜித்து, அவளால் நல்வரவு கேட்கப்பட்டு, ஆஸனத்தில் உட்கார்ந்தார்கள். ஸித்தமானதும் பலிமந்திரங்களால் ஸம்ஸ்கரிக்கப்பட்டதும் அவளால் கொடுக்கப்பட்டதுமான அன்னத்தை அந்த இருவரும் புஜித்துவிட்டுத் திருப்தி அடைந்து உடனே

மயக்கத்தை அடைந்தவர்களாகிப் பூமியில் நித்திரைசெய்தார்கள். கருடன், போக வேண்டுமென்னும் விருப்பத்தால் ஒரு முகூர்த்தத்தில் விழித்துக்கொண்டு, அழகான எல்லா அவயவங்களையுமுடையவளும் பிரம்மசர்யத்தையுடையவளும் ரூபத்தால் நேரில்வந்த லக்ஷ்மி போன்றவளுமான அந்தத்தவமுடையவளைப்பார்த்துக் கிரகிப்பதற்கு மனத்தைச் செலுத்தினான். அதனால், கருடன் தன் சரீரம் சிறகுகளை இழந்ததாயிருப்பதைக் கண்டான். முகத்தையும் பாதங்களையுமுடைய அந்தக் கருடன் தசையுருண்டைபோலானான். காலவர், அவன் அவ்விதமிருப்பதைப் பார்த்து, மனவருத்தத்துடன், 'இங்கு வந்ததற்கு இதென்னபயன் உன்னால் அடையப்பட்டது? இவ்விடத்தில் நமக்கு எவ்வளவு காலம் இந்த வாஸம் ஏற்படப்போகிறது? உன்னுடைய மனத்தினால் தர்மத்திற்குக்கேடான என்ன கெட்ட காரியம் நினைக்கப் பட்டது? உன்னுடைய இந்த விரோதமான ஆசாரமானது லேசாக இராது' என்று வினவினார்.

பிறகு, கருடன், வேதியரை நோக்கி, 'ஓ! பிராம்மண! நான் இந்தஸித்தையை, இங்கிருந்து, எங்கே பிரம்மா இருக்கிறாரோ, எங்கே தேவரான மஹாதேவர் இருக்கிறாரோ, எங்கே ஸநாதனரான விஷ்ணு இருக்கிறாரோ, எங்கே தர்மமும்யஜ்ஞமும் இருக்கின்றனவோ அங்கே இவள் வஸிக்க வேண்டுமென்று அங்கே கொண்டுபோக நினைத்தேன்' என்று சொல்லிவிட்டு, தவமுடையவளான சாண்டிலியை நோக்கி, 'பூஜ்யையான உன்னை அப்படி நினைத்த நான் வணங்கிப் பிரார்த்திக்கின்றேன். (உனது) பிரியத்தை விரும்பித்துக்கிக்கின்ற மனத்தினாலே நான் இதை நினைத்தேன். ஆகையால், இவ்விதம் நன் மதிப்பினாலே இந்த விஷயத்தில் உனக்கு என்னால் அப்ரியம் செய்யப் பட்டது. அது நல்லதோ, கெட்டதோ உன் மஹிமையால் நீ பொறுக்கவேண்டும்' என்றான். அவள் அப்பொழுது ஸந்தோஷத்தை அடைந்து, அந்தக் கருடனையும் பிராம்மணஶ்ரேஷ்டரையும் நோக்கிச் சொல்லலானாள்.

'ஓ! கருட! பயப்படவேண்டாம். நல்ல சிறகுகளுடையவனாகிறாய். கலக்கத்தை விடு. வத்ஸ! உன்னால் நிந்திக்கப்பட்டவளாயிருக்கிறேன். நிந்தையையோ நான் பொறுக்கமாட்டேன். எந்தப் பாவி என்னை நிந்திப்பானோ அவன் உடனே உலகங்களிலிருந்தும் நழுவி விடுவான். ஓர் அவலக்ஷணமுமில்லாதவளும் குற்றம் சொல்லப்படாதவளும் ஆசாரத்தைக் கொண்டவளுமான என்னாலே சிறந்ததான இந்த ஸித்தியானது அடையப்பட்டது. ஆசாரமானது தர்மத்தைக்

கொடுக்கிறது; ஆசாரமானது தனத்தை அளிக்கிறது. ஒருவன் ஆசாரத்தால் செல்வத்தை அடைவான். ஆசாரமானது அவலக்ஷணத்தைப் போக்குகிறது. ஆயுஷ்மானே! கருட! ஆகையால், இங்கிருந்து இஷ்டப்படி போகலாம். நான் உன்னால் நிந்திக்கத்தகுந்தவள் அல்லேன். சில இடத்தில் நிந்திக்கத்தகுந்த ஸ்திரீகள் இருக்கின்றனர். கருட! நீ உனக்காக என்னைக் கைப்பற்ற விரும்பியிருந்தால் அப்பொழுதே உன்னுடைய தேகம் நாசத்தை அடைந்திருக்கும். நீயோ தேவதேவரான விஷ்ணுவைத் தியானித்து அவருடைய அனுக்கிரகத்தினாலேயே மறுபடியுமே அங்கங்களுண்டானவனுவாய். முன்போலப் பலமும் வீர்யமும் உடையவனுமாவாய்' என்றாள். பிறகு, அவனுக்கு மிக்க பலமுடையவைகளாகச் சிறகுகளுண்டாயின. சாண்டிலியினாலே அனுமதிகொடுக்கப்பட்டு வந்தபடி சென்றான். (காலவரோ) அவ்வித ரூபமுள்ள குதிரைகளை அடையவே இல்லை.

பிறகு, பேசுகிறவர்களில் சிறந்தவரான விஸ்வாமித்ரர், மார்க்கத்திலிருந்துகொண்டு அந்தக் காலவரைப் பார்த்துக் கருடனுடைய முன்னிலையில் சொல்லலானார்: 'ஓ! பிராம்மண! நீ எனக்கு வலிய (க்கொடுப்பதாக) உறுதிசொன்ன விருப்பத்தை நிறைவேற்ற இதுகாலம்; அல்லது, நீ எவ்விதம் நினைக்கிறாய்? நான் இவ்வளவு காலம் இருந்தது போல மேலும் எதிர்பார்த்திருப்பேன். ஓ! வேதியனே! காரியம் கைகூடத்தக்க வழியைப் பார்க்கக்கடவாய்' என்றார். பிறகு, கருடன், மிக்க துக்கத்தை அடைந்தவரும் தீனருமான அந்தக் காலவரை நோக்கி, 'விஸ்வாமித்ரர் சொன்னதானது இப்பொழுது எனக்கும் நேரில் தெரிந்ததாயிற்று. ஓ! பிராம்மணஸ்ரேஷ்ட! காலவ! ஆகையால், வா; ஆலோசிப்போம். குருவுக்கு முழுப்பொருளையும் கொடாமல் நீ உட்காரக்கூடாது' என்றான்.

---

## நூற்றுப்பதினொன்காவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

**(காலவருடன் சென்ற கருடன் யயாதியிடம் சென்று காலவர் வாலாற்றைக் கூறிக் குதிரைகளை யாசித்தது.)**

பிறகு, பக்ஷிகளிற் சிறந்த கருடன், தீனரான காலவரை நோக்கி, 'பொன்னானது பூமியினுள் அக்னியினால் உண்டுபண்ணப்பட்டு வாயுவினால் சோதிக்கப்படுவதனாலும் பூமிமுழுமையும் ஹிரண்மயமாயிருத்

தலாலும், (அந்தப் பொன்) ஹிரண்யமென்று சொல்லப்படுகிறது. '(உலகத்தைப்) போஷிக்கிறது' 'ஜீவிக்கச்செய்கிறது' என்னும் இந்தக் காரணத்தால் இது தனம் ஆகிறது. அப்படிப்பட்ட இந்தத் தனமானது மூவுலகங்களிலும் சாஸ்வதமாயிருக்கிறது. அப்படியே, எப்பொழுதும் குபேரன் விருத்தியடையும்பொருட்டுப் [1]பூரட்டாதி உத்தரட்டாதிகளுடன் கூடின சுக்ரவாரத்தில் அக்னிபகவான் தன் மனத்தினால் உண்டுபண்ணப்பட்ட பொருளை மனிதருக்குக் கொடுக்கிறான். பிராம்மணோத்தம! அஜைகபாத், அஹிர்ப்புத்நியர் என்னும் தேவதைகளாலும் குபேரனாலும் அந்தப் பொருள் பாதுகாக்கப்படுகிறது. இவ்வண்ணம் அடைய அரிதான பொருளானது, எளிதில் அடைய முடியாததாயிருக்கிறது. தனமில்லாமல் உனக்குக் குதிரைகளை அடைதல் இயலாது. அப்படிப்பட்ட நீ இந்த விஷயத்தில், பட்டணத்து ஜனங்களை வருத்தாமல் நம்மைக் கிருதார்த்தர்களாகச் செய்பவனும் ராஜரிஷியின் வம்சத்திற் பிறந்தவனுமான ஓர் அரசனிடம் யாசிக்கக் கடவாய். சந்திரவம்சத்தில் பிறந்தவனும் எனக்கு ஸகாவுமான ஓர் அரசனிருக்கிறான். அவனை அடைவோம். அவனுக்குப் பூமியில் செல்வம் இருக்கிறது. நஹுஷனுடைய புத்திரனும் தவறாத பராக்ரமத்தையுடையவனுமான யயாதி என்கிற ராஜரிஷி இருக்கின்றான். அவன், நானும் சொல்லி, நீயும் நேரில் யாசித்தால் கொடுப்பான். அவனுக்குக் குபேரனுக்கிருப்பதுபோல மிகப்பெரிதான செல்வமிருக்கிறது. ஏ! வித்வானே! இவ்விதம் (யாசித்துக்) கொடுப்பதனாலேயே குருவினுடைய தனத்தை ஈடுசெய்' என்றான்.

அவர்கள் அவ்விதம் பேசிக்கொண்டும், உசிதத்தை ஆலோசித்துக்கொண்டும், பிரதிஷ்டானமென்னும் நகரத்திலிருக்கிற யயாதி ராஜனை அடைந்தார்கள். கருடன், பூஜைகளுடன் சிறந்ததான அர்க்கியம் பாத்தியம் முதலியவற்றைப் (அவனால்) பெற்றுக்கொண்டு, வந்ததின் காரணத்தைக் கேட்க, சொல்லலானான்.

'ஓ! அரசனே! நஹுஷபுத்திர! இந்தக்காலவன் எனது நண்பன்; தவத்திற்கிருப்பிடம்; பதினாயிரக்கணக்கான வருஷங்கள் விஸ்வாமித்திரருக்குச் சிஷ்யனாக இருந்தான். அப்படிப்பட்ட இந்தப்பகவா

1 'ப்ரோஷ்ட பதாப்யாம்ச சுக்ரே' என்பது மூலம். 'பொருள்வேண்டுபவன் பூரட்டாதி உத்தரட்டாதிகளுடன் கூடின சுக்ரவாரத்தில் அக்னியைப் பூஜிக்கவேண்டும். அப்படிப் பூஜித்துக் கிடைக்கும்தனம் யாகஞ்செய்தல் முதலியவற்றால் குபேரனையே அடைகிறது' என்பது பழைய வுரை.

ஞன வேதியன் அவரால் அனுமதி கொடுக்கப்பட்டு, உபகாரத்தைச் செய்யும் விருப்பத்தால் அவரைநோக்கி, 'உமக்கு என்ன குருதக்ஷிணை கொடுக்கவேண்டும்?' என்று கேட்டான். இவ்விதம் அடிக்கடி சொல்லப்பட்ட விஸ்வாமித்திரர், சிறிது கோபத்தையடைந்து இவருக்குச் செல்வம் சிறிதாயிருப்பதை அறிந்து, இவரை நோக்கி, 'ஒருபக்கம் பச்சைக்காதுள்ளவைகளும் வெளுப்புநிறமுள்ளவைகளும் சுத்தமான பிறப்பையுடையவைகளும் சந்திரனுக்கு நிகரான காந்தியுடையவைகளுமான எண்ணூறுகுதிரைகளை எனக்குக்கொடு' என்றுசொன்னார். 'ஓ! காலவ! அபிப்ராயமிருந்தால் இதைக் குருவுக்குத் தனமாகக் கொடு' என்று தவத்தைத் தனமாகக்கொண்ட விஸ்வாமித்திரர் கோபத்துடன் சொன்னார். அப்படிப்பட்ட இந்தப் பிராம்மணஸ்ரேஷ்டன் மிக்க சோகத்தால் தாபத்தை அடைந்து அந்த ப்ரதியுபகாரத்தைச் செய்தற்குச் சக்தியில்லாமல் உன்னைச் சரணமாக அடைந்தான். ஓ! நரஸ்ரேஷ்டனே! உன்னிடமிருந்து பிக்ஷையை வாங்கி வருத்தம் நீங்கிக் குருவின்பொருட்டுக் கடனைத் தீர்த்துவிட்டுப் பெரிய தவத்தைச் செய்வான். உன்னையும் தவத்தின் பாகத்தோடு சேர்த்துவைப்பான். ராஜரிஷிக்குரிய சொந்தத் தவத்தினால் நிரம்பின உன்னை (ப்பின்னும்) நிரப்புவான். ஓ! அரசனே! பூமிக்குப் பதியாயிருப்பவனே! [1] இவ்வுலகத்தில் (கொடுக்கப்படும்) குதிரையில் எவ்வளவு ரோமங்களிருக்கின்றனவோ அவ்வளவு குதிரைகள் (அதைக்கொடுப்பவனுக்குப்) பரலோகங்களில் வந்து சேருகின்றன. பெறுதற்கு இவன் பாத்திரம். கொடுப்பதற்கு நீ பாத்திரம். இது [2] சங்கில் விடப்பட்ட பாலுக்கு நிகராகும்' என்றான்.

[1] 'குதிரையின்மேல் எத்தனை ரோமங்களுண்டோ அத்தனை புண்ய லோகங்கள் அதைக்கொடுத்தவனுக்கு வரும்' என்பது இங்கிலீஷ் மொழி பெயர்ப்பின் கருத்து.

[2] சங்கும் பாலும் ஒரே நிறமுடையன; ஆகவே, ஒன்றன் நிறத்தை ஒன்று மாற்றாமை இந்த உபமானத்தால் வரும்சிறப்பு.

## நூற்றுப்பதினைந்தாவது அத்யாயம்.

## பகவத்யாந பர்வம். (தொடர்ச்சி.)

(யாகங்களில் பொருள்களைச் செலவிட்டுவிட்ட யயாதி பொருளுக்குப் பிரதியாகத் தன்மகள் மாதவியைக் கொடுத்ததும், கருடன் காலவரிடம் அநுமதிபெற்றுச் சென்றதும், காலவர் ஹர்யச்வனிடம் போய்ச் சுல்கங்கொடுத்து மாதவியை மணக்கச் சொல்லியதும்.)

கருடன் இவ்விதம் உண்மையும் உத்தமமுமான வார்த்தையைச் சொல்ல, ஆயிரம்யாகங்களைச் செய்தவனும் கொடுப்பவனும் கொடைக்குப் பதியும் பிரபுவும் காசிதேசமுழுமைக்கும் தலைவனுமான யயாதி ராஜன், பிரியநண்பனான கருடனையும் பிராம்மணச்ரேஷ்டரான காலவரையும் பார்த்தும், தவத்தின் உதாரணத்தையும், எடுத்துரைக்கப் பட்ட ச்லாக்கியமான பிக்ஷையையும் ஜாக்ரதையுடன் ஆலோசித்தும் அடிக்கடி உறுதிசெய்து, 'ஸூர்யகுலத்திலுண்டான மற்ற அரசர்களைக்கடந்து என் ஸமீபத்தை அடைந்தார்கள்' என்கிற இந்த எண்ணத்தையும் பார்த்து, இந்தவார்த்தையை உரைக்கலானான். 'ஓ! கருட! குற்றமற்றவனே! உன்னாலே இப்பொழுது எனது பிறப்புப் பயனுள்ளதாயிற்று; இப்பொழுது எனது குலமும் கரையேற்றப் பட்டது; இப்பொழுது என்னுடைய இந்தத்தேசமும் கரையேற்றப்பட்டது. ஓ! நண்பனே! ஒருவார்த்தை சொல்ல விரும்புகிறேன். நீ முன்பு என்னை (ச்செல்வமுள்ளவனென்று) அறிகிறது போல இப்பொழுது நான் செல்வமுடையவனாயில்லை. நண்பனே! என் தனமும் குறைந்துவிட்டது. ஆகாயத்திற் செல்பவனே! நான் உன்னுடைய வரவையும் வீணாகச் செய்யக்கூடியவனாகவில்லை. பிராம்மணரிஷியான இவருடைய ஆசையையும் வீணாகச் செய்வதற்கு விரும்பவில்லை. என் புத்திரியைக் கொடுக்கிறேன். எது செய்ய வேண்டுமோ அதை இவள் செய்வாள். வந்து ஆசைகெட்டுத்திரும்புகிறவன் (கொடாதவனது) குலத்தை எரிக்கிறான். ஓ! கருட! உலகத்தில் ஆசையை நாசம்செய்கிறதான 'கொடு' என்கிற வார்த்தையோ, 'இல்லை' என்கிறவார்த்தையோ இவற்றைக் காட்டிலும் மிக்க பாவமாயுள்ளது வேறொன்றும் சொல்லப்படவில்லை. கௌரவமுள்ள மனிதன் ஆசைகெட்டுப் பயன்பெறாமற்போனால் கொல்லப்பட்டவனே. அவன் உதவி செய்யாதவனுடைய புத்ரர்களையும் [1] பௌத்திரர்களை

---

1 எனவே, கொடாதவனைக் கொல்லுகிறானென்பது சொல்லாமலே கிடைக்கிறது.

யும் சொல்லுகிறான். ஓ! கருட! ஆகையால், [1] நான்குவம்சங்களை ஸ்தாபனம் செய்பவளும் எல்லாத்தர்மங்களையும் கொடுப்பவளுமான மாதவி என்கிற எனது இந்தப் புத்ரியைக் கொடுக்கிறேன். ஓ! காலவரே! தெய்வப்பெண்ணுக்கு நிகரான காந்தியுள்ளவளும் எல்லாத் தர்மங்களையும் வளர்ப்பவளும் ரூபத்தால் எப்பொழுதும் தேவர்களாலும் மனிதர்களாலும் அஸுரர்களாலும் விரும்பப்பட்டவளும் சிறுமியுமான இந்த எனது புத்ரியைப் பெற்றுக்கொள்ளும். அரசர்கள் ராஜ்யத்தையும் இவளுக்குப் பரிசமாகக் கொடுப்பார்களென்பது நிச்சயம். பசுமையானகாதுள்ள எண்ணூறுகுதிரைகளைக் கொடுப்பார்களென்பது சொல்லவும் வேண்டுமா? அப்படிப்பட்ட நீர் மாதவி என்கிற எனது இந்தப்புத்ரியைப் பெற்றுக்கொள்ளும். ஓ! பிரபுவே! நான் தௌஹித்ரர் (=மகளின்மைந்தர்)களுடன் கூடினவனாகக்கடவேன். இது என்னுடைய ப்ரார்த்தனை' என்று சொன்னான். கடுமையான விரதத்தையுடைய காலவரென்கிற அந்தப்பிராம்மணர் அவனுடைய சொல்லைக்கேட்டு அந்தக்கன்னிகையை வாங்கிக்கொண்டு, கருடனுடன், 'மறுபடியும் பார்ப்போம்' என்று சொல்லிவிட்டுக் கன்னிகையுடன் புறப்பட்டார். கருடன், 'குதிரைகளுக்கு இந்தவழி அகப்பட்டது' என்று சொல்லிவிட்டுக் காலவரிடம் அனுமதிபெற்றுத் தனது வீடுசென்றான்.

கருடன் சென்றபிறகு. காலவர் கன்னிகையுடன் ஆலோசனை செய்து, சுல்கத்தைக் கொடுப்பதில் வல்லவனை அரசனை அடைந்தார். அவர், மனத்தினால், பச்சைக்குதிரைகளையுடையவனும் அரசர்களிற் சிறந்தவனும் மிக்கதிறமைவாய்ந்தவனும் நால்வகைப்படைகளையுமுடையவனும் நிரம்பிய தனசாலையையும் தான்யசாலையையுமுடையவனும் பட்டணத்து ஜனங்களிடம் அன்புள்ளவனும் பிராம்மணர்களுக்குப் பிரியமானவனும் குடிகளால் விரும்பப்பட்டவனும் சாந்தகுணமுடையவனும் மேலானதவத்தைச் செய்கிறவனும் அயோத்தியிலிருப்பவனும் இக்ஷ்வாகு குலத்தில் பிறந்தவனுமான [2] ஹர்யச்வனென்னும் அரசனை அடைந்தார். காலவரென்கிற அந்தவேதியர், அவனை அடைந்து, 'ஓ! ராஜச்ரேஷ்டனே! என்னுடைய இந்தக் கன்னிகை புத்திரர்களாலே குலத்தைச் செழிக்கச்செய்வாள். ஓ!

---

[1] நான்குவம்சங்களாவன:—தன்தாய் தந்தை, கணவனது தாய்தந்தை இவர்களின் வம்சங்கள். இவள், பின்பு, நான்குபிள்ளைகளைப் பெறுதலால், நான்கு வம்சம் எனினும் பொருந்தும்.

[2] ஹர்யச்வன்=பச்சைக்குதிரைகளையுடையவன்.

இவளை மனைவியாக்கிக்கொள்ளும்பொருட்டுச் [1] சுல்கத்தால் வாங்கிக் கொள்ளக்கடவாய். சுல்கத்தை உனக்குச் சொல்லுவேன். அதைக் கேட்டு ஞாபகத்தில் வைத்துக்கொள்' என்றார்.

## நூற்றுப்பதினாறுவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(ஹர்யச்வன் கேட்கக் காலவர் சுல்கத்தைக் கூறியதும், ஹர்யச்வன் தன்னிடம் சுல்கப்பொருளில் நாலிலொன்றே இருந்தலால் தான் மாதவியிடம் ஒருபுத்ரனை அடைந்து பின் அவளைத் திருப்பிக் கொடுத்து விடுவதாகச் சொல்லியதும், மாதவி தான் மக்களைப் பெறுந் தோறும் திரும்பத்திரும்பக் கன்னியாம்படி வரம் பெற்றி ருப்பதைக்கூறி வேறு அரசர்களிடம் சுல்கத்தின் மிச் சாற்பங்கையும் அடையலா மென்றதும், காலவர் ஸம்மதிக்க ஹர்யச்வன் மாதவியிடம் வஸுமனஸென்னும் புத்திரனைப் பெற்றுப் பிறகு மாதவியைக் காலவரிடம் கொடுக்க அவர் அவளுடன் திவோதாஸனி டம் சென்றதும்.)

பிறகு, அரசர்களிற் சிறந்த ஹர்யச்வனென்கிற அரசன், ஸங்கதிகளின் நிமித்தமாய்ப் பலவாறு ஆலோசித்துத் தீர்க்கமாகவும் உஷ்ணமாகவும் பெருமூச்சுவிட்டுச் சொல்லுகின்றான்: 'இவள், உன்னதமாயிருக்கவேண்டிய ஆறு அவயவங்களில் உன்னதமானவளும் [2]ஸூக்ஷ்மமாயிருக்கவேண்டிய ஐந்து அவயவங்களில் ஸூக்ஷ்மமானவளும் மூன்று அவயவங்களில் கம்பீரமானவளும் ஐந்து அங்கங்களில்சிவந்தவளுமாயிருக்கிறாள். பின்தட்டுகள், நெற்றி, தொடைகள், மூக்கு என்கிற ஆறும் உயரமாயிருக்கின்றன; விரல்களுடைய கணுக்கள், கேசம், ரோமம், நகம், தோல் ஆகிய ஐந்தும் ஸூக்ஷ்மமாயிருக்கின்றன. குரல், மனம், நாபி மூன்றையும் ஆழ்ந்திருப்பனவாகச் சொல்லுகின்றனர். உள்ளங்கைகளும், உள்ளங்கால்களும், கடைக்கண்களிரண்டும், நகங்களும் சிவந்தவைகளாயிருக்கின்றன. (புருஷனுக்கு) ஐந்தில் நீளமும் நாலில் குட்டையும் ஐந்தில் ஸூக்ஷ்மமும்

---

1 மணமகன், மணமகளின் பெற்றோர்களுக்குக் கொடுக்கும் வெகுமானம். 2 'மெதுவானவை' என்பது.

ஆறில் உன்னதமும் ஏழில் சிவப்பும் மூன்றில் விரிவும் மூன்றில் கம்பீரமுமாயிருப்பது சிலாகிக்கப்படுகிறது. கன்னம், கண், கை, தொடை, மூக்கு ஐந்தும் நீண்டவைகளானால் ஸுகத்தை அளிக்கின்றன. லிங்கம், பின்தட்டு, கழுத்து, கணுக்கால் நான்கும் குட்டையானால் ஹிதத்தைத் தருகின்றன. துக்கத்தை அடைந்தவர்களுக்கு பல், விரற்கணு, கேசம், தோல், விரல் ஆகிய ஐந்தும் ஸூக்ஷ்மமாயிரா. மார்பு, கக்ஷம், நகம், நாசி, தோள், பிடரியெலும்பு என்கிற ஆறும் உன்னதமாகவும் கடைக்கண், பாதம், கை, கன்னம், கீழ் மேலுதடுகள், நாக்கு, நகம் என்கிற (ஏழும்) சிவப்பாகவு மிருந்தால் எல்லா ஸுகத்தையும் அளிக்கின்றன. பல தேவாஸுரர்களாலேபார்க்கத்தக்கவளும் [1] பல கந்தர்வர்களாலே தரிசிக்கத்தக்கவளும் பல லக்ஷணங்கள் பொருந்தியவளும் மங்களமான பலவற்றைத் தரிப்பவளுமான இவள் சக்கரவர்த்தியான புத்திரனைப் பெறத்தக்கவளாயிருக்கிறாள். ஓ! பிராம்மணஸ்ரேஷ்டரே! என்னுடைய செல்வத்தை ஆலோசித்துச் சுல்கத்தைச் சொல்லும்' என்றான்.

காலவர், 'ஒருபக்கம் பச்சைக் காதுள்ளவைகளும் சந்திரன் போல வெண்மை நிறமுடையவைகளும் நல்ல தேசத்திற் பிறந்தவைகளும் சிறந்த மேனியுடையவைகளுமான எண்ணூறு குதிரைகளை எனக்குக் கொடு. பிறகு, நீண்ட கண்களுடையவளும், அக்னிகளுக்குக் காரணமான அரணிபோலச் சுபமானவளுமாயிருக்கிற இவள் உனக்குப் புத்திரர்களைப் பெறுகிறவளாவள்' என்றார். இந்த வார்த்தையைக்கேட்டு ராஜரிஷியான ஹர்யஸ்வனென்கிற அரசன், காமத்தால் மோகத்தை அடைந்தவனும் மனம் நெகிழ்ந்தவனுமாகி ரிஷிகளில் சிறந்தவரான காலவரை நோக்கிச் சொல்லலானான்.

'உமக்கு எவ்விதக் குதிரைகள் வேண்டுமோ அவ்விதக் குதிரைகள் என்னிடம் இருநூறு இருக்கின்றன. என்னிடம் மற்றைக் குதிரைகளோ நூற்றுக் கணக்காகச் சஞ்சரிக்கின்றன; அவைகளை விரும்பலாம். ஓ! காலவரே! இருநூறு குதிரைகளை அளிக்கக்கூடியவனான அப்படிப்பட்ட நான் இவளிடம் ஒரு குழந்தையை உண்டு பண்ணுவேன். நீர் எனக்கிஷ்டமான இந்த வரத்தைக் கொடுக்க வேண்டும்' என்று சொன்னான். இவ்விதம் கேட்ட அந்தக் கன்னிகையோ, காலவரை நோக்கி, 'எனக்கு ஒரு ப்ரம்மவாதியினாலே, 'நீ ப்ரஸவத்தின் முடிவுதோறும் கன்னியாகவேஆவாய்' என்று ஒருவரம்

1 'ஸங்கீத முதலிய பல கந்தர்வ நூல்களைக் கற்றவளும்' என்பது பழையவுரை.

அளிக்கப்பட்டது. குதிரைகளைப் பெற விரும்புகிற நீர் சிறந்தவை களான குதிரைகளை வாங்கிக்கொண்டு அரசனுக்கு என்னைக் கொடும். (இப்படி) நான்கு அரசர்களிடத்திலிருந்தும் உமக்கு எண்ணூறுமே நிரம்பிவிடும். அப்படியே, எனக்கு நான்கு புத்திரர்களும் உண்டா வார்கள். ஓ! பிராம்மணஶ்ரேஷ்டரே! குருவுக்காகக் குதிரைகளைச் சேர்த்தலைச் செய்யக்கடவீர். ஓ! பிராம்மணரே! இவ்விதம் எனக்குத் தோன்றுகின்றது. நீர் எவ்விதம் நினைக்கிறீரோ?' என்றாள்.

கன்னிகையினால் இவ்விதம் உரைக்கப்பட்ட அந்தக் காலவமுனிவரோ, அப்பொழுது, ஹர்யஶ்வனென்கிற பூபாலனை நோக்கி இந்த வார்த்தையை உரைக்கலானார்: 'ஓ! அரசனே! ஹர்யஶ்வ! இந்தக் கன்னிகையானவள் சுல்கத்தினுடைய நாலிலொரு பாகத்தினால் கிரகிக்கப்படட்டும். ஒரு புத்திரனைப் பெற்றுக்கொள்' என்றார். அந்த அரசன் அந்தக் கன்னிகையை வாங்கிக்கொண்டு காலவரையும் ஸந்தோஷிக்கச்செய்து நல்ல ஸமயத்தில் நல்ல தேசகாலங்களில் இஷ்டமான புத்திரனை அடைந்தான். அப்பொழுது, வஸுமனஸென்கிற அந்த அரசன் வஸுக்களைக்காட்டிலும் அதிக தனமுடையவனும் வஸுக்களுக்குரிய கியாதியுடையவனும் வஸுக்களை (=தனத்தை) அளிப்பவனுமானான். பிறகு, புத்திமானான காலவர் ஸமயத்தில் மறுபடியும் வந்தார். பிரீதியை அடைந்த மனத்தையுடைய ஹர்யஶ்வனிடம் வந்து, 'ஓ! அரசனே! ஸூர்யனுக்கு நிகரான இந்தப் பாலன் உனக்குப் புத்திரனாக உண்டாகிவிட்டான். ஓ! அரசனே! சுல்கத்துக்காக வேறு அரசனை அடைவதற்குச் சமயம்' என்று சொன்னார். ஸத்தியவசனத்திலிருப்பவனும் பராக்ரமசாலியுமான ஹர்யஶ்வன் குதிரைகளை அடைவதரிதாயிருப்பதால் மறுபடியும் மாதவியைக் கொடுத்தான். மாதவியும் விளங்குகின்றதான ராஜலக்ஷ்மியைவிட்டுவிட்டு மறுபடியும் தன் இச்சையினால் குமாரியாகிக் காலவர்பின்னே சென்றாள். வேதியர், 'உன்னிடத்திலேதானே குதிரைகளிருக்கட்டும்' என்று அந்த அரசனுக்குச் சொல்லிவிட்டுக் கன்னிகையோடுகூடத் திவோதாஸனென்கிற அரசனைக் குறித்துச் சென்றார்.

## நூற்றுப்பதினேழாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(காலவர் தம்வரவின் காரணத்தைத் திவோதாஸனுக்குச் சொல்லியதும், அவன் தன்னிடத்திலும் இருநூறு குதிரைகளே இருத்தலால் தானும் ஒரே ஸந்ததியைப் பெற்றுக்கொள்வதாகச் சொல்லி அவளை அடைந்து பிரதர்த்தனன் என்னும் புத்திரனைப் பெற்றுப் பிறகு அவளைத் திருப்பிக்கொடுத்ததும்.)

காலவர், 'ஓ! கல்யாண குணமுள்ளவளே! மிக்க திறமையுடையவனும் பூமியைக்காப்பவனும் காசிக்குநாயகனும் ஸமர்த்தனும் 1 பீமஸேனனுடைய புத்திரனுமான திவோதாஸனென்று கியாதி பெற்ற அரசனொருவன் இருக்கிறான். அவனிடம் செல்லுவோம்; மெல்ல வா. வருத்தத்தை அடையாதே. அந்த அரசன் தர்மசீலனும் ஐம்பொறிகளை அடக்குவதிலும் ஸத்தியத்திலுமே பற்றினவனுமாயிருப்பவன்' என்றார். அந்தக் காலவ முனிவர் அவனை அடைந்து, அவனால் முறைப்படி பூஜிக்கப்பட்டுக் குழந்தையின் நிமித்தத்தில் அந்த அரசனைத் தூண்டினார்.

திவோதாஸன், 'ஓ! பிராம்மணரே! இது என்னால் முன்னமே கேட்கப்பட்டிருக்கிறது. விரிவாகச்சொல்லி என்ன பயன்? ஓ! பிராம்மணஸ்ரேஷ்டரே! இந்த விஷயமோ கேட்டவுடனேயே என்னால் இச்சிக்கப்பட்டது. (மற்ற) அரசர்களைத் தள்ளிவிட்டு இவ்விதம் என்னை அடைந்தீரென்பது எனக்கு நன்மதிப்பாகும். இதுவும் ஐயமற நடக்கும். ஓ! காலவரே! நமக்கும் குதிரைகள் விஷயத்தில் ஹர்யச்வனுக்குண்டான அந்த விபவந்தான் இருக்கிறது. நானும் இவளிடத்தில் ஓர் அரசனையே பெற்றுக்கொள்வேன்' என்றான். பிராம்மணஸ்ரேஷ்டரானவர், 'அப்படியே' என்று சொல்லிவிட்டு, அரசனுக்குக் கன்னிகையைக் கொடுத்தார். அரசனும் அந்தக் கன்னிகையை விதிபூர்வகமாகக் கிரகித்தான்.

ராஜரிஷியான அவன் அவளிடத்தில், பிரபாவதியினிடத்தில் ஸூர்யன்போலவும் ஸ்வாஹாதேவியினிடம் அக்னிபோலவும் இந்திராணியினிடம் இந்திரன்போலவும் ரோஹிணியினிடம் சந்திரன் போலவும் தூமோர்ணையினிடம் யமன்போலவும் கௌரியினிடம் வருணன்போலவும் ரித்தியினிடம் குபேரன்போலவும் லக்ஷ்மியி

1 இவன் வேறு

னிடம் நாராயணர்போலவும் கங்கையினிடம் ஸமுத்திரம்போலவும் ருத்திராணியினிடம் ருத்திரர்போலவும் வேதி (=ஸரஸ்வதி) யினிடம் பிரம்மாபோலவும் அதிருஶ்யந்தியினிடம் சக்திபோலவும் அக்ஷமாலையினிடம் வஸிஷ்டர்போலவும் ஸுகன்யையினிடம் ச்யவனர் போலவும் ஸந்தியையினிடம் புலஸ்தியர்போலவும் விதர்ப்பராஜ குமாரியான லோபாமுத்ரையினிடம் அகஸ்தியர்போலவும் ஸாவித்ரியினிடம் ஸத்யவான்போலவும் புலோமையினிடம் ப்ருகுபோலவும் அதிதியினிடம் கஶ்யபர் போலவும் ரேணுகையினிடம் ரிசீகரின் புத்ரரான ஜமதக்நிபோலவும் ஹைமவதியினிடம் கௌசிகர்போலவும் தாரையினிடம் பிருகஸ்பதிபோலவும் சதபர்வாவினிடம் சுக்கிரன் போலவும் பூமியினிடம் பூபதி போலவும் உர்வசியினிடம் புரூரவன்போலவும் ஸத்தியவதியினிடம் ரிசீகர்போலவும் ஸரஸ்வதியினிடம் மனுப்போலவும் சகுந்தலையினிடம் துஷ்யந்தன்போலவும் திருதியினிடம் சாஶ்வதரான தர்மர்போலவும் தமயந்தியினிடம் நளன்போலவும் ஸத்யவதியினிடம் நாரதர்போலவும் ஜரத்காருவினிடம் ஜரத்காருபோலவும் ப்ரதீசியினிடம் புலஸ்தியர்போலவும் மேனகையினிடம் ஊர்ணுயுபோலவும் ரம்பையினிடம் தும்புருபோலவும் சதசீர்ஷையினிடம் வாஸுகிபோலவும் குமாரியினிடம் தனஞ்சயன் போலவும் ஸீதையினிடம் ராமர்போலவும் ருக்மிணியிடம் கிருஷ்ணர் போலவும் சேர்ந்து மகிழ்ந்தான். திவோதாஸனென்கிற அரசன் அவ்விதம் ரமித்துக்கொண்டிருக்கும்பொழுது, மாதவியானவள் பிரதர்த்தனனென்கிற ஒரு புத்திரனைப் பெற்றாள்.

பிறகு, ஸமயம் நேரிட்டபொழுது, பகவானான அந்தக் காலவர், திவோதாஸனை அடைந்து, 'ஓ! அரசனே! என்னுடைய கன்னிகையை நீ திருப்பிக்கொடு. குதிரைகள் இங்கு இருக்கட்டும். சுல்கத்திற்காக வேறிடம் செல்லுவேன்' என்று சொன்னார். பிறகு, தர்மாத்மாவான திவோதாஸனென்கிற அரசன் ஸத்தியத்திலிருப்பவனாய்ச் சமயத்தில் காலவருக்கு அந்தக் கன்னிகையைத் திரும்பக் கொடுத்தான்.

---

## நூற்றைப்பதினெட்டாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(காலவர் மறுபடியும் கன்னியான மாதவியுடன் உசீநரனிடம் சென்று தம் விருப்பத்தைத் தெரிவித்ததும், அவனும் இருநூறு குதிரை கொடுத்து அவளிடம் சிபியென்னும் குமாரனைப் பெற்றுக் கொண்டதும், பிறகு மாதவியை அழைத்துச் செல்லும் காலவர் கருடனைக் கண்டதும்.)

புகழ்பெற்றவளும் உண்மையான ப்ரதிஜ்ஞையையுடையவளுமான மாதவியானவள் அப்படி அந்த ஸம்பத்தைத் தள்ளிவிட்டுக் கன்னிகையாகிக் காலவரென்கிற வேதியரை அடைந்தாள். தம்முடைய கார்யத்தில் பற்றின மனத்தையுடையவரான காலவர் ஆலோசித்துக்கொண்டே உசீநரன் என்கிற அரசனைப் பார்ப்பதற்குப் போஜநகரத்தைக் குறித்துச் சென்றார். அவர், தவறாத பராக்ரமத்தையுடைய அந்த அரசனை அடைந்து, அவனை நோக்கிச் சொல்லலானார்: 'இந்தக் கன்னிகையானவள் உனக்கு அரசர்களான இரண்டு புத்திரர்களைப் பெறுவாள். அரசனே! நீ இவளிடம் சந்திரஸூர்யர்களுக்கு நிகரான இரண்டு புத்திரர்களைப் பெற்று இம்மையிலும் மறுமையிலும் பயன்பெற்றவனாகக் கடவாய். எல்லாத் தர்மங்களையும் அறிந்தவனே! எனக்குச் சந்திரனுக்கு நிகரான காந்தியுடையவைகளும் ஒரு பக்கத்தில் பச்சைக்காதுள்ளவைகளுமான நானூறு குதிரைகளைச் சுல்கமாகக் கொடுக்கவேண்டும். இந்தப் பிரயத்னமானது குருவுக்காக. குதிரைகளாலே எனக்கு ஒரு காரியமுமில்லை. மஹாராஜனே! முடியுமானால், ஆலோசியாமற் செய்யலாம். ராஜரிஷியே! பூபால! புத்திரனில்லாதவனாயிருக்கிறாய். இரண்டு புத்திரர்களைப் பெற்றுக்கொள். நீ புத்திரனாகிற ஓடத்தினாலே பித்ருக்களையும் உன்னையுமே கரையேற்று. ராஜரிஷியே! புத்ரனாலுண்டாகும் பயனையனுபவிப்பவனே, ஸ்வர்க்கத்திலிருந்தும் தள்ளப்படுகிறதில்லை; புத்திரனில்லாதவர்கள் அடைகின்ற கோரமான நரகத்தையும் அடையான்' என்றார். காலவரால் சொல்லப்பட்ட இதனையும் பலவிதமான மற்றவற்றையும் கேட்டு உசீநரனென்கிற அரசன் அவருக்கு மறுமொழி கூறலானான்.

'ஓ! காலவரே! நீர் சொல்லுகிறபடி உம்முடைய வார்த்தையைக் கேட்டவனாயிருக்கிறேன். ஓ! பிராம்மணரே! விதியோ

பலமானது. என்மனமோ புத்ரோத்பத்தியில் பற்றினதாக இருக்கிறது. ஓ! பிராம்மணஶ்ரேஷ்டரே! இப்படிப்பட்ட ஒற்றைக்காது கறுத்த குதிரைகளோ என்னிடம் இருநூறு இருக்கின்றன. மற்றவைகள் என்னிடம் அனேகம் ஆயிரங்கள் திரிகின்றன. ஓ! காலவரே! நானும் இவளிடம் ஒரு புத்ரனையே பெற்றுக்கொள்வேன். நான் புத்திரவான்களான மற்றவர்கள் செல்லுகின்ற மார்க்கத்தை அடைவேன். ஓ! பிராம்மணஶ்ரேஷ்டரே! நான் உமக்கு மூல்யத்தினாலும் (மற்றவர்கள் செய்ததை) ஒப்பச் செய்வேன். என்னுடைய தனமோ பட்டணத்து ஜனங்களுக்கும் தேசத்து ஜனங்களுக்குமாக ஏற்பட்டது; என்னுடைய போகத்திற்காக ஏற்பட்டதன்று. ஓ! தர்மாத்மாவே! எந்த அரசன் பிறருக்காக ஏற்பட்ட தனத்தை இஷ்டப்படி கொடுக்கிறானோ அவன் அறத்தையும் புகழையும் அடையான். அப்படிப்பட்ட நான் கிரகித்துக்கொள்ளுகிறேன். நீர் எனக்குத் தேவகன்னிகைக்கு நிகரான இந்தக்குமாரியை ஒரு புத்திரனுடைய உத்பத்திக்காகக் கொடும்' என்றான். அவ்விதம் பலவாறாகக் கன்னிகையைக்குறித்துச் சொல்லியவனான உசீநரனென்கிற அரசனை ப்ராம்மணஶ்ரேஷ்டரான காலவர் புகழ்ந்தார். காலவர் உசீநரனைக் (கன்னியைக்) கைக்கொள்ளும்படி செய்துவிட்டு வனம் சென்றார்.

அவன், புண்யம்செய்தவன் பாக்கியத்தை அடைவதுபோல அவளையடைந்து, மலைகளுடைய குகைகளிலும் நதிகளுடைய கால்வாய்களிலும் பலவிதமான பூந்தோட்டங்களிலும் வனங்களிலும் உபவனங்களிலும் அழகான மாடிகளிலும் ப்ராஸாதங்களின் உச்சிகளிலும் சாளரங்களோடுகூடின விமானங்களிலும் கர்ப்பக்ருகங்களிலும் கூடி இன்பம் நுகர்ந்தான். பிறகு, அவனுக்குச் சமயத்தில் அரசர்களிற் சிறந்தவனாய்ச் சிபி என்று பேருள்ளவனும் புகழ்பெற்றவனும் பாலஸூர்யனுக்குச் சமமான காந்தியையுடையவனுமான புத்திரன் [1] உண்டானான். அரசனே! காலவரென்கிற அந்த வேதியர் அந்த உசீநரனை அடைந்து அந்தக் கன்னிகையை வாங்கிக்கொண்டு சென்றார்; (வழியில்) கருடனைக் கண்டார்.

1 வேறு பாடம்.

## நூற்றுப்பத்தோன்பதாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(காலவர் இருநூறுகுதிரைகள் குறைவாயிருப்பதைக் கருடனுக்குச்சொல்லி அவன்சொற்படி அறுநூறு குதிரைகளையும் மாதவியையும் விஸ்வாமித்ரரிடம்கொடுத்ததும், விஸ்வாமித்ரர் அவளிடம் அஷ்டகனென்னும் பிள்ளையைப்பெற்று அவளைத் திரும்பவும் காலவரிடம் கொடுத்ததும், அவர் அவளை யயாதியினிடம் கொணர்ந்துவிட்டதும்.)

பிறகு, கருடன், காலவரை நோக்கி, 'ஓ! பிராம்மண! பாக்கியத்தால் இப்பொழுது கிருதார்த்தனை உன்னைப் பார்க்கிறேன்' என்று சிரித்துக்கொண்டு சொன்னான். காலவரோ, கருடன் சொன்னவார்த்தையைக்கேட்டு அந்தக்காரியத்தை நான்கிலொருபாகம் (பூர்த்தியாகாமல்) மிச்சமாயிருப்பதாக அவனிடம் சொன்னார். பேசுகிறவர்களிற் சிறந்தவனான கருடனோ, அந்தக்காலவரை நோக்கி, 'நீ ப்ரயத்தினம் செய்யவேண்டாம். உனக்கு இது கைகூடாது. முன்காலத்தில் கான்யகுப்ஜ தேசத்தில் ரிசீகரானவர், காதியின் புத்ரியான ஸத்யவதியென்கிற கன்னிகையை மனைவியாக வரித்தார். ஓ! காலவ! (அப்பொழுது,) அந்தக்காதி, 'ஓ! பகவானே! எனக்கு நீர் ஒருகாது பசுமை நிறமுள்ளவைகளும் சந்திரனுக்கு நிகரான காந்தியுள்ளவைகளுமான ஆயிரம் குதிரைகளைக் கொடுக்கவேண்டும்' என்று சொன்னான். ரிசீகரோ, 'அப்படியே ஆகுக' என்று சொல்லிவிட்டு, வருணனுடைய வீடுசென்று அஸ்வதீர்த்தத்தில் குதிரைகளை அடைந்து அரசனுக்குக் கொடுத்தார். அரசன் புண்டரீகமென்கிற யாகம் செய்து அவைகளைப் பிராம்மணர்களுக்குக் கொடுத்தான். அப்பொழுது (உனக்குக் குதிரைகளைக்கொடுத்த) அந்த அரசர்கள் அந்தப் பிராம்மணர்களிடமிருந்து இருநூறு இருநூறு குதிரைகளை விலைக்குவாங்கி அடைந்தார்கள். ஓ! பிராம்மணஸ்ரேஷ்ட! ஓட்டிச்செல்லப்படுகின்ற மற்ற நானூறு குதிரைகளும்[1] விதஸ்தை என்னும் ஆற்றைக் கடக்கும்போது அதனால் இழுத்துக்கொண்டுபோகப்பட்டன. ஓ! காலவ! இவ்விதமானதால் அடையமுடியாததை ஓரிடத்திலும் அடைதற்கு இயலாது. ஓ! தர்மாத்மாவே! அந்த விஸ்வாமித்ரருக்கு அறுநூறு குதிரைகளோடு (மற்ற) இருநூறு குதிரைகளுக்காக இவளை ஒப்புவிப்பாயாக. ஓ! பிராம்மணஸ்ரேஷ்ட! பிறகு, மோஹம்நீங்கிச் செய்யவேண்டிய

1 வேறுபாடம்.

தைச்செய்தவனுவாய்' என்ருன். காலவர், அவனைநோக்கி, 'அப்படியே ஆகுக' என்று சொல்லிவிட்டு, உடனே, கருடனுடன் குதிரைகளையும் கன்னிகையையும் கொண்டு விஸ்வாமித்ரரை அடைந்து, அவரை நோக்கி, 'இதோ உம்மால் விரும்பப்பட்ட பொருள்களாகிற குதிரைகளில் அறுநூறு இருக்கின்றன. இருநூறு குதிரைகளுக்காக இந்தக் கன்னிகையை நீர் பெற்றுக்கொள்ளும். இவளிடம் ராஜரிஷிகளுக்குத் தார்மிகர்களான மூன்று புத்ரர்கள் உண்டானுர்கள். நீரும், மனுஷ்ய ஸ்ரேஷ்டனுன நான்காமவனொருவனைப் பெற்றுக்கொள்ளும். இவ்விதம் உமக்கு எண்ணூறு குதிரைகளும் நிரம்பினவைகளாகட்டும். நான் உம்மிடம் கடனில்லாதவனுகி ஸுகமாகத் தவஞ்செய்யக் கடவேன்' என்று கூறினுர்.

விஸ்வாமித்ரரோ, கருடனுடன் அந்தக் காலவரைப் பார்த்தும் சிறந்த தொடைகளையுடையவளான அந்தக் கன்னிகையையும் பார்த்தும், 'ஓ! காலவ! இந்த விஷயத்திற்காக நீ முன்னமே ஏன் இவளை எனக்குக் கொடுக்கவில்லை? எனக்கே குலத்தை விருத்திசெய்கின்ற நான்கு புத்திரர்கள் உண்டாவார்களே? ஒரு புத்திரனுகிற பயனுக்காக, உன்னுடைய கன்னிகையை ஏற்றுக்கொள்கிறேன். குதிரைகளும் என்னுடைய ஆஸ்ரமத்தையடைந்து எங்கும் திரியட்டும்' என்ருர். பிறகு, மிக்க காந்தியையுடைய அந்த விஸ்வாமித்திரர் அவளுடன் கூடி மாதவிக்கும் தமக்கும் புத்திரனுன அஷ்டகனென்கிற பிள்ளையைப்பெற்ருர். மஹாமுனிவரான விஸ்வாமித்திரர், பிறந்தவுடனே, அந்தப் புத்திரனை, [1] அர்த்தங்களோடும் தர்மங்களோடும்சேர்ப்பித்து அந்தக் குதிரைகளையும் கொடுத்தார். பிறகு, அஷ்டகன் அப்பொழுது சந்திரனுடைய பட்டணத்துக்குச் சமமான காந்தியையுடைய பட்டணத்தை அடைந்தான். கௌசிகரும் சிஷ்யரிடம் கன்னிகையைத் திருப்பிக் கொடுத்துவிட்டு வனஞ்சென்ருர்.

காலவரும், கருடனுடன் தக்ஷிணையைக்கொடுத்து, மிகத்தெளிவான மனத்துடன் கன்னிகையை நோக்கி, 'சிறந்த தொடைகளையுடையவளே! நல்ல இடையுடையவளே! உன்னுலே தானங்களுக்குப் பதியான புத்திரனும் அப்படியே சூரனுன மற்றவனும் ஸத்தியத்திலும் தர்மத்திலும் பற்றுள்ள வேருெருவனும் அப்படியே யாகத்தைச் சீலமாகவுடைய மற்ருெருவனும் உண்டானுர்கள். ஆகையால், உன்னுடைய புத்திரர்களாலே (உன்னுடைய) பிதாவும் நான்கு அரசர்களும் அப்படியே நானும் கரையேற்றப்பட்டோம்' என்ருர். பிறகு, காலவர் ஸர்ப்பங்களைப் பக்ஷிக்கின்ற கருடனுக்கு அனுமதி

---

1 'பொருள்களையும் தர்மங்களையும் நன்கு அறிவித்து' என்பது.

கொடுத்து அந்தக்கன்னிகையைப் பிதாவினிடம் திரும்பச் சேர்ப்பித்துவிட்டு வனமேசென்றார்.

## நூற்றிருபதாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(யயாதி, கங்கையும் யமுனையுங் கூடுமிடத்தில் மாதவிக்கு ஸ்வயம்வரம் ஏற்படுத்த யக்ஷர்கந்தர்வர்முதலியோர் வந்ததும், மாதவி யாரையும் வரியாமல் தவஞ்செய்ததும், யயாதி ஸ்வர்க்கம்சென்று நெடுங்காலம் வஸித்துப்பிறகு தேவர்முனிவர் முதலியோரை அவமதித்தமையால் அங்கிருந்து நழுவினதும்.)

அந்த யயாதி ராஜனே, கங்கை யமுனைகளுடைய ஸங்கமத்திலிருக்கிற ஆச்ரமஸ்தானத்தையடைந்து மறுபடியும் மாதவிக்குச் சுயம்வரத்தைச் செய்ய விருப்பங்கொண்டான். பூருவும் யதுவும் மாலையைக் கையில்பிடித்த தங்கையான அந்த மாதவியைத் தேரில் ஏற்றிக்கொண்டு ஆச்ரமத்தைச் சுற்றிவந்தார்கள். அவ்விடத்தில் நாகர்கள், யக்ஷர்கள், மனிதர்கள், கந்தர்வர்கள், மிருகங்கள், பறவைகள், மலைகள் மரங்கள் வனங்கள் இவற்றில் வசிப்பவர்கள் ஆகிய இவர்களுடைய கூட்டமானது ஏற்பட்டது. வனமானது பல ஜாதியாரான அந்தத் தேசத்து ஜனங்களின் தலைவர்களாலே நெருங்கியதும் பிரம்மாவுக்கு நிகரான ரிஷிகளாலே நாலுபக்கத்திலும் சூழப்பட்டதுமாயிற்று. சிறந்த மேனியையுடைய அவள், வரர்கள் சுட்டிக்காட்டப்படும்பொழுது, அந்த எல்லா வரர்களையும் தாண்டி வனவாஸத்தை வரனாகவரித்தாள். யயாதியின் புத்ரியான கன்னிகையானவள், தேரைவிட்டிறங்கி, உறவினரை வணங்கிப் பரிசுத்தமான வனத்தையடைந்து தவத்தைச்செய்தாள். பலவித உபவாஸங்களாலும் தீக்ஷைகளாலும் நியமங்களாலும் சரீரத்தை இலேசாகச்செய்து மிருகங்களுடன் ஸஞ்சரிப்பவளானாள். வைடூர்யத்தினுடைய முளைகளுக்கு ஒப்பானவைகளும் மெல்லியவைகளும் பசுமைநிறமுள்ளவைகளும் துவர்ப்புள்ளவைகளும் இனிப்புள்ளவைகளும் மெதுவுமான புற்களை மேய்கிறவளும், நல்ல சுவையுள்ளவைகளும பரிசுத்தமானவைகளும் குளிர்ந்தவைகளும் மாசற்றவைகளுமான புண்யநதிகளுடைய சிறந்த ஜலங்களை அருந்துகிறவளும், சிங்கங்கள் புலிகள் இல்லாதவையும் காட்டுத்தீக்களில்லாமல் சூன்யமாயிருப்பவையுமான வனங்களிலும் பிரவேசிக்கமுடியாத அடர்ந்த காடுகளி

லும், வனத்தில் ஸஞ்சரிக்கின்ற பெண்மான்போல மான்களுடன் கூடி ஸஞ்சரிப்பவளுமாகிப் பிரம்மசரியத்திருந்த விரிவான தர்மத்தை அனுஷ்டித்தாள். [1] யயாதியும், முந்தின அரசர்களுடைய நடையை அனுஷ்டித்துக்கொண்டு பல ஆயிரவருஷங்கள் ஆயுளையுடையவனாயிருந்து, பிறகு, மரணத்தை அடைந்தான். மனிதர்களில் சிறந்தவர்களான பூரு யதுஇருவரும் வம்சத்தில் விருத்தியடைந்தார்கள். நகுஷபுத்திரனை யயாதியும் அவர்களாலே இவ்வுலகத்திலும் மேலுலகத்திலும் நிலைபெற்றபுகழை அடைந்தான். அரசனே! மனுஷ்யர்களுக்குப் பதியும் மஹரிஷிகளுக்குச் சமானனும் விபுவுமான யயாதிராஜன், ஸ்வர்க்கத்திலிருந்துகொண்டு, ஸ்வர்க்கத்திலுள்ளவற்றில் சிறந்ததான பயனைஅனுபவித்தான். அனேகம் ஆயிரம்வருஷங்களென்று பேர்கொண்ட மிக அதிகமானகாலமானது சென்றபொழுது, மஹிமைபொருந்தியவர்களும் மிக்க செல்வப்பெருக்கையுடையவர்களுமான ராஜரிஷிகள் உட்கார்ந்திருக்கையில், அறிவு மழுங்கினவனும் கர்வத்தால் மூடப்பட்ட புத்தியையுடையவனுமான யயாதி எல்லா மனிதர்களையும் தேவர்களையும் அப்படியே ரிஷிகணங்களையும் அவமதித்தான். அப்பொழுது, தேவனும் வலாஸுரனைக்கொன்றவனுமான இந்திரன் அவன் அப்படியிருந்ததை அறிந்தான். அந்த ராஜரிஷிகளெல்லாரும், 'சீ! சீ!' என்று சொன்னார்கள்.

நஹுஷபுத்திரனைப் பார்த்து, 'இவன் யார்? எந்த அரசனைச் சேர்ந்தவன்? எவ்விதம் ஸ்வர்க்கத்தை அடைந்தான்? இவன், எந்தக் கர்மாவினால் ஸித்தி பெற்றான்? இவனால் எங்கே தவம் செய்யப்பட்டது? ஸ்வர்க்கத்தில் எவ்விதம் அறியப்படுகிறான்? யாரால் அறியப்படுகிறான்?' என்னும் விசாரணையானது ஏற்பட்டது. ஸ்வர்க்கத்தில் வஸிக்கின்ற அவர்கள் அரசனைப்பார்த்து இவ்விதம் ஆலோசிக்கிறவர்களாகி அவனைக்குறித்து ஒருவரையொருவர் வினவினார்கள். நூற்றுக்கணக்கான விமானபாலகர்களும் ஸ்வர்க்கத்தின் வாயிலைக் காக்கின்றவர்களும் ஆஸனபாலகர்களும் வினவப்பட்டபொழுது, உடனே அவர்கள், 'அறியோம்' என்று சொன்னார்கள். அவர்களெல்லாரும் ஞானம் மறைபட்டு அந்த அரசனை அறியவில்லை. பிறகு, அந்த அரசன் அப்பொழுதே ஒரு முகூர்த்தகாலத்தில் ஒளி மழுங்கினவனானான்.

---

1 யயாதியின் சரித்திரத்தை ஆதிபர்வம் ௬௯-வது முதலிய அத்யாயங்களில் காண்க.

## நூற்றிருபத்தோராவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(இந்திரனுடைய தூதன் யயாதியை விழச்சொல்லியதும், யயாதி ஸாதுக்களின்நடுவில் விழும்படி இந்திரனிடம் வரம்பெற்று நைமிசாரண்யத்தில் யாகம் செய்கின்ற தன் பௌத்ரர்களின் நடுவில் விழுந்ததும், யயாதி அவர்கள் கொடுக்கும் புண்ய பலனை ஏற்க மறுத்ததும், அங்குவந்த மாதவி அவர்கள் யயாதிக்குப் பௌத்ரரென்பதைத் தெரிவித்து அவர்கள் கொடுத்த புண்யத்தோடு தன் புண்யத்திலும் பாதிகொடுத்ததும், காலவரும் தம்தவத்தில் அரைக்காற் பங்கைக் கொடுத்ததும்.)

பிறகு, அரசன் ஸ்தானத்திலிருந்தும் சலித்து ஆஸனத்திலிருந்து நழுவிச் சலிக்கின்ற மனத்துடன் சோகமாகிற அக்னியினால் எரிக்கப்பட்டு மாலைவாடி அறிவழிந்து கிரீடமும் தோள்வளைகளும் நழுவ எல்லா அங்கங்களும் தளர்ந்து ஆபரணங்களும் வஸ்திரமும் நழுவித் தான் பார்க்கப்படாமல், அவர்களை அடிக்கடி பார்க்கிறவனும் காணாதவனும் யாதுமற்றவனும் மிக்கசூன்யமான மனத்துடன் சுழன்றுகொண்டு பூதலத்தைக்குறித்து விழப்போகிறவனுமாகி, 'நான் ஸ்தானத்திலிருந்தும் சலிப்பதற்குக் காரணமானதும் தர்மத்தைக்கெடுப்பதுமான எந்தத்தீச்செயலானது என்னால் மனத்தினால் நினைக்கப்பட்டது?' என்று ஆலோசித்தான். அங்கேயே அந்த அரசர்களும் ஸித்தர்களும் அப்ஸரஸுகளும், பிடிப்பற்று நழுவினவனான அந்த யயாதியைப் பார்த்தார்கள். அரசனே! பிறகு, புண்யம் நசித்தவர்களைத் தள்ளுகிறவனான ஒரு வேலைக்காரன்வந்து, இந்திரனுடைய கட்டளையினாலே, யயாதியைநோக்கிச் சொல்ல

'ஓ! அரசகுமார! நீ மிகுந்த கொழுப்பால் மதங்கொண்டாய். ஒருவனையும் அவமதியாமலிருக்கவில்லை. கர்வத்தால் உனக்கு ஸ்வர்க்கம் நழுவிவிட்டது. நீ ஸ்வர்க்கத்திற்குத் தக்கவனல்லை. நீ அறியப்படுகிறாயில்லை; போ; விழு' என்று அவனை நோக்கிச் சொன்னான். கதியுடையவர்களிற் சிறந்தவனான நகுஷபுத்திரன்,

'நான் ஸாதுக்களின் நடுவில் விழவேண்டும்' என்னும் சொல்லை மூன்றுதரம் சொல்லிவிட்டு விழப்போகையில் கதியைச் சிந்தித்தான். இந்த ஸமயத்திலேயே, அவன், நைமிசவனத்தில் அரசஶ்ரேஷ்டர்களான நான்குபேர்களைப் பார்த்தான்; அவர்களுடையநடுவில் விழுந்தான். ப்ரதர்த்தனன், வஸுமனஸ், உசீநரனுடைய புத்ரனான சிபி, அஷ்டகனென்கிறவர்கள் வாஜபேயமென்கிற யாகத்தினால் இந்திரனைத் திருப்தியடையச்செய்துகொண்டிருந்தனர். அவர்களுடைய யாகத்திலுண்டான புகையானது ஸ்வர்க்கத்தின் துவாரத்தை யடைய, யயாதி அதனை முகர்ந்துகொண்டு பூமியை நோக்கி விழுந்தான். பூமிக்குப்பதியான அந்த அரசன், பூமியிற் செல்லுகின்ற கங்கைபோன்றதும் பூமிக்கும் ஸ்வர்க்கத்திற்கும் தொடர்ந்ததான தூமமயமான நதியைப்போன்றதுமான புகையைப் பிடித்துக்கொண்டு, ஸ்ரீமான்களும் அவபிருதத்தால் சிறந்தவர்களும உறவினர்களும் லோகபாலர்களுக்குச் சமானர்களுமான நான்குபேர்களுடைய நடுவில் விழுந்தான். ராஜரிஷியான அவன், புண்ணியம் நசித்தபொழுது, ராஜஶ்ரேஷ்டர்களாகிற ஹோமம் செய்யப்பட்டவை போன்ற பெரிய நான்கு அக்னிகளுடைய நடுவில் விழுந்தான். அரசர்களெல்லாரும், காந்தியினாலே ஜ்வலிக்கிறவன்போன்ற அந்த யயாதியை நோக்கி, 'நீர் யார்? யாருடைய உறவினர்? எந்தத் தேசத்தை, அல்லது, எந்த நகரத்தைச் சேர்ந்தவர்? யக்ஷரா? அல்லது, தேவரா? அல்லது, ராக்ஷஸரா? மனிதனுடைய ரூபமுடையவராயில்லை. உம்மால் என்ன பொருள் விரும்பப்படுகிறது?' என்றார்கள்.

யயாதி, 'நான் யயாதி என்கிற ராஜரிஷி; புண்யம் நசித்ததால் ஸ்வர்க்கத்திலிருந்து நழுவிவிட்டேன். 'ஸத்துக்களிடத்தில் விழக்கடவேன்' என்று தியானம்செய்துகொண்டு அந்தத் தியானத்தினால் உங்களிடத்தில் விழுந்தேன்' என்றான். அரசர்கள், 'ஓ! புருஷஶ்ரேஷ்டரே! உம்முடைய இந்த இஷ்டமானது ஸத்தியமாகட்டும். எங்களெல்லாருடைய யாகத்தின் பயனையும் தர்மத்தையும் பெற்றுக்கொள்ளும்' என்றார்கள். யயாதி, 'நான் தானத்தை ஏற்றலால் தனததையுண்டுபண்ணிக்கொள்ளும் பிராம்மணனல்லேன். நான் க்ஷத்திரியனல்லனோ? என்னுடைய புத்தியானது பிறருடைய புண்யத்தை நாசஞ்செய்வதில் களியயில்லை' என்றான். இந்தச் சமயத்திலேயே, மிருகத்தைப்போல ஸஞ்சரித்துக்கொண்டிருக்கிற முறைமையில் அங்குவந்தவளான மாதவியைப்பார்த்து அந்த அரசர்கள்

வணங்கி, 'தவத்தையே தனமாகவுடையவளே! நீ வந்த கார்யம் என்ன? நாங்கள் உன்னுடைய எந்தக் கட்டளையைச் செய்யவேண்டும்? உன்னுடைய புத்ரர்களான நாங்களெல்லாரும் உன்னால் கட்டளையிடப் படத்தக்கவர்களல்லரோ?' என்றார்கள். அந்த மாதவியும் அவர்களுடைய அந்த வார்த்தையைக் கேட்டு மேலான சந்தோஷத்துடன் பிதாவான யயாதியினிடம் வந்தாள்; வந்து வணங்கினாள். தவமுடையவளான அவள் அந்தப் புத்திரர்களுடைய தலையைத் தொட்டு (யயாதியை நோக்கி), 'ஓ! ராஜச்ரேஷ்டரே! இவர்கள் உம்முடைய [1] தௌஹித்ரர்கள்; என்னுடைய புத்ரர்கள்; உமக்கு அன்னியரல்லர். இவர்கள் உம்மைக் கரையேற்றுவார்கள். இது புராதனமான விதி. ஓ! அரசரே! மிருகமாய்ச் சஞ்சரிப்பவளான நான் உம்முடைய புத்ரியான மாதவி. என்னாலும் தர்மமானது விருத்திசெய்யப்பட்டது. அதிற் பாதியை நீர் பெற்றுக்கொள்ளும். ஓ! அரசரே! பூபதியே! மனிதர்களெல்லாரும் ஸந்ததிகளுடைய பயனுக்குப் பங்காளிகளாயிருப்பதால் உம்மைப் போலத் தௌஹித்ரர்களை விரும்புகின்றார்கள்' என்றாள்.

பிறகு, பூபதிகளான அந்த அரசர்களெல்லாரும் அப்பொழுது மாதாவைத் தலையால் வணங்கிப் பிறகு மாதாமஹனை நமஸ்கரித்து, உயர்ந்தவைகளும் நிகரற்றவைகளும் ஸ்நேகத்தை வெளியிடுகின்றவைகளுமான குரல்களாலே பூமியை நிரப்பிக்கொண்டு, ஸ்வர்க்கத்தினின்றும் நழுவின பாட்டனைக் கரையேற்றுகிறவர்களாகி, 'ஓ! அரசரே! ராஜதர்மத்தினுடைய குணத்தோடுகூடினவர்களும் ஸத்ய தர்மத்தினுடைய குணத்தோடுகூடியவர்களுமான நாங்கள் உம்முடைய பெண்வயிற்றுப்பேரர்கள். பூபதியே! ஸ்வர்க்கத்தில் ஏறும்' என்று சொன்னார்கள். அப்பொழுது, அகாரணமாய் அங்கு வந்தவரான காலவரும், அரசனை நோக்கி, 'நீ எனது தவத்தின் எட்டிலொருபாகத்தால் ஸ்வர்க்கத்தில் ஏறலாம்' என்றார்.

---

நூற்றிருபத்திரண்டாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

**(யயாதி தன்பேரன்மார்முதலியோரால் கொடுக்கப்பட்ட புண்யபலனது மகிமையால் மறுபடியும் ஸ்வர்க்கம் சென்றது.)**

மனிதர்களிற் சிறந்தவனான அரசன், ஸத்துக்களான அவர்களாலே அறியப்பட்ட அக்கணமே, பூமியின் பிரதேசத்தைத்

1 பெண்ணின் குமாரர்கள்; துஹிதா = பெண்.

தொடாமலே எறினன். யயாதியானவன், வருத்தம் நீங்கி, திவ்ய மான அவயவங்களையுடையவனும் திவ்யமானமாலையையும் ஆடை களையும் தரிப்பவனும் திவ்யமான ஆபரணங்களால் அலங்கரிக்கப் பட்டவனும் திவ்யமானகந்தத்தின் வாஸனையோடு கூடினவனும் ஆனன்; காலால் பூமியைத் தொடவில்லை.

பிறகு, உலகத்தில் தானபதியென்று புகழ்பெற்ற வஸுமனஸானவன், வார்த்தையை உரக்க உச்சரிக்கிறவனுகி அரசனைநோக்கி அப்பொழுது சொல்லலானன்: 'நான் உலகத்தில் எல்லா வர்ணங்களிடத்திலும் நிந்தையின்றி எதை அடைந்தேனே அதையும் கொடுக்கிறேன். நீர் அதனேடு கூடும். தானத்தைச் சீலமாக வுடைமையாலுண்டான என்னுடைய பயனையும் பொறுமையைச் சீலமாக உடைமையாலுண்டான என்னுடைய பயனையும் [1] ஆதானத்திலுண்டான என்னுடைய பயனையும் நீர் அடைவீர்' என்றான். பிறகு, க்ஷத்ரியர்களிற் சிறந்தவனுன ப்ரதர்த்தனனும், 'நான் எந்நாளும் தர்மத்தில் பற்றுள்ளவனும் எந்நாளும் யுத்தத்தை முக்கியமாகக் கொண்டவனுமாகி உலகத்தில் க்ஷத்ரிய வம்சத்திலுண்டான எந்தப் புகழையும் வீரனென்றசொல்லுக்குரிய எந்தப்பயனையுமே அடைந்தவனுயிருக்கிறேனே அவற்றுடன் நீர் கூடலாம். (எனக்கு) எந்நாளும் தர்மத்தில் பற்றுதலிருந்ததென்னும் ஸத்தியத்தால் நீர் ஸ்வர்க்கத்தை அடையும்' என்றான். உசீநரனுடைய புத்திரனும் புத்திமானுமான சிபியானவன் இனிமையான வார்த்தையைச்சொன்னன். 'சிறுவர்கள் விஷயத்திலும் அப்படியே [2] பரிஹஸிக்கக்கூடியவர்களிடத்திலும் ஸ்திரீகளின் விஷயத்திலும் யுத்தங்களிலும் கேடுகளிலும் அப்படியே அதனுலுண்டான வியஸனங்களிலும் நான் முன் பொய்சொன்னதில்லை. அந்த ஸத்தியத்தால் நீர் ஸ்வர்க்கத்தை அடையும். ஓ! அரசரே! பிராணன்களையும் ராஜ்யத்தையும் காமத்தாலுண்டான ஸுகங்களையும் விட்டாலும் விடுவேன்; ஸத்யத்தையோ விடேன். அந்த ஸத்யத்தால் நீர் ஸ்வர்க்கத்தை அடையக்கடவீர். என்னுடைய எவ்விதமான ஸத்யத்தால் தர்மதேவதையும் அக்னியும் இந்திரனுமே ப்ரீதியை அடைந்தார்களோ அந்த ஸத்யத்தால் நீர் ஸ்வர்க்கத்தை அடையக்கடவீர்' என்று சொன்னன். பிறகு, விச்வாமித்ரருக்கு மாதவியினிடம் பிறந்தவனும் தர்மத்தை அறிந்தவனுமான அஷ்டகனென்கிற ராஜரிஷியானவன், பல நூறு யாகங்களைச் செய்தவனுன நகுஷபுத்திரனை நோக்கி, 'ஓ! பிரபுவே! என்னல் புண்டரீகம், கோ

---

[1] அக்னியாதானம் முதலிய ச்ரௌதகர்மம். [2] வேறு பாடம்.

ஸவம், வாஜபேயம் என்கிற யாகங்கள் நூற்றுக்கணக்காக அநுஷ்டிக்கப்பட்டன. நீர் அவைகளுடைய பயனை அடையக் கடவீர். என்னுடைய ரத்னங்களும் தனமும் மற்றச்சாதனங்களும் யாகங்களில் உபயோகிக்கப்படாதவையாக இல்லை; அந்த ஸத்யத்தால் நீர் ஸ்வர்க்கத்தை அடையக்கடவீர்' என்றான்.

தௌஹித்ரர்கள் அந்த அரசனைநோக்கிச் சொல்லச்சொல்ல, அரசன் பூமியைவிட்டு ஸ்வர்க்கத்தை அடைந்தான். இவ்விதம் அந்த அரசர்களெல்லாரும், அப்பொழுது ஸ்வர்க்கத்திலிருந்தும் நழுவின யயாதியை, எல்லா நல்வினைகளாலேயும் விரைவாகவே கரையேற்றினார்கள். நான்கு ராஜவம்சங்களிலும் பிறந்தவர்களும் வம்சத்தை வளரச்செய்பவர்களுமான அந்தப்பேரன்மார்கள், யாகத்தாலும் தானத்தாலும் செய்யப்பட்ட தங்கள்தர்மத்தினாலே பேரறிவாளனை மாதாமகனை, 'ஓ! அரசரே! ராஜதர்மத்தினுடைய குணத்தோடு கூடினவர்களும் எல்லாத்தர்மங்களுடையகுணத்தோடும் கூடினவர்களுமான நாங்கள் உம்முடைய பெண்ணின்பிள்ளைகள்; பூபதியே! ஸ்வர்க்கத்தில் ஏறும்' என்றுசொல்லி ஸ்வர்க்கத்தில் ஏற்றினார்கள்.

## நூற்றிருபத்துமூன்றாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(ஸ்வர்க்கத்தில் யயாதிகேட்க, பிரம்மதேவர் யயாதிவீழ்கைக்குக் காரணங்கூறியதும், நாரதர் யயாதிகதையைமுடித்துக் காலவரையும் யயாதியையும் உதாரணம்கூறித் துரியோதனனைத் தருக்கைவிட்டுப் பாண்டவருடன் ஸமாதானம் செய்துகொள்ளச் சொல்லியதும்.)

ஸத்துக்களும் அதிகமான தக்ஷிணையைக்கொடுத்தவர்களுமான அரசர்களாலே ஸ்வர்க்கத்தில் ஏற்றப்பட்ட யயாதி, பேரன்மார்களுக்கு அநுமதிகொடுத்துவிட்டு, ஸ்வர்க்கத்தை அடைந்து, பலவிதமலர்களுடைய நல்ல மணத்தையுடைய மலர்மாரியினால் பொழியவும் பரிசுத்தமும் பரிசுத்தமான மணத்தையுடையதுமான காற்றினால் வீசவும்பட்டு, தௌஹித்ரர்களுடையபயனால் ஸம்பாதிக்கப்பட்ட சலனமில்லாத ஸ்தானத்தை அடைந்து, தன்னுடைய கர்மங்களால் செழிப்பை அடைந்து சிறந்தகாந்தியினால் விளங்கினான். ஸ்வர்க்கத்தில் கந்தர்வர்களுடைய கூட்டங்கள் பாடவும் அப்ஸரஸுகளுடைய கூட்டங்கள் ஆடவும் துந்துபிகளுடைய முழக்கங்களோடு ப்ரீதியுடன் திரும்பவும் வரவேற்கப்பட்டான்; பலவகைத்தேவர்களாலும் ராஜரிஷிகளாலும்

சாரணர்களாலும் துதிக்கப்பட்டும், உத்தமமான பூஜையால் பூஜிக்கப்பட்டும், தேவதைகளாலே கொண்டாடப்பட்டும்ஸ்வர்க்கத்திலுள்ள பயனை அடைந்தான். அப்பொழுது, பிரம்மாவானவர், சாந்தமான மனத்தையுடையவனும் ஸுகத்தையடைந்தவனுமான அந்த யயாதியை வார்த்தைகளாலே திருப்தியடையச்செய்கிறவர்போலச் சொல்லலானார் :

'ஓ! அரசனே! உன்னாலே லோகங்களையளிக்கின்ற [1] கர்மாவைச்செய்து நான்குபாதங்களையுடைய தர்மமானது அடையப்பட்டது. உனக்கு இந்த லோகம் அழிவற்றதாயிருந்தது. ஸ்வர்க்கத்திலே அழிவற்ற புகழுமே உண்டாயிருந்தது. ராஜரிஷியே! அது மறுபடியும் உன்னாலேயே உன் செயலால் கெடுக்கப்பட்டது. ஸ்வர்க்கவாஸிகள் எல்லாருடைய மனமும் (அவர்கள் உன்னை அறியாமலிருக்கும்படி) அஞ்ஞானத்தினாலே மறைக்கப்பட்டது. அதனால், அறியப்படாமல் தள்ளப்பட்டாய். தௌஹித்ரர்களாலே நீ பிரீதியோடேயே கரையேற்றப்பட்டு இங்கே வந்தாய். உன்கர்மத்தால் ஸம்பாதிக்கப்பட்டதும் சலியாததும் சாஶ்வதமும் பரிசுத்தமும் சிறந்ததும் நிலைத்ததும் அழிவற்றதுமான ஸ்தானத்தையும் அடைந்தாய்' என்றார்.

யயாதி, 'ஓ! பகவானே! எனக்கு ஒரு ஸம்சயமிருக்கிறது; அதனைப் போக்கவேண்டும். ஓ! உலகங்களுக்குப் பிதாமஹரே! நான் மற்றவரைக் கேட்கத்தக்கவனல்லேன். அனேகம் ஆயிரம் வருஷம் முடியும் வரையில் பிரஜைகளைக் காத்ததனால் விருத்திசெய்யப்பட்டதும் அனேகமான யாகங்கள் தானங்கள் இவைகளுடைய மிகுதியாலே ஸம்பாதிக்கப்பட்டதுமான என்னுடையபயன் பெரிதாயிற்றே. அது, சிறிதுகாலத்தில் நான் விழும்படி எப்படி நசித்தது? ஓ! பகவானே! நீர் எனக்கு லோகங்கள் சாஶ்வதமாக நிர்மாணஞ்செய்யப்பட்டிருப்பவற்றை அறிகிறீர். மிக்ககாந்தியையுடையவரே! என்னுடைய அவையெல்லாம் எப்படி நாசத்தை அடைந்தன?' என்றான். பிரம்மா, 'ஓ! ராஜஶ்ரேஷ்டனே! உன்னாலே அனேகமாயிரம் வருஷங்கள் முடியும் வரையில்பிரஜைகளைக்காத்ததனால் விருத்திசெய்யப்பட்டதும் அனேகமான யாகதானங்களுடைய மிகுதியால் ஸம்பாதிக்கப்பட்டதுமான பயன், நீ விழக்காரணமானதும், 'கர்வம் அடைந்ததற்காக ஸ்வர்க்கவாஸிகளாலே அவமானஞ்செய்யப்பட்டாய்' என்பதுமான இந்தக்குற்றத்தினாலேயே நசித்துவிட்டது. ராஜரிஷியே! இந்தலோகமானது கர்வத்தாலும் வலிமையாலும் ஹிம்ஸையினாலும் வஞ்சனையினாலும்

---

1 காலவரிடம்கன்யாதானம்.

மாயைகளாலும் சாஸ்வதமாகிறதில்லை. அரசனே! இழிவானவர்களும் சிறந்தவர்களும் நடுத்தரமானவர்களும் உன்னாலே அவமானஞ் செய்யப்படத்தக்கவர்களல்லர். கர்வத்தால் மிகவும் சுடப்பட்டவர்களுக்கு ஓரிடத்திலும் ஓர் ஆறுதலுமில்லை. நீ விழுந்து கரையேறினதான இந்தச் சரித்திரத்தைச் சொல்லுகின்ற மனிதர்கள் சங்கடங்களை அடைந்தாலும் கரையேறுவார்கள்; ஸந்தேகமில்லை' என்றார்.

அரசனே! முற்காலத்தில் கர்வத்தினால் யயாதியினாலும் அதிகம் வற்புறுத்தியதால் காலவராலும் இந்தத் தோஷமானது அடையப்பட்டது. நன்மையை விரும்புகிறவர்கள் நன்மையை விரும்புகின்ற நண்பர்களுடைய சொல்லைக் கேட்கவேண்டும். நிர்ப்பந்தமோ செய்யத்தக்கதன்று. நிர்ப்பந்தமோ நாசத்தை அளிக்கின்றது. காந்தாரியின் புத்திரனே! ஆகையால், நீயும் கர்வத்தையும் கோபத்தையும் தள்ளு. வீர! பாண்டவர்களுடன் சேரு. அரசனே! படபடப்பை விடு. அப்படிப்பட்ட நீ பத்தியமும் உண்மையுமான நண்பர்களுடைய சொல்லை ஏற்றுக்கொள்ளக்கடவாய். பொய்யானசொல்லை ஏற்றுக்கொள்ளாதே. வல்லவர்களோடு சண்டைசெய்தால் சங்கடத்திற்கு உள்ளாவாய். அரசனே! மனிதன் கொடுக்கிற கொடைக்கும் செய்கிற செய்கைக்கும் தவத்துக்கும் ஹோமத்துக்கும் அழிவில்லை; குறைவுமில்லை. பிறன் அவற்றை அனுபவியான்; கர்த்தாவான அவனே அனுபவிப்பான். மிகச்சிறந்ததும் ஹிதமானதும் மிகக்கற்றுக் காமக்குரோதங்களற்றவர்களுடையதுமான இந்தப் பெரிய சரித்திரமானது உலகத்தில் பலமுறை ஆலோசித்து நன்கு நிச்சயிக்கப்பட்டது. தர்மார்த்த காமங்களில் நோக்கமுள்ளவன் பூமியை அனுபவிப்பான். அரசனே! இவ்வுலகில் மனிதர்கள் கேட்டும் கேட்பித்தும் ஸ்வர்க்கத்தை அடைகிறதற்குக் காரணமான யயாதியினுடைய இந்தப் பெரிய சரித்திரமானது மிகவும் பரிசுத்தமானது' என்றார்.

---

## நூற்றிருபத்துநான்காவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(திருதராஷ்டிரன் துரியோதனனை ஸமாதானம் செய்யும்படி கோவிந்தரை வேண்டினதும், அவர் அவனை ஸமாதானம் செய்ததும்.)

திருதராஷ்டிரன், 'ஓ! பகவானே! நாரதரே! இது நீர் எவ்விதம் சொல்லுகிறீரோ அவ்விதமே. நானும் அவ்விதமே விரும்புகிறேன்.

ஓ! பகவானே! ஆனால், நான் சக்தியில்லாதவனாயிருக்கிறேன்' என்றான். இவ்விதம் சொல்லியபிறகு, திருதராஷ்டிரன், கேசவனை நோக்கிச் சொன்னதாவது: 'ஓ! கேசவ! நீ என்னை நோக்கி இவ்வுலகத்திற்கும் ஸ்வர்க்கத்திற்கும் நன்மையானதும் தர்மத்திலிருந்து விலகாததும் நியாயத்திலிருந்து விலகாததுமான சொல்லைச் சொன்னாய். ஐயா! ஆனால், நான் ஸ்வாதீனமில்லாதவனாக இருக்கிறேன். (இங்கே) செய்யப்படுவது எனக்குப் பிரியமில்லை. ஓ! ஜனார்த்தன! துஷ்டபுத்தியுள்ளவர்களான என்னுடைய புத்ரர்கள் நினைக்கவில்லை. அப்பா! தோள்வலிமிக்கவனே! புருஷோத்தம! கிருஷ்ண! மந்தனும் என்னுடைய கட்டளையை மீறினவனுமான என் துரியோதனனை ஸமாதானம்செய்ய முயல்வாயாக. ஓ! புஜபலமுடையவனே! ஹ்ருஷீகேசா! காந்தாரி, புத்திமானான விதுரன், நண்பர்களும் நன்மையை விரும்புகிறவர்களுமான பீஷ்மர்முதலான மற்றவர்கள் ஆகிய இவர்களுடைய நன்மையான வார்த்தையையுமே அவன் கேட்கவில்லை. (நீதிகளை எடுத்துரைத்த) அப்படிப்பட்ட நீ, கெட்ட புத்தியுள்ளவனும் கொடியவனும் பாவஎண்ணமுள்ளவனும் அறிவில்லாதவனும் கெடுமதியுள்ளவனும் அரசனுமான துர்யோதனனை நேரிலே சிக்ஷிக்கக்கடவாய். ஓ! ஜனார்த்தன! உனக்கு மிகப்பெரிதான நண்பர்களுடைய காரியமானது செய்யப்பட்டதாகும்' என்றான்.

அப்பொழுது, எல்லாத்தர்மார்த்தங்களுடைய உண்மையையும் அறிந்தவரான ஸ்ரீகேசவர், பொறுமையுடையவனான துரியோதனனைத் திரும்பிநோக்கி, இனிமையானவார்த்தையை, மறுபடியும் மறுபடியும், சொல்லலானார். 'துர்யோதன! கௌரவஸ்ரேஷ்ட! பாரத! விசேஷமாக உன்னுடைய நன்மைக்கும் உன்னைச்சேர்ந்தவர்களுடைய நன்மைக்குமாக ஏற்பட்ட என்னுடைய இந்த வார்த்தையை அறியக்கடவாய். பேரறிவாளர்களுடைய குலத்தில் பிறந்தவனும் கல்வியும் ஆசாரங்களுமுடையவனும் எல்லாக் குணங்களுடனும் கூடினவனுமான நீ நன்மையான இதைச் செய்யத்தக்கவன். ஐயா! நீ நினைக்கிறதுபோன்ற இதைக் கெட்டகுலத்திற் பிறந்தவர்களும் மதிகெட்டவர்களும் குரூரர்களும் லஜ்ஜையற்றவர்களுமானவர்கள் செய்வார்கள். பரதஸ்ரேஷ்ட! இந்த லோகத்தில், பெரியோர்களுடைய முயற்சியானது, தர்மத்தோடும் அர்த்தத்தோடும் கூடினதாகக் காணப்படுகிறது. தீயோர்களுடைய முயற்சியோ விபரீதமாகக் காணப்படுகிறது. உன்னிடத்திலுள்ள இந்த ப்ரவ்ருத்தியோ அடிக்கடி விபரீதமாகவே காணப்படுகிறது. இதில் கோர

மும் உயிரைக்கவர்கிறதுமான பெரிய அதர்மமும் சேர்ந்திருக்கிறது. நிமித்தமில்லாத தீமையும் உண்டாகிறது. பாரத! இது முடியக் கூடியதாயுமில்லை. இந்த அனர்த்தத்தைப் போக்கி உனக்கு நன்மை யானதைச் செய்துகொள். பகைவரை வாட்டுபவனே! பிராதாக்க ளுக்கும் வேலைக்காரர்களுக்கும் மித்ரர்களுக்கும் நன்மையானதைச் செய்வாய். அதர்மத்தையும் அபகீர்த்தியையும் அளிப்பதானசெய்கை யிலிருந்தும் விடப்படுவாய். ஆண்மையிற் சிறந்தவனே! பரதஶ்ரே ஷ்ட! மிக்க அறிஞர்களும் சூரர்களும் மிக்க ஊக்கத்தையுடையவர் களும் நல்ல மனமுடையவர்களும் மிக்க கல்வியையுடையவர்களு மான பாண்டவர்களோடு சேர்ந்துகொள். பகைவரை வாட்டுபவனே! அது புத்திமானான திருதராஷ்டிரருக்கும் பிதாமஹரான பீஷ்ம ருக்கும் துரோணருக்கும் மஹாபுத்திமானான விதுரருக்கும் கிரு பருக்கும் ஸோமதத்தனுக்கும் புத்திமானான பாஹ்லிகருக்கும் அஶ் வத்தாமாவுக்கும் விகர்ணனுக்கும் ஸஞ்சயனுக்கும் விவிம்சதிக்கும் ஞாதிகளுக்கும் நண்பர்களுக்குமே மிகவும் நன்மையும் பிரியமுமா கவே இருக்கிறது. ஐயா! அப்படியே, ஸமாதானத்தில் உலகமனைத் துக்கும் க்ஷேமமானது உண்டாகும். லஜ்ஜையுள்ளவனும் நல்ல குலத் திற் பிறந்தவனும் கல்வியறிவுள்ளவனும் குரூரத்தன்மையில்லாத வனுமாயிருக்கிறாய். ஐயா! பரதஶ்ரேஷ்டா! தந்தைதாயரின் கட்ட ளையில் இரு. பாரத! பிதா இடும் கட்டளையை நன்மையாகவன்றோ நினைக்கிறார்கள்? பிதாவினால் முன்சொல்லப்பட்ட கட்டளையை ஆப த்தையடைந்தபோது நினைப்பாய். அப்பா! கௌரவஶ்ரேஷ்டா! மந்திரிகளுடன்கூடிய உன்னுடைய தந்தைக்குப் பாண்டவர்களுடன் சேர்க்கையானது விருப்பமாயிருக்கிறது. அப்பா! அது உனக்கும் விருப்பமுள்ளதாகுக. நண்பர்களுடைய கட்டளையைக் கேட்டு அங் கீகரிக்காத மனிதனை, அது, உட்கொள்ளப்பட்ட எட்டிக்கொட்டை போல, பக்குவத்தின் முடிவில் எரிக்கிறது. எவன் க்ஷேமத்தைச் செய்கிறதான வார்த்தையை அறியாமையினால் அங்கீகரிக்கவில்லையோ அவன் மிக்க கவலையையடைந்து, விரும்பினதையிழந்து, பச்சாத்தா பத்தையடைவான். முதலில் க்ஷேமகரமான வார்த்தையைக் கேட்டு, தன்னுடைய கொள்கையை விட்டுவிட்டு, அதனையே அடைகிற வன் உலகத்தில் இனிது விருத்தியடைவான். அர்த்தத்தை விரும்பு கிறவனுடைய வார்த்தையை, பகையுடைமையாமல், பொறுதவ னும் விபரீதமான வார்த்தைகளைக் கேட்பவனுமாயிருப்பவன் பகை வர்களுடைய வசத்தை அடைவான். எவன் நல்லோர்களுடைய

கொள்கையை மீறித் தீயோர்களுடைய கொள்கைப்படி நடக்கிறானோ அவனுக்கு விரைவாகத் துன்பம் உண்டாக, (அவனுடைய) நண்பர்கள் துக்கத்தை அடைகின்றனர். எவன் சிறந்தவர்களான மந்திரிகளைத் தள்ளிவிட்டு மிகவும் இழிவானவர்களை அடைகிறானோ அவன் கோரமான ஆபத்தை அடைந்து கரையேற்றத்தை அடையமாட்டான். பாரத! தீயோர்களை அடுப்பவனும் தீய ஒழுக்கமுடையவனும் நல்லோர்களான நண்பர்களுடைய (வார்த்தையைக்) கேளாதவனுமாய்ப் பிறரைவிரும்பித் தன்னைச்சேர்ந்தவர்களைப் பகைக்கிற அவனைப் பூமியானது விட்டுவிடுகிறது. ஓ! பரதஸ்ரேஷ்டனே! அப்படிப்பட்ட நீ வீரர்களான பாண்டவர்களுடன் விரோதித்து, நல்ல பழக்கமில்லாதவர்களும் திறமையற்றவர்களும் மூடர்களுமான மற்றவர்களிடமிருந்து பாதுகாவலை விரும்புகிறாய். பூமியில் உன்னைத் தவிர வேறு எந்த மனிதன், இந்திரனுக்கு நிகரானவர்களும் மஹாரதர்களுமான ஞாதிகளைத்தாண்டி மற்றவர்களிடமிருந்தும் பாதுகாவலை விரும்புவான்? குந்தியின்புத்திரர்கள் பிறந்தகாலந்தொடங்கி எந்நாளும் உன்னாலே துன்புறுத்தப்பட்டார்கள். அவர்கள் ஒருகாலும் கோபிக்கவில்லை. ஆகையால், அவர்கள் தர்மபுத்தியுள்ளவர்களல்லரோ! புஜபலமுள்ளவனே! பிறந்ததுமுதல் பொய்யாக உபசரிக்கப்பட்டும், புகழ்பெற்றவர்களான பந்துக்கள் உன்விஷயத்தில் நல்லநினைவுள்ளவர்களாகவே இருக்கிறார்கள். பரதஸ்ரேஷ்டனே! நீயும் சிறந்தவர்களான உன்பந்துக்கள் விஷயத்தில் அப்படியே நல்லநினைவுள்ளவனாக இருக்க வேண்டும். கோபத்தின்வசத்தை அடையாதே. பரதஸ்ரேஷ்டனே! அறிஞர்களுடைய முயற்சியானது, (தர்மார்த்தகாமங்களென்கிற) த்ரிவர்க்கத்தோடு கூடினதாயிருக்கிறது. த்ரிவர்க்கங்கள் கைகூடாத விஷயத்தில் (அறிஞர்களான) மனிதர்கள் தர்மார்த்தங்கள் இரண்டையும் அனுசரிக்கின்றனர். (அவற்றைத்) தனித்தனி அபிமானிப்பவர்களில், தீரனானவன் தர்மத்தை அனுஸரிக்கிறான். மத்யமனானவன் கலகத்துக்குக் காரணமான அர்த்தத்தை அனுஸரிக்கிறான். மூடனானவன் காமத்தையே அனுஸரிக்கிறான். புலன்களாலுண்டான ஆசையினாலே தர்மத்தைவிடுகிற ப்ராகிருதன் (=மூடன்) கெட்ட உபாயத்தால் காமத்தையும் அர்த்தத்தையும் அடைய விரும்புகிறவனாகி நாசத்தை அடைவான். காமத்தையும் அர்த்தத்தையும் அடைய விரும்புகிறவனோ, முதலில் தர்மத்தையே அனுஷ்டிக்கவேண்டும். தர்மத்தைவிட்டு அர்த்தமும் காமமும் ஒருபொழுதும் விலகா. ராஜனே! தர்மத்தையே த்ரிவர்க்கத்திற்கு உபாயமாகச் சொல்லு

சின்றனர். அந்தத் தர்மத்தால் அடைய விரும்புகிறவனோ, புதரில் பற்றிய தீப்போலச் சீக்கிரம் விருத்தி அடைவான். அப்பா! பரத ஶ்ரேஷ்டா! அப்படிப்பட்ட நீ, பெரிதும் ஜ்வலிக்கிறதும் எல்லா அரசர்களிடத்திலும் கியாதிபெற்றதுமான ஆதிபத்யத்தைக் கெட்ட உபாயத்தால் அடையவிரும்புகிறாய். அரசனே! நன்றாகப் பழகுகிற வர்களிடத்தில் பொய்யாகப் பழகுகிறவன், கோடாலியால் வனத்தை வெட்டுவதுபோலத் தன்னையே வெட்டுகிறான். ஒருவன் எவனுக்கு அவமானத்தை விரும்புகிறதில்லையோ அவனுடையபுத்தியைக் கலங் கச்செய்யக்கூடாது. கலக்கப்படாத புத்தியையுடைய அவனுடைய எண்ணமானது நன்மையிலிருக்கிறது. பாரத! மனோவசமுள்ளவன் மூன்றுஉலகங்களிலும் பிராகிருத (=மூட)னை மற்ற ஒருவனையுமே அவமதிக்கக்கூடாது; சிறந்தவர்களான அந்தப்பாண்டவர்களை அவ மதிக்கக்கூடாதென்பது சொல்லவும் வேண்டுமா? பொறுமையின்வச த்தை அடைந்தமனிதன் ஒன்றையும் அறிகிறதில்லை. பாரத!பரவுதலை அடைந்ததெல்லாம் தடுக்கப்படுமன்றோ? ப்ரமாணத்தை ஆலோசித் துப்பார். உனக்குத் துஷ்டர்களைவிட்டுப் பாண்டவர்களுடன் சேருத லானது நன்மையைச் செய்யக்கூடியது. நீ, அவர்களாலே ப்ரீதியை அடையும்படி செய்யப்பட்டு, எல்லா இஷ்டங்களையும் அடைவாய். ராஜஶ்ரேஷ்டனே! பாண்டவர்களால் ஸம்பாதிக்கப்பட்ட பூமியை அனுபவிக்கிறவனாயிருந்துகொண்டு அவர்களைப் புறக்கணித்து வே றிடமிருந்தும் பாதுகாவலை விரும்புகிறாய். பாரத! துச்சாஸனன், துர்விஷஹன், கர்ணன், சகுனி ஆகிய இவர்களிடத்தில் அதிகாரத் தை வைத்துவிட்டுச் செல்வத்தை விரும்புகிறாய். பாரத! இவர்கள், உனக்கு ஞானத்திலும் தர்மத்திலும் அர்த்தத்திலும் போதுமான வர்களல்லர்; பாண்டவர்களைநோக்கப் பராக்ரமத்திலும் போது மானவர்களல்லர். உன்னுடன் கூடினவர்களான இந்த எல்லா அரசர் களுமே, யுத்தத்தில் கோபத்தை அடைந்தவனான பீமஸேனனுடைய முகத்தைப் பார்ப்பதற்கும் போதுமானவர்களல்லர். ஐயா! நன்றாக அமைக்கப்பட்டதும், நிறைந்ததுமான இந்த அரசர்களின் சேனை, இந்தப் பீஷ்மர், துரோணர், இந்தக் கர்ணன், கிருபர், ஸோமதத்தன் மகனான பூரிஶ்ரவஸ், அஶ்வத்தாமா, ஜயத்ரதன் ஆகிய இவர்களெல் லாருமே அர்ஜுனனை எதிர்த்துப் போர்செய்ய வல்லவரல்லர். அர்ஜு னனோ, யுத்தத்தில் எல்லாத்தேவர்கள், அஸுரர்கள், மனிதர்கள், கந் தர்வர்கள் ஆகிய அனைவராலும் ஜயிக்கப்படமுடியாதவன். யுத்தத்தில் மனத்தைச் செலுத்தாதே. அரசர்களின்சேனைமுழுமையிலும்போரில்

அர்ஜுனனை எதிர்த்து க்ஷேமத்துடன் வீட்டுக்குத்திரும்புகிறவனை ஓர் ஆண் பிள்ளையைப் பார்க்கமுடியுமா? பரதஸ்ரேஷ்டனே! இவ்வுல கில் ஜனங்களை நாசஞ்செய்ததனால் உனக்கு என்ன பயன்? எவன் ஜயிக்கப்பட்டால் உனக்கு ஜயம் ஏற்படுமோ அந்த ஓர் ஆண் பிள்ளையைப் பார்க்கலாம். எவன் காண்டவப்ரஸ்தத்தில், தேவர் களையும் கந்தர்வர்களையும் யக்ஷர்களையும் அஸுரர்களையும் நாகர் களையும் வென்றானோ அவனுடன் எந்த மனிதன் யுத்தஞ்செய் வான்? அப்படியே, விராடநகரத்தில் மிக்க ஆச்சரியமானது கேட்கப்படுகிறது. அது ஒருவனுக்கும் அநேகம் பேர்களுக்கும் போதுமான உதாரணம். எவனால் யுத்தத்தில் மஹாதேவரான சங்கரர் நேரில் சந்தோஷிக்கும்படி செய்யப்பட்டாரோ, ஜயிக்கமுடி யாதவனும் அவமதிக்கமுடியாதவனும் ஜயத்தைச் சீலமாகவுடையவ னும் நழுவாதவனும் வீரனும் உறுதியாயிருப்பவனுமான அந்த அர் ஜுனனை இந்த யுத்தத்தில் ஜயிப்பதற்கு விரும்புகிறாய். யுத்தத்தில் என்னைச் சகாயமாகவுடையவனும் எதிர்த்துவருகிறவனுமான அர்ஜு னனோடு சண்டையை, நேரில்வந்த இந்திரனாயிருந்தாலும், எவன் வேண்டத்தகுதியுள்ளவன்? எவன் யுத்தத்தில் அர்ஜுனனை ஜயிப் பானோ அவன் கைகளால் பூமியை உயர எடுப்பான்; கோபத்தை அடைந்தால், இந்தப்பிரஜைகளை எரிப்பான்; தேவர்களை ஸ்வர்க்கத்தி லிருந்தும் தள்ளுவான். புத்திரர்களையும் ஸஹோதரர்களையும் ஞாதி களையும் ஸம்பந்திகளையும் பார். உன்னிமித்தத்தில் இந்தப் பரத ஸ்ரேஷ்டர்கள் அழியவேண்டாம். கௌரவர்களில் மிச்சம் இருக்கட் டும். இந்தக்குலமானது அவமானத்தை அடையவேண்டாம். அர சனே! நீ புகழழிந்து குலத்தைக் கொன்றவனென்று சொல்லப்பட வேண்டாம். மஹாரதர்களான பாண்டவர்கள், உன்னையே இளவரசுப் பதவியிலும் உன்பிதாவான திருதராஷ்டிரராஜரை மஹாராஜாபதவி யிலும் ஸ்தாபனம் செய்வார்கள். அப்பா! மிக ஓங்கியதும் வலியவரு வதுமான ஸ்ரீயை அவமானஞ்செய்யாதே. பாண்டவர்களுக்குப்பாதி யைக் கொடுத்துவிட்டுப் பெரிதான செல்வத்தை அடையக்கட வாய். பாண்டவர்களுடன் ஸமாதானத்தைச் செய்து, நண்பர்கள் சொல்லுகிறபடியும் நடந்தால், மித்ரர்களோடு மிக்க மகிழ்ச்சியுடன் நெடுங்காலம் மங்களங்களை அடைவாய்' என்றார்.

---

## நூற்றிருபத்தைந்தாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(பீஷ்மதுரோணர்கள், கோவிந்தர் சொல்லியதைக் கேட்கவேண்டுமென்றும் திருதராஷ்டிரன் அதைக் கேளாவிடில் தீமையே வருமென்றும் துரியோதனனுக்குச் சொல்லியது.)

பாரதஸ்ரேஷ்டரே! கேசவருடையவார்த்தையைக் கேட்ட பிறகு, சந்தனுவின்புத்ரரான பீஷ்மர், பொறுமையுடையவனான துரியோதனனை நோக்கி, 'நண்பர்களுக்குப் பகைதணிதலைவிரும்பி வாஸுதேவர் சொன்ன வார்த்தையை அநுஸரிக்கக்கடவாய். அப்பா! கோபத்திற்கு வசமாகாதே. ஐயா! மஹாத்மாவான கேசவர் சொன்னதைச் செய்யாவிடில், ஒருபொழுதும் நன்மையையும் ஸுகத்தையும் மங்களத்தையும் அடையமாட்டாய். குழந்தாய்! புஜபலமமைந்த கேசவர் தர்மத்திற்கும் அர்த்தத்திற்கும் நன்மையானதை உனக்குச் சொன்னார். அரசனே! அந்த அர்த்தத்தை அடையக்கடவாய். ஜனங்களை நாசஞ்செய்யாதே. நீ, திருதராஷ்டிரன் ஜீவித்திருக்கும் பொழுதே, எல்லா அரசர்களுடைய செல்வத்துள்ளும் மேலாக விளங்குகிற இந்தப் பாரதவம்சத்தின்செல்வத்தைத் துர்ப்புத்தியினால் நழுவச்செய்யப்போகிறாய். மந்திரிகள், புத்திரர், ஸஹோதரர், உறவினர் ஆகியவர்களுடன் உன்னை 'நான்' என்கிற புத்தியினாலே உயிரையிழக்கச் செய்யப்போகிறாய். பாரதஸ்ரேஷ்ட! கேசவர், தந்தை, புத்திமானான விதுரன் இவர்களுடைய உண்மையும் பயனுள்ளதுமான வார்த்தையை மீறி, குலத்தைக் கொல்லுகிறவனும் கெட்டமனிதனும் கெடுமதியுடையவனுமாகக் கெட்டவழியை அடையாதே. தாய் தந்தையரைத் துயரக்கடலில் முழுகச்செய்யாதே' என்றார். பிறகு, துரோணர், பொறுமைக்குவசப்பட்டவனும் அடிக்கடி பெருமூச்சுவிடுகிறவனுமான துரியோதனனை நோக்கி, 'அப்பா! கேசவர் உனக்குத் தர்மத்தோடும் அர்த்தத்தோடும் கூடின வார்த்தையைச் சொன்னார். அரசனே! சந்தனுவின் புத்ரரான பீஷ்மரும் அப்படியே சொல்லினர். அதனை ஏற்றுக்கொள்ளக் கடவாய். அரசனே! [1] பிராஜ்ஞர்களும் [2] மேதாவிகளும் அடக்கமுள்ளவர்களும் மிகக்

1 ப்ராஜ்ஞர்=நன்கு அறிந்தவர்.

2 மேதாவிகள் = புதிதுபுதிதாகத் தோன்றும்அறிவுள்ளவர்; அல்லது, ஒருதரம் பார்த்தது மறவாத அறிவுள்ளவர்.

கற்றவர்களும் நன்மையில் விருப்பமுள்ளவர்களுமான அவர்கள் உனக்கு நன்மையானவார்த்தையைச் சொன்னார்கள். அதனை ஏற்றுக் கொள்ளக்கடவாய். மிக்க புத்திமானே! கிருஷ்ணரும் பீஷ்மரும் சொல்லுவதைச் செய்யக்கடவாய். பகைவரைவாட்டுகிறவனே! புத்தியின் மயக்கத்தால் மாதவரை அவமானம் செய்யாதே. உன்னை உத்ஸாஹப்படுத்துகிறவர்கள் ஒரு பொழுதுங் காரியத்திற்கு உதவார்கள். யுத்தம் நேரிட்டபொழுது வைரத்தைப் பிறருடைய [1] கழுத்தில் போட்டுவிடுவார்கள். எல்லாப்பிரஜைகளையும் அப்படியே புத்திரர்களையும் பிராதாக்களையும் கொன்றுவிடாதே. எந்தப்பக்ஷத்தில் கிருஷ்ணார்ஜுனர்களிருக்கின்றார்களோ அந்தப் பக்ஷத்திலுள்ளவர்களை மிகவும் ஜயிக்கமுடியாதவர்களாக அறியக்கடவாய். குழந்தாய்! பாரத! இதுதான் ஆப்தர்களான கிருஷ்ணர் பீஷ்மர் இவர்களின் உண்மையான அபிப்ராயம். நீ அங்கீகரியாவிட்டால் பச்சாத்தாபத்தை அடைவாய். இந்த அர்ஜுனன் பரசுராமர் சொன்னதைக் காட்டிலும் மிகமேலானவன். தேவகியின் புத்திரரான கிருஷ்ணரோ, தேவர்களாலும் தாங்கமுடியாதவர். பரதஸ்ரேஷ்ட! இந்த விஷயத்தில் உனக்கு பிரியமாகவும் இனிமையாகவும் சொன்னதினால் என்னபயன்? உனக்கு இதுமுழுதும் சொல்லப்பட்டது. எப்படி விரும்புகிறாயோ அப்படிச்செய். பரதஸ்ரேஷ்டனே! உனக்கு மறுபடியும் சொல்லுவதற்கு என் மனம் எழவில்லை' என்றார்.

அந்தவார்த்தையின் நடுவில், க்ஷத்தாவான விதுரரும், திருதராஷ்டிரரின் புத்திரனும் பொறுமையுடையவனுமான துரியோதனனைப்பார்த்து, 'துரியோதன! பரதஸ்ரேஷ்ட! நான் உன்னைப்பற்றித் துக்கிக்கவில்லை. முதியவர்களான இந்தக் காந்தாரியையும் உன்னுடைய பிதாவையும்பற்றித் துக்கிக்கிறேன். இவர்கள், கெட்ட மனமுடைய நாதனை உன்னால் மித்ரர்களும் மந்திரிகளும் இறந்து நாதனற்றுச் சிறகுஅற்ற பறவைகள்போலத் திரியப்போகிறார்களே! குலத்தைக்கெடுப்பவனும் கெட்டவனுமான இந்தப்பாவியைப் பெற்று, பிக்ஷுகர்களாய்த் துயரத்துடன் இந்தப் பூமியில் திரியப்போகின்றார்களே!' என்று சொன்னார்.

பிறகு, அரசனான திருதராஷ்டிரன், அரசர்கள்சூழத் தம்பிமார்களுடன் உட்கார்ந்திருப்பவனான துரியோதனனை நோக்கி, 'துரியோதன! இதனை அறியக்கடவாய். மிக்க மங்களமும் [2] யோக [3] க்ஷேமங்

---

[1] 'தாம் செய்யவேண்டியதைப் பிறர் செய்யும்படி விட்டுவிடுவர்' என்பது. [2] புதிதாகக் கிடைப்பது. [3] கிடைப்பதைக் காப்பது.

களோடு கூடியதும் கெடுதலற்றதுமான மஹாத்மாவான கிருஷ்ணன் சொன்னதை ஏற்றுக்கொள்ளக் கடவாய். வருத்தமில்லாமல் கார்யத்தைச் செய்பவரான கிருஷ்ணராகிய இந்த ஸஹாயத்தால் எல்லா அரசர்களிடத்திலும் இஷ்டமான எல்லா அபிப்பிராயங்களையும் அடைவோம். அப்பா! கேசவருடன் நன்கு சேர்ந்து யுதிஷ்டிரனை அடை. பாரதர்களுக்குக் கேடில்லாததான எல்லா க்ஷேமத்தையும் செய். குழந்தாய்! வாஸுதேவராகிற உபாயத்தினால் சாந்தியை அடை. இதைக் காலத்தால் நேரிட்டதாக நினைக்கிறேன். துரியோதன! நீ மீறாதே. நீ உன்னிமித்தமாகச் சொல்லுகிறவரும் ஸமாதானத்தை யாசிக்கிறவருமான கேசவரை நிராகரிக்கிறாயேயானால், உனக்குத் தோல்வியில்லை என்பதில்லை (=நிச்சயம்தோல்வியே)' என்றான்.

---

நூற்றிருபத்தாறாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(பீஷ்மத்ரோணர்கள் பகைவர் போருக்கு ஸந்நாகம் செய்யுமுன்னரே ஸமாதானம் செய்துகொள்ளும்படி திரும்பவும் துரியோதனனுக்குச் சொல்லியது.)

திருதராஷ்டிரனுடைய வார்த்தையைக் கேட்டு ஸமமான வருத்தத்தை உடையவர்களான பீஷ்மரும் த்ரோணரும், கட்டளையை மீறுகின்றவனான துர்யோதனனை நோக்கி, மேல்வரும் வார்த்தையைச் சொல்லலானார்கள்: 'கிருஷ்ணார்ஜுனர்கள் ஸந்நாகத்தை அடையாமலும் கண்டீவமானது வேலைசெய்யத் தொடங்காமலும் தௌம்யரானவர் யுத்தநிமித்தமான அக்னியில் பகைவருடைய பலத்தை ஹோமம் செய்யாமலும் லஜ்ஜையுள்ளவனும் பெரிய வில்லையுடையவனுமான யுதிஷ்டிரன் சினங்கொண்டு உன்னுடைய சேனையைப் பாராமலும் இருக்கும்பொழுதே, பகையானது தணிவை அடையட்டும். பெரியவில்லையுடையவனான அர்ஜுனனும் பீமஸேனனும் தம்சேனையில் நிலையாகநிற்கிறவராகக் காணப்படாதபொழுதே, வைரமானது தணிவை அடையட்டும். பீமஸேனன் கையில் கதையுடன் உன்சேனையை எதிர்த்துத் தாண்டுபவனாகி மார்க்கங்களில் திரியாமலிருக்கையிலேயே, பாண்டவர்களுடன் ஸமாதானம் செய்துகொள்ளு. யுத்தத்தில் வீரர்களைக் கொல்லுகின்ற கதையினாலே, காலத்தினால் பக்குவமான மரத்தின்கனிகளைக்

தள்ளுவதுபோல யானையிலிருந்து யுத்தம் செய்பவர்களின் தலைகளை அறுத்துத் தள்ளாமலிருக்கும்பொழுதே, வைரமானது தணிவை அடையட்டும். அஸ்த்ரங்களில் பழக்கமுள்ளவர்களான நகுலனும் ஸஹதேவனும் துருபதனுடைய புத்ரனான திருஷ்டத்யும்னனும் விராடனும் சிகண்டியும் சிசுபாலனுடைய புத்திரனும் கவசம் பூண்டு வேகமாகப் பாணங்களை விடுத்துக்கொண்டு, பெருங்கடலில் முதலைகள் பிரவேசிப்பதுபோல, பிரவேசிக்காமலிருக்கும்பொழுதே, பகையானது தணிவை அடையட்டும். அரசர்களுடைய மென்மையான சரீரங்களில் உக்கிரமான கழுகிறகுகட்டின பாணங்கள் விழாமலிருக்கையிலேயே, பகையானது தணிவை அடையட்டும். சந்தனமும் அகிலும் பூசப்பட்டவைகளும் ஹாரங்களையும்பொற்காசுகளையும் தரிப்பவைகளுமான வீரர்களுடைய மார்புகளில், பெரியவில்லுடையவர்களும் அஸ்திரங்களில் பழக்கமுள்ளவர்களும் விரைவாகப் (பாணங்களை) விடுகிறவர்களும் தூரத்தில் விழச்செய்கிறவர்களும் குறிவைத்தவர்களுமான பாண்டவர்களாலே, இரும்பால் செய்யப்பட்ட பெரிய பாணங்கள் போடப்படாதபொழுதே, வைரமானது சமனத்தை அடையட்டும். அரசர்களில்சிறந்தவனும் தர்மராஜனுமானயுதிஷ்டிரன் தலையால் வணங்குகிறவனான உன்னைக் கைகளால் எற்றுக்கொள்ளட்டும். பரதஶ்ரேஷ்ட! மிக்க தயையுடன் கூடின தர்மராஜன், துவஜம் அங்குசம் பதாகைஎன்னும் ரேகைகளால் அடையாளமுடைய தனது வலக்கையைச் சமாதானத்திற்காக உனதுதோளில் வைக்கக்கடவன். ரத்தினமுள்ள கொடிபோன்ற மோதிரமணிந்ததும் உட்புறம் ரத்தினம்போலச் சிவந்திருக்கிற விரல்களையுடையதுமான கையினாலே, உட்கார்ந்தவனான உன்னுடைய முதுகைத் தடவட்டும். பரதஶ்ரேஷ்ட! ஆச்சாமரம் போன்ற தோளையுடையவனும் பெரிய புஜங்களையுடையவனுமான பீமஸேனன் ஸமாதானத்தின்பொருட்டு உன்னைத்தழுவிக்கொண்டு ஸமாதானத்துடன் வார்த்தையையும் சொல்லட்டும். அரசனே! அர்ஜுனனும் நகுல ஸஹதேவர்களுமாகிய மூவர்களாலும் நமஸ்கரிக்கப்பட்டு அவர்களை உச்சிமோந்து அன்புடன் பேசக்கடவாய். வீரர்களும் ஸகோதரர்களுமான பாண்டவர்களுடன் சேர்ந்தவனான உன்னைப் பார்த்து அரசர்கள் ஆனந்தக்கண்ணீரை விடட்டும். அரசர்களுடைய ராஜதானிகளில் முழு ஒற்றுமையும் முழங்கப்படட்டும். பூமியை, பாண்டவர்களிடம் ஸஹோதரத்தன்மையுடன் அனுபவிக்கக்கடவாய். (பொறாமையும் கோபமுமாகிய) ஜ்வரமில்லாதவனாகக் கடவாய்' என்றார்.

---

## நூற்றிருபத்தேழாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(துரியோதனன், தன்னிடம் சிறிதும் குற்றமில்லையென்றும் பீஷ்மர் முதலியோர் காத்தலால் தன்னை வெல்லமுடியாதென்றும் போரில் உயிர்போவதாயிருந்தாலும் பாண்டவர்களுக்கு ஊசிகுத்துமிடமும் கொடேனென்றும் கோவிந்தரிடம் சொல்லியது.)

துரியோதனன், கௌரவர்களுடைய ஸபையில் அப்பிரியமான வார்த்தையைக்கேட்டு, புஜபலமுள்ளவரும் புகழ்பெற்றவருமான வாஸுதேவரை நோக்கி மறுமொழி கூறலானன். 'ஓ! கேசவரே! நீர் இதை நன்கு ஆலோசித்துச் சொல்லவேண்டும். என்னையே பெரும் பாலும் விபரீதமாகப்பேசித் தூஷிக்கிறீர். ஓ! மதுஸூதனரே! காரணமின்றிப் பாண்டவர்களிடம் அன்பினுலுண்டான வார்த்தையினல், நீர், பலாபலத்தை நன்கு பார்த்தும், ஏன் எங்காளும் தூஷிக்கிறீர்? நீரும் விதுரரும் அரசரும் ஆசார்யரும் பிதாமஹரும் என்னையே நிந்திக்கிறீர்கள்; மற்றப் பாண்டவனொருவனையும் நிந்திக்கவில்லை. நானோ இந்த விஷயத்தில் என்னுடைய தவறுதல் ஒன்றையும் அறியவில்லை. தவிர, அரசனுடன்கூடின நீங்களெல்லாரும் என்னைப் பகைக்கிறீர்கள். ஓ! பகைவரைத் தண்டிப்பவரே! கேசவரே! நான் நன்கு ஆலோசித்தும் மிகச்சிறிதான ஒரு குற்றத்தையும் காணவில்லை. ஓ! மதுஸூதனரே! பாண்டவர்கள், பிரியத்துடன் ஏற்றுக் கொண்ட சூதாட்டத்தில், சகுனியினுல் ராஜ்யத்தை (க்கவர்ந்து) வெல்லப்பட்டார்கள். அதில் என்னுடைய [1] குற்றம் என்ன? ஓ! மதுஸூதனரே! அதில் பாண்டவர்களுடைய ஜயிக்கப்பட்ட சிறிதுபொருளும் அப்பொழுது [2] அவர்களுக்கே அநுமதி கொடுக்கப்பட்டது. ஓ! ஜயிப்பவர்களிற் சிறந்தவரே! ஜயிக்கமுடியாதவர்களான அந்தப் பாண்டவர்கள், (மறுபடியும்) சூதாட்டத்தால் ஜயிக்கப்பட்டு வனம் சென்றார்கள். அதில் எங்களுடைய குற்றம் ஒன்றும் இல்லை. ஓ! கிருஷ்ணரே! (சூதில்) திறமையில்லாதவர்களான பாண்டவர்கள் [3] பகைவர்போல் பகைவருடன்கூடி ஸந்தோஷத்தை அடைந்தவர்களாய் எந்தக்குற்றத்தால் பகைக்கிறார்கள்? நாங்கள் அவர்களுக்கு

1 'என்னைத் தூஷிக்க என்ன காரணம்?' என்றும் கொள்ளலாம்.

2 'அதை அப்பொழுது அவர்களே அங்கீகரித்தனர்' என்றுமாம்.

3 'எங்களைப் பகைவரைப்போலப் பகைக்கிறார்கள்' என்றுமாம்.

எந்தக்குற்றத்தைச் செய்தோம்? எந்தக்குற்றத்திற்காகப் பாண்டவர்கள் ஸ்ருஞ்சயர்களுடன்கூடித் திருதராஷ்டிரபுத்திரர்களான எங்களைக் கொல்ல விரும்புகிறார்கள்? நாங்களும் கொடிய செய்கையாலோ சொல்லாலோ மனத்தில் மிக்க தளர்ச்சியடைந்து, பயத்தினால் இவ்வுலகில் இந்திரனைக்கூட வணங்கமாட்டோம். ஓ! கிருஷ்ணரே! பகைவரை அடக்குபவரே! யுத்தத்தினால் எங்களை ஜயிக்கத் துணிகிறவனும் க்ஷத்ரியதர்மத்தை அனுஷ்டிப்பவனுமானவனைக் காணேன். ஓ! மதுஸூதனரே! பீஷ்மரும் க்ருபரும் துரோணரும் கர்ணனும் தேவர்களாலும் யுத்தத்தால் வெல்லமுடியாதவர்கள். பாண்டவர்களாலே வெல்லமுடியாதவர்களென்று சொல்லவும் வேண்டுமா? ஓ! மாதவரே! ஸ்வதர்மத்தை ஆலோசித்து யுத்தத்தில் ஸமயத்தில் அஸ்திரத்தினாலே மரணத்தை அடைவோமேயானால் அது ஸ்வர்க்கத்திற்கு அனுகூலமானதே. ஓ! ஜனார்த்தனரே! நாங்கள் யுத்தத்தில் சரதல்பத்தை அடைந்து சயனிப்போமேயானால் அது க்ஷத்ரியர்களான எங்களுக்கு முக்கியமான தர்மமே. ஓ! மாதவரே! அப்படிப்பட்ட நாங்கள் பகைவர்களை வணங்காமல் யுத்தத்தில் வீரசயனத்தை அடைவோமானால் எங்களைக்குறித்து ஒருவரும் வருத்தத்தை அடையார். நல்ல குலத்திற் பிறந்து க்ஷத்ரியதர்மத்தோடிருப்பவனான எவன் இவ்வுலகில் இவ்விதம் பிழைப்பைக்குறித்துப் பயத்தினால் ஒருகாலாவது எவனிடமாவது வணங்குவான்? உயரக்கிளம்பவே வேண்டும்; வணங்கக்கூடாது. உயரக்கிளம்புவதே ஆண்தன்மையன்றோ? '[1] கணுவில் முறிந்தாலும் முறியலாம்; இவ்வுலகில் ஒருவனிடத்திலும் வணங்கக்கூடாது' என்கிற மாதங்கருடைய வார்த்தையை நன்மையை விரும்புகிறவர்கள் பின்பற்ற விரும்புகிறார்கள். என்னைப்போன்றவன் உயிருள்ளவரையில் தர்மத்தின்பொருட்டே பிராம்மணர்களுக்கு வணங்க வேண்டும். அப்படியே, மற்றவனொருவனையும் மதியாமல் ஸஞ்சரிக்க வேண்டும். இது க்ஷத்ரியர்களுக்குரிய தர்மம். இது எப்பொழுதும் எனக்கும் ஸம்மதமானது. ஓ! கேசவரே! முன் என்னுடைய பிதாவினாலே அனுமதிகொடுக்கப்பட்டிருந்த ராஜ்யத்தின் பாகமும் நான் உயிருடனிருக்கையில் மறுபடியும் ஒருபொழுதும் அடையத்தக்கதில்லை. ஓ! ஜனார்த்தனரே! மாதவரே! அரசரான திருதராஷ்டிரர் எதுவரையில் ராஜ்யத்தை ஆளுகிறாரோ அதுவரையில் நாங்களோ அவர்களோ ஆயுதங்களைவைத்துவிட்டு (அவரை) அடுத்துப்பிழைக்க வேண்டும். ஓ! ஜனார்த்தனரே! முன் நான் சிறுவனாகப் பரவசனாயிருக்

1 'அபர்வணி' என்பது மூலம்.

கும்பொழுது, கொடுக்கக்கூடாத ராஜ்யமானது அறியாமையினாலேயோ பயத்தினாலேயோ கொடுக்கப்பட்டுவிட்டது. ஓ! விருஷ்ணி நந்தனரே! கேசவரே! இப்பொழுது, புஜபலமமைந்தவனான நான் ஆளுகையில், அது மறுபடியும் பாண்டவர்களால் அடையத்தக்கதன்று. ஓ! கேசவரே! கூர்மையான ஊசியினுடைய முனையினாலே குத்தப்படுமளவுகூட எங்கள் பூமியில் பாண்டவர்களுக்குக் கொடுக்கத் தக்கதில்லை' என்றான்.

## நூற்றிருபத்தெட்டாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(கோவிந்தர் துரியோதனனை நிந்தித்து அவன் பாண்டவருக்குச் செய்த தீமைகளை நினைப்பூட்டியதும், பாண்டவருடன் சேராவிடில் கௌரவர் துரியோதனனைக் கட்டிப் பாண்டவரிடம் கொடுப்பரென்று துச்சாஸனன் சொல்லத் துரியோதனன் கோபமுற்று வெளியே சென்றதும், கோவிந்தர் குலக்ஷேமத்துக்காகத் துரியோதனனை நீக்கிவிடும்படியும் அவனைக்கட்டிப்பாண்டவரிடம் கொடுக்கும்படியும் திருதராஷ்டிரனுக்குச் சொல்லியதும்.)

பிறகு, கிருஷ்ணர், கோபத்தால் கலங்கிய கண்களையுடையவராகிச் சிரித்துவிட்டு, கௌரவர்களுடையஸபையில் துரியோதனனை நோக்கி இந்த வார்த்தையை உரைக்கலானார்: 'ஏ! மூட! வீரசயனத்தை அடையப்போகிறாய். அதனை இஷ்டப்படி அடையவே போகிறாய். மந்திரிகளுடன் உறுதியாக இருக்கக்கடவாய். பெரிய யுத்தமானது நேரிடப்போகிறது. அரசனே! நீ, 'பாண்டவர்கள் விஷயத்தில் நான் கிரமத்தைமீறி ஒன்றும் செய்யவில்லை' என்று நினைக்கிறதையெல்லாம் அறியக்கடவாய். பாரத! மஹாத்மாக்களான பாண்டவர்களுடைய செல்வத்தினாலே தபிக்கச்செய்யப்பட்ட நீ சகுனியுடன்கூடிச் சூதாட்டத்தைக் கெட்ட ஆலோசனையால் செய்தாய். அப்பா! சிறந்தவர்களும் ஸாதுக்களால் கொண்டாடப்பட்டவர்களும் நேராக நடப்பவர்களுமான ஞாதிகள் எப்படி கோணல்வழியாக அவ்வித அநியாயத்

தைச் செய்யப்படத்தக்கவராவர்? மிக்கபுத்திமானே! சூதாட்டமானது ஸத்துக்களுடைய புத்தியை நாசம் செய்வது; அஸத்துக்களுக்கு அதில் பகைகளும் துன்பங்களும் உண்டாகின்றன. நீ ஸத்துக்களுடைய ஆசாரங்களை நன்குபாராமல் பாவத்தில் பற்றினவர்களுடன் கூடி அப்படிப்பட்ட கோரமான இந்தத்துன்பத்தைச் சூதாட்டத்தின் வழியாகச் செய்துவிட்டாய். நீ திரௌபதியை ஸபைக்கு வருவித்து வெளிப்படையாகப் பேசினபடி வேறு எவன் பிராதாவின் பாரியைக்கு விபரீதத்தைச் செய்யத்தக்கவனுவான்? நல்ல குலத்திற் பிறந்தவளும் நன்னடையுடையவளும் பாண்டவர்களுக்கு உயிரினும் சிறந்தவளும் ராஜமஹிஷியுமான அவள் உன்னாலே அந்தப்படி அவமதிக்கப்பட்டாள். பகைவரை வாட்டுகின்ற குந்திபுத்திரர்கள் வனம் செல்லும் பொழுது, கௌரவர்களுடைய ஸபையில் துச்சாஸனன் சொல்லியதைக் கௌரவர்களெல்லாரும் அறிவார்கள். நல்ல நடையுடையவர்களும் லோபமற்றவர்களும் எப்பொழுதும் தர்மவழியில் நடப்பவர்களுமான தன்பந்துக்களிடத்தில் ஸாதுவான எவன் இந்தத் தகாதசெயலைச் செய்வான்? கர்ணனும் துச்சாஸனனும் நீயும், குரூரர்களும் அயோக்யர்களுமானவர்கள் சொல்லுகிறதுபோல, கடுமையான வார்த்தையைப் பலவாகச் சொன்னீர்கள். வாரணுவதத்தில் சிறுவர்களான அவர்களைத் தாயுடன்கூட எரிப்பதற்குப் பெரிதான முயற்சி செய்யப்பட்டது. அது உனக்குப் பயன்தரவில்லை. அப்பொழுது, பாண்டவர்கள் தாயாருடன் ஏகசக்ர நகரியிலே ஒரு பிராம்மணனுடையவீட்டில் மறைந்துகொண்டு நெடுங்காலம் வஸித்தார்கள். பாண்டவர்களைக்கொல்லுதற்காக விஷத்தினுலும் ஸர்ப்பங்களாலும் கட்டுக்களாலும் எல்லாஉபாயங்களாலும் நீ முயற்சிசெய்தாய். அவையும் உனக்குப் பயன் தரவில்லை. இவ்வித எண்ணமுள்ள நீ, பாண்டவர்கள்விஷயத்தில் எப்பொழுதும் கபடச்செய்கையோடிருப்பவன். மஹாத்மாக்களான பாண்டவர்கள்விஷயத்தில் உனக்கு ஏன் குற்றமில்லை? இவ்வித நடையுள்ளவனும் பாவத்தைச் செய்பவனுமான நீ எப்படி ராஜ்யத்தில் இருக்கத்தக்கவன்? குலத்தில்பாவியாயிருப்பவனே! அப்படிப்பட்ட நீ ராஜ்யத்தையும் ஸுகத்தையும் இழக்கப்போகிருய். நீ பாவி. யாசிப்பவர்களான இவர்களுக்குத் தந்தையினுடையதான பாகத்தைக் கொடுக்கவிரும்பாத நீ, ஐஸ்வர்யமிழந்து அடிபட்டுவிழுந்தபின், அதைக்கொடுக்கப் போகிருய். பாண்டவர்கள்விஷயத்தில் கொலைகாரன்போலப் பலவகையான கெட்டகார்யங்களைச்செய்துவிட்டு, இப்பொழுது கபடச்செய்கையடையவனும்அயோ

க்யனுமாகி வழக்காடுகிறாய். அரசனே! தாய்தந்தைகளாலும் பீஷ்மராலும் துரோணராலும் விதுரராலும், 'ஸமாதானத்தை அடை' யென்று அடிக்கடி சொல்லப்பட்டும், ஸமாதானத்தை அடையவில்லை. அரசனே! ஸமாதானத்தில் உனக்கும் பார்த்தருக்குமாக இருவருக்கும் பெரியலாபம் உண்டன்றோ? அதை நீ விரும்பவில்லை. இதில் புத்திக் குறைவைக்காட்டிலும் வேறென்ன காரணம்? அரசனே! நண்பர்களுடைய வார்த்தையை மீறினதால் ஸுகத்தை அடையப் போகிறதில்லை. பூபதியே! நீ தர்மத்திற்கு விரோதமாகவும் அபகீர்த்திக்குக் காரணமாகவும் காரியங்களைச் செய்கிறாய்' என்றார்.

இவ்விதம், மாதவர் பொறுமையுள்ள துரியோதனனை நோக்கிச் சொல்லும் பொழுது, துச்சாஸனன், கௌரவர்களுடைய ஸபையில், 'அரசனே! பாண்டவர்களுடன் சேராமல் உன்னுடைய இஷ்டப்படி இருப்பாயானால் கௌரவர்கள் உன்னைக் கட்டிக் குந்தியின் புத்திரனுக்குக் கொடுத்துவிடுவார்கள். ஓ! அரசனே! பீஷ்மரும் துரோணரும் உன்னுடைய பிதாவும், நீயும் நானும் கர்ணனுமாகிய நம் மூவரையும் பாண்டவர்களிடம் கொடுக்கப்போகின்றனர்' என்கிற இந்தவார்த்தையைச் சொன்னான். திருதராஷ்டிரனின் புத்திரனும் கெட்ட புத்தியுடையவனும் லஜ்ஜையற்றவனும் (பெரியோர்களால் நன்கு) பழக்கப்படாதவன்போல மரியாதையில்லாதவனும் கர்வமுள்ளவனும் பூஜ்யர்களை அவமதிப்பவனுமான துரியோதனன், தம்பியினுடைய இந்த வார்த்தையைக்கேட்டுச் சினங்கொண்டு பெரியஸர்ப்பம்போல மூச்சுவிட்டு, விதுரரும் திருதராஷ்டிரனும் மஹாராஜனான பாஹ்லிகனும் கிருபரும் ஸோமதத்தனும் பீஷ்மரும் துரோணரும் ஜனார்த்தனருமாகிய இவர்களெல்லாரையும் அநாதரவுசெய்துவிட்டு எழுந்திருந்து புறப்பட்டான். அரசனான அவன் புறப்பட்டதைப்பார்த்து, தம்பிமார்களும் மந்திரிமார்களும் எல்லாஅரசர்களும் பின்தொடர்ந்தார்கள். துரியோதனன் கோபங்கொண்டு ஸபையிலிருந்தும் கிளம்பி ஸஹோதரர்களுடன் புறப்பட்டதைப்பார்த்துச் சந்தனுவின் புத்திரரான பீஷ்மர் சொல்லலானார்.

'தர்மத்தையும் அர்த்தத்தையும் தள்ளிவிட்டுக் கோபத்தை அடைகின்றவனுக்கு விரைவாகத் துன்பமேற்படுதலால், அவனைப்பற்றிப் பகைவர்கள் சிரிக்கின்றார்கள். திருதராஷ்டிரபுத்திரனான இந்த ராஜகுமாரன் கெட்டமதியுள்ளவனும் உபாயத்தை அறியாதவனும் அரசாட்சியில் வீண்பற்றுள்ளவனும் கோபத்திற்கும் லோபத்திற்கும் வசமானவனுமாயிருக்கிறான். ஓ! ஜனார்த்தனரே! இந்த க்ஷத்ரிய

ஜாதிமுழுவதையும் காலத்தால் பக்குவமானதாக நினைக்கிறேன். எல்லா அரசர்களும் மந்திரிகளுடன் அறியாமையால் அனுஸரித்திருக்கின்றனர்' என்றார்.

புண்டரீகாக்ஷரும் வீர்யவானுமான ஸ்ரீ கிருஷ்ணர், பீஷ்மருடைய வார்த்தையைக்கேட்டவுடன், பீஷ்மர் துரோணர் முதலிய எல்லாரையும் நோக்கிச் சொல்லலானார். 'மந்தனான அரசனை, அரசனாயிருக்கும்விஷயத்தில் வலிந்து அடக்காத (= விலக்காத) படியால், இது கௌரவஸ்ரேஷ்டர்கள் எல்லாருடையதுமான பெரிய தவறாகும். ஓ! பகைவரை அடக்குபவர்களே! அந்த விஷயத்தில் ஸமயோசிதமாகச் செய்யவேண்டியதை நான் நினைக்கிறேன். அது செய்யப்படும் விஷயத்தில், நன்மை உண்டாகும். ஓ! குற்றமற்றவர்களே! உங்களுக்கு விருப்பமிருக்குமானால் உங்களுடைய அனுமதியினால் நான் சொல்லும் ஹிதமானவார்த்தை முழுமையையும் கேளுங்கள். பாரதர்களே! இது உங்களுக்கும் தெரிந்ததே. குற்றமான நடையுள்ளவனும் மனத்தை வசம்செய்யாதவனும் போஜராஜனுடைய புத்திரனுமானகம்ஸன், பிதா ஜீவித்திருக்கையிலேயே, ஐச்வர்யத்தைக் கைப்பற்றி மிருத்யுவின் வசத்தை அடைந்தான். உக்ரஸேனருடைய புத்திரனான அவன், பந்துக்களால் கைவிடப்பட்டு, ஞாதிகளுடைய ஹிதத்தை விரும்பின என்னாலே பெரும்போரில் கொல்லப்பட்டான். மறுபடியும், ஆஹுகர்குமாரரான உக்ரஸேனர் எங்களாலும் ஞாதிகளாலும் பூஜிக்கப்பட்டவராகிப் போஜராஜவம்சத்தை விருத்தி செய்கின்ற அரசராகச் செய்யப்பட்டார். பாரதரே! குலத்திற்காகக் கம்ஸனொருவனைவிட்டு எல்லா யாதவர்களும் அந்தகர்களும் வ்ருஷ்ணிகளும் சேர்ந்து ஸுகமாக வளர்கின்றனர். அரசரே! தவிரவும், பிரஜைகளுக்குப்பதியான பிரம்மதேவர் சொன்னார். ஓ! பாரதரே! தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் யுத்தமானது வளர்ந்து, ஆயுதங்கள் எடுக்கப்பட்டு உலகங்கள் இரண்டாகப் பிரிந்து நசிக்கின்றபொழுது, தேவரும் உலகங்களை ஸ்ருஷ்டிப்பவருமான பகவானானவர் சொல்லலானார்.

'திதியின் புத்திரர்களும் தனுவின் புத்ரர்களுமான அஸுரர்கள் தோல்வியை அடையப்போகிறார்கள். ஆதித்யர்களும் வஸுக்களும் ருத்ரர்களுமான தேவர்கள் வெல்லப்போகின்றனர். இந்த யுத்தத்தில் தேவர்களும் அஸுரர்களும் மானிடர்களும் கந்தர்வர்களும் உரகர்களும் ராக்ஷஸர்களும் மிக்க கோபங்கொண்டு ஒருவரையொருவர் அடிப்பார். இருக்கின்ற ஜகமெல்லாம் ஒரு முகூர்த்தத்தில் இல்

லாமற்போகும்' என்று நினைத்துப் பெரிதான ஸ்தானத்திலிருக்கின்ற பரமமத்தவா, தாமனைநோக்கி, 'இந்தத் தைத்யர்களையும் தானவர்களையும்கட்டி வருணனுக்குக்கொடு' என்றார். பிறகு, இவ்விதம் சொல்லப்பட்ட தர்மன், பிரம்மாவினுடைய கட்டளையினாலே எல்லாத் தைத்யர்களையும் தானவர்களையும்கட்டி வருணனிடம் கொடுத்தான். ஜலங்களுக்குத் தலைவனான வருணன் அந்த அஸுரர்களைத் தர்மனுடைய பாசங்களாலும் தன்னுடைய பாசங்களாலும் கட்டி முயற்சியுடன் கடலில் (வைத்து) எப்பொழுதும் ரக்ஷிக்கிறான். அப்படிப் போலத் துரியோதனனையும் கர்ணனையும் ஸுபலபுத்ரனான சகுனியையும் துச்சாஸனனையும்கட்டிப் பாண்டவர்களிடம் கொடுங்கள். ஒருகுலத்திற்காக ஒருமனிதனை விடவேண்டும். ஒருகிராமத்திற்காக ஒருகுலத்தை விடவேண்டும். ஒரு தேசத்திற்காக ஒரு கிராமத்தை விடவேண்டும். தனக்காக, பூமியை விடவேண்டும். அரசரே! க்ஷத்திரியச்ரேஷ்டரே! துரியோதனனைக் கட்டினபிறகு, பாண்டவர்களுடன் ஸமாதானத்தைச் செய்துகொள்ளும். உம்முடைய நிமித்தத்தில் க்ஷத்திரியர்கள் நாசத்தை அடையவேண்டாம்' என்றார்.

---

நூற்றிருபத்தொன்பதாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(திருதராஷ்டிரன்சொற்படி விதுரர் காந்தாரியை ஸபைக்கு அழைத்துவந்ததும், அவள் துரியோதனனை மறுபடியும் அழைப்பித்து நீதிகூறிப் பாண்டவருடன் ஸமாதானஞ்செய்து கொள்ளச் சொல்லியதும்.)

வைசம்பாயனர் சொல்லுகிறார்: "அரசனே! தேவருடைய வார்த்தையைக்கேட்டு, அரசனான திருதராஷ்டிரன், எல்லாத் தர்மங்களையும் உணர்ந்தவரான விதுரரை விரையச்செய்துகொண்டு, 'அப்பா! மிக்கபுத்திமானே! போ. நீண்ட அறிவுடையவளான காந்தாரியை இங்கே அழைத்துவா. அவளுடன் துர்ப்புத்தியுள்ள துர்யோதனனை நல்லவார்த்தை சொல்லுகிறேன். தீயசெய்கையும் கெட்ட எண்ணமுமுடைய துர்யோதனனுக்கு அவள் சமாதானத்தைச் செய்யாமற்போனால், நாம் நண்பனான கிருஷ்ணனுடைய வார்த்தையில் இருப்போம். ஒருஸமயம், அவள், லோபத்தால் பற்றப்பட்டவனும் கெடுமதியுடையவனும் கெட்டசேர்க்கையுடையவனுமான துரியோதனனுக்குச் சமாதான நிமித்தமான வார்த்தையைச் சொல்லுகிறவளாகி நல்வழியைக் காண்பிப்பாள். ஒருஸமயம், நமக்குத் துரியோதனனால் செய்யப்பட்டதும் பெரிதும்

கோரமுமான துன்பத்தைச் சமனம்செய்வானானால் அது வெகுநாள்களுக்கு அழிவில்லாத யோகக்ஷேமமாகும்' என்று சொன்னான். விதுரரோ, திருதராஷ்டிரராஜனுடைய வார்த்தையைக்கேட்டு, அவனுடைய கட்டளையினாலே, மிக்க அறிவையுடைய காந்தாரியை அழைத்து வந்தார்.

திருதராஷ்டிரன், 'ஓ! காந்தாரி! துஷ்டபுத்தியுடையவனும் கட்டளையை மீறினவனுமான உன்னுடைய இந்தப் புத்திரன், செல்வத்திலுள்ள பேராசையினாலே, செல்வத்தையும் உயிரையும் விடப்போகிறான். மரியாதையில்லாதவனும் துஷ்டபுத்தியுள்ளவனும் மூடனுமான இவன், நல்ல பழக்கமில்லாதவன்போல, அன்பர்களுடைய வார்த்தையைமீறிப் பாவிகளுடன்கூடி ஸபையிலிருந்தும் வெளியிற் சென்றுவிட்டான்' என்றான். புகழுள்ளவளும் ராஜபுத்ரியுமான அந்தக்காந்தாரி பர்த்தாவினுடைய வார்த்தையைக்கேட்டுப் பெரிய நன்மையைத்தேடுகிறவளாகி ஒரு வார்த்தை சொல்லலானாள்.

'ராஜ்யத்தில் ஆசைகொண்டவனும் லோபியுமான புத்திரனை விரைவில் அழைத்துவரச்செய்யும். தர்மத்தையும் அர்த்தத்தையும் கெடுக்கிறவனும் நல்ல பழக்கமில்லாதவனுமானவனாலே ராஜ்யமானது அடைதற்கு முடியாது. அப்படியிருந்தும், எல்லாவிதத்தாலும் வணக்கமில்லாத இவனாலே அது அடையப்பட்டது. ஓ! திருதராஷ்டிரரே! இந்தவிஷயத்தில் புத்திரனிடம் பிரியமுள்ளவரும், அவன் பாவியாயிருப்பதை அறிந்தும் அவனுடைய புத்தியை அநுஸரிப்பவருமான நீர்தாம் மிகவும் நிந்திக்கத்தக்கவர். அரசரே! காமத்துக்கும் கோபத்துக்கும் நன்குவசப்பட்டு, லோபத்தையடைந்தவனான அப்படிப்பட்ட இவன் இப்பொழுது உம்மாலே பலாத்காரமாகத் திருப்புவதற்கும் முடியாதவன். மூடனும் அற்பத்தன்மையுடையவனும் கெட்டபுத்தியுடையவனும் தீயோர்களை உதவியாகவுடையவனும் லோபியுமாயிருப்பவனுக்கு ராஜ்யத்தை அளித்த நிமித்தமாகத் திருதராஷ்டிரர் பயனை அநுபவிக்கிறார். அரசர், தம்மவருள்நேரும் வேறுபாட்டை எப்படி அலக்ஷ்யம் செய்யலாம்? உம்மவரை விட்டுப் பிரிந்த உம்மைப் பகைவர்கள் [1] கொல்லுவார்கள். ஓ! மஹாராஜரே! ஸாமத்தினாலோ பேதத்தினாலோ கடக்கக்கூடிய ஆபத்துக்களைத் தாண்டுவதற்காக எவன் தன் ஜனங்களிடம் தண்டோபாயத்தைச் செய்வான்?' என்றாள்.

---

1 'ப்ரஹஸிஷ்யந்தி=நகைப்பார்கள்' என்பது வேறுபாடம்.

விதுரர், திருதராஷ்டிரனுடைய கட்டளையினாலும் மாதாவின் வசனத்தினாலும், பொறாமையுள்ள துரியோதனனை மறுபடியும் ஸபைக்கு அழைத்துவந்தார். அவன் தாயின் வார்த்தையை எதிர்பார்க்கிறவனும் கோபத்தால் கண்கள்சிவந்து ஸர்ப்பம்போலப் பெருமூச்சுவிடுகிறவனுமாகித் திரும்பவும் ஸபையில் நுழைந்தான். காந்தாரி, (ஸபையில்) நுழைந்தவனும் நெறிதவறினவனுமான அந்தப் புத்திரனைப்பார்த்துத் தூஷித்துச் சமாதானத்தினிமித்தமான வார்த்தையை உரைக்கலானாள்: 'புத்திர! துர்யோதன! பந்துக்களுடன் கூடினஉனக்கு நன்மையும் அப்படியே முடிவில் ஸுகத்தை அளிப்பதுமான என்னுடைய இந்தவார்த்தையை அறியக்கடவாய். பரதஸ்ரேஷ்ட! துர்யோதன! உன்னைநோக்கிப் பிதாவும் பீஷ்மரும் துரோணரும் கிருபரும் விதுரருமாகிய ஆப்தர்கள் எந்தவார்த்தையைச் சொன்னார்களோ அந்தவார்த்தையைச் செய். நீ ஸமாதானத்தை அடைந்தால் பீஷ்மருக்கும் பிதாவுக்கும் எனக்கும் துரோணர் முதலிய ஆப்தர்களுக்கும் பூஜையானது செய்யப்பட்டதாகும். பரதஸ்ரேஷ்ட! பேரறிவாள! ராஜ்யமானது தன்விருப்பத்தால் அடையவும் ரக்ஷிக்கவும் அனுபவிக்கவும் முடியாதது. இந்திரியங்களை வசம்செய்யாதவன் நீண்டகாலம் ராஜ்யத்தை அனுபவியானல்லனோ? மனத்தை ஜயித்த மேதாவியோ ராஜ்யத்தைப் பாலனம் செய்வான். காமக்குரோதங்களோ மனிதனை அர்த்தங்களிலிருந்தும் கீழே தாழ்த்துகின்றன. அந்தப்பகைகளை வென்ற அரசனே பூமியை வெல்லுகிறான். உலகத்திற்குத் தலைவனே! இந்த ப்ரபுத்தன்மை பெரிதன்றோ? அரசாட்சி என்னும் பதவி மதிகெட்டவர்களால் விரும்பப்பட்டால் காப்பதற்கு முடியாததாயிருக்கிறது. பெரிதான ஒன்றை அடையவிருப்பமுள்ளவன் இந்திரியங்களைத் தர்மத்திலும் அர்த்தத்திலும் அடக்கவேண்டும். அடக்கப்பட்ட இந்திரியங்களாலே, விறகுகளாலே அக்னிவளர்வதுபோல, புத்தி வளர்கிறது. வசமாகாத இவைகள், பழக்கப்படாதவைகளும் அடங்காதவைகளுமான குதிரைகள் திறமையில்லாதபாகனை வழியில் கொல்வதுபோலக் கொல்வதற்கும் போதுமானவை. தன்னைவெல்லாமல் மந்திரிகளை வெல்ல விரும்புகிறவனும், மந்திரிகளை வெல்லாமல் பகைவர்களை வெல்ல விரும்புகிறவனுமான மனிதன் ஸ்வாதீனமில்லாதவனாகி எங்கும் குறைவை அடைகிறான். தன்னையே முதலில் பகையாகக் கருதி வெல்லுகிறவன், பிறகு, மந்திரிகளையும் பகைவர்களையும் வீணாக வெல்லவிரும்பான். இந்திரியங்களை வசம்செய்தவனும் மந்

திரிகளை வென்றவனும் விரோதம் செய்கிறவர்களிடம் தண்டத்தைச் செய்தவனும் ஆராய்ந்து பார்த்துச் செய்பவனும் தீரனுமாயிருப்பவனைச் செல்வமானது மிகுதியாக அடைகிறது. அந்தக் காமக்குரோதங்கள், சிறிய கண்களையுடைய வலையினால் மறைக்கப்பட்ட இரண்டு மீன்கள்போலச் சரீரத்திலிருக்கின்றன. அவைகளோ ஞானத்தை நாசம் செய்கின்றன. இவ்வுலக இயற்கையில் பயந்து ஆசையற்று ஸ்வர்க்கத்திற்குச் செல்லுகிறவனுடைய ஸ்வர்க்கவாயிலைத் தேவர்கள் எவைகளால் மறைக்கின்றார்களோ அவைகளைக் காமக்குரோதங்களென்று [1] அறி. எந்த அரசன் ஆசையையும் கோபத்தையும் லோபத்தையும் கர்வத்தையும் அகங்காரத்தையும் நன்கு வெல்ல அறிவானோ அவனே, பூமியை ஆளுகிறான். அர்த்தத்தையும் தர்மத்தையும் பகைவரை வெல்லுதலையும் அடைய விரும்புகிற அரசன் எப்பொழுதும் இந்திரியங்களை அடக்குவதில் முயற்சியுள்ளவனாக இருக்கவேண்டும். எவன் காமத்துக்குவசப்பட்டோ கோபத்துக்கு வசப்பட்டோ தன்னைச் சேர்ந்தவர்களிடத்திலும் மற்றவர்களிடத்திலும் பொய்யாக நடக்கிறானோ அவனுக்கு உதவி செய்வோர் உண்டாகார். அப்பா! ஒன்று சேர்ந்தவர்களும் பேரறிவாளர்களும் சூரர்களும் பகைவர்களை அடக்குகிறவர்களுமான பாண்டவர்களுடன் கூடிப் பூமியை இனிது அநுபவிப்பாய். குழந்தாய்! சந்தநுவின் புத்திரரான பீஷ்மரும் மகாரதரான துரோணரும் எது சொன்னார்களோ அது ஸத்தியம். கிருஷ்ணார்ஜுனர்கள் வெல்லப்படமுடியாதவர்கள். புஜபலமிகுந்தவனும் சிரமமில்லாமல் (காரியத்தைச்) செய்கிறவனுமான கிருஷ்ணனை அடையக்கடவாய். கேசவன் மனமகிழ்ச்சியடைந்தால் இரண்டுபேர்களுக்குமே ஸுகத்தைச் செய்வான். எந்த மனிதன், தன்னுடைய நன்மையை விரும்புகிறவர்களும் அறிவுள்ளவர்களும் வித்தையிலுழைத்தவர்களுமான நண்பர்களுடைய கட்டளையிலிருக்கவில்லையோ, அவன் பகைவர்களுக்கு ஸந்தோஷத்தைச் செய்கிறவன். குழந்தாய்! யுத்தத்தில் நன்மையில்லை. தர்மார்த்தங்களில்லை; ஸுகமேது? வெற்றியும் நிச்சயமில்லை. யுத்தத்தில் மனத்தைச் செலுத்தாதே. பகைவர்களை வருத்துபவனே! மிக்க அறிவுள்ளவனே! பகைமையில் பயந்தவர்களான பீஷ்மராலும் உன்னுடைய பிதாவினாலும் பாஹ்லிகராலும் பாண்டுபுத்திரர்களுக்குப் பாகமானது கொடுக்கப்பட்டது. சூரர்களான பாண்டவர்களால் பகைவர்அற்றதாகச் செய்யப்பட்ட பூமி முழுவதையும் நீ அநுபவிப்பது, அப்படிக்

1 "வித்தி தௌ" என்ற பாடம் கொள்ளப்பட்டது.

கொடுத்ததாலுண்டான பயனென்பதை இப்போது நேரில் பார்க்கிறாய். பகைவரையடக்குபவனே! பாண்டுபுத்திரர்களுக்கு உசிதமானதைக்கொடு. மந்திரிகளுடன் அநுபவிப்பதற்கு விரும்புகிறாயானால் பாதியைக்கொடு. மந்திரிகளுடன் நீ ஜீவிப்பதற்குப் பூமியில் பாதி போதும். பாரத! அப்பா! நண்பருடைய சொற்படி நடந்தால் புகழை அடைவாய். செல்வம் பொருந்தியவர்களும் மனத்தை வசம்செய்தவர்களும் புத்திமான்களும் இந்திரியங்களை ஜயித்தவர்களுமான பாண்டவர்களுடன் யுத்தமானது பெரிய ஸுகத்திலிருந்தும் நழுவச் செய்யும். பரதஶ்ரேஷ்ட! அன்பர்களுடைய கோபத்தையடக்கிப் பாண்டவர்களுக்குச் சொந்தமான பாகத்தைக் கொடுத்து உசிதமாக ராஜ்யத்தை ஆளு. அப்பா! பதின்மூன்று வருஷங்களாகச் செய்யப்பட்ட இந்த அபகாரம் போதும். மிக்க புத்திமானே! காமத்தினாலும் கோபத்தினாலும் விருத்திசெய்யப்பட்ட இதனை அடங்கச்செய். உனக்காக அர்த்தத்தை அடைய விரும்புகிறவர்களும் மிக்க கோபத்தையுடையவர்களுமான கர்ணனும் உன்னுடைய பிராதாவான துச்சாஸனனும் பாண்டவர்கள் விஷயத்தில் போதுமான சக்தியுள்ளவர்கள் அல்லர். பீஷ்மரும் துரோணரும் கிருபரும் கர்ணனும் பீமஸேனனும் தனஞ்சயனும் திருஷ்டத்யும்னனும் கோபங்கொண்டால் உலகில் ஒரு பிராணியும் இராது; நிச்சயம். அப்பா! பொறாமையின்வசமாகிக் கௌரவர்களைக் கொல்லாதே. இந்தப் பூமி முழுவதும் உன்னிமித்தத்தில் வதத்தையடையவேண்டாம். மூட! பீஷ்மர் துரோணர் கிருபர் முதலியவர்கள் முழுவன்மையினாலும் போர் செய்வார்களென்று நீ நினைப்பதும் இப்பொழுது பொருந்தாது. தம்மை அறிந்தவர்களான அவர்களுக்குப் பாண்டவர்கள் விஷயத்திலும் உங்கள் விஷயத்திலும் ராஜ்யமும் அன்பும் ஸ்தானமும் ஸமமல்லவா? தர்மமோ இவர்களிடம் அதிகம். இவர்கள் [1] ராஜபிண்டத்திலுள்ள பயத்தினால் ஒருகால் உயிரையும் விடுவார்கள். யுதிஷ்டிரராஜனையோ எறிட்டுப் பார்ப்பதற்கும் வல்லவராகார்கள். இவ்வுலகில் மனிதர்களுக்கு லோபத்தினால் பொருள் வரவானது காணப்படுகிறதில்லை. பரதஶ்ரேஷ்ட! குழந்தாய்! ஆகையால், லோபம்வேண்டாம். சமனத்தை அடையக் கடவாய்' என்றாள்.

1 'அரசனுடைய அன்னத்தை உண்ட நன்றிக்காக' என்பது.

## நூற்றுமுப்பதாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(துரியோதனன் தாயார் சொல்லியதைக்கேளாமல் வெளியேபோய்க் கர்ணன்முதலானவருடன் ஆலோசித்து க்ருஷ்ணனைக் கட்டநிச்சு யித்ததும், அதனைக் குறிப்பினால் அறிந்த ஸாத்யகி ஸபை யில் க்ருஷ்ணன்முதலானவர்களிடம் தெரிவித்ததும், க்ருஷ்ணன்கோபமடைந்ததும், திருதராஷ்டிரன் துரியோதனனைத் திரும்பஅழைத்துக் க்ருஷ் ணனைக் கட்ட முடியாதென்றதும், விது ரர் க்ருஷ்ணமஹிமையைச்சுருக்கிச் சொல்லித்துரியோதனனை நிந்தித்ததும்.)

அவன், பயனுள்ளதாக மாதாவினால் சொல்லப்பட்ட அந்த வார்த்தையை அனாதரவுசெய்து கோபத்தினாலே மறுபடியும் மனத்தை அடக்காதவர்களுடைய சமீபத்தை நோக்கிப் புறப்பட் டான். பிறகு, அவன் ஸபையிலிருந்தும் வெளிவந்து ஸுபலன்புத் திரனும் சூதாடுகருவியில் மிக்க விருப்பமுள்ளவனுமான சகுனி ராஜனுடன்கூடி ஆலோசனை செய்தான். துச்சாஸனன்; திருத ராஷ்டிரபுத்திரனான துர்யோதனனையும் கர்ணனையும் நோக்கி, 'அர சனே! பாரத! பாண்டவர்களுடன் [1] நீ விரும்பிச் சேராமலிருப்பா யானால் உன்னைக் கட்டிப் பாண்டுபுத்திரனிடம் கொடுத்துவிடுவார்கள். ஓ! பரதஶ்ரேஷ்ட! பீஷ்மரும் துரோணரும் உன்னுடைய பிதாவும், கர்ணனும் நீயும் நானுமாகிய நம்மூவர்களையும் பாண்டவர்களிடம் கொடுக்கப்போகிறார்கள்' என்றான்.

ஓ! பரதஶ்ரேஷ்டரே! திருதராஷ்டிரபுத்திரனான துர்யோத னன் துச்சாஸனனுடைய அந்த வார்த்தையைக்கேட்டுப் பெருமூச்சு விட்டுச் சிரித்துக்கொண்டு ஸுபலபுத்திரனும் சொக்கட்டான்களில் விருப்பமுள்ளவனுமானசகுனிராஜனுடன் தனியிடத்தை அடைந்து இந்த விஷயத்தில் மறுபடியும் ஆலோசனையைச் செய்தான். துர்யோ தனனுக்கும் கர்ணனுக்கும் ஸுபலபுத்திரனான சகுனிக்கும் நான்கா மவனான துச்சாஸனனுக்கும் இந்த எண்ணம் உண்டாயிற்று. 'கார்யங் களைவிரைவாகச்செய்கிறவரான ஜனார்த்தனர், திருதராஷ்டிரராஜருட னும் பீஷ்மருடனும் சேர்ந்துகொண்டு, நம்மைப்பிடித்துவிடுவார்.

---

1 'ஸ்வேஙகாமேந' என்பதுமூலம்.

நாமே இந்திரன் மகாபலியை ஆக்கிரமித்துக் கட்டியதுபோலப் புருஷச்ரேஷ்டனான கிருஷ்ணனை வலிமையினாலே ஆக்கிரமித்துக் கட்டுவோம். கிருஷ்ணன் பிடிக்கப்பட்டதைக்கேட்ட பாண்டவர்கள், மனம்கலைந்து, பல்லைப்பிடுங்கின பாம்புகள்போல் ஊக்கமற்றவர்களாகிவிடுவார்கள். புஜபலமிக்கவரான இவரல்லரோ அவர்களெல்லோருக்கும் க்ஷேமத்தையளிப்பவரும் கவசம்போன்றவருமாயுள்ளவர். ஸாத்வதரனைவருள்ளும் சிறந்தவரும் பாண்டவர்களுக்கு வேண்டியவற்றை யளிப்பவருமான இவர் பிடிக்கப்பட்டால், அவர்கள்ஸோமகர்களோடு யுத்தத்தில்முயற்சியில்லாதவர்களாகிவிடுவார்கள். ஆகையால், நாம் இவ்விடத்தில் ஒருவராகஇருப்பவரும் (காரியங்களை) விரைந்துசெய்பவருமான கேசவரைக் கட்டி, திருதராஷ்டிரர் கூக்குரல் போடும்பொழுதே, பகைவருடன் போர்செய்வோம்' என்றார்கள்.

பாவிகளும் கெட்டமனமுள்ளவர்களுமான அவர்களுடைய கெட்ட எண்ணத்தை, இங்கிதத்தைஅறிகிறவனும் வித்வானுமான ஸாத்தியகியானவன் விரைவில் அறிந்தான். அதனிமித்தம் வெளியில் வந்து க்ருதவர்மாவுடனிருந்துகொண்டு, அவனை நோக்கி, 'சீக்கிரம் சேனையைச் சேரு. சேனையைவகுத்துக் கவசம்பூண்டு சபையின் வாசலையடையக்கடவாய். நானோ சிரமமின்றிக் காரியத்தைச் செய்பவரான கிருஷ்ணரிடம் இதைச்சொல்லுகிறேன்' என்றுசொன்னான். வீரனான அவன் ஸிம்மமானது மலையின்குகையில் நுழைவதுபோல சபையில் நுழைந்து மகாத்மாவான கேசவரிடம் அந்த அபிப்பிராயத்தைச் சொன்னான். பிறகு, திருதராஷ்டிரனையும் விதுரரையும் நோக்கிச் சொல்லலானான். அவர்களுடைய இந்த அபிப்பிராயத்தைப் பரிகசிப்பவன்போலச் சிறிது சிரித்துக்கொண்டே சொன்னான். 'மந்தர்களான அவர்கள் தர்மத்தாலும் அர்த்தத்தாலும் காமத்தாலும் ஸாதுக்களால் நிந்திக்கப்பட்ட காரியத்தை இவரிடத்தில் செய்ய விரும்புகிறார்கள். அது எவ்விதத்தாலும் அடையக்கூடியதில்லை. பாவஎண்ணமுடையவர்களும் காமக்குரோதங்களால் ஜயிக்கப்பட்டவர்களும் கோபம் பேராசை இவற்றின் வசத்தை அடைந்தவர்களுமான மூடர்கள் சேர்ந்து கலகம்செய்யப்போகின்றார்கள். அற்பமான சித்தத்தையுடைய அவர்கள், பாலர்களும் மூடர்களும் வஸ்திரத்தினால் ஜ்வலிக்கின்ற அக்னியைப் பிடிக்கவிரும்புவது போல, இந்தப் புண்டரீகாக்ஷரைப் பிடிக்க விரும்புகிறார்கள்' என்றான்.

ஸாத்யகியினுடைய அந்தவார்த்தையைக்கேட்டு, விசாலமான அறிவினையுடைய விதுரர், கௌரவர்களுடைய ஸபையில் நீண்ட கை

களையுடைய திருதராஷ்டிரரை நோக்கிச் சொல்லலானார். 'அரசரே! பகைவரை வாட்டுகிறவரே! உம்முடைய புத்திரர்கள் அனைவரும் விபரீதமான காலத்தைஉடையவர்களாய், முடியாததும் அபகீர்த்தியையளிப்பதுமான கார்யத்தைச் செய்வதற்கு முயல்கின்றனர். அவர்கள் சேர்ந்து இந்திரனுக்குத்தம்பியான இந்தப்புண்டரீகாக்ஷரை அவமதித்துப் பலாத்காரமாகக் கட்டுவதற்கு விரும்புகிறார்களாம். புருஷச்ரேஷ்டரும் வெல்லமுடியாதவரும் நெருங்கமுடியாதவருமான இவரை அடைந்து தழலையடைந்த விட்டிற்பூச்சிகள்போல இல்லாமல் போய் விடுவார்கள். இந்த ஜனார்த்தனர் விரும்பினால், யுத்தம் செய்கின்ற அவர்கள் எல்லாரையும், கோபத்தையடைந்த சிங்கமானது யானைகளை யமன் வீட்டை அடைவிப்பதுபோல, யமனுடைய வீட்டை அடையச்செய்வார். இவரோ, ஒருவிதத்தாலும் நிந்திக்கப்பட்டதான பாவச்செய்கையைச் செய்யமாட்டார். புருஷோத்தமரான அச்சுதர் தர்மத்திலிருந்து விலகவும் மாட்டார். சங்க சக்ர கதாதாரியான ஸ்ரீகேசவர் யானைதேர்குதிரைகளுடன் வாராணஸியை எரித்துக் காசிராஜனைச் சேனைகளோடு கொன்றதுபோலவே காலேச்வரனாகி ஹஸ்தினபுரத்தை எரித்துக் கௌரவர்களை நாசம்செய்வார். யாதவர்களுக்கு ஸுகத்தையளிப்பவரும் ஒருவராய்ப் பாரிஜாதத்தைக் கவர்ந்தவருமான இந்தக்கிருஷ்ணரைக் கோபத்தையடைந்தவனான இந்திரன் வஸுக்களுடன் கூடி எதிர்க்கமுடியவில்லை. நிர்மோசனநகரத்தில், வாஸுதேவராலே வேகமுள்ளவைகளான ஆறாயிரம் பாசங்களையடைந்து உத்தர கௌரவர்களை ஆக்கிரமித்து அவை அறுக்கப்பட்டன. கோவிந்தர் ஸௌபனுடைய வாயிலையடைந்து, கதையினாலே மலையை உடைத்து, த்யுமத்ஸேனனை மந்திரிகளுடன் கொன்றார். புண்டரீகாக்ஷரான இவர் ஸமர்த்தராயிருந்தும், கௌரவர்களுக்குப் பாவகர்மங்கள் பாக்கியிருத்தலால் தர்மத்தை நோக்கிப் பொறுத்திருக்கிறார். இவர்கள் அரசர்களுடன்கூடிக் கோவிந்தரைக் கட்டவிரும்புகிறார்களானால், இப்பொழுதே இவர்களெல்லாரும் யமனுக்கு அதிதிகளாவார்கள். புற்களின் முனைகள் பலமான காற்றினுடைய வசத்தை அடைகின்றதுபோலக் கௌரவர்களெல்லாரும் கிருஷ்ணருடைய வசத்தை அடைவார்கள்' என்றார்.

விதுரர் இவ்விதம் சொன்னபொழுது, கேசவர், நண்பர்கள் கேட்டுக்கொண்டிருக்கையிலேயே, ரகஸ்யத்தில் திருதராஷ்டிரனை நோக்கி, ஒருவார்த்தைசொல்லலானார். 'ஓ! அரசரே! பூபாலரே! இவர்கள் கோபங்கொண்டு பலத்தினாலே என்னைப் பிடிப்பார்களேயானால், இவர்

கள் என்னைப் பிடிப்பார்களோ, நான் இவர்களைப் பிடிப்பேனோ; அனுமதிகொடும். கோபத்தை அடைந்தவர்களான இவர்கள் எல்லாரையும் கட்டுவதற்கு நான் ஊக்கமுள்ளவனாயிருக்கிறேன். நானோ, ஒருவிதத்தாலும் நிந்திக்கப்பட்ட பாவகர்மத்தைச் செய்யேன். பாண்டவர்களின் தனத்தில் ஆசைவைத்த உம்முடைய புத்திரர்களோ தங்கள் தனத்தையும் இழப்பார்கள். இவர்கள் இப்படிச் செய்யவிரும்பினால் யுதிஷ்டிரர் செய்யவேண்டியகாரியம் நிறைவேறிவிட்டது. பாரதரே! அரசரே! நானோ இப்பொழுதே இவர்களையும் இவர்களை அடுத்தவர்களையும் கட்டிப் பாண்டவர்களுக்குக் கொடுப்பேன். (அதனால்)என்ன தீங்குநேரும்? அரசரே! இவன் இப்படி நிச்சயித்தால் நான் இவ்விதம் நிச்சயிக்கிறேன். சங்கங்கள், பணவங்களும் ஆனகங்களுமாகிய இவற்றின் ஒலிகளுடன் சேர்ந்து முழங்கட்டும். பாண்டவர்களுக்கு ஆயாசமின்றியே பெரிதான க்ஷேமமானது உண்டாகட்டும். அரசரே! இவர்களை அடக்கிப் பாண்டவர்களுக்குக் கொடுப்பேனேயானால் புண்ணியம் உண்டாகும். ஓ! பாரதரே! மகாராஜரே! உம்முடைய எதிரில் கோபத்தா லுண்டானதும் பாவபுத்தியா லுண்டானதும் நிந்திக்கப்பட்டதுமான இந்தக் கார்யத்தையோ செய்யேன். அரசரே! இந்தத் துரியோதனன் எதனை எப்படிச் செய்யவிரும்புகிறானோ அது அப்படியே ஆகட்டும். அரசரே! நானோ உம்முடைய புத்திரர்களெல்லார்களுக்கும் அனுமதி கொடுக்கிறேன்' என்றார்.

அங்ஙனம் சொல்லியதைக்கேட்டு, திருதராஷ்டிரன், விதுரரை நோக்கிச் சொல்லலானான்: 'பாவியும் ராஜ்யத்தில் பேராசையுள்ளவனும் மித்திரர்களுடனும் ஸகோதரர்களுடனும் அடுத்தவர்களுடனும் கூடினவனுமான அந்தத்துர்யோதனனை விரைவில் அழைத்துவா. மறுபடியும், நல்லவழியில் இறங்கும்படி செய்வதற்கு ஸமர்த்தனாவேனானால் செய்கிறேன்' என்றான். பிறகு, விதுரர் விருப்பமில்லாதவனும் அரசர்களால் சூழப்பட்டவனுமான துர்யோதனனைத்தம்பிமார்களுடன் மறுபடியும் சபையில் பிரவேசிக்கச்செய்தார். பிறகு, திருதராஷ்டிரராஜன் கர்ணனாலும் துச்சாஸனனாலும் அரசர்களாலும் சூழப்பட்ட துர்யோதனனைநோக்கிச்சொல்லலானான்: 'குரூர! பாவம் நிறைந்தவனே! அற்பமான செய்கையுடையவர்களைத் துணைவர்ளாகக் கொண்டு பாவிகளான துணைவர்களுடன் சேர்ந்து, குலத்தில்பாவியும் உன்னைப்போன்றவனுமான மூடன் முயல்வதுபோல, முடியாததும் அபகீர்த்தியை அளிப்பதும் நல்லோர்களால் நிந்திக்கப்பட்டதுமான பாவச்செயலைச் செய்ய விரும்புகிறாய். நீ பாவிகளான துணைவர்க

ளுடன் சேர்ந்து நெருங்கமுடியாதவரும் ஆக்கிரமிக்கத் தகாதவரு மான இந்தவாஸுதேவரை அடக்க விரும்புகிறாயாமே? மந்தனே! இந்திரனுடன்கூடிய தேவர்களாலும் பலாத்காரம் செய்யமுடியாத இவரைக் குழந்தை சந்திரனைப்பிடிக்க விரும்புவதுபோலப் பிடிக்க விரும்புகிறாய். எந்தக்கேசவர் தேவர்களாலும் மனிதர்களாலும் கந்தர்வர்களாலும் அஸுரர்களாலும் நாகர்களாலும் யுத்தத்தில் தாங்க முடியாதவரோ அவரை நீ அறியவில்லை. காற்றானது கையால் பிடிக்கக்கூடியதன்று. சந்திரன் கையால் தொடக்கூடியவனல்லன். பூமியானது தலையால் தாங்கக்கூடியதன்று. கேசவர் பலத்தினால் பிடிக்கக்கூடியவரல்லர்' என்றான்.

திருதராஷ்டிரன் இவ்விதம் சொன்னபொழுது, க்ஷத்தாவான விதுரரும், திருதராஷ்டிரன்புத்திரனும் பொறாதவனுமான துர்யோதனனை நோக்கிச் சொல்லலானார்: 'துர்யோதன! இப்பொழுது என்னுடைய இந்த வார்த்தையை அறியக்கடவாய். ஸௌபத்துவாரத்தில் துவிதனென்று பெயர்கொண்ட வானரஶ்ரேஷ்டனானவன் பெரிய கல்மாரியால் கேசவரை மூடினான். மாதவரைப் பிடிக்கவிரும்பி ஸகல யத்தனத்தினாலும் பராக்கிரமத்தைச் செய்தும் இவரைப்பிடிப்பதற்குத் திறமையுள்ளவனாகவில்லை. இவரை நீ பலத்தினால் பிடிக்க விரும்புகிறாய். பிராக்ஜ்யோதிஷபுரத்தை யடைந்த சௌரியை நரகாஸுரன் அஸுரர்களுடன்கூடிப் பிடிப்பதற்கு வல்லவனாக வில்லை. அப்படியிருக்க, நீ அவரை வலிந்துபிடிக்க விரும்புகிறாய். அனேகயுகங்கள் கொண்டவருஷங்கள் ஆயுளையுடையவரான இவர், யுத்தத்தில் நரகாஸுரனைக் கொன்று ஆயிரம் கன்னிகைகளைக் கொண்டுபோய் விதிப்படி விவாஹம் செய்தார். நிர்மோசனமென்கிற பட்டணத்தில் ஆறாயிரம் பெரிய அஸுரர்கள் இவரைப் பாசங்களால் கட்டிப்பிடிப்பதற்குச் சக்தியுள்ளவர்களாகவில்லை. அவரை நீ பலாத்காரமாகப் பிடிக்க விரும்புகிறாய். அப்பொழுது, பால்யத்தில், குழந்தையாயிருந்த இவர் பூதனையைக் கொன்றார். பரதஶ்ரேஷ்ட! பசுக்களுக்காகக் கோவர்த்தனபர்வதமானது இவரால் குடையாகப்பிடிக்கப்பட்டது. மிக்க பலசாலியான அரிஷ்டனும் தேனுகனும் சாணூரனும் அஶ்வராஜனும் கம்ஸனும், துன்பத்தைச் செய்தமையால் கொல்லப்பட்டார்கள். பலசாலிகளான ஜராஸந்தனும் வக்த்ரனும் சிசுபாலனும் பாணனும் யுத்தத்தில் கொல்லப்பட்டார்கள். மற்றப் பகைஅரசர்களும் கொல்லப்பட்டார்கள். அளவற்ற பராக்கிரமத்தையுடைய இவராலே அரசனான வருணனும் அக்னியும் ஜயிக்கப்பட்டார்கள்.

பாரிஜாதத்தைக் கவரும்பொழுது, இந்திரனே நேரில் வெல்லப்பட்டான். யுகமுடிவில் ஏகார்ணவத்தில் தூங்கும்பொழுது, மதுவும் கைடபனும் கொல்லப்பட்டார்கள். அப்படியே, வேறு ஜன்மாவை அடைந்து [1] ஹயக்கிரீவனைக் கொன்றார். இவர் செய்கிறவர்; செய்யப்படுகிறவரல்லர். ஆண்மையிலும் காரணமாயுள்ளவர். இந்தச் சௌரியானவர் எதை எதை விரும்புவாரோ அதை அதை முயற்சியில்லாமலே செய்வார். கோரமான பராக்கிரமத்தையுடையவரும் நழுவாதவரும் கோபத்தையடைந்த ஸர்ப்பம்போலிருப்பவரும் தேஜஸுகளுக்கு இருப்பிடமும் நிந்திக்கப்படாதவருமான இந்தக் கோவிந்தரை நீ அறியவில்லை. மகாபாகுவும் வருத்தமின்றிக் காரியத்தைச் செய்பவருமான இவரை எதிர்த்து, நெருப்பையடைந்த விட்டிற்பூச்சிபோல, மந்திரிகளுடன் மிஞ்சாமற்போய்விடுவாய்' என்றார்.

## நூற்றுமுப்பத்தோராவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(ஸ்ரீகிருஷ்ணன் ஸபையோருக்கு விஶ்வரூபங்காட்டியதும், அவர் அருளால் திருதராஷ்டிரன் கண்களைப் பெற்று அவரைப்பார்த்ததும், மற்றவர்களைப்பார்க்க அவன் விரும்பாமையால் கண்கள் திரும்ப மறைந்ததும், கிருஷ்ணன் விஶ்வரூபத்தை மறைத்துப் பழையரூபம் அடைந்து குந்தியின் அரண்மனைக்குச் சென்றதும்.)

வீரத்தன்மையுடையவரும் பகைவர் கூட்டத்தைக் கொல்லுகிறவருமான கேசவர், விதுரர் இவ்விதம் சொல்லியதைக்கேட்டு, திருதராஷ்டிர புத்திரனை துர்யோதனனை நோக்கி, 'துர்யோதன! மிக்க கெட்டபுத்தியுடையவனே! நீ மோகத்தினாலே நானொருவன் என்று என்னை அவமதித்து, பிடிப்பதற்கு விரும்புகிறாய். இங்கேயே எல்லாப் பாண்டவர்களும் இருக்கின்றார்கள். அப்படியே, அந்தகர்களும் விருஷ்ணிகளும் இருக்கின்றார்கள். இங்கே ஆதித்யர்களும் ருத்திரர்களும் வஸுக்களும் மகரிஷிகளும் இருக்

---

1 இவன் வேதத்தைத் திருடிக்கொண்டு போனமையால், பகவானால் கொல்லப்பட்டானென்று தெரிகிறது.

கின்றார்கள்' என்று சொன்னார். பகைவீரர்களைக் கொல்லுகின்றவரான கேசவர் இவ்விதம் சொல்லிவிட்டு, கம்பீரமாகச் சிரித்தார். அவர் சிரிக்கும்பொழுது, மஹாத்மாவான அவரிடமிருந்து எல்லாத் தேவர்களும் மின்னல்போன்ற ரூபமுடையவர்களாக ஒரேகாலத்தில் பிரத்தியக்ஷமாக வெளிவந்தார்கள். கட்டைவிரல் அளவுள்ளவர்களும் அக்னிக்கு நிகரான தேஜஸையுடையவர்களுமான தேவர்கள் உண்டானார்கள். பிரம்மாவானவர் அவருடைய நெற்றியிலிருந்தார். ருத்திரர் மார்பிலிருந்தார். லோகபாலர்கள் புஜங்களிலிருந்தார்கள். அக்னி முகத்திலிருந்தும் உண்டானான். ஆதித்தியர்களும் ஸாத்தியர்களும் வஸுக்களும் அஸ்வினிதேவர்களும் மருத்துக்களும் இந்திரனும் விஸ்வேதேவர்களும் யக்ஷர்களும் கந்தருவர்களும் உரகர்களும் ராக்ஷஸர்களும் உண்டானார்கள். அப்படியே, இரண்டு கைகளிலிருந்தும் பலராமரும் அர்ஜுனனும் உண்டானார்கள். வலப்பக்கத்தில்வில்லையுடையவனான அர்ஜுனனும் இடப்பக்கத்தில் கலப்பையையுடையவரான பலராமரும் உண்டானார்கள். பீமனும் யுதிஷ்டிரரும் மாத்திரியின் புத்திரர்களும் பின்பக்கத்திலிருந்தும் உண்டானார்கள். பிறகு, அந்தகர்களும் விருஷ்ணிகளும் பிரத்யும்னன் முதலானவர்களும் பெரிய ஆயுதங்களைத் தூக்கிகொண்டு கிருஷ்ணனுடைய முன்பக்கத்திலுண்டானார்கள். சங்கம், சக்ரம், கதை, சக்தி, சார்ங்கமென்கிற வில், கலப்பை, நந்தகமென்கிற கத்தி என்பவைகளான எல்லா ஆயுதங்களும் அவருடைய அனேகம் கைகளில் தூக்கப்பட்டவையாகவே எங்கும் ஜ்வலித்துக்கொண்டு காணப்பட்டன. கண்களிலிருந்தும் மூக்குக்களிலிருந்தும் செவிகளிலிருந்தும் எங்கும் பெரிய பயத்தையுண்டுபண்ணுகின்றவைகளும் புகைகளுடன்கூடியவைகளுமான அக்னிஜ்வாலைகள் உண்டாயின. அப்படியே, அவை மயிர்க்கால்களிலிருந்து ஸூர்யனுடைய கிரணங்கள்போல் உண்டாயின. [ஸ்ரீமானான அவர் ஆயிரம் கால்களும் ஆயிரம் கைகளும் ஆயிரம் கண்களுமுடையவரானார். அப்பொழுது, நாகலோகமானது அவருடைய கணைக்காலுக்குக் கீழ்க் காணப்பட்டது. சந்திர சூர்யர்கள் நேத்திரங்களும் கிரகங்கள் எங்குமிருப்பவைகளும் மேலேயுள்ள எல்லா உலகங்களும் அவருடைய குக்ஷியிலும் இருந்தன. நதிகளும் சமுத்திரங்களும் அந்த மகாத்மாவினுடைய வேர்வையாயிருந்தன. எல்லாப்பர்வதங்களும் அவருடைய எலும்புகளாயின. விருக்ஷங்கள் அவருடைய ரோமங்களாயின. இராப்பகல்கள் இமைக்கொட்டுக்களாயின. ஸரஸ்வதியானவள் நாவில் இருந்தாள்.]

மகாத்மாவான கேசவருடைய கோரமான அந்த ரூபத்தைப் பார்த்து, துரோணரையும் பீஷ்மரையும் மகாபுத்திமானான விதுரரையும் ஸஞ்சயனையும் திருதராஷ்டிரனையும் தவத்தையே தனமாகக் கொண்ட ரிஷிகளையும் தவிர, மற்ற மன்னவர்கள் மனம் நடுங்கிக் கண்களை மூடிக்கொண்டார்கள். பகவானான அந்த ஜனார்த்தனரானவர் அவர்களுக்குத் திவ்ய நேத்திரத்தையளித்தார். அந்தப் பகவான் திருதராஷ்டிரனுக்குத் திருஷ்டியையும் நேத்திரத்தையும் அளித்தார். அம்பிகையின் புத்திரனான திருதராஷ்டிரன் சிறந்ததான அந்த ரூபத்தைப் பார்த்தான். பிறகு, தேவர்களும் கந்தருவர்களும் கின்னரர்களும் மஹோரகர்களும் மஹாபாக்கியவான்களான முனிவர்களும் லோகபாலர்களும் பகவானைத் தலையால் வணங்கி அஞ்சலியுடன் நின்றுகொண்டு துதித்தார்கள்: 'ஓ! பிரபுவே! கோபத்தை அடக்கும்; அடக்கும். உம்மால் காண்பிக்கப்பட்டதும் உம்மிடமிருப்பதுமான உமது ரூபத்தை, தேவகணங்களோடுகூடின பூமியிலுள்ள இந்த ஸகல ஜனங்களும் நாசத்தையடையுமுன், அடக்கிக்கொள்ளும். ஸ்ருஷ்டிப்பவரும் நீர்; அழிப்பவரும் நீர்; நீரே காக்கிறீர். சராசரமான இந்த எல்லா ஜகத்தும் உம்மால் வியாபிக்கப்பட்டிருக்கிறது. ஓ! தோள்வலி அமைந்தவரே! அரசர்கள் எவ்வளவு உள்ளவர்கள்? என்ன வீர்யமுள்ளவர்கள்? என்ன பராக்கிரமமுள்ளவர்கள்? அவர்களினிமித்தம் திவ்யமானரூபத்தைக் காண்பித்தீர்' என்றார்கள். இவ்விதமான வார்த்தைகளை அப்பொழுது விபுவானபகவானைக்குறித்துத் தேவர்களுடன்கூடி முனிவர்கள் சொன்னார்கள். சபையினிடத்தில், மாதவருடைய அந்தப் பெரிய ஆச்சரிய ரூபத்தைப் பார்த்துத் தேவதுந்துபிகள் முழங்கின. பூமாரி பொழிந்தது.

அப்பொழுது, திருதராஷ்டிரன், 'ஓ! புண்டரீகாக்ஷரே! யாதவர்களில் சிறந்தவரே! நீரே எல்லா உலகத்திற்கும் ஹிதமாயுள்ளவர். ஆகையால், எனக்கு அருள்செய்யவேண்டும். ஓ! பகவானே! மறுபடியும், என்னுடைய நேத்திரங்கள் மறைந்துபோகப் பிரார்த்திக்கிறேன். உம்மைப்பார்த்தேன். இப்பொழுது மற்றவரைப் பார்க்க விரும்பவில்லை' என்றான். அப்பொழுது தோள்வலிமிக்க ஜனார்த்தனர், திருதராஷ்டிரனை நோக்கி, 'ஓ! குருநந்தனரே! உமது இரண்டு கண்களும் காணப்படாமல் போகும்' என்றார்.

ஓ! மஹாராஜரே! அவ்விடத்தில் திருதராஷ்டிரனும் விச்வரூபத்தைப்பார்க்கும் விருப்பத்தால் ஆச்சரியமாக வாஸுதேவரிடமிருந்தும் கண்களையடைந்தான். திருதராஷ்டிரன் கண்களை அடைந்து

உட்கார்ந்திருக்கும்பொழுது, அரசர்கள் ஆச்சரியமுற்றவர்களாகி, ரிஷிகளுடன் மதுஸூதனரைத் துதித்தனர். பூமிமுழுமையும் சலித்தது. கடலும் கலங்கிற்று. ஓ! பரதஸ்ரேஷ்டரே! அரசர்கள் மிக்க ஆச்சரியத்தை அடைந்தார்கள். பிறகு, பகைவரைத் தண்டிப்பவரும் புருஷஸ்ரேஷ்டருமான அந்தவாஸுதேவர் தமதுசரீரமாயிருக்கிற தெய்வத்தன்மையுள்ளதும் ஆச்சரியமானதும் விசித்ரமும் மிக்கபெருக்கத்தையுடையதுமான (தோற்றத்தை) உபஸம்ஹாரம் செய்தார்.

பிறகு, அவர், ஸாத்யகியையும் விதுரரையும் கையிற்பிடித்துக் கொண்டு, அந்தமுனிவர்களால் அனுமதிகொடுக்கப்பட்டவராகி வெளிப்புறப்பட்டார். பிறகு, நாரதர்முதலான அந்தமுனிவர்கள் மறைந்து சென்றார்கள். நடந்ததான அந்தக்கோலாகலத்தில், அது ஆச்சரியமாயிருந்தது. அவர் புறப்பட்டதைப் பார்த்து, கௌரவர்கள், மற்ற அரசர்களோடு, தேவர்கள் இந்திரனுக்குப் பின்தொடர்ந்ததுபோல, புருஷஸ்ரேஷ்டரான அவரைப் பின்தொடர்ந்தார்கள். அளவற்ற ரூபத்தையுடையவரான சௌரியானவர் அந்த எல்லா அரசர்களின் கூட்டத்தையும் பாராதவராகப் புகையுடன்கூடிய அக்கினிபோல் அங்கிருந்தும் வெளியே நடந்தார். பிறகு, சுத்தமானதும் பெரிதும் மணிகள் கட்டப்பட்டதும் பொன்னுபரணங்களால் விசித்திரமானதும் லகுவானதும் மேகம்போலச் சப்திக்கின்றதும் சுத்தமான புலித்தோலால் மறைக்கப்பட்டதும் நல்ல உபகரணங்களோடுகூடியதும் சைப்யம் ஸுக்ரீவமென்கிற குதிரைகள் பூட்டப்பட்டதுமான தேருடன் தாருகன் எதிரில் காணப்பட்டான். அப்படியே, மஹாரதனும் விருஷ்ணிகளில் ஒப்புக்கொள்ளப்பட்ட வீரனும் ஹ்ருதிகபுத்ரனுமான கிருதவர்மாவும் தேரிலேறிக்கொண்டு காணப்பட்டான்.

பகைவர்களைத் தண்டிப்பவரும் தேரிலேறிக்கொண்டு புறப்பட்டவருமான கிருஷ்ணரைநோக்கி, மறுபடியும், திருதராஷ்டிர மஹாராஜன், 'ஓ! பகைவர்களை வாடச்செய்பவரே! ஜனார்த்தனரே! நீர் பார்த்திருக்கையில், புத்திரர்விஷயத்தில் எனக்குள்ள பலம் முழுமையும் உமக்குப் பிரத்யக்ஷம். உமக்கு ஒன்றும் மறைவானதில்லை. ஓ! கேசவரே! நான் கௌரவர்களுடைய சமாதானத்தைவிரும்பி முயலும்போது எனக்குண்டான இந்த அவஸ்தையை அறிந்தபடியால், நீர் என்னிடம் அதிக ஸந்தேகத்தைக்கொள்ளலாகாது. ஓ! கேசவரே! பாண்டவர்களைக்குறித்து எனக்குக் கெட்ட அபிப்பிராயமானது

இல்லை. துர்யோதனனுக்கு நான்சொன்ன நன்மையான வார்த்தையை அறியவேசெய்கிறீர். ஓ! மாதவரே! நான் எல்லாப்பிரயத்தனத்தாலும் ஸமாதானத்தில் முயன்றதைக் கௌரவர்களும் உலகிலுள்ள எல்லா அரசர்களுமே அறிவார்கள் ' என்று சொன்னான்.

பிறகு, நீண்டகைகளுள்ள ஜனார்த்தனர், திருதராஷ்டிரனையும் துரோணரையும் பிதாமஹரானபீஷ்மரையும் விதுரரையும் பாஹ்லிகனையும் கிருபரையும் நோக்கி, 'கௌரவர்களுடையசபையில் இப்பொழுது நடந்ததானது உங்களுக்குப் பிரத்யக்ஷம். மந்தனான துர்யோதனன் இப்பொழுது நற்பழக்கமில்லாதவன்போலக் கோபத்தால் கிளம்பினதும் பிரத்தியக்ஷம். திருதராஷ்டிரராஜர் தம்மைச் சாமர்த்தியமில்லாதவராகச் சொல்லுகிறார். உங்களெல்லாரிடத்திலும் கேட்டுக்கொள்கிறேன். யுதிஷ்டிரரிடம் செல்லுகிறேன் ' என்றார். ஓ! புருஷச்ரேஷ்டரே! சொல்லிக்கொண்டு புறப்பட்டவரும் தேரிலிருப்பவருமான அவரை, பெரியவிற்பிடித்து மிக்கவீரர்களான பரதச்ரேஷ்டர்களும் பீஷ்மர், துரோணர், கிருபர், விதுரர், திருதராஷ்டிரன், பாஹ்லிகன், அச்வத்தாமா, விகர்ணன், மகாரதனான யுயுத்ஸு ஆகிய இவர்களும் பின்தொடர்ந்தார்கள். பிறகு, அந்த வாஸுதேவர் கௌரவர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே, சுத்தமானதும் பெரிதும் மணிகள் கட்டப்பட்டதுமான தேரிலேறி அத்தையான குந்தியைப் பார்ப்பதற்குச் சென்றார்.

## நூற்றுமுப்பத்திரண்டாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(கிருஷ்ணன் குந்தியையவணங்கி ஸபையில்நடந்ததைச் சொல்லியதும், அவள் யுதிஷ்டிரருக்குச் செய்தி சொல்லியதும்.)

பிறகு, ஸ்ரீவாஸுதேவர், அவளுடைய கிரகத்தில்புகுந்து பாதங்களில்வணங்கி, கௌரவர்களுடையசபையில் நடந்ததைச் சுருக்கமாகச் சொல்லினர். அவர், ' அவசியம் ஏற்றுக்கொள்ளத்தக்கனவும் காரணத்துடன்கூடினவுமான பலவிதவார்த்தைகள் என்னாலும் முனிவர்களாலும் சொல்லப்பட்டன. அந்தத்துரியோதனன் அவ

ற்றை ஏற்றுக்கொள்ளவில்லை. இந்தக்ஷத்திரியஜாதிமுழுதும் காலத்தால் பக்குவமாகித் துர்யோதனனுடையவசத்தை அடைந்திருக்கிறது. க்ஷத்திரியஜாதி முழுதும் அர்ஜுனனாகிற அக்னியினால் கணப்பொழுதினுள்ளே எரிக்கப்படப்போகிறது. உன்னிடம் சொல்லிக்கொள்ளுகிறேன். சீக்கிரம் பாண்டவர்களிடம் செல்லுவேன். அந்தப்பாண்டவர்களிடம் உன்னால் சொல்லப்பட்டதென்று நான் என்ன சொல்லவேண்டும்? அதனைச்சொல்லு. பெரிய அறிவுள்ளவளே! உன்னுடையவார்த்தையைக் கேட்கவிரும்புகிறேன்' என்றார்.

குந்தி சொல்லுகிறாள்: 'கேசவ! தர்மாத்மாவான யுதிஷ்டிரராஜனைநோக்கிச் சொல்லக்கடவாய். 'புத்திரா! உனக்குப் பெரிய தர்மமானது குறைந்துபோகிறது. அதனை வீணாகச் செய்யாதே. அரசனே! உன்னுடைய புத்தியானது, அத்தியயனம்செய்தவனும் அதன் பொருளையறியாதவனுமான அவித்வானுடைய வேதாக்ஷரங்களின்உருவினால் நஷ்டமான புத்தியைப்போலத் [1]தர்மமொன்றையே பார்க்கிறது. அப்பா! நீ ப்ரம்மாவினால் தர்மம் எப்படி படைக்கப்பட்டதென்று நன்கு பார். க்ஷத்திரியர்கள் எந்நாளும் பிரஜைகளைப் பரிபாலிப்பதினிமித்தம் குரூரமான கர்மத்திற்காகக் கைவன்மையை அடுத்துப்பிழைப்பவர்களாகக் கைகளிலிருந்தும் படைக்கப்பட்டார்கள். இந்தவிஷயத்தில் என்னால் பெரியோர்களிடமிருந்து கேட்கப்பட்ட ஓர் உதாரணத்தைக் கேள். முன்காலத்தில் குபேரனானவன் முசுகுந்தனென்கிற ராஜரிஷியினிடம் பிரீதியையடைந்தவனாகி இந்தப் பூமியைக்கொடுத்தான். 'புஜபலத்தால் சம்பாதிக்கப்பட்ட ராஜ்யத்தை அனுபவிக்கவிரும்புகிறேன்' என்றுசொல்லி, அவன் அதைப் பெற்றுக்கொள்ளவில்லை. அதனால், குபேரன் பிரீதியடைந்து ஆச்சரியமுற்றவனானான். பிறகு, அந்தமுசுகுந்தராஜன் க்ஷத்திரிய தர்மத்தை நன்கு பின்பற்றிக் கைவன்மையால் ஸம்பாதிக்கப்பட்ட பூமியை ஆண்டான்.

பாரத! பிரஜைகள் அரசனால் நன்கு காக்கப்பட்டுச் செய்புந்தர்மத்தில் நான்கிலொன்றை அரசன் அடைவான். அவன் தர்மத்தை அனுஷ்டித்தால் தேவத்தன்மையையே அடைவான். அவன் அதர்மத்தை அனுஷ்டித்தால் நரகத்திற்கே செல்லுவான். தண்டநீதியானது, நான்குவர்ணங்களையும் அதன் அதன் தர்மத்தால் அடக்குகிறது; தலை

1 ஒரேதர்மத்தை யென்றும் கொள்ளலாம்.

வனுல் நன்கு செலுத்தப்பட்டால் (நான்கு வர்ணங்களையும்) அதர்மங்களிலிருந்தும் விலக்குகிறது. எப்பொழுது அரசன் தண்ட நீதியை முழுதும் நன்கு செலுத்துகிறுனோ அப்பொழுது கிருதயுகமென்கிற சிறந்த காலமானது நடைபெறுகிறது. காலம் அரசனுக்குக் காரணமோ அரசன் காலத்துக்குக் காரணமோவென்கிற ஸந்தேகம் உனக்கு வேண்டாம். அரசனே காலத்திற்குக் காரணம். அரசன் கிருதயுகத்தையும் திரேதாயுகத்தையும் துவாபரயுகத்தையும் உண்டுபண்ணுகிறவனும் நான்காவதுயுகத்திற்குக்காரணமுமாகிறுன். அரசன் கிருதயுகத்தைச் செய்வதால் ஸ்வர்க்கத்தை முடிவின்றி அனுபவிக்கிறுன். திரேதாயுகத்தைச் செய்வதால் ஸ்வர்க்கத்தை முடிவுள்ளதாக அனுபவிக்கிறுன். த்வாபரயுகத்தை நடத்துவதால் பாகப்படி அனுபவிக்கிறுன். அரசன் கலியுகத்தை நடத்துவதால் மிகுந்த பாவத்தை அடைகிறுன்; பிறகு, கெட்ட செய்கையுடையவனுகிப் பலவருஷங்கள் நரகத்தில் வஸிக்கிறுன். அரசனுடையகுற்றத்தால் உலகம் பற்றப்படுகிறது. அரசனும் உலகத்தின் குற்றத்தால் பற்றப்படுகிறுன். தந்தைபாட்டன்மார்களுக்குரிய உசிதமான ராஜதர்மங்களைப் பார்க்கக்கடவாய். நீ இருக்க விரும்புகிற இது ராஜஸ்ரேஷ்டர்களுடைய நடையில்லையன்றோ? மனத்தளர்ச்சியுற்றவனும் வதம்செய்யாமலிருப்பதில் நிலையுள்ளவனுமாயிருப்பவன் பிரஜைகளைக் காப்பதாலுண்டான ஒருபயனையும் அடைந்தவனுகானன்றோ? நீ எந்தப் புத்தியால் நடக்கிறுயோ இதனை முன் உனக்குப் பாண்டுவும் நானும் பிதாமஹரானபீஷ்மரும் ப்ரார்த்திக்கவில்லை. என்றலே, எந்நாளும் யாகமும் தானமும் தவமும் சௌர்யமும் ஸந்தானமும் பெருமையும் பலமும் ஊக்கமும் எந்நாளும் ஸ்வாஹாகாரமும் எந்நாளும் ஸ்வதாகாரமும் உன்னிடம் உண்டாகவேண்டுமென்று பிரார்த்திக்கப்பட்டன. மனிதர்களும் தேவர்களும் நன்கு ஆராதிக்கப்பட்டு ஸந்தோஷத்தை அடைந்தால், நீண்டஆயுளையும் தனத்தையும் புத்திரர்களையும் அளிப்பார்கள். தந்தைதாயர்களும் தேவர்களும் எந்நாளும் புத்திரர்கள் விஷயத்தில் பிரார்த்தனையைச்செய்கின்றுர்கள். தானம் அத்தியயனம் யாகம் பிரஜைகளின் பரிபாலனம் என்பன தர்மமானுலும் அதர்மமானுலும், பிறவியினுலேயே இவற்றுக்காக உண்டானவனுயிருக்கிறுய். குழந்தாய்! வித்வான்களும் நல்லகுலத்தில் பிறந்தவர்களுமான அப்படிப்பட்ட நீங்கள் விருத்தியில்லாமையால் பீடிக்கப்பட்டிருக்கிறீர்கள். எந்த இடத்தில் பசியடைந்த உலகத்தோர்கள் தானத்

திற்குப்பதியான சூரனையடுத்து ஸந்தோஷத்தையடைந்து நிலைத்திருக்கின்றார்களோ அதைக்காட்டிலும் அதிகமான தர்மம் எது? இவ்வுலகில் ராஜ்யத்தையடைந்து தர்மவானாயிருப்பவன் கொடையினால் சிலரையும், வலிமையினால் மற்றும் சிலரையும், பிரியமான உண்மைமொழியினால் வேறுசிலரையுமாக எல்லாரையும் வசம் செய்யவேண்டும். பிராம்மணன் பிக்ஷையையேற்கொள்ளவேண்டும். க்ஷத்திரியன் பரிபாலிக்கவேண்டும். வைசியன் பொருள்தேடுதலைச் செய்யவேண்டும். சூத்திரன் அவர்களுக்குப் பணிசெய்யவேண்டும். உனக்குப் பிக்ஷையானது தடுக்கப்பட்டிருக்கிறது; கிருஷியானது சிறிதும் ஒவ்வாது. கெடுதலிலிருந்தும் காப்பவனும் கைவன்மையால் பிழைப்பவனுமான க்ஷத்திரியனாயிருக்கிறாய். புஜபலமமைந்தவனே! முழுகிப்போனதான பிதாவின்பாகத்தை, ஸாமத்தினாலோ பேதத்தினாலோ தானத்தினாலோ தண்டத்தினாலோ நீதியினாலோ திரும்பத் தூக்கிஎடு. மித்திரர்களைச் சந்தோஷிக்கச் செய்கிறவனே! 'நான் உன்னைப்பெற்று ஏழைகளான பந்துக்களை உடையவளாகிப் பிறர் கொடுக்கும் பிண்டத்தை எதிர்பார்க்கிறேன்' என்பதைக்காட்டிலும் பெரிதான துக்கம் ஏது? ராஜதர்மத்தைக்கொண்டு யுத்தம்செய். பிதாமஹர்களை முழுகச் செய்யாதே. நீ புண்ணியம் நசித்தவனாகித் தம்பிமார்களுடன் பாவத்தாலுண்டான கதியை அடையாதே.

---

## நூற்று முப்பத்துமூன்றாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(குந்தி யுதிஷ்டிரரைத் தூண்டுதற்காக விதுலோபாக்யானத்தைக் கிருஷ்ணன்மூலம் தெரிவித்தது.)

பகைவரை எரிப்பவனே! இந்தவிஷயத்திலும் விதுலைக்கும் அவளுடைய மகனுக்கும் நடந்த ஸம்வாதரூபமான பழைய இந்தச் சரித்திரத்தைச் சொல்லுகின்றார்கள். அதனைக்கேட்டபிறகு, மிகச் சிறந்ததும் மிகஅதிகமுமான அதனை நீ உள்ளபடி சொல்லவேண்டும். விதுலையென்பவள், நல்லகுலத்தில் பிறந்தவளும் புகழ்பெற்றவளும் [1] கோபத்தையுடையவளும் வக்கிரமான தன்மையுடையவளும் க்ஷத்திரிய தர்மத்தில் பற்றுள்ளவளும் அடக்கமுள்ளவளும் மிக்க அறி

---

1 'மன்யுமதி' என்பது மூலம்; 'தைன்யமுற்றவள்' என்பது பழையஉரை.

வுடையவளும் அரசர்களுடைய சபைகளில் பிரஸித்திபெற்றவளும் (விசாரிக்கவேண்டிய) வாக்கியங்களை விசாரித்தவளும் மிகக் கற்றவளுமாயிருந்தாள். ராஜமஹிஷியான அவள், ஸிந்துதேசத்தரசனால் ஜயிக்கப்பட்டவனும் தீனமானமனத்தையுடையவனும் படுத்திருப்பவனுமான தன் சொந்தப் புத்திரனை நிந்தித்தாள்.

அவள், 'இழிவான மகனே! என்னிடம்பிறந்தவனே! பகைவருக்கு மகிழ்ச்சியை வளர்ப்பவனே! நீ எனக்கும்உனதுதந்தைக்கும் பிறக்கவில்லை. எங்கிருந்தோ வந்திருக்கிறாய். கோபமில்லாதவனும் எண்ணிக்கையில் சேர்க்கத் தகாதவனும் பலமில்லாத [1] ஸாதனத்தையுடையவனுமான புருஷனாகி ஆயுள் காலமெல்லாம் வெறுப்படைந்தவனாயிருக்கிறாய். க்ஷேமத்தை அடைவதற்காகச் சுமையைப் பொறுக்கக்கடவாய். உன்னை அவமானம் செய்துகொள்ளாதே. இந்தச் சரீரத்தை அல்பத்தன்மையால் காப்பாற்றாதே. நீ பயப்படாதே. மனத்தை மிக்கதைர்யமுள்ளதாகச்செய்து பயத்தைத் தள்ளு. எதிர்த்துக் கொல்லு. கெட்டபுருஷனே! எழுந்திரு. ஜயிக்கப்பட்டவனும் எல்லாப்பகைவரையும் மகிழ்விப்பவனும் சுற்றத்தாருக்குத் துயரத்தைக்கொடுக்கிறவனும் மானமிழந்தவனுமாகி இவ்விதம் படுத்துக்கொள்ளாதே. எளிதில் நிரம்புகின்ற சிறுநதியும் எளிதில் நிரம்புகின்ற எலியின் சேரங்கையும் எளிதில் மகிழ்கின்ற அற்பமனிதனும் மிகச்சொல்பத்தினாலேயே ஸந்தோஷிக்கின்றனர். பாம்பின் பல்லைக்குத்தி வருத்துகிறவனாவது சீக்கிரம் மரணத்தையடை; அல்லது, உயிரில் ஸந்தேகத்தைவைத்துப் பராக்ரமத்தையாவது செய்; அல்லது, நீ ஆகாயத்தில் பயமின்றி மௌனமாய்ப் பகையை எதிர்த்துச்செல்லுகின்ற பருந்துபோல (ஜயத்திற்குரிய உபாயத்தைத்தேடிக்கொண்டு) பகைவனுடைய இடைவெளியைப் பார்க்கக்கடவாய். நீ வஜ்ராயுதத்தால் அடிக்கப்பட்டவன்போலவும் பிணம்போலவும் ஏன் இப்படி படுத்திருக்கிறாய்? கெட்டமனிதனே! எழுந்திரு. பகைவனால் வெல்லப்பட்டவனாகித் தூங்காதே. நீ ஏழையாய் மறைதலையடையாதே. உன்செயலால் புகழை அடையக்கடவாய். நடுத்தரத்திலும் பின்தரத்திலும் கீழ்த்தரத்திலும் ஏற்படாதே. கர்ஜிக்கிறவனாயிரு. திந்துகக்கட்டையின் கொள்ளிபோல ஒருமுகூர்த்த நேரமாவது ஜ்வலிக்கக்கடவாய். ஜீவிக்க விருப்பமுள்ளவனாகி உமிக்காந்தல் போல ஜ்வாலையில்லாமல் புகையாதே. ஒரு முகூர்த்த காலமாவது மூண்டெரிவது சிறந்தது. நெடுங்காலம்

1 'தோள்முதலியஉறுப்புக்கள்' என்பது பழையவுரை.

புகைவது சிறந்ததன்று. ஓர் அரசனுடைய மாளிகையிலும் பெண் கழுதைபோல மிருதுவான புத்திரன் உண்டாகவேண்டாம். பண்டிதனானவன் மனிதனுக்குரிய செயலைச்செய்து மேலானயுத்தம் வரையில் சென்று தர்மத்தின்கடனை நிவ்ருத்திசெய்கிறான்; தன்னை நிந்தித்துக்கொள்ளுகிறதில்லை; பயனை அடைந்தாலும் அடையாவிட்டாலும் சோகத்தை அடைகிறதில்லை; இடைவிடாமல் முயலுகிறான்; பிராணனைத் தனத்தைப்போல நினைக்கிறதில்லை. வீர்யத்தையாவது மேலாகச்செய்; அல்லது, நிலையானகதியையாவது அடை. புத்திர! தர்மத்தை முன்னே வைத்துக்கொண்டு, எதன் நிமித்தமாக ஜீவிக்கிறாயோ? வீர்யமில்லாதவனே! உன்னுடைய இஷ்டாபூர்த்தமும் ஸகலமான கீர்த்தியும் கெட்டுவிட்டன. உன்னுடையபோகத்திற்கு மூலமானது அறுந்துவிட்டது. எதன் நிமித்தமாக ஜீவிக்கிறாயோ? முழுகுகிறவனேனும் விழுகிறவனேனும் பகைவனைக் கணைக்காலில் பிடிக்க வேண்டும். மூலமறுபட்டவனானாலும், ஒருவிதத்தாலும், வருத்தத்தை அடையக்கூடாது. நல்லஜாதியான அச்வத்தின்செய்கையை நினைத்துக்கொண்டு, வில்லையெடுத்து இழுக்கவேண்டும். பலத்தையும் மானத்தையும் கைப்பற்றக்கடவாய். உனது ஆண்தன்மையை அறியக் கடவாய். உன்னிமித்தமாக முழுகினகுலத்தை நீயே மேலேவரச்செய்யக்கடவாய். மனிதர்கள் எவனுடைய நடையைப் பெரிதாகவும் ஆச்சரியமாகவும் சொல்லவில்லையோ, அவன் கூட்டத்தைப் பெருக்குகிறவனாகமாத்திரம் ஆவான். அவன் பெண்ணும்ஆகான்; ஆணுமாகான். எவனுக்குத் தானத்திலும் தவத்திலும் சத்தியத்திலும் வித்தையிலும் தனலாபத்திலும் புகழானது கிளம்பவில்லையோ, அவன் தாயினுடைய மலமே. கல்வியினாலோ தவத்தினாலோ செல்வத்தினாலோ பராக்கிரமத்தினாலோ தன்செய்கையினால் இதரஜனங்களை ஜயிக்கிறவனன்றோ ஆண்பிள்ளையாவான்? மூடத்தன்மையாலுண்டானதும் குரூரத்தன்மையுள்ளதும் அபகீர்த்திக்குக் காரணமும் துக்கத்தைக் கொடுப்பதும் கெட்டமனிதர்களுக்குத் தக்கதுமான ஓட்டில் இரந்துண்ணுதற்கு நீ தக்கவனேஅல்லை. இளைத்தவனும் உலகத்தால் மிக அவமதிக்கப்பட்டவனும் மிக்கஇழிவான வஸிக்குமிடங்களையும் ஆடைகளையுமுடையவனும் பகைவர்களுடைய மகிழ்ச்சிக்குக் காரணமானவனும் அற்பலாபத்திலும் மிக்கலாபம் கிடைத்துவிட்டதாகப் பெருமிதம் பாராட்டுகிற இழிவானவனும் அற்பமான பிழைப்பையுடையவனும் அல்பனுமான அப்படிப்பட்ட ஓர் உறவினனை அடைந்து அவன் சுற்றத்தான் இனிது செழிக்க மாட்டான். நாம்

ராஜ்யத்தைவிட்டு வெளியாகி எல்லாவிஷயஸுகங்களுமிழந்து இருப்பிடம்நழுவித் தரித்திரர்களாய்ப் பிழைப்பில்லாமலே ஆபத்தையடையப்போகிறோம். [1] ஸஞ்சய! ஸத்துக்களிடத்தில் கெட்ட கார்யத்தைச் செய்வதும், இந்தக்குலத்தை நாசம்செய்வதுமான கலிரூபமான உன்னைப் புத்திரனென்கிறபெயரினால் பெற்றேன். ஒரு ஸ்திரீயும், பொறுமையில்லாதவனும், ஊக்கமில்லாதவனும் வீர்யமில்லாதவனும் பகைவரைமகிழ்விப்பவனுமான இப்படிப்பட்ட புத்திரனைப் பெறவேண்டாம். புகையாதே; நன்கு ஜ்வலிக்கக்கடவாய். பகைவரின் கூட்டங்களை ஆக்ரமித்துக் கொல்லு. ஒரு முகூர்த்தமாவது ஒருக்ஷணமாவது, பகைவருடைய தலையில் ஜ்வலிக்கக் கடவாய். 'பொறுமையுள்ளவன், க்ஷமிக்காதவன்' என்கிற இவ்வளவே புருஷன். க்ஷமையுள்ளவனும் பொறுமையில்லாதவனுமாயிருப்பவன் பெண்ணுமல்லன்; ஆணுமல்லன். மகிழ்ச்சியும், அப்படியே, தயையும் செல்வத்தைக் கெடுக்கின்றன. [2] முயற்சியில்லாமை பயமிரண்டும் செல்வத்தைக் கெடுக்கின்றன. [3] ஆசையில்லாதவன் பெரியபதவியை அடைகிறதில்லை. பகைவராலுண்டான அவமானமாகிய இந்தத்தோஷங்களிலிருந்தும் உன்னை நீயே விடுவித்துக் கொள். மனத்தை இரும்பாகச்செய்து மறுபடியும் செல்வத்தைத் தேடு. பிறனென்கிறசத்துருவைப் பொறுக்காமையால் புருஷனென்று சொல்லப்படுகிறான். இவ்வுலகில் பெண்போலப் பிழைப்பவனை ஆண்பிள்ளை என்று வீணானபெயரையுடையவனாகச் சொல்லுகின்றார்கள். சூரனும் மனவுறுதியுள்ளவனும் சிங்கம்போலப் பராக்கிரமத்துடன் திரிபவனுமானவன் மரணத்தையடைந்தாலும், அவனுடைய தேசத்திலுள்ள குடிகள் ஸந்தோஷிக்கின்றன. எவன் தன்னுடைய பிரியத்தையும் ஸுகத்தையும் தள்ளிவிட்டுத் தனத்தைத் தேடுகிறானோ அவன் அதனால் சீக்கிரம் மந்திரிகளுக்கு மகிழ்ச்சியை உண்டுபண்ணுகிறான்' என்றாள்.

அப்பொழுது, புத்திரனானவன், '(நான் யுத்தத்தில் இறந்துவிட்டால்) என்னைப்பாராதவளான உனக்கு எல்லாப்பூமியினாலும் என்ன பயன்? ஆபரணத்தாலுண்டான பயனென்ன? போகங்களால்என்ன

---

1 'நன்குஜயிப்பவன்' என்பதுபொருள்.

2 'அநுத்தானம்' என்பது மூலம்; 'எதிர்த்துச்செல்லாமை' என்பது பழையவுரை.

3 'நிரீஹ:' என்பது மூலம். 'நிச்சேஷ்ட:' என்பது பழையவுரை; முயற்சியில்லாதவன்' என்பது அதன்பொருள்.

பயன்? உயிரால்தான் என்னபயன்?' என்றான். தாயானவள், 'பகைவரால் அடிக்கப்பட்டவனுக்கு உயிராலேயும் என்னபயன்? கோபமில்லாதவர்களுடைய உலகங்களை (=போக்கிய வஸ்துக்களை) பகைவர்கள் அடைவார்கள். முயற்சியை மேற்கொள்பவர்களுக்குரிய உலகங்களை நம்முடைய நண்பர்கள் அடையட்டும். வேலைக்காரர்களால் விடப்பட்டவர்களும் பிறருடைய பிண்டத்தையடுத்துப் பிழைப்பவர்களும் ஏழைகளும் பலமற்றவர்களுமாயிருப்பவர்களுடைய பிழைப்பைப் பின்பற்றாதே. அப்பா! பிராணிகள் மேகத்தையும் தேவர்கள் இந்திரனையும் அடுத்துப்பிழைப்பதுபோலப் பிராம்மணர்களும் நண்பர்களும் உன்னையடுத்து ஜீவிக்கட்டும். ஸஞ்சய! எல்லாப்பிராணிகளும், பழுத்தமரத்தையடைந்து பிழைப்பதுபோல, எந்தமனிதனை அடைந்து பிழைக்கின்றனவோ, அவனுடையபிழைப்புப்பயனுள்ளது. தேவர்கள் இந்திரனுடைய பராக்கிரமங்களாலே ஸுகமாக வளர்வதுபோல, எந்தச் சூரனுடைய பராக்கிரமங்களாலே உறவினர் ஸுகமாகச் செழிக்கின்றனரோ அவனுடையபிழைப்பு இவ்வுலகில்சிறந்தது. எந்தமனிதன் தன்னுடைய தோள்வலிமையையடுத்துப் பிழைக்கிறானோ அவன் இவ்வுலகில் புகழையும் பரலோகத்தில் சுபமான கதியையும் அடைகிறான்.

---

## நூற்றுமுப்பத்துநான்காவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

### (விதுலோபாக்யானத் தொடர்ச்சி.)

இந்தநிலையில், முயற்சியை விட விரும்புகிறாயானால் விரைவில் மிக்கஇழிவானவனால்அடையப்பட்ட வழியை அடைவாய். எந்தக்ஷத்திரியன் உயிரில் ஆசையுள்ளவனாகிச் சக்திக்குத்தக்கபடி பராக்கிரமத்தினால் வல்லமையைக் காண்பிக்கவில்லையோ, அவனைத் திருடனென்றே நினைக்கின்றனர். பொருளுடையவைகளும் பொருத்தமானவைகளும் குணமுள்ளவைகளுமான வார்த்தைகள், மரிக்கப்போகிறவனை மருந்து அடையாததுபோல, உன்னை அடையவில்லை. உன்னைச்சேர்ந்தவர்கள் முயற்சிசெய்து பலவிடமிருந்தும் உதவியை விருத்திசெய்தும் உன்னிடம் ஆண்மையைக்காணாமல் முயற்சி பயன் இல்லாமையால்அவர்கள்பகைவரையே அடுப்பார்கள். ஸிந்துராஜனைச் சேர்ந்த ஜனங்கள் அவ்வித மகிழ்ச்சியை அடைந்தவர்களாக இல்லை.

மூடர்களான அவர்கள் பலமின்மையினால் அவனுக்குத் துன்பங்களின் தொகுதிகளை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்களுடன் சேர்ந்து ஸமயத்தில் (பகைவரின்) துக்கத்தை எதிர்பார்க்கிறவனாகி, மலைகளும் காடுகளுமாகிற இருப்பிடத்தில் ஸஞ்சாரம் செய். 'உன்னுடைய 1 பகைவன் மூப்புச்சாக்காடில்லாதவனன்று.' நீ ஸஞ்சயன் (= நன்கு ஜயிப்பவன்) என்று பெயர் கொண்டவனாயிருக்கிறாய். உன்னிடத்தில் நான் அதனைக் காணவில்லை. எனது புத்திரனே! பொருளுள்ள பெயருடையவனாகக் கடவாய்; வீணான பெயருடையவனாகக் கூடாது. நீ சிறுவனாயிருந்தபொழுது, நல்ல அறிவுடையவரும் மஹாப்ராஜ்ஞருமான ஒரு பிராம்மணர், 'இவன் பெரிய ஸங்கடத்தை அடைந்து மறுபடியும் செழிப்பை அடைவான்' என்று சொன்னார். அவருடைய வார்த்தையை நினைத்து உனக்கு வெற்றியை வேண்டுகிறேன். குழந்தாய்! ஆகையினால், உனக்குச்சொல்லுகிறேன்; அடிக்கடி சொல்லவும் செய்வேன். எவனுக்கு அர்த்தம் நிறைவேறின பொழுது பிறர் திருப்தி அடைவிக்கப்பட்டவர்களாகின்றனரோ, அர்த்தத்தை அனுஸரிக்கின்றவனான அவனுக்கு நீதிகளில் 2 அர்த்தத்தின் ஸித்தியானது தவறாது. ஸஞ்சய! 'முன்னோருக்கும் எனக்கும் செல்வமோ வறுமையோ யுத்தத்தினால்தான்' என்று இதனை அறிந்தவனாகி யுத்தத்தில் மனமுடையவனாகக் கடவாய். யுத்தத்தை நிறுத்திவிடாதே. எந்த நிலைமையில், இன்றைக்கும் நாளைப் பொழுது விடிந்தும் (= தினந்தோறும்), போஜனமானது காணப்படுகிறதில்லையோ, இதைக்காட்டிலும் மிகக்கெட்டதான ஒரு நிலைமையையும் சம்பரன் சொல்லவில்லை. இதனை, பதியின்மரணம் புத்திரனுடைய மரணம் இவைகளைக்காட்டிலும் பெரிய துக்கமாகச் சொன்னான். வறுமையென்று சொல்லப்படுவது மரணத்திற்குப் பிரதியாயுள்ளதன்றோ? நான் பெரிய குலத்தில் பிறந்து, ஒரு மடுவிலிருந்தும் மற்றொருமடுவை அடைவதுபோல, (இந்தக்குலத்தை) அடைந்து தலைவியும் எல்லா மங்களங்களோடுங்கூடினவளும் கணவரால் நன்கு ஆதரிக்கப்பட்டவளுமானவள். முற்காலத்தில், அன்பர்களுடைய ஸமூகமானது, நான் மிக்கவிலைகொண்ட மாலைகளையும் ஆபரணங்களையும் உடையவளும், மிகவும் சுத்தமான ஆடையுடுத்தவளும் சுற்றங்களையுடையவளுமாயிருப்பதை ஸந்தோஷத்துடன் பார்த்தது. ஸஞ்சய! எப்பொழுது என்னையும் உன்மனைவியையும்

1 'அயம்' என்பது மூலம்; 'இந்தச் சரீரம்' என்றும் கொள்ளலாம்.

2 'செல்வம் பெருகுதலும் அதன் பயனும் உண்டாகும்' என்பது.

மிகவும் வலிமையற்றவர்களாகப் பார்ப்பாயோ, அப்பொழுது, உன்னுடைய உயிர்வாழ்க்கையால் பயனுண்டாகாது. பணிவிடை செய்கின்ற வேலைக்காரர்களும் ஆசார்யர்களும் ரித்விக்குக்களும் புரோஹிதர்களும் நாங்களும், பிழைப்பில்லாமையால், உன்னை விட்டவர்களாயிருப்பதைப்பார்த்து நீ ஜீவித்திருப்பதில் என்ன பயன்? நான் முன்போல இப்பொழுது கொண்டாடத்தக்கதும் புகழை அளிப்பதுமான உன்னுடைய கார்யத்தைப்பார்க்கவில்லையானால், என் மனத்திற்கு ஆறுதல் ஏது? ஒரு பிராம்மணனை நோக்கி, 'இல்லை' என்று சொல்லுவேனானால், என்னுடைய இருதயம் பிளந்துபோம். நானும் என்னுடையபர்த்தாவும் ஒரு பிராம்மணனை நோக்கி 'இல்லை' என்று சொன்னதில்லை. நாங்கள் அடுக்கத்தக்கவர்களாயிருந்தோம். பிறருடைய கட்டளையைக்கேட்கிறவர்களாயிருக்கவில்லை. பிறரை அடுத்துப் பிழைக்கநேர்ந்தால், நான் உயிரை விடுவேன். கரையில்லாத விஷயத்தில் எங்களுக்குக் கரையாகக்கடவாய். ஓடமில்லாத விஷயத்தில் ஓடமாகக் கடவாய். இடமில்லாத சமயத்தில் இடத்தை உண்டாக்கு. செத்தவர்களான எங்களைப் பிழைக்கச்செய். நீ உயிர் பிழைத்திருக்க விரும்பாமலிருப்பாயானால் உனக்குப் பகைவரும் எல்லாம் வெல்லத்தக்கவராவார்கள். அல்லது, இப்படிப்பட்ட இழிவான பிழைப்பை அடைகிறாயானால், ஒழிவடைந்த சித்தமுள்ளவனும் ஸங்கற்பமிழந்தவனுமாவாய். கெட்டதான இந்தப் பிழைப்பை விடு. சூரனானவன் ஒருபகைவனைக் கொன்றதனாலேயே புகழை அடைகிறான். இந்திரனானவன் விருத்திரனைக் கொன்றதனாலேயே மஹேந்திரனானான்; மாஹேந்திரமென்கிற [1] ஸோமக்ரஹத்தையும் அடைந்தான்; உலகங்களுக்குத் தலைவனுமானான். எப்பொழுது ஒருவீரனானவன் யுத்தத்தில் தன்பெயரைக்கேட்பித்து, கவசம்பூண்ட பகைவர்களை அழைத்துச் சேனையின் முன்னணியையும் ஓடச்செய்து, சிறந்த வீரனையும் கொன்று, நல்ல யுத்தத்தினால் பெரியபுகழை அடைகிறானோ அப்பொழுதே அவனுடைய பகைவர் துன்பத்தை அடைகின்றனர்; வணங்கவும் செய்கின்றனர். இழிந்தவர்களான ஜனங்கள் தம்வசமற்று யுத்தத்தில் தேகத்தைவிட்டுத் திறமைவாய்ந்த சூரனை எல்லாக்காமங்களுடைய நிறைவுகளாலும் திருப்தியடையச்செய்கின்றனர். திறமைவாய்ந்தவர்கள் எதிர்த்துவந்த

---

1 ஸோமயாகத்தில், இது ஒருபாத்ரவிசேஷம். இது இந்திரனுக்கு உரியது. வ்ருத்ரவதம் செய்ததற்காக இது அவனுக்கு அதிகமாகக் கொடுக்கப்பட்டது.

பகைவனுக்கு உக்ரமான நழுவுதலுடைய ராஜ்யமோ உயிரின்சந்தேகமோ மிச்சம்வைப்பதில்லை. ஸ்வர்க்கவாயிலுக்கு நிகராகவோ, அல்லது, அமிருதத்திற்கு நிகராகவோ இருக்கிற ராஜ்யம் பகைவரால் பிடிக்கப்பட்டதை நினைத்து ஒரே மார்க்கமாகப் பகைவர்களிடத்தில் கொள்ளிபோல விழக்கடவாய். அரசனே! யுத்தத்தில் பகைவரைக் கொல்லு. ஸ்வதர்மத்தைக் காப்பாற்று. மிக்களிமை அடைந்தவனும் பகைவர்களுக்குப் பயத்தைப்போக்குபவனும் துக்கிக்கின்ற நம்மவர்களாலும் கர்ஜிக்கின்ற பகைவர்களாலும் சூழப்பட்டவனுமாக உன்னை நான் பார்த்ததில்லை. மேலும், நீ தீனனைக்காட்டிலும் தீனன் போலிருப்பதை நான் பார்க்கக்கூடாது. ஸௌவீரதேசத்துக் கன்னிகைகளுடன் ஸந்தோஷிக்கக்கடவாய். முன்போலத் தனங்களாலே புகழப்படுதலை அடையக்கடவாய். மனத்தளர்ச்சியடைந்து ஸிந்துதேசத்துக் கன்னிகைகளுடைய வசத்தை அடையாதே. தருணனும் ரூபத்தையும் வித்தையையும் நல்லகுலத்தையுமுடையவனும் புகழுடையவனும் உலகத்தில் பிரசித்திபெற்றவனுமான உன்னைப்போன்றவன், தாங்கவேண்டிய சமயத்தில், அடங்காதகாளை ஓடுவதுபோல, ஓடுவதென்பது மரணமென்றே நினைக்கிறேன். நீ பகைவனுக்கு இன்சொல் சொல்வதையோ, பின் செல்வதையோ நான் பார்த்தேனானால் என் மனத்திற்கு ஆறுதல் ஏது? அப்பா! மற்றொருவனுக்குப் பின்செல்லுகிறவன் ஒருகாலும் இந்தக்குலத்தில் பிறந்ததில்லை. பிறருக்குப் பின்செல்லுகிறவனான நீ பிழைக்கத்தக்கவனில்லை. நானோ எல்லாவிதத்திலும் ஒரேவிதமும் முன்னோர்களாலும் முன்னோர்களுக்கு முன்னோர்களாலும் 1 பிந்தினவர்களாலும் 2 பிந்தினவர்களுக்கும் பிந்தினவர்களாலும் சொல்லப்பட்டதும் சாச்வதமும் அழிவற்றதும் ப்ரம்மாவினால் நிர்மாணம் செய்யப்பட்டதுமான 3 க்ஷத்ரஹ்ருதய (மௌன்ஜிறமந்திர) த்தை அறிவேன். இந்தவம்சத்தில்பிறந்து க்ஷத்திரியதர்மத்தை அறிந்த க்ஷத்திரியனொருவனும் பயத்தினாலோ பிழைப்பைக்கருதியோ இவ்வுலகில் ஒருவனுக்கும் வணங்கான். (ஆகையால், நீ) முயலவேண்டும்.

1 'பரை:' என்பதுமூலம்; 'வேறுகுலத்திற்பிறந்தவர்கள்' என்பது பழையவுரை.

2 'பரதரை:' என்பதுமூலம்; 'முதியோர்கள்' என்பது பழையவுரை.

3 'க்ஷத்ரஹ்ருதயம்' என்பதுமூலம்; 'க்ஷத்திரியர்களுக்குரிய தர்மம்; அல்லது, கடமை' என்பது இங்கிலிஷ்மொழிபெயர்ப்பு.

வணங்கக்கூடாது. முயற்சியேயன்றோ ஆண்மை? [1] கணுவிடத்தில் முறிபட்டாலும் படலாம்; இவ்வுலகில் ஒருவனையும் வணங்கக்கூடாது; பெரிய மனத்தையுடையவனாகி மதங்கொண்ட யானைபோல ஸஞ்சரிக்கவேண்டும். ஸஞ்சய! தர்மத்திற்காகவே எந்நாளும் பிராம்மணர்களை வணங்கவேண்டும். ஸஹாயமுடையவனாயினும் ஸஹாயமில்லாதவனாயினும், மற்றவர்ணங்களைச் சிக்ஷிப்பவனும் தீயசெயலைச் செய்பவர்களெல்லாரையும் கொல்லுகிறவனுமாக உயிருள்ளவரையில் அப்படியே இருக்கவேண்டும்' என்றாள்.

---

நூற்று முப்பத்தைந்தாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

### (விதுலோபாக்யானத் தொடர்ச்சி.)

மகன்சொல்லுகிறான்: 'ஓ! எனது மாதாவே! கருணையில்லாதவளே! வீரனைக்குறித்து நன்கு தெரிந்துகொண்டவளே! பொறுதவளே! உன்னுடைய மனமானது உருக்கையுருட்டிச் செய்யப்பட்டதுபோல இருக்கிறது. அந்தோ! க்ஷத்திரியஜாதியின் நடையானது எவ்விதம் இருக்கிறது! நீ என்னைப் பிறனைப்போல யுத்தத்திற்கு ஏவுகிறதனாலும் ஒருவனாகப்பிறந்த என்னை நோக்கிப் பிறனுடைய மாதாவைப்போல இப்படிப்பட்டவார்த்தையைச் சொல்லுகிறபடியாலும், என்னைப் பாராதவளானஉனக்கு எல்லாப்பூமியினாலும் என்ன பயன்? அதிகப்பிரியமுள்ள புத்திரனான நான் யுத்தத்தில் கொல்லப்பட்டபோது, ஆபரணமணிவதாலும் போகங்களாலும் உயிரினாலுமே என்னபயன்?' என்றான்.

தாய் சொல்லுகிறாள்: 'குழந்தாய்! ஸஞ்சய! வித்வான்களுக்கு எல்லாநிலைமைகளும் தர்மார்த்தங்களின்நிமித்தமன்றோ? நான் அவைகளையே கருதி உன்னை ஏவினேன். இதோ பராக்கிரமத்தைக் காண்பிக்கத்தக்க ஸமயம் வந்திருக்கிறது. இவ்விதஸமயம் வந்திருக்கையில், நீ காரியத்தைச்செய்யாமல், கருணையை அடைவாயானால் மிக்கஅவமதிப்பை அடைவாய். ஸஞ்சய! அபகீர்த்தியால் பற்றப்பட்டவனான அப்படிப்பட்ட உன்னை நோக்கி, நான் அன்பினால் சொல்லாமலிருந்தேனேயானால், அதைக் கழுதையினுடைய அன்ஸாமர்த்தியமில்லாததும் காரண

---

1 அகாலத்திலென்பது கருத்து.

மற்றதும் ஸாதுக்களால் நிந்திக்கப்பட்டதும், மூடர்களால் அடையப்பட்டதுமான நெறியை விட்டுவிடு. மனிதர்கள் பற்றியிருக்கின்ற [1] அவித்தையோ பெரிதாயிருக்கிறது. உனக்கு நல்லநடை ஏற்படுமேயானால், தர்மார்த்தங்களுடைய குணத்துடன்கூடினதும், தெய்வகர்மம் அதிதிபூஜைமுதலான மனுஷ்யகர்மங்களுடன்கூடினதும் ஸத்துக்களால் அநுஷ்டிக்கப்பட்டதுமான அதனால் எனக்குப் பிரியனாவாய். மற்றதனால் எவ்விதமும் பிரியனாக மாட்டாய். எவன் வணக்கமில்லாத புத்திரபௌத்திரர்களோடு மகிழ்கிறானோ, எவன் முயற்சியில்லாதவனும் அடக்கமில்லாதவனும் கெட்ட புத்தியுள்ளவனுமான புத்திரனோடு மகிழ்கிறானோ, அவனுக்குப் புத்திரனாலுண்டான பயனானது வீண். நல்வினைகளைச் செய்யாதவர்களும் நிந்திக்கப்பட்ட வினைகளைச் செய்கிறவர்களுமான இழிவான மனிதர்கள் இம்மையிலும் மறுமையிலும் ஸுகத்தை அடையார்கள். ஸஞ்சய! இவ்வுலகில் க்ஷத்திரியனானவன் போருக்கும் வெற்றிக்கும் எந்நாளும் குரூரமானசெயலுக்கும் பிரஜைகளைக் காப்பதற்குமாகப் படைக்கப்பட்டான். அவன் ஜயத்தை அடைந்தாலும் கொல்லப்பட்டாலும் இந்திரனுக்கு ஸமமான லோகத்தை அடைவான். க்ஷத்திரியன் பகைவரை வசம்செய்து ஸுகமாக வளர்ச்சியடைவதிலுண்டான ஸுகமானது ஸ்வர்க்கத்தில் பரிசுத்தமான இந்திரனுடைய மாளிகையிலுமில்லை. ஸஞ்சய! கோபத்தால் எரிக்கப்பட்டவனும் மானமுடையவனும் பலமுறை அவமதிக்கப்பட்டவனுமான மனிதன் இவ்வுலகில் பகைவரைக்குறித்து 'வெல்லவேண்டும்' என்கிற விருப்பத்தினாலே எதிர்த்துச்செல்லவேண்டும். சரீரத்தைவிட்டும் பகைவனைக்கொன்றுமே எந்நாளும் சாந்தியானது [2] அடையப்படுகிறது. இதைத்தவிர, மற்றவிதத்தால் ஸமாதானமானது எப்படி ஏற்படும்? இவ்வுலகில் அறிவுள்ளவனான மனிதன் அற்பஐஸ்வர்யத்தை அநிஷ்டமாக நினைக்கிறான். எவனுக்கு உலகத்தில் அற்பமானது பிரியமாயிருக்கிறதோ அவனுக்கு (அந்த) அல்பம் துன்பத்தைச்செய்கிறது; நிச்சயம், மனிதன், விரும்பினதை அடையாவிட்டால், நன்மையை அடைவதேயில்லை; நிச்சயமாக, ஸமுத்திரத்தையடைந்த கங்கைபோல நாசத்தையடைகிறான்' என்றனள்.

மகன், 'தாயே! நீ இவ்விதபுத்தியைச் சொல்லக்கூடாது. அதிலும், புத்திரனிடம் (சொல்லவேகூடாது). நீ ஜடம்போலவும் ஊமை

---

1 'ஆத்மாவல்லாததை ஆத்மாவாக நினைப்பது' என்பது பழையவுரை

2 வேறுபாடம்.

போலவுமாகிக் கருணையையே பார்' என்றான். தாயானவள், 'எந்தக்காரணத்தால் நீ இவ்விதம் ஆலோசிக்கிறாயோ அதனால் எனக்கு அதிகமான செல்வத்தின் நிறைவேஉண்டாகும். நீ என்னை நோக்கி இந்தக்கேள்வியைக் கேட்கிறாய். ஆனாலும், நான் உன்னை அதிகமாக ஏவுகிறேன். ஸிந்துதேசத்தாரெல்லாரையும் கொன்றபிறகே, உன்னை மதிப்பேன். உனக்கு வெற்றியானது கஷ்டப்பட்டு உண்டாகப்போ நான நினைக்கிறேன' என்றாள.

மகன், 'பொக்கசமில்லாதவனும் ஸஹாயமற்றவனுமான எனக்குக் கார்யஸித்தி ஏது? வெற்றி ஏது?' என்று இவ்விதம் என்னிடம் இருக்கிற கடுமையான இந்த அவஸ்தையை நானாகவே அறிந்து, தீவினையைச் செய்தவனுடைய எண்ணமானது ஸ்வர்க்கத்திலிருந்தும் திரும்புவதுபோல, என்னுடையஎண்ணமானது ராஜ்யத்திலிருந்தும் திரும்பிவிட்டது. அறிவிற்சிறந்தவளே! நீ இவ்விதமான ஓர் உபாயத்தை ஆலோசிக்கிறாயானால், அதைக் கேட்கிறவனான எனக்கு நன்றாகச்சொல்லு. நீ கட்டளையிட்டபடி அதை யெல்லாம் செய்வேன்' என்றான்.

தாய், 'புத்திரா! முன்னுண்டான குறைகளாலே தன்னை அவமதித்துக்கொள்ளக்கூடாது. அர்த்தங்களோ, முன்னில்லாமலிருந்து உண்டாகின்றன. [1] சில அர்த்தங்கள் உண்டாகியும் அழிகின்றன. மிகவும் சிறுதன்மையுள்ளவர்கள் குறையைப்பொறாதவர்களாகவே அர்த்தங்களைத்தொடங்காமலிருக்கின்றனர். அப்பா! [2] எல்லாக்கர்மங்களும் பயனில் எந்நாளும் நிலையற்றவைகளாயிருக்கின்றன. நிலையற்றவையென்று அறிகின்றவர்கள் பிரவிருத்தியில் பற்றுகிறதுமில்லை; பற்றவும் செய்கின்றார்கள். ஆனால், எவர்கள் கர்மாவைச்செய்யவில்லையோ அவர்கள் ஒருகாலும் (பயனுடையவர்களாக) ஆகிறதேயில்லை. முயற்சியில் விருப்பமில்லாமலிருப்பதில் கர்மாக்களின்பயனில்லாமற்போவது ஒருகுணமே. முயற்சியை விரும்புவதில், 'பயன்நேரிட்டாலும் நேரிடலாம்; நேரிடாமலும்போகலாம்' என்று இரண்டு குணங்களிருக்கின்றன. ராஜபுத்திரனே! எவன் எல்லா அர்த்தங்களையும் நிலையற்றவையாக முந்தியே அறிந்தவனோ, அவன் விரோதமான [3] குறைவையும் செழிப்பையும் கருதாமல் தள்ளிவிடுவான். ஐஶ்வரியத்திற்குரிய கர்

1 'உண்டாகியிருந்தவைகளோ நசிக்கின்றன' என்றுமாம்.

2 'எல்லாக்கருமங்களின் பயனும் எந்நாளும் நிலைத்ததன்று' என்றுமாம். 3 'தன்னுடையபீடையையும் பிறனுடைய ஐஶ்வர்யத்தையும் நாசம் செய்வான்' என்பது.

மங்களில் பயனுண்டாகுமென்றே மனத்தைச்செலுத்தி எப்பொழுதும் துன்பமில்லாமல் மங்களகாரியங்களையும் பிராம்மணர்களையும் தேவர்களையும்முன்னிட்டு ஊக்கத்தையடையவேண்டும். விழித்திருக்கவேண்டும். முயற்சி செய்யவும்வேண்டும். புத்திர! அறிவிற் சிறந்த அரசனுக்கு விரைவில் செழிப்பானது உண்டாகின்றது. சூரியன் சுற்றிக்கொண்டு கிழக்குத்திக்குக்கு வருவதுபோல அவனை நோக்கி லக்ஷ்மியானவள் சுற்றிக்கொண்டுவருகிறாள். அனேகம் உதாரணங்களையும் உபாயங்களையும் வெற்றிகளையும் உனக்கு நான் நன்கு எடுத்துக் காட்டினேன். ஆண்மையைச்செலுத்து; பார்ப்போம். இவ்வுலகில் விரும்பப்பட்ட புருஷார்த்தத்தைத் தேடவேண்டியவனாகிறாய். கோபத்தை அடைந்தவர்களையும் லோபிகளையும் க்ஷீணதசையையடைந்தவர்களையும் கர்வத்தையடைந்தவர்களையும் அவமதிக்கப்பட்டவர்களையும முரண்படுபவர்களையும் முயற்சியுடன் உன்பக்கத்தில் சேர்த்துக்கொள். நீ, இந்தமுறையினால், மிக்க வேகத்துடன் கிளம்பின காற்றானது மேகங்களைக் கலைப்பது போலப் பெரியகூட்டங்களைக் கலைப்பாய். அவர்களுக்கு முன்னதாகக் கொடுப்பவனும் அவர்களின் நன்மைகளில் முயன்றவனும் பிரியத்தைச் சொல்லுகிறவனுமாகக் கடவாய். அவர்கள், உன்னை அன்பனாகச் செய்துகொள்வார்கள்; முன்னேயும் வைப்பார்கள். இது நிச்சயம். சத்துருவானவன், எப்பொழுது விரோதியை உயிரை வெறுத்தவனாக அறிகிறானோ அப்பொழுதே வீட்டிலிருக்கிற ஸர்ப்பத்தினிடம் (நடுங்குவது) போல இவனிடம் நடுங்குகிறான். இவனைப் பராக்ரமத்தைச் செலுத்துகிறவனென்று அறிந்து, தன்வசமாகச் செய்யாமலிருப்பானானால் இவனைத் தூதர்களால் ஸமாதானஞ்செய்வான். முடிவாகச் சத்துருவை வசம்செய்வதாய் அது ஏற்படும். ஸமாதானத்தால் நிலையான இருப்பை அடைந்து செல்வச்செழிப்பை உடையனாவான். தனவானையோ மித்திரர்கள் வணங்குகின்றனர்; அடுக்கவும் செய்கின்றனர். தனமிழந்தவனையோ நண்பர்களும் உறவினர்களும் மிகவும் தள்ளிவிடுகிறார்கள்; அவனை அடுக்கிறதுமில்லை; அப்படிப்பட்டவனை இகழவும் செய்கின்றனர். எவன் பகைவனைத் துணைவனாகச்செய்துகொண்டு அவனிடம் நம்பிக்கையைவைக்கிறானோ அவன் ராஜ்யத்தை அடைவானென்பது நினைக்கத்தக்கதேயில்லை.

---

## நூற்று முப்பத்தாறாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

### (விதுலோபாக்கியானத் தொடர்ச்சி.)

அரசன், ஒருபொழுதும், ஓர் ஆபத்திலும் பயத்தை அடையக் கூடாது; அல்லது, பயமடைந்தவனானாலும், பயமடைந்தவன்போல இருக்கக்கூடாது. பயமடைந்த அரசனைப் பார்த்தோ, ராஜ்யமும் சைன்யமும் மந்திரிகளுமாகிய எல்லாருமே பயத்தை அடைகின்றனர். அவர்கள் தனித்தனியான எண்ணங்களைக் கொள்ளுகிறார்கள். சிலர் பகைவரை அடைகின்றனர். சிலரோ தம் அரசனை விட்டுவிடுகிறார்கள். முன் அவமதிக்கப்பட்ட மற்றவர்களோ அடிக்க விரும்புகிறார்கள். மிக்க நண்பர்களும் சக்தியில்லாதவர்களுமானவர்கள், கன்றுகள் கட்டப்பட்ட பசுக்கள்போல, இவனைச் சுற்றியிருக்கிறார்கள்; துக்கிக்கிறவனான அரசனை, பதிதர்களானபந்துக்களைப்போல, அனுஸரித்துத் துக்கிக்கின்றனர். எவர்கள், அரசன் விசனத்தை அடைந்தபொழுது, ராஜ்யத்தை அபிமானிக்கின்றனரோ அவர்கள் முன்பு பூஜிக்கப்பட்டவர்களும் நண்பர்களுமாகக் கருதப்பட்டனர். ஆகையால், நீ பயந்தையடையாதே. பயந்தவனான உன்னை நண்பர்கள் தள்ளவேண்டாம். நான் உன்னுடைய பெருமையையும் ஆண்மையையும் புத்தியையும் அறிய விரும்பி உனக்குத் தேறுதலைச்செய்து (உனக்குப்) பராக்ரமம் விருத்தியடைவதின் பொருட்டுச் சொன்னேன். ஸஞ்சய! இதனை, நானும் நன்றாகச் சொல்லுகிறேனானால், நீயும் நன்கு அறிகிறாயானால், உன்னை மனக்கலக்கமற்றவன்போலச் செய்துகொண்டு, ஜயத்தின்பொருட்டுக் கிளம்பு. நமக்குப் பெரிதான பொக்கசத்தின் சமூகமானது இருக்கிறது. அது உன்னால் அறியப்படவில்லை. அதனை நான் அறிவேன்; மற்றவர் அறியார். நான் அதனை உனக்கு விரைவில் ஸம்பாதித்துக் கொடுப்பேன். வீர! ஸஞ்சய! உனக்கு, இன்பதுன்பங்களைப்பொறுப்பவர்களும் யுத்தத்திலிருந்தும் திரும்பாதவர்களுமான மிகப்பல நண்பர்கள் இருக்கின்றனர். பகைவரைவாட்டுகிறவனே! அப்படிப்பட்ட துணைவர்களோ, பிழைப்பை விரும்புகிறவனும் ஓர் இஷ்டத்தை ஸம்பாதிக்க விரும்புகிறவனுமான மனிதனுக்கு உதவிசெய்கின்றவர்கள்' என்றாள். மிகவும் விசித்திரமானபொருளுள்ளசொற்களையும் எழுத்துக்களையுமுடைய அவளுடைய இவ்வாறான வார்த்தையைக்

கேட்டு, மிகவும் அற்பமான அறிவுடையவனாக இருந்தும், அவனுடைய மயக்கமானது விலகிற்று.

மகன் சொல்லுகின்றான்: '[1] வரப்போகிற ஐஸ்வர்யத்தைத் தெரிவிக்கிறவளான நீ என்னை நடத்துகிறவளாயிருந்தலால், ஜலத்தில் முழுகிப்போனதுபோன்ற இந்தப்பூமியை எடுப்பேன்; அல்லது, யுத்தத்தில் உயிரையாவது விடுவேன். நானோ, மேல்மேல் உன்னுடைய வார்த்தையைக் கேட்கும் விருப்பத்தால், அடிக்கடி சிறிது சிறிது தடுத்துச் சொல்லிக்கொண்டு கஷ்டப்பட்டுப் பந்துவினிடமிருந்தும் அடையப்பட்ட அமிர்தத்திற்போலத் திருப்தியடையாதவனாகி,மௌனமாயிருந்தேன். இதோ, பகைவரைச்சிக்ஷித்து வெற்றிபெறுவதன் பொருட்டுக் கிளம்புகிறேன்' என்றான். அவன், நல்லகுதிரைபோல ஏவப்பட்டு, சொற்களாகிற அம்புகளால் குத்தப்பட்டவனாகி,அவற்றையெல்லாம் கட்டளையிட்டபடி செய்தான்.

ஊக்கத்தையளிப்பதும் பயங்கரமும் பலத்தை விருத்திசெய்வதும் உத்தமமுமான இதனை, மந்திரியானவன், பகைவரால் பீடிக்கப்பட்டவனும் மனக்கலக்கம் அடைந்தவனுமான அரசனைக்கேட்கச் செய்ய வேண்டும். ஜயத்தை விரும்புகிறவன், 'ஜயம்' என்கிற இந்த இதிஹாஸத்தைக் கேட்கவேண்டும். இதைக்கேட்டால், விரைவில் பூமியை வெல்லுவான்; பகைவர்களையும் கொல்லுவான். இது [2] பும்ஸவனமாகவும் வீரனைப் பிரஸவிக்கச்செய்வதாகவும் இருக்கிறது. கர்ப்பிணியானவள் இதனை அடிக்கடி கேட்டால் வீரனைப் பெறுவாளென்பது நிச்சயம். (இதைக்கேட்ட) க்ஷத்ரிய ஸ்திரீயானவள், வித்தையில் சூரனும் தவத்தில் சூரனும் தானத்தில் சூரனும் சிறந்ததவமுடையவனும் பிரம்மசோபையால் விளங்குகிறவனும் நல்லவனென்கிற வார்த்தைக்கு விஷயமானவனும் காந்தியுள்ளவனும் பலத்தையுடையவனும் மிக்க செல்வமுள்ளவனும் மஹாரதனும் தைர்யமுள்ளவனும் நெருங்க முடியாதவனும் வெல்லுபவனும் வெல்லப்படாதவனும் துஷ்டர்களை அடக்குகிறவனும் தர்மத்தைச் செய்பவர்களைக் காப்பவனும் தவறாத பராக்ரமமுடையவனுமான இப்படிப்பட்ட வீரனைப்பெறுவாள்' என்றாள்.

1 வேறுபாடம்

2 புத்திரனைப்பெறச் செய்யும் கிரியை.

## நூற்று முப்பத்தேழாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(குந்தி கிருஷ்ணனிடம் அர்ஜுனன் முதலானவர்களுக்குச் சொல்லவேண்டியவற்றைத் தெரிவித்ததும், கிருஷ்ணன் கர்ணனோடு ரதத்தில் ஏறி அவனோடு வழியில் ரஹஸ்யமாகச் சம்பாஷித்து அவனை அனுப்பிவிட்டுத் தாம் உபப்லாவ்யம் சென்றதும்.)

குந்தி, 'கேசவ! அர்ஜுனனை நோக்கிச் சொல்லக்கடவாய்: 'நீ பிறந்தபொழுது, பிரஸவ அறையில் ஆஸ்ரமத்திலுள்ள மாதர்களால் சூழப்பட்டவளாகி ஸமீபத்தில் உட்கார்ந்திருந்தேன். அப்பொழுது, ஆகாயத்தில், 'ஓ! குந்தி! உன்னுடைய இந்தப் புத்திரன் இந்திரனுக்கு நிகராவான். இவன் யுத்தத்தில் எதிர்த்துவந்தவர்களான எல்லாக் கௌரவர்களையும் வெல்லுவான். பீமஸேனனைத் துணையாகக்கொண்டு பகைவர்களைக் கலங்கச் செய்வான். உன்னுடைய இந்தப் புத்திரன் பூமியை வெல்லுவான். இவனுடையபுகழ் ஸ்வர்க்கத்தைத் தொடும். வாஸுதேவரைத் துணையாகக்கொண்டு போரில் கௌரவர்களைக் கொன்று நஷ்டமான பிதாவின்பாகத்தை மறுபடியும் அடைவான். ஸ்ரீமானான இவன் உடன்பிறந்தார்களுடன்கூடி மூன்று (அஸ்வ) மேதங்களை ஸம்பாதிப்பான்' என்று திவ்யரூபமாயும் மனோஹரமாயுமிருக்கிற வாக்கு உண்டாயிற்று' (என்று சொல்லு). அச்சுத! ஸத்யஸந்தனும் இடக்கையாலும் அம்புகளைத் தொடுப்பவனுமான அந்த அர்ஜுனன் பலவானும் நெருங்கமுடியாதவனுமாயிருப்பதை உள்ளபடி நீயே அறிகிறாய். வார்ஷ்ணேய! ஆகாயவாக்குச் சொல்லியது சொல்லியபடியே ஆகவேண்டும். வார்ஷ்ணேய! தர்மமானது இருக்குமேயானால் அப்படியே ஸத்யமாக ஆகும். கிருஷ்ண! நீயும் அவையெல்லாவற்றையும் அப்படியே அடையச்செய்வாய். ஆகாயவாக்கானது சொல்லியதைப்பற்றி நான் [1] அஸூயையை அடையவில்லை. பெரிதானதர்மத்திற்கு நமஸ்காரம். தர்மமானது பிரஜைகளைத் தரிக்கின்றது. இதைத் தனஞ்சயனிடம் சொல்லவேண்டும். எந்நாளும் முயற்சியுள்ளவனான வ்ருகோதரனிடத்தில், 'க்ஷத்ரியஸ்திரீயானவள் எதற்காகப் பிள்ளைகளைப் பெறுகிறாளோ, அதற்குரியகாலம் இதோ வந்துவிட்டது. புருஷஸ்ரேஷ்டர்கள், பகை

1 'ஸந்தேகிக்கவில்லை' என்பது கருத்து.

யுண்டானால், வருத்தப்படுகிறதில்லையன்றோ?' என்று சொல்ல வேண்டும். பீமனுடைய கருத்தும் எப்பொழுதும் உனக்குத் தெரிந்தேயிருக்கிறது. அவன் ஆறுதலை அடையான். விரோதிகளை இளைக்கச் செய்கிறவனும் மிக்கதோள்வலி அமைந்தவனுமான அவன் பகைவரை அழிக்கும்வரையில் ராத்ரிகளில் ஸுகத்தை அடையவே மாட்டான். ஓ! மாதவ! க்ருஷ்ண! எல்லாத்தர்மங்களையும் விசேஷமாக அறிந்தவளும் மஹாத்மாவானபாண்டுவினுடைய மருமகளும் சுபமானவளும் புகழ்பெற்றவளுமான க்ருஷ்ணையினிடத்தில், 'ஓ! மஹா பாக்யமுடையவளே! நல்ல குலத்திற் பிறந்தவளே! புகழ் பெற்றவளே! நீ என்னுடைய புத்ரர்கள் எல்லாரிடத்திலும் அவரவர்களுக்குத் தக்கபடி இருந்தாயென்பது உசிதம்' என்று சொல்லு. க்ஷத்ரிய தர்மத்தில் பற்றுள்ளவர்களான மாத்ரியின் புத்திரர்கள் இருவர்களிடத்திலும், 'உயிரைக்காட்டிலும் பராக்ரமத்தாற் சம்பாதிக்கப்பட்ட போகங்களை விரும்புங்கள். புருஷோத்தமரே! க்ஷத்ரியனுக்குரிய தர்மத்தால் ஜீவிக்கிற மனிதனுடைய மனத்தைப் பராக்ரமத்தால் தேடப்பட்ட பொருள்களல்லவோ மகிழ்விக்கின்றன. எல்லாத்தர்மங்களையும் வளர்க்கின்றவர்களான நீங்கள் பார்த்திருக்கும்பொழுது, பாஞ்சாலியை நோக்கிச் சொன்ன கடுமையான வார்த்தைகளை எவன் பொறுக்கத்தக்கவனாவான்? எனக்கு, ராஜ்யத்தைக் கவர்ந்துகொண்டதும் சூதாட்டத்தில்தோல்வியடைந்ததும் புத்திரர்களைக் காட்டிற்குத் துரத்தினதும் துக்கத்தை உண்டாக்கவில்லை. 'பெருந்தன்மையுடையவளும் தருணவயதுள்ளவளுமான அவள் அப்பொழுது ஸபையில் அழுதுகொண்டு கடுமையான வார்த்தைகளைக் கேட்டாள்' என்பதே எனக்குப்பெரிதான துக்கம். வீட்டுக்கு விலக்கானவளும் சிறந்த இடையையுடையவளும் எப்பொழுதும் க்ஷத்ரிய தர்மத்தில் பற்றுள்ளவளும் சிறந்தவர்களான நாதர்களையுடையவளும் பதிவ்ரதையுமான க்ருஷ்ணையானவள் அப்பொழுது நாதனை அடையவில்லை' என்று சொல்லவேண்டும். ஓ! நீண்டகைகளுள்ளவனே! விற்பிடித்தவர்களெல்லாரிலும் சிறந்தவனும் புருஷச்ரேஷ்டனுமான அந்த அர்ஜுனனிடத்தில், 'த்ரௌபதியினுடைய வழியில் நட' என்று சொல்லக்கடவாய். பீமார்ஜுனர்கள், சினமடைந்த யமனும் அந்தகனும்போலத் தேவர்களையும் பரகதியை அடையச் செய்வார்கள் என்பது உனக்கு நன்கு தெரியுமன்றோ? அவர்களிடத்தில், அந்தக் க்ருஷ்ணையானவள் ஸபையை அடைந்தாளென்கிற இந்த அவமானத்தையும், குருவீரர்கள் பார்த்திருக்கையில், துச்சாஸனன்

பீமனைநோக்கிச் சொன்ன கடுமையான வார்த்தைகளையும் திரும்ப நினைக்கச்செய். ஓ! ஜனார்த்தன! புத்திரர்களோடும் கிருஷ்ணையோடுங் கூடின பாண்டவர்களிடம் குசலத்தை வினவக்கடவாய். அவர்களிடம் நான் க்ஷேமமாயிருக்கிறேனென்று அடிக்கடி சொல்லு. கெடுதலில்லாத வழியை அடையக்கடவாய். என் புத்திரர்களைக் காக்கக்கடவாய்' என்றாள்.

பிறகு, நீண்ட கைகளையுடையவரும் சிங்கத்தினுடைய நடைபோன்ற விளையாட்டு நடையையுடையவருமான கோவிந்தர், அவளை வணங்கி ப்ரதக்ஷிணமும் செய்துவிட்டு, அங்கிருந்து வெளிவந்தார்; பிறகு, பீஷ்மர் முதலான குருஸ்ரேஷ்டர்களை அனுப்பினார்; பிறகு, கர்ணனை ரதத்திலேற்றிக்கொண்டு, ஸாத்யகியுடன் புறப்பட்டார். கேசவர் அவ்விடம்விட்டுச் சென்றபிறகு, கௌரவர்கள் சேர்ந்து, அவரிடத்திலுள்ள பெரிதான ஆச்சரியத்தை ஒருவரோடொருவர் மிக அற்புதமாகப் பேசிக்கொண்டார்கள். 'பூமியானது முழுமையும் மிக்க அறியாமையால் மிருத்யுபாசத்தின்வசத்தை அடைந்துவிட்டது. துர்யோதனனுடைய மூர்க்கத்தனத்தினால் இந்த ராஜ்யம் இல்லையென்று போய்விட்டது' என்று சொன்னார்கள்.

புருஷோத்தமரானவர், அந்த நகரத்திலிருந்தும் வெளிவந்து, புறப்பட்டார்; அப்பொழுது, கர்ணனோடு நெடுநேரம் ஆலோசனை செய்தார். எல்லா யாதவர்களுக்கும் ஸந்தோஷத்தைச் செய்கிறவரான கண்ணபிரான், கர்ணனை அனுப்பிய பிறகு, மிக்க வேகத்துடன், சீக்கிரம் குதிரைகளை ஓட்டினார். வேகமுள்ள அந்தக் குதிரைகள் தாருகனால் நன்கு தூண்டப்பட்டு ஆகாயத்தை விழுங்குவனபோல வாயுவேக மனோவேகமாக நடந்தன. அவைகள் விரைந்து செல்லுகின்ற பருந்துகள்போல நீண்ட வழியை விரைவிற்கடந்து சார்ங்கமென்கிற வில்லைப்பிடித்த கண்ணபிரானைச் சுமந்துகொண்டு உயர்வான உபப்லாவ்யநகரத்தை அடைந்தன.

## நூற்று முப்பத்தெட்டாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(குந்தியினுடைய வார்த்தையைக்கேட்டுப் பீஷ்மத்ரோணர்கள் துரியோதனனைப் பாண்டவர்களுடன் ஸமாதானம் செய்துகொள்ளும்படி வற்புறுத்திச் சொல்லியது.)

குந்தியினுடையவார்த்தையைக்கேட்டு, மஹாரதர்களானபீஷ்மரும் த்ரோணரும், கட்டளையைக்கடந்த துரியோதனனை நோக்கிப் பின்வரும் வாக்யத்தைச் சொல்லலானார்கள். 'ஆண்மையிற்சிறந்தவனே! கிருஷ்ணருடைய ஸந்நிதியில் பயனுள்ளதும் மிகவும் உக்கிரமானதும் தர்மத்தைவிட்டு விலகாததும் மிகச்சிறந்ததுமாகக் குந்தியினால் சொல்லப்பட்ட வார்த்தையை நீ கேட்டாயா? கௌரவ! குந்தியின் புத்திரர்கள் வாஸுதேவருக்குச் சம்மதமான அதைச் செய்யப் போகிறார்கள். அவர்கள் ராஜ்யமின்றி ஒருபொழுதும் தணிதலை அடையார்கள். அப்பொழுது, சபையில், பார்த்தர்களும் த்ரௌபதியும் தர்மமாகிற பாசத்தால் கட்டப்பட்டு உன்னாலே துன்பம் உண்டு பண்ணப்பட்டார்களல்லவா? உன்னுடைய அந்தக்குற்றமும் அவர்களால் பொறுக்கப்பட்டது. அஸ்திரங்களைப்பயின்றவனான அர்ஜுனனையும் நிச்சயத்தைச் செய்தவனான பீமஸேனனையும் காண்டீவத்தையும் அம்பறாத்தூணிகளையும் (அழிவற்ற) ரதத்தையும் வானரக் கொடியையும் பலத்தோடும் வீர்யத்தோடுங்கூடிய நகுல ஸஹதேவர்களையும் வாஸுதேவரான ஸஹாயத்தையும் அடைந்து யுதிஷ்டிரன் பொறுத்திருக்கமாட்டான். ஓ! சிறந்த கைகளையுடையவனே! முன்பு, விராடநகரத்தில் புத்திமானான அர்ஜுனனாலே எல்லாரும் யுத்தத்தில் ஜயிக்கப்பட்டோமென்பது உனக்கு நேரில் தெரியும். வானரக்கொடியையுடைய அவனாலே, யுத்தத்தில் கோரமான செய்கையுடைய நிவாதகவசர்களென்கிற அஸுரர்கள் [1] பாசுபதாஸ்திரத்தை எடுத்து எரிக்கப்பட்டார்கள். கோஷயாத்திரையில், கர்ணன் முதலான இவர்களும் கவசமும் தேருமுடைய நீயும் விடுவிக்கப்பட்டீர்கள். இது போதுமான உதாரணம். பரதஸ்ரேஷ்டனே! ப்ராதாக்களான பாண்டவர்களோடு சமாதானத்தைச் செய்துகொ

1 'ரௌத்ரம்' என்பது மூலம்; 'க்ரூரமான' என்பது இங்கிலீஷ் மொழி பெயர்ப்பு.

ண்டு மிருத்புவின் கோரப்பல்லிடுக்கில் அகப்பட்ட இந்தப்பூமிமுழுமையையும் காப்பாற்று. யுதிஷ்டிரன், உனக்குத் தமையனும் தர்மத்தைச் சீலமாகக்கொண்டவனும் அன்போடுகூடினவனும் இன்சொல்லையுடையவனும் வித்வானுமாயிருப்பவன். இப்பொழுது, கெட்ட எண்ணத்தை விட்டு, ஆண்மையிற் சிறந்தவனான அவனை அடையக் கடவாய். நீ வில்லை வைத்துவிட்டுப் புருவங்களை நெரிக்காதவனாகிப் பாண்டவனால் பார்க்கப்படுவாயானால், அது நமது குலத்திற்குச் சாந்தி செய்யப்பட்டதாகும். பகைவரை அடக்குபவனே! முன்போல மந்திரிகளுடன் ராஜபுத்திரனும் அரசனுமான அவனை அடைந்து ஆலிங்கனம்செய்துகொண்டுஅபிவாதனம்செய்யக்கடவாய். பீமனுக்கு முன் பிறந்தவனும் குந்தியின்புத்திரனுமான யுதிஷ்டிரன், நமஸ்காரம் செய்கிறவனான உன்னை ஸ்நேகத்தினால் கைகளால் பிடிக்கட்டும். சிங்கத்தினுடைய தோள்களும் தொடைகளும் கைகளும் போன்ற தோள்களையும் தொடைகளையும் கைகளையுமுடையவனும், உருண்டு நீண்ட பெரிய புஜங்களையுடையவனும், அடிப்பவர்களிற் சிறந்தவனுமான பீமனானவன் உன்னைக்கைகளால் தழுவிக்கொள்ளட்டும். பிறகு, சங்குபோன்ற கழுத்தையுடையவனும் சுருண்டகேசத்தையுடையவனும் தாமரைமலர்கள்போன்ற கண்களையுடையவனும் குந்திபுத்திரனும் பார்த்தனென்று பெயர் பெற்றவனுமான தனஞ்சயன் உன்னை வணங்கட்டும். அச்வினிதேவர்களுடைய புத்திரர்களும் புருஷச்ரேஷ்டர்களும் ரூபத்தினால் பூமியில் நிகரற்றவர்களுமான அந்த நகுலஸஹதேவர்களும் குருவைப்போல உன்னை அன்புடன் பூஜித்து எதிர்கொள்ளட்டும். அரசனே! மாதவர்முதலான அரசர்கள் ஆனந்தக்கண்ணீரைச் சொரியட்டும். பிராதாக்களுடன் சேரு. அகங்காரத்தை விடு. அதைவிட்டு, நீ பிராதாக்களுடன் பூமிமுழுவதையும் ஆளு. அரசர்கள் ஸந்தோஷத்தால் ஒருவரையொருவர் தழுவிக்கொண்டு போகட்டும். ராஜச்ரேஷ்டனே! சண்டைவேண்டாம். நண்பர்கள் தடுப்பதைக் கேள். யுத்தத்திலேயோ நிச்சயமாக க்ஷத்ரியர்களுக்கு அழிவானது காணப்படுகிறது. கிரகங்கள் விபரீதமாயிருக்கின்றன. மிருகங்களும் பக்ஷிகளும் குரூரமாயிருக்கின்றன. வீர! க்ஷத்ரியர்களை அழிக்கின்ற பலவித உத்பாதங்கள் காணப்படுகின்றன. விசேஷமாக இங்கே நம்முடைய அழிவிலே நிமித்தங்கள் காணப்படுகின்றன. எரிகின்ற கொள்ளிகளாலே உன்னுடைய சேனையானது வருத்தப்படுகிறதன்றோ? அரசனே! குதிரைகள் மகிழ்ச்சியற்று அழுகின்றவைபோல இருக்கின்றன. கழுகுகள் உன்னுடைய

சேனைகளைச்சுற்றி வட்டமிடுகின்றன. பட்டணம் முன்போல இல்லை. ராஜமாளிகையும் முன் போல இல்லை. நரிகளும் அமங்களமாக ஊளை யிட்டுக்கொண்டு, [1] மூண்டெரிகின்ற திக்கை அடுக்கின்றன. பிதா வும் மாதாவும் நன்மையை விரும்புகின்ற நாங்களும் சொன்னதைச் செய்யக்கடவாய். ஓ! புஜபலமமைந்தவனே! ஸமாதானமோ சண்டை யோ உன்னுடைய வசமாயிருக்கின்றன. பகைவரை வாட்டுகிறவனே! அன்புடையவர்கள் சொன்னதைச் செய்யாதவிஷயத்தில் பார்த்த னுடைய கணைகளால் சேனை மிகப் பீடிக்கப்படுவதைப் பார்த்துத் தாபத்தை அடைவாய். எங்களுடைய இந்த வார்த்தையானது உனக்கு விபரீதமாகுமேயானல், பலசாலியும் யுத்தத்தில் கர்ஜிக்கிற வனுமான பீமனுடைய பெரிதான முழக்கத்தையும் காண்டீவத்தினு டைய ஒலியையும்கேட்டு [2] எங்களுடைய வார்த்தையை நினைப்பாய்' என்றார்கள்.

---

## நூற்றுமுப்பத்தோன்பதாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

**(பீஷ்மத்துரோணர்கள் துரியோதனன் தம்வார்த்தையைக்கேளா விடில் அர்ஜுனனேடு யுத்தம்செய்தல் தீமையைத் தரு மென்று துக்கித்ததும், துரோணர் ஸமாதானம் செய்து கொள்ளும்படி துரியோதனனுக்குத் திரும்பவும் சொல்லியதும்.)**

இவ்விதம் சொல்லியதைக் கேட்டுக்கொண்டே, துர்யோதனன், மனம்வருந்திக் குறுக்குப்பார்வையும் கவிழ்ந்தமுகமுமுடையவனுகிப் புருவங்களுடைய மத்தியைச் சேரும்படிசெய்து ஒன்றும் சொல்லாம லிருந்தான். அவன் மனம்வருந்தியிருப்பதைப் பார்த்துவிட்டு, புருஷஶ்ரேஷ்டர்களான பீஷ்மரும் துரோணரும், ஒருவரை ஒருவர் ஸமீபத்தில் நன்றாகப்பார்த்துக்கொண்டு, மறுபடியும் மேல்வார்த்தை யைச் சொன்னார்கள்.

பீஷ்மர் சொல்லுகிறார்: 'பணிவிடை செய்ய விருப்பமுள்ளவ னும் அஸூயையில்லாதவனும் பிராம்மணர்களுக்கு ஹிதமானவனும் உண்மையுரைப்பவனுமான பார்த்தனை எதிர்த்து யுத்தம் செய்கி றோம். இதைக்காட்டிலும் பெரிய துக்கம் எது?' என்று சொன் னார். துரோணர், 'அரசனே! புத்திரனை அஶ்வத்தாமாவினிடத்

---

1 திக்தாஹமென்ற உத்பாதம். 2 'மே வாக்கியம்' என்பது மூலம்.

திலிருப்பதைக்காட்டிலும் வானரத்துவஜனான அர்ஜுனனிடத்தில் எனக்கு மிக அதிகமான வெகுமானமும் (அவனுக்கு என்னிடத்தில்) வணக்கமுமிருக்கின்றன. க்ஷத்திரிய தர்மத்தைப் பின்பற்றி, புத்திரனைக்காட்டிலும் அதிகப்ரியனான அந்த அர்ஜுனனை எதிர்த்து யுத்தம் செய்வேனேயானால் க்ஷத்திரியன்பிழைப்பை நிந்திக்கவேண்டும். உலகத்தில் எவனுக்கு ஸமமாக வேறு ஒரு வில்லாளியுமில்லையோ அந்த அர்ஜுனன் என்னுடைய அருளால் மற்ற வில்லாளிகளைக் காட்டிலும் சிறந்தவனானன். நண்பர்களை மோசம் செய்கிறவனும் கெட்டஎண்ணமுடையவனும் நாஸ்திகனும் அதனால் நேர்மையில்லாதவனும் ரகஸ்யமாகத் துன்பத்தைச் செய்பவனுமானவன், யாகத்தில் வந்த மூடன்போல, நல்லோர்களிடம் நன்கு மதிப்பை அடையமாட்டான். பாவபுத்தியுள்ளவன், பாவங்களிலிருந்தும் தடுக்கப்பட்டாலும், பாவத்தையே விரும்புகிறான். நல்ல புத்தியுள்ளவன், பாவியினால் (பாவத்தில்) ஏவப்பட்டாலும், நன்மையைச் செய்யவே விரும்புகிறான். இவர்கள் (உன்னாலே)கள்ள உபசாரம் செய்யப்பட்டவர்களாயிருந்தும் பிரியத்திலேயே இருக்கிறார்களல்லவா? பரதஸ்ரேஷ்டனே! உன்னுடைய தோஷங்கள் விரோதத்திற்கே காரணமாகின்றன. கௌரவர்களில் முதியவரான பீஷ்மராலும் என்னாலும் விதுரராலும் வாஸுதேவராலும் சொல்லப்பட்டும் நீ நன்மையை நினைக்கவேயில்லை. 'எனக்கு வன்மையிருக்கிறது' என்று, மழைக்காலத்தில் சுறுக்களும் முதலைகளும் மகரங்களும் நிறைந்த கங்கையின்வேகத்தைத் தாண்டவிரும்புவதுபோல (யுத்தஸாகரத்தை) விரைந்து தாண்டவிரும்புகிறாய். பேராசையினால், நீ எறியப்பட்ட மாலையைப்போல யுதிஷ்டிரனுடைய செல்வத்தை ஆடையினால் மூடிக்கொண்டவனாக நினைக்கிறாய். காட்டிலிருந்தாலும், திரௌபதியுடன் கூடினவனும் குந்தீபுத்திரனும் ஆயுதங்களையுடைய உடன்பிறந்தார்களால் சூழப்பட்டவனுமான பாண்டவனை, ராஜ்யத்திலிருப்பவனாலும், எவன் ஜயிக்கப்போகிறான்? எல்லா அரசர்களும் எவனுடைய வசத்தில் கிங்கரர்களாயிருக்கின்றனரோ அந்தக் குபேரனையும்(யுத்தத்தில்) எதிர்த்துத் தர்மராஜன் விளங்கினான். பாண்டவர்கள் குபேரனுடைய கிருகத்தை அடைந்து அவனிடமிருந்து ரத்தினங்களை அடைந்து, செழித்ததான உன்னுடைய ராஜ்யத்தை ஆக்ரமித்து அதனை அடைய விரும்புகிறார்கள். (அவர்களால்) தானமும் ஹோமமும் அத்யயனமும் செய்யப்பட்டன. பிராம்மணர்கள் தனங்களாலே திருப்திசெய்யப்பட்டார்கள். எங்களுக்கு ஆயுளும்சென்று

விட்டது. எங்களை விருப்பம் நிறைவேறினவர்களாகவும் அறியக் கடவாய். நீயோ பாண்டவர்களுடன் போர்செய்து ஸுகத்தையும் ராஜ்யத்தையும் நண்பர்களையும் தனங்களையும் விட்டுவிட்டு மிக்க வருத்தத்தை அடையப்போகிறாய். ஸத்தியத்தையே உரைப்பவளும் தவத்தினால் கடுமையான விரதத்தையுடையவளும் தேவியுமான திரௌபதியானவள் எந்தப்பாண்டவனுக்கு வெற்றியை வேண்டுகிறாளோ அவனை எப்படி வெல்லுவாய்? எவனுக்கு ஜனார்த்தனர் மந்திரியோ எவனுக்கு எல்லா வில்லாளிகளிலும் சிறந்தவனான தனஞ்சயன் தம்பியோ (அந்தப்) பாண்டவனை எப்படி ஜயிக்கப்போகிறாய்? எவனுக்குத் தைர்யசாலிகளும் இந்திரியங்களை ஜயித்தவர்களுமான பிராம்மணர்கள் துணைவர்களோ, உக்கிரமான தவத்தையுடையவனும் வீரனுமான அந்தப்பாண்டவனை எப்படி வெல்லப்போகிறாய்? நண்பர்கள் துயரக்கடலில் முழுகும்பொழுது அவர்களுக்கு க்ஷேமத்தை விரும்புகிற நண்பனால் இது செய்யவேண்டியகாரியமானதால், சொன்னதையே திரும்பவும் சொல்லப்போகிறேன். அந்த வீரர்களோடு யுத்தம் வேண்டாம். நீ குலத்தின்வளர்ச்சியின்பொருட்டு ஸமாதானத்தை அடையக்கடவாய். புத்திரர்களோடும் மந்திரிகளோடும் நண்பர்களோடும் யமனுடைய வீட்டை அடையாதே' என்றார்" என்று சொன்னார்.

## நூற்று நாற்பதாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

**(ஸ்ரீ கிருஷ்ணன், கர்ணனுக்கு, அவன்குந்தியினுடையபுத்திரன்என்பதைத் தெரிவித்து அவனைப் பாண்டவபக்ஷத்தில் சேரச்சொல்லியது.)**

ஜனமேஜயர், "ஓ! மிகச்சிறந்தவரே! பகைவீரர்களைக்கொல்லுகின்றவரான மதுஸூதனர் ராஜபுத்திரர்களாலும் வேலைக்காரர்களாலும் சூழப்பட்டுக் கர்ணனைத் தேரிலேற்றிக்கொண்டு வெளிக்கிளம்பித் தேர்த்தட்டில் ராதாபுத்ரனான அவனைநோக்கி என்ன சொல்லினர்? கோவிந்தரானவர் ஸூதபுத்திரனிடத்தில் என்ன ஸமாதான வார்த்தைகளைச் சொல்லினர்? காலத்திற்கிளம்பின மேகத்தினுடைய ஒலிபோன்ற ஒலியையுடைய கிருஷ்ணர், கர்ணனைநோக்கி நயமாகவோ அல்லது கடுமையாகவோ சொல்லிய எல்லாவற்றையும் எனக்குச் சொல்லும்" என்று கேட்டார்.

வைசம்பாயனர் சொல்லுகிறார்: "ஓ! பாரதரே! அறியமுடியாத ஸ்வரூபத்தையுடைய மதுஸூதனர் நயமானவையும், கடுமையானவையும், பிரியமானவையும், தர்மத்துடன்கூடினவையும், உண்மையானவையும், ஹிதமானவையும், மனத்தைக்கவருகின்றவையுமான எந்தவார்த்தைகளைக் கிரமமாக ராதேயனைநோக்கிச் சொன்னாரோ அவைகளை என்னிடம் கேளும்.

வாஸுதேவர், 'ராதேய! வேதங்களின் கரையைஅடைந்தவர்களான பிராம்மணர்களை நீ உபாஸித்திருக்கின்றாய். நியமத்துடன், அஸூயையில்லாமல், உண்மையான அர்த்தத்தை அவர்களிடம் வினவியும் இருக்கிறாய். கர்ண! ஸநாதனமான வேதவாதங்களை நீயே அறிகிறாய். நீ தர்மசாஸ்திரங்களின்நுட்பங்களில் நிச்சயமுள்ளவன். சாஸ்திரங்களை அறிந்த ஜனங்கள் கன்னிகையினிடம் பிறந்த [1]கானீனனுக்கும் ஸஹோடனுக்கும், அந்தக்கன்னிகையை விவாகம்செய்தவனைப் பிதாவாகச் சொல்லுகிறார்கள். கர்ண! நீ, அப்படிப்பட்டவனாயிருக்கிறாய். அப்படிப்பிறந்த நீ சாஸ்திரங்களுடைய நிச்சயத்தினாலே தர்மமாகப் பாண்டுவினுடையபுத்திரனாகிறாய். வா; அரசனாவாய். ஆண்மையிற்சிறந்தவனே! பார்த்தர்கள் உன்னுடைய தகப்பன்வழியைச் சேர்ந்தவர்கள். விருஷ்ணிகள் உன்னுடைய தாயின்வழியைச் சேர்ந்தவர்கள். நீ இந்த இரண்டுபக்ஷங்களையும் அறியக்கடவாய். ஐயா! இங்கிருந்து என்னுடன் வந்தவனான உன்னை யுதிஷ்டிரருக்கு முந்திக் குந்தியினிடம்பிறந்தவனாக இப்போது பாண்டவர்கள் அறியட்டும். பிராதாக்களான ஐந்து பாண்டவர்களும், திரௌபதியின் புத்திரர்கள் ஐவரும், ஒருவராலும் ஜயிக்கப்படாதவனும் ஸுபத்ரையின் புத்திரனுமான அபிமன்யுவும் உன்னுடைய பாதங்களைப் பிடிப்பார்கள். பாண்டவர்களினிமித்தமாக வந்தவர்களான அரசர்களும் ராஜபுத்ரர்களும் எல்லா அந்தகர்களும் விருஷ்ணிகளும் உன்னுடைய பாதங்களைப் பிடிப்பார்கள். ராஜஸ்ரேஷ்டர்களும் ராஜகன்னிகைகளும், பொற்குடங்களையும் வெள்ளிக்குடங்களையும் மண்குடங்களையும் பச்சிலைகளையும் எல்லா வித்துக்களையும் எல்லாரத்னங்களையும் கொடிகளையும் அபிஷேகப்பொருள்களையும் கொண்டுவரட்டும். அப்படியே, திரௌபதியானவள் [2]ஆறாவது

1 ஆதிபர்வம் 461-ம் பக்கம் குறிப்பைப் பார்க்க.

2 'பாண்டவர்கள் ஐவரிடத்திலும் ஒவ்வொருவரிடத்தில் ஒவ்வொரு காலத்திலிருக்கிறாள். கர்ணனிடம் இருந்தால் அது ஆறாவது காலமாகும்' என்பது.

காலத்தில் உன்னையும் அடையப்போகிறாள். கூர்மையான புத்தி யுடையவரும் ப்ராம்மணோத்தமருமான தௌம்யர் அக்னியில் ஹோமஞ்செய்யட்டும். நான்குவேதங்களையும் ஓதினவர்களான பிராம்மணர்களும் பிராம்மணகர்மாவில் நிலைத்தவராயிருக்கிற பாண் டவர்களுடைய புரோஹிதரும் இப்பொழுது உனக்கு அபிஷேகம் செய்யக்கடவர். அப்படியே, புருஷச்ரேஷ்டர்களும் தம்பிமார்களு மான ஐந்துபாண்டவர்களும் திரௌபதியின் புத்ரர்கள் ஐவரும் பாஞ் சாலர்களும் சேதியர்களும் அபிஷேகம் செய்துவைக்கட்டும். நானும் உன்னைப் பூமிக்குப்பதியான அரசனாக அபிஷேகஞ்செய்துவைக் கிறேன். தர்மபுத்திரரான யுதிஷ்டிரராஜர் உனக்கு இளவரசராக இருக் கட்டும். தர்மபுத்திபுள்ளவரும் கடுமையான வ்ரதத்தையுடைய வரும் குந்தீபுத்ரருமான யுதிஷ்டிரர் வெண்சாமரத்தை எடுத்துக் கொண்டு தேரில் உனக்குப் பின்னாலே ஏறட்டும். மிக்கபலசாலியும் குந்திபுத்திரனுமான பீமஸேனன் அபிஷேகஞ்செய்யப்பட்டவனான உன்னுடைய தலையில் மிக்கவெண்மையான குடையைப்பிடிப்பானாக. அர்ஜுனன் நூறுமணிகளுடைய பெரியகோஷத்தையுடையதும் புலித் தோலால் விரிக்கப்பட்டதும் வெள்ளைக்குதிரைகள் பூட்டப்பட்டது மான தேரை ஓட்டுவான். அபிமன்யுவும் உனக்கு எந்நாளும் ஸமீ பத்திலிருப்பவனாவான். நகுலனும் ஸஹதேவனும் திரௌபதியின் புத்திரர்கள் ஐவரும் பாஞ்சாலர்களும் மகாரதனான சிகண்டியும் உனக்குப் பின்வருவார்கள். அரசனே! நானும் உனக்குப்பின் வருவேன். எல்லா அந்தகர்களும் விருஷ்ணிகளும் தாசார்ஹர் களும் தசார்ணதேசத்தவர்களும் உனக்குப் பரிவாரங்களாவார். ஓ! நீண்டகைகளையுடையவனே! தம்பிமார்களான பாண்டவர்களுடன் பலவிதமான ஜபங்கள் ஹோமங்கள் தனித்தனியான மங்களங்கள் இவைகளுடன்கூடி ராஜ்யத்தை அநுபவிக்கக்கடவாய். திராவிடர் களும் குந்தளர்களும் ஆந்திரர்களும் தாலசரர்களும் சூசுபர்களும் வேணுபர்களும் உனக்கு முன்செல்லுகிறவர்களாகக்கடவர். ஸூதர் களும் மாகதர்களும் உன்னைப் பலவிதமான துதிகளாலே துதிக்கக் கடவர். பாண்டவர்கள் வஸுஷேணனை உனக்கு வெற்றியைக் கோஷிக்கக் கடவர். குந்திபுத்திரனே! அப்படிப்பட்ட நீ நக்ஷத்திரங் களாலே சந்திரன் சூழப்பட்டதுபோலப் பாண்டவர்களால் சூழப்பட்டு ராஜ்யத்தை ஆளக்கடவாய். குந்தியையும் சந்தோஷிக்கச் செய்யக் கடவாய். உன்னுடைய நண்பர்கள் மகிழக்கடவர். அப்படியே பகைவர் வருத்தத்தை அடையக்கடவர். உனக்கு இப்பொழுது

பிராதாக்களான பாண்டவர்களுடன் நல்ல ஸகோதரத்தன்மையும் ஏற்படட்டும்' என்றார்.

---

நூற்று நாற்பத்தோராவது அத்யாயம்.

## பகவத்யாந பர்வம். (தொடர்ச்சி.)

(கர்ணன், பாண்டவபக்ஷத்தில் தான் சேருவதிலுள்ள இடையூறு களை விவரமாகக் கிருஷ்ணரிடம் சொல்லி, தான் குந்தியின்பிள்ளை என்கிற ரஹஸ்யத்தை வெளியிடாமலிருக்கும்படி அவ ரைக் கேட்டுக்கொண்டது.)

கர்ணன் சொல்லுகிறான்: 'ஓ! கேசவரே! வார்ஷ்ணேயரே! எனக்கு நண்பராயிருப்பதினாலும் ஸ்நேகத்தினாலும் ஸகாவாயிருப் பதினாலும் நன்மையைவிரும்புவதினாலும் [1] சொன்னீர்; ஸந்தேக மில்லை. ஓ! கிருஷ்ணரே! நீர் நினைப்பதுபோல எல்லாவற்றையுமே அறிகிறேன். தர்மசாஸ்திரங்களின் நிச்சயத்தினால் தர்மமாகப்பாண்டு வின் புத்திரனே ஆகிறேன். ஓ! ஜனார்த்தனரே! கன்னிகையான வள் ஸூர்யனிடமிருந்தும் என்னைக் கர்ப்பத்தில் தரித்தாள். அவள், பிறந்தவனான என்னை, ஸூரியனுடைய சொல்லாலேயே விட்டுவிட் டாள். ஓ! கோவிந்தரே! அவ்விதம் பிறந்த நான் தர்மத்தினாலே பாண்டு வுக்குப் புத்திரனாகிறேன். குந்தியினாலேயோ, நான் க்ஷேமம் உண் டாகாதபடி விட்டுவிடப்பட்டேன். அதிரதனென்கிற ஸூதனே என் னைப் பார்த்தவுடன் வீட்டுக்குக் கொண்டுபோனான். ஓ! மதுஸூத னரே! அன்பினால் என்னை ராதையிடத்திலேயும் கொடுத்தான். உடனே, ராதைக்கும் என்னிடத்திலுள்ள அன்பினாலே பால் பெருகிற்று. ஓ! மாதவரே! அவள் என்னுடைய மூத்திரத்தையும் மலத்தையும் எடுத்தாள். தர்மத்தை அறிந்தவனும் எப்பொழுதும் தர்மசாஸ்திரங்களைக் கேட்பதில் பற்றுள்ளவனுமான என்னைப் போன்றவன் எப்படி அவளுடைய [2] பிண்டத்தை விலக்குவதைச் செய்யலாம்? அப்படியே, அதிரதனென்கிற ஸூதனும் என்னைப் புத்திரனாக நினைக்கிறான். நானும் அவனை அன்பினால் எப்பொழு தும் தந்தையாக நினைக்கிறேன். ஓ! மாதவரே! ஜனார்த்தனரே!

---

1 'ஆத்த' என்பது வேறுபாடம்.

2 'அவளுக்குப் பிண்டதானம் செய்யாமலிருக்கலாம்' என்பது.

அவனே, எனக்கு, புத்திரனிடமுண்டான பிரியத்தினாலே, சாஸ்திரத்தில்கண்ட விதிப்படி ஜாதகர்மம் முதலியவற்றைச் செய்வித்தான். வேதியர்களைக்கொண்டு வஸுஷேணனென்கிற பெயரையும் இடுவித்தான். அவனுடைய சம்பந்தத்தினாலே, எனக்கு யௌவனம் வந்தபொழுது, மனைவிகளும் விவாஹம் செய்யப்பட்டார்கள். ஓ! ஜனார்த்தனரே! அவர்களிடம் எனக்குப் புத்திரர்களும் பௌத்திரர்களுமுண்டானார்கள். ஓ! கிருஷ்ணரே! அந்த மங்கையரிடமிருந்து என் மனமானது நீங்காது. ஓ! கோவிந்தரே! பூமி முழுமைக்குமாகவோ பொற்குவியல்களுக்காகவோ ஸந்தோஷத்தினாலோ பயத்தினாலோ அதை வீணாகச் செய்வதற்கு மனம் செல்லவில்லை. ஓ! கிருஷ்ணரே! துர்யோதனனை அடுத்துத் திருதராஷ்டிரருடைய அரண்மனையில் நான் பதின்மூன்று வருஷங்கள் சிறிதும் தடையில்லாமல் ராஜ்யத்தை அநுபவித்தேன். நான் ஸூதர்களோடு பல யாகங்களைச் செய்தேன். என்னாலே குலதர்மங்களும் விவாகங்களும் ஸூதர்களோடு செய்யப்பட்டன. ஓ! கிருஷ்ணரே! துர்யோதனன் என்னை அடுத்து ஆயுதங்களில் முயற்சியையும் பாண்டவர்களுடன் கலகத்தையும் செய்தான். ஓ! அச்சுதரே! ஆகையால், யுத்தத்தில் இரண்டு தேராளிகள் ஒருவரையொருவர் எதிர்க்கின்ற த்வைரதமென்னும் போரில் என்னை அர்ஜுனனுக்கு முக்கியமான பகையாகி எதிர்த்துச் செல்லவேண்டியவனாக வரித்தான். ஓ! ஜனார்த்தனரே! வதத்திற்குப் பயந்தோ பந்தத்திற்குப் பயந்தோ அல்லது லோபத்தினாலோ, புத்திமானான துர்யோதனனுக்குக் கபடமாக நடப்பதற்கு எனக்கு மனம் எழவில்லை. ஓ! ஹ்ருஷீகேசரே! இப்பொழுது நான் அர்ஜுனனுக்கு எதிர்த்தேராளியாகச் செல்லாமலிருப்பேனானால் நானும் அர்ஜுனனுமாகிய எங்கள் இருவருக்கும் அபகீர்த்தியே ஏற்படும். ஓ! மதுஸூதனரே! நீர் நன்மையின் பொருட்டே சொல்லுகிறீர்; ஸந்தேகமில்லை. பாண்டவர்களும் உமக்கு வசமாயிருத்தலால் எல்லாவற்றையும் செய்வார்கள்; ஸந்தேகமில்லை. ஓ! மதுஸூதனரே! இந்த விஷயத்தில் ஆலோசனையை மறைவாக வைத்துக்கொள்ளக்கடவீர். ஓ! யாதவநந்தனரே! இவையெல்லாவற்றையுமே நன்மையாக நினைக்கிறேன். தர்மபுத்தியுள்ளவனும் இந்திரியங்களை அடக்கினவனும் அரசனுமான அந்த யுதிஷ்டிரன் என்னைக் குந்தியினுடைய முதலிலுண்டான புத்திரனாக அறிவானானால் ராஜ்யத்தை ஏற்றுக்கொள்ளமாட்டான். ஓ! மதுஸூதனரே! பகைவரை அடக்குபவரே! நான் பெரிதும் செழித்ததுமான அந்த ராஜ்யத்தை

அடைந்தாலும், துர்யோதனனுக்கே கொடுப்பேன். எவனுக்கு ஹ்ருஷீகேசர் நாயகரோ, எவனுக்கு அர்ஜுனன் போர்வீரனோ, தர்மாத்மாவான அந்த யுதிஷ்டிரனே நிலைபெற்ற அரசனாக இருக்கவேண்டும். ஓ! மாதவரே! ஜனார்த்தனரே! எவனுக்கு மகாரதனான பீமனும், நகுலனும், ஸஹதேவனும், திரௌபதியின் புத்திரர்களும், பாஞ்சாலபுத்திரனான திருஷ்டத்யும்னனும், மகாரதனான ஸாத்தியகியும், உத்தமௌஜஸும், ஸோமகராஜகுமாரனும் ஸத்யஸந்தனுமான யுதாமன்யுவும், சேதிதேசாதிபதியும், சேகிதானனும், ஒருவராலும் ஜயிக்கப்படாதவனான சிகண்டியும், இந்திரகோபப்பூச்சியின் நிறம்போன்ற நிறமுடையவர்களும் பிராதாக்களுமான கேகயர்களும், வானவில்லுக்கு நிகரான நிறமுடையவனும் பீமஸேனனுக்கு மாதுலனும் பெரியமனமுடையவனுமான குந்திபோஜனும், மகாரதனான சேனஜித்தும், விராடனுடைய புத்திரனான சங்கனும் (வீரர்களோ), நீரும் வேண்டிய வற்றையெல்லாம் அளிக்கும் நிதிபோலிருக்கிறீரோ அவனுக்கே பூமியும் ராஜ்யமும் ஆகும். க்ஷத்திரியர்களின் பெரிய கூட்டமானது சேர்க்கப்பட்டிருக்கிறது. ஜ்வலிக்கின்றதும் எல்லா அரசர்களிடத்திலும் பிரஸித்திபெற்றதுமான துர்யோதனனுடைய இந்த ராஜ்யமானது யுதிஷ்டிரனால்[1] அடையப்பட்டிருக்கிறது. ஓ! வார்ஷ்ணேயரே! சஸ்திரயாகமானது உண்டாகப்போகிறது. ஓ! ஜனார்த்தனரே! நீர் இந்த[2] யாகத்திற்கு உபத்ரஷ்டாவாகப்போகிறீர்.

---

1 'யுதிஷ்டிரர் வெல்வது நிச்சயம்' என்பது.

2 யாகத்தில் ரித்விக்குக்கள், க அத்வர்யுகணம், உ பிரம்மகணம், ௩ உத்காத்ருகணம், ௪ ஹோத்ருகணம் என்று நான்குவகைப்படுவர்.

க-வது அத்வர்யுகணத்தில்—1. அத்வர்யு, 2. ப்ரதிப்ரஸ்தாதா, 3. நேஷ்டா, 4. உந்நேதா எனநால்வர்; இவர்கள், யஜுர்வேதிகள்.

உ-வது. பிரம்மகணத்தில்—1. பிரம்மா, 2. பிராம்மணாச்சம்ஸி, 3. ஆக்நீத்ரன், 4. போதா என நால்வர்; இவர்கள் அதர்வவேதிகள்; பிரம்மா நான்குவேதமும் தெரிந்தவராயிருக்கவேண்டுமென்பர்.

௩-வது. உத்காத்ருகணத்தில்—1. உத்காதா, 2. ப்ரஸ்தோதா, 3. ப்ரதிஹர்த்தா, 4. சுப்ரம்மண்யர் என நால்வர்; இவர்கள், ஸாமவேதிகள்.

௪-வது. ஹோத்ருகணத்தில்—1. ஹோதா, 2. மைத்ராவருணன், 3. அச்சாவாகன், 4. க்ராவஸ்துத் எனநால்வர்; இவர்கள், ரிக்வேதிகள். எனவே, ஒவ்வொருகணத்திலும் நந்நால்வராக, ரித்விக்குக்கள் பதினாறு பேர்கள் ஆவர்.

ஸதஸ்யர் என்று வேறு ஒரு ரித்விக்கும் உண்டு. அவரைச்சேர்த்து ரித்விக்குக்கள் பதினெழுவராவர். ஸதஸ்யரைநீக்கி, யஜமானனையும் யஜ

ஓ! கிருஷ்ணரே! இந்த யாகத்தில் உமக்கு அத்வர்யுவின் காரியமும் வரப்போகிறது. ஸங்கநாஹமுடையவனும் வானரக்கொடியையுடையவ

மானபத்நியையும்சேர்த்து யாகத்திற்கு அங்கமானவர்கள் பதினெண்மர் என்பதும் உண்டு. 'யஜமானனையும் யஜமானபத்நியையும் ஒருவராகக் கொண்டு ப்ரம்மாவைச்சேர்த்துப் பதினெண்மர்' என்பதும் உண்டு. உபத்ரஷ்டா, ஸோமப்ரவாகர் முதலாக வேறுசிலரும் உண்டு.

**இந்த அத்யாயத்தில் வந்துள்ள யாகஸம்பந்தமான பேர்களின் விவரம் அகராதி வரிசையில் எழுதப்படுகிறது.**

*அத்வர்யு*—அத்வர்யு கணத்தில் முதன்மையான ரித்விக்கு. இவர் யஜுர்வேதி. இவரே யாகத்தில் முக்யமான வேலைகளைச் செய்பவர்.

*அவப்ருதம்*—யாக முடிவில் யஜமானனும் ரித்விக்குக்களும் மற்றவர்களும் சேர்ந்து ஸ்நானம் செய்வது.

*அவஸாநம்*—ப்ராதஸ்ஸவநம் முதலியன; ஸவநம்=யாகத்தில்இடை இடையே ஓய்வுநேரம்.

*ஆக்நீத்ரன்*—ப்ரம்மகணத்தில் மூன்றாவது ரித்விக்கு.

*இத்மம்*—அக்நியை ஜ்வலிக்கச் செய்யும் ஸமித்துக்களின் தொகுதி; இது பதினைந்து ஸமித்துக்கள் சேர்ந்தது.

*உத்காதா*—உத்காத்ருகணத்தில் முதன்மையானவர்; இவர், ஸாமகானத்துடன் கூடிய ரிக்குக்களால் தேவதைகளை ஸ்தோத்ரம் செய்பவர்.

*உபத்ரஷ்டா*—யாகத்தில் மேற்பார்ப்பவர்.

*கபாலம்*—புரோடாசத்தை ஸம்ஸ்காரம் செய்வதற்கு உதவுகிற மண்ணினால் செய்த சிறு சில்லுகள்.

*சமஸாத்வர்யு*—யாகத்தின் கடைசி நாளில் சமஸம் என்னும் பாத்ரத்தினால் ஸோமரஸத்தை ஹோமம்செய்து மிச்சத்தை ரித்விக்குக்களுக்குப் பானம்செய்யக் கொடுப்பவர்கள்; இவர்கள் பதின்மராகலாம்.

*சாமித்ரம்*—பசுவின் அவயவத்தை எடுத்துப் பக்குவம் செய்யும்வேலை; இது செய்பவனுக்கு சமிதா என்றுபெயர்.

*தீக்ஷிதபத்நி*—யாகம் செய்யும் யஜமானனுடைய மனைவி.

*தீக்ஷிதன்*—யஜமானன்=யாகம் செய்பவன்.

*ப்ரதிப்ரஸ்தாதா*—அத்வர்யுகணத்தில் இரண்டாவது ரித்விக்கு.

*ப்ரம்மா*—ப்ரம்மகணத்தில் முதல் ரித்விக்கு. இவர் எல்லாவேதமும் தெரிந்தவராக இருக்கவேண்டும். இவர் யாகக்ரியைகளில் தவறுநேராமல் பார்ப்பவர்.

*ப்ரஸ்தோதா*—இவர் உத்காத்ருகணத்தைச் சேர்ந்த இரண்டாவது ரித்விக்கு.

னுமான அந்தஅர்ஜுனன் இதில் ஹோதாவாவான். காண்டீவமானது ஸ்ருக்கும் வீரர்களுடைய வலிமையானது நெய்யுமாகும். ஓ! மாதவரே! அதில் அர்ஜுனனால் பிரயோகிக்கப்பட்ட ஐந்திரமும் பாசுபதமும் பிராம்மமும் ஸ்தூணாகர்ணமும் மந்திரங்களாகும். பராக்கிரமத்தில் பிதாவைப் பின்பற்றினவனாகவோ அல்லது அதிகனாகவோ இருக்கிறவனும் அந்தச் சுபத்திரையின்புத்திரனுமான அபிமன்யு அதில் கானத்தினால் செய்யப்பட்ட ஸ்தோத்திரத்தைச் செய்யப் போகிறான்; அதாவது, அதில் உத்காதாவாவான். மிக்க பலசாலியும் புருஷச்ரேஷ்டனும் யுத்தத்தில் கர்ஜித்துக்கொண்டு யானைகளின் சேனையை நாசஞ்செய்பவனுமான பீமனே அதில் பிரஸ்தோதா ஆவான். தர்மாத்மாவும் அடிக்கடி ஜபங்களோடும் ஹோமங்களோடும் கூடினவனும் அரசனுமான அந்த யுதிஷ்டிரனே அதில் பிரம்மாவாயிருப்பான். ஓ! மதுஸூதனரே! சங்கத்வனிகளும் முரசுமுழக்கங்களும் பேரிகையொலிகளும் உயர்வான சிங்கநாதமும் ஸுப்பிரமண்யர் என்னும் ரித்விக்காவன. புகழுள்ளவர்களும்

---

பரிதி—அக்னிக்குக் கிழக்குப்பக்கம் தவிர, மற்ற மூன்றுபக்கங்களிலும் போடப்படும் ஸமித்து.

புநச்சிதி—சில யாகமுடிவில் கல்லுகளைப் பரப்புதல்.

புரோடாசம்—மாவினால்செய்த ஹவிஸ்.

மைத்ராவருணன்—ஹோத்ரு கணத்தில் இரண்டாவது ரித்விக்கு.

யாகதக்ஷிணை—ரித்விக்குக்களுக்குக் கொடுக்கும் பொருள்.

யூபம்—யாகத்தில் யாகபசுவைக்கட்டும் ஸ்தம்பம்.

ஸ்ருக்கு—ஹவிஸ் முதலியவைகளை அக்னியில் ஹோமஞ்செய்யும் கருவி. நெய்முதலிய த்ரவப்பொருள்களை ஹோமஞ்செய்யும் கருவி 'ஸ்ருவம்' என்று சொல்லப்படும்.

ஸதஸ்யர்—யாகக்ரியைகளில் உண்டாகும் ஸந்தேகங்களைத் தெளிவிக்கும் வித்வான்கள்

ஸுப்ரம்மண்யர்—உத்காத்ருகணத்தில் நான்காவது ரித்விக்கு. இவர் இந்திரனை அழைப்பவர்.

ஸோமகலசம்—ஸோமரஸம் வைக்கும் குடம்.

ஸோமசமஸம்—ஸோமரஸத்தைப் பானஞ்செய்வதற்கு உபயோகிக்கும் பாத்ரம.

ஹவிஸ்—ஹோமத்ரவ்யம்.

ஹோதா—ஹோத்ருகணத்தில் முதன்மையான ரித்விக்கு. இவர் ரிக்வேதி தேவதைகளை ரிக்குக்களால் துதிப்பவர்.

சிறந்த வீர்யமுள்ளவர்களும் மாத்திரியின் புத்திரர்களுமான அந்த நகுலனும் ஸஹதேவனும் அதில் சமிதாக்களாக நன்கு ஆவார்கள். சிறந்த வீரர்களான அவர்கள் மைத்திராவருணனும் ஆக்நீத்ரனும் ஆவார்கள். ஓ! கோவிந்தரே! ஜனார்த்தனரே![1] கறுத்த தண்டங்களையுடையவைகளும் மாசற்றவைகளுமான தேர்வரிசைகள் இந்த யாகத்தில் யூபங்களாகக்கடவன. இதில் கர்ணிகளும் நாளீகங்களும் நாராசங்களும் வத்ஸதந்தங்களும், உபப்ரும்மணங்களும், (அதாவது, சமஸாதவர்யுக்களும்) ஆவன. தோமரங்கள் ஸோமகலசங்களும், வில்லுகள் பவித்திரங்களும், கத்திகள் கபாலங்களும், தலைகள் புரோடாசங்களும் ஆவன. ஓ! கிருஷ்ணரே! அந்தயாகத்தில் இரத்தமானது ஹவிஸாகும். பளபளப்பான சக்திகளும் கதைகளும் பரிதிகளாகவும் இத்மங்களாகவும் ஆவன. துரோணசிஷ்யர்களும் சரத்வானுடைய கிருபருடைய சிஷ்யர்களும் ஸதஸ்யர்களாகக்கடவர். இதில், அர்ஜுனனால் விடப்பட்டவைகளும் மஹாரதர்களால் தொடுக்கப்பட்டவைகளும் துரோணராலும் அஸ்வத்தாமாவினாலும் ஏவப்பட்டவைகளுமான பாணங்கள் ஸோமத்திற்குரிய சமஸம்முதலிய பாத்திரங்களாகக்கடவன. ஸாத்தியகியோ ப்ரதிப்ரஸ்தாதாவினுடைய வேலையைச் செய்வான். இதில், துர்யோதனன் தீக்ஷிதன். இவனுடைய பெரிய சேனையானது பத்னி. ஓ! மகாபாகுவே! இதில் மகாபலசாலியான கடோத்கசன்[2] அதிராத்திரமென்கிற விரிவான யாககர்மாவிலுள்ள சாமித்திரத்தைச் செய்வான். ஓ! கிருஷ்ணரே! பிரதாபசாலியான திருஷ்டத்யும்னன் யாககர்மாவின் ஆரம்பத்தில் அக்கினியிலிருந்தும் உண்டானபடியால், இந்தயாகத்திற்குத் தக்ஷிணையாவான். ஓ! கிருஷ்ணரே! நான் துர்யோதனனுடைய பிரியத்திற்காகப் பாண்டவர்களைநோக்கிக் கடுமையான வார்த்தைகளைச்சொன்னதாகிய கெட்டகாரியததினால் தபிக்கிறேன். ஓ! கோவிந்தரே! எப்பொழுது, அர்ஜுனனாலே நான் கொல்லப்பட்டதைப் பார்ப்பீரோ, அப்பொழுது, உடனே இந்த யாகத்திற்குப் பின்செய்யவேண்டிய 'சயனம்' ஏற்படப்போகிறது. எப்பொழுது,பாண்டவன் மிகச்சப்திக்கின்ற துச்சாஸனனுடைய ரக்தத்தைப் பானம்செய்வானோ, அப்பொழுது, நன்கு ஸோமததைக் கசக்கிப்பிழிகின்ற கர்மாவானது நடைபெறும். ஓ!

---

1 'கல்மாஷதண்டா:' என்பது மூலம். 'பலநிறமான கொடிமரங்கள்' என்பது பழையவுரை.

2 கடோத்கசன் நிசாசரன்; 'ராத்ரி யுததம் செய்பவன்' என்பது குறிப்பு.

ஜனார்த்தனரே! எப்பொழுது, பாஞ்சாலனுடைய புத்திரர்கள் துரோணரையும் பீஷ்மரையும் (கொன்று) தள்ளுவார்களோ அப்பொழுது, அது, யாகத்தின் அவஸானமாகும். ஓ! மாதவரே! எப்பொழுது, மிக்கபலசாலியான பீமன் துர்யோதனனைக் கொல்லுவானோ அப்பொழுது, துர்யோதனனுடைய யாகமானது முடிவை அடையும். ஓ! கேசவரே! ஜனார்த்தனரே! திருதராஷ்டிரருடைய மருமக்களும் பௌத்திரர்களின்பத்தினிகளும் சேர்ந்து அரசனை இழந்தவர்களும் புத்திரர்களை இழந்தவர்களும் நாதனை இழந்தவர்களுமாகி, நாய்களும் கழுகுகளும் [1] சாகுருவிகளும்நிறைந்த (ரணகளத்தில்) காந்தாரியுடன் சேர்ந்து அழப்போகின்றார்கள். அது இந்தயாகத்தில் அவபிருதம் ஆகும். ஓ! க்ஷத்திரியச்ரேஷ்டரே! மதுஸூதனரே! வித்தையில் சிறந்தவர்களும்பிராயம்முதிர்ந்தவர்களுமான க்ஷத்திரியர்கள் உம்முடையநிமித்தமாக வீணான மரணத்தை அடையவேண்டாம். ஓ! கேசவரே! மிகவும் செழிப்பையடைந்ததான க்ஷத்திரியக்கூட்டமானது மூன்று உலகத்திலும் மிகவும் பரிசுத்தமான குருக்ஷேத்திரத்தில் ஆயுதத்தால் மரணத்தை அடையட்டும். ஓ! புண்டரீகாக்ஷரே! இதில் எது இஷ்டமோ, எப்படியானால் க்ஷத்திரியஜாதிமுழுதும் ஸ்வர்க்கத்தைஅடையுமோ, அதை அப்படிச்செய்யும். ஓ! ஜனார்த்தனரே! எவ்வளவுகாலம் மலைகளும் ஆறுகளுமிருக்குமோ அவ்வளவுகாலம் கீர்த்தியாலுண்டான இந்தச் சப்தமானது சாச்வதமாக ஏற்படப்போகிறது. ஓ! [2] வார்ஷ்ணேயரே! பிராம்மணர்கள் க்ஷத்திரியர்களுடைய யசஸாகிற தனமான மஹாபாரதயுத்தத்தைக் கூட்டங்களில் சொல்லப்போகிறார்கள். ஓ! கேசவரே! பகைவரை வாட்டுபவரே! எங்நாளுமே (நம்முடைய) ஆலோசனையை மறைக்கிறவராகி, என்னுடன் யுத்தம் செய்தற்காகக் குந்திபுத்திரனை அர்ஜுனனை அழைத்துவாரும்' என்று சொன்னான்.

1 'குரு' என்பது மூலம்.

2 'வார்ஷ்ணேயரே! பிராம்மணர்கள் மஹாபாரதயுத்தத்தைச் சொல்லப்போகிறார்கள். க்ஷத்திரியர்களுக்கு யுத்தத்தில் உண்டாகும் வெற்றியே தனம்' என்பது பழையவுரை.

## நூற்று நாற்பத்திரண்டாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(பாண்டவர்களுக்கு வெற்றி நிச்சயமென்றும் பீஷ்மந் துரோணாதிகளை யுத்தத்திற்கு ஆயத்தமாகும்படி செய்தி தெரிவிக்க வேண்டுமென்றும் கர்ணனிடம் கிருஷ்ணன் சொல்லியது.)

பகைவீரர்களைக் கொல்லுகின்றவரான கேசவர், கர்ணனுடைய வார்த்தையைக்கேட்டு, புன்னகையுடன், இந்தவார்த்தையை உரைக்கலானார்: 'கர்ண! ராஜ்யலாபத்திற்குரிய உபாயத்தை நீ செய்யமாட்டாயா? என்னால் அளிக்கப்பட்ட பூமியை ஆளவிரும்பவில்லையே? பாண்டவர்களுக்கு வெற்றியானது நிச்சயமென்பதில்' யாதொரு ஸந்தேகமுமில்லை. மிக உயர்ந்ததும் உக்கிரமான வானரராஜ வடிவமுமான பாண்டவனுடைய வெற்றிக்கொடியானது காணப்படுகிறது. இதில் விஸ்வகர்மாவினாலே செய்யப்பட்டவைகளும் சிறந்தவைகளும் இந்திரத்வஜம்போல விளங்குகின்றவைகளுமான மாயைகள் நன்றாக உயர்ந்து பரவியிருக்கின்றன. சிறந்தவைகளும் வெற்றியை அளிக்கின்றவைகளும் பகைவருக்கு அச்சத்தைச் செய்பவைகளுமான பூதங்களும் காணப்படுகின்றன. கர்ண! உயரத்திலும் அகலத்திலும் ஒருயோஜனை அளவுள்ள வடிவத்தையுடையதும் ஒளியுள்ளதும் மிகவும் உயர்த்திக் கட்டப்பட்டதும் அக்னிக்கு நிகரான ரூபமுடையதுமான தனஞ்சயனுடைய கொடியானது, மலைகளிலும் மரங்களிலும் தடைப்படுகிறதில்லை. எப்பொழுது யுத்தத்தில் கிருஷ்ணனை ஸாரதியாகவுடையவனும் வெள்ளைக்குதிரைகளையுடையவனும் ஐந்திராஸ்திரத்தையும் ஆக்னேயாஸ்திரத்தையும் மாருதாஸ்திரத்தையும் எய்கிறவனுமான அர்ஜுனனைப் பார்ப்பாயோ, இடியின்சப்தம்போலக் காண்டீவத்தின் பெரியகோஷத்தையுங்கேட்பாயோ, அப்பொழுது, த்ரேதாயுகமும் கிருதயுகமும் துவாபரமும் [1] நடைபெறமாட்டா. எப்பொழுது யுத்தத்தில் ஜபஹோமங்களை நன்குசெய்பவரும்

---

1 'கலிதான் ஏற்படும்; அதாவது யுத்தம்தான்' என்பது கருத்து. கிருதயுகத்திலுள்ளவர்கள் எல்லாரும் கிருதகிருத்யர்கள்; அதாவது, செய்யவேண்டிய கார்யங்களைச்செய்து முடித்தவர்கள்; ஆகையால், தர்மார்த்தகாமங்களை விரும்புவாரில்லை; எல்லாரும் மோக்ஷத்தையே விரும்புகிறவர்கள். திரேதாயுகத்திலுள்ளவர்கள், தர்மத்தை ப்ரதானமாகவும் அர்த்த

அதனால் தம் சேனையைக் காப்பவரும் ஆதித்தியனைப்போல நெருங்கமுடியாதவரும் பகைவர்களின் சேனையை எரிப்பவரும் குந்திபுத்திரருமான யுதிஷ்டிரரைப் பார்ப்பாயோ, அப்பொழுது, கிருதயுகமும் த்ரேதாயுகமும் துவாபரயுகமும் நேரிடப்போகிற தில்லை. எப்பொழுது, யுத்தத்தில் மிக்க பலசாலியும் துச்சாஸனனு டைய இரத்தத்தைக்குடித்துப் போரில் கூத்தாடுபவனும் மதங் கொண்ட யானைபோலப் பகைவரின் யானைகளைக் கொல்லுகிறவனு மான பீமஸேனனைப் பார்ப்பாயோ, அப்பொழுது, கிருதயுகமும் த்ரேதாயுகமும் துவாபரயுகமும் ஏற்படப்போகிறதில்லை. எப்பொ ழுது, யுத்தத்தில் போர்செய்ய விரைவாக வருகின்றவர்களான துரோணரையும் பீஷ்மரையும் கிருபரையும் அரசனான துர்யோ தனனையும் ஸிந்துதேசாதிபதியான ஜயத்ரதனையும் அர்ஜுனனால் தடுக்கப்பட்டவர்களாகப் பார்ப்பாயோ, அப்பொழுது, கிருதயுகமும் த்ரேதாயுகமும் துவாபரயுகமும் நேரிடப்போகிறதில்லை. எப்பொ ழுது, யுத்தத்தில் மிக்க பலசாலிகளும் கௌரவர்களுடைய சேனையை யானைகள்போலக் கலக்குகிறவர்களும் நெருக்கமாக ஆயுதங்கள் விழும் பொழுது சத்துருவீரர்களுடைய தேர்களை முறிக்கிறவர்களும் மாத்திரியின் புத்திரர்களுமான நகுலஸஹதேவர்களைப் பார்ப்பாயோ, அப்பொழுது, கிருதயுகமும் த்ரேதாயுகமும் துவாபரயுகமும் நேரிடப் போகிறதில்லை. கர்ண! நீ இங்கிருந்து சென்று துரோணரிடத்திலும் பீஷ்மரிடத்திலும் கிருபரிடத்திலும், 'இந்த மாதமானது இனிமை யானதும், தான்யங்களும் விறகுகளும் இலேசாகக் கிடைக்கக்கூடிய தும், எல்லா ஓஷதிகளுடைய வளங்களாலும் செழித்ததும், பலங்க ளோடுகூடியதும், ஈக்கள் அதிகமில்லாததும், சேறில்லாததும், ருசி யான ஜலமுடையதும், அதிக வெப்பமும் குளிருமில்லாததும், ஸுக முள்ளதுமாக இருக்கிறது. ஏழு தினங்களுக்குப் பிறகு அமாவாஸ் யையும் வரப்போகிறது. அதில் யுத்தமானது தொடங்கவேண்டும். அந்த அமாவாஸ்யைக்கு இந்திரனே அதிஷ்டான தேவதையாகச்

காமங்களை அப்ரதானமாகவும் உடையவர்கள். துவாபர யுகத்திலுள்ளவர் கள் அர்த்தகாமங்களை ப்ரதானமாகவும் தர்மத்தை அப்ரதானமாகவும் விரும்புகிறார்கள். ஆகையால், கிருதயுகம் ஏற்படாதென்றதனால் மோக்ஷ மில்லை யென்பதும், திரேதாயுகம் ஏற்படாதென்றதனால் தர்மமில்லை என் பதும் துவாரபரயுகம் ஏற்படாதென்றதனால், அர்த்தமும் காமமும் இல்லை யென்பதும் விளங்கும். யுத்தத்தில் எல்லாரும் மரிக்கப்போகிறார்களாகை யால், அர்த்தமும் காமமும் இல்லையன்றோ' என்பது பழையவுரை.

சொல்லுகின்றனர்' என்று சொல்லு. அப்படி யுத்தத்திற்காக வந்தவர்களான எல்லா அரசர்களிடத்திலும், 'நான் உங்களுடைய இஷ்டங்கள் எல்லாவற்றையும் உண்டுபண்ணுகிறேன். துர்யோதனனுடைய வசத்தை அடைந்தவர்களான அரசர்களும் ராஜபுத்திரர்களும் ஆயுதத்தால் மரணத்தையடைந்து உத்தமமான கதியை அடையப்போகின்றனர்' என்றுசொல்லு' என்று கூறினர்.

நூற்று நாற்பத்துமூன்றாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(கர்ணன் உலக நாசத்திற்குத் தானும் துச்சாஸனனும் சகுனியும் காரணமென்று சொல்லிக் கிருஷ்ணரைத் தழுவிக்கொண்டு அவரிடம் விடைபெற்றுத் திரும்பியதும், கிருஷ்ணர் உபப்லாவ்யம் அடைந்ததும்.)

கர்ணன், நன்மையானதும் சுப்முள்ளதுமான கேசவருடைய அந்த வார்த்தையைக்கேட்டு,மதுவென்கிற அஸுரனைக்கொன்றவரான அந்தக்கிருஷ்ணரைப் பூஜித்து உரைக்கலானான். 'ஓ! நீண்ட கைகளை உடையவரே! தெரிந்துகொண்டு ஏன் என்னை மயங்கச்செய்ய விரும்புகிறீர்? இப்பொழுது, பூமி முழுமைக்கும் அழிவானது நேரிட்டிருக்கிறது. அதில் சகுனியும், நானும், துச்சாஸனனும், திருதராஷ்டிரரின் புத்திரனும் அரசனுமான துர்யோதனனும் நிமித்தமானோம். ஓ! கிருஷ்ணரே! இப்பொழுது, பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் கோரமும் இரத்தத்தினால் சேறாகக்கூடியதுமான பெரும்போரானது நேரிட்டுவிட்டது; ஸந்தேகமில்லை. துர்யோதனனுடைய வசத்தை அடைந்தவர்களான அரசர்களும் ராஜபுத்திரர்களும் யுத்தத்தில் பாணாக்கினியினால் எரிக்கப்பட்டு யமன் வீட்டை அடையப்போகின்றனர். ஓ! மதுஸூதனரே! கோரமான பல கனவுகளும் பயத்தைத் தெரிவிப்பவையான நிமித்தங்களும் காணப்படுகின்றனவல்லவா? ஓ! வார்ஷ்ணேயரே! அப்படியே, மிக்க குரூரமானவைகளும் மயிர்சிலிர்த்தலைச் செய்பவைகளும் துர்யோதனனிடம் தோல்வியையும் யுதிஷ்டிரரிடம் வெற்றியையும் சொல்லுகிறவைகள் போலப் பலிதமிருப்பவைகளுமான உத்பாதங்களும் காணப்படுகின்றன.

[1] கடுமையானதும் [2] மிக்க காந்தியுடையதுமான சனிக்கிரகமானது பிராணிகளை மிகப் பீடிக்கிறதாகி [3]ப்ரம்மாவைத் தேவதையாகவுடைய ரோஹிணி நக்ஷத்திரத்தைப் [4] பீடிக்கிறதன்றோ? ஓ! மதுஸூதனரே! கேட்டையில் புகுந்த அங்காரகன், வக்ரியாக, ([5] = பின்னோக்கி) நண்பர்களின் கூட்டங்களை அழிப்பவன்போல, அநுஷத்தினிடம் செல்லுகிறான். ஓ! கிருஷ்ணரே! கௌரவர்களுக்குப் பெரிய பயமானது நிச்சயமாய் நேரிட்டுவிட்டது. ஓ! வார்ஷ்ணேயரே! அங்காரகக்ரகமானது சித்திரை நக்ஷத்திரத்தை அதிகமாகப் [6] பீடிக்கிறதன்றோ? [7] சந்திரனுடைய களங்கமானது குறைந்துவிட்டது. [8]ராகுவும் சூர்யனை அடைகிறான். இதோ ஆகாயத்திலிருந்து கொள்ளிகள் சத்தத்தோடும் சுழன்றுகொண்டும் விழுகின்றன. ஓ! மாதவரே! தவிரவும், யானைகள் அலறுகின்றன. குதிரைகள் கண்ணீரைச் சொரிகின்றன. ஓ! மாதவரே! அவைகள் ஜலத்தையும் புல்லையும் விரும்பவில்லை. ஓ! மஹாபாஹுவே! இந்த நிமித்தங்கள் ஏற்பட்டபொழுது, குரூரமும் பிராணிகளை நாசஞ்செய்வதுமான பயம் நேரிட்டதாகச் சொல்லுகின்றனர். ஓ! கேசவரே! மதுஸூதனரே! இங்கே, துர்யோதனனுடைய எல்லாச் சேனைகளிலுமுள்ள குதிரைகளுக்கும் யானைகளுக்கும் மனிதர்களுக்கும் சிறிது உண்டாலும் மலம் அதிகம் காணப்படுகிறது. அதை வித்வான்கள் தோல்விக்கு அடையாளமாகச் சொல்லுகின்றனர். ஓ! கிருஷ்ணரே! பாண்டவர்களுடைய வாகனம் மிக்க ஸந்தோஷத்தை அடைந்திருக்கிறது. மிருகங்களும் வலமாகவே இருக்கின்றனவென்றும் சொல்லுகின்றனர். அது, அவர்களுடைய வெற்றிக்கு அடையாளமாகும். ஓ! கேசவரே! துர்

1 'கடுமையானது' என்பதனால், 'இயற்கையில் குரூரமானது' என்பதும், 2 'மிக்க காந்தியுடையது' என்பதனால், 'அதிக கிரணத்தையுடையது' என்பதும் விளங்கும்.

3 'ப்ராஜாபத்யம் ஹி நக்ஷத்திரம்' என்பது மூலம்; 'ப்ரஜைகளுக்கு அரசனான துரியோதனனுடைய நாமநக்ஷத்திரம்' என்றும், 'அது உத்திரட்டாதி' என்றும் பழைய உரை கூறுகிறது.

4 அதன் காந்தியைக் குறைக்கிறது. இது அரசர்களுள் பெரும்போர் நேரும் என்பதைத் தெரிவிக்கிறது.

5 இது ஆயுததாரிகளுக்குப் பீடையைத் தெரிவிப்பது.

6 இது அரசர்களுக்கு மிக்க பயத்தைத் தெரிவிப்பது.

7 க்ஷீணசந்திரன் என்பது.

8 இது கர்த்தரியோகம் என்னப்படும். இது ஸூர்ய வம்சத்தரசர்களுக்கும் சந்திரவம்சத்தரசர்களுக்கும் அழிவைக்காட்டுவது.

யோதனனுக்கு எல்லாமிருகங்களும் இடமாயிருக்கின்றன. சரீரங்களி லில்லாமலே வார்த்தைகளும் உண்டாகின்றன. அது தோல்விக்கு அடையாளம். புண்ணிய பக்ஷிகளான மயில்களும் ஹம்ஸங்களும் ஸாரஸங்களும் சாதகங்களும் சக்கிரவாகக்கூட்டங்களும் பாண்டவர்களைப் பின்தொடருகின்றன. [1] கழுகுகளும் கங்கங்களும் கொக்குக்களும் பருந்துகளும் ராக்ஷஸர்களும் செந்நாய்களும் ஈக்கூட்டங்களும் கௌரவர்களைத் தொடர்கின்றன. துர்யோதனனுடைய சேனைகளிலுள்ள பேரிகைகளில் சப்தமே இல்லை. பாண்டவர்களுடைய பேரிகைகள் அடியாமலே முழங்குகின்றனவாம். துர்யோதனனுடைய சேனைகளில் கிணறு குட்டை முதலியன பெரியவிருக்ஷங்கள்போலச் சப்திக்கின்றன. அது தோல்விக்கு அடையாளம். ஓ! மாதவரே! [2] இந்திரனாலே தசைமாரியும் உதிரமாரியும் பொழியப்பட்டன. அப்படியே, ஸூர்யனோடுகூடியதும் மதில் அகழ் கோட்டைகளோடுகூடியதும் அழகான தோரணங்களோடு கூடியதுமாய்க் கந்தர்வநகரமானது நேரிட்டிருக்கிறது. அந்தக் கந்தர்வநகரத்தில் கறுப்பான பரிவேஷமானது ஸூர்யனைச் சுற்றிக்கொண்டிருக்கிறது. நரியானது, காலைமாலை ஸந்திகளில் பெரியபயத்தைத் தெரிவிக்கிறதாக ஊளையிடுகிறது. அது தோல்விக்கு அடையாளம். ஓ! மதுஸூதனரே! ஒரு சிறகும் ஒருகண்ணும் ஒருகாலுமுள்ள பறவைகள் மலஜலங்களை விடுகின்றன. அது பெரிதும் கோரமுமான தோல்வியின் அடையாளம். கறுத்த கழுத்துள்ளவைகளும் சிவந்த காலுள்ளவைகளும் அச்சத்தைத் தருபவைகளுமான பறவைகள் ஸந்திக்கு எதிராகச் செல்லுகின்றன. அது தோல்விக்கு அடையாளம். ஓ! மதுஸூதனரே! இவன், முதலாவது, பிராம்மணர்களைப் பகைக்கிறான்; பிறகு, குருக்களைப் பகைக்கிறான்; பக்தியோடுகூடியவர்களாயினும், வேலைக்காரர்களையும் பகைக்கிறான். அது தோல்விக்கு அடையாளம். ஓ! மதுஸூதனரே! கிழக்குத்திக்குச் சிவந்த ஆகிருதியுடையதும் தென்திக்குக் கத்தியின் வர்ணமுடையதும் மேலைத்திக்குச் சுடாதமண்பாத்திரத்துக்கு நிகரும் வடதிக்குச் சங்கம்போன்ற நிறமுடையதுமாகத் திக்குக்களின் வர்ணங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஓ! மாதவரே! துர்யோதனனுக்கு அந்த உத்பாதங்களின் தரிசனத்தில் எல்லாத்திக்குக்களும் ஜ்வலிக்கின்றவைகளாகப் பெரிதான பயத்தைத் தெரிவிக்கின்றன.

---

1 'க்ருத்ராஃ கங்காஃ பகாஃ ஶ்யேநாஃ' என்பது மூலம்.

2 'மேகத்தினாலே' என்றும் கொள்ளலாம்.

ஓ! அச்சுதரே! கனவினிடையில், யுதிஷ்டிரன் தம்பிமார்களுடன் ஆயிரக்கால் மண்டபத்தில் ஏறுவதாகக் கண்டேன். எல்லாரும் வெள்ளை வஸ்திரமும் வெள்ளைத்தலைப்பாகையும் உடையவர்களாகக் காணப்படுகின்றனர். எல்லாருக்கும் வெண்மையான ஆஸனங்களைக் காண்கிறேன். ஓ! கிருஷ்ணரே! உமக்கும் வெள்ளைவஸ்திரத்தையும் வெள்ளைத்தலைப்பாகையையும் வெண்மையான ஆஸனத்தையும் பார்க்கிறேன். ஓ! ஜனார்த்தனரே! கனவினிடையில், உமது [1] சரீரம் இரத்தத்தால் குழம்பினதும் நரம்புகளால் சுற்றப்பட்டதுமாகக் கண்டேன். யுதிஷ்டிரன், அளவற்ற பராக்கிரமமுடையவனாகி எலும்புக்குவியலிலேறி ஸந்தோஷத்துடன் பொற்பாத்திரத்தில் நெய்கலந்தபாயஸத்தைப் புஜித்தான். அவன் பூமியை விழுங்குவதாக நான் கண்டேன். அவன் உம்மால் அளிக்கப்பட்ட இந்தப்பூமியை நன்கு அனுபவிக்கப் போகிறான். பயங்கரமான செய்கையையுடையவனும் ஆண்மையிற் சிறந்தவனுமான அந்தப்பீமஸேனன் கையில் கதையைக்கொண்டுஉயரமான மலையிலேறி இந்தப்பூமியை விழுங்குகிறவன்போலக் காணப்பட்டான். அவன் பெரிய யுத்தத்தில் வெளிப்படையாக எங்களெல்லாரையும் நாசம்செய்யப்போகிறான். ஓ! ஹ்ருஷீகேசரே! எனக்குத் தெரியும். எங்கே தர்மம் இருக்கின்றதோ அங்கே ஜயம். ஓ! ஹ்ருஷீகேசரே! அந்தத் தனஞ்சயன் காண்டீவத்தைக்கொண்டு உம்முடன் வெள்ளையானையிலேறி மேலான ஸ்ரீயுடன் ஜ்வலிக்கிறவனாகக் காணப்பட்டான். ஓ! கிருஷ்ணரே! நீங்களெல்லாரும் யுத்தத்தில் துர்யோதனன் முதலான அரசர்களைக் கொல்லப்போகிறீர்கள். அதில் எனக்கு ஸந்தேகமில்லை. ஆண்மையில் சிறந்தவர்களான நகுலனும் ஸஹதேவனும் மகாரதனான ஸாத்தியகியும் வெளுப்பான தோள்வளைகளையும் [2]கண்டாபரணங்களையுமுடையவர்களும் வெண்மையான மாலைகளாலும் ஆடைகளாலும் சுற்றப்பட்டவர்களும் உத்தமமான நரவாகனத்தில் ஏறினவர்களுமாகக் காணப்பட்டார்கள். ஓ!

---

1 'ப்ருதிவி' என்பது மூலம். 'சரீரம்' என்பது பழையவுரை; பகவானுக்கு உலகமே திருமேனி ஆதலின், இங்ஙனம் பொருள் செய்யப்பட்டது போலும்.

2 'கண்டத்ரா' என்பதுமூலம். அது 'கண்டபூரகம்' என்றுபெயருடையது என்றும், 'தலைமுதல் தோள்வரையில் தொங்கும்படி அணிந்துகொள்ளப்படுவது' என்றும், 'அது கழுத்தை மறைப்பது' என்றும் பழையவுரை கூறுகிறது. 'கழுத்தைக்காக்கும்படி மார்பிலணியும் ஒருவகைக் கவசமாயிருக்கலாம்' என்பது ஆங்கில மொழிபெயர்ப்பின் கருத்து.

ஜனார்த்தனரே! துர்யோதனனுடைய சேனைகளில் [1]மூவர்கள் வெள்ளைக்குடையும் வஸ்திரமுமுடையவர்களாக என்னால் காணப் பட்டார்கள். அம்மூவரும் வெளுத்த தலைப்பாகையை உடையவர்க ளாகவும் காணப்படுகின்றனர். ஓ! கேசவரே! அஸ்வத்தாமா, கிருபர், ஸாத்வதனான கிருதவர்மா வென்று அவர்களை அறியக்கட வீர். ஓ! மாதவரே! எல்லா அரசர்களும் சிவந்த தலைப்பாகையை உடையவர்களாகக் காணப்படுகின்றனர். ஓ! புஜபலமுடையவரே! விபுவே! மகாரதர்களான பீஷ்மரும் துரோணரும், என்னோடும் துர் யோதனனோடும் ஒட்டகைபூண்ட தேரில் ஏறிக்கொண்டார்கள். ஓ! ஜனார்த்தனரே! நாங்கள் அகத்தியரால் ஆளப்பட்ட திக்கைநோக்கிச் சென்றோம். சீக்கிரத்தில் யமன் வீட்டை அடைவோம். நானும் மற்ற அரசர்களும் க்ஷத்திரியக்கூட்டமும் காண்டீவமாகிய அக்னியில் பிர வேசிப்போமென்பதில் எனக்கு ஸந்தேகமில்லை' என்றான்.

கேசவர், 'ஓ! கர்ண! என்னுடைய வார்த்தையானது உன்னுடைய மனத்தை அடையாதபடியால் இப்பொழுது பூமிக்கு அழிவானது நெருங்கிவிட்டதென்பது நிச்சயம். ஐயா! எல்லாப்பிராணிகளுக்கும் பெரிய நாசம் நேரிட்டபடியால் அநீதியானது, நீதியாகத்தோன்றி, உன்மனத்தைவிட்டு விலகாமலிருக்கிறது' என்றார். கர்ணன், 'ஓ! கிருஷ்ணரே! புஜபலமமைந்தவரே! வீரர்களான க்ஷத்திரியர்களை நாசம் செய்வதான இந்தப் பெரிய யுத்தத்திலிருந்து கரையேறி உயிருடன் உம்மைப் பார்ப்போமா? ஓ! கிருஷ்ணரே! குற்ற மற்றவரே! அப்படியில்லாவிட்டால், ஸ்வர்க்கத்தில் நிச்சயமாய் நமக்குச் சேர்க்கை ஏற்படும். அவ்விடத்தில் மறுபடியும் உம்முடன் சேருவோம்' என்றான். கர்ணன் இவ்விதம் சொல்லிவிட்டு மாதவரை இறுகத் தழுவிக்கொண்டு அவரால் விடைகொடுக்கப் பட்டுத் தேர்த்தட்டிலிருந்தும் இறங்கினான். பிறகு, மஹாத்மாவான ராதேயன் பொன்னாலலங்கரிக்கப்பட்ட தன் தேரிலேறிக்கொண்டு கலங்கின மனமுடையவனாகித் திரும்பினான். பிறகு, கேசவர், ஸாத் யகியுடன், அடிக்கடி ஸாரதியைநோக்கி, 'செல், செல்' என்று சொல்லிக்கொண்டு மிகவிரைவாகச் சென்றார்.

1 'ஏதே' என்னும் சொல்விடப்பட்டது.

## நூற்று நாற்பத்துநான்காவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(விதுரர் யுத்தத்தில் பலவீரர்கள் மாளக்கூடுமென்று சொல்லித் துக்கித்ததும், குந்தி கர்ணனுடைய வீரத்தன்மையில் பயந்து கங்கைக்கரையிலிருந்த அவனிடம் சென்றதும்.)

கிருஷ்ணன் நல்ல வார்த்தை பலிக்காமல் கௌரவர்களைவிட்டுப் பாண்டவர்களை அடைந்தபிறகு, விதுரர் குந்தியினிடம் சென்று துக்கத்துடன் மெதுவாகச் சொல்லலானார். 'ஓ! ஜீவிக்கின்றபுத்திரர்களையுடையவளே! எந்நாளும் கலகமில்லாமலிருப்பதில் என்னுடைய அபிப்பிராயமிருப்பதை நீ அறிகிறாய். துர்யோதனன், கதறுகின்றவனை என்னுடையசொல்லை ஏற்கவில்லை. அரசனும் பலவானுமான இந்த யுதிஷ்டிரன், சேதிதேசத்தவர்களோடும் கேகயர்களோடும் பாஞ்சாலர்களோடும் பீமார்ஜுனர்களோடும் கிருஷ்ணரோடும் யுயுதானனோடும் நகுலஸஹதேவர்களோடும்கூடி உபப்லாவ்யத்தில் சேனையைக் கொணர்ந்து நிறுத்தியபிறகும், ஞாதிகளிடமுள்ள அன்பினால் வலிமையற்றவன்போலத் தர்மத்தையே விரும்புகிறான். அரசரான இந்தத் திருதராஷ்டிரரோ, பிராயத்தினால் முதியவராயிருந்தும், சாந்தியை அடையவில்லை. புத்திரனுடைய மதத்தினாலேயே மதமுள்ளவராகித் தர்மத்திற்கு விரோதமான வழியிலிருக்கிறார். ஜயத்ரதன் கர்ணன் துச்சாஸனன் சகுனி ஆகிய இவர்களுடைய கெட்டஎண்ணத்தினாலே ஒருவரோடொருவருக்குக் கலகமானது ஏற்படப்போகிறது. சிறந்த தர்மமுடைய இப்படிப்பட்டவர்களுடைய ராஜ்யமானது அதர்மத்தால் அபகரிக்கப்படுகிறதோ அவர்களுடைய இந்தத்தர்மமானது பயனுடன் கூடினதாக ஏற்படும். கௌரவர்களால் பலாத்காரத்தாலுண்டான தர்மம் செய்யப்படும் பொழுது, எவன் வருத்தத்தை அடையான்? கேசவர் ஸமாதானமென்னும் உபாயமில்லாமல் போனபடியால், பாண்டவர்கள் நன்கு முயலுவார்கள். அப்பொழுது, கௌரவர்களுக்கு வீரர்களை நாசம் செய்கின்ற அநீதியானது ஏற்படும். இதை ஆலோசித்துப் பகல்களிலும் இராத்திரிகளிலும் நான் நித்திரையை அடையவில்லை' என்றார்.

அந்தக் குந்தியோ, நன்மையைவிரும்பிச் சொல்லப்பட்ட அந்த வார்த்தையைக்கேட்டு, துக்கத்தால் வருந்திப் பெருமூச்சுவிட்டுக்

கொண்டு மனத்தினால் ஆலோசித்தாள்:—'இந்த யுத்தத்தில் ஞாதிகளுக்குப் பெரிதான நாசமும் நண்பர்களுக்கு அவமானமுமே ஏற்படக்காரணமான இந்தச்செல்வத்தை நிந்திக்கவேண்டும். பாண்டவர்களும் சேதியர்களும் பாஞ்சாலர்களும் யாதவர்களும் சேர்ந்து கௌரவர்களோடு போர்செய்யப்போகின்றனர். இதற்குமேற் பட்ட துக்கம் ஏது? யுத்தத்தில் நிச்சயமாகக் குற்றத்தைப்பார்க்கிறேன். அப்படியே, யுத்தம் செய்யாமலிருப்பதில் அவமானத்தைப் பார்க்கிறேன். தனமில்லாதவனுக்கு மரணமே சிறந்தது. ஞாதிகளை நாசம்செய்வதோ ஜயமும் ஆகிறதில்லை' என்று இவ்விதம் ஆலோசிக்கிறவளான என்னுடைய மனத்தில் துக்கமானது உண்டாகிறது. சந்தனுவின் புத்திரரான பிதாமஹரும் போர்வீரர்களுக்குப் பதியான ஆசார்யரும் கர்ணனும் துர்யோதனனிமித்தமாக எனக்குப் பயத்தை வளர்க்கிறார்கள். ஆசார்யரும் அபிமானமுடையவருமான துரோணர், ஒருசமயம், சிஷ்யர்களுடன் யுத்தம் செய்யாமலுமாகலாம். பிதாமஹரும் பாண்டவர்களிடம் அன்புபாராட்டமாட்டாரா? வீணான அறிவுடைய இந்தக்கர்ணனொருவனே, கெடுமதியுடன்கூடின துர்யோதனனுடைய அறியாமையை அனுஸரித்திருக்கிறான். இந்தப் பாவி எப்பொழுதும் பாண்டவர்களைப் பகைக்கவும் செய்கிறான். இவன் எப்பொழுதும் பாண்டவர்களுக்குப் பெரியதீங்குசெய்வதில் உறுதியுள்ளவனும் விசேஷமாகப் பலமுடையவனுமாயிருக்கிறான். ஆகையால், இப்பொழுது என்னுடையமனத்தை எரிக்கிறான். நானே, இப்பொழுது இவனை அடைந்து உண்மையைக் காண்பித்து இவனுடைய மனத்தைப் பாண்டவர்களிடத்தில் அன்புள்ளதாகச் செய்ய விரும்புகிறேன். தந்தையினுடைய அரண்மனையில் வசிக்கிறவளான எனக்கு, பகவானான துர்வாஸர், மகிழ்விக்கப்பட்டபொழுது, தேவதைகளை அழைக்கும் வரத்தை மந்திரத்துடன் அளித்தார். அரசருடைய அந்தப்புரத்தில் குந்திபோஜரால் உபசரிக்கப்பட்ட நான் மிக்க துக்கத்தையடைவதான மனத்தினால் பலவிதம் ஆலோசிக்கிறவளும், பெண்பாலுக்குரிய தன்மையினாலும் இளமையினாலும் மந்திரங்களுடைய பலாபலத்தையும் பிராம்மணருடைய வாக்கின் பலத்தையும் அடிக்கடி ஆலோசிக்கிறவளும் ஆனேன். அப்பொழுது, நம்பிக்கையுடன்கூடினவளான செவிலித்தாயினால் காக்கப்பட்டவளும் தோழிமார்களால் சூழப்பட்டவளும் தந்தைக்குப் பழியைப்போக்குபவளும் சீலத்தைக் காப்பவளுமாயிருந்த நான், 'எப்படி எனக்கு ஸுக்ருதமுண்டாகும்? எப்படி

குற்றமில்லாதவளாவேன்?' என்று ஆலோசித்து, உத்ஸாகத்தினாலே அந்தப் பிராம்மணரை வணங்கி, அந்த வரத்தையும் அடைந்து, இளமையினால் அப்பொழுதே அனுஷ்டித்தேன். அதனால், நான் கன்னிகையாயிருந்துகொண்டே தேவனான ஸூர்யனை அடைந்தேன். என்னுடைய கானீனகர்ப்பமானவனும் புத்திரன்போலப் பாதுகாக்கப்பட்டவனுமான இவன் தனக்கு நன்மையானதும் உடன்பிறந்தார்களுக்கு நன்மையானதுமான சொல்லை ஏன் செய்யமாட்டான்?' என்று ஆலோசித்தாள். குந்தி, இவ்விதம் உத்தமமான கார்யத்தின் நிச்சயத்தை உறுதி செய்துகொண்டாள். கார்யத்தின் விஷயத்தை உறுதி செய்துகொண்டு, கங்கையை நோக்கிச் சென்றாள். பிறகு, அவள், கங்கைக்கரையில், தயையுடன்கூடினவனும் ஸத்தியத்தை அடுத்தவனுமான அந்தப் புத்திரனுடைய சிறந்ததான ஜபஸ்தானத்தைப்பார்த்தாள். இரங்கக்கூடியவளான அவள், கார்யத்தின் நிமித்தம் ஜபத்தின்முடிவை எதிர்பார்க்கிறவளாகி, கிழக்கு முகமாகக் கைகளைத்தூக்கிக்கொண்டு நிற்கிற அவனுடைய பின்பக்கத்தில் நின்றாள். பாண்டுவின் மனைவியும் விருஷ்ணிகுலத்தில் பிறந்தவளுமான அவள், ஸூர்யனுடைய தாபத்தால் வருந்தித் தாமரைமாலைபோல வாடினவளாகிக் கர்ணனுடைய மேலாடையின் கீழ் நின்றாள். மாறாத விரதத்தையுடைய அவன், ஸூர்யன் முதுகைச் சுடும்வரை ஜபித்துவிட்டு, திரும்பிக் குந்தியைப் பார்த்து, நமஸ்கரித்துக் கை குவித்துக்கொண்டு துதித்தான். மிக்க ஒளியையுடையவனும் மானியும் தர்மத்தைத் தாங்குபவர்களில் சிறந்தவனும் ஸூர்யபுத்திரனும் விருஷனென்று பெயர் கொண்டவனுமான அவன், வியப்புடன் குந்தியை நோக்கி நியாயப்படி வணங்கிச் சொல்லலானான்.

## நூற்று நாற்பத்தைந்தாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(குந்தி, கர்ணன் தன்னுடைய புத்ரன் என்பதை அவனுக்குச் சொல்லி அவனைப் பாண்டவருடன் சேரும்படி தூண்டியது.)

கர்ணன், 'ராதைக்கும் அதிரதனுக்கும் புத்திரனும் கர்ணனுமான நான் உன்னை நமஸ்காரம் செய்கிறேன். நீ எதற்காக வந்தாய்? உனக்கு நான் என்ன செய்யவேண்டும்? சொல்' என்றான். குந்தி

னிடத்திலேயே பற்றின மனமுடையவர்களுமாகி, தாசார்ஹரான அவரை அழைத்துவந்து மறுபடியும் ஆலோசனையைச் செய்தார்கள். அப்பொழுது, யுதிஷ்டிரர், 'ஓ! புண்டரீகாக்ஷரே! ஹஸ்தினபுரம் சென்று ஸபையில் நீர் துர்யோதனனிடம் என்ன வார்த்தை சொன்னீர்? அதனை எங்களுக்குச் சொல்லக்கடவீர்' என்றார்.

வாஸுதேவர், 'ஹஸ்தினபுரம்சென்று ஸபையிலே நான் துர்யோதனனுக்கு உண்மையாகவும் பத்தியமாகவும் ஹிதமாகவும்சொன்னேன். கெடுமதியுள்ளவனான அவன் ஏற்றுக்கொள்ளவில்லை' என்றார். யுதிஷ்டிரர், 'ஓ! ஹ்ருஷீகேசரே! அந்தத் துரியோதனன் வழியல்லாத வழியை அடைந்திருக்க, கௌரவர்களில் முதியவரான பிதாமஹர், பொறுதவனான அவனை நோக்கி என்ன சொன்னார்? ஓ! மஹா பாக்கியவானே! பாரத்வாஜரின் புத்திரரான ஆசாரியர்தாம் என்ன சொன்னார்? தாய் தந்தையர்களான திருதராஷ்டிரரும் காந்தாரியும் என்ன சொன்னார்கள்? எங்களுக்குச் சிறிய தந்தையும் தர்மத்தை அறிபவர்களில் சிறந்தவரும் புத்திரர்களாகிய எங்களை விட்டுப்பிரிந்த சோகத்தால் தாபத்தையடைந்தவருமான விதுரர், திருதராஷ்டிரரின் புத்திரனை நோக்கி, என்ன சொன்னார்? ஓ! ஜனார்த்தனரே! ஸபையிலிருப்பவர்களான அரசர்களெல்லாருமே என்ன சொன்னார்கள்? அவற்றை நீர் உள்ளபடி சொல்லும். ஓ! கேசவரே! நீர் கௌரவர்களில் சிறந்தவரான பீஷ்மரிடத்திலும் திருதராஷ்டிரரிடத்திலும் எனக்காக எல்லா வார்த்தையையும் சொன்னீரல்லவா? கௌரவர்களுடைய ஸபையிலிருக்கின்ற அவர்களுடைய அந்த வார்த்தை, காமத்தாலும் லோபத்தாலும் நிரம்பியவனும் மந்தனும் 'நான் மிக்க அறிவுள்ளவன்'என்கிற அபிமானமுடையவனுமான துர்யோதனனுடைய மனத்தில், என்னிமித்தம் அப்ரியமானதால், நிற்கவில்லை. ஓ! கோவிந்தரே! அவர்களுடைய வார்த்தைகளை நான் கேட்க விரும்புகிறேன். ஓ! ஐயா! காலங்கடவாதபடி செய்யும். நீரல்லவோ எங்களுக்குக் கதி? நீரே தலைவர். நீரே குரு' என்றார்.

வாஸுதேவர் சொல்லுகிறார்: 'ஓ! அரசரே! கேளும்; ராஜஶ்ரேஷ்டரே! கௌரவர்களுடையமத்தியில் ஸபையில் அரசனான துர்யோதனனுக்கு எவ்வித வார்த்தையைச் சொன்னேனோ அதை என்னிடமிருந்து தெரிந்துகொள்ளும். நான் வார்த்தையைச் சொன்னபொழுது, திருதராஷ்டிரனுடைய புத்திரன் சிரித்தான். அப்பொழுது, பீஷ்மர், மிக்க சினமடைந்து இந்த வார்த்தையைச் சொல்லலானார். அவர், 'துர்யோதன! குலத்தின் நிமித்த

மாக நான் உனக்குச்சொல்லுகிற அதனை அறியக்கடவாய். ராஜ ச்ரேஷ்டனே! அதைக்கேட்டு உன் குலத்திற்கு நன்மையைச் செய். அப்பா! அரசனே! என்னுடைய பிதாவானவர் சந்தனுவென்று உலகத்தில் புகழ்பெற்றவர். அவருக்கு நான் ஒரு புத்திரனே உண்டானேன். அவர் புத்ரவான்களில் சிறந்தவர். அவருக்கு, 'பண்டிதர்கள் ஒரு புத்திரனுள்ளவனைப் புத்திரனில்லாதவனுகச் சொல்லுகிறார்கள். குலமானது நாசத்தை அடையக்கூடாது. ஆகையால், எப்படி இரண்டாவது புத்திரன் உண்டாவான்? எப்படி புகழானது விரிவையடையும்?' என்ற எண்ணமுண்டாயிற்று. நான் அவருடைய இஷ்டத்தையறிந்து, 'பிதாவின் நிமித்தமும் குலத்தினிமித்தமும் அரசனுகாதவனும் பொறிகளைக் கட்டினவனுமாகி, செய்யமுடியாத பிரதிஜ்ஞையைச் செய்து, ஸத்தியவதியென்கிற மாதாவை அழைத்து வந்தேன். அது உனக்கு நன்கு தெரிந்ததே. இதோ சந்தோஷத்துடன் பிரதிஜ்ஞையைக்காக்கிறவனுக வஸிக்கிறேன். அரசனே! அவளிடத்தில், மிக்க புஜபலமமைந்தவனும் ஸ்ரீமானும் கௌரவர்களுடைய குலத்தைத் தாங்குபவனும் தர்மாத்மாவுமான விசித்திரவீர்யனென்று எனக்குத் தம்பி உண்டானன். தந்தை ஸ்வர்க்கம் சென்றபிறகு, நான் வேலைக்காரனுயிருந்து கீழ்ப்படிந்து நடந்துகொண்டு, அந்த விசித்திரவீர்யனை என் ராஜ்யத்தில் அரசனுக நிலைநிறுத்தினேன். ராஜச்ரேஷ்டனே! நான் அரசர்களின் கூட்டத்தைவென்று அவனுக்குத் தகுந்த மனைவியைத்தேடினேன். நீயும் பலதடவை கேட்டிருக்கலாம். பிறகு, பரசுராமருடன் போரில் துவந்துவயுத்தத்தை அடைந்தேன். விசித்திர வீர்யனே, இந்தப்பட்டணத்து ஜனங்களால் ராமரிடமுண்டான பயத்தினுல் வெளியில் போகச்செய்யப்பட்டும் பத்தினியிடம் அதிகப்பற்றுதலுற்றும் க்ஷய ரோகத்தை அடைந்தான். அரசனில்லாமல் ராஜ்யத்தில் இந்திரன் மழையைப் பொழியாமற்போனபொழுது, ஜனங்கள் பசியாலும்பயத்தாலும் பீடிக்கப்பட்டு என்னையே தொடர்ந்தனர். அவர்களெல்லாம் என்னை நோக்கி, 'ஓ! சந்தனுவின் குலத்தை விருத்திசெய்பவரே! பிரஜைகளெல்லாம் குறைவை அடைந்துவிட்டன. எங்களுடைய க்ஷேமத்தின் பொருட்டு அரசராயிருக்கக் கடவீர். [1] ஈதி

1 ஈதிகள் = நாட்டுக்கு வரும் கேடுகள். அவை:—அதிகமழை, மழையின்மை, எலி, விட்டில், கிளி, அரசண்மை என்பன. திருக்குறள் எ௩௨ ஆவதின் உரையிற்பார்க்க. அதிவ்ருஷ்டி ரநாவ்ருஷ்டிஃ ஶலபா*மூஷகாஃ ‡ ஶுகாஃ || ‡ ப்ரத்யாஸந்நாச்ச ராஜாநஃ ஷடேதா ஈதயஃ ஸ்ம்ருதாஃ ||'

பாதைகளை நிவிருத்திக்கச்செய்யும். உமக்கு க்ஷேமமுண்டாகும். உமது பிரஜைகளெல்லாம் மிகக்கொடிய நோய்களாலே பீடிக்கப்படு கின்றன. ஓ! காங்கேயரே! சிலரே மிஞ்சியுள்ளனர்; அவர்களைக் காக்கவேண்டும். ஓ! வீரரே! நீர் நோய்களைப்போக்கிப் பிரஜை களைத் தர்மமாகக் காக்கக்கடவீர். நீர் ஜீவித்திருக்கும்பொழுது, ராஜ்யமானது அழிவையடைய வேண்டாம்' என்றனர். ஜனங்கள் கூக்குரலிடும்பொழுது, பிரதிஜ்ஞையைக் காப்பவனும் நன்ன டையை நினைப்பவனுமான என்னுடைய மனமானது கலங்கவே யில்லை. ஓ! மஹாராஜனே! பிறகு, பட்டணத்து ஜனங்களும் மங் களகுணமுள்ளவளும் எனது தாயுமான காளியும் வேலைக்காரர்களும் புரோகிதர்களும் ஆசார்யர்களும் மிகக் கற்றவர்களான வேதியர் களும், மிக்க வருத்தத்தையடைந்து, என்னை நோக்கி, 'ஓ! மகா புத்திமானே! பிரதீபனால் காக்கப்பட்ட ராஜ்யமானது உம்மை அடைந்து நசிக்கப்போகிறது. ஆகையால், நீர் எங்களுடைய நன்மைக் காக அரசராகவேண்டும்' என்று இடைவிடாமல் சொன்னார் கள். இவ்விதம் சொல்லக்கேட்ட நான், துக்கத்தை அடைந்தவனும் மிக்க கவலையை அடைந்தவனுமாகி அஞ்சலிசெய்துகொண்டு அந்த விஷயத்தில் பிதாவினிடம் வைத்த கௌரவத்தாலுண்டான பிரதிஜ் ஞையை அவர்களுக்கு அடிக்கடி தெரிவித்தேன். அரசனே! பிறகு, நான், மாதாவுக்குத் தயைவரச்செய்வதற்காகக் கரங்குவித் துக்கொண்டு, 'தாயே! நான் குலத்திற்காகவும் முக்கியமாக உனக் காகவும் வீர்யத்தைக்கட்டினவனும் அரசனாகாதவனுமாக இருக் கிறேன். என்னை ராஜ்யத்தைக் காப்பதில் ஏவாதே. சந்தனுவுக் குப் பிறந்த நான் கௌரவர்களின் வம்சத்தைத் தாங்குபவனாகிப் பிரதிஜ்ஞையை வீணாகச்செய்யேன். இந்தப் பிரதிஜ்ஞையை உனக் காகவே முழுதும் செய்தேன். புத்திரவாத்ஸல்ய முடையவளே! நான் இப்பொழுது உனக்கு ஏவலாளியும் தாஸனுமானவன்' என்று இவ்விதம் அந்த மாதாவுக்கு ஜனங்களுடைய முன்பில் நன் மொழி கூறி, அப்பொழுது, பிராதாவின் தாரங்களின் விஷயத்தில், மகா முனிவரான வியாஸரை வேண்டினேன். மகாராஜனே! நானும் தாயாரும், அந்த முனிவரை அருளுள்ளவராகச் செய்தபொழுது, உடனே, அவர் குழந்தைகளை உற்பத்திசெய்யும் விஷயத்தில் தயை

---

*மூஷிகா: என்பதும் †ககா: என்பதும் வேறு பாடம். ‡'வேற்றரசர் படை யெடுப்பு' என்று ஆப்டே (Apte) என்பவருடைய வடமொழி அகராதியில் பொருள் செய்யப் பட்டிருக்கிறது.

செய்தார். மஹாராஜனே! பரதர்களுள் மிகச்சிறந்தவனே! அவர்! உடனே மூன்று புத்திரர்களை உண்டுபண்ணினார். உன்னுடைய தந்தை கண்ணில்லாமல் குருடனானமையால் அரசனாகவில்லை. மகாத்மாவும் உலகத்தில் புகழ்பெற்றவனுமான பாண்டு அரசனானான். அவனே அரசன். அவர்கள் (=பாண்டவர்கள்) அவனுடைய புத்திரர்கள்; பிதாவினுடைய சொத்து முதலியவைகளை அடையத் தக்கவர்கள். அப்பா! கலகத்தைச் செய்யாதே. ராஜ்யத்தில் பாதியைக்கொடு. நான் உயிருடனிருக்கையில், இவ்வுலகில் எந்த ஆண் பிள்ளை ராஜ்யத்தை ஆள்வான்? என் வார்த்தையை அவமதியாதே. எப்பொழுதும் உங்களுடைய பகை தணிதலை விரும்புகிறேன். புத்திரனே! அரசனே! எனக்கு உன்னிடத்திலும் அவர்களிடத்திலும் வித்தியாஸம் இல்லை. எல்லாரிடத்திலும் ஒரேவிதமான ப்ரியம் வைத்திருக்கிறேன். உன்னுடைய பிதாவுக்கும் காந்தாரிக்கும் விதுரனுக்குமுள்ள அபிப்பிராயமும் இதுவே. பெரியோர்களுடைய வார்த்தையைக் கேட்கவேண்டுமன்றோ? என்னுடைய சொல்லில் ஸந்தேகப்படாதே. உன்னையும் பூமி முதலிய எல்லாவற்றையும் நாசம் செய்யாமலிருப்பாய்' என்று சொன்னார்.

---

நூற்று நாற்பத்தெட்டாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(கிருஷ்ணர், துரோணரும் விதுரரும் காந்தாரியும் சொல்லிய வற்றைச் சொல்லியது.)

(வாஸுதேவர் சொல்லுகின்றார்.) 'உமக்கு மங்களமுண்டாகுக. பீஷ்மர் சொன்னபிறகு, பேசுவதில் ஸமர்த்தரான துரோணர் அரசர்களுடைய மத்தியில் துர்யோதனனை நோக்கிச் சொன்னதாவது: 'அப்பா! குலத்தினிமித்தம் ப்ரதீபரின் மைந்தரான சந்தனுவானவர் எப்படியிருந்தாரோ, குலத்தினிமித்தம் தேவவ்ரதரான பீஷ்மர் எப்படியிருந்தாரோ, அப்படியே, கௌரவர்களுடைய வம்சத்தை விருத்திசெய்பவரும் கௌரவர்களுக்கு அரசரும் தர்மாத்மாவும் நல்ல விரதமுடையவரும் நன்கு அடங்கின மனமுடையவரும் ஸத்தியஸந்தரும் ஜிதேந்திரியருமான பாண்டுராஜரும், தமையனாரான திருதராஷ்டிரருக்கும் புத்திமானும் தம்பியாருமான விதுரருக்கும் ராஜ்யத்தைக் கொடுத்தார். அரசனே! பிறகு, நழுவாதவரான

இவரை ஸிம்மாஸனத்தில் நிலைக்க வைத்துவிட்டுக் குருவம்சத்தா சரான பாண்டு, மனைவியருடன் வனம்சென்றார். மனிதருட் சிறந்த வரான விதுரரோ வேலைக்காரன்போலச் சாமரம் போட்டுக்கொண்டு வணக்கத்துடன் கீழிருந்து பணிவிடைசெய்தார். குழந்தாய்! பிறகு, எல்லாப்பிரஜைகளும் பாண்டுராஜரைப்போலத் திருதராஷ் டிரராஜரை விதிப்படி அடுத்திருந்தனர். பகைவரின் பட்டணங் களை ஜயிப்பவரான அந்தப் பாண்டு, திருதராஷ்டிரருக்கும் விதுரருக் கும் ராஜ்யத்தைக் கொடுத்துவிட்டுப் பூமிமுழுவதும் ஸஞ்சரித்தார். ஸத்தியமான பிரதிஜ்ஞையையுடைய விதுரர், பொக்கசத்தைக் காப்பதிலும் தானத்திலும் வேலைக்காரர்களைப் பார்ப்பதிலும் எல்லாவற்றையும் பொறுப்பதிலும் அமர்ந்தார். மிக்க பராக்கிர மத்தையுடையவரும் பகைவருடைய பட்டணங்களை ஜயிப்பவரு மான பீஷ்மர் சண்டை ஸமாதானங்களைச் செய்பவராகி, [1] அரசர்களை வகிக்கின்ற வேலைகளை மேற்பார்த்தார். மிக்க பலசாலியான திரு தராஷ்டிரராஜர் எப்பொழுதும் மஹாத்மாவான விதுரரால் தொடரப் பட்டு ஸிம்மாஸனத்திலிருந்தார். அவருடைய குலத்தில் பிறந்த நீ எப்படி குலத்தின் பேதத்தில் முயல்கிறாய்? ஓ! அரசனே! பிரா தாக்களுடன் சேர்ந்து (அவர்களுடன்) போகங்களை அனுபவிக்கக் கடவாய். அரசர்களில் சிறந்தவனே! நான் [2] ஏழைத்தன்மையினாலும் தனத்தின் நிமித்தத்தாலும் எப்படியும் சொல்லுகிறவனல்லேன். நான் பீஷ்மரால் கொடுக்கப்பட்டதில் திருப்தியடைகிறேன். உன் னால் கொடுக்கப்பட்டதை விரும்பவில்லை. அரசனே! நான் உன் னிடமிருந்தும் பிழைப்பின் உபாயத்தை விரும்பவில்லை. எங்கே பீஷ்மரோ அங்கே துரோணர். பீஷ்மர் எதைச் சொல்லுகிறாரோ அதைச்செய். பகைவரைவாட்டுபவனே! பாண்டுபுத்திரர்களுக் குப் பாதிராஜ்யம் கொடுக்கக்கடவாய். அப்பா! உனக்கும் அவர்க ளுக்கும் ஆசார்யனாயிருப்பது எனக்கு எப்பொழுதும் ஸமம். எனக்கு அஶ்வத்தாமா எப்படியோ, வெள்ளைக் குதிரைகளையுடைய அர்ஜுன னும் [3] அப்படியே. பலவாறான புலம்பலால் என்ன பயன்? தர்மம் எங்கேயோ அங்கேயே ஜயம்' என்றார்.

---

1 'அரசர்களுக்கு நன்கொடையளிப்பது, கொடுப்பதை நிறுத்துவது முதலிய கார்யங்கள்' என்பது பழையவுரை.

2 'கார்ப்பண்யாத்' என்பது மூலம்; 'யுத்தபயத்தினால்' என்பது பழையவுரை. 3 ஒரு சொல்விடப்பட்டது.

ஓ! மஹாராஜரே! அளவற்ற வல்லமையையுடைய துரோணர் இவ்விதம் சொன்னபிறகு, ஸத்தியமான பிரதிஜ்ஞையையுடையவரும் தர்மத்தை உணர்ந்தவருமான விதுரர், பிதாவான பீஷ்மருடைய முகத்தைத் திரும்பிப் பார்த்துக்கொண்டு, பின்வரும் வார்த்தையை உரைக்கலானார்: 'ஓ! தேவவ்ரதரே! நான் சொல்லுகிற இந்த வார்த்தையை அறியக்கடவீர். நசித்துப்போன இந்தக் குருவம்சமானது மறுபடியும் உம்மால் தூக்கி எடுக்கப்பட்டது. ஆனால், புலம்புகிறவனான என்னுடைய சொல்லை அனாதரவு செய்கிறீர். இந்தக் குலத்தில் குலத்தைக் குற்றப்படுத்துகின்ற இந்தத் துர்யோதனனென்பவன் யார்? லோபத்தால் அவமதிப்பையடைந்தவனும் நன்றியறியாதவனும் பேராசையால் அறிவுகெட்டவனும் இழிந்தவனுமான இவனுடைய புத்தியை நீர் அனுசரித்திருக்கிறீரே? இவன் தர்மத்தையும் அர்த்தத்தையும் பார்க்கின்றவரான பிதாவினுடைய கட்டளையைக் கடக்கிறான். இந்தக் கௌரவர்கள் இவனுடைய செய்கையால் நசிக்கின்றனர். ஓ! மஹாராஜரே! இவர்கள் நசியாதவண்ணம் செய்யக்கடவீர். ஓ! விசாலமான புத்தியுடையவரே! என்னையும் திருதராஷ்டிரரையும், முன்னமே, சித்திரக்காரன் சித்திரத்தை எழுதி ஸ்தாபித்ததுபோல, ஸ்தாபித்தீர். ஓ! நீண்டகைகளையுடையவரே! பிரம்மாவானவர் பிரஜைகளைப் படைத்து அழிப்பதுபோலக் குலத்தினுடைய நாசத்தைப் பார்த்துக்கொண்டு அலக்ஷியம் செய்யாதீர். அல்லது, உம்முடைய புத்தியானது கெட்டுவிட்டதேயானால், விநாசம் ஏற்பட்ட இப்பொழுது, என்னோடும் திருதராஷ்டிரரோடும் வனம்செல்லக்கடவீர். அல்லது, வஞ்சனையில் எண்ணமுள்ளவனும் மிக்க துர்ப்புத்தியுள்ளவனுமான துர்யோதனனைக் கட்டிப்போட்டுவிட்டு இப்பொழுது இந்த ராஜ்யத்தைப் பாண்டவர்களால் காக்கப்பட்டதாக விரைவில்செய்து ஆளும். ஓ! ராஜஶ்ரேஷ்டரே! தயைசெய்யும். பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் அளவற்ற பராக்கிரமமுடைய அரசர்களுக்கும் பெரிய அழிவு காணப்படுகிறது' என்று சொன்னார்.

இவ்விதம் சொல்லிவிட்டு, அப்பொழுது, அந்த விதுரர், மனம் நைந்தவரும் சிந்திக்கிறவருமாகி அடிக்கடி பெருமூச்சுவிட்டார். பிறகு, ஸுபலராஜனுடைய புத்திரியான காந்தாரியானவள் குலத்தின் நாசத்தில் பயந்தவளாகிக் கோபத்தினாலே அரசர்களுக்கெதிரில் பாவபுத்தியுள்ளவனும் குரூரனும் புத்திரனுமான துர்யோத

னனே நோக்கித் தர்மத்தோடும் அர்த்தத்தோடும் கூடினதாகச் சொல்லலானுள். 'ராஜஸபையில் பிரவேசித்த அரசர்களும் ஸபையிலிருக்கின்ற மற்றப் பிரம்மரிஷிகளும் கேட்கட்டும். துர்யோதன! பாவியும் மந்திரிகளோடும் வேலைக்காரர்களோடும் கூடினவனுமான உன்னுடைய குற்றத்தைச் சொல்லப்போகிறேன். கௌரவர்களுடைய ராஜ்யமானது முறைப்படி அனுபவிக்கக்கூடியது. இது கிரமமாக வந்த நமது குலதர்மம். கெட்ட புத்தியுடையவனே! மிக்க குரூரமான செய்கையுடையவனே! நீ கௌரவர்களுடைய ராஜ்யத்தை அநியாயத்தால் கெடுக்கிறுய். புத்திமானுன திருதராஷ்டிரர் ராஜ்யத்திலிருக்கிறுர். அவருடைய தம்பியான விதுரர் வருங்கால அறிவுடையவராயிருக்கிறுர். இவ்விருவரையும் கடந்து இப்பொழுது அறியாமையால் ஏன் அரசனுயிருப்பதை விரும்புகிறுய்? மகானுபாவர்களான அரசரும் விதுரரும், பீஷ்மரிருக்கும்பொழுது, பராதீனர்களாயிருக்கவேண்டும். மஹாத்மாவும் புருஷச்ரேஷ்டருமான இந்தக் கங்கா புத்திரரோ, தர்மத்தை அறிந்தவராகையால், ராஜ்யத்தை விருப்பவில்லை. (பகைவரால்) அணுகமுடியாததான இந்த ராஜ்யமோ பாண்டுவினுடையது. இப்பொழுது, அவருடைய புத்திரர்கள் வல்லமையுடையவர்களாயிருக்கிறுர்கள். மற்றவர்கள் வல்லமையுடையவர்களல்லர். பாண்டவர்களுடைய பிதாமஹரைச் சேர்ந்ததும் புத்திர பௌத்திரர்களை அடுத்து வருவதுமான அப்படிப்பட்ட இந்த ராஜ்யம் முழுவதும் பாண்டவர்களைச் சேர்ந்தது. கௌரவர்களில் சிறந்தவரும் மகாத்மாவும் ஸத்தியஸந்தரும் புத்திசாலியுமான பீஷ்மர் எதைச் சொல்லுகிறுரோ அதை எல்லாம், நாம், ராஜ்யத்தையும் ஸ்வதர்மங்களையும் காக்கிறவர்களாகி, மறுக்காமல் செய்யவேண்டும். பெரிய விரதத்தையுடைய பீஷ்மரது கட்டளைப்படி, இந்த அரசரும் விதுரரும் சொல்லுவார்களேயானுல், அது நண்பர்களால் கட்டளையிடக்கூடிய தர்மத்தை முன்னிட்டு மிக நீண்டகாலம் செய்யக்கூடியதாகும். நியாயமாக வந்ததான கௌரவர்களுடைய இந்தராஜ்யத்தைத் தர்மபுத்திரனுன யுதிஷ்டிரன் திருதராஷ்டிரராஜரால் ஏவப்பட்டவனுகிப் பீஷ்மரை முன்னிட்டுக்கொண்டு ஆளட்டும்' என்று சொன்னுள்.

---

நூற்று நாற்பத்தோன்பதாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(கிருஷ்ணர் திருதராஷ்டிரன் துரியோதனனுக்குச் சொல்லியதைக் கூறியது.)

ஓ! அரசரே! காந்தாரியானவள் இவ்விதம் சொன்னபொழுது, அரசனான திருதராஷ்டிரன், அரசர்களுடைய மத்தியில் துர்யோதனனை நோக்கி இவ்விதம் சொல்லலானான்: 'துர்யோதன! மகனே! இதனை அறியக்கடவாய். (உனக்குப்) பிதாவினிடம் கௌரவமிருக்குமேயானால் நான் உன்னைநோக்கிச் சொல்வதை அப்படியே செய்யக்கடவாய். உனக்கு க்ஷேமமுண்டாகுக. [1] ஸோமனென்கிற பிரஜாபதியானவன் முன் கௌரவர்களுடைய வம்சத்தை விருத்திசெய்தவன். ஸோமனிடமிருந்து ஆறுமவராக நகுஷபுத்திரனான அந்த யயாதி உண்டானார். அவருக்கு ராஜர்ஷிகளில் சிறந்தவர்களான ஐந்து புத்திரர்கள் உண்டானார்களல்லவா? அவர்களுள் மிக்க பராக்கிரமத்தையுடையவரும் பிரபுவுமான யதுவானவர் மூத்தவராக உண்டானார். அவர்களுள், இளையவரும் நமது வம்சத்தை வளரச்செய்தவருமான பூருவானவர், விருஷபர்வாவினுடைய புத்திரியான சர்மிஷ்டையினாலே பெறப்பட்டார். பரதஶ்ரேஷ்டனே! யதுவோ, தேவயானைக்குப் புத்திரரானார். அப்பா! அளவற்ற பராக்கிரமமுடையவரும் வித்துவானுமான சுக்கிராசார்யருக்குப் பெண்வழிப் பேரரும் யாதவர்களின் வம்சத்தை வளரச்செய்தவரும் பலவானும் பராக்ரமத்தில் ஒப்புக்கொள்ளப்பட்டவருமான அந்த யதுவோ, கர்வம் நிறைந்து மிகவும் புத்திமந்தமாகி, க்ஷத்திரியஜாதியை அவமதித்தார். பலத்தாலும் கர்வத்தாலும் மதிமயக்கத்தை அடைந்தவரும் ஒருவராலும் வெல்லப்படாதவருமான அவர், பிதாவின் கட்டளையில் இருக்கவுமில்லை; பிதாவையும் பிராதாக்களையும் அவமதிக்கவும் செய்தார். நான்கு எல்லையுள்ள பூமியிலும் யதுவே பலவானானார். அவர் அரசர்களை வசம்செய்துகொண்டு ஹஸ்தினபுரத்தில் வஸித்தார். காந்தாரியின் புத்திரனே! நகுஷருடைய புத்திரரும் (யதுவுக்குப்) பிதாவுமான யயாதி, மிக்க சினம்கொண்டு, புத்திரரான அவரைச் சபித்தார்; ராஜ்யத்திலிருந்து நீக்கவும் செய்தார். பிறகு, எந்தப் பிராதாக்கள் பலத்தால் கொழுத்தவர்களாகி அந்த யதுவை

---

1 ஸ்ருஷ்டிகர்த்தர்கள் இருபத்தொருவரில் ஸோமனொருவன்.

அனுஸரித்திருந்தனரோ அந்தப் புத்திரர்களையும் யயாதியானவர் கோபத்தால் சபித்தார். பிறகு, ராஜஸ்ரேஷ்டரான யயாதி, தம்வசம் இருக்கிறவரும் கட்டளையிடக்கூடியவரும் இளையகுமாரருமான பூருவை ராஜ்யத்திலிருத்தினர். இவ்விதம் மூத்தவனுயிருந்தாலும், மிக்க கர்வமுள்ளவனுயிருந்தால், ராஜ்யத்தை அடைகிறதில்லை. இளையவர்களாயிருந்தாலும் பெரியோர்களை அடுப்பதனல் ராஜ்யத்தை அடைகின்றனர். அப்படியே, எல்லாத் தர்மங்களையும் அறிந்தவரும் என்னுடைய தந்தைக்குப் பாட்டனருமான பிரதீபரென்கிற அரசர், மூன்று உலகங்களிலும் பிரஸித்தமாயிருந்தார். தர்மத்துடன் ராஜ்யத்தை ஆளுகின்ற அந்த ராஜஸ்ரேஷ்டருக்குத் தேவர்களுக்குச் சமமானவர்களும் புகழ்பெற்றவர்களுமாக மூன்று புத்திரர்கள் உண்டானர்கள். அப்பா! தேவாபியென்பவர் மூத்தவரும் பாஹ்லீகரென்பவர் அவருக்கடுத்தவரும், தைர்யசாலியும் எனது பிதாமஹருமான சந்தனுவானவர் மூன்றுமவருமாகப் பிறந்தார்கள். பெரிதான பராக்கிரமத்தையுடையவரும் ராஜஸ்ரேஷ்டருமான தேவாபியோ, தோலில் ரோகத்தோடு (=குஷ்டத்தோடு) கூடினவராயிருந்தார். அவர் தர்மத்தைச் சீலமாகக் கொண்டவரும் உண்மையே பேசுபவரும் பிதாவின் பணிவிடையில் பற்றுள்ளவரும் பட்டணத்திலுள்ளவர்களுக்கும் தேசத்தோர்களுக்கும் ஸம்மதமானவரும் ஸாதுக்களால் பூஜிக்கப்பட்டவரும் இளையவர்களும் முதியவர்களுமாகிய எல்லாருக்கும் மனத்திற்கு இனியவரும் கொடையில் சிறந்தவரும் சொன்னசொல் தவருதவரும் எல்லாப் பிராணிகளுடைய நன்மையிலும் பற்றுள்ளவரும் தந்தையினுடைய கட்டளையிலும் பிராம்மணர்களுடைய கட்டளையிலும் இருப்பவரும் பாஹ்லீகருக்கும் அப்படியே மகாத்மாவான சந்தனுவுக்கும் பிரியமான தமையனருமாயிருந்தார். சேர்ந்தவர்களும் மகாத்மாக்களுமான அவர்களுக்குப் பெரிதான நல்ல ஸகோதரத்தன்மையும் ஏற்பட்டது. பிறகு, சிலகாலம் சென்றபின், வயதுசென்றவரான ராஜஸ்ரேஷ்டரானவர் அபிஷேகத்திற்காக ஸாமக்கிரிகளை முறைப்படி செய்வித்தார். விபுவான அவர் மங்களத்திற்குரிய எல்லாவற்றையும் செய்வித்தார். அவரை நோக்கி எல்லாப் பிராம்மணர்களும் முதியவர்களும் நகரத்தார்களும் தேசத்தார்களும் தேவாபியின் அபிஷேகத்தைத் தடுத்தார்கள். அந்த அரசரோ, அபிஷேகத்தைத் தடுத்ததைக் கேட்டுக் கண்ணீர்சொரிந்தார்; புத்திரரைப்பற்றித் துக்கிக்கவும் செய்தார். இவ்விதம் அந்தத் தேவாபி, கொடையில் வல்லவரும் தர்

மத்தையறிந்தவரும் ஸத்தியஸந்தருமாக இருந்தார். பிரஜைகளுக்குப் பிரியராயிருந்தும் தோலின் ரோகதோஷத்தால் தூஷிக்கப்பட்டார்; 'அங்கப்பழுதுள்ள அரசனைப்பற்றித் தேவர்கள் மகிழ்கிறதில்லை' என்பதுபற்றிப் பிராம்மணஸ்ரேஷ்டர்கள் ராஜஸ்ரேஷ்டரைத் தடுத்தார்கள். பிறகு, புத்திரன்விஷயமான கவலையால் அவர் சரீரத்தில் துன்பத்தையடைந்து மரித்தார். அவர் மரித்ததைப் பார்த்துத் தேவாபியானவர் வனத்தையடைந்தார். பாஹ்லீகரானவர் ராஜ்யத்தைவிட்டு அம்மான்வீட்டை அடுத்தவராகித் தந்தையரையும் உடன்பிறந்தார்களையும் விட்டு மிகச் செழிப்பான (மாமன் ராஜ்யத்தை) அடைந்தார். அரசனே! தந்தை இறந்தபொழுது, உலகத்தில் புகழ்பெற்ற சந்தனுவோ பாஹ்லீகரால் அனுமதிசெய்யப்பட்டு அரசராகி ராஜ்யத்தை ஆண்டார். பாரத! அப்படியே, மூத்தவனான நான், இப்பொழுது, புத்திமானான பாண்டுவினால் அங்கப்பழுதுள்ளவனென்று ராஜ்யத்திலிருந்தும் நழுவும்படிசெய்யப்பட்டேன். இளையவனாயிருந்தும், பாண்டுவே அரசனாகி ராஜ்யத்தை அடைந்தான். பகைவரை அடக்குபவனே! பாண்டு இறந்தபிறகு, இந்த ராஜ்யம் அவனுடைய புத்திரர்களைச் சேர்ந்தது. நான் ராஜ்யத்தில் பாகமில்லாதவனாயிருக்கும்பொழுது, நீ எப்படி ராஜ்யத்தை விரும்புகிறாய்? ராஜபுத்திரனல்லாதவனும் உடையவனாகாதவனுமாகிப் பிறர் சொத்தைக் கவர விரும்புகிறாய். யுதிஷ்டிரன் ராஜபுத்திரனும் மகாத்மாவுமானவன். இந்த ராஜ்யம் அவனுக்கு நியாயமாக வந்தது. அவன் இந்தக் குருவம்சத்திற்குப் போஷகனும் ஆளுபவனுமானவன். அவன் ஸத்யஸந்தன். அப்படியே, அவன் அஜாக்கிரதையில்லாதவனும் பந்துக்கூட்டத்தினுடைய கட்டளையிலிருப்பவனும் ஸாதுவும் பிரஜைகளுக்குப் பிரியனும் நண்பர்களிடம் தயையுள்ளவனும் புலன்களை வென்றவனும் ஸாதுஸமூகத்தைத் தாங்குகிறவனுமானவன். அவனிடத்தில் க்ஷமை, ஸகித்தல், அடக்கம், நேர்மை, தவறாதவிரதம், சாஸ்திரம், அஜாக்கிரதையில்லாமை, பிராணிதயை, சிக்ஷையென்கிற எல்லா ராஜகுணங்களுமிருக்கின்றன. வணக்கமற்றவனே! ராஜபுத்திரனல்லாதவனும் கெட்டநடையுள்ளவனும் லோபியும் எப்பொழுதும் உறவினர்களிடம் கெட்டஎண்ணமுள்ளவனுமான நீ பிறருக்குக் கிரமமாக வந்ததான இந்த ராஜ்யத்தைப் பறித்துக்கொள்ள எப்படி வல்லவனாவாய்? அரசனே! மோகத்தைவிட்டு வாகனங்களோடும் பரிவாரங்களோடும் பாதிராஜ்யத்தைக் கொடு. அதன் மிச்சமானது

தம்பிகளுடன் கூடின உன்னுடைய பிழைப்பிற்குப் போதுமானது' என்றான்.

---

நூற்று ஐம்பதாவது அத்யாயம்.

## பகவத்யாநபர்வம். (தொடர்ச்சி.)

(துரியோதனனுடைய உத்தரவுப்படி அரசர்கள் போருக்காகக் குருக்ஷேத்திரத்திற்குப் புறப்பட்டதையும் ஸாமதான பேதங்களால் வசப்படாததால் துரியோதனன் விஷயத்தில் தண்டோபாயமே தக்கதென்பதையும் ஸ்ரீ கிருஷ்ணர் பாண்டவர்களுக்குச் சொல்லியது.)

இவ்விதம் பீஷ்மராலும் துரோணராலும் விதுரராலும் காந்தாரியினாலும் திருதராஷ்டிரனாலும் சொல்லப்பட்டபொழுது, மந்தனான துர்யோதனன் அறியவேயில்லை. மந்தனான அவன், எல்லாவற்றையும் உதறிவிட்டுக் கோபத்தால் மிகவும் சிவந்தகண்களை உடையவனாகி எழுந்திருந்தான். அரசர்களும் (உயிரில் ஆசையை) விட்டவர்களாகி அவனைப் பின்தொடர்ந்தார்கள். அறிவிழந்தவர்களான பாரிலுள்ள அந்த அரசர்களை நோக்கி, 'குருக்ஷேத்திரத்திற்குப் புறப்படுங்கள்; இப்பொழுது பூசநக்ஷத்திரம்' என்றும் அடிக்கடி உத்தரவு செய்தான். பிறகு, அந்த அரசர்கள், காலத்தால்ஏவப்பட்டுப் பீஷ்மரைச் சேனாதிபதியாகச் செய்துகொண்டு, ஸந்தோஷத்தை அடைந்தவர்களாகிச் சேனைகளுடன் சென்றார்கள். கௌரவர்களுடைய பதினோர் அக்ஷௌஹிணிகளும் வந்தன. அவைகளுடைய முன்னிலையில் பீஷ்மர் பனைக்கொடியுடன் விளங்கினார். அரசரே! இதில் உசிதமும் இந்தச் சமயத்திற்குத் தக்கதுமாயிருக்கிற அதைச் செய்யும். ஓ! பாரதரே! அரசரே! என்னுடையமுன்னே பீஷ்மராலும் துரோணராலும் விதுரராலும் காந்தாரியினாலும் திருதராஷ்டிரராலும் சொல்லப்பட்டதும் கௌரவர்களுடைய ஸபையில் நடந்ததும் உமக்குச் சொல்லப்பட்டன. ஓ! அரசரே! உமக்கு நல்ல சகோதரத் தன்மையை விரும்பி இந்த வம்சம் வேறுபடாமலிருப்பதற்கும் பிரஜைகளுடைய விருத்திக்குமாக நான் முதலில் ஸாமோபாயத்தைச் செய்தேன். எப்பொழுது ஸாமத்தை ஏற்கவில்லையோ, அப்பொழுது, நான் மறுபடியும் பேதத்தைப் பிரயோகித்தேன். தேவர்களையும் மனிதர்களையும்பற்றிய செய்கைகளையும் எடுத்துரைத்தேன். துர்யோதனன் ஸமாதானத்தை முன்னிட்ட வார்த்தையை ஆதரி

யாதபொழுது, நான் எல்லா அரசர்களையும் வரவழைத்துப் பேதத்தைச் செய்தேன். ஓ! பாரதரே! தலைவரே! என்னாலே ஆச்சரியகரமும் பயங்கரமும் கொடியவைகளும் மனிதரால் செய்யமுடியாதவைகளுமான செய்கைகள் செய்யப்பட்டன. அந்த அரசர்களை அதட்டித் துர்யோதனனைத் துரும்பாகச்செய்து, கர்ணனையும் சகுனியையும் அடிக்கடி பயமுறுத்திச் சூதாட்டத்தைக்குறித்துச் சொல்லித் திருதராஷ்டிரன் புத்திரர்களை அடிக்கடி நிந்தித்து, வார்த்தைகளாலும் (கலந்து) ஆலோசனையினாலும் அடிக்கடி எல்லா அரசர்களையும் பேதப்படுத்திவிட்டு, பிறகு, குருவம்சம் பிளவுபடாமலிருப்பதற்கும் காரியம் கைகூடுவதற்குமாகத் திரும்ப ஸாமோபாயத்துடன் தானத்தைச் சொன்னேன் :—‘சூரர்களான அந்த எல்லாப் பாண்டவர்களும் மானத்தைவிட்டுத் திருதராஷ்டிரருக்கும் பீஷ்மருக்கும் விதுரருக்கும் கீழ்ப்படிந்தவர்களாயிருக்கட்டும்; அவர்களுடைய ராஜ்யம் கொடுக்கப்படட்டும். அவரவர்கள் ஸ்வதந்த்ரராகாமல் அசக்தர்களாக ஆகட்டும். அரசரும் பீஷ்மரும் விதுரரும் சொல்லுவது உனக்கு நன்மை; ராஜ்யமுழுவதும் உனக்கு இருக்கட்டும். ஐந்து கிராமங்களைக் கொடு. ராஜஸ்ரேஷ்டனே! அவர்கள், உன்னுடைய தந்தையால் அவஸ்யம் தாங்கத்தக்கவர்களல்லரோ?’ என்றேன். இவ்விதம் சொல்லியும், துஷ்டபுத்தியுள்ள அவன் பாகத்தை விடவேயில்லை. அந்தப் பாவிகள்விஷயத்தில் நான்காவதான தண்டோபாயத்தைப் பார்க்கிறேன். வேறுவிதமாகப் பார்க்கவில்லை. அரசர்கள், அழிவைஅடைவதற்காகக் குருக்ஷேத்திரத்திற்குக் கிளம்பியும் விட்டார்கள். ஓ! அரசரே! கௌரவர்களுடைய சபையில் நடந்த இது உமக்குச் சொல்லப்பட்டது. ஓ! பாண்டவரே! அவர்கள் யுத்தமின்றி ராஜ்யத்தைக் கொடார். எல்லாரும் விநாசத்திற்குக் காரணமானவர்களும் மரணம் நெருங்கினவர்களுமாக இருக்கின்றனர்’ என்றார்.

பகவத்யாநபர்வம் முற்றிற்று.

நூற்றைம்பத்தோராவது அத்யாயம்.

## ஸைந்யநிர்யாணபர்வம்.

(யுதிஷ்டிரர்முதலானவர்கள் திருஷ்டத்யும்னனைச் சேனாதிபதி யாகச் செய்துகொண்டு குருக்ஷேத்ரத்திற்கு வந்தது.)

தர்மபுத்தியுள்ளவரும் யுதிஷ்டிரருமான தர்மராஜர், ஜனார்த்தன ருடைய வார்த்தையைக்கேட்டு அவருடைய முன்னே தம்பிமார்களை நோக்கிச் சொல்லலானார்: 'நீங்கள் சபையில் கௌரவர்களுடைய கூட்டத்தில் நடந்ததைக் கேட்டீர்களா? கேசவருடைய வாக்கியம் எல்லாம் மனத்தில் தரிக்கப்பட்டனவா? மனிதஶ்ரேஷ்டர்களே! ஆகையால், எனது சேனைகளின் பிரிவுகளைச் செய்யுங்கள். இந்த ஏழு [1] அக்ஷௌஹிணிகளும் வெற்றிக்காகச் சேர்ந்திருக்கின்றன. அவைகளுக்குப் பெயர்பெற்றவர்களான ஏழு தலைவர்களையும் தெரிந்து கொள்ளுங்கள். துருபதன், விராடன், திருஷ்டத்யும்னன், சிகண்டி, ஸாத்யகி, சேகிதானன், வீர்யமுள்ளவனான பீமஸேனன் ஆகிய இந்த வீரர்கள் சேனைத்தலைவர்கள். எல்லாரும் உடலை வெறுத்த வர்கள். எல்லாரும் தனுர்வேதத்தை அறிந்தவர்களும் சூரர்களு மாயிருப்பவர்கள். எல்லாரும் விரதத்தை நன்கு அனுஷ்டித்தவர் கள். எல்லாரும் லஜ்ஜையோடு கூடினவர்களும் நீதியுடன் கூடினவர் களும் போரில் வல்லவர்களுமானவர்கள். எல்லாரும் பாணங்களிலும் அஸ்திரங்களிலும் தேர்ந்தவர்களும் எல்லா அஸ்திரங்களாலும் யுத் தம் செய்பவர்களுமாயிருப்பவர்கள். ஸஹதேவ! குருநந்தன! இவர் களுள் ஏழுபேர்களுக்கும் நாயகனும், சேனைகளின் வகுப்பையறிந்த வனும், போரில் சரஜ்வாலையினாலே அக்கினிக்கு நிகரான பீஷ்ம ரைத் தாங்கக்கூடியவனும், உனக்குச் சம்மதனுமாயிருப்பவனைச் சொல்லு. புருஷஶ்ரேஷ்டனே! எவன் நமக்கு வல்லவனான சேனைத் தலைவன்?' என்றார்.

ஸஹதேவன், 'தர்மத்தை அறிந்தவரான எவரை அஞ்ஞாத வாஸத்தில் அடுத்திருந்து நமது பாகத்தைக் கேட்கிறோமோ, நமது ஸம்பந்தியும் ஸமமான துக்கத்தையுடையவரும் வீர்யமுள்ளவரும் அரசரும் மச்சதேசத்திற்குப் பதியும் பலவானும் அஸ்திரங் களைப் பயின்றவரும் யுத்தத்தில் அடங்காத மதங்கொண்டவரு மான விராடர், யுத்தத்தில் பீஷ்மரையும் அந்த மகாரதர்களையும்

---

1 ஆதிபர்வம் 31-ம் பக்கத்தில் காண்க.

பொறுப்பர்' என்றான். ஸஹதேவன் அவ்வித வார்த்தையைச் சொன்னபொழுது, பேச்சில் வல்லவனான நகுலன் அதற்கு அடுத்த க்ஷணத்தில் இந்த வார்த்தையை எடுத்தான்.

'பிராயத்தினாலும் சாஸ்திரத்தினாலும் தைர்யத்தினாலும் குலத்தினாலும் சுற்றத்தினாலும் சிறந்தவரும், துரோணரிடமிருந்தும் அஸ்திரத்தை அறிந்தவரும், எவராலும் வெல்லமுடியாதவரும், ஸத்தியமான பிரதிஜ்ஞையை உடையவரும், எந்நாளும் துரோணரிடத்திலும் மகாபலசாலியான பீஷ்மரிடத்திலும் எதிர்க்க முயல்கிறவரும், அரசர்களுடைய வம்சத்தின் முதலில் கொண்டாடத்தக்கவரும், சேனைகளுக்குப்பதியும், நூறு கிளைகளையுடைய மரம்போலப் புத்திர பௌத்திரர்களால் சூழப்பட்டவரும், வீரரும், பூபதியும், போரில் விளங்குகிறவரும், கோபத்தால் துரோணரை நாசம் செய்வதற்காகப் பத்தினியுடன் கோரமான தவத்தைச் செய்தவரும், அரசர்களில் சிறந்தவரும், நம்மைப் பிதாவைப்போல் எப்பொழுதும் நன்கு தாங்குகிறவரும், நமக்கு மாமனாருமான துருபதர், நமது சேனையின் முன்னணியை நடத்தட்டும். அவர், வந்தவர்களான துரோணரையும் பீஷ்மரையும் தாங்குவாரென்பது என் எண்ணம். அந்த அரசரோ, திவ்யாஸ்திரங்களை அறிந்தவரும் துரோணருக்கு நண்பருமாயிருப்பவர்' என்றான்.

மாத்ரியின் புத்திரர்களால் தங்களபிப்பிராயம் சொல்லப்பட்டபொழுது, குருநந்தனனும் இந்திரனுக்குப் புத்திரனும் இந்திரனுக்கு நிகரானவனுமான ஸவ்யஸாசி உரைக்கலானான்: 'தவத்தின் பெருமையினாலும் யாஜமஹரிஷியின் மகிழ்ச்சியினாலும், திவ்ய புருஷனும் ஜ்வாலைபோன்ற நிறத்தையுடையவனும் பெரிய புஜங்களையுடையவனுமாக உண்டானவனும் வீர்யசாலியும் சிறந்த வில்லுடையவனும் கவசம் பூண்டவனும் கத்திதரித்தவனுமாய்த் திவ்ய மங்களமான சிறந்த குதிரைகள்பூட்டிய தேரிலேறிக்கொண்டு கர்ஜிக்கின்ற மஹாமேகம்போல் ரதகோஷத்துடன் அக்னிகுண்டத்திலிருந்தும் கிளம்பினவனும் சிங்கத்துக்கொப்பான உறுப்புக்களின் அமைப்பையும் சிங்கத்தைப்போன்ற பராக்கிரமத்தையும் சிங்கத்திற்கு நிகரான மார்பையும் புஜங்களையும் வலிமையையுமுடையவனும் சிங்கம்போலக் கர்ஜிப்பவனும் சிங்கத்தையொத்த தோள்களுடையவனும் மிகுந்த காந்தியுடையவனும் நல்ல புருவங்களுடையவனும் நல்ல பற்களுடையவனும் நல்ல கன்னங்களுள்ளவனும் நல்ல கைகளையுடையவனும் நல்ல முகமுடையவனும் இளைத்திராதவனும் நல்ல தோள்ஸந்தி

எலும்புகளுள்ளவனும் மிகநீண்ட கண்களுள்ளவனும் நல்ல பாதங்களுள்ளவனும் மிக்க உறுதியுள்ளவனும் மதம்கொண்ட யானைபோல் எல்லாச்சஸ்திரங்களுக்கும் பிளக்கமுடியாதவனும் மெய்யே உரைப்பவனும் இந்திரியங்களை வென்றவனும் துரோணருடைய விநாசத்திற்காக உண்டானவனுமான திருஷ்டத்யும்னனை, வஜ்ராயுதத்திற்கும் இடிக்கும் ஸமமாகத் தாக்குகின்றவைகளும் ஸர்ப்பங்கள் போல் ஜ்வலிக்கின்ற முகத்தையுடையவைகளும் வேகத்தில் யமதூதர்களுக்குச் சமமானவைகளும் அக்னிக்கு நிகராக விழுகின்றவைகளும் யுத்தத்தில் பரசுராமரால் தாங்கப்படாதவைகளும் இடியின் வேகம்போன்ற குரூரமுமான பீஷ்மருடைய பாணங்களைத் தாங்குவானென்று நான் நினைக்கிறேன். ஓ! அரசரே! திருஷ்டத்யும்னனைத் தவிர, மஹாவ்ரதத்தையுடைய பீஷ்மரை எதிர்க்கின்ற மனிதனை நான் பார்க்கவில்லை யென்று என்னுடைய புத்தியானது நிச்சயிக்கிறது. வேகமுள்ள கைகளையுடையவனும் பலவிதமாக யுத்தம் செய்பவனும் உடைக்கமுடியாத கவசத்தையுடையவனும் ஸ்ரீமானுமான அவன் யானைக்கூட்டத்திற்குப் பதியான யானைபோலச் சேனாதிபதியாக என்னால் கருதப்பட்டான்' என்றான். அர்ஜுனனால் இவ்விதம் சொல்லப்பட்டபொழுது, பீமன் சொல்லத் தொடங்கினான்.

'ஓ! ராஜஸ்ரேஷ்டரே! அரசரே! (பீஷ்மருடைய வதத்திற்காக) துருபதனுக்குப் புத்திரனாக உண்டானானென்று வந்தவர்களான ஸித்தர்களாலும் ரிஷிகளாலும் சொல்லப்படுகிறவனும், யுத்தத்தில் திவ்யாஸ்திரத்தைப் பிரயோகிக்கின்ற அவனுடைய ரூபம் மனிதர்களால் மகாத்மாவான பரசுராமருடைய ரூபம்போல் பார்க்கப்படுகின்றவனும், யுத்தத்தில் ஆயுதத்துடன் ஸன்னத்தனாகத் தேரிலிருப்பவனுமான அந்தச் சிகண்டியை யுத்தத்தில் பிளப்பவனை நான் காணவில்லை. இரண்டு தேராளிகள் எதிர்க்கின்ற த்வைரதமென்கிற யுத்தத்தில் வீரனான சிகண்டியைத் தவிர, மற்றவன் மஹாவ்ரதரான பீஷ்மரைக் கொல்லமாட்டான். அவன் என்னால் சேனாதிபதியாகக் கருதப்பட்டான்' என்றான்.

யுதிஷ்டிரர் சொல்லுகிறார்: 'அப்பா! தர்மாத்மாவான கேசவர் எல்லா ஜகத்தினுடைய ஸாரமும்-அஸாரமும், பலமும்-அபலமுமாகிய எல்லாவற்றையும் இவர்களுடைய அபிப்பிராயத்தையும் அறிகிறார். தாசார்ஹரான க்ருஷ்ணர் எவனைச் சொல்லுவாரோ, அவன் அஸ்திராப்யாஸம் செய்தவனானாலும் அஸ்திராப்யாஸம் செய்யாதவனானாலும் முதியவனானாலும் இளையவனானாலும் அவனே எனக்கு ஸேனாபதியா

யிருக்கட்டும். அப்பா! இவர் நம்முடையவெற்றிக்கு மூலம்; வித்தியாஸத்திற்கும் மூலம். (நம்முடைய) பிராணனும்-ராஜ்யமும், [1] இருப்பும்-இல்லாமையும், ஸுகமும்-துக்கமும் இவரிடத்திலேயே உள்ளன. தரிக்கிறவரும் செய்கிறவரும் இவரே. இவரிடத்தில் கார்யஸித்தியானது நிலைத்ததாயிருக்கிறது. தாசார்ஹரான இவர் யாரைச் சொல்லுகிறாரோ அவன் நமது சேனைக்குப் பதியாகட்டும். பேசுகிறவர்களிற் சிறந்தவரான இவர் சொல்லட்டும். ராத்திரி நெருங்குகிறது; ஆகையால், சேனாதிபதியை அழைத்துக்கொண்டு கிருஷ்ணனுடையவசத்திலிருப்பவர்களாக, ராத்திரியின்மீதி சென்ற பிறகு, ஆயுதங்களைச் சந்தன முதலியவற்றால் பூஜைசெய்து ரக்ஷாபந்தனமும் ஸ்வஸ்திவாசனமும் செய்துவிட்டுப் போர்க்களத்திற்குச் செல்லுவோம்' என்றார்.

புத்திமானான அந்தத் தர்மராஜருடைய அந்த வார்த்தையைக் கேட்டு, புண்டரீகாக்ஷர், தனஞ்சயனைப்பார்த்துச் சொல்லலானார்:—'ஓ! மஹாராஜரே! உங்களால் சொல்லப்பட்டவர்களும் பராக்ரமத்துடன் யுத்தம் செய்பவர்களுமான இவர்கள் என்னுலும் உம்முடைய சேனைக்கு நாயகர்களாக ஒப்புக்கொள்ளப்பட்டவர்கள். உம்முடைய பகையை வதைப்பதற்கு எல்லாருமே வல்லவர்கள். இவர்களோ, பெரிதானசண்டையில் இந்திரனுக்கும் பயத்தை உண்டுபண்ணுவார்கள். லோபிகளும் கெட்ட சித்தமுள்ளவர்களுமான திருதராஷ்டிரரின் புத்திரர்களுக்குப் பயத்தை உண்டுபண்ணுவார்களென்பதைச் சொல்லவும் வேண்டுமோ? ஓ! தோள்வலி யமைந்தவரே! பாரதரே! என்னுலும் உமது ப்ரியத்திற்காகப் பெரிதான யுத்தநிமித்தம் அவ்விடத்தில் ஸமாதானம் ஏற்படும் என்று பெரிய முயற்சியானது செய்யப்பட்டது. தர்மத்தின் கடன் போய்விட்டது. [2] சொல்ல விருப்பமுள்ளவர்களுக்குச் சொல்லக் கூடியவர்களாக நாம் ஆகவில்லை. மூடனும் ஸமர்த்தனல்லாதவனுமான துரியோதனன் தன்னை விருப்பம் நிறைவேறினவனாக நினைக்கின்றான். தனத்தில் ஆதுரனான அவன் தன்னைப் பலத்துடன் இருப்பவனாகப் பார்க்கிறான். சேனையானது நன்கு சேர்க்கப்படட்டும். அவர்கள், கொன்றுதான் காரியம் கொள்ளப்படக் கூடியவர்களென்று என்னால் கருதப்பட்டார்கள். திருதராஷ்டிரரின் புத்திரர்கள், அர்ஜுனனையும் மிக்க கோபங்கொண்டவனான பீமஸேனனையும் யமனுக்கு நிகரான இரட்டையரையும் இரண்டாம் யமனான யுயுதானனையும் பொறுதவனான திருஷ்டத்யும்னனையும் அபிமன்யுவையும் உபபாண்டவர்களையும் விராடனையும்

1 ஸம்பத்தும் வறுமையும். 2 தூஷிக்க எண்ண முள்ளவர்களுக்கு.

துருபதனையும் சேனாபதிகளும் பயங்கரமான பராக்ரமத்தையுடையவர்களுமான மற்ற அரசர்களையும் பார்த்து, நிற்பதற்கும் வல்லவர்களாகார்கள். ஸாரமுள்ளதும் வெல்லமுடியாததும் அணுகமுடியாததுமான நம்முடைய சேனையானது போரில் துர்யோதனன் சேனையைக் கொன்றுவிடும்; சந்தேகமில்லை. ஓ! பகைவரை அடக்குபவரே! நான் திருஷ்டத்யும்னனைச் சேனாதிபதியாக நினைக்கிறேன்' என்றார்.

வாஸுதேவர் இவ்விதம் சொன்னபொழுது, அரசர்கள் மிகவும் சந்தோஷித்தனர். மனமகிழ்ச்சியுற்ற அவர்களுடைய சப்தமானது பெரிதாக உண்டாயிற்று. உடனே, யுத்தஸன்னத்தமென்று விரைகின்றவைகளும் ஓடுகின்றவைகளுமான சேனைகளுடைய பெரிய சப்தமானது உண்டாயிற்று. எங்கும் யானைகுதிரைகளுடைய சப்தங்களும் தேருருளைகளுடைய கோஷங்களும் எங்கும் சங்கதுந்துபிகளுடைய கோஷங்களும் நெருக்கமாக உண்டாயின. கொடியதும் கடல்போன்றதும் தேர்களாலும் காலாட்களாலும் யானைகளாலும் சிறந்ததுமான அந்தச் சேனைகளுடைய கூட்டமானது பெரிய அலைகளாலே கடல் கலங்குவதுபோலக் கலங்கிற்று. ஓடுகின்றவர்களும் ஒருவரை ஒருவர் அழைக்கின்றவர்களும் கவசங்களைக் கட்டிக்கொள்ளுகின்றவர்களும் பிரயாணம்செய்யப்போகின்றவர்களும்ஸைன்யங்களோடுகூடினவர்களுமான பாண்டவர்களுடைய சேனையானது எங்கும் பூர்ணமான கங்கைபோல் நெருங்க முடியாததாகக் காணப்பட்டது. முன்சேனையில் பீமசேனனும் கவசம்பூண்டவர்களான மாத்திரியின்புத்திரர்களும் சுபத்திரையின் புத்திரனான அபிமன்யுவும் த்ரௌபதியின் புத்திரர்களான உபபாண்டவர்களும் துருபதபுத்திரனான திருஷ்டத்யும்னனும் சென்றார்கள். ப்ரபத்ரகர்களும் பாஞ்சாலர்களும் பீமஸேனனை முன்னிட்டுக்கொண்டு சென்றார்கள். பிறகு, ஒலியானது பருவகாலத்தில் கடலின் ஒலிபோல் உண்டாயிற்று. ஸந்தோஷத்துடன் புறப்பட்டவர்களுடைய முழக்கமானது ஸ்வர்க்கத்தைத் தொட்டதுபோலிருந்தது. பகைவர்சேனையைப் பிளக்கின்றவர்களான வீரர்கள் கவசம்பூண்டு ஸந்தோஷத்தையடைந்தார்கள். குந்தீபுத்திரரான யுதிஷ்டிரராஜர் அவர்களின் மத்தியில் சென்றார். அரசரானவர் வண்டிகளையும் கடைவீதிகளையும் வேசிகளின் கூடாரங்களையும் தேர்முதலியவற்றையும் பொக்கசத்தையும் யந்திராயுதத்தையும் சிகித்ஸைசெய்கிற வைத்தியர்களையும் அற்பமானதையும் பலமானதையும் சிறிதும் துர்ப்பலமுமானதையும் பரிசாரகர்களையும்

மற்ற எல்லாவற்றையும் கிரகித்துக்கொண்டு போனார். பாஞ்சாலியும் மெய்யைச் சொல்லுகிறவளுமான த்ரௌபதியோ வேலைக்காரிகளாலும் வேலைக்காரர்களாலும் சூழப்பட்டவளாகப் பெண்பாலருடன் உபப்லாவ்யத்தில் திரும்பிவிட்டாள். பாண்டுபுத்திரர்கள், கோட்டை முதலிய ஸ்தாவரங்களும் துவாரபாலர்முதலிய ஜங்கமங்களுமான மூலப்படைகளால் செல்வம் மனைவி முதலியவற்றின் ரக்ஷணத்தைச் செய்துவிட்டு, பெரிய சேனையுடன் சென்றார்கள். ஓ! அரசரே! கோவையும் பொன்னையும் தானம் செய்பவர்களும் பிராம்மணர்களாலே சூழப்பட்டவர்களும் துதிக்கப்பட்டவர்களுமாகி ரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட தேர்களுடன் சென்றார்கள். கேகயர்களும் திருஷ்டகேதுவும் காசிராஜபுத்திரனான அபிபூவும் ச்ரேணிமானும் வஸுதானனும் ஜயிக்கபடாதவனான சிகண்டியுமாகிய எல்லாரும் மிக்க மகிழ்ச்சியடைந்தவர்களும் திருப்தியடைந்தவர்களும் கவசமணிந்தவர்களும்ஆயுதங்களைத் தரித்தவர்களும் நன்றாக அலங்கரிக்கப்பட்டவர்களுமாகி அரசரானயுதிஷ்டிரரைச் சூழ்ந்துகொண்டு பின்தொடர்ந்தார்கள். பின்பக்கத்தில் விராடனும் யஜ்ஞஸேனன்புத்திரனும் ஸோமககுலத்தவனுமான திருஷ்டத்யும்னனும் ஸுதர்மாவும் குந்திபோஜனும் திருஷ்டத்யும்னனுடைய புத்திரர்களும் நாற்பதினாயிரம் தேர்களும் ஐந்து மடங்குக்கதிகமான குதிரைகளும் பத்துமடங்கு காலாட்படையும் அறுபதினாயிரம் யானைகளும் அனாத்ருஷ்டியும் சேகிதானனும் திருஷ்டகேதுவும் ஸாத்யகியும் ஆகிய எல்லாரும் கிருஷ்ணார்ஜுனர்களைச் சூழ்ந்துகொண்டு சென்றார்கள். பாண்டவர்கள் குருக்ஷேத்திரத்தை அடைந்து சேனைகளை வகுத்தவர்களும் ஆயுதங்களைப் பிடித்தவர்களும் விருஷபங்கள்போலச் சப்திக்கின்றவர்களுமாகக் காணப்பட்டார்கள். பகைவரை அடக்குபவர்களான அவர்கள் குருக்ஷேத்திரத்தில் பிரவேசித்துச் சங்கங்களை முழக்கினார்கள். அப்படியே, கிருஷ்ணார்ஜுனர்களும் சங்கத்தை முழக்கினார்கள். இடியினுடைய முழக்கம்போன்ற பாஞ்சஜன்யத்தின் முழக்கத்தைக் கேட்டு எல்லாச் சேனைகளும் எங்கும் மயிர்சிலிர்த்தன. பலவான்களுடைய சிங்கநாதமானது சங்கங்களாலும் துந்துபிகளாலும் அதிகரித்ததாகப் பூமியையும் ஆகாயத்தையும் ஸமுத்திரங்களையும் எதிரொலியிடச் செய்தது.

---

## நூற்று ஐம்பத்திரண்டாவது அத்யாயம்.

## ஸைந்யநிர்யாணபர்வம். (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரர் குருக்ஷேத்திரத்தில் தகுதியான இடத்தில் தம் ஸேனையை நிறுத்தியதும், திருஷ்டத்யும்னன் முதலானவர்களுக்குத் தனித்தனி கூடாரங்கள் அமைத்ததும்.)

பிறகு, அப்பொழுதே, அரசரான யுதிஷ்டிரர், ஸமமானதும் மெதுவானதும் அதிகமான புற்களும் விறகுகளுமுள்ளதுமான இடத்தில் சேனையை அமரச்செய்தார். சிறந்த புத்தியையுடையவரும் குந்தியின் புத்திரருமான யுதிஷ்டிரர், சுடுகாடுகளையும் தேவாலயங்களையும் மஹரிஷிகளுடைய ஆஸ்ரமங்களையும் புண்ணியதீர்த்தத்துறைகளையும் கிரகங்களையும் விலக்கிவிட்டு, அழகானதும் உவரற்றதும் சுத்தமானதும் புண்ணியமுமான தேசத்தில் சேனையைத் தங்கச்செய்தார். பிறகு, கேசவர் அர்ஜுனனுடன் குதிரைகளை இளைப்பாற்றி ஸுகமுடையவராகி, மறுபடி கிளம்பி, நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் அரசர்களால் சூழப்பட்டுப் புறப்பட்டார். துர்யோதனனுடைய நூற்றுக்கணக்கான சேனைகளுடைய கூட்டங்களை ஓட்டிவிட்டு நான்குபக்கமும் சுற்றிவந்தார். பாஞ்சாலனுடைய புத்திரனை திருஷ்டத்யும்னனும் தேராளிகளில் சிறந்தவனை ஸாத்யகியும் பலவானை யுயுதானனும் பாசறையின் இடத்தை அளவு செய்தார்கள். ஓ! பாரதரே! கேசவர் குருக்ஷேத்திரத்திலிருக்கிற ஹிரண்வதீயென்கிற புண்ணியநதியையடைந்து சமீபத்தில் நல்லதுறைகளையுடையதும், சுத்தமான ஜலத்தையுடையதும், பருக்கைக்கல்லும் சேறுமற்றதுமான அகழைவெட்டும்படிசெய்தார். காப்பதற்காகவும் சேனையைக்கட்டளையிட்டு அங்கேஇருக்கும்படி செய்தார். கேசவர், மகாத்மாக்களான பாண்டவர்களின் பாசறைக்கு எந்த ஏற்பாடு செய்தாரோ அந்த ஏற்பாடுகளையே மற்ற அரசர்களுடைய பாசறைகளுக்கும் செய்வித்தார். ஓ! ராஜேந்திரரே! அவ்விடத்தில் அரசர்களுக்கு நூற்றுக்கணக்கும் ஆயிரக்கணக்குமாக மிக அதிகமான விறகுகளையுடையவைகளும் சிறிதும்ஆக்கிரமிக்க முடியாதவைகளும் பக்ஷ்யமும் போஜ்யமும் அன்னமும் பானங்களுமுள்ளவைகளும் விலையுயர்ந்தவைகளும் பூமியின்பிரதேசத்தில் அமர்ந்தவைகளான விமானங்கள்போன்றவைகளுமான பாசறைகளைத் தனித்தனி செய்வித்தார். அவ்விடத்தில் அறிவுள்ளவர்களும் கூலிகொடுக்கப்பட்டவர்

களும் நூற்றுக்கணக்காயிருப்பவர்களுமான சிற்பிகளும் எல்லா ஸாதனங்களோடும் கூடினவர்களும் சாஸ்திரத்தில் ஸமர்த்தர்களுமான வைத்தியர்களும் இருந்தார்கள். அப்படியே, நாண், வில், கவசம், அம்பு இவைகளுடைய கூட்டங்களும் மிகுதியான தேன்குடங்களும் நெய்க்குடங்களும் ரஸப்பொடிகளுடைய குவியல்களும் பர்வதங்களுக்கு நிகராயிருந்தன. அரசரான யுதிஷ்டிரர், பாசறைதோறும், அதிகத்தண்ணீரும் நல்லபுற்களுமுள்ளனவும் உமிக்காந்தலுடன் கூடினவுமாகச் செய்தார். அவ்விடத்தில் பெரிய யந்திரங்களும் நாராசங்களும் தோமரங்களும் கோடாலிகளும் விற்களும் கவசமுதலியவைகளும் அம்பறாத்தூணிகளோடு கூடின ரிஷ்டிகளும் இரும்புமுள்ளுகளுள்ள கவசம்பூண்டவைகளும் உலோகத்தால் செய்யப்பட்ட கவசத்தை முதுகில்விரிக்கப்பட்டவைகளும் மலைபோல் விளங்குகின்றவைகளும்[1] நூறாயிரம் யானைகளை எதிர்ப்பவைகளுமான யானைகளும் காணப்பட்டன. ஓ! பாரதரே! அவ்விடத்தில் பாண்டவர்கள் அமர்ந்துவிட்டார்களென்பதை அறிந்து, மித்திரர்கள், சேனைகளோடும் வாகனங்களோடும் அங்கு வந்துசேர்ந்தார்கள். பிரம்மசர்யத்தை அனுஷ்டித்தவர்களும் ஸோமபானம் செய்தவர்களும் அதிக தக்ஷிணை கொடுத்தவர்களுமான அந்த அரசர்கள் பாண்டு புத்திரர்களுடைய வெற்றிக்காக வந்தார்கள்" என்றார்.

## நூற்று ஐம்பத்துமூன்றாவது அத்யாயம்.

## ஸைந்யநிர்யாணபர்வம். (தொடர்ச்சி.)

**(துரியோதனன் கர்ணன் முதலானவர்களைப் பார்த்து யுத்தத்திற்கு வேண்டுவனவற்றைச் சேகரிக்கும்படி சொல்லியதும், அந்தக் கட்டளைப்படி அரசர்கள் குருக்ஷேத்திரத்துக்குப் புறப்பட ஸித்தமானதும்.)**

ஜனமேஜயர் வினவுகின்றார்: "யுதிஷ்டிரர் யுத்தம் செய்யும் விருப்பத்தால் சேனையுடன் அடுத்துவந்து குருக்ஷேத்திரத்தில் படைவீடுசெய்து வாஸுதேவரால் காக்கப்பட்டவரும், விராடன் துருபதன் அவர்களுடைய புத்திரர்கள் ஆகிய இவர்களோடு கூடினவரும், கேகயர்களாலும் விருஷ்ணிகளாலும் நூற்றுக்கணக்கான

1 'நூறாயிரம் வீரர்களை எதிர்க்கத்தக்கவை' என்றும் கொள்ளலாம்.

அரசர்களாலும் சூழப்பட்டவரும், தேவர்களாலே தேவேந்திரன் காக்கப்படுவதுபோல மஹாரதர்களால் காக்கப்பட்டவருமாயிருப் பதைக்கேட்டு, துர்யோதனராஜன் என்ன கார்யத்தைச் செய் தான்? ஓ! பெரிய புத்தியுடையவரே! குருஜாங்கல தேசத்தில் நெருக்கமான அந்த ஸம்பிரமத்தில் நடந்ததை விரிவாகக் கேட்க விரும்புகிறேன். பாண்டவர்களும் வாஸுதேவரும் விராடனும் துருபதனும் பாஞ்சால புத்திரனை திருஷ்டத்யும்னனும் மகாரத னை சிகண்டியும் பராக்கிரமசாலியும் தேவர்களாலும் நெருங்கமுடி யாதவனுமான யுதாமன்யுவுமாகிய இவர்கள், போரில் இந்திரனுடன் கூடின தேவர்களையும் துன்பமடையச் செய்வார்கள். ஓ! தபோ தனரே! கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் ஏது ஏது நடந் ததோ அவற்றை யெல்லாம் விரிவாகக்கேட்க விரும்புகிறேன்" என்றார்.

வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினர். "வாஸுதேவர் திரும் பிப் போனபொழுதே, துர்யோதனராஜன் கர்ணனையும் துச்சாஸன னையும் சகுனியையும் நோக்கி இதைச் சொல்லலானான்: 'கேசவர் கார்யத்தை நிறைவேற்ற முடியாமலே பார்த்தர்களை நோக்கிச் சென் றார். அவர் கோபமுண்டு நிச்சயமாய் அவர்களைத் தூண்டுவர்; ஸந் தேகமில்லை. எனக்குப் பாண்டவர்களுடன் யுத்தமுண்டாவது வாஸுதேவருடைய இஷ்டமல்லவா? பீமஸேனனும் அர்ஜுனனுமே வாஸுதேவருடைய கொள்கையிலிருப்பவர்கள். அஜாதசத்துரு வானவன் அதிகமாகப் பீமஸேனனுடைய வசத்தையடைந்தவன்; முன்னமே எல்லா ஸகோதரர்களுடனும் வஞ்சிக்கப்பட்டுமிருக்கிறான். விராடனும் துருபதனும் என்னுடன் பகை கொண்டவர்கள். அவர் களும், சேனைத்தலைவர்களும் வாஸுதேவர்வசத்தை அடுத்தவர்களு மாயிருக்கின்றனர். இப்பொழுது, நெருக்கமானதும் மயிர்சிலிர்க்கச் செய்வதுமான அப்படிப்பட்ட யுத்தம் நடக்கப்போகிறது. ஆகையால், சோம்பலின்றிப் போருக்கு வேண்டியவற்றை எல்லாம் செய்யுங் கள். குருக்ஷேத்திரத்தில், அரசர்களுக்கு, போதுமான இட முள்ளவைகளும் பகைவர்களால் பிடிக்கமுடியாதவைகளும் பக்கத் தில் ஜலப்பிரதேசத்தை யுடையவைகளும் பதார்த்தங்கள்கொண்டு வருவதற்காகக் கெடுக்கமுடியாத மார்க்கங்களை யுடையவைகளும் உறுதியான கட்டுக்களால் நிறைந்தவைகளும் பலவித ஆயுதங்கள் நிறைந்தவைகளும் கொடி கொடிச்சீலைகளுடன் கூடினவைகளுமான பாசறைகள், நூற்றுக்கணக்கும் ஆயிரக்கணக்குமாகச் செய்யப்படட் டும், பட்டணத்திற்கு வெளியில் அவைகளுக்கு மேடு பள்ளமில்லாத

வழிகள் செய்யப்படட்டும். இப்பொழுது, 'நாளை விடிந்தால் பிரயாணம்' என்று கோஷிக்கப்படட்டும்; தாமதம் வேண்டாம்' என்று சொன்னான். முயற்சியுள்ளவர்களான அவர்கள், 'அப்படியே ஆகட்டும்' என்று பிரதிஜ்ஞைசெய்து, மறுநாள் விடிந்தவுடன், மிக்க மகிழ்ச்சியுடன் அரசர்களுடைய வாஸத்திற்காக அப்படியே செய்தார்கள்.

பிறகு, அந்த அரசர்களெல்லாரும், அந்த அரசன் கட்டளையைக் கேட்டு, கோபமுண்டு, பரிகாயுதம் போன்றவைகளும் பொன்னாற் செய்த தோள்வளைகளால் விளங்குகின்றவைகளும் சந்தனமும் கோரோசனையும் பூசப்பட்டவைகளுமான தோள்களை மெல்லமெல்லத் தடவிக்கொண்டே தாமரைமலர்கள்போன்ற கரங்களால் அரைவஸ்திரங்களையும் உத்தரீயங்களையும் எல்லாப்பூஷணங்களையும் தலைப்பாகைகளையும் உறுதிசெய்துகொண்டு விலையேறப்பெற்ற ஆஸனங்களை விட்டு எழுந்தார்கள். அவர்களில், சிறந்தவர்களான தேராளிகள் தேர்களையும், குதிரையேறுவதில் ஸமர்த்தர்கள் குதிரைகளையும், யானைப் பயிற்சியில் தேர்ந்தவர்கள் யானைகளையும் சித்தம்செய்தார்கள். பிறகு, விசித்திரமானவைகளும் பொன்னாலாகியவைகளுமான பல கவசங்களையும் பலவித ஆயுதங்களையும் மற்ற எல்லாவற்றையும் எங்கும் ஸித்தஞ்செய்தார்கள். காலாட்களான மனிதர்கள் பலவித ஆயுதங்களையும் சரீரங்களில் பல பொற்கவசங்களையும் தரித்தார்கள். ஓ! பாரதரே! துர்யோதனனுடைய அந்த நகரமானது திருவிழாக்காலத்திற்போலச் சிறந்ததும் மிகக் களிப்புற்ற ஜனங்கள் சூழ்ந்ததும் நெருக்கமுள்ளதுமாயிற்று. ஓ! அரசனே! அப்பொழுது, கௌரவ ராஜர்களாகிய பெருங்கடலானது ஜனக்கூட்டங்களாகிற நீர்ச்சுழல்களை யுடையதும், தேர் யானை குதிரைகளாகிற மீன்களோடுகூடினதும், சங்கதுந்துபிகளினுடைய பெரிய முழக்கத்தையுடையதும், பொக்கசக்குவியலாகிற ரத்னங்களோடு கூடினதும், பலவிதமான ஆபரணங்களும் கவசங்களுமாகிற அலைகளையுடையதும், ஆயுதங்களாகிற அழுக்கற்ற நுரைகளையுடையதும், உப்பரிகைகளின் வரிசைகளாகிற மலைகள் சூழ்ந்ததும், தேர்வீதி கடைவீதிகளாகிற பெரிய மடுக்களையுடையதும், போர்வீரர்களாகிற சந்திரோதயத்தினால் விருத்தியடைந்ததுமாகி, சந்திரோதயத்தில் கடல் காணப்படுவதுபோலக் காணப்பட்டது.

---

## நூற்றைம்பத்துநான்காவது அத்யாயம்.

## ஸைந்யநிர்யாணபர்வம். (தொடர்ச்சி.)

(ஆசாரியர்களை வதம் செய்வதில் மதிமயக்கம் அடைந்த யுதிஷ்டிரர் செய்யவேண்டிய காரியத்தைக்குறித்து வாஸுதேவரைக் கேட்டதும், அவர் யுத்தமே செய்யத்தக்கதென்று நிச்சயித்ததும்.)

யுதிஷ்டிரர், வாஸுதேவருடைய அந்த வார்த்தையை நினைத்து, மறுபடியும், அவரை நோக்கி வினவினர். 'ஓ! அச்சுதரே! மந்தனான துரியோதனன் இந்த வார்த்தையை எப்படிச் சொன்னான்? இந்த ஸமயம் நேரிட்டிருக்கையில், நமக்கு எது தக்கது? எவ்விதமிருந்தால் நாம் நமது தர்மத்திலிருந்து நழுவாமலிருப்போம்? ஓ! வாஸுதேவரே! ஓ! பரந்த ஞானமுள்ளவரே! நீண்ட கைகளையுடையவரே! நீர், துரியோதனன் கர்ணன் ஸுபலபுத்திரனான சகுனி பிராதாக்களுடன் கூடின நான் ஆகிய எங்களுடைய கருத்தை அறிந்தவராக இருக்கிறீர். விதுரரும் பீஷ்மருமாகிய இருவருடைய அந்த வார்த்தையையும் கேட்டிருக்கிறீர். குந்தியினுடைய கருத்து முழுமையும் உம்மால் கேட்கப்பட்டது. இவையெல்லாம் தாண்டி, அடிக்கடி ஆலோசித்து, எது நமக்கு உசிதமோ அதனை (மறுபடி) ஆலோசனையில்லாமல் சொல்லும்' என்றார். தர்மத்தோடும் அர்த்தத்தோடும் கூடிய தர்மராஜருடைய அந்த வார்த்தையைக் கேட்ட பிறகு, வாஸுதேவர், மேகம் துந்துபி இவற்றின் முழக்கம்போன்ற ஒலியுடன் சொல்லலானார்.

'அறம் பொருள்களுடன் கூடினதும் ஹிதமுமாக நான் சொல்லிய சொல்லோ வஞ்சகமனமுடையவனான துரியோதனனிடம் நிலை பெறவில்லை. மதிகேடனான அவன் பீஷ்மருடைய சொல்லையாவது விதுரருடைய சொல்லையாவது ஒன்றையும் கேட்கவில்லை; எல்லாவற்றையும் கடந்திருக்கிறான். அவன் தர்மத்தை விரும்பவேயில்லை; புகழையும் விரும்பவேயில்லை. கெடுமதியுள்ள அவன், கர்ணனை அடுத்திருத்தலால், எல்லாவற்றையும் ஜயித்துவிட்டதாக நினைக்கிறான். அவன் என்னையும் கட்டுவதற்கு உத்தரவுசெய்தான். துராத்மாவும் பாவத்தில் உறுதியுள்ளவனுமான அவன் அந்த விருப்பத்தை அடையவில்லை. ஓ! தவறுதலில்லாதவரே! அவனிடத்தில் பீஷ்மரும் துரோணரும் நன்றாகச் சொல்லவில்லை. விதுர

யைத்தவிர, மற்ற எல்லாரும் அவனை அனுஸரிக்கிறார்கள். ஸுபல புத்திரனான சகுனியும் கர்ணனும் துச்சாஸனனுமான மூடர்கள் உமது விஷயத்தில் மூடத்தனமாகவும் பொறாமையுடனும் தகாதவைகளைப் பேசினார்கள். தவிரவும், துர்யோதனன் சொல்லிய வார்த்தைகளை நான் சொல்லுவதால் என்ன பயன்? சுருக்கமாக, அந்தத் துராத்மா உம்முடைய விஷயத்தில் உசிதமாக இருக்கவில்லை; உம்முடைய சேனைகளைச் சேர்ந்தவர்களான எல்லா அரசர்களிடத்திலும் உசிதமாக இருக்கவில்லை. தீயவையும் நன்மையில்லாதவையுமான எல்லாம் அவனிடத்தில் நிலைத்திருக்கின்றன. நாமும் முழுமையும் விட்டு ஒரு பொழுதும் கௌரவர்களோடு ஸமாதானத்தை விரும்புகிறோமில்லை. அப்பொழுது, மேல் ஏற்படக்கூடியது யுத்தமே' என்றார்.

ஓ! பாரதரே! வாஸுதேவருடைய அந்த வார்த்தையைக் கேட்டு, எல்லா அரசர்களும் பேசாதவர்களாகி அரசருடைய முகத்தைப் பார்த்தார்கள். யுதிஷ்டிரரோ, அரசர்களுடைய அபிப்பிராயத்தை அறிந்து, பீமன் அர்ஜுனன் நகுலன் ஸஹதேவன் இவர்களோடுகூடிப் போருக்கு முயற்சியைச் செய்யுக் கட்டளையிட்டார். அப்பொழுது, பாண்டவருடைய சேனையில் கிலகிலவென்கிற சப்தம் உண்டாயிற்று. போர்முயற்சி கட்டளையிடப்பட்ட அப்பொழுது, சேனையிலுள்ளவர்கள் மிக மகிழ்ந்தனர். ஸ்ரீராஜரான யுதிஷ்டிரர் கொல்லத்தகாதவர்களைக் கொல்லவேண்டியிருப்பதை ஆலோசித்துப் பெருமூச்சுவிட்டு, பீமஸேனனையும் அர்ஜுனனையும் நோக்கி, 'எதைத் தடுப்பதற்காக என்னால் வனவாஸமும் (அதனாலுண்டான) துக்கமும் அடையப்பட்டனவோ அப்படிப்பட்ட இந்தப்பெரிய அநர்த்தம் (=குலநாசம்) பிரயத்தினத்தினாலே நம்மை அடையவே செய்கிறது. எதன் நிமித்தம் நம்மால் முயற்சியானது செய்யப்பட்டதோ, அது முயற்சியினாலேயே நமக்குக் குறைவாகிவிட்டது. பிரயத்தினம் செய்யாமலிருக்கையில், பெரிய கலியானது நம்மைச் சூழ்ந்துவிட்டது. கொல்லத்தகாதவர்களுடன் யுத்தமானது எப்படி செய்யத் தக்கதாகும்? பிராயமுதிர்ந்தவர்களான குருக்களைக்கொன்று நமக்கு எப்படி வெற்றி உண்டாகும்?'' என்றார்.

தர்மராஜருடைய அந்தச்சொல்லைப் பகைவரை வாட்டுகிறவனான ஸவ்யஸாசி கேட்டு, வாஸுதேவர் சொன்ன வார்த்தையைக் கேட்கச் செய்தான். 'ஓ! அரசரே! தேவகிபுத்திரர் குந்தியினுடைய வார்த்தையையும் விதுரருடைய வார்த்தையையும் சொன்னார். அவற்றை முழுமையும் நீர் உறுதியாகத் தரித்துக்கொண்டீர். அவர்களிருவரும்

அதர்மத்தைச் சொல்லார்களென்பது என்னுடைய உறுதியான எண்ணம். ஓ! குந்தீ புத்திரரே! நீர் யுத்தம் செய்யாமல் நிவிருத்தியடைவது உசிதமில்லை' என்றான். ஸவ்யஸாசியினுடைய அந்த வார்த்தையைக் கேட்டு வாஸுதேவரும் அப்பொழுது, புன்சிரிப்புடன், பார்த்தனை நோக்கி, 'அது சரிதான்' என்று சொன்னார். ஓ! மஹாராஜரே! பிறகு, அந்தப் பாண்டவர்கள், யுத்தத்தின் பொருட்டு நிச்சயத்தைச் செய்துகொண்டு, சேனைவீரர்களோடு அந்த ராத்திரி ஸுகமாக வஸித்தார்கள்.

---

## நூற்றைம்பத்தைந்தாவது அத்யாயம்.

## ஸைந்யநிர்யாண பர்வம். (தொடர்ச்சி.)

(துரியோதனன் தன் ஸேனையிலுள்ளவர்களை உத்தமர்களும் நடுத்தரமானவர்களும் தாழ்ந்தவர்களுமாகப் பிரித்ததும், யுத்த உபகரணங்களின் வருணனையும், துரியோதனன் கிருபர் முதலான பதினொருவரைச் ஸேனாபதிகளாக அபிஷேகம் செய்ததும்.)

'ஓ! பாரதரே! பிறகு, இரவு விடிந்தபொழுது, துரியோதனராஜன் அந்தப் பதினோர் அக்ஷௌஹிணிகளையும் பிரித்தான். அரசன், இந்த எல்லாச் ஸேனைகளிலும், காலாட்களிலும் யானைகளிலும் தேர்களிலும் குதிரைகளிலும், உத்தமத்தையும் நடுத்தரத்தையும் அதமத்தையும் நன்கு கட்டளையிட்டான். எல்லாத்தேர்களும், ஒடிந்தால் கட்டுதற்காக, தோல்கட்டப்பட்ட கட்டைகளுடன் கூடினவைகளும் பெரிய அம்புத்தூணிகளையுடையவைகளும் [1] ரதகுப்திகளையுடையவைகளும் குத்துக்காலோடு கூடினவைகளும் தோமரத்தோடு கூடினவைகளும் யானைகள் வஹிக்கக்கூடிய அம்பறாத்தூணிகளோடு கூடினவைகளும் சக்திகளையுடையவைகளும் காலாள் வஹிக்கும் அம்பறாத்தூணி ரிஷ்டி கொடி கொடிச்சீலை வில்லினால் எய்யும் தோமரமென்னும் பாணங்கள் விசித்திரமான கயிறுகள் (ஸமீபத்திலிருப்பவர்களைக் கழுத்தில் சுருக்கிட்டு இழுக்கும்) பாசங்கள் விரிப்புக்கள் [2] பகைவனைக் கேசத்தில் மாட்டித்தள்ளும் ஆயுதம் காய்ச்சப்பட்ட தைலங்கள் பாகுகள் வறுக்கப்பட்டமணல்கள் ஆகிய இவைகளையுடையவைகளும் பாம்புகள் அடைத்த குடங்களையும் எளிதில் தீப்

---

1 இதனை 'வருதம்' என்பார்கள்; பீஷ்ம பர்வம் சகஉ-ம் பக்கம் குறிப்பு.

2 'நுனியில் பசை தடவப்பட்ட ஓர் தண்டம்' என்பது பழையவுரை.

பற்றக்கூடிய பொருள்களையுமுடையவைகளும் மணிகட்டின [1] நுனிகளையுடைய ஆயுதங்கள் இருப்பு ஆயுதங்கள் பாகு காய்ச்சினஜலம் கல்லுகளை எறிகிற யந்திரங்கள் சப்திக்கின்ற பிண்டிபாலங்கள் மெழுகுடன்கூடிய உலக்கைகள் முள்ளுள்ள கழிகள் கலப்பைகள் விஷம் பூசின தோமரம் ஆகிய இவையுள்ளவைகளும் முறங்களும் பெட்டிகளும் கோடாலி முதலியவைகளும் [2] அங்குசதோமரங்களும் உள்ளவைகளும் [3] கிலகவசங்கள் வாய்ச்சிகள் உளி முதலியவைகளுடன் கூடியவைகளுமாயிருக்கின்றன. அவைகள் புலித்தோல்களாலும் சிறுத்தைத் தோல்களாலும் சூழப்பட்டவைகளும் தடிக்கழிகளுடன் கூடினவைகளும் கொம்புகள் கத்திகள் பல ஆயுதங்களுடன் கூடினவைகளும் கோடாலி குந்தாலி எண்ணெயில் நனைத்த வெள்ளை வஸ்திரங்கள் நெய் இவைகளுடன் கூடினவைகளும் ஸ்வர்ணஜாலங்களால் மறைக்கப்பட்டவைகளும் பலவித ரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்டவைகளும் விசித்திரமான சேனைகளையுடையவைகளும் நல்ல ஆக்ருதியையுடையவைகளும் அக்னிபோல ஜ்வலிக்கின்றவைகளுமாயிருக்கின்றன. அப்படியே, கவசம் பூண்டவர்களும் ஆயுதப் பயிற்சியில் தேர்ந்தவர்களும் நல்ல குலத்தில் பிறந்தவர்களும் குதிரைகளின் பிறவியை அறிந்தவர்களுமான சூரர்கள் தேரோட்டுவதில் ஏற்படுத்தப்பட்டார்கள். எல்லாத் தேர்களும் கஷ்டத்தை நிவிருத்திசெய்கின்ற யந்திரங்களும் ஓஷதிகளும் கட்டப்பட்டனவும், மணிகள் பட்டங்கள் முதலிய பிருதுகள் கட்டப்பட்டனவும், துவஜங்களும் பதாகைகளும் கட்டப்பட்டனவும், சிறுமணிகள் கட்டப்பட்டனவும், சிகரங்களையுடையனவும், கேடகங்களும் கத்திகளும் பட்டாக்கத்திகளும் கட்டப்பட்டனவும், நான்கு குதிரைகள் கட்டப்பட்டனவுமாயிருக்கின்றன. எல்லாம் சிறந்த குதிரைகளுள்ளவைகளுமாயிருக்கின்றன. எல்லாம் பட்டாக்கத்திகளும் தடிகளுமுள்ளவைகளும் எல்லாம் நூறு வில்லுகளுடையவைகளுமாயிருக்கின்றன. இழுக்கின்ற இரண்டு குதிரைகளுக்கு ஒரு ஸாரதி; அப்படியே, பின் ஸாரதிகள் வேறு இரண்டுபேர்கள். அவர்களும் ரதிகர்களில் சிறந்தவர்கள். தேராளியும், அப்படியே, குதிரைகளின் விஷயம் அறிந்தவன். பட்டணங்கள் போலக் காக்கப்பட்டவைகளும் பகைவர்களால் நெருங்கமுடியாதவைகளும் எங்கும் பொன்மாலைகளு

1 மணி கட்டின கேடகம் என்றுமாம்.

2 இலந்தை முள்போன்ற வளைந்த முள்ளுள்ளவைகள்.

3 இது முஷ்டியுத்தத்தில் தரிக்கப்படுவது.

டையவைகளுமாகி ஆயிரக்கணக்கான தேர்கள் இருந்தன. தேர்களைப்போலவே, யானைகளும் விருதுகள் கட்டப்பட்டவைகளும் நன்கு அலங்கரிக்கப்பட்டவைகளும் ஏழு ஆட்களையுடையவைகளுமாக ரத்தினங்களையுடைய மலைகள்போல இருந்தன. அரசரே! அவர்களில் இரண்டு பேர்கள் ஈட்டியைத் தரிக்கின்றவர்கள்; இரண்டு பேர்கள் சிறந்த வில்லைத் தரிக்கின்றவர்கள்; இரண்டு பேர்கள் சிறந்த கத்தியைத் தரிக்கின்றவர்கள். ஒருவன் சக்தியையும் முத்தலைச்சூலத்தையும் தரிக்கிறவன். ஓ! அரசரே! மஹாத்மாவான கௌரவருடைய அந்தச் சேனையானது, முழுமையும் மதங்கொண்ட யானைகளாலும் ஆயுதக்கூட்டங்களாலும் நிரம்பியிருந்தது. அப்படியே கவசம் பூண்டவர்களும் ஸன்னத்தர்களும் கொடிகளையுடையவர்களும் நன்கு அலங்கரிக்கப்பட்டவர்களுமான [1] ஸாதிகளோடு கூடின குதிரைகளும் பதினாயிரக்கணக்காயிருந்தன. நன்கு பழக்கப்பட்டவைகளும் [2] கடிவாளம் பிடித்திருக்கப்படாதவைகளும் பொன்னாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவைகளும், அநேகம் லக்ஷங்களுமான எல்லாக் குதிரைகளும் ஸாதிகள்வசத்தில் இருந்தன. அந்தச் சேனையில் பலவித வேஷங்களின் வேறுபாட்டையுடையவர்களும் பலவித கவசங்களும் ஆயுதங்களுமுடையவர்களும் பொன்மாலைகள் அணிந்தவர்களுமான காலாட்கள் இருந்தனர். ஒரு தேருக்குப் பத்து யானைகளும் ஒரு யானைக்குப் பத்துக் குதிரைகளும், ஒரு குதிரைக்குப் பத்து மனிதர்களும் பரிவாரங்களாயிருந்தனர். ஒரு தேருக்கு ஐம்பது யானைகளும் ஒரு யானைக்கு நூறு குதிரைகளும் இருந்தன. ஒரு குதிரைக்கு ஏழு மனிதர்கள் பழுது பட்டதைச் செப்பனிடுகிறவர்களாயிருந்தனர். ஐந்நூறு யானைகளும் அவ்வளவு தேர்களுமேயுள்ளது ஒருசேனை. பத்துச்சேனை கொண்டது ஒரு பிருதனை. பத்துபிருதனைகொண்டது ஒருவாஹினீ. ஒரு சேனையும் ஒரு பிருதனையும் ஒரு வாஹினியுங்கொண்டது, த்வஜினீயென்றும் சமூவென்றும் அக்ஷௌஹிணீயென்றும் வரூதினீ யென்றும் ஸமானப் பெயர்களால் சொல்லப்படுகிறது. இவ்விதம், புத்திமானான கௌரவனாலே சேனைகள் வகுக்கப்பட்டன. அக்ஷௌஹிணிகள் பதினொன்றும் ஏழுமாகக் கணக்கிடப்பட்டன. ஏழு அக்ஷௌஹிணிகளே பாண்ட

1 குதிரை வீரர்கள்.

2 'அஸங்க்ரஹா:' என்பது மூலம். 'கனைத்துக்கொண்டும் முன்னங் கால்களைத் தூக்கிக்கொண்டும் நிற்றல், குதிரைகளின் துர்க்குணம். அப்படியில்லாதவை' என்பது பழைய வுரை.

வர்களுக்குச் சைனியமாயின. கௌரவர்களுக்குப் பதினோர் அக்ஷௌஹிணிகள் ஸைன்யமாயிருந்தன. ஐம்பத்தைந்து மனிதர்கள் கொண்டது, ஒரு பத்தியென்று விதிக்கப்படுகிறது. அது மூன்று கொண்டது சேனாமுகம் என்றும் குல்மமென்றும் சொல்லப்பட்டது. மூன்று குல்மங்கள் கொண்டது ஒரு கணம். ஆயுதமெடுத்து யுத்தம் செய்கின்றவைகளும் பகைவர்களைக் கொல்லுகின்றவைகளுமான கணங்களோ துர்யோதனனுடைய சேனைகளில் பதினாயிரக்கணக்காக இருந்தன. அப்பொழுது, தோள்வலிமிகுந்த துர்யோதனராஜன், அவர்களில் சூரர்களும் புத்திமான்களுமான மனிதர்களை நன்குபார்த்துச் சேனாதிபதிகளாகச் செய்தான். முதலில், மனிதர்களில் மிகச்சிறந்தவர்களான கிருபர், துரோணர், சல்லியன், ஸிந்துதேசாதிபதியான ஜயத்ரதன், காம்போஜதேசத்தரசனான ஸுதக்ஷிணன், கிருதவர்மா, துரோணபுத்ரர், கர்ணன், பூரிச்ரவஸ், ஸுபலபுத்திரனான சகுனி, மஹாபலசாலியான பாஹ்லிகன் ஆகிய அரசர்களை வரவழைத்துத் தனித்தனி ஒவ்வோர் அக்ஷௌஹிணிக்கும் நாயகர்களாக விதிப்படி அபிஷேகம் செய்தான். ஓ! பாரதரே! அவன் அவர்களுக்கு ஒவ்வொருநாளும் ஒவ்வொரு வேளையும் நேரில் அடிக்கடி பலவிதமான பூஜைகளையும் செய்தான். அப்படியே, அந்த அரசர்களும் அவர்களுடைய முயற்சியைப் பின்பற்றினவர்களான அவர்களுடைய சேனைவீரர்களும் கட்டுப்பட்டு அரசனுடைய பிரியத்தைச்செய்ய விருப்பமுள்ளவர்களாயிருந்தார்கள்.

## நூற்றைம்பத்தாறுவது அத்யாயம்.

## ஸைந்யநிர்யாணபர்வம். (தொடர்ச்சி.)

(துரியோதனன், பீஷ்மரைச் சேனாதிபதியாக இருக்கும்படி ப்ரார்த்தித்ததும், அவர் பிரதிஜ்ஞையுடன் சேனைத் தலைமையை ஏற்றுக்கொண்டதும், அவரைச் சேனாபதியாக அபிஷேகஞ்செய்து சேனைகளுடன் குருக்ஷேத்திரம் வந்ததும்.)

பிறகு, திருதராஷ்டிர புத்திரனான துர்யோதனன், எல்லா அரசர்களோடும் சேர்ந்து அஞ்சலிசெய்துகொண்டு, சந்தனுவின் புத்திரரான பீஷ்மரைநோக்கி இந்தவார்த்தையைச் சொல்லலானான்:

'சேனையானது மிகவும்பெரிதாயிருந்தாலும், சேனையை நடத்துபவன் இல்லாவிடில், யுத்தத்தை அடைந்து, எறும்புகளின் வரிசைபோலச் சிதறிவிடுகிறது. ஒருபொழுதும் ஒரு விஷயத்திலும் இரண்டுபேருடைய புத்தியானது ஸமமாக இருக்கிறதில்லை. சேனையை நடத்துவோருடைய சௌர்யமும் ஒன்றுக்கொன்று முரணுகிறது. ஓ! மிக்க அறிவுள்ளவரே! பிராம்மணர்களெல்லாரும் குசத்வஜத்தைத் தூக்கிக் காட்டிக்கொண்டு அளவற்ற பராக்கிரமமுடைய ஹேஹயர்களை எதிர்த்தார்கள். ஓ! பிதாமஹரே! அப்பொழுது, வைஸ்யர்களும் சூத்திரர்களும் அந்த க்ஷத்திரியர்களை எதிர்த்தார்கள். ஒருபக்கத்தில் மூன்று வர்ணங்கள்; ஒருபக்கத்தில் க்ஷத்திரியஸ்ரேஷ்டர்கள். அந்த மூன்றுவர்ணத்தார்களும் யுத்தத்தில் அடிக்கடி தோல்வி அடைந்தார்கள். ஒரு பக்கத்தில் சேனை அதிகமாயிருந்தும் க்ஷத்திரியர்களே ஜயித்தார்கள். பிறகு, அந்த பிராம்மணஸ்ரேஷ்டர்கள் க்ஷத்திரியர்களிடத்திலேயே கேட்டார்கள். ஓ! பிதாமஹரே! தர்மத்தை உணர்ந்தவர்களான அவர்கள், 'நாங்கள் யுத்தத்தில் மஹாபுத்திமானை ஒருவனுடைய (வார்த்தையைக்) கேட்கிறோம். நீங்களோ எல்லாரும் தனித்தனியே தன்தன் புத்தியின் வசத்திலிருக்கின்றீர்கள்' என்று அவர்களுக்கு உண்மையையே சொன்னார்கள். பிறகு, அந்தப்பிராம்மணர்கள் நீதியில் மிகவும் சமர்த்தனும் சூரனுமான ஒரு பிராம்மணனைச் சேனாபதியாகச் செய்தார்கள். அவனால், க்ஷத்திரியர்களை ஜயித்தார்களென்று கேள்வி. இவ்விதம் எவர்கள் ஸமர்த்தனும் சூரனும் நன்மையை விரும்புகிறவனும் களங்கமற்றவனுமான சேனாபதியை அமைத்துக்கொள்ளுகின்றனரோ அவர்களே யுத்தத்தில் பகைவர்களை வெல்லுகின்றனர். நீர் (நீதியில்) சுக்கிராசார்யருக்கு நிகரானவர்; எப்பொழுதும், என்னுடைய நன்மையை விரும்புகிறவர்; (பிறரால்) கொல்லமுடியாதவர்; தர்மத்திலிருப்பவர். அப்படிப்பட்ட நீர், கிரணத்தோடு கூடினவைகளுக்குச் சூரியன் போலவும், கொடிகளுக்குச் சந்திரன் போலவும், யக்ஷர்களுக்குக் குபேரன்போலவும், தேவர்களுக்கு இந்திரன்போலவும், பர்வதங்களுக்கு மேருபோலவும், பக்ஷிகளுக்குக் கருடன்போலவும், தேவர்களுக்கு குமாரக்கடவுள் போலவும், வஸுக்களுக்கு அக்னிபோலவும், எங்களுக்குச் சேனாதிபதியாக இருக்கக்கடவீர். இந்திரனாலே தேவர்கள்போல உம்மால் காக்கப்பட்ட நாங்களோ, தேவர்களாலும் வெல்ல முடியாதவர்களாவோம். இது நிச்சயம். நீர் தேவர்களுக்கு முன்னே ஸ்கந்தர் செல்லுவதுபோல எங்களுக்குமுன் செல்லக்கட

வீர். நாங்கள், கன்றுகள் காளையின்பின் செல்லுவதுபோல, உமக்குப்பின் வருவோம்' என்றான்.

பீஷ்மர், 'பாரத! தோள்வலி அமைந்தவனே! நீ எப்படிச் சொல்லுகிறாயோ அப்படியே ஆகுக. (ஆனால்), எனக்கு உங்களைப் போலவே பாண்டவர்களும் ஆவர். ஓ! அரசனே! என்னால் அவர்களுக்கும் நன்மையானதே சொல்லத்தக்கது. நான் பிரதிஜ்ஞை செய்திருப்பதால், உன்னிமித்தமாக யுத்தம் செய்யவேண்டும். ஆனால், பாரில் நரச்ரேஷ்டனும் குந்திபுத்திரனுமான அந்தத் தனஞ்சயனைத்தவிர, எனக்குச்சரியாக யுத்தம்செய்பவனைப் பார்க்கவில்லை. மஹா புத்திசாலியான அவனே பல திவ்யாஸ்திரங்களை அறிவான். ஆனால், (அந்தப்)பாண்டவன் ஒருநாளும் யுத்தத்தில் வெளிப்படையாக என்னுடன் போர் செய்யமாட்டான். நானும் அவனும் நொடிப்பொழுதிலேயே அஸ்திரங்களின் பலத்தைக் கொண்டே தேவர்கள் அஸுரர்கள் ராக்ஷஸர்களோடுகூடின இந்த ஜகத்தை மனிதர்களற்றதாகச் செய்வோம். ஓ! அரசனே! எனக்குப் பாண்டுவின் புத்திரர்களோ கொல்லத்தக்கவர்களல்லர். ஆகையால், எப்பொழுதும் ஒரு பிரயோகத்தால் மற்றப் பதினாயிரம் வீரர்களைக் கொல்லுவேன். குருநந்தன! அவர்கள் யுத்தத்தில் முதலிலேயே என்னைக் கொல்லாமலிருந்தால், நான் இவ்விதம் இவர்களுடைய வதத்தைச்செய்வேன். ஓ! அரசனே! சேனாபதியான நானே என்னிஷ்டப்படி உன்னிடம் வேறு ஒருபிரதிஜ்ஞையோடிருப்பேன். அதனை இப்பொழுது என்னிடம் கேட்கவேண்டும். ஓ! அரசனே! முதலில் கர்ணனாவது யுத்தம் செய்யட்டும்; அல்லது, நானாவது யுத்தம் செய்கிறேன். ஏனென்றால், ஸூதபுத்திரன் யுத்த விஷயத்தில் எப்பொழுதும் என்னுடன் முரணுதலைச் செய்கிறான்' என்றார். கர்ணன், 'ஓ அரசனே! பீஷ்மர் உயிருடனிருக்கையில், நான் எவ்விதத்தாலும் யுத்தம் செய்யேன். பீஷ்மர் கொல்லப்பட்ட பிறகே, காண்டீவத்தை வில்லாகவுடைய அர்ஜுனனுடன் யுத்தம் செய்வேன்' என்றான்.

பிறகு, திருதராஷ்டிரபுத்திரன் [1] மிக்க சமர்த்தரான பீஷ்மரை விதிப்படி சேனாபதியாகச் செய்தான். அவர் அபிஷேகம் செய்யப்பெற்று விளங்கினார். அப்பொழுது, அரசனுடைய கட்டளையினால் வாத்தியக்காரர்கள் நூறுகளும்ஆயிரங்களுமாகப் பேரிகளையும் சங்கங்களையும் ஊக்கத்துடன் முழக்கினார்கள். பலவிதமான சிங்க

1 'வேதியர்களுக்கு மிக்க தக்ஷிணைகள்கொடுத்து' என்றுமாம்.

நாதங்களும் வாகனங்களுடைய சப்தங்களும் இடிகளும் பூகம்பங்களும் யானைகளின் பிளிறுதல்களும் எல்லாப் போர்வீரர்களுடைய மனங்களையும் களைப்படையச் செய்துகொண்டு உண்டாயின. தவிர, அசரீரிவாக்குக்களும் உண்டாயின. ஆகாயத்திலிருந்தும் உற்கைகளும் விழுந்தன. மேகமில்லாமலே ரக்தத்தால் சேறுயிருக்கும்படி மழை உண்டாயிற்று. நரிகளும், மிகப்பிரகாசிக்கின்றவைகளும் பயத்தைத் தெரிவிக்கின்றவைகளுமாகி மிக ஊளையிட்டன. ஓ! அரசரே! அரசன் பீஷ்மருக்குச் சேனாபதி ஸ்தானத்தில் அபிஷேகஞ்செய்தபொழுது, உக்கிரமான ரூபங்களையுடைய இவைகள் நூற்றுக்கணக்குக்களாக உண்டாயின. பகைவர் சேனையைத் துன்புறுத்துபவரான பீஷ்மரைச் சேனாபதியாகச் செய்த பிறகு, பசுக்களாலும் பொன்களாலும் பிராம்மணஶ்ரேஷ்டர்களைப் பலமுறை ஸ்வஸ்திவாசனம் சொல்லும்படி செய்து, ஜயத்திற்குரிய ஆசிர்வாதங்களால் வளர்கிறவனாகி, அப்பொழுதே சேனைகள் சூழப் பீஷ்மரை முன்விட்டுக்கொண்டு, தம்பிமார்களுடன் வெளிக்கிளம்பிப் பெரிதான சேனைகளுடன் குருக்ஷேத்திரத்தை அடைந்தான். ஓ! அரசரே! கௌரவன் கர்ணனுடன் குருக்ஷேத்திரத்தைச் சுற்றிவந்து ஸமமான பிரதேசத்தில் பாசறையை நிர்மாணம் செய்தான். இனிமையானதும் உவரற்றதும் மிகுதியாகப் புல்லுகளும் விறகுகளுமுள்ளதுமான பிரதேசத்தில் பாடிவீடானது ஹஸ்திநாபுரம் போலவே விளங்கிற்று" என்றார்.

## நூற்றைம்பத்தேழாவது அத்யாயம்.

## ஸைந்யநிர்யாணபர்வம். (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரர் த்ருபதன் முதலான எழுவர்களைத் தனித்தனி சேனாதிபதிகளாக அபிஷேகம் செய்ததும், திருஷ்டத்யும்னனை எல்லாச் சேனைகளுக்கும் தலைவனாக அபிஷேகம் செய்ததும், பலராமர் பாண்டவர்களைப் பார்க்கும் விருப்பத்துடன் குருக்ஷேத்திரம் வந்ததும், பிறகு பந்துக்களுடைய மரணத்தைப்பார்க்கப் பொறாத அவர் தீர்த்தயாத்திரைக்குச் சென்றதும்.)

ஜனமேஜயர் வினவலானார்:—"கங்காபுத்திரரும் மஹாத்மாவும் வில்லாளிகளில் சிறந்தவரும் பாரதர்களுக்குப் பிதாமஹரும் எல்லா அரசர்களிலும் த்வஜம் போன்றவரும் புத்தியினால் பிருகஸ்பதிக்கு நிகரானவரும் பொறுமையினால் பூமிக்கு நிகரானவரும் காம்பீர்யத்தி

ஞல் ஸமுத்திரம் போன்றவரும், இமயமலைபோல் ஸ்திரமாயிருப்பவரும், உதாரத்தன்மையால் ப்ரம்மாவைப் போன்றவரும், காந்தியினால் சூர்யனுக்கு நிகரானவரும், சரமாரிகளால் இந்திரன்போலப் பகைவரை நாசம்செய்பவருமான பீஷ்மர் மிகவும் விரிவானதும் மிக்க அச்சந்தருவதும் மயிர்க்கூச்சத்தைச் செய்வதுமான யுத்தமாகிற யாகத்தில் பலநாளாகத் தீக்ஷைபெற்றிருப்பதைக் கேட்டு, அப்பொழுது, புஜபலமமைந்தவரும் எல்லா ஆயுததாரிகளிலும் சிறந்தவருமான யுதிஷ்டிரர் என்ன சொன்னார்? பீமார்ஜுனர்களும் கிருஷ்ணனும் என்ன சொன்னார்கள்?" என்று கேட்டார்.

வைசம்பாயனர், "ஆபத்தில் செய்யத்தக்கதை அறிந்தவரும் தர்மத்திலும் அர்த்தத்திலும் ஸமர்த்தரும் சிறந்தபுத்தியை உடையவரும் பேசுகிறவர்களில் சிறந்தவருமான யுதிஷ்டிரர், பிராதாக்களையும் சாச்வதரான வாஸுதேவரையும் வரவழைத்து ஸமாதானத்துடன் இந்த வார்த்தையைச் சொல்லலானார்: 'சைனியங்களைச் சுற்றி ஆக்கிரமியுங்கள். கவசம்பூண்டுகொண்டு ஸன்னத்தர்களாக இருங்கள். உங்களுக்கு முதலிலேயே பிதாமஹரோடு யுத்தம் நேரிடப்போகிறது. ஆகையால், என்னுடைய ஏழு அக்ஷௌஹிணிகளிலும் சேனாபதிகளைப் பாருங்கள்' என்றார். கேசவர், 'ஓ! பரதச்ரேஷ்டரே இந்தக்காலம் நேரிட்டிருக்கையில், நீர் சொல்லவேண்டியபடி பயனுள்ளதான இந்தவார்த்தையைச் சொன்னீர். ஓ! தோள்வலியமைந்தவரே! எனக்குத் திருப்தியாயிருக்கிறது. பிறகு, செய்யவேண்டியதைச் செய்யக்கடவீர். இப்பொழுது, உம்முடைய சேனையில் ஏழுநாயகர்களை நியமிக்கக்கடவீர்' என்றார்.

ஓ! அரசரே! பிறகு, யுதிஷ்டிரர், மஹாபாக்கியவான்களும் வீரர்களும் யுத்தத்தில் விருப்பமுள்ளவர்களுமான துருபதன், விராடன், சினிச்ரேஷ்டனான ஸாத்தியகி, பாஞ்சாலபுத்திரனான திருஷ்டத்யும்னன், திருஷ்டகேது, பாஞ்சாலபுத்திரனான சிகண்டி, மகததேசாதிபதியான ஸஹதேவன் இவ்வேழு வீரர்களையும் வரவழைத்துச் சேனாபதிகளாக விதிப்படி அபிஷேகம்செய்தார். இவர்களில் துரோணருடைய நாசத்திற்காக ஜ்வலிக்கச்செய்யப்பட்ட அக்னியிலிருந்துமுண்டான திருஷ்டத்யும்னனை எல்லாச்சேனைகளுக்கும் அதிபதியாகவும்செய்தார். மகாத்மாக்களும் சேர்ந்தவர்களுமான அந்த எல்லோருக்குமே குடாகேசனான தனஞ்சயனைச் சேனாபதிகளுக்குப் பதியாகச்செய்தார். பலராமனுக்குத் தம்பியும் ஸ்ரீமானும் மஹாபுத்திமானுமான ஜனார்த்தனர் அர்ஜுனனுக்கு நாயகரும் (அவனது) குதிரைகளுக்கு ஸாரதியுமானார்.

மிகவும் நெருங்கினதும் பெரியநாசத்தைச் செய்வதுமான அந்த யுத்தத்தைப்பார்த்து, அக்ரூரர் முதலானவர்களோடும், கதன் ஸாம்பன் உத்தவர் முதலியவர்களோடும், பிரத்யும்னனோடும், ஆஹுகனுடைய புத்திரர்களோடும், சாருதேஷ்ணன் முதலியவர்களோடும், சிறந்தவர்களும் புலிகள்போல் அதிக பலமுடையவர்களுமான விருஷ்ணிப்ரவீரர்களால், தேவர்களால் இந்திரன் காக்கப்படுவது போலக் காக்கப்பட்டவரும், பருத்த தோள்களையுடையவரும், நீலமான பட்டுஉடுத்தவரும், கைலையின் கொடுமுடிக்கு நிகரானவரும், சிங்கம்போல விளையாட்டுநடையை யுடையவரும், ஸ்ரீமானும், மதத்தால் கடைக்கண்கள் சிவந்தவருமான பலராமர், பாண்டவர்களுடைய அரசிருக்குமிடத்தை அடைந்தார். அவரைப் பார்த்தவுடனே, தர்மராஜரும் மிக்க காந்தியுடைய கேசவரும் குந்திபுத்திரனும் பயங்கரமானசெய்கையுடையவனுமான பீமஸேனனும் அர்ஜுனனும் அங்குள்ள மற்ற மன்னவர்களும் எழுந்திருந்தார்கள். அவர்களோ, வருகின்றவரான ஹலாயுதரைப் பூஜித்தார்கள். பிறகு, பாண்டு புத்திரரான அரசர் (தம்) கையால் அவருடைய கையைப் பிடித்தார். வாஸுதேவர் முதலான எல்லாரும் அவரை வணங்கினார்கள். பகைவர்களை அடக்குகிறவரான ஹலாயுதர், முதியவர்களான விராடனையும் துருபதனையும் வணங்கிவிட்டு, யுதிஷ்டிரருடன் சேர்ந்து உட்கார்ந்தார். அதன் பிறகு, அந்த அரசர்கள் நான்கு பக்கத்திலும் உட்கார்ந்தபொழுது, ரோஹிணீ புத்திரரான பலராமர், வாஸுதேவரைப்பார்த்துச் சொல்லலானார்.

'இப்பொழுது மனிதர்களுக்குப் பயங்கரமும் குரூரமுமான நாசமானது உண்டாகப்போகிறது. இது தெய்வவசமானது. இதனைக் கடப்பதற்கு முடியாதென்று நிச்சயமாக நினைக்கிறேன். அந்த யுத்தத்திலிருந்தும் இஷ்ட ஜனங்களுடன் கரையடைந்தவர்களும் புண்படாத தேகங்களுடன் ரோக மில்லாதவர்களுமாயிருக்கின்ற உங்களைப் பார்ப்பேனென்பது என்னெண்ணம். பாரிலுள்ள க்ஷத்திரியஜாதி ஒருங்குசேர்ந்து காலத்தால் பக்குவமாகிவிட்டது; ஸந்தேகமில்லை. யுத்தமும், இறைச்சியாலும் இரத்தத்தாலும் சேறுகும்படி பெரிதாக நேரப்போகிறது. வாஸுதேவன், என்னால் ஏகாந்தத்தில், 'மதுஸூதன! ஸம்பந்திகள்விஷயத்தில் ஸமமான நிலையிலிரு. ஏனென்றால், நமக்குப் பாண்டவர்களைப் போலவே அரசனான துர்யோதனனும். அவனுக்கும் உதவிசெய்யவேண்டும்' என்று அடிக்கடி சொல்லப்பட்டும் மாறுகிறான். உம்முடைய நிமித்தத்தில் மதுஸூதனன்

என்னுடைய அந்த வார்த்தையையும் செய்யவில்லை. தனஞ்சயனைக் கருதி முழு அபிப்பிராயத்தோடு உம்மிடம் சேர்ந்துவிட்டான். நிச்சயமாகப் பாண்டவர்களுக்கே ஜயம் என்பது என்னுடைய உறுதியான எண்ணம். ஓ! பாரதரே! வாஸுதேவனுக்கு இந்த ஊக்கம் அப்படியன்றோ இருக்கிறது? நானோ, கிருஷ்ணனையன்றி (இந்த) உலகத்தை நிமிர்ந்து பார்க்கவும் விரும்பவில்லை. ஆகையால், நான் கேசவன் செய்ய விரும்பினதை அனுஸரித்திருக்கிறேன். வீரர்களும் கதாயுத்தத்தில் ஸமர்த்தர்களுமான (பீமன் துர்யோதனன்) இருவர்களும் எனக்குச் சிஷ்யர்களல்லவோ? ஆகையால், பீமனிடத்திலும் அரசனான துர்யோதனனிடத்திலும் ஸமமான அன்பையுடையவனாயிருக்கிறேன். ஆகையால், ஸரஸ்வதியினுடைய தீர்த்தங்களை அடைவதற்காகப் போகிறேன். கௌரவர்கள் நசிப்பதைப் பார்த்துப் பொறுக்கமாட்டேன்' என்றார். பெரிய தோள்களையுடையவரான பலராமர், இவ்விதம் சொல்லிவிட்டு, பாண்டவர்களிடம் அனுமதிபெற்றுக்கொண்டு கூடவந்த கிருஷ்ணனைத் திருப்பிவிட்டுத் தீர்த்தயாத்திரைக்குச் சென்றார்.

---

## நூற்றைம்பத்தெட்டாவது அத்யாயம்.

## ஸைந்யநிர்யாணபர்வம். (தொடர்ச்சி.)

(ருக்மி பாண்டவர்களுக்கு உதவிசெய்வதற்கு வந்ததாகக் கர்வத்தோடு சொன்னதும், அர்ஜுனன் அதனை மறுத்ததும், பிறகு அவன் துரியோதனனை அடைந்து அவ்விதமே சொல்லியதும், அவனாலும் மறுக்கப்பட்டதும்.)

இந்தச் சமயத்திலேயே மஹாத்மாவும் 1 ஹிரண்யம்போன்ற ரோமங்களையுடையவனும், இந்திரனுக்கு நெருங்கின நண்பனும், போஜனும், தக்ஷிணதேசத்தார்களுக்குப் பதியுமான பீஷ்மகராஜனுடைய புத்திரன், செய்த பிரதிஜ்ஞையை நிறைவேற்றுபவர்களுக்குத் தலைவனும் ருக்மியென்று எல்லாத்திசைகளிலும் புகழ்பெற்றவனுமாயிருந்தான். அவன் கந்தமாதனபர்வதத்தில் வஸிப்பவனான கிம்புருஷஶ்ரேஷ்டனுக்குச் சிஷ்யனாகி 2 நான்கு பாதங்களோடு கூடிய

---

1 'ஹிரண்யரோமன்' என்னும் பெயருடையவன் என்றும் கொள்ளலாம். 2 ஆதிபர்வம், 877-ம்பக்கம் குறிப்பில் பார்க்க.

தனுர்வேதம் முழுமையையும் அறிந்தான். நீண்டகைகளையுடையவனுன அவன் காண்டீவத்தின் தேஜஸுக்கு நிகரானதும், சார்ங்கத்தோடு ஒப்பானதும் திவ்யலக்ஷணமுடையதுமான மஹேந்திரனுடைய தனுஸையும் அடைந்தான். இம்மூன்றும்தாம் தேவர்களுடைய திவ்யமான தனுஸுகள். அவைகளில், காண்டீவமானது வருணனுடையது. விஜயமென்கிறவில் இந்திரனுடையது. திவ்யமும் தேஜோமயமுமான சார்ங்கமென்ற வில்லையோ விஷ்ணுவினுடையதாகச் சொல்லுகின்றனர். பகைவர்களுடைய சேனைக்குப் பயத்தை விளைவிக்கின்ற அதைக் கேசவர் தரித்தார். அர்ஜுனன் காண்டவவனத்தில் அக்னியினிடமிருந்து காண்டீவத்தையடைந்தான். மிக்க தேஜஸையுடைய ருக்மியானவன் த்ருமனிடமிருந்து விஜயமென்கிறவில்லை அடைந்தான். ஹ்ருஷீகேசரானவர் பராக்கிரமத்தால் முரனுடைய பாசங்களை அறுத்து, அவனைக்கொன்று, பூமிபுத்திரனுன நரகனைவென்று, மணிகுண்டலங்களைக் கவர்ந்து, பதினுயிரம் ஸ்திரீகளையும் பலவித ரத்னங்களையும் விற்களில் சிறந்ததான சார்ங்கத்தையும் அடைந்தார். ருக்மியோ மேகத்திற்கு நிகரான சப்தத்தையுடைய விஜயமென்கிற வில்லையடைந்து உலகத்தைப் பயப்படுத்துகிறவன்போலப் பாண்டவர்களிடம் வந்தான். தன் புஜபலத்தால் கர்வமுற்றவனும் எல்லாவில்லாளிகளிலும் சிறந்தவனும் வீரனுமான எவன், முன்காலத்தில், புத்திமானுன வாஸுதேவர் ருக்மிணியை அபகரித்ததைப் பொருமல், 'ஜனுர்த்தனரைக்கொல்லாமல் திரும்பேன்' என்று சபதம்செய்து, உடனே பெரிதும் நெடுந்தூரம் பாய்வதும் பலவிதஆயுதங்களும் கவசங்களுமுடையதும் கங்கைபோலச்செழித்ததுமான நால்வகைச்சேனையுடன் விருஷ்ணி குலத்தவரான கிருஷ்ணரைத் தொடர்ந்தானே, அவன், யோகங்களுக்கெல்லாம் ஈச்வரரும் பிரபுவுமான கிருஷ்ணரை எதிர்த்து அவமதிக்கப்பட்டு, லஜ்ஜையினுல் குண்டினநகரத்தைத் திரும்பியடையவில்லை. பகைவீரர்களைக்கொல்லுகிறவனுன அவன், (தான்) யுத்தத்தில் கிருஷ்ணனுல் ஜயிக்கப்பட்டவிடத்திலேயே அதிகமான யானை குதிரைகளையுடைய பெரியசேனையாலே போஜகடமென்கிற உத்தமமானநகரத்தை நிர்மாணம்செய்தான். ஓ! அரசரே! அந்தநகரம் உலகில் போஜகடமென்றபெயருடன் பிரஸித்திபெற்றதாயிருக்கிறது. மஹாவீர்யசாலியான அந்தப்போஜராஜன் பெரிதான ஓர்அக்ஷௌஹிணிசேனையினுல் சூழப்பட்டு விரைவில் பாண்டவர்களை அடைந்தான். பிறகு, கவசம்தரித்து விற்பிடித்துக் கைபுறை பூண்டவனும் கத்திதாங்கி அம்பறுத்தூணி

களை மாட்டிக்கொண்டவனுமான அவன், பாண்டவர்களுக்கு அறிவித்து, வாஸுதேவருடைய பிரியத்தை அடையும் விருப்பத்தால், ஆதித்தியனுக்கு ஒப்பான வர்ணமுடையதேருடன் பெரிதான (பாண்டவ) சேனையுள் புகுந்தான். யுதிஷ்டிர ராஜரோ, அவனை எதிர்கொண்டு பூஜித்தார். அவன், பாண்டுபுத்திரர்களாலே நியாயமாகப் பூஜிக்கவும் துதிக்கவும் பட்டு, அவர்களெல்லாரையும் அங்கீகரித்துச் சேனைகளுடன் இளைப்பாறிவிட்டு, வீரர்களுடைய மத்தியில் குந்திபுத்திரனை தனஞ்சயனை நோக்கி, 'ஓ! பாண்டவ! பயமடைந்திருப்பாயானால், யுத்தத்தில் நான் ஸஹாயனாக நிற்கிறேன். யுத்தத்தில் உனக்குப் பகைவர்களால் தாங்கமுடியாத உதவியைச் செய்வேன். இவ்வுலகில் பராக்கிரமத்தில் எனக்குச் சமமான மனிதன் ஒருவனுமில்லை. ஓ! பாண்டவ! வீரர்களான துரோண கிருபர்களையோ, அல்லது, பீஷ்ம கர்ணர்களையோ எனக்கு நீ எந்தப் பாகத்தைக் கொடுப்பாயோ அந்தப் பாகத்தை நான் யுத்தத்தில் கொல்லுவேன்; அல்லது, இந்த எல்லா அரசர்களுமே இருக்கட்டும். போரில் பகைவர்களைக்கொன்று உனக்குப் பூமியை அளிப்பேன்' என்றான். இவ்விதம், தர்மராஜர் வாஸுதேவர் இவர்களின் முன்னிலையில், ராஜச்ரேஷ்டர்களும் மற்றவர்களும் எல்லாரும் கேட்கும்படி சொல்லக்கேட்ட புத்திமானான தனஞ்சயன், வாஸுதேவரையும் பாண்டவரான தர்மராஜரையும் பார்த்து, ஸ்நேகத்தை முன்னிட்டுச் சிரித்துக்கொண்டு சொல்லலானான் :

'ஓ! வீர! கோஷயாத்திரையில் மிக்க பலமுடையவர்களான கந்தர்வர்களுடன் யுத்தம் செய்கிற எனக்கு எந்த நண்பன் அப்பொழுது உதவியாயிருந்தான்? அப்படியே, காண்டவத்தில் மிகவும் பயங்கரமான அந்தத் தேவாஸுரர்களுடன் யுத்தகளத்தில் போர்செய்கின்ற எனக்கு அப்பொழுது எவன் உதவியாயிருந்தான்? நிவாதகவசர்கள் காலகேயர்களென்கிற அஸுரர்களோடு யுத்தத்தில் போர் செய்கின்ற எனக்கு அப்பொழுது எவன் உதவியானான்? அப்படியே, விராடநகரத்தில் பலபேர்களான கௌரவர்களோடு போர்க்களத்தில் சண்டைசெய்கிற எனக்கு அப்பொழுது யார் உதவியானான்? ஓ! நரச்ரேஷ்டனே! யுத்தவிஷயத்தில் ருத்திரரையும் இந்திரனையும் குபேரனையும் யமனையும் வருணனையும் அக்னியையும் கிருபரையும் துரோணரையும் மாதவரையும் உபாஸித்துத் திவ்யமும் தேஜோமயமும் திடமுமான காண்டீவமென்னும் வில்லைத்தரிக்கிறவனும், குறையாத பாணங்களையுடையவனும், தெய்வத்தன்மையுள்ள அஸ்திரங்களையுடையவனும், கௌரவர்களுடைய குலத்தில் பிறந்தவனும், மேலும், பாண்டுவுக்குப்

புத்திரனும், துரோணருக்குச் சிஷ்யனென்று சொல்லிக்கொள்பவனும், வாஸுதேவரை ஸஹாயமாகக் கொண்டவனுமான என்போன்றவன், 'பயந்தவனாயிருக்கிறேன்' என்று புகழைக்கெடுக்கின்றதும் வஜ்ராயுதத்திற்கு நிகரான சப்தத்தையுடையதுமான வார்த்தையை எப்படி சொல்லுவான்? ஓ! நீண்ட கைகளையுடையவனே! நான் பயமடைந்தவனாக இல்லை. எனக்கு ஸஹாயத்தினாலுண்டாகும் பயனுமில்லை. இஷ்டப்படியும் முயற்சிக்குத் தக்கபடியும் செல்லு; அல்லது, இங்கேயாவது இரு' என்றான். பரதஸ்ரேஷ்டரே! புத்திமானான அந்தத் தனஞ்சயனுடைய அந்தவார்த்தையைக்கேட்டு ருக்மியானவன் அங்கிருந்து கடலுக்கு நிகரான சேனையைத் திருப்பிக்கொண்டு அப்படியே துர்யோதனனை அடைந்தான். அந்த அரசன் அவனையடைந்தும் அப்படியே சொன்னான். சூரனென்கிற கர்வம்கொண்ட அவனாலும் அப்பொழுது மறுக்கப்பட்டான். ஓ! மஹாராஜரே! பூபாலரே! விருஷ்ணிகுலத்திலுண்டான பலராமரும் ருக்மியும் இருவர்தாம் அந்த யுத்தத்திலிருந்து விலகினார்கள். பலராமரும் பீஷ்மகனுடைய புத்திரனான ருக்மியும் தீர்த்தயாத்திரைக்குச் சென்றபிறகு, பாண்டவர்கள், மறுபடியும், ஆலோசனைக்காக உட்கார்ந்தார்கள். ஓ! பாரதரே! அரசர்களால் வியாபிக்கப்பட்ட தர்மராஜருடைய அந்தஸபையானது நக்ஷத்திரங்களால் விசித்திரமான ஆகாயம் சந்திரனாலே விளங்குவதுபோல விளங்கிற்று" என்றார்.

---

## நூற்றைம்பத்தோன்பதாவது அத்யாயம்.

## ஸைந்யநிர்யாணபர்வம். (தொடர்ச்சி.)

(திருதராஷ்டிரன் குருபாண்டவ சேனைகளின் வரலாற்றைச் சொல்லும்படி ஸஞ்சயனைக் கேட்டதும், அவன் மனிதரால் ஊழினைவிலக்கமுடியா தென்பது முதலாகச் சொல்லத்தொடங்கியதும்.)

ஜனமேஜயர் வினவினார்: "ஓ! பிராம்மணஸ்ரேஷ்டரே! அவ்விதம் குருக்ஷேத்திரத்தில் சேனைகள் வகுக்கப்பட்டிருக்கும் பொழுது, காலத்தாலேவைப்பட்ட கௌரவர்கள் என்ன செய்தார்கள்?" என்று வினவ, வைசம்பாயனர் சொல்லுகிறார்: "ஓ! பரதஸ்ரேஷ்டரே! மஹாராஜரே! சேனைகள் அவ்விதம் வகுக்கப்பட்டு ஸன்னத்தமாக இருக்கையில், திருதராஷ்டிரன், ஸஞ்சயனை நோக்கி ஒருவார்த்தை சொன்னான். 'ஸஞ்சய! வா. கௌரவர்களுடையசேனையும் பாண்டவர்களு

டைய சேனையும் தங்கியதைப்பற்றி எனக்கு மிச்சமின்றி எல்லாவற்றையும் சொல்லு. நான் யுத்தத்தில் நாசத்தையுண்டுபண்ணுகின்ற தோஷங்களை அறிகிறவனாயிருந்தும், வஞ்சனையில் எண்ணமுள்ளவனும் கெட்ட சூதாடியுமான புத்திரனைத் தண்டிக்கவோ, எனக்கு நன்மையைச் செய்துகொள்ளவோ வல்லவனாகாதபடியால் தெய்வத்தையே மேலாக நினைக்கிறேன்; மனிதமுயற்சியைப் பயனற்றதாக நினைக்கிறேன். ஸூத! என்னுடைய புத்தியானது தோஷங்களை யொன்றிப் பார்க்கிறதாகவே இருக்கிறது. ஆனால், அது துர்யோதனனை அடையும்போது மறுபடியும் திரும்பிவிடுகிறது. ஸஞ்சய! இவ்விதம் அடைந்திருக்கையில், எது நேரக்கூடியதோ அது நேரவே போகிறது. யுத்தத்தில் சரீரத்தைவிடுவதே க்ஷத்திரியர்களுக்குச் சிறந்த தர்மமல்லவா?" என்றான்.

ஸஞ்சயன் சொல்லுகிறான்: 'ஓ! மஹாராஜரே! நீர் கேட்க விரும்புவது உமக்கு உசிதமானதே. ஆனால், துர்யோதனனிடத்தில் இந்தத் தோஷத்தை வைப்பதற்குத் தக்கவரல்லீர். ஓ! அரசரே! நான் சொல்லுகிறேன், மிச்சமின்றிக் கேளும். தன்னுடைய பாவத்தால் தீமையை அடைகிற மனிதன் தோஷத்தால் காலத்தையோ தேவர்களையோ நிந்திக்கத் தகுதியுள்ளவனாகான். ஓ! மஹாராஜரே! மனிதர்களில் எவன் இழிவானவைகளையெல்லாம் செய்வானோ, இழிவானவைகளை நன்குஆசரிக்கின்ற அவன் எல்லா உலகத்திற்கும் கொல்லவேண்டியவன். ஓ! அரசரே! பாண்டவர்கள் உம்மை எதிர்பார்த்துச் சூதாட்டத்தில் அவமதிக்கப்பட்ட மந்திரிகளுடன் அவமானத்தை அனுபவித்தார்கள். குதிரைகளுக்கும் யானைகளுக்கும் அளவற்ற பராக்கிரமமுடைய அரசர்களுக்கும் யுத்தத்தில் யுத்தநிமித்தமான வைரத்தை என்னிடம் முழுமையும் கேளும். எல்லாவுலகமும் நாசமடையக்கூடிய பெரிய யுத்தத்தில் நடந்ததைக் கேட்டு உறுதியோடிரும். பேரறிவுடையவரான நீர் வருத்தமுற்றவராகாதீர். மனிதனானவன் புண்ணிய பாவ கர்மங்களில் தானே கர்த்தாவாகிறதில்லை. மனிதன் ஸ்வதந்திரமில்லாதவனாகி மரப்பாவைபோலச் செய்விக்கப்படுகிறானல்லவா? சிலர் ஈஸ்வரனால் ஏவப்பட்டும் சிலர் தற்செயலாலும் மற்றவர் முன்வினைகளாலும் செய்விக்கப்படுகின்றனர். இது மூன்று விதமாகக் காணப்படுகிறது. ஆகையால், அனர்த்தத்தை அடைந்தவரான நீர் ஸ்திரமாயிருந்து கேளும்' என்றான்.

**ஸைந்யநிர்யாணபர்வம் முற்றிற்று.**

## நூற்றறுபதாவது அத்யாயம்.

## உலூகதூதாகமன பர்வம்.

(துரியோதனன் உலூகனைப் பாண்டவர்களிடம் தூதனுப்பியது.)

ஓ! மஹாராஜரே! மகாத்மாக்களான பாண்டவர்கள் ஹிரண்வதியின் அருகில் தங்கியிருந்தபொழுது, கௌரவர்கள் விதிப்படி சேனைகளை நிறுத்தினார்கள். ஓ! பாரதரே! துர்யோதனராஜன் அவ்விடத்தில் பராக்கிரமத்துடன் சேனையை இருக்கச்செய்து, அரசர்களை வெகுமானித்து, அப்படியே, காவற்சேனைகளையும் வைத்து, அவ்விடத்தில் காக்கவேண்டிய பொருள்களைக் காக்கும்படி போர்வீரர்களுக்கு உத்தரவுசெய்து, அவ்விடத்தில் கர்ணனையும் துச்சாஸனனையும் ஸுபலபுத்திரனான சகுனியையும் வருவித்து ஆலோசனை செய்தான். ஓ! பாரதரே! ராஜர்ச்ரேஷ்டரே! மனிதர்களில் சிறந்தவரே! அவ்விடத்தில் துர்யோதனராஜன் கர்ணனோடும் சகுனியோடும் ஆலோசித்து, உலூகனைத் தனியே அழைத்து, இந்த வார்த்தையை உரைக்கலானான்: "[1]கைதவ்ய! உலூக! ஸோமகர்களோடு கூடின பாண்டவர்களை நோக்கிச் செல்லு. சென்று, வாஸுதேவர் கேட்க, என்னுடைய வார்த்தையைச் சொல்லு.

'பல வருஷங்களாக ஆலோசிக்கப்பட்டதும் உலகத்திற்குப் பயத்தைச் செய்வதுமான அப்படிப்பட்ட யுத்தமானது பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் இதோ நேரிட்டுவிட்டது. குந்தியின் புத்திரனே! இப்பொழுது, ஸஞ்சயன் கௌரவர்களுடைய மத்தியில் சொல்லியதும், வாஸுதேவரை ஸஹாயமாகவுடையவனும் தம்பிகளுடன் கூடினவனும் கர்ஜிக்கிறவனுமான உன்னுடையதுமான தற்புகழ்ச்சி வார்த்தைக்குரிய காலமானது இதோ வந்துவிட்டது. பிரதிஜ்ஞைசெய்தபடி எல்லாம் செய்யக்கடவாய்' என்றுசொல்லு. அப்படியே நீ, மூத்தவனான குந்திபுத்திரனை நோக்கி என்னுடைய வார்த்தையினால் சொல்லக்கடவாய். என்னவென்றால்: 'தார்மிகனாயிருந்தும் அதர்மத்தில் மனத்தைச் செலுத்துகிறாயாதலால், நீ கொலையாளிபோல் எல்லாச் சகோதரர்களோடும் ஸோமகர்களோடும் கேகயர்களோடும் கூடி, உலகமெல்லாம் நாசத்தையடைய விரும்புகிறாயே? நீ எல்லாப் பிராணிகளின்பொருட்டும் அபயத்தைக் காவாதவனென்பது என்னெண்ணம். ஓ! பரதச்ரேஷ்டனே! உனக்கு மங்களமுண்

---

1 சூதாட்டத்தில் சமர்த்தன்: அல்லது, சூதாடியின் புத்திரன்.

டாகுக. முன்காலத்தில் தேவர்களாலே ராஜ்யமானது அபகரிக்கப் பட்டபொழுது, பிரஹ்லாதனால் சொல்லப்பட்டதும், 'ஓ! தேவர்களே! எவனுடைய [1] தர்ம த்வஜமானது எந்நாளும் த்வஜம் போல் விளக்க மாக எடுத்துக்காட்டப்படுகிறதோ, பாவங்கள் மறைக்கப்பட்டவை களாகவுமிருக்கின்றனவோ அவனுடைய விரதமானது பைடாலம் (=பூனைக்குரியது) என்று பெயருள்ளது' என்னும் பொருளுள்ளது மான இந்த ச்லோகமானது கேட்கப்படுகிறது. அரசனே! இந்தவிஷ யத்தில் இவ்விடத்தில் நாரதராலே என்னுடைய பிதாவுக்குச்சொல்லப் பட்டதும் சிறந்ததுமான இந்தச்சரித்திரத்தைச்சொல்லப்போகிறேன்.

அரசனே! ஒரு சமயம், புத்தி கெட்ட ஒரு பூனையானது எல்லாக்கர்மங்களிலும் முயற்சியில்லாததும் உயரத் தூக்கப்பட்ட கைகளையுடையதுமாகக் கங்கைக்கரையில் இருந்தது. அதுவோ, பிராணிகளுக்கு நம்பிக்கைவருவதற்காக எல்லாப்பிராணிகளையும் நோக்கி, 'மனத்தின் சுத்தியைச்செய்துகொண்டு தர்மத்தைச்செய் கிறேன்' என்று சொல்லிற்று. நாளடைவில், அதனிடம் பக்ஷிகள் நம்பிக்கையை அடைந்தன. அரசனே! அவைகள் அந்தப்பூனையி னிடம்வந்து புகழ்ந்தன. பறவைகளைத் தின்னுகிற அது அந்த எல் லாப் பறவைகளாலும் பூஜிக்கப்பட்டுத்தன்காரியம் செய்யப்பட்டதாக வும் அநுஷ்டானத்தினுடைய பயனும் கிடைத்துவிட்டதாகவும் நினைத்தது. பிறகு, பலநாள்களுக்குப்பின் எலிகள் அந்த இடத் துக்குவந்தன. பாரத! அவ்விடத்தில், அவைகள், தர்மத்தைச் சீல மாகவுடையதும் விரதத்தைச் செய்வதும் பெரியகாரியத்தைச் செய் வதுபோல டம்பத்துடன் கூடினதுமான அந்தப்பூனையைப் பார்த் தன. அரசனே! அதன் விஷயமான நிச்சயத்தில் அவைகளுக்கு இந்த எண்ணமானது உண்டாயிற்று. 'நாமெல்லாரும் பலநண்பர் களையுடையவர்கள். அப்படிப்பட்ட நமக்கு இவர் மாதுலராகி எப் பொழுதும் எங்கும் முதியவர்களையும் இளையவர்களையும் காப்பாற் றட்டும்' என்று அவைகளெல்லாம் பூனையை அடைந்து இதனை உரைக்கலாயின: 'உம்முடைய அருளால் ஸுகமாக ஸஞ்சரிப்பதற்கு விரும்புகிறோம். நீர் எங்களுக்கு உறுதியான கதி. நீர் எங்களுக்கு மிகச்சிறந்த நண்பர். அப்படிப்பட்ட நாங்களெல்லாரும் சேர்ந்து உம்மைச் சரணமாக அடைந்தோம். நீர் எந்நாளும் தர்மத்தை முக் கியமாகக் கொண்டவர். நீர் தருமத்தில் நிலைத்திருப்பவர். ஓ! மிக்க அறிவுள்ளவரே! அப்படிப்பட்ட நீர், இந்திரன் தேவர்களைக்

---

1 தர்மத்துக்கு அடையாளம் பவித்ரம் முதலியன.

காப்பதுபோல் எங்களைக் காப்பீராக' என்றன. அரசனே! அந்த எல்லா எலிகளும் இவ்விதம் சொல்லக்கேட்டு, எலிகளை நாசஞ்செய்கின்ற அந்தப்பூனையோ, பிறகு எல்லாஎலிகளையும் நோக்கி, 'தவம் ரக்ஷணம் இரண்டும் சேர்ந்திருப்பதை நான் பார்க்கவில்லை. ஹிதமான உங்களுடைய சொல்லை நான் அவசியம் செய்யவேண்டும். நீங்களும் எந்நாளும் நான் சொல்லுவதைச் செய்யவேண்டும். உறுதியான நியமத்தைக் கைப்பற்றிய தவத்தினால் மிகவும் ப்ரமத்தை அடைந்தவனாயிருக்கிறேன். நடை விஷயத்தில், ஆலோசித்துப் பார்த்தும், ஒருவிதமான சக்தியையும் நான் காணவில்லை. குழந்தைகளே! அப்படிப்பட்ட என்னை நீங்கள் இதுமுதல் எப்பொழுதும் நதிக்கரைக்குக் கொண்டுபோகவேண்டும்' என்றது. பரதச்ரேஷ்டனே! எலிகள், பூனையைநோக்கி, 'அப்படியே' என்று உறுதிசொல்லி, பிறகு, முதியவை இளையவை ஆகிய எல்லாவற்றையும் அதனிடம் ஒப்புவித்தன. பிறகு, பாவியும் கெட்டஎண்ணமுள்ளதுமான அந்தப் பூனை அதுமுதல் எலிகளைத் தின்னுகிறதாகிப் பருத்ததும் நல்ல நிறமுள்ளதும் உறுதியான மூட்டுக்களையுடையதும் ஆயிற்று. இப்படி யிருக்கையில், பிறகு, அந்த எலிகளின் கூட்டமானது மிகவும் குறைவையடைந்தது. பூனையும், பலமும் பராக்கிரமமு முடையதாக வளர்ந்தது. பிறகு, எல்லா எலிகளும் கூடி ஒன்றையொன்று நோக்கி, 'மாமா நாளுக்குநாள் வளர்கிறார்; நாம் மிகவும் குறைவை அடைகிறோம்' என்று சொல்லின. அரசனே! பிறகு, மிக்கபுத்திமானான டிண்டிகனென்கிற ஒரு எலியானது, எலிகளின் பெருங்கூட்டத்தை நோக்கி, 'நீங்கள் கூட்டமாகச்சேர்ந்து நதிக்கரை செல்லும்பொழுது நான் அம்மானுடன் பின்னாலே வருகிறேன்' என்ற வார்த்தையைச் சொல்லிற்று. அப்பொழுது, அவைகளெல்லாம், 'நல்லது, நல்லது' என்று புகழ்ந்தன. டிண்டிகனுடைய பயனுள்ளதான சொல்லை நியாயப்படி செய்யவுமே செய்தன. பிறகு, பூனை அது அறியாமல் உடனே டிண்டிகனைத் தின்றது. பிறகு, அவைகளெல்லாம் சேர்ந்து விரைவாக ஆலோசனைசெய்தன. அரசனே! அவைகளில் மிக்கவயதுசென்ற கோலிகனென்கிற ஓர் எலியானது, ஜாதிகளின் மத்தியில், 'மாதுலனவன் தர்மத்தில் விருப்பமுள்ளவனல்லன். கபடமாகவே ஜடையானது தரிக்கப்பட்டது. கிழங்குகளையும் பழங்களையும் தின்பவனுடைய மலமானது மயிர்பற்றினதா யிராது. இவனுடைய உறுப்புக்கள் விருத்தியடைகின்றன. நம் கூட்டமும் குறைவடைகிறது. இப்பொழுது ஏழுஎட்டு நாளாக டிண்டிகனையும் காணவில்லை' என்றது.

இந்த வார்த்தையைக்கேட்டு எல்லா எலிகளும் ஓடிவிட்டன. கெட்ட எண்ணமுடைய அந்தப்பூனையும் வந்தபடியே போயிற்று. கெட்ட புத்தியுடையவனே! நீயும் அப்படிப்பட்டவனே. பூனையின் விரதத்தை அடுத்தவனாகிப் பூனை எலிகளிடம் செய்ததுபோல ஞாதிகளிடம் எப்பொழுதும் செய்கிறாய். உன்னுடைய சொல் ஒருவிதமும் செய்கை வேறுவிதமாகக் காணப்படுகின்றன. உன்னுடைய வேதங்களும் சாந்தியும் உலகத்தை ஏமாற்றுவதற்காகவே. அரசனே! இந்தக் கபடத்தைவிட்டு க்ஷத்திரியதர்மத்தை அடுத்தவனாகி எல்லாக்கார்யங்களையும் செய்யக்கடவாய். தர்மத்திலிருப்பவனாயிருக்கிறாய். பரதஸ்ரேஷ்டனே! புஜபலத்தினால் பூமியையடைந்து பிராமணர்களுக்கும் பிதிருக்களுக்கும் உசிதமாகத் தானத்தைக்கொடு. மாதாவின் இதத்திலிருப்பவனாகி யுத்தத்தில் ஜயித்து, பல வருஷங்கள் க்லேசத்தை அடைந்தவளான அவளுடைய கண்ணீரைத் துடை. சிறந்த ஸம்மானத்தை அவளுக்கு உண்டுபண்ணு. சிரமப்பட்டு வேண்டப்பட்ட ஐந்து கிராமங்கள், 'எப்படி யுத்தத்தில் போர்செய்வோம்? பாண்டவர்களை எப்படி கோபிக்கச் செய்வோம்?' என்னும் எண்ணத்தால் எங்களால் விடப்படவில்லை. உன்னிமித்தம் துஷ்ட அபிப்பிராயமுடைய விதுரனை விலக்கினதையும் அப்பொழுது அரக்குமாளிகையை எரித்ததையும் நினை. ஆண்பிள்ளையாகக் கடவாய். அரசனே! கௌரவர்களுடைய சபைக்கு வந்தவரான கேசவரிடம், 'இதோ நான் ஸமாதானத்திற்கானாலும் யுத்தத்திற்கானாலும் உறுதியாயிருக்கிறேன்' என்று சொல்லி அனுப்பிய யுத்தத்திற்கு, இதோ காலமானது வந்துவிட்டது. யுதிஷ்டிர! இதற்காக என்னால் இவையெல்லாம் செய்யப்பட்டன. க்ஷத்திரியனாயிருப்பவன் யுத்தத்தைக்காட்டிலும் வேறான லாபத்தைப் பெரிதாக நினைப்பானா? பரதஸ்ரேஷ்டனே! தவிரவும், நீ க்ஷத்திரிய குலத்தில் பிறந்து பாரில் புகழடைந்து துரோணரிடத்திலும் கிருபரிடத்திலும் அஸ்திரங்களையடைந்து, ஸமான வம்சத்திலும் ஸமான பலத்திலுமிருக்கிற வாஸுதேவரை அடுத்தாய்' என்று சொல்லு. நீ பாண்டவர்களுடைய சமீபத்தில் வாஸுதேவரையும் நோக்கி, 'உமக்காகவும் பாண்டவர்களுக்காகவும் ஸன்னத்தமுடையவராய் என்னை எதிர்த்து யுத்தம் செய்யும். ஸபையின் நடுவில் மாயையினாலே செய்த ரூபத்தை மறுபடியும் அப்படியே செய்துகொண்டு, அர்ஜுனனோடுகூடி என்னை எதிர்க்கக்கடவீர். இந்திரஜாலமும் மாயையும் பயங்கரமான வஞ்சனையும் யுத்தத்தில் ஆயுதமெடுத்தவனுக்கு (ப்பயத்தை உண்டாக்குவனவல்ல.) ஆனால், கோபத்தையே கொடுக்

கின்றன. இவைகளைச் செய்வதற்கு எங்களுக்கும் உத்ஸாகமுண்டு. மாயையினாலே, ஸ்வர்க்கத்திலேயோ ஆகாயத்திலேயோ செல்லுவோம். பாதாளத்திலேயோ இந்திரனுடைய பட்டணத்திலேயோ பிரவேசிப்போம். எங்கள் சரீரத்தில் பல ரூபங்களையும் காண்பிப்போம். பிரம்மாதாம் பிராணிகளை மனத்தினாலேயே வசம் செய்கிறார். ஓ! விருஷ்ணிகுலத்தில் பிறந்தவரே! 'நான் யுத்தத்தில் திருதராஷ்டிரபுத்திரர்களைக் கொன்று பாண்டவர்களுக்கு உத்தமமான ராஜ்யத்தைக் கொடுப்பேன். என்னை ஸகாயமாகவுடையவனும் இடக்கையினாலும் பாணம் விடுபவனுமான அர்ஜுனனோடு உங்களுக்குப் பகை வந்துவிட்டது' என்று நீர் சொல்லிய உம்முடைய அந்த வார்த்தையெல்லாம் ஸஞ்சயன் எனக்குச்சொன்னான். அப்படிப்பட்ட நீர் சொல்தவறாதவராகி இப்பொழுது பாண்டவர்களின் நிமித்தம் பராக்கிரமமுடையவராக யுத்தத்தில் ஸன்னத்தராய்த் போர் செய்யும்; பார்ப்போம். ஆண்பிள்ளையாக இருக்கக்கடவீர். பகைவனை அறிந்து சுத்தமான ஆண்மையையடைந்தவனாகிப் பகைவருக்குத் துயரத்தைச் செய்கிறவனே, நல்ல பிழைப்பாகப் பிழைக்கிறான். ஓ! கிருஷ்ணரே! காரணமில்லாமலே உமக்கு உலகத்தில் பெரிதான புகழானது பரவிவிட்டது. இப்பொழுது, இதனால், மீசை முதலியவைகளான அடையாளங்களுள்ள ஷண்டர்களிருக்கிறார்கள் என்று அறிகிறோம். என்னைப்போன்ற அரசன் கம்ஸனுக்கு வேலையாளான உம்மிடத்தில் எவ்விதத்தாலும் யுத்தத்தில் ஸன்னாகம் செய்வது விசேஷமாகத் தகுதியில்லை' என்று சொல்லு.

உலூக! மீசையில்லாத ஆண்பிள்ளையும் சிறுவனும் பெருந்தீனிக்காரனும் மூடனுமான அந்தக் கெட்ட பீமசேனனை நோக்கி, அடிக்கடி என்வார்த்தையைச் சொல்லு. 'குந்தியின் புத்திரனே! முன் விராடநகரத்தில் நீ [1] வல்லனென்கிற பெயர்பெற்ற சமையற்காரனானதென்பது என்னுடைய ஆண்மையே யன்றோ? முன் சபையின் நடுவில் நீ பிரதிஜ்ஞைசெய்தது உண்மை. சக்தியிருந்தால் துச்சாஸனனுடைய இரத்தத்தைப் பானம் செய்யலாம். குந்தியின் புத்திரனே! 'நான் யுத்தத்தில் சீக்கிரமாகத் தார்த்தராஷ்டிரர்களைக் கொல்லுவேன்' என்று சொல்லுகிறாயே; அதற்கு இதோ காலம் வந்துவிட்டது. பாரத! நீயோ! அன்னத்திலும் பக்ஷ்யத்திலும் [2] பேயத்திலும் முன்னிடத்தக்கவன். யுத்தம் எங்கே? போஜனம் எங்கே? யுத்தம் செய்; ஆண்பிள்ளையாயிரு. பாரத! கொல்லப்பட்டுக் கதையைக்

---

1 இங்கே 'வல்லவ.' என்பது மூலம். 2 குடிக்கத்தக்க மதுமுதலியன.

கட்டிக்கொண்டு பூமியில் படுக்கப்போகிறாய். வ்ருகோதர! ஆகை யால், சபையின் நடுவில் நீ துள்ளினது வீண்' என்று சொல்லு. உலூக! என்வார்த்தையினால், நகுலனையும் நோக்கி, 'பாரத! இப் பொழுது உறுதியுள்ளவனாயிருந்து யுத்தம்செய். உன்னுடைய ஆண் மைத்தனத்தைப் பார்க்கிறோம். பாரத! யுதிஷ்டிரனிடத்திலுள்ள விருப்பையும் என்னிடமுள்ள வெறுப்பையும் திரௌபதியினுடைய கிலேசத்தையும் உள்ளபடி இப்பொழுது நினை' என்று சொல்லு. நீ, அர சர்களுடைய மத்தியில் ஸஹதேவனையும் நோக்கி, 'பாண்டவ! இப் பொழுது யுத்தத்தில் முயற்சியுள்ளவனாகி யுத்தம்செய். கிலேசங்களை யும் நினை' என்று என் வார்த்தையாகச் சொல்லு. நீ, என் வார்த்தையி னால், விராடன் துருபதனிருவரையும் நோக்கி, 'பிரஜைகளின் படைப்பு முதற்கொண்டு, மிக்க குணங்களுள்ளவர்களாயினும், போஷிக்கப் படத்தக்க வேலைக்காரர்கள் போஷகர்களான எஜமானர்களும், அப் படியே, தனபதிகளும் (போஷிக்கும் எஜமானர்களுமான) அரசர்கள் போஷிக்கப்படத்தக்க வேலைக்காரர்களுமானதை முன்னம் பார்த்த தில்லை. உங்களுக்கு இவன் அரசனென்றுவந்தது கொண்டா டத்தக்கதில்லை. ஆகையால், அப்படிப்பட்ட நீங்கள் சேர்ந்தவர் களாகி உங்களுக்காகவும் பாண்டவர்களுக்காகவும் என்னை வதம் செய்வதற்கு என்னுடன் நன்கு யுத்தம் செய்யக்கடவீர்கள்' என்று சொல்லு. நீ, என்னுடைய வார்த்தையினாலே, பாஞ்சால புத் திரனான திருஷ்டத்யும்னனையும் நோக்கி, 'இதோ உனக்கு ஸமயமா னது வந்துவிட்டது. உன்னாலும் அது அடையத்தக்கது. யுத்தத் தில் துரோணரை அடைந்து சிறந்த நன்மையை அறியப்போகிறாய்; யுத்தம் செய். நண்பர்களோடு சேர்ந்து செய்யமுடியாத பாவச்செய லைச் செய்' என்று சொல்லு. உலூக! பிறகு, என்வார்த்தையினால், சிகண்டியை நோக்கி, 'சிறந்த தோள்களையுடையவரும் கௌரவரும் வில்லாளிகளில் சிறந்தவருமான காங்கேயர், ஸ்திரீயென்று நினைத்து, உன்னைக் கொல்லமாட்டார். இப்பொழுது, சிறிதும் பயமில்லாதவனாகி யுத்தம் செய்யக்கடவாய். யுத்தத்தில் ஸன்னத்தனாகிக் கார்யத்தைச் செய். உனது ஆண்மைத்தனத்தைப் பார்க்கிறோம்' என்று சொல்லு' என்றான்.

இவ்விதம் சொல்லி, பிறகு, அரசன் சிரித்துக்கொண்டு உலூ கனை நோக்கிச் சொன்னதாவது: 'நீ, வாஸுதேவர் கேட்க, அர்ஜுனனை நோக்கி மறுபடியும் சொல்லக்கடவாய். 'வீர! நீ எங்களை வென்றாவது இந்தப்பூமியை ஆளு. அப்படியில்லாவிட்டால், யுத்தத்தில் எங்களால்

ஜயிக்கப்படு. பாண்டவ! ராஜ்யத்தைவிட்டுத் துரத்தினதில் உண்டான கிலேசத்தையும் வனவாஸத்தையும் க்ருஷ்ணையினுடைய பலவிதக் கிலேசத்தையும் நினைக்கிறவனாகி ஆண்பிள்ளையாயிருக்கக்கடவாய். க்ஷத்திரியஸ்திரீயானவள் எதற்காக ஆண்பிள்ளையைப் பெறுகிறாளோ அது இதோ வந்துவிட்டது. யுத்தத்தில் பலத்தையும் வீரத்தன்மையையும் சூரத்தன்மையையும் மேலான அஸ்திரங்களின் வேகத்தையும் ஆண்மைத்தனத்தையும் காண்பித்துக் கோபத்தைக்கொள். மிக்க கிலேசத்தை அடைந்தவனும் ஐச்வரியத்திலிருந்து நழுவும்படி செய்யப்பட்டவனும் தீனனும் நீண்டகாலம் (வனத்தில்) வஸித்தவனுமான எவனுடைய மனம் வெடிக்காது? நல்லகுலத்தில் பிறந்தவனும் சூரனும் பிறர் செல்வத்தில் விருப்பமில்லாதவனுமான எவனுக்கு நிலையான ராஜ்யத்தை ஆக்கிரமித்தவன் கோபத்தைத் [1] தூண்டமாட்டான்? பெரிதான எந்த வார்த்தையானது சொல்லப்பட்டதோ அதைச் செய்கையால் காண்பிக்கலாம். கார்யத்தைச் செய்யாமல் தற்புகழ்ச்சி செய்துகொள்ளுகிறவனைப் பெரியோர்கள் கெட்டமனிதனாக நினைக்கின்றார்கள். பகைவருடைய வசத்திலிருக்கிற ஸ்தானத்தையும் ராஜ்யத்தையும் மறுபடி தூக்கியெடு. யுத்தத்தில் விருப்பமுள்ளவனுக்கு இம்மை மறுமைப்பயன்கள் இரண்டும் உண்டு. ஆகையால், அந்த ஆண்மையைச் செய். சூதாட்டத்தால் ஜயிக்கப்பட்டாய். க்ருஷ்ணையும் சபைக்குக் கொண்டுவரப்பட்டாள். ஆண்பிள்ளையென்கிற அபிமானமுள்ள மனிதனாலே பொறுமையானது செய்யக்கூடியது. பன்னிரண்டு வருஷங்கள் வீட்டைவிட்டுக் காட்டில் துரத்தப்பட்டாய். ஒருவருஷம் விராடனுக்கு வேலைக்காரனாயிருப்பதை அடைந்து வசிக்கும்படி செய்யப்பட்டாய். ஓ! பாண்டவ! ராஜ்யத்தைவிட்டுத் துரத்தினதிலுள்ள துன்பத்தையும் வனவாஸத்தையும் க்ருஷ்ணையினுடைய பலவகைத் துயரத்தையும் நினைக்கிறவனாகி ஆண்பிள்ளையாக இருக்கக்கடவாய். அடிக்கடி பகைவர் சொல்லக்கூடிய வார்த்தையைச் சொல்லுகிறவர்களிடம் பொறுமையைக் காண்பி. பொறுமையன்றோ ஆண்தன்மை? பார்த்தனே! இந்த யுத்தத்தில், உன்னுடைய கோபமும் பலமும் அப்படியே வீர்யமும் ஞானமும் அஸ்திரங்களின் வேகமும் காணப்படட்டும். யுத்தம் செய். ஆண்பிள்ளையாகக்கடவாய். ஆயுதபூஜை நிறைவேறிவிட்டது. குருக்ஷேத்திரமும் சேறில்லாததாயிருக்கிறது. உன்னுடைய குதிரைகளும் புஷ்டியுள்ளவைகளாயிருக்

1 ‘நான் இவ்விதம் செய்தும் உனக்குக் கோபம் ஜ்வலிக்கவில்லையே? நீ எவனைச் சேர்ந்தவன்?’ என்று கருத்து.

கின்றன. போர்வீரர்களும் போஷிக்கப்பட்டிருக்கின்றனர். கேசவருடன் கூடி நாளை யுத்தம் செய்யக்கடவாய். யுத்தத்தில் பீஷ்மருடன் எதிர்க்காமல் ஏன் புகழ்ந்துகொள்ளுகிறாய்? கௌந்தேய! கந்தமாதன பர்வதத்தில் ஏற விருப்பமுள்ள [1]அறிவில்லாதவன் போல இவ்விதம் [2] உளறுகிறாய். உளறாதவனாக ஆண்மகனாயிருக்கக்கடவாய். பார்த்த! யுத்தத்தில் வெல்ல முடியாதவனான கர்ணனையும் பலசாலிகளில் சிறந்தவனான சல்யனையும், பலசாலிகளில் சிறந்தவரும் யுத்தத்தில் இந்திரனுக்கு நிகரானவருமான துரோணரையும் வெல்லாமல், இவ்வுலகில் ராஜ்யத்தை எப்படி விரும்புகிறாய்? பார்த்த! பிரம்மவித்தையிலும் வில்லிலும் ஆசார்யரும், அந்த இரண்டு வேதங்களுடைய முடிவையும் அடைந்தவரும், யுத்தத்தில் பொறுப்பை வகிப்பவரும் கலங்கச்செய்ய முடியாதவரும், சேனைகளில் ஸஞ்சரிப்பவரும், நழுவாதவரும், மிக்க காந்தியுடையவருமான துரோணரை வெல்ல விரும்புகிறாய். அது தவறு. காற்றினால் மஹாமேருமலை பொடி செய்யப்பட்டதாக நாம் கேட்டதில்லை. நீ என்னை நோக்கிச் சொல்லுகிறபடி நடக்குமேயானால், காற்று மேருவைத் தூக்கிச்செல்லும்; ஆகாயம் பூமியில் விழும்; யுகம் மாறும். பகைவர்களை அழிப்பவரான இவரை எதிர்த்துப் பிழைக்க விரும்புகிறவன் எவன் இருக்கிறான்? பார்த்தனானாலும் அல்லது மற்றவனானாலும் (இவரை எதிர்த்து) எந்த ஒருவன் க்ஷேமமாக வீட்டுக்குச் செல்லுவான்? யுத்தத்தில் இவர்களால் (கொல்ல) நினைக்கப்பட்டவனோ அல்லது குரூரமான பாணத்தால் தாக்கப்பட்டவனோ உயிருடன் [3] காலால் பூமியை மிதித்துக்கொண்டு எப்படி விடுபடுவான்? கிணற்றில் வசிக்கின்ற தவளைபோல, சேர்ந்ததும் வெல்லமுடியாததும் தேவ ஸைன்யம்போல விளங்குகின்றதும் தேவர்களால் ஸ்வர்க்கம் காக்கப்படுவதுபோல அரசர்களால் காக்கப்பட்டதுமான இந்த அரசர்களின் சேனையை ஏன் அறிகிறாயில்லை? மந்த! அற்ப புத்தியுள்ளவனே! கீழ்த்திசையிலுள்ளவர்களாலும், மேற்றிசையிலுள்ளவர்களாலும், தெற்குத் திக்கிலுள்ளவர்களாலும், வடக்குத் திக்கிலுள்ளவர்களாலும், காம்போஜர்களாலும், சகர்களாலும், கசர்களாலும், ஸால்வர்களாலும், மச்சதேசத்தவர்களாலும், மத்தியதேசத்திலுள்ளவர்களா

---

1 'பங்குः' என்று பாடங் கொள்ளுதல் நேர். பங்குः=முடவன்.

2 'எருமலே ஏறிவிட்டவன்போலப் பிதற்றுகிறாய்' என்பது.

3 'பதா பூமிம் உபஸ்ப்ருஶந்' என்பது மூலம். 'காலால் பூமியைத் தொட்டுக் கொண்டு' என்பது பொருள். 'மனிதன்' என்பதுபழையவுரை.

லும், மிலேச்சர்களாலும், புளிந்தர்களாலும், [1]தமிழர்களாலும் தெலுங்கர்களாலும், காஞ்சீதேசத்தார்களாலும், தாண்ட முடியாததான கங்கையின் வேகம்போல நன்கு விருத்தியடைந்துள்ளன. பலவித ஜனங்களுடைய கூட்டத்தையும் யானைகளுடைய சேனையின்மத்தியி லிருப்பவனான என்னையும் ஏன் போர்க்களத்தில் (எதிர்த்து) யுத்தம் செய்ய விரும்புகிறாய்? பார்த்த! பாரதனே! யுத்தத்தில் உன்னுடைய குறைவற்ற தூணீரங்களையும் அக்னியினால் கொடுக்கப்பட்ட தேரையும் திவ்யமான த்வஜத்தையும் அறிகிறோம். அர்ஜுன! தற்புகழ்ச்சி செய்துகொள்ளாமல் யுத்தம் செய். ஏன் அதிகமாகப் பிதற்றுகிறாய்? இந்தக்கார்யத்தின் முடிவானது யுத்தத்தின் முறையால் உண்டாகிறது. இது பிதற்றுவதினால் ஸித்திக்கிறதில்லை. தனஞ்சய! உலகத்தில் இந்தக் கார்யமானது பிதற்றுவதினால் கைகூடுகிறதானால் எல்லாரும் விருப்பம் நிறைவேறினவர்களாவார்கள். பிதற்றுவதில் எவன் எளியவன்? உனக்கு ஸஹாயரான வாஸுதேவரை நான் அறிவேன். பனைஅளவான உன்னுடைய காண்டீவத்தையும் அறிவேன். உன்னைப் போன்ற போர்வீரன் இல்லை என்றும் அறிவேன். அறிந்துகொண்டே, உன்னுடைய இந்த ராஜ்யத்தைத் தரிக்கிறேன். மனிதன் மாயை முதலான [2]உபதர்மத்தினாலே ஸித்தியை அடைகிறானில்லை. பிரம்மாவே மனத்தினாலேயே எல்லாவற்றையும் தம்வசத்தில் அனுகூலங்களாகச்செய்துகொள்ளுகிறார். நீ புலம்பிக்கொண்டிருக்கையிலேயே பதின்மூன்றுவருஷங்கள் ராஜ்யமானது அனுபவிக்கப்பட்டது. பந்துக்களுடன்உன்னைக் கொன்றுவிட்டு மறுபடியுமே ஆளப்போகிறேன். ஓ! தாஸனே! நீ பந்தயத்தினால் ஜயிக்கப்பட்டபொழுது, உன்னுடைய காண்டீவம் எங்கே இருந்தது? பல்குன! அப்பொழுது, பீமஸேனனுடைய பலமும் எங்கேஇருந்தது? அப்பொழுது, குற்றமற்றவளான திரௌபதியாலல்லாமல் கதையுடன்கூடின பீமஸேனனாலோ காண்டீவத்துடன் கூடின அர்ஜுனனாலோ விடுதல் ஏற்படவில்லை. துருபதபுத்திரியான அவளோ, அடிமைகளாகிவிட்ட உங்களை விடுவித்தாள். நீசத்தன்மையை அடைந்தவர்களும் தொண்டுசெய்வதில் இருப்பவர்களுமான உங்களை நோக்கி, நான் 'எள்ளுப்பதர்கள்' என்று சொன்னதானது உண்மையே ஆயிற்று. அப்பொழுது, விராடநகரத்தில் அர்ஜுனனான நீ (கூந்தலின்) பின்னலைத் தரித்திருந்தாயல்லையோ? கௌந்தேய! பீமஸேனன் விராடனுடையமடைப்பள்ளியில்வேலையில்

---

1 'த்ராவிட ஆந்த்ர காஞ்ச்யை:' என்பது மூலம்.

2 'பர்யாய தர்மேண' என்பது மூலம். 'தாயமுறையில் கிடைக்காது; யுத்தத்தினாலேயே கிடைக்கும்' என்பது பழைய உரை.

ஸ்ரமத்தையடைந்தது என்னுடைய ஆண்மையே. இப்படியே, க்ஷத்திரியர்கள் க்ஷத்திரியரின் விஷயத்தில் எப்பொழுதும் சிக்ஷையைச் செய்வார்கள். நீ (கூந்தலைப்) பின்னிக்கொண்டு பேடிவேடம்பூண்டு கன்னிகையை ஆட்டிவைத்தாய். பல்குன! கிருஷ்ணனுக்கும் உனக்கும் பயந்து ராஜ்யத்தைத் திருப்பிக்கொடேன். கிருஷ்ணனுடன் கூடி யுத்தம் செய்வாய். மாயையோ இந்திரஜாலமோ பயங்கரமானவஞ்சனையோ, யுத்தத்தில் ஆயுதமெடுத்தவனுக்குப் [1] பதில் கர்ஜனைகளை அளிக்கிறதில்லை. ஆயிரம் வாஸுதேவர்களோ, நூறு அர்ஜுனர்களோ, வீண்போகாத பாணங்களையுடையவனான என்னை எதிர்த்தால் பத்துத்திக்குக்களிலும் ஓடுவார்கள். பீஷ்மருடன் யுத்தத்தைச் செய்யக்கடவாய். தலையால் மலையையாவது உடை. கைகளால் மிக்க ஆழமானவீரர்களாகிற கடலையாவது தாண்டு.

கிருபராகிற பெரியமீனையுடையதும், விவிம்சதியாகிற பெரிய ஸர்ப்பத்தையுடையதும் பிருஹத்பலனாகிற பெரிய கொந்தளிப்பையுடையதும், ஸோமதத்தன் புத்திரனாகிற திமிங்கிலத்தையுடையதும், பீஷ்மராகிற வேகத்தையுடையதும், முடிவற்றதும், துரோணராகிற முதலையிருத்தலால் நெருங்கமுடியாததும், கர்ணனாகிற [2] சஷத்தையுடையதும், சல்லியனாகிற சுழலையுடையதும், காம்போஜனாகிற வடவைத்தீயையுடையதும், துச்சாஸனனாகிற பெருக்கையுடையதும், சலனும் சல்லியனுமாகிற மீன்களையுடையதும், ஸுஷேணனும் சித்திராயுதனுமாகிற நாகத்தையும் முதலையையுமுடையதும், ஜயத்ரதனாகிற மலையையுடையதும், புருமித்திரனாகிற மேட்டையுடையதும், துர்மர்ஷணனாகிற ஜலத்தையுடையதும், சகுனியாகிற பெரிய பள்ளத்தையுடையதும், ஆயுதங்களுடைய கூட்டமாகிற பெருக்கையுடையதும், நாசம்செய்ய முடியாததும், மிகவும் விருத்தியடைந்ததுமான வீரர்களாகிற சமுத்திரத்தில் இறங்கி, எல்லாப் பந்துக்களும் மடிந்து நீ ஸ்ரமத்தினால் அறிவிழந்துபோகிறபொழுது, உன்னுடைய மனம் பரிதாபத்தை அடையும். பார்த்த! அப்பொழுது உன்மனமானது, அசுசியாயிருப்பவனுடைய மனமானது ஸ்வர்க்கத்திலிருந்தும் திரும்புவதுபோல, பூமியை ஆளுவதிலிருந்து திரும்பிவிடும். சமனத்தை அடை. தவமில்லாதவனால் ஸவர்க்கம் அடையப்படாததுபோல் உன்னால் ராஜ்யமானது கொஞ்சமும் அடையக்கூடியதன்றன்றோ?'' என்று சொல்' என்றான்.

---

1 'எதிர்த்து யுத்தம் செய்வது ஆகாது' என்பது.

2 ஒருவகைப் பெரிய மீன்.

## நூற்றறுபத்தோராவது அத்யாயம்.

## உலூகதூதாகமனபர்வம். (தொடர்ச்சி.)

(உலூகன் யுதிஷ்டிரர் முதலானவர்களிடம் துரியோதனன் சொல்லி யனுப்பியதைத் தனித்தனி சொல்லியது.)

ஸூதாடியின் மகனான உலூகன், பாண்டவர்களுடைய சேனை யிருக்குமிடத்தை அடைந்து, பாண்டவர்களைச் சந்தித்து, யுதிஷ்டிரரை நோக்கி, 'தூதர்களுடைய வார்த்தைகளை அறிந்த நீர், துர்யோதனன் சொன்னபடி அவனுடைய கட்டளையைச் சொல்லுகிற என்னிடமிருந்தும் கேட்டுக் கோபியாமலிருக்கக் கடவீர்' என்றான். யுதிஷ்டிரர், 'உலூக! உனக்குப் பயமானது இல்லை. நீ, கவலையைவிட்டு, லோபியும் நீண்ட அறிவில்லாதவனுமான துர்யோதனனுடைய அபிப்பிராயத்தைச் சொல்' என்றார். பிறகு, உலூகன், காந்தியுடையவர்களும் மஹாத்மாக்களுமான பாண்டவர்களுடைய மத்தியில், ஸ்ருஞ்சயர், மத்ஸியர், புகழ்பெற்றவரான கோவிந்தர், புத்திரர்களோடு கூடின துருபதன், விராடன் ஆகிய இவர்களுக்கெதிரில், எல்லா அரசர்களுடைய மத்தியிலும் ஒருவார்த்தையைச் சொல்லலானான்.

'ஓ! யுதிஷ்டிரரே! பெரிய மனத்தையுடைய துர்யோதன ராஜன், கௌரவவீரர்கள் கேட்க, உம்மைக் குறித்து இந்த வார்த்தையைச் சொன்னான். இதனை அறியக்கடவீர். (துர்யோதனன்), 'நீ சூதாட்டத்தால் வெல்லப்பட்டாய். திரௌபதியும் சபையில்கொண்டு வரப்பட்டாள். ஆண்பிள்ளையென்கிற அபிமானமுடைய மனிதனால் பொறுமையானது அடையத்தக்கது. பன்னிரண்டு வருஷங்கள் வீட்டிலிருந்தும் காட்டிற்குத் துரத்தப்பட்டாய். ஒருவருஷம் விராடனுக்கு வேலைக்காரனாயிருந்து வஸித்தாய். பாண்டவ! (நான் காட்டின) பொறுமையையும், நாட்டைக் கவர்ந்ததையும், வனவாஸத்தையும், திரௌபதியினுடைய பெரிய க்லேசத்தையும் நினைக்கிறவனாகி ஆண்மகனாயிருக்கக்கடவாய். பாண்டவ! சக்தியற்றவனான பீமஸேனன் சபதம்செய்தபடி, முடியுமானால், துச்சாஸனனுடைய உதிரத்தை அருந்தட்டும். ஆயுதங்களுக்குப் பூஜைசெய்தாய் விட்டது. குருக்ஷேத்திரம் சேறில்லாததாயிருக்கிறது. வழி (மேடுபள்ளமில்லாமல்) சமமாயிருக்கிறது. உனக்குக் குதிரைகள் போஷிக்கப்பட்டுள்ளன. நாளைக் கிருஷ்ணனுடன்கூடிப் போர்செய்யக் கடவாய். போரில் பீஷ்மருடன் எதிர்க்காமல் ஏன் பிதற்று

கிறாய்? கந்தமாதன பர்வதத்தில் ஏறவிருப்பங்கொண்ட முடவன் போல் ஏன் இவ்விதம் பிதற்றுகிறாய்? பிதற்றாமல் ஆண்மையுடன் இரு. மிகவும் வெல்லமுடியாதவனான கர்ணனையும் பலசாலிகளில் சிறந்தவனான சல்லியனையும், பலவான்களில் சிறந்தவரும் யுத்தத்தில் இந்திரனுக்கு நிகரானவருமான துரோணரையும் யுத்தத்தில் வெல்லாமல் எவ்விதம் இம்மையில் ராஜ்யத்தை விரும்புகிறாய்? பார்த்த! பிராம்மணனுக்குரிய வித்தையிலும் வில்வித்தையிலும் ஆசார்யரும் இரண்டு வேதங்களின் முடிவையுமடைந்தவரும் யுத்தத்தில் பாரத்தைத் தாங்குபவரும், கலக்கப்பட முடியாதவரும், சேனைகளில் சஞ்சரிப்பவரும், நழுவாதவரும், மிக்க தேஜஸையுடையவருமான துரோணரை வெல்ல விரும்புகிறாய்; அது வீண். வாயுவானது மேருமலையைப் பொடியாக்கினதாகக் கேட்கவில்லை. நீ என்னை நோக்கிச்சொன்னபடி ஏற்படுமேயானால், காற்று மேருவைத் தூக்கிச்செல்லும்; ஆகாயம் பூமியில் விழும்; யுகமும் திரும்பும். யானையேறினவனோ குதிரையேறினவனோ, தேரேறினவனோ, பகைவரைப் பொடிசெய்கின்றவரான இவரை எதிர்த்து உயிரில் விருப்பங்கொண்டு மறுபடி க்ஷேமத்துடன் வீட்டுக்குச் செல்லுகிறவன் எவன் இருக்கிறான்? யுத்தத்தில், இந்தப் பீஷ்மதுரோணர்களால், கொல்வதென்று நிச்சயிக்கப்பட்டு, க்ரூரமான பாணத்தால் தாக்கப்பட்ட [1] ஒரு மனிதன் உயிருடன் எப்படி விடப்படுவான்? நீ கிணற்றில் வசிக்கின்ற தவளைபோல், ஒன்று சேர்ந்ததும், வெல்லமுடியாததும், தேவ ஸைன்யம்போல் விளங்குவதும், தேவர்களால் ஸ்வர்க்கம் காக்கப்படுவது போலக் கிழைத்திக்கிலுள்ளவர்களும் மேலைத்திக்கிலுள்ளவர்களும் தெற்குத்திக்கிலுள்ளவர்களும் வடக்குத்திக்கிலுள்ளவர்களும் காம்போஜர்களும் சகர்களும் கசர்களும் ஸால்வர்களும் மாத்ஸியர்களும் குருதேசத்தில் முக்கியமான தேசத்திலுள்ளவர்களும் மிலேச்சர்களும் வேடர்களும் தமிழர்களும் தெலுங்கர்களும் காஞ்சியிலுள்ளவர்களுமான அரசர்களால் காக்கப்பட்டதுமான இந்தச்சேனையை ஏன் அறியவில்லை? மந்தனே! அற்பமான புத்தியுடையவனே! யுத்தத்தில் நன்கு விருத்தியடைந்ததும், நன்கு விருத்தியடைந்த கங்கையின் வேகம்போலக் கரைகடக்க முடியாததுமான பலவித ஜனங்களுடைய ஸங்கத்தையும் யானைப்படையின் நடுவில் இருப்பவனான என்னையும் எதிர்த்து ஏன் யுத்தம் செய்யவிரும்புகிறாய்?' என்றான்.

1 இதன் 531-ம் பக்கம் குறிப்பிற் பார்க்க.

இவ்விதம், உலூகனுனவன், அரசரும் தர்மபுத்திரருமான யுதிஷ் டிரரை நோக்கிச் சொல்லிவிட்டு, மறுபடியும் அர்ஜுனனைத் திரும்பி நோக்கிச் சொல்லலானுன். 'அர்ஜுன! தற்புகழ்ச்சி செய்துகொள் ளாமல் யுத்தம் செய். ஏன் பலவாருகப் பிதற்றுகிருய்? பிதற்று வதினுல் இது ஸித்திக்கிறதில்லை. தனஞ்சய! உலகத்தில் இந்தக் காரியம் பிதற்றுவதினுலே கைகூடுமானுல் எல்லாரும் விருப்பம் நிறைவேறுதலை அடைவார்கள். பிதற்றுவதில் ஒருவனும் தரித் திரனில்லை. உனக்கு வாஸுதேவன் ஸஹாயமென்பதை அறி வேன். உனது காண்டீவம் [1] பனையளவென்பதையும் அறிவேன். உன்னைப்போன்ற போர்வீரன் வேறில்லையென்பதையும் அறிவேன். அறிந்தே, உன்னுடைய இந்த ராஜ்யத்தைத் தரிக்கிறேன். மனிதன் மாயை முதலிய கபடத்தினுல் ராஜ்யத்தை அடைகிருனில்லை. விதி தான் மனத்தினுலேயே அனுகூலமானவைகளை வசத்தில் செய்கி றது. நீ புலம்பிக்கொண்டிருக்கையிலேயே பதின்மூன்று வருஷங் கள் ராஜ்யத்தை அனுபவித்தேன். உன்னையும் உன்சுற்றத்தாரை யும் கொன்றுவிட்டு மறுபடியுமே ஆளப்போகிறேன். பல்குன! தாஸனே! நீ பந்தயங்களால் வெல்லப்பட்டபொழுது உன்னு டைய காண்டீவம் எங்கே போயிற்று? பீமனுடைய பலமும் எங்கே போயிற்று? அப்பொழுது, குற்றமற்றவளான கிருஷ்ணையைத்தவிர, கதையுடன் கூடிய பீமனுலேயோ காண்டீவத்துடன்கூடிய தனஞ்சய னுலேயோ உங்களுக்கு விடுதல் ஏற்படவில்லை. துருபதன்புத்திரியான அவள் அடிமைகளான உங்களை விடுவித்தாள். அற்பமனிதத் தன் மையை அடைந்தவர்களும் அடிமையினுடைய வேலையிலிருப்பவர்களு மான உங்களை நான் அப்பொழுது 'எள்ளுப்பதர்கள்' என்று சொன்னது உண்மையே. ஏனென்றுல், அப்பொழுது, விராடநகரத் தில் தனஞ்சயன் பின்னலைத் தரித்தானல்லவா? குந்தியின் புத்திர! அப்பொழுது, பீமஸேனன் விராடனுடைய பாகசாலையில் சமையல் வேலை செய்து களைத்ததானது என்னுடைய ஆண்மையே. இவ்விதம், எப்பொழுதும் க்ஷத்திரியர்கள் க்ஷத்திரியர்கள்விஷயத்தில் இந்தத் தண்டத்தைச் செய்வார்கள். பேடிவேஷம்பூண்டு தலைமயிரைப் பின் னிக்கொண்டு கன்னிகைகளை ஆட்டிவைத்தாய். பால்குன! வாஸு தேவருக்கும் உனக்கும் பயந்து ராஜ்யத்தைக் கொடேன். கிருஷ்ண னுடன் சேர்ந்து யுத்தம் செய். மாயையோ, இந்திரஜாலமோ, ஏமாற்று

1 'தால' என்பது மூலம். 'ஆறுமுழநீளமுள்ளது' என்பது இங்கிலீஷ் மொழிபெயர்ப்பு.

தலோ, பயமுறுத்தலோ யுத்தத்தில் ஆயுதத்தை எடுத்தவனை எனக்கு எதிராகச் சிங்கநாதம் செய்யா அல்லவா? ஆயிரம் வாஸுதேவர்களாயினும் நூறு அர்ஜுனர்களாயினும் வீண்போகாதபாணங்களையுடைய என்னிடம்வந்தால் பத்துத்திக்குக்களிலும் வெருண்டு ஓடுவார்கள். பீஷ்மருடன் யுத்தத்தைச்செய். அல்லது, தலையால் மலையையாவது உடை. கிருபராகிற பெரிய மீனையுடையதும் விவிம்சதியாகிற பெரிய பாம்புள்ளதும் ப்ருஹத்பலனாகிற பெரிய பெருக்கையுடையதும் ஸோமதத்தன்மகனாகிற திமிங்கிலத்தையுடையதும் பீஷ்மராகிற வேகத்தையுடையதும் முடிவற்றதும் துரோணராகிற முதலையிருப்பதனால் நெருங்கமுடியாததும் கர்ணனாகிற வரால்மீனையுடையதும் சல்யனாகிற சுழலையுடையதும் காம்போஜனாகிற வடவைக்கனலையுடையதும் பெரிதான பள்ளத்தையுடையதுமான வீரர்களாகிற ஸமுத்திரத்தையாவது கைகளால் தாண்டு. நீ துச்சாஸனனாகிற பெருக்கையுடையதும் சலனும் சல்யனுமாகிற மத்ஸியத்தையுடையதும் ஸுஷேணனுடைய பலவித ஆயுதங்களாகிற நாகங்களையும் முதலைகளையுமுடையதும் ஜயத்ரதனாகிற மலையையுடையதும் புருமித்ரனாகிற மேட்டையுடையதும் துர்மர்ஷணனாகிற ஜலத்தையுடையதும் சகுனியாகிற பள்ளத்தையுடையதும் குறைவற்றதும் மிகவும் பெருகியிருப்பதுமான ஆயுதவெள்ளத்திலிறங்கி உறவினரனைவரும் மடிந்து இளைப்பால் மனம் அழிந்துபோம்பொழுது, உனது மனம் பரிதாபத்தை அடையப்போகிறது. பார்த்த! அப்பொழுது, உன்னுடைய மனமானது, அசுத்தனுடைய மனமானது ஸ்வர்க்கத்திலிருந்தும் திரும்புவதுபோலப் பூமியை அரசாளுவதிலிருந்தும் திரும்பப்போகிறது. ஸமாதானத்தை அடையக்கடவாய். தவமில்லாதவனால் அடையவிரும்பப்பட்ட ஸ்வர்க்கம் அடையப்படாதது போல் உன்னால் ராஜ்யமோ சிறிதும் அடையத்தக்கதில்லை' என்றான்.

---

நூற்றறுபத்திரண்டாவது அத்யாயம்.

## உலூகதூதாகமனபர்வம். (தொடர்ச்சி.)

(பீமஸேனன்முதலானவர்கள் உலூகன் மூலம் துரியோதனனுக்குத் மறுமொழி அனுப்பியது.)

உலூகனே,ஸர்ப்பம்போலச் சினங்கொண்டவனான அர்ஜுனனை மறுபடியும் வார்த்தையாகிற கோலால் குத்துகிறவனாகி, (துர்யோ

தனன்) சொல்லியபடி வார்த்தையைச் சொன்னான். அவனுடைய அந்த வார்த்தையைக் கேட்டு, பாண்டவர்கள் மிக்க சினங்கொண்டார்கள். முன்னமே மிக்க சினங்கொண்டவர்களும் உலூகனாலும் அவமதிக்கப்பட்டவர்களுமான அவர்கள் ஆஸனங்களிலிருந்தும் எழுந்திருந்தார்கள்; கைகளையும் உதறினார்கள். ஸர்ப்பங்கள்போலக் கோபமூண்டு ஒருவரையொருவர் பார்த்தார்கள். பீமஸேனன், தலையைக் கவிழ்ந்துகொண்டு ஸர்ப்பம்போல் மூச்சுவிட்டுக் கடை சிவந்த கண்களாலே உலூகனைப் பார்த்தான். பீடையடைந்தவனும் கோபத்தால் மிக அடிக்கப்பட்டவனுமான பீமனைப்பார்த்து வாஸுதேவர் சிரித்துக்கொண்டு அவனைக் கர்விக்கச்செய்கிறவர்போல உலூகனை நோக்கி, 'உலூக! சீக்கிரம் செல்லு. துர்யோதனனிடம், '(உன்) வார்த்தை கேட்கப்பட்டது. (அதன்) பொருளும் ஆராயப்பட்டது. உன்னிஷ்டம் எதுவோ அது அப்படியே ஆகட்டும்' என்றும் சொல்லு' என்று மறுமொழியுரைத்தார். ஓ! ராஜச்ரேஷ்டரே! நீண்ட கைகளையுடையவரான கேசவர் இவ்விதம்சொல்லிவிட்டு, மறுபடியுமே, பேரறிவாளரான யுதிஷ்டிரரை [1] ஏறப்பார்த்தார்.

உலூகனவன், ஸ்ருஞ்சயரனைவரும், புகழ்பெற்றவரான கோவிந்தரும், புத்திரர்களுடன் கூடின துருபதனும், விராடனுமாகிய இவர்களுக்கெதிரில் எல்லா அரசர்களுடைய நடுவிலும் வார்த்தையைச்சொன்னான். ஸர்ப்பம்போலச் சினங்கொண்டவனான அர்ஜுனனை மீண்டும் வார்த்தையாகிற கோலினால் குத்துகிறவனாகி (துர்யோதனன்) சொல்லியபடி வார்த்தையைச் சொன்னான்; கிருஷ்ணன் முதலான அவர்களெல்லாரையும் நோக்கிச் சொன்னபடி சொன்னான். தீமையாகவும் கடுமையாகவும் சொல்லப்பட்ட உலூகனுடைய அந்த வார்த்தையைக்கேட்டு அர்ஜுனன் கலங்கினான்; நெற்றியையும் துடைத்தான். அரசரே! அப்பொழுது அந்த நிலைமையிலுள்ள அர்ஜுனனைப்பார்த்து அந்தச் சபையானது பொறுக்கவில்லை. ஓ! மஹாராஜரே! பாண்டவர்களைச் சேர்ந்த மஹாரதர்களும் ஆண்பிள்ளைகளுட் சிறந்தவர்களும் திருஷ்டத்யும்னன், சிகண்டி, மஹாரதனான ஸாத்யகி, ஸஹோதரர்களான ஐந்து கேகயர்கள், ராக்ஷஸனான கடோத்கசன், உபபாண்டவர்கள், அபிமன்யு, திருஷ்டகேதுவென்கிற அரசன், பராக்கிரமசாலியான பீமஸேனன், மகாரதர்களான நகுலஸஹதேவர்கள் ஆகிய இவர்கள் கேட்டு, மகாத்மாவான கோவிந்தர் அர்ஜுனன் இவர்களின் நிந்தையினாலுண்டான கோபத்தால்

1 'ஸமுதைக்ஷத' என்பது மூலம்.

ஜ்வலித்தார்கள். அவர்களெல்லாரும் கோபத்தால் மிகச் சிவந்தகண்களையுடையவர்களாகி ஆஸனத்திலிருந்தும் கிளம்பினார்கள். சிவந்த சந்தனம் பூசப்பட்டவைகளும் தோள்வளைகளாலும் முத்துக்குஞ்சங்களாலும் கேயூரங்களாலும் அலங்கரிக்கப்பட்டவைகளும் அழகியவைகளுமான கைகளை நீட்டிக்கொண்டு பற்களைப் பற்களால் கடித்துக் கடைவாய்களை நக்கிக்கொண்டார்கள். குந்தியின்புத்திரனான விருகோதரன், அவர்களுடைய இங்கிதங்களால் அபிப்பிராயத்தையறிந்து கோபத்தால் நன்கு ஜ்வலிக்கிறவன்போல் வேகத்துடன் எழுந்திருந்தான்; உடனே, கண்களை உருட்டிவிழித்துப் பற்களைக்கடகடவென்றுகடித்துக் கையால் கையைப் பிசைந்து உலூகனை நோக்கிஇருவார்த்தை சொல்லலானான்.

'மூர்க்க! சக்தியற்றவர்களைப்போல எங்களை உத்ஸாகப்படுத்துவதினிமித்தம் துர்யோதனன் உன்னிடம் சொல்லியனுப்பிய வார்த்தையானது கேட்கப்பட்டது. மந்த! ஆகையால், கேட்கமுடியாததும், எல்லா க்ஷத்திரியர்களின் மத்தியிலும் ஸூதபுத்திரனும் துர்ப்புத்திக்காரனான உன்னுடைய பிதாவும் கேட்கும்படி நீ துர்யோதனனிடம் சொல்லவேண்டியதுமான வார்த்தையைக்கேள். 'துராசாரமுடையவனே! நாங்கள் மூத்ததமையனாருடைய பிரீதியை விரும்பி உன்விஷயத்தில் எப்பொழுதும் பொறுத்துக்கொண்டே வந்தோம். அதனை நீ பாராட்டவில்லை. புத்திமானும் குலத்திற்கு நலத்தை விரும்பினவருமான தர்மராஜர் பகைதணிதலை விரும்பிக் கௌரவர்களைக் குறித்து மாதவரை அனுப்பவும் செய்தார். நீ காலனால் ஏவப்பட்டு நிச்சயமாக யமன் வீட்டை அடைய விரும்பினவனாயிருக்கிறாய். எங்களுடன் போர்புரியக்கடவாய். அதுவும் நாளை ஏற்படப் போகிறது. அது நிச்சயம். நானும் பிராதாக்களுடன் கூடின உன்னைக் கொல்லுவதாகப் பிரதிஜ்ஞை செய்தேன். பாவி! அது அப்படியே ஆகும். அதில் ஆலோசனையில்லை. வருணனுக்கு இருப்பிடமான ஸமுத்திரம் உடனே கரையை மீறினாலும் பர்வதங்கள் சிதறினாலும் நான் சொன்னது பொய்யாகாது. துர்ப்புத்தியுடையவனே! உனக்கு யமனோ குபேரனோ அல்லது ருத்திரரேயோ ஸஹாயமாயிருந்தாலும் பாண்டவர்கள் பிரதிஜ்ஞை செய்தபடி நன்றாகச் செய்வார்கள். துச்சாஸனனுடைய உதிரத்தையும் இஷ்டப்படி அருந்தப்போகிறேன். அந்தக் காலத்தில் எந்த க்ஷத்திரியன் மிக்க சினத்துடன் என்னை எதிர்த்து யுத்தம் செய்வானோ அவனையும், பீஷ்மரை முன்னிட்டவனாயினும், யமன் வீட்டுக்கு அனுப்புவேன். க்ஷத்திரியர்களின் ஸபை

யில் என்றால் சொல்லப்பட்ட இந்த வார்த்தையையும் ஸத்தியமாகும் படி நான் [1] என்மேல் ஆணைவைக்கிறேன்' என்றுசொல்' என்றான்.

பீமஸேனனுடைய வார்த்தையைக்கேட்டுப் பொறுதவனான ஸஹதேவனும், கோபத்தால் மிகச்சிவந்தகண்களையுடையவனாகி, உலூகனை நோக்கி, 'பாவி! வீரர்களுடைய ஸபையில் கர்வத்துடன்கூடிய சூரனுக்கொத்ததும்(உன்) பிதாவினிடம் நீ சொல்லவேண்டியதுமான என் வார்த்தையைக்கேள். 'திருதராஷ்டிரருக்கு உன்னுடன் ஸம்பந்தம் ஏற்படாவிடில், எங்களுக்குக் கௌரவர்களுடன் ஒருபோதும் கலகம் ஏற்படாது. நீயோ உலகத்தையும் திருதராஷ்டிரருடைய குலத்தையும் நாசம்செய்யத் தன்குலத்தைஅழிப்பவனும் பாவங்களைச் செய்பவனுமாகப் பிறந்தாய்' என்று சொல்லு. பாவியான உன்னுடைய பிதாவும் (நாங்கள்) பிறந்ததுமுதல் எங்களுக்கு எந்நாளும் குரூரமானகேடுகளைச் செய்யவிரும்புகிறான். தொடர்ச்சியான அந்தப் பகைக்கு அடையமுடியாததானமுடிவை அடையப்போகிறேன். நான் முதலில் சகுனி பார்க்க உன்னைக்கொன்றபிறகு, எல்லாவில்லாளிகளும் பார்த்திருக்கச் சகுனியைக் கொல்லுவேன்' என்றான். பீமஸேனனும் ஸஹதேவனுமாகிற இருவருடைய வார்த்தையையும் கேட்டு, அர்ஜுனன், பீமஸேனனைக் கர்விக்கச்செய்கிறவன்போல், ஒருவார்த்தையைச் சிரித்துக்கொண்டு சொல்லலானான்.

'ஓ! பீமஸேன! உன்னிடம் பகைத்தவர்களான மந்தர்கள் யமபாசத்தின் வசத்தையடைந்தவர்களாகி வீடுகளில் ஸுகத்துடன் இரார். ஓ! மனிதர்களில் சிறந்தவனே! நீ உலூகனையும் கடுமையாகப் பேசக்கூடாது. சொன்னபடி திரும்பச்சொல்லுகிறவர்களான தூதர்கள் குற்றவாளிகளாவார்களா?' என்றான். நீண்ட கைகளையுடைய அர்ஜுனன், பயங்கரமான பராக்கிரமத்தையுடைய பீமனை நோக்கி இவ்விதம்சொல்லிவிட்டு, ஸுஹ்ருத்துக்களான திருஷ்டத்யும்னன் முதலிய வீரர்களைநோக்கிச் சொன்னதாவது:— 'பாவியான அந்தத் திருதராஷ்டிரபுத்திரனுடைய சொல்லைக் கேட்டீர்கள். விசேஷமாக வாஸுதேவரையும் என்னையும் நிந்தித்ததையும் கேட்டீர்கள். கேட்டு, நீங்கள் எங்களுடைய நலத்தை விரும்பிக் கோபத்தையும் அடைந்தீர்கள். வாஸுதேவருடைய பிரபாவத்தினாலும் உங்களுடைய முயற்சியினாலும், நான் உலகிலுள்ள முழுமையுமான எல்லா க்ஷத்திரியர்களையும் மதிக்கவில்லை. உங்களால் அனு

1 'அந்தராத்மாவான பகவான்மேல் ஆணையிடுகிறேன்' என்பது பழையவுரை.

மதி கொடுக்கப்பட்டவனாகி, உலூகனிடம், இவன் துரியோதனனி டம் சொல்லவேண்டியதும், இந்தச்செய்திக்கு மறுமொழியுமான செய்தியை அனுப்புகிறேன். 'அலிகளல்லவா (வார்த்தைக்கு) வார்த் தையைப் பதிலாகச் செய்வார்கள்? ஆகையால், நாளைவிடிந்ததும், சேனையின் முகப்பில் காண்டீவத்தால் இந்தப்பிதற்றலுக்கு மறுமொ ழிசொல்லுவேன்' என்று சொல்ல, அப்பொழுது, ராஜஶ்ரேஷ்டர் களான அந்த அரசர்களெல்லாரும் அந்தவார்த்தையின் உபசாரத் தால் ஆச்சரியமடைந்தவர்களாகித் தனஞ்சயனைக் கொண்டாடினார்கள்.

அப்பொழுது, அர்ஜுனன், அவர்களெல்லாருக்கும், கௌரவத் திற்கும் பிராயத்திற்கும் தக்கபடி, நன்மொழிகூறித் துர்யோதன னுக்குச் சொல்லியனுப்பவேண்டிய வார்த்தைக்காகத் தர்மராஜரை நோக்கி, 'ஓ! பரதஶ்ரேஷ்டரே! ராஜஶ்ரேஷ்டனானவன் தன்னை அவமதிக்கிறவனாயிருக்கக்கூடாது. ஆகையால், உமது பணிவிடை யில் பற்றுள்ளவனாக நான் உலூகனிடம் முதலில் நயமாகவும் பிறகு கடுமையாகவுமுள்ள மறுமொழியைச் சொல்லப் போகிறேன்' என்று சொன்னான். பரதஶ்ரேஷ்டனான அர்ஜுனன், துர்யோதனனுடைய அந்தவார்த்தையைக் கேட்டுக் கண்கள் மிகச்சிவந்து ஸர்ப்பம் போல மூச்சுவிட்டுக் கோபத்தால் சிரிப்பவன்போலக் கடைவாய் களை நக்கிக்கொண்டு ஜனார்த்தனரையும் ஸகோதரர்களையும் பார்த் துப் பெரியகைகளைச் சுழற்றிக்கொண்டு உலூகனைநோக்கி, 'அப்பா! உலூகா! சூதாடியின் மகனே! போ. நன்றிகெட்டவனும் பகைக் குணமுள்ளவனும் துர்ப்புத்தியுள்ளவனும் குலத்திற்குப் பாவியுமான துர்யோதனனிடம் சொல்லு. 'எப்போதும் பாவம் செய்பவனே! பாண்டவர்கள்விஷயத்தில் எந்நாளும் கோணலாகவே [1] நடக்கிறாய். பாவி! எந்த க்ஷத்திரியன் தன்பலத்தால் பிறர்களை ஆக்கிரமித்துப் பயமில்லாதவனாகி (தான்) சொன்னவார்த்தையைப் பூர்த்திசெய்து பகைவர்களை அழைக்கிறானோ அவனே ஆண்பிள்ளை. நல்ல குலத்தில் இழிவானவனே! அப்படிப்பட்ட பாவியான நீ க்ஷத்திரியனாயிருந்து எங்களைச் சண்டைக்கு அழைத்துப் பெரியோர் களையும் சிறியோர்களையும் முன்விட்டுக்கொண்டு யுத்தத்தைச் செய் யாதே. கௌரவ! உன்பலத்தையும் வேலைக்காரர்களின் பலத்தையும் அடுத்துப் பாண்டவர்களை யுத்தத்திற்கு அழை. எவ்விதத்தாலும், க்ஷத்திரியனாயிருக்கக் கடவாய். தான் பகைவரைத் தாங்கச்சக்தி யில்லாமல் எவன் பிறர்பலத்தை அடுத்துப் பகைவரை அழைக்கிறானோ

1 வேறுபாடம்.

அவனே அலியாவன். அப்படிப்பட்ட நீ பிறர்பலத்தைக்கொண்டு உன்னைப் பெரியவனாக நினைக்கிறாய். இவ்விதம் சக்தியற்றவனான நீ எப்படி எங்களைக்குறித்துக் கர்ஜிக்கிறாய்' என்றுசொல்' என்றான்.

அப்பொழுது, கேசவர், மறுபடியும், 'என் வார்த்தையையும் நீ அந்தத் துர்யோதனனிடம் சொல்லவேண்டும். 'துர்ப்புத்தியுடையவனே ! இதோ நாளை (யுத்தத்தை) அடையக்கடவாய். ஆண்மகனாயிருக்கக்கடவாய். மூடனே ! நீ, 'கிருஷ்ணன் யுத்தம்செய்யமாட்டான். பாண்டவர்கள் அவனைத் தேரோட்டுவதற்காக வரித்துவிட்டார்கள்' என்று எண்ணிப் பயப்படாமலிருக்கிறாய். இது ஒருபோதும் நேராது. நான் கோபத்தால் எல்லா அரசர்களையும் அக்னி திருணங்களை எரிப்பதுபோல எரிப்பேன். ஆனால், யுதிஷ்டிரருடைய கட்டளையினாலே யுத்தம் செய்கின்றவனும் இந்திரியங்களை ஜயித்தவனும் மகாத்மாவுமான அர்ஜுனனுக்கு ஸாரத்தியத்தைச் செய்யப்போகிறேன். இப்பொழுது, நீ மூன்று லோகங்களுக்கும் மேலே கிளம்பினாலும் பாதாளத்தில் புகுந்தாலும் நாளைக்காலையில் அங்கங்கே அர்ஜுனனுடைய தேரைப் பார்ப்பாய். பீமஸேனனுடைய சொல்லையும் நீ வீண்வார்த்தையாக நினைக்கிறாய். துச்சாஸனனுடைய உதிரத்தைப் பானம் செய்யப்பட்டதாக உறுதி செய்துகொள். விபரீதமாகப்பேசுகிறவனான உன்னை அர்ஜுனனும் யுதிஷ்டிரராஜரும் பீமஸேனனும் நகுலஸஹதேவர்களும் மதிக்கமாட்டார்கள்' என்றுசொல்' என்றார்.

---

## நூற்றறுபத்துமூன்றாவது அத்யாயம்.

## உலூகதூதாகமனபர்வம். (தொடர்ச்சி.)

**(உலூகன் பாண்டவர்கள் தனித்தனி சொன்னசெய்தியைத் துரியோதனனுக்குச் சொல்லியதும், துரியோதனனுடைய கட்டளைப்படி கர்ணன் யுத்தஆரவாரம் செய்ததும்.)**

ஓ ! பரதஸ்ரேஷ்டரே ! பெரும்புகழையுடைய குடாகேசனான அவன், கேசவரைப்பார்த்துத் துரியோதனனுடைய அந்த வார்த்தையைக்கேட்டு மிகச்சிவந்தகண்களாலே உலூகனை ஏறப்பார்த்தான். கையைவீசிக்கொண்டு உலூகனைநோக்கிச் சொன்னதாவது :—'எவன் தன்பலத்தை அடுத்துப் பகைவர்களை அழைக்கிறானோ, பயமில்லாமல் பகைவருடன் யுத்தமும்செய்கிறானோ அவன் ஆண்பிள்ளையாகச்சொல்

லப்படுகிறான். எவன் அசக்தியினால் பிறர்பலத்தையடுத்துப் பகை வர்களை (ப்போருக்கு) அழைக்கிறானோ அவன் உலகத்தில் மனிதருள் அதமன். அவன் க்ஷத்ரபந்து (=க்ஷத்ரியரில் இழிந்தவன்) ஆவான். அப்படிப்பட்ட நீ பிறர்களுடையபலத்தினால் உனக்குப் பலமிருப் பதாக நினைக்கிறாய். மூட! நீ கெட்டமனிதனாக இருந்துகொண்டு பிறர்களைத் தூஷிக்கவிரும்புகிறாய். துர்ப்புத்தியுடையவனே! குலத் தைக்கெடுப்பவனே! பிராயமுதிர்ந்தவரும் எல்லா அரசர்களுடைய நன்மையிலும் எண்ணமுடையவரும் இந்திரியங்களை ஜயித்தவரும் பேரறிவாளருமானவரை மரணத்திற்காகத் தீக்ஷை செய்வித்துப் பிதற்றுகிறவனான உன்னுடைய அபிப்பிராயத்தை நாங்கள் அறிந்து விட்டோம். திருதராஷ்டிரபுத்திரனே! பாண்டவர்கள் தயை யினாலே பீஷ்மரைக் கொல்லமாட்டார்களென்றன்றோ அவருடைய பலத்தையடுத்துப் பிதற்றுகிறாய்? அந்தப் பீஷ்மரை, எல்லா வில் லாளிகளும் பார்த்திருக்க, முதலில் கொல்லுவேன்' என்றுசொல். கைதவ்ய! நீ போய், பாரதர்களை ஒன்றாகச் சேர்த்துவைத்து, திருதராஷ்டிரரின் புத்திரனான துரியோதனனிடம் சொல்லு. 'இடக் கையாலும் பாணங்களைப் பிரயோகிக்கின்ற அர்ஜுனன், ' அப்படியே ஆகட்டும்' என்று சொன்னான். ராத்ரிவிடிந்து யுத்தம் ஏற்படப் போகிறது. கம்பீரமான ஸ்வபாவமுள்ளவரும் ஸத்யஸந்தருமான பீஷ்மர், (ஸபையின்) நடுவில், கௌரவர்களை மகிழச்செய்பவராய், 'கைதவ்ய! நீ திருதராஷ்டிரபுத்திரனான துரியோதனனிடம் சென்று, நான் ஸ்ருஞ்சயர்களுடைய படையையும் ஸால்வேயகர்களை யும் கொல்வேன். இது என்னுடைய பொறுப்பு. நான் துரோணர் இல்லாவிடினும் (எல்லா) உலகத்தையும் கொல்லுவேன். உனக் குப் பாண்டவரிடமிருந்து பயமில்லை' என்றும், 'பாண்டவர்களிட மும் சென்றுசொல்' என்றும் சொன்னமையால், உனக்கு ராஜ்யம் கிடைத்துவிட்டதாகவும் பாண்டவர் ஆபத்தை அடைந்து விட்டதாகவும் அபிப்பிராயம். ஸூரியோதயகாலத்தில் சேனையுடன் கூடினவரும் த்வஜமும் ரதமும் உள்ளவரும் ஸத்யஸந்தருமான பீஷ்மரை எதிர்பார்த்து ரக்ஷியுங்கள். நானோ, நீங்கள் பார்த்திருக்க, (உங்களுக்குத்) திட்டுப்போலிருக்கிற இந்தபீஷ்மரைப் பாணங் களால் தேரிலிருந்தும் விழும்படி தள்ளப்போகிறேன்' என்று சொல். நாளை விடிந்தவுடன், நான் அம்புக்கூட்டத்தால் பீஷ்மரை எங்கும் நிரப்பியதைப் பார்த்தபிறகு, துரியோதனன், பிதற்று வார்த் தையை அறிவான். 'துரியோதன! ஸபையின் மத்தியில் அற்ப அறி

வுடைய மனிதனும் தர்மங்களை அறியாதவனும் நித்ய வயிரத்துடன் கூடினவனும் கெட்டபுத்தியுடையவனும் கொடுஞ்செய்கையைச் செய்பவனுமான உன் தம்பியான துச்சாஸனனை நோக்கிக் கோபத்துடன் பீமஸேனன் சொன்ன பிரதிஜ்ஞையைச் சீக்கிரம் ஸத்யமாகப் பார்க்கப்போகிறாய். துரியோதன! அஹங்காரத்திற்கும் கொழுப்புக்கும் கோபத்திற்கும் கடுமைக்கும் நிஷ்டூரத்திற்கும் கர்வத்திற்கும் தற்புகழ்ச்சிக்கும் கொடுந்தன்மைக்கும் குரூரத்தன்மைக்கும் தர்மத்தைப் பகைப்பதற்கும் அதர்மத்திற்கும் அதிகப்பேச்சுக்கும் பெரியோர்களை மீறுவதற்கும் வெற்றியில் நிச்சயத்துக்கும் சேனையின் மிகுதிக்கும் எல்லா அநீதிக்கும் உள்ள தீவ்ரமான பயனை விரைவில் பார்ப்பாய். மனிதருள் இழிந்தவனே! மூட! வாஸுதேவனை ஸஹாயமாகவுடைய நான் கோபமுற்றிருக்க, உனக்கு என்ன காரணத்தினால் உயிரிலேயோ ராஜ்யத்திலேயோ ஆசை உண்டாயிருக்கிறது? பீஷ்மரும் துரோணரும் ஒழிவடைந்து ஸூதபுத்திரனும் வீழ்த்தப்பட்டபொழுது, உயிரிலும் ராஜ்யத்திலும் புத்திரர்களிடத்திலும் ஆசையற்றவனாவாய். துரியோதன! ஸகோதரர்களும் புத்திரர்களும் மடிந்ததைக் கேட்டுப் பீமஸேனனால் அடிக்கவும்பட்டு (எங்களுக்குச்செய்த) தீங்குகளை நினைப்பாய். வஞ்சகனே! நான் இரண்டாவது பிரதிஜ்ஞையைச் செய்யேன். ஸத்யமாகச் சொல்லுகிறேன். இவையெல்லாமோ மெய்யாகவே நேரப்போகின்றன' என்றும் சொல்' என்றான்.

யுதிஷ்டிரரும், சூதாடியின்மகனான உலூகனைநோக்கி, இந்த வார்த்தையைச் சொல்லலானார். 'அப்பா! உலூகா! நீ துரியோதனனை அடைந்து என்வார்த்தையைச் சொல்லு. 'நீ உன்னடையைக் கொண்டு என்னடையைஅறிவதற்குத் தக்கவனல்லை. பொய்யன் மெய்யன் இருவர்களுடையவித்தியாஸத்தையும் (உலகத்தோர்) அறிவார். நானோ புழுவுக்கும் எறும்புக்கும்கூடத் தீங்குசெய்யவிரும்பேன். அப்படியிருக்க, எவ்விதத்தாலும் ஞாதிகளின்வதத்தை விரும்புவேனா? அப்பா! இதற்காக, நான் முன் ஐந்துகிராமங்களை வேண்டினேன். மிக்கதுர்ப்புத்தியுடையவனே! நான் உன்னுடைய பெரியதுக்கத்தை எப்படி பாராமலிருப்பேன்? அப்படிப்பட்ட நீ ஆசையால்சூழப்பட்ட மனத்தையுடையவனாகி மூடத்தன்மையினால் பிதற்றுகிறாய். அப்படியே, வாஸுதேவர்சொன்ன நன்மொழியையும் ஏற்றுக்கொள்ளவில்லை. இப்பொழுது, பலபலவார்த்தையினால் என்ன பயன்? பந்துக்களுடன் யுத்தம்செய். கைதவ்ய! எனக்கு அனிஷ்டத்

தைச்செய்பவனுன கௌரவனிடம், 'உன் வார்த்தையைக் கேட்டேன்; விஷயத்தையும் தெரிந்துகொண்டேன். உன் இஷ்டப்படி நடக்கட்டும்' என்று சொல்' என்று உரைத்தார். பிறகு, பீமஸேனன், திரும்பவும், ராஜபுத்திரனுன உலூகனை நோக்கி, 'உலூக! மதிகேடனும் பாவியும் ரகஸ்யத்தில் தீங்கு செய்கிறவனும் வஞ்சகனும் பாவமே வடிவான வனும் தீயஒழுக்கமுடையவனுமான துரியோதனனிடம், 'இழிந்த வனே! கழுகின் வயிற்றிலாவது அஸ்தினபட்டணத்திலாவது நீ வஸிக்கவேண்டும். ஸபையின் மத்தியில் என்னால் உறுதிகூறப்பட்ட சொல்லை நான் ஸத்தியமாகச் செய்வேன். உனக்கு ஸத்தியத்தைக் கொண்டு ஆணை வைக்கிறேன். நான் யுத்தத்தில் உன் ஸஹோதரர்களை யும் கொன்று உன்தொடைகளையும் முறித்துத் துச்சாஸனனைக் கொன்று அவனுடைய இரத்தத்தையும் பானம்செய்வேன். துரி யோதன! திருதராஷ்டிரரின் புத்திரர்கள் எல்லாருக்கும் நான் மிருத்யு. எல்லா ராஜபுத்திரர்களுக்கும் அபிமன்யு மிருத்யுவாவான்; ஸந்தேகமில்லை. காரியத்தைச்செய்து ஸந்தோஷிக்கச் செய்வேன். துர்யோதன! மறுபடியும், என்சொல்லைக் கேள். தர்மராஜர் பார்க்க, உன்னை எல்லா ஸஹோதரர்களோடும் கொன்று காலால் தலையில் மிதிப்பேன்' என்று என்சொல்லைச்சொல்' என்று சொன்னான். ஓ! அரசரே! பிறகு, நகுலன், 'உலூக! குருவம்சத்திற் பிறந்தவனும் திருதராஷ்டிரருக்குப் புத்திரனுமான துரியோதனனிடம், 'கௌரவ! நீ சொன்ன எல்லா வார்த்தையையும் உள்ளபடி கேட்டேன். நீ எனக் குக் கட்டளையிட்டபடி செய்வேன்' என்று சொல்' என்றான். ஓ! அரசரே! ஸஹதேவனும், 'துரியோதன! உன்னுடைய இந்த எண்ண மானது வீணுகப்போகிறது. மஹாராஜனே! எங்களுடைய இந்தத் துக் கத்தை நீ ஸந்தோஷத்துடன் பிதற்றுவதால் புத்திரர்களுடனும் ஞாதி களுடனும் உறவினர்களுடனும் துக்கிக்கப்போகிறாய்' என்று சொல்' என்று அர்த்தத்துடன்கூடிய இந்த வார்த்தையைச் சொன்னான். முதியவர்களான விராடராஜனும் துருபதனும், உலூகனை நோக்கி, 'ஸாதுவாயிருப்பவனுக்குத் தாஸத்தன்மையை ப்ரார்த்திப்போமென் பது எப்பொழுதும் எங்களுடைய எண்ணம். அப்படிப்பட்ட நாங்கள் தாஸர்களோ, தாஸரல்லாதவர்களோ, எவனுக்கு எவ்விதமான பௌருஷமிருக்கிறதோ அவற்றை நாளைப்பார்ப்போம்' என்று சொன் னார்கள். பிறகு, சிகண்டியானவன், உலூகனை நோக்கி, 'நீ, எப்பொழு தும் பாவங்களில் பற்றினவனுன அரசனிடம், 'அரசனே! நான் யுத்தத்தில் குரூரமான செய்கையைச்செய்வதை நீ பார். எவருடைய

வீர்யத்தைபடுத்து யுத்தத்தில் ஜயத்தை நினைக்கிறாயோ அப்படிப் பட்ட உன்னுடைய பிதாமஹரை நான் தேரிலிருந்தும் விழச்செய் வேன். மஹாத்மாவான பிரம்மாவால் பீஷ்மரின் வதத்திற்காக நான் படைக்கப்பட்டேன். அப்படிப்பட்ட நான், எல்லா வில்லாளிகளும் விழித்திருக்கையில் பீஷ்மரைக் கொல்லுவேன்' என்று சொல்லவேண் டும்' என்று இந்த வார்த்தையைச் சொன்னான். திருஷ்டத்யும்னன், கைதவ்யனான உலூகனை நோக்கி, 'நீ ராஜபுத்திரனான துரியோதன னிடம், 'நான் துரோணரைக் கூட்டத்தோடும் பந்துக்களோடும் கொல்லுவேன். மேலும், முன்னோர்கள்செய்த பெரிதான அனுஷ் டானத்தை நான் அவஸ்யம் செய்யவேண்டும். நானும், மற்றவன் செய்யமுடியாத செயலைச் செய்வேன்' என்கிற என்னுடைய வார்த்தை யைச் சொல்லவேண்டும்' என்று இந்த வார்த்தையைச் சொன்னான். தர்மராஜர் உலூகனை நோக்கிக் கருணையினால், 'ஓ! அரசனே! நான் எவ்விதத்தாலும் ஞாதிகளின் வதத்தை விரும்பேன். கெடுமதியுள்ள வனே! உன்னுடைய குற்றத்தினாலேதான் இதெல்லாம் (நேர்கிறது) என்பது வெளிப்படை' என்று சொல்' என்று உரைத்துவிட்டு, 'அப் பனே! உலூக! ஆகையால், அபிப்பிராயமுண்டானால் போ; தாம தம் வேண்டாம். அல்லது, இங்கேயே இரு. உனக்கு மங்களமுண்டா குக. நாங்களோ உன்னுடைய உறவினர்' என்று பெரிய வார்த்தை யைச் சொன்னார்.

பிறகு, உலூகனோ, தர்மபுத்ரரான யுதிஷ்டிரரிடம் அனுமதி பெற் றுக்கொண்டு துரியோதனராஜன் இருக்குமிடம் சென்றான். ஓ! பாரதரே! உலூகன், பிறகு, பொறுதவனான துரியோதனனிடம் வந்து, அர்ஜுனன் சொன்ன எல்லா வார்த்தையையும் சொன்னபடி சொன்னான். வாஸுதேவர், பீமன், தர்மராஜர் ஆகிய இவர்களின் ஆண்மையையும், நகுலன், விராடன், துருபதன், ஸஹதேவன், திருஷ்டத்யும்னன், சிகண்டி ஆகிய இவர்களுடைய வார்த்தையையும், கிருஷ்ணார்ஜுனர்களுடைய சொல்லையும் முழுமையும் சொன்னபடி சொன்னான். ஓ! பாரதரே! பரதஸ்ரேஷ்டனான துரியோதனன் கைதவ்யனுடைய அந்த வார்த்தையைக்கேட்டு, ஸூரியோதயத்துக் குள் சேனைத்தலைவர்களெல்லாரும் சேர்ந்து நிற்கும்படி துச்சாஸனனை யும் கர்ணனையும் சகுனியையும் தங்கள் சைனியத்தையும் மித்ரசைனி யத்தையும் கட்டளையிட்டான். பிறகு, கர்ணனால் தூதர்கள் கட்டளை யிடப்பட்டு மிக்க விரைவுடன்கூடிச் சிலர் தேர்களாலும், சிலர் ஒட்டகங்களாலும், சிலர் பெண்குதிரைகளாலும், சிலர் பெரிய வேக

முடைய நல்ல குதிரைகளாலும், 'உதயத்திற்கு முந்திப் படை ஸித்தமாகவேண்டும்' என்று கர்ணனுடைய ஆஜ்ஞையால் அரசர்களைக் கட்டளையிட்டுக்கொண்டு சீக்கிரம் எல்லாச்சேனைகளையும் சூழ்ந்தார்கள்.

## நூற்றறுபத்து நான்காவது அத்யாயம்.

## உலூகதூதாகமனபர்வம். (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரர் சேனைகளை யுத்தத்திற்குப் புறப்படச்செய்ததும், திருஷ்டத்யும்னன் பீமஸேனன் முதலானவர்கள் துரியோதனன் முதலானவர்களோடு முறையே எதிர்க்க வேண்டுமென்று சொல்லியதும்.)

உலூகனுடைய வார்த்தையைக்கேட்டு, குந்தியின் புத்திரரான யுதிஷ்டிரர், திருஷ்டத்யும்னனைத் தலைவனாக உடையதும் திருஷ்டத்யும்னன்வசத்தை அடைந்ததும் பிரவேசிக்கமுடியாததும் அசைவற்ற கடலுக்கு நிகரானதும் பீமார்ஜுனர் முதலிய மஹாரதர்களால் காக்கப்பட்டதும் பூமிபோல அசைவற்றதும் ரதகஜதுரகபதாதிகளான நால்வகைப் படையையுமுடையதுமான சேனையைப் பிரயாணம் செய்வித்தார். அதனுடைய முகப்பில், பெரிய வில்லையுடையவனும் பாஞ்சாலபுத்திரனும் யுத்தத்தில் கெட்டமதத்தை உடையவனும் துரோணரை எதிர்க்க விருப்பமுள்ளவனுமான திருஷ்டத்யும்னன் சேனைகளை நடத்தினான். அவன், வலிமைக்கும் ஊக்கத்திற்கும் தக்கபடி, தேராளிகளைக் கட்டளையிட்டான்.

கர்ணனை எதிர்க்க அர்ஜுனனையும் துரியோதனனை எதிர்க்கப் பீமஸேனனையும் சல்யனை எதிர்க்கத் திருஷ்டகேதுவையும் கிருபரை எதிர்க்க உத்தமௌஜஸையும் அஸ்வத்தாமாவை எதிர்க்க நகுலனையும் கிருதவர்மாவை எதிர்க்கச் சைப்யனையும் ஜயத்ரதனை எதிர்க்க விருஷ்ணி வம்சத்தில் பிறந்த யுயுதானனையும் கட்டளையிட்டான்; முன்னணியில், பீஷ்மரை எதிர்க்கச் சிகண்டியையும் ஏற்படுத்தினான். சகுனியை எதிர்க்க ஸஹதேவனையும் சலனை எதிர்க்கச் சேகிதானனையும் த்ரிகர்த்தர்களை எதிர்க்கத் திரௌபதியின் புத்ரர்கள் ஐவரையும் கட்டளையிட்டான். அவன் கர்ணபுத்ரனான விருஷஸேனனையும் மற்ற அரசர்களையும் எதிர்க்க அபிமன்யுவை நியமித்தான். ஏனெனில், அவன், அவனை (த்திறமையுள்ளவனும்) போரில் அர்ஜுனனைவிட மேலானவனுமாக நினைத்தான். ஜ்வாலைபோன்ற நிறமுடையவனும் பெரிய

வில்லுடையவனுமான அவன், இவ்விதம், அந்தப் போர்வீரர்களைத் தனியாகவும் சேர்த்துமே பிரித்துவிட்டுத் துரோணபுத்ரர்(க்தன்) பாகமாகச் செய்துகொண்டான். பெரியவில்லுடையவனும் சேனு பதிகளுக்குத் தலைவனும் மேதாவியுமான திருஷ்டத்யும்னன், விதிப் படி அணிவகுத்தபின் யுத்தத்தில் மனம் ஊன்றியபிறகு, உத்தேசித்த படி, பாண்டவர்களின் படைகளைக் கூட்டிப் பாண்டவர்களுடைய வெற்றிக்காக யுத்தகளத்தில் ஸந்நத்தனாக இருந்தான்' என்றான்.

உலூகதூதாகமனபர்வம் முற்றிற்று.

நூற்றறுபத்தைந்தாவது அத்யாயம்.

## ரதாதிரதஸங்கியானபர்வம்.

(பீஷ்மர் தமது வல்லமையைத் துரியோதனனுக்குச்சொல்லி அவனுக்கு அபயப்ரதானம் செய்ததும், துரியோதனன் தன் சேனையிலுள்ள ரதாதிரதர்களுடைய கணக்கைச் சொல்லும்படி அவரைக் கேட்டதும், அவர் அதனைக் கூறியதும்.)

திருதராஷ்டிரன், ஸஞ்சயனை நோக்கி, 'அர்ஜுனன் யுத்தத்தில் பீஷ்மரை வதஞ்செய்வதாகப் பிரதிஜ்ஞைசெய்த பொழுது, துரியோதனன்முதலிய மந்தர்களான என்னுடைய புத்திரர்கள் என்னசெய்தார்கள்? வாஸுதேவரைச் சகாயமாகவுடையவனும் உறுதியான வில்லையுடையவனுமான தனஞ்சயன் யுத்தத்தில் (எனது) பிதாவான பீஷ்மரைக் கொன்றுவிட்டானென்றே ஆலோசிக்கிறேன். மிக்க அறிவுள்ளவரும் பெரிய வில்லையுடையவரும் யுத்தம் செய்கிறவர்களிற் சிறந்தவருமான அந்தப் பீஷ்மரும் அர்ஜுனனுடைய அந்தவார்த்தையைக் கேட்டு என்ன சொன்னார்? கௌரவர்களுடைய பாரத்தைப் பொறுப்பவரும் பெரிய புத்தியையும் பராக்கிரமத்தையுமுடையவருமான பீஷ்மர், சேனைக்குத் தலைவராயிருப்பதை அடைந்து என்னசெய்தார்?' என்று கேட்டான்.

பிறகு, ஸஞ்சயன், கௌரவர்களில் வயது முதிர்ந்தவரும் அளவற்ற திறமைவாய்ந்தவருமான பீஷ்மர் சொன்னபடி, எல்லாவற்றையுமே அவனிடம் தெரிவிக்கலானான். 'ஓ! அரசரே! சந்தனுவின் புத்திரரான பீஷ்மர் சேனைகளுக்குத் தலைவராகஇருப்பதை அடைந்து, துரியோதனனைச் சந்தோஷிக்கச் செய்கிறவர்போல, 'நான், சக்தியாயுதத்தைக் கையிலுடையவரும் ஸேனாதிபதியுமான குமாரருக்கு நமஸ்

காரம்செய்து, இப்பொழுது உனக்குச் சேனாபதியாகப்போகிறேன்; சந்தேகமில்லை; சேனையின் காரியத்திலும், பலவிதமான அணிவகுப்புக்களிலும், கூலிக்காரர்களையும் ஸ்நேகத்தால் ஸஹாயமாகவந்தவர்களையும் வேலையைச் செய்யும்படி செய்வதிலும் அறிவுடையவனாக இருக்கிறேன்; மஹாராஜனே! படைகளை வரிசைப்படுத்தி நடத்துவதிலும், யுத்தத்திலும், அப்படியே யுத்தத்தில் பகைவர்களுடைய கணைகளைத் தடுக்கும் செய்கைகளிலும், பிருகஸ்பதி அறிவதுபோல நன்கு அறிவேன்; தேவர்கள் கந்தர்வர்கள் மனிதர்கள் இவர்களுடைய அணிவகுப்புக்களின் தொடக்கங்களையும் நன்கு அறிவேன். நான் அவைகளாலே பாண்டவர்களை மயங்கச்செய்வேன். உன் மனத்திலுண்டான தாபமானது போகட்டும் அரசனே! அப்படிப்பட்ட நான், உண்மையாக உன்படையைக் காக்கிறவனாகிச் சாஸ்திரப்படி யுத்தம் செய்வேன். உன் மனத்திலுண்டான தாபமானது நீங்கட்டும்' என்னும் இந்த வார்த்தையைச் சொன்னார்.

துரியோதனன், 'ஓ! புஜபலமமைந்தவரே! காங்கேயரே! எனக்கு ஸமஸ்தமானதேவாஸுரர்களிடத்திலும் அச்சமில்லை. இதனை உமக்கு உண்மையாகச் சொல்லுகிறேன். அப்படியிருக்க, எவராலும் வெல்ல முடியாதவரான நீர் சேனைத்தலைவராக நிலைத்து நிற்கையிலும், வீரர்களில் சிறந்தவரும் யுத்தத்தைக் கொண்டாடுகிறவருமான துரோணரும் இருக்கையிலும், கேட்கவும் வேண்டுமோ? வீரர்களிற் சிறந்தவர்களான நீங்கள் உறுதியாயிருக்கும்பொழுது எனக்கு வெற்றியே. ஓ! குருச்ரேஷ்டரே! தேவராஜ்யமும் அடைதற்கரிதன்று; இது நிச்சயம். ஓ! கௌரவரே! பகைவருடையதும் என்னுடையதுமான ரதிகர்களுடைய கணக்கையும் அப்படியே அதிரதர்களுடைய கணக்கையும் முழுமையும் அறியவிரும்புகிறேன். பகைவர்களுக்கும் அப்படியே எனக்கும் பிதாமஹரான நீர் ஸமர்த்தராக இருக்கிறீர். நான் இந்த எல்லா அரசர்களோடும் சேர்ந்து அதனைக் கேட்க விரும்புகிறேன்' என்றான்.

பீஷ்மர், 'காந்தாரியின் புத்திர! அரசர்களிற் சிறந்தவனே! பூமியைப் பரிபாலனம் செய்கின்றவனே! உனது சேனையிலுள்ள [1]ரதிகர்

[1] அர்த்த ரதன்—ஒரு தேராளியின்சக்தியில் பாதிகொண்டவன்: அதாவது, ஒரு தேராளியோடு எதிர்த்துத் தோல்வியடைபவனென்பது. ஸமரதன்—ஒரு தேராளியோடு எதிர்த்து நின்று தோல்வியடையாமல் போர்செய்ய வல்லவன். ஏகரதன், ரதிகன், ஸமரதன் என்பன ஒரு

களும் அதிரதர்களுமான தேராளிகளுடைய கணக்கைக் கேள். உன்னுடைய இந்தச் சேனையில் அனேகபாயிரங்களும் பதினாயிரங்களும் கோடிகளுமான ரதங்களிருக்கின்றன. முக்கியர்களின் வரிசையாக என்னிடம் கேள். முதலிலே, துச்சாஸனன் முதலிய நூறு ஸஹோதரர்களோடு நீ சிறந்த ரதிகன். எல்லாரும் ஆயுதங்களில் பழகினவர்களும் வெட்டுவதிலும் பிளப்பதிலும் வல்லவர்களும் தேர்த்தட்டிலும் யானைக்கழுத்திலும் கதையிலும் பட்டாக்கத்தியிலும் கத்தியிலும் கேடகத்திலும் தேர்ந்தவர்களும் தேரோட்டுபவர்களும் அடிப்பவர்களும் அஸ்திரங்களை அப்பியஸித்தவர்களும் வேலையின் பொறுப்பை நிறைவேற்றுகிறவர்களுமானவர்கள். பாணத்திலும் அஸ்திரத்திலும் துரோணருக்கும் சாத்வானுன கிருபருக்கும் சிஷ்யர்களானவர்கள். [1] பாண்டவர்களாலே தீங்குசெய்யப்பட்டவர்களும் மானமுடையவர்களுமான இந்தத்தார்த்தராஷ்டிரர்கள் யுத்தத்தில் கெட்டமதமுள்ளவர்களான பாஞ்சாலர்களை யுத்தத்தில் கொல்லுவார்கள். பரதஸ்ரேஷ்டனே! அப்படியே, உன்னுடைய எல்லாச்சேனைக்கும் பதியான நான் பாண்டவர்களைவென்று பகைவர்களை நாசஞ்செய்வேன். என்னுடைய சொந்தக் குணங்களைச் சொல்லக் கூடியவனாகவில்லை; உன்னால் அறியப்பட்டவனாகவே இருக்கிறேன். ஆயுதத்தைத் தாங்குபவர்களிற் சிறந்தவனும் போஜ (வம்சத்திற்பிறந்தவ) னுமான கிருதவர்மாவோ [2] அதிரதன். அவன் யுத்தத்தில் உன்னுடைய விருப்பத்தை நிறைவேற்றுவான். சந்தேகமில்லை. ஆயுதங்களை அறிந்தவர்களால் வெல்லமுடியாதவனும் (பாணங்களைத்) தூரத்தில் போகும்படி விடுபவனும் பலமான ஆயுதங்களுள்ளவனுமான அவன் இந்திரன் அஸுரர்களைக் கொல்லுவதுபோலப் பகைவர்களுடைய சேனையைக் கொல்லுவான். பெரியவில்லையுடையவனும் மத்ரராஜனுமான சல்யன் என்னால் அதிரதனாகக் கருதப்பட்டான். அவன் தனது மருமகனை விட்டு எந்நாளும் ஒவ்வொரு யுத்தத்திலும் வாஸுதேவருடன் போட்டி போடுகிறவனாயிருப்பதால், உனக்கு அதிரதனாகக் கருதப்பட்டான். அவன் யுத்தத்தில் கடல் அலைகள் போன்ற

---

பொருட் சொற்கள். இவர்களில் சிறந்தவனை 'ரதோதாரன்' என்றும் 'ரதஸத்தமன்' என்றும் இங்கே வழங்குகிறார்.

1 'பாண்டவேயை:' என்பது மூலம்; 'பாண்டவர்களைச் சேர்ந்தவர்களால்' என்றும் கொள்ளலாம்.

2 அதிரதன் = எண்ணில்லாத போர்வீரர்களை எதிர்த்துப் போர் செய்யவல்லவன். இவனை, 'ரதயூதபயூதபன்' என்று இங்கே வழங்குகிறார்.

பாணங்களாலே பகைவர்கூட்டங்களை நனையச் செய்கிறவனாகி [1] மஹாரதர்களான பாண்டவர்களுடன் போர்செய்வான். ஆயுதங்களைப் பயின்றவனும் உனக்கு அனுகூலனான நண்பனும் ஸோமதத்தன் புத்திரனும் பெரிய வில்லையுடையவனுமான பூரிச்ரவஸானவன் அதிரதன். அவன், பகைவர்களுடைய சேனைக்குப் பெரிய நாசத்தைச் செய்வான். மஹாராஜனே! ஸிந்துதேசத்தரசனான ஜயத்ரதனானவன் த்விரதன் (=இரண்டு தேராளிகளுக்குச்சமானன்) என்று என்னால் கருதப்பட்டான். அரசனே! தேராளிகளிற்சிறந்தவனான அவன் யுத்தத்தில் பராக்ரமத்தைச்செலுத்தி யுத்தம் செய்வான்; திரௌபதியைக்கவர்ந்தபொழுது பாண்டவர்களாலே துன்பத்தையடைந்தவனுமிருக்கிறான். பகைவீரர்களைக் கொல்லுகிறவனான அவன் அந்தத் துன்பத்தை நினைக்கிறவனாகி யுத்தம் செய்வான். அரசனே! அவன், அப்பொழுது, உக்கிரமான தவத்தைச் செய்து யுத்தத்தில் பாண்டவர்களோடு போர்செய்வதற்காக அரிதான வரத்தை அடைந்திருக்கிறான். குழந்தாய்! தேராளிகளிற் சிறந்தவனான அப்படிப்பட்ட இவன் யுத்தத்தில் அந்தப்பகையை நினைந்து விடக்கூடாததான பிராணனையும் விட்டுப் பாண்டவர்களுடன் யுத்தஞ்செய்வான்.

## நூற்றறுபத்தாறுவது அத்யாயம்.

## ரதாதிரதஸங்கியானபர்வம். (தொடர்ச்சி.)

### (பீஷ்மர் துர்யோதனன் சேனையிலுள்ள ரதாதிரதர்களை அவனுக்குச் சொல்லியது.)

காம்போஜதேசத்தரசனான ஸுதக்ஷிணனே, ஸமரதனாகக் கருதப்பட்டான். அவன் யுத்தத்தில் உன்னுடைய விருப்பத்தை நிறைவேற்ற விரும்புகிறவனாகிப் பகைவருடன் போர்செய்வான். ராஜச்ரேஷ்டனே! கௌரவர்கள், ரதிகச்ரேஷ்டனான இவன் உன்னிமித்தமாக யுத்தத்தில் செலுத்துகிற பராக்ரமத்தை, இந்திரனுடைய பராக்ரமத்தைப் பார்ப்பதுபோலப் பார்ப்பார்கள். மஹாராஜனே! கடுமையாகவும் வேகமாகவும் அடிக்கிறவனான இவனுடைய தேர்களின் கூட்டத்தில் விட்டிற்பூச்சிகளுடைய வரவுபோலக் காம்போஜர்களு

1 மஹாரதன் = பதினோராயிரம் தேர் வீரர்களை எதிர்ப்பவன்; அல்லது, பதினோராயிரம் தேர்வீரர்களுக்குத் தலைவன். இவனை, 'ரதயூதபன்' என்று இங்கே வழங்குகிறார்.

டைய வரவானது ஏற்படும். மாஹிஷ்மதிநகரத்தில் வஸிப்பவனும் நீலமான கவசமுடையவனுமான நீலனென்கிற உன்னுடைய ரதிகனவன் தேர்க்கூட்டத்தோடு பகைவர்களை நாசஞ்செய்வான். கௌரவமுள்ளவனே! குருநந்தன! முன்னமே ஸஹதேவனுடன் பகைகொண்டவனான இவன் எப்பொழுதும் உன்னிமித்தமாக யுத்தம் செய்வான். அப்பா! அவந்தி தேசத்தரசர்களும் திறமைவாய்ந்தவர்களும் யுத்தத்தில் உறுதியான வீர்யத்தையும் பராக்ரமத்தையும் உடையவர்களுமான விந்தன் அநுவிந்தன் இருவரும் ரதிகர்களிற் சிறந்தவர்களாக ஒப்புக்கொள்ளப்பட்டவர்கள். மஹாராஜனே! புருஷஸ்ரேஷ்டர்களும் யுத்தத்தில் விருப்பமுள்ளவர்களுமான அப்படிப்பட்ட இவர்கள், யுத்தத்தில் யூதபதிகளான இரண்டு யானைகள் யானைக்கூட்டத்தின் மத்தியில் விளையாடுவதுபோலக் கூட்டத்தின் மத்தியில் ஸஞ்சரிக்கிறவர்களாகி யமன்போலக் கைபிலிருந்தும் விடப்பட்ட கதை, பட்டாக்கத்தி, கத்தி, நாராசம், தோமரம் ஆகிய இவைகளாலே பகைவரது படையை எரிக்கப்போகின்றார்கள். த்ரிகர்த்த தேசாதிபதிகளான பிராதாக்கள் ஐவரும் சிறந்த ரதிகர்களாக என்னால் கருதப்பட்டார்கள். அவர்கள் விராடநகரத்தில் அப்பொழுது பாண்டவர்களுடன் விரோதத்தைச் செய்தவர்களாயுமிருக்கிறார்கள். ராஜஸ்ரேஷ்டனே! அவர்கள் யுத்தத்தில் உயரக்கிளம்புகின்ற அலைகளையுடைய கங்கையை மகரங்கள் கலக்குவதுபோல உயரக்கட்டப்பட்ட கொடிச்சீலைகளையுடைய பாண்டவர்களுடைய சேனையைக் கலக்குவார்கள். ராஜஸ்ரேஷ்டனே! ஸத்தியரதனை முதன்மையாகவுடைய அந்த ஐவரும் (ஐந்து) ரதிகர்கள். பாரத! இவர்கள், பாண்டு புத்திரனும் பீமஸேனனுக்குத் தம்பியும் திக்குக்களை வெல்லுபவனுமான அர்ஜுனனால் யுத்தத்தில் முன்செய்யப்பட்ட தீங்கினை நினைக்கிறவர்களாகிப் போர்புரிவார்கள். அவர்கள், பாண்டவர்களுடைய அந்த மகாரதிகர்களை எதிர்த்துப் பெரிய விற்களையுடையவர்களும் க்ஷத்திரியர்களுடைய பொறுப்பைத் தாங்குபவர்களுமான சிறந்தவர்களைச் சிறந்தவர்களைப் பார்த்துக் கொல்லுவார்கள். லக்ஷ்மணனென்கிற உன்னுடைய புத்திரனும், அப்படியே, துச்சாஸனனுடைய புத்திரனுமாகிய அவ்விருவர்களும், புருஷஸ்ரேஷ்டர்களும் யுத்தத்தில் ஓடாதவர்களுமாயிருப்பவர்கள். குருஸ்ரேஷ்டனே! யௌவனமுடையவர்களும் மென்மையான சரீரமுடையவர்களும் ராஜபுத்திரர்களும் வேகமுடையவர்களும் யுத்தங்களுடைய விசேஷங்களை அறிந்தவர்களும் எங்கும் சேனையைச் செலுத்துகிறவர்களும் தேராளிகளில்

சிறந்தவர்களுமான அவ்விருவரும், ரதிகர்களாக என்னால் கருதப்பட்டார்கள். க்ஷத்திரிய தர்மத்தில் பற்றுள்ளவர்களான அந்த வீரர்கள் பெரிதான காரியத்தைச் செய்வார்கள். மஹாராஜனே! நரஸ்ரேஷ்ட! தண்டதாரனென்பவன் ஒரு ரதிகன். அவன், உன்னுடைய யுத்தத்தில், தன் சேனையினால் காக்கப்பட்டவனாகிச் சண்டை செய்வான். ஐயா! அப்படியே, கோஸலதேசத்தரசனும் தேராளிகளில் சிறந்தவனும் பெரியவேகத்தையும் பராக்கிரமத்தையுமுடையவனுமான பிருஹத்பலனென்பவன் ரதிகனாக என்னால் கருதப்பட்டான். உக்கிரமான ஆயுதத்தையுடையவனும் பெரிய வில்லையுடையவனும் திருதராஷ்டிரரின் புத்திரர்களுடைய ஹிதத்தில் பற்றுள்ளவனுமான இவன் யுத்தத்தில் தன் உறவினர்களை மகிழ்விப்பவனாகிப் போர் செய்வான். அரசனே! சரத்வானுடைய புத்திரரும் அதிரதருமான கிருபரானவர் பிரியமான பிராணன்களில் ஆசையைவிட்டு உன்னுடைய பகைவர்களை எரிப்பார். ஐயா! எவராலும் வெல்லமுடியாதவரும் கார்த்திகேயர்போல நாணற்கொத்திலிருந்தும் கௌதம மஹரிஷிக்குப் புத்திரராக உண்டானவரும் ஆசார்யருமான அவர், யுத்தத்தில் பலவிதமான ஆயுதங்களையும் விற்களையுமுடைய மிகப் பலவான சேனைகளை அக்னிபோல் எரிக்கிறவராகச் சஞ்சரிப்பார்.

## நூற்றறுபத்தேழாவது அத்யாயம்.

## ரதாதிரதஸங்கியானபர்வம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர் துரியோதனன் சேனையிலுள்ள ரதாதிரதர்களை அவனுக்குச் சொல்லியது; தொடர்ச்சி.)

அரசனே! உனக்கு அம்மானான இந்தச்சகுனி ஒருதேராளி. இவன் பாண்டவர்களுடன் வைரத்தைச் செலுத்தி யுத்தம் செய்வான். இதில் சந்தேகமில்லை. யுத்தத்தில் எதிர்த்துச் செல்லுகிறவனான இவனுடைய சேனையானது, பலவிதமாகச் செய்யப்பட்ட ஆயுதங்களாலே நிறைந்ததும், வேகத்தில் வாயுவின் வேகத்திற்கு ஸமமானதும் வெல்லமுடியாததுமானது. பெரியவில்லையுடையவரும் எல்லா வில்லாளிகளுக்கும் மேற்பட்டவரும் யுத்தத்தில் பலவிதமாகப்போர் செய்பவரும் உறுதியான அஸ்திரங்களை யுடையவருமான துரோண புத்திரர் மகாரதர். மஹாராஜனே! இவருடைய பாணங்களோ அர்

ஜுனனுடைய பாணங்கள்போல வில்லிலிருந்தும் விடுபட்டுச் சேர்ந்தவைகளாகச் செல்லுகின்றன. தேராளிகளில் சிறந்தவரும் வீரருமான இவர் என்னுல் இவ்விதமானவரென்று கணக்கிடமுடியாதவர். இந்த மஹாரதர், விரும்பினுல், உலகங்கள் மூன்றையும் எரித்தாலும் எரிப்பார். ஆஸ்ரமவாஸிகளான ரிஷிகளுடைய தவத்தால்நிறைந்த கோபமும் பலமுமாகிய இவைகளுடைய வடிவமானவர். சிறந்த புத்தியையுடையஇவர், துரோணரால் தேவஸம்பந்தமான அஸ்திரங்களால் அனுக்கிரகிக்கவும் பெற்றிருக்கிறூர். அரசர்களில் சிறந்தவனே! பரதஸ்ரேஷ்ட! இந்த வேதியர் எப்பொழுதும் ஆயுளை விரும்புகிறவர். இரண்டு சேனைகளிலும் இவருக்குச் சரியானவன் ஒருவனுமில்லை. சிறந்த சரீரத்தையுடைய இவர், ஒரேதேருடன் தேவர்களுடைய ஸைன்யத்தையும் கொல்லுவார்; கையுறையின் சப்தத்தால் மலைகளையும் பிளக்கச் செய்வார். கணக்கிடமுடியாத குணங்களையுடையவரும், வீரரும், நன்கு அடிக்கிறவரும், பயங்கரமான ஒளியையுடையவரும், தண்டபாணியான யமன்போலத் தாங்கமுடியாதவருமான இவர் அந்தகன் போல ஸஞ்சரிப்பார். பாரத! கோபத்தில் யுகமுடிவிலுண்டான அக்னிக்கு நிகரானவரும் சிங்கத்தின் கழுத்துப்போன்ற கழுத்தையுடையவரும் மிக்க பலத்தையுடையவருமான இவர் யுத்தத்தில் மிச்சமுள்ளதை முடிவுசெய்வார். பெரிய தேஜஸையுடையவரும், பிராயமுதிர்ந்தவராயிருந்தாலும் யுவாக்களைக்காட்டிலும் சிறந்தவரும் இவருடைய பிதாவுமான துரோணரோ யுத்தத்தில் பெரியகார்யத்தைச் செய்வார். இதில் எனக்குச் சந்தேகமில்லை. யுத்தத்தில் பொறுப்பையுடையவரான இவர், அஸ்திரமாகிற காற்றினுல் உண்டானதும் சேனையாகிற காய்ந்தபுல்லுகளாலும் விறகுகளாலும் கிளம்பினதுமான (அக்னிபோலப்) பாண்டுபுத்திரனுடைய படைகளை எரிப்பர். அதிரதரும் மனிதருட் சிறந்தவரும் பரத்வாஜருடைய புத்திரருமான இவர் தீவ்ரமும் உனக்கு நன்மையுமான செயலைச் செய்வார். எல்லா அரசர்களுக்கும் ஆசார்யரும் பிராயமுதிர்ந்தவருமான குருவானவர் ஸ்ருஞ்சயர்களை நாசம் செய்வார். அர்ஜுனனே இவருக்குப் பிரியனுனவன். பெரியவில்லையுடையவரான இவர், குணங்களால் ஜயிக்கப்பட்டதும் ஜ்வலிக்கிறதுமான ஆசார்யத்தன்மையை நினைத்து, காரியங்களை ஸ்ரமமில்லாமற் செய்கிறவனுன தனஞ்சயனை ஒருபொழுதும் கொல்லமாட்டார். வீர! அர்ஜுனனுடைய விஸ்தாரமானகுணங்களாலே எப்பொழுதும் அவனைக் கொண்டாடுகின்ற பாரத்வாஜர் அவனைப் புத்திரனைக்காட்டிலும்

அதிகமாகப் பார்க்கிறார். பிரதாபசாலியான இவர் யுத்தத்தில் ஒரே தேரோடு திவ்யாஸ்திரங்களாலே தேவர்களும் கந்தர்வர்களும் மனிதர்களும் ஒன்றுசேர்ந்தாலும் கொன்று விடுவார். அரசனே! ராஜச்ரேஷ்டனும், தேராளிகளில் சிறந்தவனும், பகைவரும் வீரருமான ரதிகர்களை வருத்துகின்றவனுமான பௌரவன், உன்னுடைய மகாரதனாக என்னால் கருதப்பட்டான். அவன் தன்னுடைய பெரியசேனையினால் பகைவர்களுடையசேனையை வாட்டுகிறவனாகிக் கூளத்தின் குவியலை அக்னியின் வேகம் எரிப்பதுபோலப் பாஞ்சாலர்களை எரிப்பான். அரசனே! ராஜபுத்திரனும், உண்மையானகீர்த்தியையுடையவனுமான ப்ருஹத்பலனென்பவன் ஒரு ரதிகன். அவன் உன்னுடைய பகைவர்படையில் காலன்போல ஸஞ்சரிப்பான். ராஜச்ரேஷ்டனே! விசித்திரமான கவசங்களையும் ஆயுதங்களையுமுடையவர்களான இவனுடைய போர்வீரர்கள் யுத்தத்தில் உன்னுடைய பகைவர்களின் கூட்டங்களை அடிக்கிறவர்களாகச் சஞ்சரிப்பார்கள். சிறந்த தேராளியும் கர்ணனுடைய புத்திரனுமான விருஷஸேனன், உன்னைச் சேர்ந்த மஹாரதன். பலசாலிகளில்சிறந்தவனான அவன் உனது பகைவர்சேனையை எரிப்பான். அரசனே! பகைவீரர்களைக் கொல்லுகிறவனும் மதுவம்சத்தில் பிறந்தவனும் மிக்க தேஜஸ்ஸையுடையவனுமான ஜலஸந்தனென்பவன் உன்னைச்சேர்ந்த சிறந்த ரதிகன். இவன் யுத்தத்தில் பிராணனையும் விடுவான். நீண்ட கைகளையுடைய இவன் யுத்தத்தில் யானையின்பிடரில் சமர்த்தனாயிருந்துகொண்டோ, அல்லது, தேரோடேயோ, பகைவர்சேனையை அழிப்பவனாகி யுத்தம்செய்வான். மஹாராஜனே! ராஜச்ரேஷ்ட! என்னால் ரதிகனாகக் கருதப்பட்ட இவன் உன்னிமித்தத்தில் பெரிய யுத்தத்தில் சேனையுடன் பிராணனைத் தியாகம்செய்வான். அரசனே! பராக்கிரமத்துடன் யுத்தம் செய்பவனும் விசித்திரமாக யுத்தம்செய்பவனும் யுத்தத்தில் பயம் நீங்கினவனுமான இவன் உன்னுடைய பகைவருடன் சண்டைசெய்வான். அரசனே! யுத்தத்தில் திரும்பாதவரும் சூரரும் யுத்தத்தில் யமனுக்கு ஸமமானவருமான பாஹ்லிகர் என்னாலே அதிரதராகவே கருதப்பட்டார். அரசனே! இவர் யுத்தத்தையடைந்து வாயுவைப் போல் எவ்விதத்தாலும் திரும்பமாட்டார். இவர் யுத்தத்தில் பகைவரைக் கொல்லுவார். மஹாராஜனே! சேனைக்குப் பதியும் யுத்தங்களில் அற்புதமான செய்கையையுடையவனும் சிறந்த தேரையுடையவனும் எதிரிகளுடைய தேர்களை முறிக்கிறவனுமான ஸத்தியவானென்பவன் உன்னைச் சேர்ந்த மகாரதன். யுத்தத்தைப்பார்த்தால்

இவன ஒருவித்தத்தாலும் வருத்தமடைவதில்லை. இவன் மைதானமாக கத்தில் இருப்பவர்களான பகைவரின்மேல் மகிழ்ச்சியுடன் துள்ளி விழுவான். பகைவர்களிடத்தில் பராக்கிரமத்தைக் காட்டுகிறவனும் வீரர்களில் சிறந்தவனுமான இவன் யுத்தத்தில் உன்னிமித்தம் நல்ல மனிதர்களுக்குத் தக்கதும் பெரிதுமான செய்கையைச் செய்வான். அரசனே! ராக்ஷஸஸ்ரேஷ்டனும் குரூரமான செய்கையையுடையவனும் மஹாரதனுமான அலம்புஸனுனவன் முன் வைரத்தை நினைக்கிறவனுகி எதிரிகளைக் கொல்லுவான். எல்லா ராக்ஷஸசேனைகளுக்கும் சிறந்த தேராளியும் மாயாவியுமான இவன் உறுதியான பகையையுடையவனுகி யுத்தத்தில் ஸஞ்சரிப்பான். பிராக்ஜோதிஷபுரத்திற்கு அதிபதியும் வீரனும் பிரதாபசாலியுமான பகதத்தன் யானைப்போர் செய்பவர்களில் சிறந்தவனும் ரதத்திலேயும் ஸமர்த்தனுமானவன். அரசனே! முன்காலத்தில் இவனுடன் அர்ஜுனனுக்குப் பலநாள் யுத்தம் நடந்தது. காந்தாரியின் புத்திர! இருவரும் ஜயத்தை விரும்ப, பிறகு, இவன் நண்பனுன இந்திரனைக் கௌரவப்படுத்துதற்காக, மஹாத்மாவான அந்தப் பாண்டவனேடு நட்பைச் செய்தான். யுத்தத்தில் யானையின்பிடரிலிருப்பதில் வல்லவனுன இவன், ஐராவதத்திலிருப்பவனும் தேவர்களுக்கு அரசனுமான இந்திரன்போல யுத்தம் செய்வான்.

---

நூற்றறுபத்தெட்டாவது அத்யாயம்.

## ரதாதிரதஸங்கியானபர்வம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர் கர்ணனை அர்த்தரதனுகச் சொல்லியதும், கர்ணன் பீஷ்மருள்ளவரை தான் போர் செய்வதில்லை யென்று பிரதிஜ்ஞை செய்ததும், பீஷ்மர் அவனை நிந்தித்ததும், துரியோதனன் அவரை ஸமாதானம் செய்து பாண்டவர்படையிலுள்ள ரதாதிரதர்களைச் சொல்லும்படி கேட்டதும்.)

பலவான்களும் ஆண்மையிற் சிறந்தவர்களும் ஊன்றிய கோபத்தையுடையவர்களும் நன்கு அடிப்பவர்களும் காந்தாரர்களில் முக்கியர்களும் தருணர்களும் அழகு பொருந்தியவர்களும் மிக்கபராக்ரமசாலிகளும் வெல்லமுடியாதவர்களும் ஒருங்கு சேர்ந்தவர்களும் பிராதாக்களுமான அசலன் விருஷகனென்னும் உன்னுடைய ரதிகர்களிருவருமே பகைவர்களை நாசம் செய்வார்கள். அரசனே! உனக்கு

நண்பனும் இஷ்டனும் எந்நாளும் யுத்தத்தில் கடுமையாயிருப்பவனும் உன்னைப் பாண்டவர்களுடன் யுத்தத்தில் உத்ஸாகப்படுத்துகிறவனும் கடுமையுள்ளவனும் தன்னைப் புகழ்பவனும் இழிவானவனும் ஸூர்ய புத்திரனும் உனக்கு மந்திரியும் நாயகனும் பந்துவும் அஹங்காரியும் மிகவும் மேலேபோனவனுமான இந்தக் கர்ணன், யுத்தத்தில் பூர்ணனான ரதிகனுமே அல்லன்; அதிரதனுமல்லன். அறிவில்லாத இவன், கூடவேஉண்டான கவசத்தை விட்டவனும் திவ்யமான குண்டலங்களை விட்டவனும் எப்பொழுதும் பிறரை நிந்திப்பவனுமாயிருப்பவன். அதனால், இவன் பரசுராமருடைய சாபத்தினாலும் பிராம்மணனுடைய வார்த்தையினாலும் கவசகுண்டலங்களான ஸாதனங்களுடைய பிரிவினாலும் என்னால் அர்த்தரதனாகக் கருதப்பட்டான். இவன் அர்ஜுனனை எதிர்த்து மறுபடியும் உயிருடன் விடுபடான்' என்று சொன்னார். பிறகு, ஆயுதமெடுத்தவர்களெல்லாரிலும் சிறந்தவரான துரோணர், 'இது நீர் சொன்னபடியே ஆகும். ஒருபொழுதும் பொய்யாகாது. இவன் யுத்தந்தோறும் கர்வமுள்ளவனும் பராமுகனுமாகக் காணப்படுகிறான்; (பிறர்களை) நிந்திப்பவனும் அஜாக்கிரதையுடையவனுமாயிருக்கிறான். அதனால், என்னாலும் அர்த்தரதனாகவே கருதப்பட்டான்' என்று சொன்னார்.

இந்த வார்த்தையைக்கேட்டு, ராதேயனே, கோபத்தினால் கண்களை உருட்டிவிழித்துப் பீஷ்மரை ஈட்டியினால் குத்துவதுபோலச் சொற்களாலே குத்துகிறவனாகிச் சொல்லலானான்: 'பிதாமஹரே! நீர் த்வேஷத்தினாலே குற்றமில்லாதவனான என்னை இப்படியே எப்பொழுதும் அடிக்கடி சொற்களாகிற அம்புகளாலே, விரும்புகிறபடி, அறுக்கிறீர். அவையெல்லாவற்றையும் துர்யோதனன்நிமித்தமாகப் பொறுக்கிறேன். நீரோ, என்னை இழிவானமனிதனைப்போல மந்தனாக நினைக்கிறீர். நீர் எனக்கும் எல்லா உலகத்திற்குமே அர்த்தரதராகக் கருதப்பட்டவர். இதில் ஸந்தேகமில்லை. கங்காபுத்திரரான நீர் பொய் சொல்லக்கூடாது. நீர் எந்நாளும் கௌரவர்களுக்கு அனுகூலமில்லாதவர். அரசன் இதை அறிகிறதில்லை. நீர் த்வேஷத்தினாலே குணங்களில் வெறுப்பை உண்டாக்கவிரும்புகிறீர். எவன்தான், யுத்தத்தில் பேதத்தை உண்டுபண்ண விருப்பமுள்ளவனாகி, உதாரமான செய்கையை உடையவர்களும் ஸமானர்களுமான அரசர்களிடம் இவ்விதம் பராக்கிரமத்தைக் குறைவாகப் பேசுவான்? ஓ! கௌரவரே! க்ஷத்திரியஜாதிக்குப் பிராயங்களாலும் நரைகளாலும் தனங்களாலும் உறவினர்களாலும் மகாரதத்தன்மையானது கணக்கிடக்கூடிய

தன்று. க்ஷத்திரியஜாதியானது பலத்தால் சிறந்ததாகவும், வேதியர்கள் மந்திரங்களால் சிறந்தவர்களாகவும், வைஸ்யர்கள் தனத்தால் சிறந்தவர்களாகவும், சூத்திரர்கள் பிராயத்தால் சிறந்தவர்களாகவும் கருதப்பட்டனர். நீர் ரதிகர்களையும் அப்படியே அதிரதர்களையும் இஷ்டப்படி சொல்லுகிறீர். நீர் விருப்பு வெறுப்புக்களுடன் கூடின மயக்கத்தினால் பிரித்தலைச் செய்கிறீர்' என்றும், 'ஓ! துர்யோதன! நீண்டகைகளுள்ளவனே! (நல்ல காரியத்தை) நன்கு ஆலோசிக்கலாம். கெட்ட எண்ணமுடையவரும் உனக்குக் கெடுதலைச் செய்பவருமான இந்தப் பீஷ்மரை விடக்கடவாய். அரசனே! புருஷஸ்ரேஷ்ட! பரம்பரையாகவந்த சேனையும், பிரிக்கப்பட்டால், சேர்க்கமுடியாததாகுமன்றோ? பலவிடங்களிலிருந்தும் கிளம்பிவந்த சேனைகள் பேதிக்கப்பட்டால் சேர்க்கமுடியாததென்று சொல்லவும் வேண்டுமா? பாரத! யுத்தத்தில் இந்தப் போர்வீரர்களுக்குப் பேதமானது உண்டாகிவிட்டது. நேரில் நமக்குத் [1] தேஜோபங்கம் மிகுதியாகச்செய்யப்படுகிறது. ரதிகர்களை அறிவது எங்கே? அற்ப அறிவுடைய பீஷ்மர் எங்கே? நான் பாண்டவர்களுடைய சேனையை வளைப்பேன். வீண்போகாத பாணங்களையுடைய என்னை எதிர்த்துப் பாண்டவர்கள் பாஞ்சாலர்களுடன் புலியையடைந்த காளைகள்போலப் பத்துத் திக்குக்களிலும் செல்லுவார்கள். யுத்தமும் எதிர்த்தலும் ஆலோசனையில் நல்ல வார்த்தைகளும் எங்கே? வயது சென்றவரும் அற்பபுத்தியுள்ளவரும் காலனால் ஏவப்பட்டவருமான பீஷ்மர் எங்கே? எந்நாளும் ஒருவராகி உலக முழுமையோடும் போட்டி போடுகிறார். வீணான அறிவையுடைய இவர் மற்ற ஒரு மனிதனையும் மதிக்கிறாரில்லை. முதியோர்களிடமிருந்து கேட்கவேண்டுமென்பதன்றோ சாஸ்திரத்தில் சொல்லப்பட்டது? மிக்க முதியவர்களிடம் கேட்கவேண்டும் என்பது இல்லையேயில்லை. அவர்கள் மறுபடி பாலர்களாகவல்லவோ கருதப் பட்டார்கள்? ராஜஸ்ரேஷ்டனே! நல்ல யுத்தத்தில், நானொருவன் பாண்டவர்களுடைய சேனையைக் கொல்வேன். புகழ் பீஷ்மரைச் சேரும். அரசனே! உன்னால் இந்தப் பீஷ்மர் சேனாபதியாகச் செய்யப்பட்டார். புகழானது சேனாபதியினிடம் சேரும்; போர்வீரர்களையோ எவ்விதத்தாலும் சேருவதில்லை. அரசனே! பீஷ்மர் ஜீவித்திருக்கும்பொழுது, எவ்விதத்தாலும் நான் போர்புரியேன். பீஷ்மர் கொல்லப்பட்டபிறகோ, எல்லா மஹாரதர்களோடுமே போர்புரிவேன்' என்றும் சொன்னான்.

---

1 சக்தியைக் குறைத்துச் சொல்லி, ஊக்கத்தைக்கெடுப்பது.

பீஷ்மர், 'ஸூதபுத்திர! மிகப் பெரிதும் ஸமுத்திரத்திற்கு நிக ரும் பல வருஷங்களாக ஆலோசிக்கப்பட்டதுமான துர்யோதன னுடைய யுத்தத்தில் இந்தப் பொறுப்பானது என்னால் தாங்கப்பட் டது. மிக்க தாபத்தைச் செய்வதும் மயிர் சிலிர்க்கச் செய்வதுமான அந்தக் காலமானது நேரிட்டிருக்கும்பொழுது, என்னால் நமக்குள் ளேயே பேதமானது செய்யத்தக்கதில்லை. அதனால், நீ ஜீவிக்கிறாய். ஸூதபுத்திரா! நானோ வயதுசென்றவனாயிருந்தாலும், இப்பொழுது, இளைஞனான உன்னால் எதிர்க்க முடியாதவன். நான் (உன்னுடைய) யுத்தத்திலுள்ள ஶ்ரத்தையையும் உயிரிலுள்ள ஶ்ரத்தையையும் அறுப்பேன். பெரிய அஸ்திரங்களை விடுகிறவரான பரசுராமரால் எனக்கு ஒரு துன்பமும் செய்யப்படவில்லை. நீயோ எனக்கு எதைச் செய்யப்போகிறாய்? பெரியோர்கள் தம் பலத்தைத் துதிப்பதான இதைப் புகழ்கிறதேயில்லை. இழிவானவனே! குலத்தில் பாவியான வனே! ஆனாலும், (நான்) மிகவும் தாபத்தையடைந்தவனானதால், உன்னை நோக்கிச் சொல்லுவேன். காசிராஜனுடைய சுயம்வரத்தில் கூடிய உலகிலுள்ள க்ஷத்திரியக்கூட்டத்தை ஒற்றைத் தேரோடேயே வென்று வேகமாகக் கன்னிகைகளைக் கவர்ந்ததில், யுத்தகளத்தில் ஒருவனான என்னாலே இப்படிப்பட்டவர்களும் இன்னும் மேலானவர் களுமான ஆயிரம்பேர்கள் சேனைகளுடன் துரத்தப்பட்டார்கள். பகை கொண்ட மனிதனான உன்னையடைந்ததால், கௌரவர்களுக்கு நாசத் தின்பொருட்டுப் பெரிதான கெட்ட நீதியானது நேரிட்டது. முயற்சி செய். ஆண்பிள்ளையாகக்கடவாய். எவனுடன் போட்டிப்போடு கிறாயோ அந்த அர்ஜுனனோடு யுத்தகளத்தில் போர்செய். மிக்க கெட்டபுத்தியுள்ளவனே! நீ இந்த யுத்தத்திலிருந்து விடுபடுவதைப் பார்ப்பேன்' என்றார்.

பிறகு, பிரதாபசாலியான துர்யோதனராஜன், அவரைநோக்கி, 'காங்கேயரே! என்னைப் பாரும். பெரிய கார்யமோ ஏற்பட்டு விட்டது. இது எனக்குச் சிறந்த நன்மையாகும்படி மனமொத்துச் சிந்திக்கக்கடவீர். நீங்களிருவரும் எனக்குப் பெரியகாரியத்தைச் செய்யப்போகிறீர்கள். மறுபடியும், பகைவர்களுடைய சிறந்த ரதிகர் களையும் அதிரதர்களையும் ரதங்களுடைய கூட்டங்களின் அதிபதி களையும் கேட்க விரும்புகிறேன். கௌரவரே! எதிரிகளுடைய பலா பலத்தைக் கேட்க விரும்புகிறேன். இரவு விடிந்தவுடன், இந்த யுத்தம் ஏற்படப்போகிறது' என்றான்.

நூற்றறுபத்தோன்பதாவது அத்யாயம்.

## ரதாதிரதஸங்கியானபர்வம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர் பாண்டவசேனையிலுள்ள ரதாதிரதர்களைக் கூறியது.)

பீஷ்மர் சொல்லுகின்றார் :—'அரசனே! உன்னைச் சேர்ந்த ரதிகர்களும் அதிரதர்களும் அர்த்தரதர்களும் சொல்லப்பட்டார்கள். அரசனே! இனி, பாண்டவர்களைச் சேர்ந்தவர்களைக் கேளு. அரசனே! உனக்கு இப்பொழுது விருப்பமிருக்குமேயானால், நீ இந்த அரசர்களோடு பாண்டவர்களுடைய சேனையிலுள்ள ரதிகர்களுடைய கணக்கைக் கேள்.

ஐயா! பாண்டவனும் குந்திபுத்திரனுமான அரசன் சிறந்த ரதிகன். அவன் யுத்தத்தில் அக்னிபோல ஸஞ்சரிப்பான். ஸந்தேகமில்லை. ராஜஶ்ரேஷ்டனே! பீமஸேனனோ [1]எட்டுமடங்குகொண்ட ரதிகன். கதையினாலும் பாணங்களாலும் போர்புரிவதில் அவனுக்குச் சமமானவன் இல்லை. பதினாயிரம் யானைகளின் பலத்தையுடையவனும் பகைவர் விருத்தியடைவதைப் பொறாதவனுமான அவன் பராக்கிரமத்தில் மனிதனுயில்லை. புருஷஶ்ரேஷ்டர்களும் அஸ்வினிதேவதைகள்போன்ற ரூபமும் தேஜஸுமுடையவர்களுமான மாத்திரியின்புத்திரர்களிருவர்களுமே இரண்டு ரதிகர்கள். இவர்கள் சேனையின்முன்னணியில்நின்று (தாங்களடைந்த) மிக்க துன்பங்களை நினைத்துக் கொண்டு ருத்திரர்போல் ஸஞ்சரிப்பார்கள். அதில் எனக்குச் சந்தேகமில்லை. அவர்கள் எல்லாருமே மகாத்மாக்களும் ஆச்சாமரங்கள்போல உயர்ந்தவர்களும் அளவினால் மற்ற மனிதர்களைக்காட்டிலும் (கட்டைவிரலையும் சுட்டுவிரலையும் நீட்டி அளப்பதான) ஓட்டை உயரம் அதிகர்களுமாயுள்ளவர்கள். பாண்டுபுத்திரர்களெல்லாரும் சிங்கத்தின் சரீரம்போன்ற சரீரமுள்ளவர்களும் மிக்கபலசாலிகளுமானவர்கள். அப்பா! எல்லாரும் பிரம்மசர்யத்தை அனுஷ்டித்தவர்களும் தவம்பொருந்தியவர்களும் லஜ்ஜையுள்ளவர்களும் புருஷர்களில் சிறந்தவர்களும் புலிகள்போல மிக்கவலிமைபொருந்தியவர்களுமானவர்கள். வேகத்திலும் அடிப்பதிலும் நசுக்குதலிலும் எல்லாருமே மனிதர்களை மிஞ்சினவர்கள். பாரதஶ்ரேஷ்டனே! திக்குக்களை ஜயிக்கும்பொழுது இவர்களெல்லாராலும் அரசர்கள் ஜயிக்கப்பட்டார்கள். கௌரவ! இவர்களுடைய ஆயுதங்களையும் கதைகளையும் சரங்களையும் சிலர் ஒருபொழுதும் தாங்குவதில்லை.

1 எட்டுத் தோராளிகளுக்கு நிகரானவன்.

சிலர் யுத்தத்தில் இவர்களுடைய விற்களை நாணேற்றுவதற்கும் பெரிய கதைகளைத் தூக்குவதற்கும் பாணங்களை விடுவதற்கும் சக்தர்களா யில்லை. பாலர்களாயிருக்கையிலும், இவர்கள் வேகத்திலும் லக்ஷ்யத்தை அறுப்பதிலும் [1] உணவிலும் புழுதி [2] விளையாட்டிலும் உங்களெல்லாரையுமே அதிகரித்தார்கள். மிக்கவலிமையுடைய எல்லாருமே இந்தச்சேனையை எதிர்த்து யுத்தத்தில் கொல்லுவார்கள். அவர்களுடன் எதிர்ப்பதானது வேண்டாம். அவர்கள் ஒவ்வொருவருமே யுத்தத்தில் எல்லா அரசர்களையும் கொல்வார்கள். ராஜஸ்ரேஷ்டனே! ராஜஸூயத்தில் எப்படி நடந்ததென்பது உனக்கு நேரில் தெரியும். அவர்கள் திரௌபதியைத் துன்பப்படுத்தினதையும் சூதாட்டத்திலுண்டான கடுஞ்சொற்களையும் நினைக்கிறவர்களாகி யுத்தத்தில் ருத்திரர்போல ஸஞ்சரிப்பார்கள். சிவந்த கண்களையுடையவனும் சுருண்ட கேசத்தையுடையவனுமான அர்ஜுனன் நாராயணரை ஸஹாயமாக வுடையவன். அவனுக்கு இணையான ரதிகன் இரண்டு சேனைகளிலும் இல்லை. மகாராஜனே! தேவர்களிலும் அஸுரர்களிலும் உரகர்களிலும் ராக்ஷஸர்களிலும் யக்ஷர்களிலும் புத்திமானான அர்ஜுனனுக்கு இணையான ஒரு ரதிகனும் உண்டானதாகவோ இனி உண்டாவதாகவோ முன்னம் நான் கேட்கவில்லை. மனுஷ்யர்களில் ஏது? ஸாரதியோ வாஸுதேவர்; யுத்தம் செய்கிறவனோ தனஞ்சயன்; வில்லோ தேவலோகத்ததான காண்டீவம்; அந்தக் குதிரைகளோ வாயுவின்வேகம்போன்ற வேகமுள்ளவை; கவசமோ பிளக்க முடியாததும் தெய்வத்தன்மையுள்ளதுமானது; பெரிய தூணீரங்களோ குறைவடையாதவைகள்; அஸ்திரங்களின் கூட்டமோ, மாஹேந்திரமும் ரௌத்திரமும் கௌபேரமும் யாம்யமும் வாருணமுமாக இருக்கின்றன. பயங்கரமான தோற்றமுள்ள கதைகளும் வஜ்ரம்முதலான சிறந்தபல ஆயுதங்களுமிருக்கின்றன. யுத்தத்தில் ஒரே ரதத்தோடு கூடிய அவனாலே ஹிரண்யபுரத்தில் வஸிப்பவர்களான பல ஆயிரம் அஸுரர்கள் கொல்லப்பட்டார்கள். அவனுக்குச் சரியான ரதிகன் யார்? வேகமுடையவனும் பலசாலியும் தவறாத பராக்ரமத்தையுடையவனும் பெரிய கைகளை உடையவனுமான அவன், தன் சேனையைக்காத்துக் கொண்டே உன் சேனையைக் கொல்லுவானல்லவா? அரசரிற் சிறந்தவனே! இந்தத் தனஞ்சயனை நானும் எதிர்ப்பேன். ஆசார்யரும்

1 'போஜ்யே' என்பது மூலம்; 'மர்மஸ்தானங்களில் அடிப்பதில்' என்பது பழைய உரை. 2 'பாம்ஸுவிகர்ஷணே' என்பதுமூலம். 'பூமியில் முஷ்டியுத்தத்தில்' என்பது பழைய உரை.

எதிர்ப்பார். இரண்டு ஸேனைகளிலும் வர்ஷாகாலத்தில் பெருங்காற்றி னால் செலுத்தப்பட்ட மேகம்போலப் பாணவர்ஷங்களை வர்ஷிப்பவ னான தனஞ்சயனை எதிர்க்கிற தேராளி மூன்றுமவன் இல்லை. இவனோ மிக்கஜாக்கிரதையுடையவனும், வாஸுதேவரை ஸஹாயமாகவுடைய வனும், யௌவனமுள்ளவனும், திறமை வாய்ந்தவனுமாக இருக் கிறான். நாங்களிருவரும் முதுமையை அடைந்தவர்கள்' என்று சொன்னார். அப்போது, பீஷ்மருடைய இந்த வார்த்தையைக் கேட் டதனால், பாண்டவர்களுடைய முன்னுள்ள ஸாமர்த்தியத்தைப் பிரத்தியக்ஷமாகப் பார்த்ததுபோல நினைத்து, அரசர்களுடைய ஸ்வர்ணமயமான தோள்வளைகளை யுடையவைகளும் சந்தனத்தால் பூசப்பட்டவைகளும் பருத்தவைகளுமான புஜங்களும் அதிகமான வேகத்தையுடையவைகளான மனங்களும் தளர்ச்சி அடைந்தன.

---

## நூற்றெழுபதாவது அத்யாயம்.

## ரதாதிரதஸங்கியானபர்வம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர் பாண்டவ ஸேனையிலுள்ள ரதாதிரதர்களைக் கூறியது; தொடர்ச்சி.)

பீஷ்மர் சொல்லுகிறார்:—'மகாராஜனே! திரௌபதியின் புத்தி ரர்கள் ஐவரும் எல்லாருமே மகாரதர்கள். விராடபுத்திரனான உத்தரன் சிறந்த ரதிகனாக என்னால் கருதப்பட்டான். நீண்ட கைகளையுடைய அபிமன்யு அதிரதன். பகைவர்களைக் கொல்லு கிறவனான அவன் போரில் அர்ஜுனனுக்கும் வாஸுதேவருக்கும் நிகரானவன். வேகமுள்ள அஸ்திரங்களையுடையவனும் [1]பலவிதமாக யுத்தம் செய்பவனும் மானமுடையவனும் உறுதியான விரதத்தை யுடையவனுமாயிருப்பவன். தன் பிதாவினுடைய கிலேசத்தை நினைக் கிறவனாகிப் பராக்கிரமத்தைச் செலுத்துவான். மதுவின் வம்சத்தி லுண்டானவனும் சூரனுமான ஸாத்தியகியானவன் அதிரதனானவன். இவன், வ்ருஷ்ணிகளுடைய பெரிய வீரர்களுள், பொறுதவனும் பயத் தை ஜயித்தவனுமானவன். அரசரே! அப்படியே, உத்தமௌஜஸும் என்னால் சிறந்த ரதிகனாகக் கருதப்பட்டான். பராக்கிரமசாலியான யுதாமன்யுவும் என்னால் சிறந்த ரதிகனாகக் கருதப்பட்டான். அவர்

1 'சித்ரயோதி' என்பது மூலம்; 'ஆச்சரியப்படும்படி யுத்தம் செய்பவன்' என்றும் கொள்ளலாம்.

களுடைய தேர்களும் யானைகளும் குதிரைகளும் அனேக ஆயிரங்களானவை. ராஜஸ்ரேஷ்டனே! பாரத! அவர்கள் குந்திபுத்திரனுடைய பிரியத்தை அடையும் விருப்பத்தினால் பாண்டவர்களுடன் உன்னுடைய சேனைகளில் கனலும் காற்றும்போல ஒருவரை ஒருவர் அழைத்துக்கொண்டு போர்செய்வார்கள். அப்படியே, யுத்தத்தில் பிறரால் வெல்லமுடியாதவர்களும் முதியவர்களும் மிக்க வீர்யமுடையவர்களும் புருஷஸ்ரேஷ்டர்களுமான விராடனும் துருபதனும் என்னால் மகாரதர்களாகக் கருதப்பட்டார்கள். பிராயத்தால் முதிர்ந்தவர்களாயிருந்தாலும் க்ஷத்திரிய தர்மத்தில் பற்றுள்ளவர்களும் வீரர்கள் செல்லுகின்ற வழியிலிருப்பவர்களுமான அவர்கள் வலிமையினாலே மிகமுயல்வார்கள். ராஜஸ்ரேஷ்டனே! வீர்யம், பலம், வம்சம் இவைகளால் சிறந்த நடையுடையவர்களும் பெரிய வில்லையுடையவர்களுமான அவ்விருவருமோ ஸம்பந்திகளானதால் நேசத்தாலும் வீர்யத்தாலும் கட்டப்பட்டவர்களா யிருக்கின்றனர். கௌரவஸ்ரேஷ்ட! பெரிய கைகளையுடைய எல்லாமனிதர்களுமே, காரணம் நேர்ந்தபோது, சூரர்களாகவோ பயந்தவர்களாகவோ ஆகின்றனர். பகைவரை வாட்டுபவனே! ஒரே நிலைமையை அடைந்தவர்களும் உறுதியான வில்லையுடையவர்களுமான இந்த அரசர்களிருவரும் உயிரில் ஆசையைவிட்டுச் சக்தியினால் மிகவும் எதிர்க்கப்போகிறார்கள். யுத்தத்தில் குரூரத்தன்மையையுடையவர்களான அவ்விருவரும் ஸம்பந்தியாயிருப்பதைக் காக்கிறவர்களாகித் தனித்தனி ஒவ்வோர் அக்ஷௌஹிணிகளுடன் பெரிய காரியத்தைச் செய்வார்கள். பாரத! உலகத்தில் வீரர்களும் பெரிய வில்லையுடையவர்களும் சரீரத்தை வெறுத்தவர்களுமான அவர்கள் பிரதிஜ்ஞையைக் காக்கிறவர்களாகிப் பெரிய கார்யத்தைச் செய்வார்கள்.

---

## நூற்றெழுபத்தோராவது அத்யாயம்.

## ரதாதிரதஸங்கியானபர்வம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர் பாண்டவ சேனையிலுள்ள ரதாதிரதர்களைக் கூறியது; தொடர்ச்சி.)

அரசனே! பாரத! பாஞ்சால ராஜனுடைய புத்திரனும் பைகவர்களின் பட்டணங்களை ஜயிப்பவனுமான சிகண்டியானவன், யுதிஷ்டிரனுடைய முக்கிய ரதிகனாக என்னால் கருதப்பட்டான்.

பாரத! இவன் யுத்தத்தில் முன்னிருந்த [1]பெண் தன்மையை நாசம் செய்கிறவனும் சிறந்ததானபுகழைப் பரவச்செய்கிறவனுமாகி உன் சேனைகளில் சண்டைசெய்வான். இவனுக்குப் பாஞ்சாலர்களும் பிரபத்ரகர்களுமான பல சேனைவீரர்கள் இருக்கின்றனர். இவன் அந்தத் தேர்க்கூட்டத்துடன் பெரிய கார்யத்தைச் செய்வான். பாரத! அரசனே! துரோணருடைய சிஷ்யனும் பெரியதேரையுடையவனும் எல்லாச சேனைகளுக்கும் சேனாபதியுமான திருஷ்டத்யும்னனும் என்னால் அதிரதனாகக் கருதப்பட்டான். இவன், பிரளயகாலத்தில் மிக்க கோபத்தையடைந்தவரும் பகவானுமான பினாகிபோல, போரில் பகைவர்களை நாசம் செய்கிறவனாகி, யுத்தகளத்தில் போர் செய்வான். யுத்தத்தில் பிரியமுள்ளவர்கள், இவனுடைய அந்தத்தேர்ப்படை பலவாயிருப்பதால், தேவர்களுடைய யுத்தத்தில்போல [2]ஸமுத்திரத்திற்கு நிகராகச் சொல்லுகிறார்கள். ராஜஶ்ரேஷ்ட! அரசனே! திருஷ்டத்யும்னனுடைய புத்திரனான க்ஷத்ரதர்மாவோ, பால்யனானதால் அதிகமான உழைப்பைச் செய்யாதவன்; என்னால் அர்த்தரதனாகக் கருதப்பட்டான். சிசுபாலனுடைய புத்திரனும் வீரனும் சேதிதேசத்தரசனும் பெரியவில்லையுடையவனும் பாண்டவனுக்கு ஸம்பந்தியுமான திருஷ்டகேதுவானவன் மகாரதன். பாரத! சூரனான இந்தச் சேதிதேசாதிபதி புத்திரனோடு மஹாரதர்கள் செய்கிற பெரிய செய்கையை எளிதிற் செய்வான். அரசரிற் சிறந்தவனே! பகைவர்பட்டணத்தை வெல்லுபவனும் க்ஷத்திரிய தர்மத்தில் பற்றுள்ளவனுமான க்ஷத்ரதேவனே பாண்டவர்களில் உத்தமனான ரதிகனாக என்னால் கருதப்பட்டான். ஜயந்தனும் அமிதௌஜஸும் பெரிய தேரையுடைய ஸத்தியஜித்துமாகிய இவர்களெல்லாரும் மகாத்மாக்களும் பாஞ்சாலர்களில் சிறந்தவர்களுமான மகாரதர்கள்; ஐயா! கோபத்தையடைந்தவைகளான யானைகள் போல யுத்தம் செய்வார்கள். பலவான்களும் சூரர்களுமான அஜன் போஜன் என்கிற இரண்டு மகாரதர்களும் பாண்டவர்களினிமித்தமாகப் பராக்கிரமத்தைச் செய்கிறவர்களாகி யுத்தம் செய்வார்கள்; சக்தியுள்ள வரையிலும் மிக்க முயற்சியைச் செய்வார்கள். ராஜஶ்ரேஷ்டனே! ஸகோதரர்களான கேகயர்கள் ஐவரும் வேகத்தோடு கூடிய அஸ்த்ரங்களை உடையவர்களும் விசித்திரமான யுத்தங்களைச் செய்பவர்களும் ஸமர்த்தர்

---

1 'பெண் தன்மையைக் காட்டாதவன்; அல்லது, பெண்தன்மையை மாற்றினவன்' என்பது.

2 'ஸமுத்ரம்' ஓர் எண்ணுமாம்; அது கோடி கோடியாகும்.

களும் உறுதியான பராக்கிரமமுடையவர்களுமானவர்கள். உறுதியான பராக்கிரமத்தையுடையவர்களான அவர்களெல்லாருமே தேராளிகளில் சிறந்த ரதிகர்கள். எல்லாரும் சிவப்பான கொடிச்சீலை உடையவர்கள். அரசனே! காசிகனும் ஸுகுமாரனும் நீலனும் ஸூர்யதத்தனும் மதிராஸ்வனென்று பெயருள்ள சங்கனும் ஆகிய எல்லாருமே தேராளிகளில் சிறந்தவர்களும் எல்லாரும் யுத்தத்திற்குரிய லக்ஷணமுள்ளவர்களும் எல்லா அஸ்திரங்களையும் அறிந்தவர்களும் எல்லாரும் மகாத்மாக்களுமாக என்னால் கருதப்பட்டார்கள். மகாராஜனே! [1] வார்த்தக்ஷேமியானவன் என்னால் மகாரதனாகக் கருதப்பட்டான். சித்திராயுதனென்கிற அரசனும் என்னால் சிறந்த ரதிஞகக் கருதப்பட்டான். அவனே யுத்தத்தில் விளங்குகிறவனும் அர்ஜுனனுக்குப் பக்தனுமானவன். சேகிதானனும் ஸத்யத்ருதியும் பாண்டவர்களைச்சேர்ந்த மகாரதர்கள். மனிதர்களுள் சிறந்தவர்களான அவ்விருவரும் தேராளிகளில் சிறந்தவர்களாக என்னால் கருதப்பட்டார்கள். ராஜஸ்ரேஷ்டனே! பாரத! வ்யாக்ரதத்தனும் சந்திரஸேனனும் பாண்டவர்களைச் சேர்ந்த சிறந்த ரதிகர்களாக என்னால் கருதப்பட்டார்கள்; ஸந்தேகமில்லை. ராஜஸ்ரேஷ்டனே! க்ரோதஹந்தாவென்று பெயர் வழங்கியவனும் வாஸுதேவருக்கும் பீமஸேனனுக்கும் நிகரானவனுமான ஸேனாபிந்துவும் சிறந்த ரதிகன். அவனே யுத்தத்தில் வல்லமையைக்காட்டி உன்னுடைய சேனைகளுடன் போர்செய்வான். யுத்தத்தில் கொண்டாடப்படுகிறவனும் ரதிகர்களில் சிறந்தவனுமான அவனை, நீ என்னையும் துரோணரையும் கிருபரையும் நினைப்பது போலவே, நினைக்கவேண்டும். மிக்க வேகமுள்ள அஸ்திரங்களையுடையவனும் புகழத்தக்கவனும் மனிதர்களில் சிறந்தவனும் பகைவருடைய பட்டணங்களை ஜயிப்பவனுமான காசிராஜன் என்னால் ஏகரதனாக அறியத்தக்கவன். துருபதனுடைய புத்திரனான ஸத்தியஜித்தானவன் யுத்தத்தில் நன்குமதிக்கப்படுகிறவனும் தருணனுமானவன். இவனும், யுத்தத்தில் வல்லமையைச் செலுத்துகிறவனும் எட்டுமடங்குள்ள ரதிகனுமாக நினைக்கப்படத்தக்கவன். திருஷ்டத்யும்னனுக்கு நிகரான அவனே அதிரதனாயிருப்பதை அடைந்தவன். பாண்டவர்களுக்குப் புகழை விரும்புகிறவனான அவன் பெரியசெய்கையைச் செய்வான். பிரியமுள்ளவனும் சூரனும் மிக்க வீர்யமுள்ளவனும் பாண்டவர்களுடைய பாரத்தைத் தாங்குபவனுமான இந்தப்

[1] விருத்தக்ஷேமியின் புத்திரன்; பாஞ்சாலரைச் சேர்ந்தவன்; அவனுக்கு ஸுசர்மாஎன்பது பெயர்.

பாண்டியராஜன் வேறு ஒரு மகாரதன். பெரிய வில்லுடையவனான த்ருடதன்வாவென்பவன் பாண்டவர்களைச் சேர்ந்த மகாரதன். கௌரவச்ரேஷ்டனே! பகைவருடைய பட்டணங்களை ஜயிப்பவர்களான ச்ரேணிமான் வஸுதானனென்கிற இவ்விரண்டு அரசர்களும் அதிரதர்களாகக் கருதப்பட்டார்கள்.

---

## நூற்றெழுபத்திரண்டாவது அத்யாயம்.

## ரதாதிரதஸங்கியானபர்வம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர், சிகண்டி முன்பு பெண்ணாயிருந்ததைத் தெரிவித்துத் தாம் அவனோடு யுத்தம்செய்யக் கூடாமையைக் கூறியது.)

மஹாராஜனே! பாரத! ரோசமானன் பாண்டவர்களைச் சேர்ந்த மகாரதன்; சண்டையில் பகைவர்களுடைய சேனைகளில் ஒரு தேவன்போல யுத்தம் செய்வான். பெரிய வில்லையுடையவனும் மிக்க பலசாலியும் பீமஸேனனுக்கு மாதுலனுமான புருஜித்தென்கிற குந்திபோஜனானவன் என்னால் அதிரதனாகக் கருதப்பட்டான். வீரனும் பெரிய வில்லையுடையவனும் அறிவிற் சிறந்தவனும் நிபுணனும் பலவிதமாக யுத்தம் செய்பவனும் சக்தியுள்ளவனுமான இவன் என்னால் ரதிகர்களில் சிறந்தவனாகக் கருதப்பட்டான். இவன், இந்திரன் அஸுரர்களுடன் சண்டைசெய்வதுபோலப் பராக்கிரமத்தைக் காட்டிச் சண்டைசெய்வான். பிரஸித்திபெற்றவர்களான இவனைச்சேர்ந்த வீரர்களெல்லாரும் போரில் வல்லவர்கள். வீரனும் பாண்டவர்களுக்கு விருப்பமான நன்மையில் பற்றுள்ளவனுமான இவன், ஸகோதரியின் புத்திரர்கள் நிமித்தம் யுத்தத்தில் உறுதியாக நின்று மிகப் பெரிய செய்கையைச் செய்வான். மகாராஜனே! பீமஸேனனுக்கு ஹிடிம்பையினிடம் பிறந்தவனும் ராக்ஷஸர்களுக்குத் தலைவனும் பலமாயைகளை உடையவனுமான கடோத்கசனானவன் என்னால் அதிரதனாகக் கருதப்பட்டான். ஐயா! மாயாவியும் யுத்தத்தில் பிரியமுடையவனுமான அவன் யுத்தகளத்தில் போர்செய்யப் போகிறான். அவனைச்சேர்ந்த ராக்ஷஸர்களும் வீரர்களும், (அவனுக்கு) மந்திரிகளும் வசத்திலிருப்பவர்களுமானவர்கள். வாஸுதேவரை முன்னிட்டவர்களான இவர்களும் பல பட்டணங்களுக்குத் தலைவர்களான மற்றும் அனேகர்களும் பாண்டவனிமித்தமாகச் சேர்ந்

திருக்கின்றார்கள். அரசனே! இவர்கள் பிரதானமாக மகாத்மாவான பாண்டவனைச் சேர்ந்த ரதிகர்களும் அதிரதர்களும் மற்றும் அர்த்த ரதர்களுமாக இருப்பவர்கள். அரசனே! இவர்கள், யுத்தத்தில், பயங்கரமாயிருப்பதும் இந்திரன்போன்ற வீரனான தனஞ்சயனாலே காக்கப்படுவதுமான யுதிஷ்டிரனுடைய சேனையைச் செலுத்துவார்கள். வீர! நான், யுத்தத்தில் மாயையை அறிந்தவர்களும் ஜயத்தை விரும்புகிறவர்களுமான அவர்களுடன் யுத்தகளத்தில் வெற்றியையாவது மரணத்தையாவது விரும்புகிறவனாகி யுத்தம் செய்வேன். சக்கரத்தையும் காண்டீவத்தையும் தரிப்பவர்களும் ஸந்தியாகாலத்தையடைந்த ஸூர்யசந்திரர்கள் (சேர்வது) போல (ச்சேர்ந்து) வருபவர்களும் ரதிகர்களில் சிறந்தவர்களுமான வாஸுதேவரையும் அர்ஜுனனையும் பாண்டுபுத்திரனுக்கு ஸைன்யங்களான மற்றும் சிறந்த ரதிகர்களையும் சேனைகளுடன் படையின் முன்னணியில் நான் எதிர்ப்பேன். அரசனே! கௌரவஸ்ரேஷ்டா! உன்னைச்சேர்ந்த ரதிகர்களும் அதிரதர்களும் அர்த்தரதர்களான மற்றும் சிலரும் அப்படியே அவர்களைச்சேர்ந்தவர்களும் பிரதானர்களின் முறையாக என்னால் உனக்குச் சொல்லப்பட்டனர். பாரத! அர்ஜுனனையும் வாஸுதேவரையும் மற்றும் அங்குள்ள அரசர்களெல்லாரையும் பார்த்தவுடனேயே தடுப்பேன். நீண்ட கைகளையுடையவனே! யுத்தத்தில் அம்புகளை எடுத்துக்கொண்டு எதிர்த்துப்போர்செய்பவனும் பாஞ்சாலராஜனுடைய புத்திரனுமான சிகண்டியைப்பார்த்தால் நான் அடிக்கமாட்டேன். நான், பிதாவின்விருப்பத்தைச்செய்யும் இச்சையால், கிடைத்த ராஜ்யத்தைத்தள்ளிவிட்டுப் பிரம்மசர்யவிரதத்திலிருப்பதை உலகம் அறியும். சித்திராங்கதனைக் கௌரவர்களுடைய ஆதிபத்தியத்தில் அபிஷேகம்செய்துவைத்தேன்; சிசுவான விசித்திரவீர்யனை இளவரசில் அபிஷேகம்செய்துவைத்தேன்; உலகிலுள்ள எல்லா அரசர்களிடத்திலும் தேவவ்ரதனென்பதைத் தெரிவித்துவிட்டு, ஒருபொழுதும் ஸ்திரீயைக் கொல்லேன்; முன்ஸ்திரீயாயிருந்தவனையும் ஒருகாலும் கொல்லேன். அரசனே! அந்தச் சிகண்டியோ முன் ஸ்திரீயாயிருந்தவன். நீ அவனைப்பற்றிக் கேட்டிருக்கிறாயா? பாரத! பெண்ணாய்ப்பிறந்து, பிறகு ஆணானான். அவனுடன் சண்டைசெய்யேன். பரதஸ்ரேஷ்ட! அரசனே! யுத்தத்தில் மற்ற எந்த அரசர்களை எதிர்ப்பேனோ அவர்களையெல்லாம் கொல்லுவேன்; குந்தியின் புத்திரர்களைக் கொல்லமாட்டேன்' என்றார்.

ரதாதிரதஸங்கியானபர்வம் முற்றிற்று.

## நாற்றெழுபத்துமூன்றாவது அத்யாயம்.

# அம்போபாக்யானபர்வம்.

(துரியோதனன் சிகண்டியைக்கொல்லக்கூடாமைக்குக் காரணம் கேட்டதும், பீஷ்மர் அம்பைமுதலிய மூன்றுபெண்களை எடுத்துவந்ததைக் கூறியதும்.)

துர்யோதனன், 'ஓ! பரதர்களில் சிறந்தவரே! நீண்டகைகளையுடையவரே! கங்காபுத்திரரே! பிதாமஹரே! 'ஸோமகர்களையும் பாஞ்சாலர்களையும் கொல்லுவேன்' என்று முன்னே சொல்லிவிட்டுக் [1] கொல்லவருபவனும் பாணமெடுத்தவனுமான சிகண்டியை யுத்தங்களில் பார்த்தால் ஏன் கொல்லமாட்டீர்? அதனை எனக்குச் சொல்லும்' என்றான்.

பீஷ்மர் சொல்லுகிறார்:—'துர்யோதன! நான் யுத்தத்தில் சிகண்டியைப்பார்த்துக் கொல்லமாட்டேனென்றதற்குக் காரணமான கதையை இந்த அரசர்களுடன் கேள். பரதஶ்ரேஷ்ட! எனக்குத் தந்தையும் உலகத்தில் பிரஸித்திபெற்றவரும் தர்மத்தில் புத்தியுடையவருமான சந்தனுமகாராஜர் ஒருசமயத்தில் மரணத்தையடைந்தார். பரதஶ்ரேஷ்ட! பிறகு, நான் பிரதிஜ்ஞையைக் காக்கிறவனாகிப்பெரிய ராஜ்யத்தில் சித்ராங்கதனென்கிற என்தம்பிக்கு அபிஷேகம்செய்வித்தேன். அவனும் மரணத்தையடைந்தபொழுது, ஸத்தியவதியினுடைய கொள்கைப்படி, விசித்திரவீர்யனை அரசனாக விதிப்படி அபிஷேகம் செய்வித்தேன். ராஜஶ்ரேஷ்டனே! மிக்க இளைஞனாயிருந்தாலும் என்னால் முறைப்படி அபிஷேகம் செய்யப்பட்டவனும், தர்ம புத்தியுள்ளவனுமான விசித்திரவீர்யன் என்னையே எதிர்பார்த்தான். அப்பா! நானும் அவனுக்கு ஸமமானகுலத்தில் கலியாணம் செய்து வைக்க மனத்தில் விருப்பங்கொண்டேன். புஜபலமுள்ளவனே! அப்பொழுது, அப்படியே, காசிராஜனுடைய புத்திரிகளும் எல்லாரும் ரூபத்தில் ஒப்பற்றவர்களுமான அம்பை, அம்பிகை, அம்பாலிகை யென்கிற மூன்றுகன்னிகைகளும் ஸ்வயம்வரத்திலிருப்பதாகக் கேட்டேன். பரதஶ்ரேஷ்ட! பூமியிலுள்ள அரசர்களும் அழைக்கப்பட்டிருந்தார்கள். அந்தப் பெண்களுள், அம்பையென்பவள் மூத்தவள். அம்பிகையே நடுவிலுள்ளவள். ராஜஶ்ரேஷ்டனே! அம்பாலிகை

---

1 'ஆததாயிநம்' என்பது மூலம். இதன் பொருளை விராடபர்வம் 175-ம் பக்கம் குறிப்பில் பார்க்க.

என்கிற ராஜகன்னிகை இளையவள். அப்பொழுது, நான் ஒரு தேரோடேயே காசிராஜனுடைய பட்டணத்தை அடைந்தேன். பெரிய கைகளையுடையவனே! அரசனே! நன்கு அலங்கரிக்கப்பட்ட அந்த மூன்று கன்னிகைகளையும், அழைக்கப்பட்டுவந்திருந்த பாரிலுள்ள அரசர்களையும் பார்த்தேன். பரதஸ்ரேஷ்ட! பிறகு, நான் (கன்னிகைகளுக்காக) யுத்தத்திலிருப்பவர்களான அந்த எல்லா அரசர்களையும் அழைத்து, அந்தக்கன்னிகைகளைத் தேரில் ஏற்றிக்கொண்டேன். அப்பொழுது, நான் அந்தக் கன்னிகைகளை வீரத்தைப் [1] பரிசப்பொருளாகவுடையவர்களென்று அறிந்து, அவர்களைத் தேரில் ஏற்றிக்கொண்டு, அங்குவந்திருந்த எல்லா அரசர்களையும் நோக்கி, 'சந்தனுவின் புத்திரனான பீஷ்மன் கன்னிகைகளை [2] அபஹரிக்கிறான். ஓ! அரசர்களே! அப்படிப்பட்ட கன்னிகைகளுக்காகச் சண்டைசெய்கிற நீங்களெல்லாரும் (இவர்களை) விடுவிப்பதற்காகச் சக்தியுடன் பலமாக முயலுங்கள். அரசர்களே! நீங்கள் பார்த்துக்கொண்டிருக்கையிலேயே, இதோ நான் பலாத்காரமாக அபகரிக்கின்றேன்' என்று அடிக்கடி சொன்னேன். பிறகு, அந்த அரசர்கள் ஆயுதங்களைத் தூக்கிக்கொண்டு கிளம்பினார்கள்; கோபத்தையடைந்தவர்களாகி ஸாரதிகளை, 'எச்சரிகை, எச்சரிகை' என்று ஏவினார்கள். யானைகளோடு போர்புரிபவர்களான அந்த அரசர்கள், [3] மேகங்களுக்கொப்பான ரதங்களோடும் கஜங்களோடும் புஷ்டியடைந்த குதிரைகளோடும் ஆயுதங்களைத் தூக்கிக்கொண்டு உயரப்பாய்ந்தார்கள். அரசனே! பிறகு, அந்த அந்த அரசர்களெல்லாருமே பெரிய ரத ஸமூகத்தினால் எங்கும் என்னைச் சுற்றி வளைத்தார்கள். நான் அவர்களைச் சரமாரியால் நாலுபக்கத்திலும் சுற்றி வளைத்தேன்; தேவராஜன் அஸுரர்களை வென்றதுபோல எல்லா அரசர்களையும் வென்றேன்; பரதஸ்ரேஷ்ட! சிரித்துக்கொண்டே, ஜ்வலிக்கின்ற கணைகளாலே கீழே தள்ளினேன். நான் யுத்தத்தில் எதிர்த்து வருகின்றவர்களான அவர்களுடைய விசித்திரமானவைகளும் பொன்னால் அலங்கரிக்கபட்டவைகளுமான துவஜங்களையும் அவர்களுடைய குதிரைகளையும் யானைகளையும் ஸாரதிகளையும் ஒவ்வொரு பாணத்தினாலேயே பூமியில் விழும்படி தள்ளினேன். தோல்வியடைந்தவர்களும் திரும்பிச் சென்றவர்களுமான அந்த

---

1 'பரிசம்' கன்னிகைக்காக அவளுடைய பெற்றோர்களுக்கு மணமகனால் கொடுக்கப்படும் வெகுமானப்பொருள். இது வடமொழியில், 'சுல்கம்' என்னப்படும். ஆதிபர்வம் 837-ம் பக்கம் குறிப்பில் பார்க்க.

2 தம்மைப் பிறர்போலச் சொல்லிக்கொண்டது. 3 வேறுபாடம்.

அரசர்களெல்லாரும் என்னுடைய அந்த வேகத்தைப்பார்த்து நமஸ்காரமும் செய்தார்கள்; புகழவும் புகழ்ந்தார்கள். பிறகு, நான் அரசர்களை ஜயித்து அந்தக் கன்னிகைகளை அழைத்துக்கொண்டு அந்த அரசர்களையும் விட்டுவிட்டு உடனே ஹஸ்தினபட்டணத்தை அடைந்தேன். நீண்ட கைகளுள்ளவனே! பாரத! நான் பிராதாவினிமித்தமான அந்தக் கன்னிகைகளையும் அந்த(ப்போர்ச்) செயலையும் ஸத்தியவதியினிடம் தெரிவித்தேன்.

---

## நூற்றெழுபத்து நான்காவது அத்யாயம்.

## அம்போபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(அம்பை முதலிய மூவர்களையும் விசித்திரவீர்யனுக்கு விவாகம் செய்யத்தொடங்கியதும், அம்பை தான் ஸால்வ ராஜனைவிரும்பியிருத்தலைத் தெரிவித்து அவனிடம் செல்லப் பீஷ்மரிடம் அனுமதி கேட்டதும்.)

பரதஸ்ரேஷ்டனே! பிறகு, நான், வீரர்களுக்கு மாதாவும் ஓடக்காரன்மகளுமான தாயையடைந்து நமஸ்கரித்து, 'நான் விசித்திரவீர்யனுடைய நிமித்தமாக அரசர்களை ஜயித்து வீரத்தைப் பரிசமாகவுடையவர்களான காசிராஜனுடைய இந்தப் பெண்களைக் கவர்ந்துவந்தேன்' என்ற இந்த வார்த்தையைச் சொன்னேன். அரசனே! பிறகு, ஸத்தியவதி ஸந்தோஷத்தை அடைந்தவளும் நீர் பெருகுகிற கண்களையுடையவளுமாகி (என்னை) உச்சிமோந்து, 'புத்திர! பாக்யத்தினால் நீ வென்றனை' என்று சொன்னாள்.

பிறகு, ஸத்தியவதியினுடைய ஸம்மதத்தின்மேல் விவாக ஏற்பாடுகள் செய்யப்பட்டபொழுது, காசிராஜனுடைய மூத்த புத்திரியானவள், லஜ்ஜையுடன் சொல்லலானாள். 'ஓ! பீஷ்மரே! நீர் தர்மத்தையறிந்தவரும் எல்லாச் சாஸ்திரங்களிலும் ஸமர்த்தருமாயிருக்கிறீர். தர்மத்தைவிட்டுவிலகாத என் சொல்லைக் கேட்டு இவ்விடத்தில் எனக்குச் செய்யவேண்டியதைச் செய்யக் கடவீர். நான், முன், ஸால்வதேசத்தரசரை மனத்தினால் வரனாக வரித்தேன். அவரும், முன், பிதாவுக்குத் தெரியாமல், ரகஸ்யத்தில் என்னை வரித்தார். ஓ! பீஷ்மரே! நீர் முக்கியமாகக் கௌரவராகவும் இருந்துகொண்டு, பிறரை விரும்பினவளான என்னை ராஜதர்மத்தை மீறி எப்படி உமது கிருகத்தில் வஸிக்கச்செய்வீர்? ஓ! பரதஸ்ரேஷ்

டரே! நீண்டகைகளையுடையவரே! இதனை அறிந்து மனத்தினால் உறுதிசெய்து உமக்கு எது உசிதமோ அதனை இப்பொழுது செய்வீராக. ஓ! அரசரே! அந்த ஸால்வதேசத்தரசர் என்னை நிச்சயமாக எதிர்பார்க்கிறார். ஓ! கௌரவஸ்ரேஷ்டரே! ஆகையால், நீர் எனக்கு அனுமதி கொடுக்கவேண்டும். ஓ! மிக்க கைவன்மையுள்ளவரே! தர்மத்தைத் தாங்குபவர்களில் சிறந்தவரே! என்னிடம் தயை செய்யும். ஓ! வீரரே! நீரோ பாரில் சத்தியமான விரதத்தை உடையவரென்று எங்களுக்குக் கேள்வி' என்றாள்.

## நூற்றெழுபத்தைந்தாவது அத்யாயம்.

## அம்போபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(அம்பை பீஷ்மரிடம் அனுமதிபெற்று ஸால்வனிடம் சென்றதும், அவள் அவனால் நிராகரிக்கப்பட்டதும், அவள் பீஷ்மருக்குத் தீங்குசெய்யக்கருதித் தபோவனம் சென்று அங்குள்ளவர்களுக்குத் தன் வரலாற்றைச் சொல்லியதும்.)

அரசனே! பிறகு, நான் காளியென்றபெயருடையவளான கந்தவதியினிடத்திலும் மந்திரிகளிடத்திலும் ரித்விக்குக்களிடத்திலும் புரோஹிதர்களிடத்திலும் தெரிவித்து, அம்பை யென்கிற மூத்த பெண்ணுக்கு அப்பொழுதே விடைகொடுத்தேன். என்றால் விடை கொடுக்கப்பட்ட அந்தக் கன்னிகையோ ஸால்வதேசத்தரசனுடைய பட்டணத்தை நோக்கிச் சென்றாள். அவள் அப்பொழுதே முதியவர்களான பிராம்மணர்களால் காக்கப்பட்டவளும் உபமாதாவினால் பின் செல்லப்பட்டவளுமாகி அந்த மார்க்கத்தைத்தாண்டி அரசனையடைந்தாள். அவள், அந்த ஸால்வராஜனை அடைந்து, 'ஓ! புஜபலமுள்ளவரே! மகா புத்தியுடையவரே! நான் உம்மை உத்தேசித்துவந்தேன். அரசரே! எப்பொழுதும் (உம்முடைய) பிரியத்திலும் ஹிதத்திலும் பற்றுள்ளவளான என்னைக்குறித்து ஸந்தோஷிக்கக்கடவீர். ஓ! அரசரே! என்னைத் தர்மம் முதலியவைகளில் உபயோகியும். தர்மத்தை அனுஸரித்து நடவும். நீரோ என்னுடைய மனத்தினால் நினைக்கப்பட்டவர். நானும் உம்மால் ரகஸ்யத்தில் அழைக்கப்பட்டவள்' என்கிற வார்த்தையைச் சொன்னாள்.

அரசனே! அப்பொழுது, ஸால்வதேசத்தரசன், சிரிக்கிறவன் போல அவளை நோக்கிச் சொல்லலானான். 'சிறந்த மேனியுடைய

வளே! முன் வேறொருவன் விவாகஞ்செய்ய எடுத்துச்செல்லப் பட்டவளான உன்னை மனைவியாக விரும்பவில்லை. மங்களகுணமுள் ளவளே! மறுபடியும் அவ்விடத்தில் பீஷ்மருடைய ஸமீபத்தையே அடைவாய். பீஷ்மராலே பலாத்காரஞ்செய்து கவரப்பட்டவளான உன்னை நான் விரும்பவில்லை. நீயோ பீஷ்மரால் ஜயித்துக்கொண்டு போகப்பட்டவள். பெரிய யுத்தத்தில் அரசர்களை வென்று, தொட் டுக்கொண்டு போகப்பட்ட நீ, அப்பொழுது பிரீதியடைந்தவளாயிருந் தவள். சிறந்த நிறமுடையவளே! முன் வேறொருவனை விரும்பி னவளான உன்னை மனைவியாகக் கொள்ளுதலை நான் விரும்ப வில்லை. எல்லா நூற்பொருளையும் அறிந்தவனும் பிறர்களுக்குத் தர் மத்தைக் கட்டளையிடுகிறவனுமான என்னைப்போன்ற அரசன் எப்படி முன் வேறொருவனையுடையவளான ஸ்திரீயை (வீட்டில்) நுழையச் செய்யலாம்? மங்களமான குணமுடையவளே! இஷ் டப்படி செல்லலாம். உனக்கு இந்தச் சமயம் தவறவேண்டாம்' என்றான்.

அரசனே! (அப்பொழுது) காமபாணங்களால் பீடிக்கப்பட்டவ ளான அம்பையானவள் அவனை நோக்கிச் சொல்லுகிறாள். 'ஓ! அர சரே! இவ்விதம் சொல்லாதீர். இது எவ்விதத்திலும் இப்படி இல்லை. ஓ! பகைவரை வாட்டுகிறவரே! நான் விருப்பமுடையவளாகிப் பீஷ்ம ரால் கொண்டுபோகப்படவில்லை. அழுதுகொண்டிருக்கையிலேயே, அரசர்களை ஓட்டிவிட்டு, வலிந்து கொண்டுபோகப்பட்டவளாயிருக் கிறேன். ஓ! ஸால்வராஜரே! பக்தியுடையவளும் சிறுமியும் குற்ற மில்லாதவளுமான என்னை ஏற்றுக்கொள்ளும். பக்தியுள்ளவர்களைத் தள்ளுவதோ தர்மங்களில் சிலாகிக்கப்படுகிறதில்லை. அப்படிப்பட்ட நான், யுத்தங்களில் திரும்பாதவரான பீஷ்மரிடம் சொல்லிக்கொண்டு, அவராலேயே அனுமதிகொடுக்கப்பட்டேன். பிறகு, நான் வேகமாக வந்தேன். ஓ! அரசரே! தோள்வலியமைந்தவரான அந்தப் பீஷ்மர் என்னை விரும்பவில்லை. பீஷ்மருடைய முயற்சி தம்பிக்காகவென்று எனக்குக் கேள்வி. ஓ! அரசரே! பீஷ்மரோ, கொண்டுபோகப்பட் டவர்களான அம்பிகை அம்பாலிகை யென்கிற எனது சகோதரி களைத் தம்பியான விசித்திரவீர்யனுக்குக் கொடுத்தார். ஓ! ஸால்வ ராஜரே! புருஷஶ்ரேஷ்டரே! நான் உம்மைத்தவிர வேறுவரனை எவ் விதத்தாலும் அடையவில்லையென்று (உம்முடைய) தலையைத்தொடு கிறேன். ஓ! ராஜஶ்ரேஷ்டரே! ஸால்வரே! நான் முன் வேறொரு வனையுடையவளாயிருந்து உம்மை அடையவில்லை. உண்மையை

உரைக்கிறேன்; ஸத்தியத்தால்[1] என்னைத் தொடுகிறேன். ஓ! விசாலமான கண்களையுடையவரே! ராஜஶ்ரேஷ்டரே! கன்னிகையும் தானாகவே வந்தவளும் முன் வேறொருவனை அடையாதவளும் உம்முடைய அருளை விரும்புகிறவளுமான என்னை ஏற்றுக்கொள்ளக்கடவீர்' என்றாள்.

பரதஶ்ரேஷ்டனே! ஸால்வனோ, இவ்விதம் சொல்லுகிறவளான அந்தக் காசிராஜன்மகளை, ஸர்ப்பமானது ஜீர்ணமான சட்டையைத் தள்ளுவதுபோலத் தள்ளிவிட்டான். பரதஶ்ரேஷ்டா! இவ்வாறு, பலவிதமான வார்த்தைகளால் அவளால் யாசிக்கப்பட்டவனும் ஸால்வதேசாதிபதியுமான அரசன் அவளிடத்தில் நம்பிக்கைவைக்கவில்லை. பிறகு, காசிராஜனுடைய மூத்தகுமாரியான அவள், கோபாவேசங்கொண்டவளும் நீர் பெருகும் கண்களை உடையவளுமாகிக் கண்ணீரால் தடைப்பட்ட வாக்குடன் சொல்லலானாள். 'ஓ! அரசரே! உம்மால் தள்ளப்பட்டவளாகி வேண்டியபடி போகிறேன். ஸத்தியம் நிலையுள்ளதானால், அங்கே எனக்குப் பெரியோர்கள் கதியாகட்டும்' என்றாள்.

கௌரவனே! இவ்விதம்சொல்லுகிறவளும் கேட்டோர் இரங்கும்படி புலம்புகிறவளுமான அந்தக் கன்னிகையை அப்பொழுது ஸால்வபதியானவன் விடவேவிட்டான். ஸால்வன், அவளைநோக்கி, 'போ, போ' என்று அடிக்கடி சொன்னான். 'அழகான இடையையுடையவளே! பீஷ்மரிடமிருந்தும் பயப்படுகிறேன். நீயோ பீஷ்மரால் பற்றப்பட்டவள்' என்றான். தீர்க்கமான ஆலோசனையில்லாத அந்த ஸால்வனாலே இவ்விதம் சொல்லப்பட்டவளான அவள், மனத்தளர்ச்சியை அடைந்தவளும் அன்றில்போலக் கதறுகிறவளுமாகி, பட்டணத்திலிருந்து வெளிப்பட்டாள். பட்டணத்திலிருந்து வெளிக்கிளம்பும்பொழுது, துக்கத்தையடைந்தவளாகி ஆலோசித்தாள். 'பூமியில் மிக்க சங்கடத்தையடைந்தவளான எனக்கொப்பான ஒரு பெண் இராள். நான், உறவினர்களை விட்டவளாகிறேன்; ஸால்வனாலும் தள்ளப்பட்டேன். மறுபடியும், என்னால் அஸ்தினா பட்டணத்தை அடைவதற்கும் இயலாது. பீஷ்மராலும் ஸால்வனாகிற காரணத்தைக்குறித்து விடைகொடுக்கப்பட்டேன். இனி, என்னை நிந்திப்பேனா? அல்லது, நெருங்கமுடியாதவரான பீஷ்மரை நிந்திப்பேனா? அல்லது, எனக்கு ஸ்வயம்வரத்தை ஏற்படுத்தின

1 'தன் மார்பைத் தொட்டுக்கொண்டு சொல்லுதல், சத்தியம் சொல்லுவதற்கு அடையாளம்' என்பது.

மூடனான தந்தையை நிந்திப்பேனா? இது, முன் குரூரமான யுத்தம் நேரிட்ட அப்பொழுது, ஸால்வன்நிமித்தம் பீஷ்மருடைய தேரிலிருந்து கீழேகுதியாதவளான என்னால் தானாகவே செய்துகொண்ட குற்றமாகும். அறிவில்லாதவள்போல ஆபத்தை அடைந்தேனென்கிற இது அதனுடைய பயனின் முடிவு. பீஷ்மரை நிந்திக்கவேண்டும். மந்தனும் அறிவில்லாதவனும் வேசியைப்போல வீர்ய சுல்கத்தால் என்னை ஏவினவனுமான தந்தையை நிந்திக்கவேண்டும். எவர்களுடைய கெட்டநீதியின் தன்மையினால் பெரியதான ஆபத்தை அடைந்தேனோ அப்படிப்பட்ட என்னையும் ஸால்வராஜனையும் பிரம்மாவையுமே நிந்திக்கவேண்டும். மனிதன், எல்லா விதத்தாலும் தன்னுடைய பாக்கியங்களை அடைகிறான். என்னுடைய இந்த அநீதிக்கோ சந்தனுவின் புத்திரனான பீஷ்மன் காரணம். அப்படிப்பட்ட நான், இப்பொழுது, தவத்தினாலாவது யுத்தத்தினாலாவது பீஷ்மன் விஷயத்தில் பிரதி செய்யவேண்டியதைப் பார்க்கிறேன். அவன் எனது துக்கத்திற்குக் காரணனாகக் கருதப்பட்டான். யுத்தத்தால் பீஷ்மனை வெல்லுவதற்கு எந்த அரசன் துணிவையடைவான்?' என்று ஆலோசித்தாள்.

அவள், இவ்விதம் (ஆலோசித்து) நிச்சயித்து, நகரத்திற்கு வெளியில் பரிசுத்தமான ஒழுக்கத்தையுடையவர்களும் மகாத்மாக்களுமான தவசிகளுடைய ஆஸ்ரமத்தை அடைந்தாள். அவ்விடத்தில் தவசிகளால் சூழப்பட்டவளாகி அந்தராத்திரி வசித்தாள். பாரத! மிக்க கைவன்மை யுடையவனே! புன்னகையையுடைய அவள், (பீஷ்மர்) எடுத்துச் சென்றதும் விட்டதும் ஸால்வன் தள்ளினதுமாகிய தனக்கு நேர்ந்த எல்லாவற்றையும் நடந்தபடி அவர்களுக்கு முழுதும் விஸ்தாரமாகச்சொன்னாள். அப்பொழுது அவ்விடத்தில் மஹானும் கடுமையான விரதமுடையவரும் தவத்தில் சிறந்தவரும் சாஸ்திரவிஷயத்திலும் உபநிஷத்விஷயத்திலும் குருவுமான [1] சைகாவத்யரென்கிற ஒரு பிராம்மணர் இருந்தார். பெரிய தவத்தையுடைய சைகாவத்தியரென்கிற அந்த முனிவர், பீடையடைந்தவளும் பெருமூச்சு விடுகிறவளும், நன்னடையுடையவளும் துக்கத்திலும் சோகத்திலும் அழுந்தினவளும் இளையவளுமான அவளை நோக்கிச் சொல்லலானார்.

'மங்கள குணமுள்ளவளே! பெரிய பாக்கியமுள்ளவளே! இவ்விதம் ஏற்பட்டிருக்கையில், ஆஸ்ரமத்திலிருப்பவர்களும் தவத்தை

1 சிகாவான் = அக்னி; 'ஸ்ரௌதஸ்மார்த்தங்களான அக்னிகாரியங்களில் நிரதர்' என்பது பழையவுரை.

யுடையவர்களும் மகாத்மாக்களுமான தவசிகளாலே என்ன செய்ய முடியும்?' என்றார். ஓ! அரசனே! அவளோ, அவரைநோக்கி, 'என்னை அனுக்ரகிக்கவேண்டும். நான் ஸன்யாஸத்தை விரும்புகிறேன்; செய்ய அரிதான தவத்தைச் செய்வேன். முன் ஜன்மத்தில் அறியாதவளான என்னாலேயே நிச்சயமாகச்செய்யப்பட்ட பாவச்செயல்களின் பயன் இது; நிச்சயம். ஓ! தவசிகளே! ஸால்வனால் நிராகரிக்கப்பட்டவளும் ஸந்தோஷமற்றவளுமான நானோ, தடுக்கப்பட்டவளாகி, மறுபடியும், சொந்த ஜனத்தைக்குறித்துச் செல்லுவதற்கு விரும்பவில்லை. ஓ! பாவம் நீங்கினவர்களே! இவ்விடத்தில் தேவர்களுக்கு ஸமமான உங்களாலே தவத்திற்குரியதை உபதேசிக்கப்பட விரும்புகிறேன். என்னிடத்தில் உங்களுக்குக் கிருபை உண்டாக வேண்டும்' என்றாள். அவர், பிராம்மணர்களுடன் அந்தக்கன்னிகையை ஆறுதல்செய்து, உதாரணங்களாலும் வேதங்களாலும் யுக்திகளாலும் ஸமாதானம்செய்தார்; கார்யத்தைச் செய்வதாகவும் பிரதிஜ்ஞை செய்தார்.

---

நூற்றெழுபத்தாறுவது அத்யாயம்.

## அம்போபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

**(அம்பைக்கு என்னசெய்யலாமென்று அங்குள்ள தவசிகள் ஆலோசித்ததும், அம்பையின் மாதாமஹரான ஹோத்ரவாஹனர் அங்குவந்ததும், அவர் அவளைப் பரசுராமரிடம் சரண்புகும்படி தூண்டியதும்.)**

அதனால், அப்பொழுது, தர்மிஷ்டர்களான அந்தத் தவஞ்செய்வோர்களெல்லோரும், தங்கள் கர்மானுஷ்டானங்களைச் செய்துகொண்டு, அந்தக்கன்னிகையை உத்தேசித்து என்னசெய்யலாமென்று ஆலோசித்தார்கள். சில முனிவர்கள் தந்தையின்வீட்டில் சேர்ப்பிக்கவேண்டுமென்று சொன்னார்கள். சிலதவசிகளோ நம்மை நிந்திப்பதில் புத்தியைச்செலுத்தினார்கள். சிலர் ஸால்வராஜனை அடைந்து சேர்ப்பிக்கவேண்டுமென்று நினைத்தார்கள். சிலர், 'இவள் அவனால் தள்ளப்பட்டவளல்லவா? அது சரியன்று' என்று முடிவுசெய்தார்கள். கடுமையான விரதத்தையுடைய தவத்தினர்களெல்லாரும், மறுபடியும் அவளை நோக்கி, 'மங்களகுணமுள்ளவளே! இவ்விதம் நேரிட்டிருக்கையில், மனத்தையடக்கியவர்களான முனிவர்களால் என்ன

செய்யமுடியும்? இப்போது ஸன்யாஸத்துடனிருப்பது வேண்டாம். மங்களகுணமுள்ளவளே! ஹிதமான வார்த்தையைக் கேள். இங்கிருந்து தந்தையின் வீட்டுக்கே செல்லு. உனக்கு க்ஷேமமுண்டாகும். உன் தந்தையான அந்த அரசன், மேலே செய்யவேண்டிய காரியத்தை அறிவான். கல்யாணி! அவ்விடத்தில் எல்லாக்குணங்களோடும் ஸுகமாக வஸிப்பாய். சுபமானவளே! தந்தையைப் போல உனக்கு வேறு கதியானது நியாயமுள்ளதாகாது. சிறந்த நிறமுடையவளே! பெண்ணுக்கு, பதியாவது பிதாவாவது கதி. ஒழுங்காயிருப்பவளுக்குப் பதி கதி. ஸங்கடத்திலிருப்பவளுக்குப் பிதா கதி. பெண்ணே! இந்தஸன்யாஸமோ, ராஜபுத்திரியும் முக்கியமாக மென்மைத்தன்மையுடையவளும் இயற்கையாக இளமைப் பருவமுடையவளுமான உனக்கு மிக்க துக்ககரமானது. மங்களகுணமுள்ளவளே! சிறந்த நிறமுள்ளவளே! ஆஸ்ரமத்திலோ, வஸிக்கின்ற உனக்குப் பலதோஷங்கள் நேரிடும். அவைகள், தகப்பன் வீட்டில் வஸிக்கின்ற உனக்கு நேரமாட்டா' என்றார்கள். பிறகு, மற்றத்தவத்தினர்கள், துக்கிக்கத்தக்கவளான அவளை நோக்கி, 'இவ்விடத்தில் ஜனமில்லாததும் பிரவேசிக்கமுடியாததுமான வனத்தில் ஒருத்தியாயிருந்தால், உன்னைப்பார்த்து அரசர்கள் பிரார்த்திப்பார்கள். ஆகையால், இவ்விதம் மனத்தைச் செலுத்தாதே' என்றனர். அப்பொழுது, அம்பையானவள், 'காசிநகரத்தில் தந்தையின் வீட்டுக்கு மறுபடியும் போவதற்கு முடியாது; போனால், உறவினர்களால் அவமதிக்கப்பட்டவளாவேன்; ஸந்தேகமில்லை. ஓ! முனிவர்களே! சிறுபிராயத்தில் பிதாவின்வீட்டில் அந்தப்படி வஸித்தேன். உங்களுக்கு க்ஷேமமுண்டாகுக. என் பிதாஇருக்கிற இடத்துக்கு நான் போகமாட்டேன். அடுத்த பிறப்பிலும் எனக்கு இவ்விதம் பெரிய கெடுதலாகிற கெட்டபாக்கியமானது ஏற்படாமலிருத்தற்காகத் தவசிகளால் காக்கப்பட்டவளாகித் தவத்தைச் செய்யவிரும்புகிறேன். ஓ! தவஞ்செய்பவர்களில் சிறந்தவர்களே! ஆகையால், நான் தவத்தைச் செய்வேன்' என்றாள்.

இவ்விதம், அந்தவேதியர்கள் உள்ளபடி சிந்திக்கிறவர்களாயிருக்கும்பொழுது, ராஜரிஷியும் தவஸியுமான ஹோத்திரவாஹனரென்பவர் அந்த வனம் வந்தார். அவர், அவ்விதம் ஆகப்போகிறவளான அவளைப் பார்த்து (ப்பொதுவாக)க் கேட்டு, மனவருத்தமுற்றார். பிறகு, அந்தத்தவஸிகளெல்லாரும், அந்த அரசரைக் குசலப்பிரஸ்னம் முதலிய பூஜைகளாலும் ஆஸனத்தினாலும் ஜலத்தினாலும் பூஜித்தார்

கள். அவர் உட்கார்ந்து இளைப்பாறிக் (கதைகளைக்) கேட்டுக்கொண்டிருக்கையில், மறுபடியுமே, முனிவர்கள் கன்னிகையைப்பற்றிக் கதையைச் சொன்னார்கள். பாரத! மிக்க பராக்கிரமத்தையுடைய அந்த ராஜரிஷியானவர், அம்பையையும் காசிராஜனையும்பற்றிய அந்தக்கதையைக்கேட்டு, மனம்வருந்தினவரானார். மிக்க தவத்தையுடையவரும் ராஜரிஷியும் மஹாத்மாவுமான அந்த ஹோத்திரவாஹனர், அவள் அவ்விதம் சொல்வதைக்கேட்டும் அவளைப்பார்த்தும் தயைமிக்கவரானார். பிரபுவே! அவளுடைய மாதாவுக்குப் பிதாவான அவர், அப்பொழுது, நடுக்கத்துடன் எழுந்திருந்து அந்தக் கன்னிகையை மடியிலேற்றி வைத்து ஆறுதல்செய்தார். அவர், துன்பமுண்டானதைத் தொடக்க முதல் அவளிடம் கேட்டார். அவளும் நடந்தபடி விஸ்தாரமாக அவரிடம் தெரிவித்தாள். பிறகு, அந்த ராஜரிஷியானவர் துக்கத்தோடும் சோகத்தோடும் கூடினவரானார். மிகப்பெரியதவத்தையுடைய அவர் அந்தக் கார்யத்தையும் அங்கீகரித்தார்; நடுக்கமுடையவரும் மிக்க துக்கத்தையடைந்தவருமாகித் துக்கத்தை அடைந்த அவளை நோக்கிச் சொல்லலானார். 'மங்களகுணமுள்ளவளே! நீ பிதாவின் வீட்டுக்குப் போகவேண்டாம். நான் உன்னுடைய தாயின் தந்தை; பெண்ணே! நான் உன்னுடைய துயரத்தைப் போக்குவேன். என்னிடத்திலிரு. குழந்தாய்! நீ இவ்விதம் வாட்டமடைந்திருத்தலால், உன்மனத்திலுள்ள துக்கம் அதிகமாக இருக்கவேண்டும். என் வார்த்தையைக்கொண்டு, ஜமதக்னியின் புத்திரரும் சிறந்த தவமுடையவருமான ராமரிடம் செல்லு. அவர் உன்னுடைய மிகப் பெரிய துக்கத்தையும் சோகத்தையும் போக்குவார். அவர் சொன்னபடி செய்யாத விஷயத்தில், யுத்தம்செய்து பீஷ்மரைக் கொல்லுவார். பிருகுவம்சத்தோர்களிற் சிறந்தவரும் காலாக்னிக்குச் சமமான தேஜஸையுடையவருமான அவரிடம் செல்லு. பெரிய தவத்தையுடைய அவர் உன்னை நேரானவழியில் நிலைநிறுத்துவார்' என்று சொன்னார்.

அப்பொழுது, அவள் அடிக்கடி கண்ணீர் சொரிந்து, ஹோத்திரவாகனரென்கிற பிதாமஹரைச் சிரத்தால் வணங்கி இனியகுரலுடன் சொல்லலானாள். 'நான் உம்முடைய கட்டளையினால் போகின்றேன். பூஜ்யரும் உலகத்தில் பிரஸித்தருமான பார்க்கவரை நான் இப்பொழுது பார்ப்பேனானால், அவர் கடுமையான என்னுடைய துக்கத்தை எப்படி நாசம் செய்வார்? நான் அவரிடம் போவதற்கு இதை அறிய விரும்புகிறேன்' என்றாள். ஹோத்திரவாகனர், 'கல்யாணகுணமுள்ளவளே! பெரியவனத்தில் உக்கிரமான தவத்திலிருப்பவரும் ஸத்திய

ஸந்தரும் மிக்க பலசாலியும் ஜமதக்னியின் புத்திரருமான ராமரைப் பார்ப்பாய். அவர், மலைகளில் சிறந்ததான மஹேந்திர பர்வதத்தில் நித்யமாக வஸிக்கிறார். அப்படியே, வேதவித்துக்களான ரிஷிகளும் கந்தர்வர்களும் அப்ஸரஸுகளும் அங்கு வஸிக்கின்றனர். அவ்விடம் செல்லு. உனக்கு மங்களம் உண்டாகுக. தவத்தால் சிறந்தவரும் பலமான விரதத்தையுடையவருமான அவரைத் தலையால் வணங்கி, அவரிடம் என்வார்த்தையைச் சொல்லு. கல்யாண குணமுடைய வளே! பிறகு, உனக்கு இஷ்டமான காரியத்தையும் அவரிடம் சொல்லு. என்பேரைச் சொன்னவுடனே, ராமர் உன்னுடைய அந்தக் கார்யம் எல்லாவற்றையும் செய்வார். குழந்தாய்! ஜமதக்னி யின் புத்திரரும் வீரரும் ஆயுதமெடுத்தவர்களெல்லாரிலும் சிறந்த வருமான ராமர், எனக்குத் தோழரும் பிரீதியுள்ள நண்பருமாயிருப்ப வர்' என்று சொன்னார்.

ஹோத்ரவாகனரென்கிற அரசர், கன்னிகையைநோக்கி இவ் விதம் சொல்லிக்கொண்டிருக்கும்பொழுது, ராமருடன் சஞ்சரிப்பவ ரும் நண்பருமான அகிருதவ்ரணர் வந்தார். உடனே, ஆயிரக்கணக்கான அந்த எல்லா முனிவர்களும் பிராயமுதிர்ந்தவரும் ஸ்ருஞ்சயவம்சத் தில் பிறந்தவருமான ஹோத்திரவாகனரென்கிற அந்த அரசரும் எழுந்திருந்தார்கள். பிறகு, அந்த முனிவர்கள் அவரைக்கண்டு ஆதித்தியத்தைச் செய்து ஒருவரோடொருவர் சேர்ந்தவர்களாகி அவரைச் சூழ்ந்திருந்தார்கள். ராஜஸ்ரேஷ்டனே! பிறகு, அவர்கள், 1 அன்பு மகிழ்ச்சி சந்தோஷங்களுடன், மனத்தை மகிழ்விப்பவை களும் சிறந்தவைகளும் தேவஸம்பந்தம் பெற்றவைகளுமான பல வகையான கதைகளைச் சொன்னார்கள். பிறகு, கதைகளின் முடிவில், மகாத்மாவும் ராஜரிஷியுமான ஹோத்திரவாகனர், மகரிஷிகளில் சிறந்தவரான ராமரைக் குறித்து, அக்ருதவ்ரணரை நோக்கி, 'ஓ! மகா பாஹுவே! வேதவித்துக்களில் சிறந்தவரே! அக்ருதவ்ரணரே! பிரதாபசாலியான பரசுராமர் இப்பொழுது எங்கே இருக்கிறார்? பார்க்க முடியுமா?' என்று கேட்டார். அகிருதவ்ரணர், 'ஓ! பிரபுவே! அரசரே! ராமர், 'ஸ்ருஞ்சய வம்சத்தில் பிறந்த ராஜரிஷியானவர் எனக்கு இனிய நண்பர்' என்று எப்பொழுதும் உம்மைப்பற்றியே சொல்லிக்கொண்டிருக்கிறார். அவர் நாளைக்காலையில் இவ்விடம் வருவாரென்று நினைக்கிறேன். உம்மைப் பார்க்கவேண்டுமென்கிற விருப்பத்தால் இங்கே வருகின்ற அவரைப் பார்ப்பீர். ஓ! ராஜ

1 'ப்ரீதி ஹர்ஷ முதா' என்பது மூலம்.

ரிஷியே! 'இந்தக் கன்னிகையானவள் எதற்காக வனம் வந்தாள்? இவள் யாரைச்சேர்ந்தவள்? உமக்கு என்ன ஆகிறாள்?' என்று அறிய விரும்புகிறேன்' என்றார்.

ஹோத்திரவாகனர், 'ஓ! விபுவே! குற்றமற்றவரே! இவள் என்னுடைய [1] தௌஹித்ரி. காசிராஜனுடைய பிரியமான மூத்த குமாரி. சகோதரிகளிருவர்களோடும் ஸ்வயம்வரத்திலிருந்தாள். ஓ! தவத்தையே தனமாக உடையவரே! காசிராஜனுடைய மூத்த புத்திரியான இவள் அம்பையென்று பிரசித்திபெற்றவள். அம்பிகை அம்பாலிகை யென்கிற கன்னிகைகள் இவளுக்குத் தங்கைகள். ஓ! பிரம்மரிஷியே! பிறகு, கன்னிகைகளினிமித்தம் காசிப்பட்டணத்தில் உலகிலுள்ள க்ஷத்திரிய ஜாதியானது கூடிற்று. அவ்விடத்தில் பெரிய விழா நடந்தது. பிறகு, பெரிய வீர்யத்தையுடையவனும் சந்தனுவின் புத்திரனும் மிக்க பராக்கிரமத்தையுடையவனுமான பீஷ்மன் அரசர்களை அலக்ஷ்யம்செய்து அந்த மூன்று கன்னிகைகளையும் கைப்பற்றினான். மிகவும் சுத்தமான மனமுடையவனும் பரதவம்சத்தில் பிறந்தவனுமான பீஷ்மன், அரசர்களை ஜயித்த பிறகு, கன்னிகைகளுடன் ஹஸ்தினபட்டணம் வந்தான். பிரபுவான அவன், பிறகு, ஸத்தியவதியினிடம் தெரிவித்து, உடனே, பிராதாவான விசித்திரவீர்யனுக்கு விவாஹத்தை நடத்தக் கட்டளையிட்டான். ஓ! பிராம்மணஸ்ரேஷ்டரே! இந்தக் கன்னிகை, அந்த விவாஹ கார்யம் தொடங்கப்பட்டதைப் பார்த்தவுடன், அங்கே மந்திரிகளின் மத்தியில் கங்காபுத்திரனை பீஷ்மனை நோக்கி, 'ஓ! தர்மமுணர்ந்தவரே! நான் மனத்தினாலே வீரரான ஸால்வராஜரைப் பதியாக வரித்துவிட்டேன். வேறு புருஷனிடம் மனத்தையுடையவளான என்னை உமது பிராதாவுக்குக் கொடுப்பது தகுதியன்று' என்று சொன்னாள். பீஷ்மன், அந்த வார்த்தையைக் கேட்டு, மந்திரிகளுடன் ஆலோசித்து உறுதிசெய்து, ஸத்தியவதியின் கொள்கைப்படி இவளை விட்டுவிட்டான். இந்தக் கன்னிகையோ, பீஷ்மனால் அனுமதி கொடுக்கப்பட்ட பிறகு, ஸௌபர்களுக்குப் பதியான ஸால்வனை அடைந்து, ஸந்தோஷத்தை அடைந்தவளாகி, அந்தச் சமயத்தில் அவனிடம் ஒரு வார்த்தை சொல்லலானாள். 'ஓ! ராஜஸ்ரேஷ்டரே! பீஷ்மரால் விடப்பட்டேன். என்னைத் தர்மத்தில் அமைப்பீராக. நீர் என்னால் முந்தி மனத்தால் வரிக்கப்பட்டீர்' என்றாள். ஸால்வனானவன் இவளுடைய நடையில் ஸந்தேகித்தவனாகி

[1] பெண்ணினுடைய பெண்.

ங்ராகரித்துவிட்டான. அப்படிப்பட்ட இவள், தபோவனத்தை அடைந்து தவத்துக்குரிய ஆஸ்ரமத்தில் மிக்க பற்றுள்ளவளானாள். தன் வம்சத்தைச் சொன்னதினால், என்னால் அறியவும் பட்டாள். இப்பொழுது, பீஷ்மனையே இந்தத் துக்கத்திற்குக் காரணமாக நினைக்கிறாள்' என்றார்.

அப்பொழுது, அம்பை, 'ஓ! பகவானே! இப்பொழுது என்னுடைய தாய்க்குத்தந்தையும் ஸ்ருஞ்சயருமான ஹோத்திரவாகன பூபாலர் சொல்லியது உண்மையே. ஓ! தபோதனரே! மகா முனிவரே! அவமானத்திலுண்டான பயத்தினாலும் லஜ்ஜையினாலும் என் நகரத்திற்குத் திரும்பிப்போக ஊக்கமுண்டாகவில்லை. ஓ! பகவானே! பிராம்மணஸ்ரேஷ்டரே! பகவானான ராமர் என்னை நோக்கி எது சொல்லுவாரோ அது எனக்குச் செய்யவேண்டிய சிறந்த கார்யமென்பது என்னுடைய எண்ணம்' என்றாள்.

## நூற்றெழுபத்தேழாவது அத்யாயம்.

## அம்போபாக்யான பர்வம். (தொடர்ச்சி.)

(அக்ருதவ்ரணர் ஆலோசித்துப் பீஷ்மருக்குப் பிரதிசெய்ய நிச்சயித்ததும், அம்பை பீஷ்மரைக் கொல்லும்படி பரசுராமரிடம் வேண்டினதும்.)

அப்பொழுது, அகிருதவ்ரணர் சொல்லலானார்: 'கல்யாண குணமுள்ளவளே! பெண்ணே! இருவர்கள் நிமித்தமாக இந்தத் துக்கம் நேரிட்டது. யாருக்குப் பிரதிசெய்ய விரும்புகிறாய்? குழந்தாய்! என்னிடம் உண்மையைச் சொல்லு. மங்களகுணமுள்ளவளே! ஸௌபபதியானவன் சேர்த்துவைக்கத் தக்கவனென்று உனக்கு அபிப்பிராயமிருந்தால் மகாத்மாவான அந்த ராமர் உன் நன்மையை விரும்பிச் சேர்த்துவைப்பார். சுத்தமான புன்சிரிப்பையுடையவளே! அல்லது, கங்காபுத்திரரான பீஷ்மர் புத்திமானான ராமரால் யுத்தத்தில் ஜயிக்கப்படுவதைப் பார்ப்பதற்கு விரும்புகிறாயானால், பார்க்கவர், ஸ்ருஞ்சயனும் நீயுமாகிய உங்களுடைய வார்த்தையைக் கேட்டு, அதையும் செய்வார். இந்த விஷயத்தில், உனக்கு அவஸ்யம் செய்யவேண்டியதை இப்பொழுதே ஆலோசிக்கலாம்' என்றார்.

அம்பையானவள், 'ஓ! பகவானே! பிராம்மணரே! பீஷ்மர் அறியாமல் என்னைக் கொண்டுபோனார். ஸால்வனை அடைந்த என் மனத்தைப் பீஷ்மர் அறியார். நீர் இதை ஆலோசித்து இதன் உறுதியைத் தேடும். எப்படி நியாயமோ அப்படி பரிகாரத்தைச் செய்வீராக. ஓ! பிராம்மணரே! கௌரவர்களில் சிறந்தவரான பீஷ்மரிடத்திலோ, அல்லது ஸால்வராஜனிடத்திலோ, அல்லது இரண்டு பேர்களிடத்திலுமோ, எது உசிதமோ அதைச் செய்யும். ஓ! பகவானே! துக்கத்திற்குக் காரணமான இது என்னால் உள்ளபடி தெரிவிக்கப் பட்டது. அந்தவிஷயத்தில் யுக்தியினால் ஏற்பாடு செய்யக் கடவீர்' என்றாள்.

அகிருதவ்ரணர், 'கல்யாணி! சிறந்த நிறமுடையவளே! தர்மத்தைப்பற்றி இவ்விதம் நீ சொன்ன இந்த வார்த்தை பொருத்தமானதே. என்னுடைய இந்தச் சொல்லையும் கேள். பயந்தவளே! கங்கா புத்திரனானவன் உன்னை ஹஸ்தினாபட்டணம் கொண்டு போகாமலிருந்தால், ஸால்வனானவன், ராமரால் ஏவப்பட்டால், உன்னைத் தலையால் ஏற்றுக்கொள்வான். கல்யாணி! பெண்ணே! அழகான இடையுடையவளே! பீஷ்மனால் நீ ஜயித்துக்கொண்டு போகப்பட்டபடியால், உன்னிடத்தில் ஸால்வராஜனுக்கு ஸந்தேகமுண்டாயிற்று. பீஷ்மன் ஆண்மை மிக்கவனென்கிற கர்வமுள்ளவனும் அப்படியே வெற்றியால் விளங்குபவனுமானவன். ஆகையால், உனக்குப் பீஷ்மன் விஷயத்தில் பிரதி செய்விப்பது தக்கது' என்றார். அம்பையானவள், 'ஓ! பிராம்மணரே! என்னுடைய மனத்திலும் 'யுத்தத்தில் பீஷ்மனைக் கொல்விப்பேனா?' என்கிற இந்த விருப்பமே எந்நாளும் எப்பொழுதும் சுழன்றுவருகின்றது. ஓ! சிறந்த கைகளையுடையவரே! பீஷ்மனையோ ஸால்வராஜனையோ எவனைக் குற்றமுள்ளவனாக அறிகிறீரோ, எவன் நிமித்தமாக நான் மிக்க துக்கத்தை அடைந்தேனோ அவனைச் சிக்ஷிக்கக் கடவீர்' என்றாள்.

ஓ! பரதச்ரேஷ்டனே! இவ்விதம் அவர்கள் சொல்லிக்கொண்டிருக்கும் பொழுதே, அந்தப்பகலும் ஸூக்ஷ்மசீதமாயும் ஸூக்ஷ்ம உஷ்ணமாயுமிருக்கிற காற்றையுடைய ராத்திரியும் சென்றன. அரசனே! பிறகு, ஜடையையும் மரவுரியையும் தரிப்பவரும் முனிவருமான ராமர் தேஜஸினால் ஜ்வலித்துக்கொண்டு சிஷ்யர்களால் சூழப்பட்டவராகத் தோன்றினார். ஓ! ராஜச்ரேஷ்டனே! கையில் வில்லையுடையவரும் உதாரமான மனத்தையுடையவரும் கத்தியைத்தரிப்பவரும் கோடாலியை யுடையவரும் பாவமற்றவருமான அவர் ஸ்ருஞ்சயனென அரசனை அடைந்தார். அரசனே! பிறகு, தாபஸர்களும் பெரியதவத்

தையுடைய அந்த அரசனும் துக்கிக்கத்தக்கவளான அந்தக் கன்னிகையும் அவரைப் பார்த்து அஞ்சலிசெய்துகொண்டு நின்றார்கள். ஜாக்கிரதையுடன், பார்க்கவரான அவரை மதுபர்க்கத்தால் பூஜித்தார்கள். அவர், நியாயப்படி பூஜிக்கப்பட்டவராகி, அவர்களுடன் உட்கார்ந்தார். பாரத! பிறகு, பரசுராமரும் ஸ்ருஞ்சயருமான அந்த இருவருமே முன் நடந்தவைகளைச் சொல்லிக்கொண்டிருந்தார்கள். அவ்விதமான கதையின்முடிவில், ராஜரிஷியானவர், மகாபலசாலியும் பார்க்கவர்களிற் சிறந்தவருமான ராமரைநோக்கி, ஸமயம்பார்த்து, இனியதும் பயனுள்ளதுமான சொல்லை உரைக்கலானார். 'ஓ! பிரபுவே! ராமரே! இவள் என்னுடைய பெண்ணின் பெண்; காசிராஜனுடைய புத்திரி. கார்யங்களில் சமர்த்தரே! இவளுடைய கார்யத்தை உண்மையாய்க் கேளும்' என்றார். ராமரும், அவளை நோக்கி, 'செவ்வையாகச் சொல்லலாம்' என்று சொன்னார்.

பிறகு, அவள், அக்னிபோல ஜ்வலிக்கின்ற ராமரை நோக்கிச் சொல்லத்தொடங்கினாள். பிறகு, சோகத்தை யுடையவளான அவள், சுபத்தைச்செய்கின்ற ராமருடைய சரணங்களைத் தலையால் வணங்கித் தாமரையிதழ்களுக்கு நிகரான காந்தியையுடைய கைகளால் தொட்டு முன்னேயிருந்துகொண்டு, நீர் நிறைந்த கண்களையுடையவளாகி அழுதாள்; சரணமடையத்தக்கவரான பரசுராமரைச் சரணமாகவுமே அடைந்தாள். அப்பொழுது, ராமர், 'ராஜபுத்திரியே! நீ இந்த ஸ்ருஞ்சயருக்கு எவ்விதமோ எனக்கும் அவ்விதமே. உன்னுடைய மனத்திலுள்ள துக்கத்தைச் சொல்லு. நீ சொல்வதைச் செய்வேன்' என்றார். அம்பை, 'ஓ! பகவானே! நான் இப்பொழுது பெரிய விரதத்தை யுடையவரான உம்மைச் சரணமடைந்தவளாயிருக்கிறேன். ஓ! விபுவே! சோகமாகிற கோரமான சேற்றுக் கடலில் முழுகினவளான என்னை அதிலிருந்தும் கரையேற்றும்' என்றாள். ராமரானவர், அவளுடைய ரூபத்தையும் புதிதான சரீரத்தையும் சிறந்ததான மென்மைத்தன்மையையும் பார்த்துச் சிந்தையுற்றவரானார். 'இவள் என்ன சொல்லப் போகிறாளோ?' என்று இவ்விதம் ஆலோசித்தார். மிக்க இரக்கமுடையவராகி வெகு காலம் இவ்விதம் த்யானம் செய்தார். சுத்தமான புன் சிரிப்பையுடையவளான அவள், ராமராலே, 'சொல்லலாம்' என்று அடிக்கடி சொல்லப்பட்டவளாகி அவரிடத்தில் எல்லாவற்றையுமே உள்ளபடி சொன்னாள். பரசுராமரோ, ராஜபுத்திரியினுடைய அந்தவார்த்தையைக்கேட்டு, அப்பொழுது, அர்த்தத்தின் நிச்சயத்தைச்செய்து,

சிறந்த தொடைகளையுடையவளான அவளைநோக்கிச் சொல்லலானர். 'பெண்ணே! கௌரவர்களில் சிறந்தவனான பீஷ்மனிடம் [1] (உன்னை) அனுப்புகிறேன். அந்த அரசனும் என்வார்த்தையைக்கேட்டு (அப்படியே) செய்வான். மங்களமானவளே! கங்காபுத்திரனானவன் என்னால் சொல்லப்பட்டவார்த்தையைச் செய்யாவிட்டால், நான் அவனை யுத்தத்தில் மந்திரிகளுடன் அம்புத்தீயினால் எரிப்பேன். ராஜபுத்திரி! அல்லது, அவனிடத்தில் உன்னுடைய புத்தியானது செல்லாவிடில், இந்தக்கார்யத்தில் வீரனான ஸால்வபதியினிடம் சேர்ப்பிப்பேன்' என்றார்.

அம்பை, 'ஓ! பார்க்கவரே! 'முன்பு ஸால்வராஜனை விரும்பினேன்' என்கிற என்னுடைய எண்ணத்தைக் கேட்டவுடனே, நான் பீஷ்மனால் விடப்பட்டேன். பிறகு, நான் ஸால்வ ராஜனையடைந்து சொல்லக்கூடாததான வார்த்தையை லஜ்ஜையைவிட்டுச் சொன்னேன். அவனும் நடக்கையில் சங்கையுள்ளவனாகி என்னை ஏற்றுக்கொள்ளவில்லை. ஓ! ப்ருகுநந்தனரே! இவற்றையெல்லாம் உமதுபுத்தியினால் ஆலோசித்து, இந்தவிஷயத்தில் உசிதமானகாரியத்தை நிச்சயிக்கக் கடவீர். ஓ! பெரியவிரதத்தையுடையவரே! என்னுடைய இந்த வ்யஸனத்திற்கோ, அப்பொழுது என்னைப் பலாத்காரமாகத்தூக்கித் தன்வசமாகச்செய்த பீஷ்மன் மூலம். ஓ! சிறந்த கைகளையுடையவரே! பார்க்கவஶ்ரேஷ்டரே! எவன் நிமித்தமாக நான் இப்படிப்பட்ட துக்கத்தையடைந்தவளாகி மேலானஅப்பிரியத்தை அனுஷ்டிக்கிறேனோ அந்தப் பீஷ்மனைக்கொல்லும். ஓ! பார்க்கவரே! அவனோ லோபமுள்ளவனும் இழிவானவனும் இந்திரியங்களை ஜயித்தவனுமானவன். ஓ! குற்றமில்லாதவரே! ஆகையால், நீர் அவன் பொருட்டுப் பிரதிச்செய்கை செய்வது உசிதம். ஓ! விபுவே! அப்பொழுது, பாரதனால் அபகரிக்கப்பட்டவளான என்னுடையமனத்தில், 'மஹாவ்ரதனான பீஷ்மனைக் கொல்லும்படிசெய்வேன்' என்கிற இந்தஸங்கல்பமானது உண்டாயிற்று. ஓ! ராமரே! குற்றமற்றவரே! ஆகையால், இப்பொழுது என்னுடைய இந்த இஷ்டத்தைநிறைவேற்றும். ஓ! நீண்டகைகளையுடையவரே! இந்திரன் விருத்திராஸுரனைக் கொன்றதுபோலப் பீஷ்மனைக் கொல்லும்' என்றாள்.

---

1 'பீஷ்மனுக்குச் சொல்லியனுப்புகிறேன்' என்றும் கொள்ளலாம்.

## நூற்றெழுபத்தெட்டாவது அத்யாயம்.

# அம்போபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(பரசுராமர் அம்பைமுதலியவர்களுடன் குருக்ஷேத்ரம் சென்றதும், அம்பையை விவாகம் செய்துகொள்ளும்படி பரசுராமர் பீஷ்மருக்குச் சொல்லியதும், பீஷ்மர் அதனை மறுத்ததும், பரசுராமர் பீஷ்மரைப் போருக்கு அழைத்ததும்.)

பிரபுவே! அப்பொழுது, இவ்விதம், 'பீஷ்மனைக் கொல்லும்' என்று சொல்லியதைக்கேட்ட ராமர், அடிக்கடி ஏவுகிறவளும் அழுகிறவளுமான கன்னிகையை நோக்கிச் சொல்லலானார். 'காசிராஜன் பெண்ணே! சிறந்த நிறமுடையவளே! நான் பிரம்மவித்துக்களின் காரணத்திலல்லாமல் இஷ்டப்படி ஆயுதத்தை எடுக்கிறதில்லை. உனக்கு வேறு எதைச் செய்யவேண்டும்? ராஜஸ்திரீயே! என் வார்த்தையினால் பீஷ்மனும் ஸால்வனும் வசப்பட்டவர்களாவார்கள். குற்றமற்ற அங்கங்களையுடையவளே! அதைச் செய்வேன். துயரப்படாதே. பெண்ணே! 'வேதியர்களுடைய ஆஜ்ஞையின்றி எவ்விதத்தாலுமே ஆயுதத்தை எடேன்' என்னும் இந்தப்பிரதிஜ்ஞையானது என்னால் செய்யப்பட்டது' என்றார். (அப்பொழுது,) அம்பையானவள், 'எந்த உபாயத்தாலாவது பகவானான நீர் என்னுடைய துயரத்தைப் போக்கவேண்டும். அதுவோ, எனக்குப் பீஷ்மனால் உண்டு பண்ணப்பட்டது. ஓ! ஸமர்த்தரே! அவனைக்கொல்லும்; தாமதம் வேண்டாம்' என்றாள். ராமரானவர், 'காசிராஜன்கன்னிகையே! மறுபடியும் சொல்லு. பீஷ்மன் (உன்னால்) தலையால் வணங்கப்படத்தக்கவனாயிருந்தாலும், என்வார்த்தையினால் உன்னுடைய இரண்டுபாதங்களையும் தலையினால் ஏற்றுக்கொள்வான்' என்றார். அம்பை, 'ஓ! ராமரே! எனது இஷ்டத்தைச் செய்ய விரும்புகிறீரானால், யுத்தத்தில் பீஷ்மனைக் கொல்லும். செய்தபிரதிஜ்ஞையையும் ஸத்தியமாகச் செய்யக்கடவீர்' என்றாள்.

ஓ! அரசனே! அந்தராமரும் அம்பையும் இவ்விதம் ஸம்வாதம் செய்யும் அப்பொழுது, அகிருதவ்ரணர், பரசுராமரைநோக்கி, இந்த வார்த்தையை உரைக்கலானார். 'ஓ! மகாபாஹுவே! சரணமடைந்தவளான கன்னிகையைத் தள்ளுவது உமக்குத் தக்கதன்று. ஓ! பிருகுநந்தனரே! ராமரே! பீஷ்மனானவன் போர்நிமித்தம் உம்மால் அழைக்

கப்பட்டு, 'யுத்தத்தில் உம்மால் ஜயிக்கப்பட்டேன்' என்று சொல்வானேயானாலும், அல்லது, உமது சொல்லைச் செய்வானேயானாலும், இந்தக் கன்னிகையின் கார்யம் செய்யப்பட்டதாகிவிடும். ஓ! வீரரே! விபுவே! உம்முடைய சொல்லும் சத்தியமாகச் செய்யப்பட்டதாகிவிடும். ஓ! ராமரே! மகா முனிவரே! பார்க்கவரே! அப்பொழுது, எல்லா க்ஷத்திரியர்களையும் வென்று பிராம்மணர்களின் மத்தியில், 'பிராம்மணனோ, க்ஷத்திரியனோ, வைச்யனோ, சூத்ரனோ, பிராம்மணனைப் பகைப்பவனாயிருந்தால் யுத்தத்தில் அவனைக் கொல்லுவேன்' என்றும் 'பயத்தை அடைந்து பாதுகாப்பைவிரும்பி ரக்ஷணத்துக்காகச் சரணமடைந்தவர்களை நான் உயிருடனிருக்கையில் எவ்விதத்தாலும் கைவிடமாட்டேன்' என்றும், 'யுத்தத்தில் சேர்ந்ததான க்ஷத்திரியஜாதிமுழுமையையும் வெல்லக்கூடிய விளங்குகின்ற தைர்யமுடையவனையும் நான் கொல்வேன்' என்றும், இந்தப் பிரதிஜ்ஞைகளும் உம்மால் செய்யப்பட்டுள்ளன. ஓ! ராமரே! குருகுலத்தைத் தாங்குகின்ற அந்தப் பீஷ்மன் இவ்விதம் வெற்றியுள்ளவனாயிருக்கிறான். ஓ! பிருகுநந்தனரே! யுத்தத்தில் அவனுடன் எதிர்த்துப் போர்செய்யும்' என்றார்.

பரசுராமர், 'ஓ! ரிஷிச்ரேஷ்டரே! நான் முன்செய்த பிரதிஜ்ஞையை நினைக்கிறேன். ஸமாதானத்தினாலேயே அடையப்படும்படி செய்வேன். காசிராஜன்கன்னிகையின் மனத்தையடைந்த இந்தக் கார்யமானது பெரிதாயிருக்கிறது. நான் நேரிலேயே கன்னிகையை அழைத்துக்கொண்டு பீஷ்மனிருக்கிற இடத்திற்குப் போவேன். 'யுத்தத்தைக் கொண்டாடுகின்ற அவன் நான் சொன்னதைச் செய்யாவிட்டால் கர்வங்கொண்டவனான அவனைக் கொல்லுவேன்' என்று என்னுடைய புத்தியானது நிச்சயிக்கப்பட்டது. இவ்வுலகில் என்னால் விடப்பட்ட பாணங்கள் தேஹிகளுடைய சரீரங்களில் தடைப்பட்டு நிற்கிறதில்லை என்பது முன் க்ஷத்திரியர்களுடன் நடந்த யுத்தத்தில் உம்மால் அறியப்பட்டது' என்று சொன்னார். இவ்விதம் சொல்லிவிட்டு, பிறகு, பெரிய தவத்தையுடைய ராமர், அந்தப் பிரம்மவாதிகளுடன் பிரயாணத்தை நினைத்து, எழுந்திருந்தார். பிறகு, அந்தத்தவசிகளோ, அந்த இரவு அவ்விடத்தில் வஸித்து அக்கினியில் ஹோமம்செய்து மந்திரங்களை ஜபித்துவிட்டு, என்னைக் கொல்லும்விருப்பத்துடன் புறப்பட்டார்கள். மகாராஜனே! பாரத! பிறகு, ராமர் அந்தப் பிரம்மவாதிகளோடும் கன்னிகையோடும் குருக்ஷேத்திரத்தை அடைந்தார். பிறகு, மஹாத்மாக்களும்

பார்க்கவஸ்ரேஷ்டரை முன்னிட்டவர்களுமான அந்தத்தவசிகளெல்லாரும் ஸரஸ்வதீநதியை அடுத்து அமர்ந்தார்கள்.

அரசனே! பெரிய விரதமுள்ளவரான பரசுராமர், பிறகு, மூன்றாவது தினத்தில் ஸமமான இடத்தில் இருந்துகொண்டு, 'நான் வந்திருக்கிறேன்' என்று எனக்குச் சொல்லியனுப்பினர். ராஜஸ்ரேஷ்டனே! மிக்க பலமுடையவரும் தேஜஸுக்கு நிதியும் பிரபுவுமான அவர் தேசத்தின் எல்லையில் வந்திருப்பதைக் கேட்டு, நான், கோவை முன்னிட்டுக்கொண்டு, பிராம்மணர்களாலும் தேவர்களுக்கு நிகரான ரித்விக்குக்களாலும், புரோகிதர்களாலும் சூழப்பட்டவனாகி, அன்புடன் சீக்கிரம் வேகமாகச் சென்றேன். பிரதாபசாலியான அந்தப் பரசுராமர் அவருக்கு எதிரில் வந்தவனான என்னைப் பார்த்து அந்தப் பூஜையை ஏற்றுக்கொண்டார்; இந்த வார்த்தையையும் சொல்லலானார். 'பீஷ்ம! அப்பொழுது, ஸ்திரீயினிடம் விருப்பமில்லாதவனான நீ காசிராஜபுத்திரியை என்ன எண்ணத்தினால் எடுத்துச் சென்றாய்? மறுபடியும், என்ன எண்ணத்தினால் விட்டுவிட்டாய்? புகழுள்ளவளான இவள் உன்னாலன்றோ தர்மத்திலிருந்தும் நழுவும்படி செய்யப்பட்டாள்? இந்த உலகத்தில் உன்னால் தொடப்பட்ட இவளையோ எவன்தான் அடையத்தக்கவன்? பாரத! உன்னால் கொண்டுபோகப்பட்டாளென்று ஸால்வனாலே நிராகரிக்கப்பட்டாள். பாரத! ஆகையால், இவளை என் ஆணையினால் ஏற்றுக்கொள்ளக் கடவாய். புருஷஸ்ரேஷ்டனே! இந்த ராஜபுத்திரியானவள் ஸ்வதர்மத்தை அடையட்டும். குற்றமில்லாதவனே! நீ அரசர்களுக்கு இந்த அவமானத்தைச் செய்வது உசிதமில்லை' என்றார். பிறகு, நான், அதனால் மனவருத்தமடைந்து அவரைப் பார்த்து, 'ஓ! பார்க்கவரே! பிராம்மணரே! நான் இவளை எவ்விதத்தாலும் மறுபடியும் பிராதாவுக்குக் கொடுக்கமாட்டேன். முன், இவள், 'நான் ஸால்வனுடையவள்' என்று என்னிடமே சொன்னாள். என்னாலேயே அனுமதி கொடுக்கப்பட்டு இவள் அவனுடைய நகரத்திற்குப் போகவும் செய்தாள். நான், பயத்தினாலும் தயையினாலும் பொருளாசையினாலும் காமத்தினாலும் க்ஷத்திரிய தர்மத்தை விடேனென்பது என்னுடைய விரதம்' என்றேன். பிறகு, அவர், கோபத்தால் கலங்கின கண்களை உடையவராகி, என்னை நோக்கி, 'அரசனே! என்னுடைய இந்த வார்த்தையைச் செய்யாமலிருப்பாயானால், இப்பொழுது, உன்னை மந்திரிகளுடன் கொல்லுவேன்' என்றார். கோபத்தால் கலங்கின கண்களையுடைய அவர் (இதனைப்) பரபரப்புடன் அடிக்கடி சொன்னார்.

பகைவர்களை அடக்குபவனே! நான், பிருகுகுலச்ரேஷ்டரான அவரை நோக்கி இனிய சொற்களால் அடிக்கடி யாசித்தேன். அவர் ஆறுதலையடையவே இல்லை. மறுபடியும், நான், பிராம்மணச்ரேஷ்டரான அவரைத் தலையால் வணங்கி, 'நீர் என்னோடு யுத்தத்தை விரும்புவதற்கு என்ன காரணம்? ஓ! சிறந்த கைகளையுடையவரே! பாலனாயிருக்கின்ற எனக்கு உம்மாலேயே நான்குவிதமான பாணமும் அஸ்திரமும் உபதேசிக்கப்பட்டன. ஓ! பார்க்கவரே! உமக்குச்சிஷ்யனாயிருக்கிறேன்' என்று சொன்னேன். பிறகு, அவர், கோபத்தால் சிவந்த கண்களையுடையவராகி, என்னை நோக்கி, 'மகாபுத்திசாலியே! கௌரவ்ய! பீஷ்ம! என்னைக் குருவென்று அறிகிறாய். இருந்தும், என்னுடைய பிரியத்திற்காக இந்தக் காசிராஜன்புத்திரியை ஏற்றுக் கொள்ளவே மாட்டேனென்கிறாய். குருநந்தன! எனக்கு வேறுவிதத்தால் ஆறுதல் உண்டாகாது. புஜபலமுள்ளவனே! இவளை ஏற்றுக் கொள்ளு உன் குலத்தைக் காப்பாயாக. இவளோ,உன்னால் நழுவும்படி செய்யப்பட்டமையால் கணவனை அடையவில்லை' என்று சொன்னார்.

அவ்விதம் சொல்லுகிறவரும் பகைவர்களுடைய பட்டணங்களை ஜயிப்பவருமான அவரை நோக்கி, நான், 'ஓ! பிரம்மரிஷியே! இது மறுபடியும் இவ்விதம் ஆகாது. ஏன் உமக்கு ச்ரமம்? ஓ! ஜமதக்னியின் புத்திரரே! உம்மிடத்தில் முன் உண்டான குருத்தன்மையை ஆலோசித்து உமக்கு ப்ரீதியுண்டாகும்படி செய்யமுயலுகிறேன். ஓ! பகவானே! இவளோ என்னால் முன் தள்ளப்பட்டவள். எவன், பிறனிடம் மனத்தையுடையவளும் ஸர்ப்பம்போலிருப்பவளுமான ஸ்திரீயை, தெரிந்துகொண்டு, (அவளை) ஒரு க்ஷணமாவது கிருகத்தில் வஸிக்கச்செய்வான்? ஸ்திரீகளுடையதோஷம் பெரிய கெடுதலையுடையது. ஓ! பெரியவிரதத்தையுடையவரே! இந்திரனுக்குப் பயந்தும், தர்மத்தை விடேன். நீர் அருள்செய்யும்; அல்லது, செய்யாமலுமிரும். உமக்கு எது செய்யவேண்டுமோ அதைச்செய்யும். தாமதம் வேண்டாம். ஓ! பரிசுத்தமான மனத்தையுடையவரே! பேரறிவாளரே! பெரியவரே! மகாத்மாவான மருத்தனாலே சொல்லப்பட்டதும், 'குருவாயிருந்தாலும் கர்வமடைந்தவனும் கார்யத்தையும் அகார்யத்தையும் அறியாதவனும் நெறிதப்பினவனுமாயிருப்பவனை விட்டுவிடுதல் விதிக்கப்படுகிறது' என்னும் பொருளுள்ளதுமான ச்லோகமும் புராணத்தில் கேட்கப்படுகிறது. அப்படிப்பட்ட நீர், குருவென்கிற பிரியத்தினால் என்னால் மிகவும் கௌரவிக்கப்பட்டீர். நீர், குருஇருக்க வேண்டிய இருப்பை அறியவில்லை. ஆகையால், உம்முடன் யுத்தம்

செய்யவேசெய்கிறேன். 'குருவும் அவரிலும் பிராம்மணரும் அவரிலும் தவத்தால் சிறந்தவருமாயிருப்பவரை யுத்தத்தில் கொல்லேன்' என்று இவ்விதம் உம்முடைய விஷயத்தில் நான் பொறுத்தேன். க்ஷத்ரபந்துவைப்போலப் பாணமெடுத்தவனும் கோபத்தை அடைந்து யுத்தம் செய்பவனும் ஓடாதவனுமான பிராம்மணனை யுத்தத்தில் கொன்றவனுக்குப் பிரம்மஹத்தியானது ஏற்படாதென்பது தர்மங்களிலுள்ள நிச்சயம். ஓ! தபோதனரே! க்ஷத்திரியனான நான் க்ஷத்திரியர்களுக்குரிய தர்மத்தில் நிலைத்தவனாயிருக்கிறேன். எவன் எதில் எவ்விதமிருக்கிறானே அவனை அதிலேயே அவ்விதம் நடத்துகிறவன் அதர்மத்தை அடையான்; கெடுதலையும் அடையான். அர்த்தத்திலும் தர்மத்திலும் ஸமர்த்தனும் இடத்தையும் காலத்தையும் அறிந்தவனுமான மனிதன் அர்த்தத்தில் ஸந்தேகத்தையடைந்து (தர்மத்தில்) ஸந்தேகமற்றவனாயிருந்தால் சிறந்தவனே. ஓ! ராமரே! ஸந்தேகிக்கப்பட்ட அர்த்தத்தில் நியாயத்தைமீறி நடக்கிறீராகையால், உம்முடன் பெரிய சண்டையில் யுத்தம் செய்வேன். மனிதர்களுடைய பல பராக்ரமங்களை மீறியவையான என்னுடைய புஜங்களின் வீர்யத்தையும் பராக்கிரமத்தையும் பாரும். ஓ! பிருகுநந்தனரே! இவ்விதம் நேரிட்டிருத்தலால் என்னால்முடிந்ததைச் செய்வேன். ஓ! வேதியரே! உம்முடன் குருக்ஷேத்திரத்தில் யுத்தம் செய்வேன். ஓ! ராமரே! மிக்க தேஜஸையுடையவரே! இஷ்டப்படி என்னுடன் த்வந்த்வ யுத்தத்தில் எதிர்த்து நிற்கக்கடவீர். ஓ! ராமரே! நீர் அந்தப் பெரிய யுத்தத்தில் என்னால் அடிக்கப்பட்டவரும் அனேக சஸ்திரங்களால் பீடிக்கப்பட்டவரும் சஸ்திரங்களால் பரிசுத்தமானவருமாகி ஜயிக்கப்பட்ட உலகங்களை அடையப்போகிறீர். ஓ! யுத்தத்தில் பிரியமுள்ளவரே! அப்படிப்பட்ட நீர், செல்லவேண்டிய இடமாகிய குருக்ஷேத்திரத்துக்குத் திரும்பும். ஓ! மிக்க புஜபலமுள்ளவரே! தபோதனரே! யுத்தத்தின் பொருட்டு அவ்விடத்தில் உம்மை வந்தடைவேன். தவிரவும், ஓ! ராமரே! பார்க்கவரே! முன் நீர் பிதாவுக்காக வதம்செய்து சுத்தியைச் செய்துகொண்ட இடத்திலேயே நானும் உம்மைக் கொன்றுவிட்டுச் சுத்தியைச் செய்துகொள்வேன். ஓ! ராமரே! யுத்தத்தில் கெட்ட மதத்தையுடையவரே! பிராம்மணரென்று சொல்லிக்கொள்பவரே! வேகமாக அவ்விடம் வாரும். உம்முடைய பழைய மதத்தைப்போக்குகிறேன். ஓ! ராமரே! 'ஒருவனான என்னாலே வருஷந்தோறும் உலகத்திலுள்ள க்ஷத்திரியர்கள் ஜயிக்கப்பட்டார்கள்' என்பதைப் பலமுறை சொல்லித் தற்புகழ்ச்சி செய்கிறீரே? அதற்குக் காரணத்தைக்கேளும்.

அப்பொழுது, பீஷ்மனுவது (பீஷ்மனுன) என்னைப்போன்றவேறு க்ஷத்திரியனுவது உண்டாகவில்லை, பிறகு, தேஜஸுகள் உண்டாயின. நீர் கூளங்களில் (பற்றி) எரிந்தீர். ஓ! மிக்க புஜபலமமைந்தவரே! உமக்கு யுத்தத்திலுள்ள செருக்கையும் விருப்பையும் அழிக்கக்கூடியவனும் பகைவர்பட்டணங்களை வெல்லுபவனுமான பீஷ்மனுன நான் பிறந்திருக்கிறேன். ஓ! ராமரே! யுத்தத்தில் உம்முடைய கர்வத்தைப் போக்குகிறேன்; 'ஸந்தேகமில்லை' என்று சொன்னேன்.

பாரத! பிறகு, ராமர், பரிஹஸிக்கிறவர்போல, என்னை நோக்கிச் சொல்லலானுர்: 'பீஷ்ம! பாக்கியத்தினுல் யுத்தத்தில் என்னுடன் போர்செய்ய விரும்புகிறுய். கௌரவ்ய! இதோ, உன்னுடன் குருக்ஷேத்திரத்தை அடைகிறேன். நீ சொன்னதைச் செய்வேன். பகைவர்களைஎரிப்பவனே! அங்கே வா. பீஷ்ம! நீ அவ்விடத்தில் என்னுல் கொல்லப்பட்டவனும் அனேகஅம்புகளால் சூழப்பட்டவனுமாகி, கழுகு பருந்து காக்கைகளுக்கு இரையுமாவனை, மாதாவான கங்கையானவள் பார்க்கட்டும். அரசனே! மந்தனும் யுத்தத்தில் விருப்பமுள்ளவனும் ஆதுரனுமான உன்னைப் பெற்றவளும், ஸித்தர்களாலும் சாரணர்களாலும் அடையப்பட்டவளும், அதற்கு (=அழுகைக்கு) தகாதவளும் மகாபாக்கியவதியும் குற்றமற்றவளுமான தேவியானவள் தீனனும் என்னுல் கொல்லப்பட்டவனுமான உன்னைப் பார்த்து இப்பொழுது அழட்டும். பீஷ்ம! யுத்தத்தில் விருப்பமுள்ளவனே! கெட்டமதமுடையவனே! வா; என்னுடன் யுத்தத்தைச்செய். கௌரவ்ய! பரதஸ்ரேஷ்ட! ரதம்முதலிய எல்லாவற்றையும் அமைத்துக்கொள்' என்று சொன்னுர். இவ்விதம்சொல்லுகிறவரும் பகைவர்பட்டணங்களைஜயிப்பவருமான அந்த ராமரை நான் தலையால்வணங்கி, பிறகு, 'ஓ! ராமரே! அப்படியே ஆகுக' என்றுசொன்னேன். அவர் இவ்விதம் சொல்லிவிட்டு, யுத்தம் செய்யவேண்டுமென்கிற விருப்பத்துடன் குருக்ஷேத்திரம் சென்றுர்.

நானும் பட்டணத்துள் நுழைந்து ஸத்தியவதிக்குத் தெரிவித்தேன். மிக்க வலிமைஅமைந்தவனே! பரதஸ்ரேஷ்டனே! பிறகு, நான், மங்கள கார்யத்தைச் செய்தவனும் மாதாவினுல் ஸந்தோஷிக்கப்பட்டவனுமாகி, பிராம்மணர்களைப் புண்யாஹத்தையும் ஸ்வஸ்திவாசனத்தையும் ஜபிக்கச்செய்து, வெள்ளியினுல் செய்யப்பட்டதும், அழகு பொருந்தியதும், வெண்மையான குதிரைகள் பூட்டினதும், நல்ல அவயவங்களையுடையதும், நல்ல சக்ரங்களுள்ளதும், புலித்தோலால் மூடப்பட்டதும், பெரிதான ஆயுதங்களோடுகூடினதும், எல்லா

ஸாமக்ரிகளோடும் கூடினதும், அந்த ஸூதகுலங்களுள் சிறந்த குலத்தில் பிறந்தவனும் வீரனும் அஸ்வசாஸ்திரத்தை அறிந்தவனும் நல்ல பயிற்சியுள்ளவனும் பலதடவை ஸாரத்யம்செய்து பார்க்கப்பட்டவனுமான ஸூதனால் ஓட்டப்பட்டதுமான தேரில் ஏறிக்கொண்டு, வெண்மையானதும் சரீரத்திற்கு அமைந்ததுமான கவசம் பூண்டு, வெண்மையான வில்லை எடுத்துக்கொண்டு புறப்பட்டேன். அரசனே! பரதஸ்ரேஷ்ட! தலையில் வெண்மையான குடை பிடிக்கப்பட்டவனும், வெண்மையான விசிறிகளால் வீசப்பட்டவனும், வெள்ளை வஸ்திரம் உடுத்தவனும், வெண்மையான தலைப்பாகையுடையவனும், வெண்மையான எல்லா ஆபரணங்களையும் அணிந்தவனும், ஜயசப்தங்களாலும் ஆசீர்வாதங்களாலும் துதிக்கப்பட்டவனுமாகி ஹஸ்திநபுரத்திலிருந்தும் வெளிக்கிளம்பிப் போர்க்களமான குருக்ஷேத்திரத்தை அடைந்தேன். அரசனே! மனத்துக்கும் வாயுவுக்கும் ஒப்பான வேகமுள்ள அந்தக் குதிரைகள், அந்தஸூதனால் தூண்டப்பட்டுப் பெரிய போரில் என்னை நன்கு சுமந்துசென்றன. அரசனே! நானும் பிரதாபசாலியான அந்தராமரும் யுத்தத்தின்பொருட்டு விரைவாக அந்தக் குருக்ஷேத்திரத்தை அடைந்து ஒருவரையொருவர் எதிர்த்தோம். பிறகு, நான், மிக்க தவத்தையுடைய ராமரது பார்வையில்நின்று, உடனே மிகச் சிறந்த சங்கத்தைஎடுத்து நன்றாக முழக்கினேன். அரசனே! பிறகு, அவ்விடத்தில் பிராமணர்களும் வனத்தில் வஸிப்பவர்களான தவசிகளும் இந்திரனுடன்கூடின தேவகணங்களும் பெரிய யுத்தத்தைப் பார்த்தார்கள். பிறகு, ஆங்காங்கு, திவ்யமானமாலைகளும், திவ்யமான வாத்தியங்களும், மேகங்களின்ஸமூகங்களும் பிரகாசித்தன. பிறகு, பார்க்கவருடன்வந்த அந்தஎல்லாத் தவசிகளும் போர்க்களத்தைச் சூழ்ந்துகொண்டு (மத்தியஸ்தர்களாகப்) பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

பிறகு, எல்லாப்பிராணிகளுக்கும் நன்மையைவிரும்புகிறவளும், (எனக்கு) மாதாவுமான கங்காதேவியானவள், ஸ்வரூபத்துடன் என்னை நோக்கி, 'அரசனே! இதென்ன செய்ய விரும்பினாய்? குருஸ்ரேஷ்டனே! நான் பார்க்கவரிடம்சென்று, 'சிஷ்யனை பீஷ்மனுடன் யுத்தம் செய்யாதீர்' என்று அடிக்கடி வேண்டுகிறேன். புத்திர! அரசனே! வேண்டாம்; வேதியரான பரசுராமருடன் இப்படி யுத்தகளத்தில் போர்புரியப் பிடிவாதம் செய்யாதே' என்று அதட்டி, 'நீ அவருடன் யுத்தம்செய்ய விரும்புவதால், க்ஷத்திரியர்களைக் கொன்றவரும் ருத்திரருக்கு ஸமமான பராக்கிரமத்தையுடையவருமான ராமரை நீ அறி

யாயோ?" என்று சொன்னாள். பரதஸ்ரேஷ்ட! ராஜஸ்ரேஷ்டனே! பிறகு, நான், தேவியை வணங்கி அஞ்சலிசெய்துகொண்டு, ஸ்வயம்வரத்தில் நடந்ததும், முன் ராமர் என்னுடன் (சண்டைக்கு) வரவப்பட்டதும், காசிராஜ புத்திரியினுடைய முந்தினதான செய்கையும் ஆகிய எல்லாவற்றையும் சொன்னேன். பிறகு, எனக்குத் தாயும் மகாநதியுமான அவள் ராமரை அடைந்து எனக்காக அவரைக்கண்டு, 'சிஷ்யனான பீஷ்மனுடன் யுத்தம் செய்யாதீர்' என்கிற வார்த்தையைச் சொல்லி க்ஷமிக்கும்படி செய்தாள். அவரோ, கெஞ்சுகிற அவளை நோக்கி, 'பீஷ்மனையே திருப்பு. அவன் என் இஷ்டத்தைச் செய்யவில்லையே என்று நான் அவனை அடைந்தேன்' என்றார். பிறகு, அந்தக் கங்கை, புத்திரனிடமுள்ள அன்பினால் மீண்டும் என்னிடம் வந்தாள். நான், கோபத்தால் சுழலுகின்ற கண்களையுடையவனாகி, அவள் சொன்னபடி செய்யவில்லை. பிறகு, தர்மாத்மாவும் பெரிய தவத்தை உடையவருமான ப்ருகுஸ்ரேஷ்டர் காணப்பட்டார். அப்பொழுது, பிராம்மணஸ்ரேஷ்டரான அவர் யுத்தத்திற்கு அழைக்கவும்செய்தார்.

---

நூற்றெழுபத்தோன்பதாவது அத்யாயம்.

## அம்போபாக்யான பர்வம். (தொடர்ச்சி.)

(பீஷ்மருக்கும் பரசுராமருக்கும் யுத்தம்.)

நான், யுத்தத்தினிமித்தம் நிலைத்து நிற்பவரானஅவரைநோக்கி, 'ஓ! வீரரே! பெரியபுஜங்களையுடையவரே! ராமரே! நான் தேரிலிருந்துகொண்டு பூமியிலிருப்பவரான உம்முடன் யுத்தம் செய்யத் துணியவில்லை. போரில் என்னுடன் யுத்தம்செய்ய விரும்புகிறீரானால் தேரில் ஏறும். கவசத்தைக்கட்டிக் கொள்ளும்' என்று புன்சிரிப்புடன் சொன்னேன். பிறகு, அவர், யுத்தகளத்தில் என்னைநோக்கிப் புன்னகைசெய்து, 'பீஷ்ம! குருநந்தன! எனக்குப் பூமியானது ரதம்; வேதங்கள் நல்ல குதிரைகள்போன்ற வாகனங்கள்; வாயுவானவன் ஸாரதி; வேதமாதாக்களான காயத்ரி, ஸாவித்ரி, ஸரஸ்வதி ஆகிய இவர்கள் கவசம். நான் யுத்தத்தில் அவைகளால் நன்கு சுற்றப்பட்டவனாகி யுத்தம் செய்வேன்' என்று சொன்னார். காந்தாரியின் புத்திரனே தவறாத பராக்ரமத்தையுடையவரான ராமர், இவ்விதம் சொல்லிக்கொண்டு, பெரிய சரக்கூட்டத்தினால் என்னை எங்கும் தடுத்தார். பிறகு, நான், பரசுராமர் எல்லா ஆயுதங்களாலும் சிறந்ததும் அழகு பொருந்தியதும் ஆச்சரியமான காட்சியுடையதும் மனத்தால் செய்

யப்பட்டதும் பரிசுத்தமானதும் விரிவானதும் பட்டணத்திற்கு நிகரானதும் திவ்யமானகுதிரைகள் பூட்டப்பட்டதும் ஸந்நாஹமுடையதும் பொன்னால் அலங்கரிக்கப்பட்டதுமான ரதத்தின்மத்தியில் நிலையாயிருப்பதைப் பார்த்தேன். ஓ! தோள்வலியமைந்தவனே! அவர், சந்திர ஸூர்யப் பிரதிபிம்பங்களால் அடையாளம் செய்யப்பட்ட கவசத்துடன் வில்லைத்தரித்து அம்பறாத்தூணிகளைக் கட்டிக்கொண்டு உடும்புத்தோலினால் செய்யப்பட்ட விரலுறை பூண்டவராயிருந்தார். அந்தத் தேரில், யுத்தம்செய்ய விருப்பமுள்ளவரான பார்க்கவருக்கு இனிய நண்பரும் வேதங்களை நன்கு அறிந்தவருமான அக்ருதவ்ரணர் ஸாரத்யம் செய்தார். அந்தப்பார்க்கவர், 'என்னை யுத்தத்திற்கு எதிர்த்துவா' என்று அடிக்கடி அழைக்கிறவராகி என்மனத்தை மகிழச்செய்கிறவர் போல் இருந்தார். நான், உதயமாகின்ற ஸூர்யன்போலிருப்பவரும் ஜயிக்கமுடியாதவரும் மிக்க பலசாலியும் க்ஷத்திரியர்களுக்கு நாசத்தைச் செய்தவரும் ஒருவருமான பரசுராமரை ஒருவனாக எதிர்த்தேன். பிறகு, நான், மூன்று அம்புவிழுந்தூரத்தில் குதிரைகளை நிறுத்திவிட்டு, உடனே இறங்கி, வில்லைவைத்துவிட்டுக் கால் நடையாக ரிஷிஸ்ரேஷ்டரும் பிராம்மணஸ்ரேஷ்டருமான ராமரைப் பூஜிக்கிறவனாகி நேரில்சென்றேன். அவரை விதிப்படி நமஸ்கரித்து, 'ஓ! ராமரே! (எனக்கு) ஒப்பவராகவோ அல்லது மேலானவராகவோ இருப்பவரும் குருவும் தர்மத்தையே சீலமாகக்கொண்டவருமான உம்முடன் யுத்தகளத்தில் போர்செய்யப்போகிறேன். ஓ! பெரியவரே! எனக்கு வெற்றியை ஆசீர்வதிக்கக்கடவீர்' என்று சிறந்தசொல்லைச் சொன்னேன். அப்பொழுது, அவர், 'குருஸ்ரேஷ்ட! புஜபலமிக்கவனே! ஐஸ்வர்யத்தை விரும்புகிறவன் இவ்விதம் இதைச்செய்யவேண்டும். இதுவே தர்மம். மேலானவர்களுடன் யுத்தம் செய்யலாம். அரசனே! இவ்விதம் செய்யாவிட்டால் உன்னைச் சபிப்பேன். கௌரவ! தைரியத்தைக்கொண்டு நீ யுத்தத்தில் ஸந்நத்தனாகிச் சண்டைசெய். நான் உனக்கு வெற்றியை ஆசீர்வதியேன். நான் உன்னை வெல்லுதற்கு இருக்கிறேன்; போ. தர்மத்துடன் யுத்தம்செய். உன்னுடைய நடையால் ப்ரீதியடைந்தேன்' என்று சொன்னார்.

பிறகு, நான், அவரை வணங்கிவிட்டு, விரைவுடன் தேரிலேறி, யுத்தநிமித்தமாகப் பொன்னால் அலங்கரிக்கப்பட்ட சங்கத்தை மறுபடியும் முழக்கினேன். பாரத! அரசனே! பிறகு, எனக்கும் அவருக்கும், ஒருவரையொருவர் வெல்லும் விருப்பத்தால், பலநாள் சண்டை நடந்தது. அரசனே! அந்த யுத்தத்தில் முதலில் அவர்

என்னைக் கழுகிறகுபூண்ட அறுபது பாணங்களால் அடித்தார். புலப் படாத கணுக்களையுடைய நூறு பாணங்களால் என்னுடைய நான்கு குதிரைகளையும் ஒன்பதுபாணங்களால் ஸூதனையும் தடுத்தார். பரதஸ்ரேஷ்ட! அப்படியே, நானும், யுத்தநிமித்தம் கவசம் பூண்டுகொண்டு, தேவர்களுக்கும் விசேஷமாக வேதியர்களுக்கும் வணங்கிவிட்டு, யுத்தத்தில் நிலைத்திருப்பவரான அவரை நோக்கிப் புன்னகைசெய்கிறவன்போல மறுமொழி கூறினேன். 'ஓ! பிராம் மணரே! நீர் மரியாதை தவறினவராயிருந்தாலும், நான், குருத் தன்மையைப் பூஜித்தேன். மேலும், தர்மத்தைக் காப்பதற்காக நான் நிறைவேற்றவேண்டியதைக் கேளும். ஓ! ராமரே! உம்முடைய சரீரத்திலிருக்கின்ற வேதங்களின் பொருட்டாகவும் உம்முடைய பெரிய பிராம்மணத்தன்மையின்பொருட்டாகவும் உம்மால் செய்யப் பட்ட பெரிய தவத்தின்பொருட்டாகவும் நான் அடிக்கவில்லை; உம்மால் அடுக்கப்பட்ட க்ஷத்திரியதர்மத்திற்காக அடிக்கிறேன். பிராம்மணன் ஆயுதத்தை எடுத்ததனாலே க்ஷத்ரியத் தன்மையை யன்றோ அடைகிறான்? என்னுடைய வில்லின் வீர்யத்தைப் பாரும். என்னுடைய கைகளின் வன்மையைப் பாரும். ஓ! வீரரே! இதோ கூர்மையான பாணத்தால் 'உம்முடைய வில்லை முறிக்கிறேன்' என்று சொல்லிவிட்டு, நான் அவர் பொருட்டுக் கூர்மையான அர்த்த சந்திர பாணத்தை விடுத்தேன். அதனால், அவருடைய வில்லின் நுனியை அறுத்து அதனைப் பூமியில் விழச் செய்தேன். அப்ப டியே, தணிந்த கணுக்களையுடையவைகளும் கழுகிறகு கட்டினவை களுமான நூறு பாணங்களைப் பார்க்கவருடைய தேரைக் குறி வைத்து விடுத்தேன். அப்பொழுது, அந்தப் பாணங்களே ஸர்ப்பங் கள்போலக் காற்றினால் நன்கு உயரக்கிளப்பப்பட்டவைகளும் சரீரத் தில் பதிந்தவைகளும் உதிரத்தைப் பெருகச் செய்கிறவைகளுமாகி அசைந்தன. அரசனே! அப்பொழுது, அந்த ராமர், யுத்தத்தில் இரத்தத்தைப் பெருக்குகிறவரும் இரத்தத்தால் நனைக்கப்பட்ட எல்லா அங்கங்களையுமுடையவருமாகித் தாதுவை விடுகின்ற மேரு வைப்போல விளங்கினார். அரசனே! அப்படியே, அவர் ஹேமந்த காலத்தின் முடிவில் சிவந்த பூங்கொத்துக்களால் அலங்கரிக்கப்பட்ட அசோகமரம் போலவும் தளிர்த்த பலாசமரம் போலவும் விளங்கினார். பிறகு, அந்த ராமர் கோபத்தைஅடைந்து வேறு வில்லை யெடுத்துப் பொன்னாலான கட்டுக்களுள்ளவைகளும் மிக்க கூரியவை களுமான அப்படிப்பட்ட பாணங்களையே பொழிந்தார். கொடிய

வைகளும் பலவிதமாக மர்மங்களை அறுக்கின்றவைகளும் மிக்க வேகமுடையவைகளும் ஸர்ப்பத்திற்கும் அக்னிக்கும் விஷத்திற்கும் நிகரானவைகளுமான அந்தப் பாணங்கள் என்னை அடைந்து சலிக்கச் செய்தன. அப்பொழுது, நான், மறுபடியும் அந்தச் சரீ ரத்தை அசையாமல் நிறுத்திக்கொண்டு, யுத்தத்தில், கோபத்தை அடைந்தவனாகி, நூற்றுக்கணக்கான பாணங்களை ராமர்மேல் இறைத் தேன். அவர், அக்னியும் ஸூர்யனும்போல விளங்குபவைகளும் ஸர்ப்பங்களை ஒத்தவைகளும் கூர்மையுள்ளவைகளுமான அந்த அம்பு களாலே பீடிக்கப்பட்டவராகி அறிவுகுறைந்தவர்போலானார். பாரத! அப்பொழுது, நான் இரக்கங்கொண்டவனாகி என் புத்தியினால் என்னை நிந்தித்து, 'யுத்தத்தையும் க்ஷத்ரிய தர்மத்தையும் நிந்திக்கவேண்டும்; நிந்திக்கவேண்டும்' என்று சொன்னேன். அரசனே! நான் சோகத் தின் வேகத்தால் மூடப்பட்டவனாகி, 'அந்தோ! கஷ்டம்! குருவும் ப்ராம்மணரும் தர்மாத்மாவுமானவரை நான் இவ்விதம் பாணங்களால் பீடித்ததினால், க்ஷத்ரியதர்மத்தையுடையவனான என்னால் இந்தப் பாவ மானது செய்யப்பட்டது' என்று அடிக்கடி சொன்னேன். பார தனே! பிறகு, நான் பார்க்கவரை மறுபடி அடிக்கவில்லை. பிறகு, ஆயிரம் கிரணங்களையுடைய ஆதித்தியன் பூமியைக்காய்ந்து பகலின் முடிவில் அஸ்தமனத்தை அடைந்தான். அதனால் சண்டை ஓய் வடைந்தது.

---

## நூற்றெண்பதாவது அத்யாயம்.

## அம்போபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(பரசுராமருக்கும் பீஷ்மருக்கும் நடந்த யுத்தம்; தொடர்ச்சி.)

அரசனே! பிறகு, ஸமர்த்தனைக ஒப்புக்கொள்ளப்பட்ட எனது ஸூதனே, குதிரைகளும் நானுமாகிய எங்களுடைய (சரீரத்திலுள்ள) பாணங்களை எடுத்தான். பிறகு, குதிரைகள் குளிப்பாட்டப்பட்டுத் திரும்பத் தண்ணீர்குடித்துக் களைப்புநீங்கி, விடியற்காலத்தில் ஸூர்ய னும் உதயமானபின், யுத்தம் தொடங்கிற்று. வேகமாகவருகிறவனும் கவசம்பூண்டவனும் தேரிலிருப்பவனுமான என்னைப்பார்த்துப் பிர தாபசாலியான ராமர் தேரை மிகவும் ஸன்னத்தமாகச் செய்தார். பிறகு, நான், யுத்தத்தில் விருப்பங்கொண்டு வருகிறவரான ராமரைப் பார்த்துச் சிறந்ததான வில்லைத் தேரில்வைத்துவிட்டுத் தேரிலிருந்

தும் விரைவாக இறங்கினேன். பாரத! நான் அப்படியே அவரை வணங்கிவிட்டுத் தேரில்ஏறிக்கொண்டு யுத்தம்செய்யும் விருப்பத்துடன் பரசுராமருக்கு எதிரில் பயமற்றவனாகி நின்றேன். பிறகு, நான் பெரிய சரமாரியைப் பொழிந்தேன். அவரும், சரங்களைப்பொழி கின்றவனான என்மேல் சரமாரியைப் பொழிந்தார். ஜமதக்னியின் புத்திரரோ, கோபமுண்டவராகி மறுபடியுமே நன்றாகத் தீட்டப் பட்டவைகளும் கோரமானவைகளும் ஜ்வலிக்கின்ற வாயையுடையவை களும் ஸர்ப்பங்கள் போன்றவைகளுமான பாணங்களை என்னைக் குறித்து விடுத்தார். அரசனே! பிறகு, நான் கூர்மையான பல்லங்க ளால் அவைகளை விரைவாக ஆகாயத்திலே அடிக்கடி நூறு துணுக் குக்களாகவும் ஆயிரம் துணுக்குக்களாகவும் துண்டித்தேன். பிறகு, பிரதாபசாலியான பரசுராமர் என்மேல் தேவசம்பந்தமுள்ள அஸ்தி ரங்களைப் பிரயோகம் செய்தார். தோள்வலிமிக்கவனே! அதிக மான செய்கையைச் செய்ய விருப்பமுள்ளவனாகி அஸ்திரங்களா லேயே நான் அவைகளைத் தடுத்தேன். பிறகு, ஆகாயத்தில் எங்கும் பெரிய ஒலியானது உண்டாயிற்று. பிறகு, நான் பரசுராமர்மேல் வாயவ்யாஸ்திரத்தைத் தொடுத்தேன். பாரத! அதை அவர் குஹ்ய காஸ்திரத்தினால் அடித்துவிட்டார். பிறகு, நான் ஆக்னேயாஸ்தி ரத்தை (அதற்குரிய மந்திரத்தை) ஜபித்து விடுத்தேன். விபுவான ராமர் என்னுடைய அந்த அஸ்திரத்தை வாருணாஸ்திரத்தினாலேயே தடுத்தார். இவ்விதம், ராமருடைய திவ்யாஸ்திரங்களை நான் தடுத் தேன்; தேஜஸுள்ளவரும் திவ்யாஸ்திரங்களையறிந்தவரும் பகை வரைச் சிக்ஷிப்பவருமான ராமரும் என்னுடைய திவ்யாஸ்திரங்க ளைத் தடுத்தார். அரசனே! பிறகு, பிராம்மணஶ்ரேஷ்டரும் பிரதாப சாலியும் ஜமதக்னியின் புத்திரருமான ராமர், மிக்க சினம்கொண்டு, என்னை இடமாகச்செய்து மார்பிலடித்தார். பரதஶ்ரேஷ்டனே! அதனால், நான் மயங்கிச் சிறந்த தேரில் சாய்ந்தேன். பரத ஶ்ரேஷ்ட! பிறகு, ஸூதனானவன் ராமருடைய பாணத்தினால் பீடிக் கப்பட்டவனும் வாடினவனும் மயக்கத்தை அடைந்தவனுமான என்னை விரைவாக வெளியில் கொண்டுபோனான். பாரத! பிறகு, ராமரைத் தொடர்ந்துவந்த அகிருதவ்ரணர் முதலியவர்களெல்லோ ரும் காசிராஜன் கன்னிகையும், மிக அடிக்கப்பட்டவனும் பிரஜ்ஞை யற்றவனும் விலக்கப்பட்டவனுமான என்னைப்பார்த்து மகிழ்ச்சி யடைந்து ஆரவாரம் செய்தார்கள். பிறகு, நான், பிரஜ்ஞை அடைந்து (விஷயத்தை) அறிந்து, உடனே ஸூதனை நோக்கி, 'ஸூத! ராம ரிருக்குமிடம் செல்லு. நான் வேதனைநீங்கி ஸன்னத்தனாக இருக்கி

றேன்' என்றேன். கௌரவனே! பிறகு, தேர்ப்பாகன் மிகவும் பள பளப்பானவைகளும் நாட்டியம் செய்வனபோல இருப்பவைகளும் நடையில் வாயுவை ஒத்தவைகளுமான குதிரைகளால் என்னைக் கொண்டு போய்ச் சேர்த்தான். கௌரவ! பிறகு, நான் வெல்லும் விருப்பத்தால், கோபத்தையடைந்தவரான ராமரை அடைந்து மிகவும் கோபத்தை அடைந்தவனுகி அம்புமாரிகளால் இறைத்தேன். அந்த ராமர் யுத்தத்தில் நேராகச்செல்லுகின்ற அந்தப்பாணங்களை வரும்போதே விரைவாக ஒவ்வொன்றையும் மும்மூன்று பாணங்க ளால் துணித்தார். பின்பு, நன்கு தொடுக்கப்பட்டவைகளும் நன்கு தீட்டப்பட்டவைகளும் நூற்றுக் கணக்கானவைகளும் ஆயிரக்கணக் கானவைகளுமான என்னுடைய அந்த எல்லா அம்புகளும் ராமருடைய பாணங்களால் இரண்டு இரண்டாக முறிக்கப்பட்டன. பிறகு, நான் மறுபடியும் கொல்லவேண்டுமென்கிற விருப்பத்தால், ஜம தக்னியின் புத்திரரான ராமர்மேல் ஜ்வலிக்கின்றதும் நல்லகாந்தி யுடையதும் காலனுக்குநிகரானதுமான ஒரு சரத்தை விடுத்தேன். அதனுல், ராமர் பலமாக அடிக்கப்பட்டவராகிப் பாணவேகத்தின் வசத்தையடைந்து யுத்தத்தில் மயக்கத்தை அடைந்தார்; பூமியிலும் விழுந்தார். பாரத! பிறகு, அவர் பூமியின் இடத்தை அடைந்த பொழுது உலகமெல்லாம் ஸூர்யன்விழுந்ததுபோல 'ஆ! ஆ!' என்று வருந்துவதாயிற்று. குருநந்தன! பிறகு, அந்தத் தபோ தனர்களும் காசிராஜபுத்திரியுமாகிய எல்லாருமே மிக்கநடுக்கமுற்று, விரைவாக அவரைநோக்கிச் சென்றூர்கள். கௌரவ! பின்னர் அவரைக் கட்டிக்கொண்டு, உடனே ஜலத்தால்குளிர்ந்த கைகளாலும் ஜயத்தின் ஆசீர்வசனங்களாலும் மெள்ளமெள்ளக் களைதெளியச்செய்தார்கள். பிறகு, அந்தராமர் எழுந்திருந்து வில்லில் பாணத்தைப்பூட்டி, 'பீஷ்ம! நில்லு; இதோ கொல்லப்படுகிறுய்' என்று தளர்ச்சியாகச் சொன் ஞர். பெரிய யுத்தத்தில் அந்தப்பாணம் விடப்பட்டு வேகமாக என் இடப்பக்கத்தில் விழுந்தது. அதனுல், நான் அலைக்கப்பட்ட மரம் போல மிக்க நடுக்கமுற்றேன். பிறகு, ராமர் பெரியயுத்தத்தில் சீக்ராஸ்திரத்தினுல் குதிரைகளை அடித்துவிட்டுத் தடையற்றவராகிச் சிறகுகள்பூண்ட அந்த அம்புகளாலே என்மேல் இறைத்தார். புஜ பலமமைந்தவனே! பின்பு, நானும் யுத்தத்தில் எதிர்த்துத்தடுக்கிற தான சீக்ராஸ்திரத்தை விடுத்தேன். ராமரும் நானுமாகிய எங்க ளுடைய அந்தச்சரங்கள் விரைவில் ஆகாயத்தை நாலுபக்கத்திலும் மறைத்துக்கொண்டு இடையிலிருந்தன. ஸூர்யன் சரக்கூட்டங்

களால் மறைக்கப்பட்டுப் பிரகாசிக்கவில்லை. அதனால் அவ்விடத்தில் வாயுவானது மேகத்தால் தடுக்கப்பட்டதுபோலிருந்தது. பின்பு, காற்றின் அசைவினாலும் ஸூர்யனுடைய கிரணங்களாலும், (பாணங்கள் ஒன்றோடொன்று) உறைதலின் மிகுதியினாலும் தீயானது உண்டாயிற்று. அரசனே! அந்தப்பாணங்கள் தம்மிடமுண்டான அக்கினியினால் எரிந்து உடனே எல்லாம் சாம்பலாகிப் பூமியில் விழுந்தன. கௌரவ! அப்பொழுது, ராமர் மிக்ககோபமுண்டு சீக்கிரமாக என் மீது நூறாயிரங்களும், பத்துநூறாயிரங்களும், கோடிகளும், பதினாயிரங்களும், பத்துக்கோடிகளும், நூறுகோடிகளுமானபாணங்களை விடுத்தார். அரசனே! பின்னர், நான் யுத்தத்தில் ஸர்ப்பம்போன்றவைகளான சரங்களாலே அவைகளையும் அறுத்து மரங்களைத் தள்ளுவது போலப் பூமியில் தள்ளினேன். பரதஸ்ரேஷ்டனே! அப்பொழுது, இவ்விதமாக அந்தயுத்தமானது நடந்தது. ஸந்தியாகாலம் சென்றபிறகு, என்னுடைய குருவான அவர் (யுத்தத்தைவிட்டு) விலகினார்.

---

நூற்றெண்பத்தோராவது அத்யாயம்.

## அம்போபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(பரசுராமருக்கும் பீஷ்மருக்கும் நடந்த யுத்தம்; தொடர்ச்சி.)

பரதஸ்ரேஷ்டனே! மறுநாள், வந்தவனான எனக்கு மறுபடியுமே ராமருடன் மிக்க குரூரமும் நெருக்கமுமான யுத்தமானது உடனே நேரிட்டது. அப்பால், திவ்யாஸ்திரங்களை அறிந்தவரும் சூரரும் விபுவும் தர்மாத்மாவுமான அவர் ஒவ்வொரு நாளும் அனேகமாகத் திவ்யாஸ்திரங்களையே பிரயோகம் செய்தார். பாரத! நான் நெருக்கமான யுத்தத்தில் விடக்கூடாததான பிராணனையும் விட்டு, அந்த அஸ்திரங்களை எதிர்த்தடிக்கின்ற அஸ்திரங்களால் அடித்தேன். பாரத! பெரும்பாலும் அஸ்திரங்களாலே அஸ்திரங்கள் அடிக்கப்படவே, அப்பொழுது, மிக்க தேஜஸையுடையவரான அவர் யுத்தத்தில் பிராணனை வெறுத்தவராகிக் கோபங்கொண்டார். அஸ்திரமானது தடுக்கப்பட்ட பிறகு, மகாத்மாவான பரசுராமர் கோரமான உருவத்தையுடையதும் காலனால் விடப்பட்டதும் ஜ்வலிக்கின்றதும் உற்கைபோலத் தேஜஸினால் உலகத்தை மூடிக்கொண்டு மிகவும் ஜ்வலிக்கின்ற முனையையுடையதுமான வேலாயுதத்தை ஏவினார். பிறகு, நான், ஜ்வலிக்கின்றதும் எதிர்த்து வருகின்றதும் பிரளயகால ஸூர்யன்போல விளங்குகின்றதுமான அந்தச் சக்தியைக் கணை

களால் மூன்றாக அறுத்துப் பூமியில் விழும்படி செய்தேன். உடனே, பரிசுத்தமான கந்தத்தையுடைய காற்றானது வீசிற்று. அது அறு பட்டவுடன், ராமர் கோபத்தால் ஜ்வலிக்கிறவராகிக் கொடியவை யான வேறு பன்னிரண்டு சக்திகளைப் பிரயோகித்தார். பாரத! அவைகளுடைய ரூபமானது, தேஜஸோடு கூடினதும் வேகத்துடன் கூடினதுமாயிருந்ததனாலே, சொல்ல முடியாதது. நான், அக்னியி னுடைய பெரிய கொள்ளிகள் போன்றவைகளும், பல ரூபங்களை உடையவர்களாகி உலகத்தின் நாசகாலத்தில் உக்கிரமான தேஜஸி னால் ஜ்வலித்த பன்னிரண்டு ஆதித்யர்கள் போன்றவைகளுமான அவைகளெல்லாவற்றையும் திக்குக்களில் நன்றாகப் பார்த்துச் சோர் வையே அடைந்தேன். அரசனே! பிறகு, நான் விசேஷமாக ஏற் பட்ட பாணமயமான கூட்டத்தைப் பார்த்துப் பாணங்களுடைய கூட்டத்தினால் அறுத்துவிட்டு யுத்தத்தில் பன்னிரண்டு சரங்களைத் தொடுத்துக் கோரமான ரூபங்களையுடைய சக்திகளையும் அடித் தேன். அரசனே! பிறகு, மஹாத்மாவான ராமர் கோரமானவை களும் பொற்பிடியுள்ளவைகளும் விசித்திரமாகச் செய்யப்பட்டவை களும் பொற்பட்டம் கட்டப்பட்டவைகளும் பெரிய கொள்ளிகள் போல ஜ்வலித்தவைகளுமான சக்திகளை எறிந்தார். அரசனே! உக்கிரமான அவைகளையும் கேடகத்தினால் தடுத்துக் கத்தியினால் யுத்தகளத்தில் தள்ளி, போரில் ராமருடைய திவ்யமான குதிரை களின்மீதும் ஸூதன்மீதும் சிறந்த பாணங்களாலே வர்ஷித்தேன். விடப்பட்ட ஸர்ப்பங்களுக்கு ஒப்பானவைகளும் பொன்னால் விசித் திரமாயுள்ளவைகளுமான சக்திகள் அறுபட்டதைப் பார்த்து, மஹாத் மாவும் ஹேஹயதேசாதிபதியான கார்த்தவீர்யனைக் கொன்றவரு மான ராமர், சினங்கொண்டு, திவ்யமான அஸ்திரத்தை வெளிப்படுத் தினார். பிறகு, உக்கிரமானவைகளும் ஜ்வலிக்கின்றவைகளுமான அம்புக்கூட்டங்கள் விட்டிற்பூச்சிகளின் கூட்டங்கள் போல வந்துவிழுந் தன; அவர், என்னுடைய சரீரத்தையும் குதிரைகளையும் ஸூதனை யும் தேரையும் (கணைகளால்) நிறைத்தார். அரசனே! என்னுடைய தேரும் அப்படியே குதிரைகளும் ஸாரதியுமே எங்கும் அம்புகளால் மூடப்பட்டனர். நுகத்தடியையும் மூக்கணையையும் உருளைகளையும் அப்படியே செய்தார். அப்படியே, அச்சுமரமும் பாணங்களால் அறுக் கப்பட்டு உடனே முறிந்தது. பிறகு, அந்தச் சரமாரியானது முடிந்த வுடன், அந்தக் குருவின்மீது பாணக் கூட்டத்தால் பிரதியாகப் பொழிந்தேன். வேதங்களுக்கிருப்பிடமான அவர் பாணங்களால்

தொளைக்கப்பட்டுச் சரீரத்திலிருந்தும் அதிகமான இரத்தத்தைத் தொடர்ச்சியாக விட்டார். அவர், சரக்கூட்டத்தினால் தாபத்தை அடைந்ததற்கேற்றவாறே நானும் மிக்க பலமாக அடிக்கப்பட்டேன். பிறகு, பிற்பகலில் ஸூர்யன் அஸ்தமன பர்வதத்தை நோக்கிச் செல்ல, யுத்தமும் ஒழிவடைந்தது.

நூற்றெண்பத்திரண்டாவது அத்யாயம்.

## அம்போபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(பரசுராமர் பீஷ்மரைத் தேரிலிருந்து கீழேதள்ளினதும், தேவபுருஷர்கள் பீஷ்மரைத் தேற்றியதும், பீஷ்மர் பரசுராமரைத் தேரிலிருந்து கீழேதள்ளியதும், மீண்டும் போர் செய்யத்தொடங்கிய பரசுராமரை மஹரிஷிகள் தடுத்ததும்.)

ஓ! ராஜஸ்ரேஷ்டனே! பிறகு, விடியற்காலத்தில் ஸூர்யன் தெளிவாக உதித்தவுடன், மறுபடியும், பரசுராமருக்கும் எனக்கும் போர் நடந்தது. பிறகு, அடிக்கிறவர்களிற் சிறந்தவரான ராமர் மேக மண்டலத்தின் ஸமீபத்தில் தேரிலிருந்துகொண்டு மலையின்மீது மேகம் பொழிவதுபோல என்மேல் அம்புக்கூட்டங்களைப்பொழிந்தார். பிறகு, என்னிடம் அன்புடையவனான (என்) ஸூதன் சரவர்ஷத்தால் அடிக்கப்பட்டு, என்மனத்தை வருத்துகிறவனாகித் தேர்த்தட்டிலிருந்தும் நழுவினான். பிறகு, என்னுடைய ஸூதன் மிக அதிகமான கலக்கத்தையடைந்து பாணங்களினடியால் பூமியிலும் விழுந்தான்; மூர்ச்சையையும் அடைந்தான். ராஜஸ்ரேஷ்டனே! பிறகு, ஸூதன் ராமபாணங்களால் மிகப்பீடிக்கப்பட்டு ஒரு முகூர்த்தகாலத்தில் பிராணனை விட்டான். அப்பொழுது, எனக்கும் பயம் உண்டாயிற்று. பின்பு, அந்தஸூதன் கொல்லப்பட்டபொழுது, நான் மிகவும் கலக்கமடைந்த மனத்தையுடையவனாகி அவர்மேல் சரங்களைத் தொடுக்க, அவர் என்மேல் மிருத்யுவுக்குச்சமமான பாணத்தை விடுத்தார். பின்னர், அவர் உறுதியான வில்லை இழுத்து ஸூதன் விஷயமான துயரத்தை அடைந்தவனும் மனக்கலக்கம் அடைந்தவனுமான என்னைப் பாணத்தினால், பலமாக அடித்தார். அரசனே! ராஜஸ்ரேஷ்ட! அந்தப்பாணமானது என்னுடைய மார்பில்விழுந்து இரத்தத்தைப் பானம் செய்கிறதாகி என்னுடன் கூடவே பூமியில் விழுந்தது. பரத ஸ்ரேஷ்டனே! பிறகு, ராமர், நான் மரித்துவிட்டதாக எண்ணி மேகம்

போல உரக்கக்கர்ஜித்தார்; அடிக்கடி மகிழ்ச்சியையும் அடைந்தார். அரசனே! அவ்விதம் நான் விழுந்தபொழுதோ, அவர் களிப்பை அடைந்து கூடவந்தவர்களான அந்தத் தவசிகளுடன் பெரிய ஆரவாரம் செய்தார்.

அப்பொழுது, அவ்விடத்தில் அந்தயுத்தத்தைப் பார்க்கும் விருப்பத்துடன் வந்தவர்களும் என்னுடைய பக்கத்திலிருந்தவர்களுமான கௌரவர்கள், நான் விழுந்தபொழுது, மிக்கவருத்தத்தை அடைந்தார்கள். ராஜஸ்ரேஷ்டனே! பிறகு, விழுந்தவனான நான் ஸூர்யனுக்கும் அக்னிக்கும் நிகரானகாந்தியையுடைய எட்டுப்பிராமணர்களைப் பார்த்தேன். அவர்கள் யுத்தமத்தியில் என்னை நான்கு பக்கத்திலும் வளைந்துகொண்டு தங்கள் கைகளால் தாங்கிக்கொண்டிருந்தனர். நான் அந்தவேதியர்களால் காக்கப்பட்டவனாகிப் பூமியைத் தொடாமலிருந்தேன். உறவினரால் தாங்கப்படுவதுபோல, அந்தவேதியர்களால் ஆகாயத்தில் தரிக்கப்பட்டவனாயிருந்தேன். ஆகாயத்திலும் ஜலத்திவலைகளால் நனைக்கப்பட்டவனாகி மூச்சுவந்தவன்போல இருந்தேன். அரசனே! பிறகு, அந்தப்பிராமணர்களெல்லாரும் சேர்ந்து என்னைப் பிடித்துக்கொண்டு, 'பயப்படாதே' என்றும், 'உனக்கு க்ஷேமமுண்டாகக்கடவது' என்றும் அடிக்கடி சொன்னார்கள். இப்பால், நான் அவர்களுடைய வார்த்தைகளால் திருப்தியடைந்தவனாகி விரைவாக எழுந்திருந்து, நதிகளில் சிறந்தவளான என்னுடைய தாய் தேரிலிருப்பதைப்பார்த்தேன். கௌரவஸ்ரேஷ்டனே! மகாநதியான அவளாலே யுத்தத்தில் என்னுடைய குதிரைகள் (கடிவாளம்) பிடிக்கப்பட்டன. நான், மாதாவினுடைய பாதங்களையும் அப்படியே பிதிருக்களுடைய பாதங்களையும் பிடித்து (வணங்கி)விட்டுத் தேரில் ஏறினேன். அவள், என்னையும் தேரையும் குதிரைகளையும் ஸாமக்ரிகளையும் காத்தாள். நான் அஞ்சலியுடன் அவளை மறுபடியும் விடுத்தேன். பாரத! பிறகு, நான் வாயுவுக்குநிகரான வேகமுடைய அந்தக்குதிரைகளை ஸ்வயமே ஓட்டிக்கொண்டு, பகல் திரும்பினபொழுது, பார்க்கவருடன் யுத்தம் செய்தேன். பரதஸ்ரேஷ்ட! பிறகு, நான் யுத்தத்தில் ராமர்மேல் வேகமுள்ளதும் மிக்க வலிமையுள்ளதும் மார்பைப் பிளக்கிறதுமான பாணத்தை விடுத்தேன். பின்பு, அவர் என்னுடைய பாணத்தினால் மிகவும் துன்பத்தையடைந்து முழந்தாளைப் பூமியிலூன்றி வில்லை எறிந்துவிட்டு மயக்கத்தை அடைந்தார். ஆயிரம் ஸ்வர்ணங்களைத் தானம்செய்தவரான அந்தராமர் விழுந்தபோது, மேகங்கள் இரத்தத்தை மிகப் பெருக்குகின்றவையாகி ஆகாயத்தை வளைந்தன. இடிக

ளோடும் மின்னல்களோடும் அனேகமாகக் கொள்ளிகள் விழுந்தன: ஜ்வலிக்கின்ற ஸூர்யனையும் சீக்கிரமாக ராகு மறைத்தான். கடுமையான காற்றுக்களும் வீசின; பூமியும் சலித்தது; பருந்துகளும் காக்கைகளும் கழுகுகளும் ஸந்தோஷத்துடன் வந்து விழுந்தன; திசைகள் தீப்பற்றி எரிந்தன; நரியானது அடிக்கடி கோரமாக ஊளையிட்டது; துந்துபிகள் அடிக்கப்படாமலே பேரொலியுடன் முழங்கின. மகாத்மாவான ராமர் பிரஜ்ஞையற்றவர்போலப் பூமியையடைந்தபொழுது, கோரமும் பயங்கரமுமான இந்த எல்லா உத்பாதங்களும் உண்டாயின. கௌரவனே! பிறகு, புஜபலமமைந்த ராமர், சீக்கிரமாக எழுந்திருந்து தளர்ச்சியடைந்தவரும் கோபமூண்டவருமாகி, திரும்பவும், யுத்தத்திற்காகப் பனையையொத்த வில்லை எடுத்துக்கொண்டு என்னைநோக்கி நின்றார். பிறகு, அருளுள்ளவர்களான மகரிஷிகள், என்விஷயத்தில் (வில்லை) எடுத்தவரான அந்தராமரையே தடுத்தார்கள். அறியமுடியாத தன்மையையுடையவரான பார்க்கவர், சினம் மீறினவராயிருந்தும், காலாக்கினிக்கு நிகரான பாணத்தைத் திருப்பிவருவித்துக்கொண்டார். பிறகு, புழுதிகளின் கூட்டத்தால் மறைக்கப்பட்டவனும் மிருதுவான கிரணங்களின்ஸமூகத்தையுடையவனுமான ஸூர்யன் அஸ்தமனத்தை அடைந்தான். ஸுகமாயும் சீதமாயுமிருக்கிற காற்றையுடையதான இரவானது வந்தது. பின்னர், யுத்தத்தை நிறுத்தினோம். அரசனே! இவ்விதம், முடிவானது ஏற்பட்டது. பிறகு, மறுபடியும், இருபத்துமூன்று தினங்கள் விடியற்காலம்தோறும், ஸூர்யன் தெளிவாய் உதித்தபொழுது, மிக்க கோரமான யுத்தம் நடந்தது.

---

நூற்றெண்பத்துமூன்றாவது அத்யாயம்.

## அம்போபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(பீஷ்மருடைய கனவில் தேவதைகள்தோன்றி ப்ரஸ்வாபனாஸ்திரத்தை அவருக்கு நினைப்பூட்டியது.)

ராஜச்ரேஷ்டனே! பிறகு, நான், ராத்திரியில் பிராம்மணர்களையும் பிதிருக்களையும் எல்லாத்தேவர்களையும் ராத்திரியில்ஸஞ்சரிக்கின்ற பூதங்களையும் ராஜச்ரேஷ்டர்களையும் தலையால்வணங்கி, உடனே சயனத்தையடைந்து, ஏகாந்தத்தில், 'இப்பொழுது எனக்குப் பார்க்கவரோடு மிகக்கொடியதும் மிக்ககேட்டைத்தருவதுமான

இந்தயுத்தமானது பலநாளாக நடக்கிறது. போர்முனையில், பெரிதான வீர்யத்தையுடையவரும் வேதியரும் மஹாபலசாலியுமான பார்க்கவரை யுத்தத்தில் வெல்வதற்குத் திறமையுள்ளவனாகவுமில்லை. பிரதாபசாலியான அவர் என்னால் வெல்லக்கூடியவரானால், எனக்குத் தேவதைகள் அருளுள்ளவர்களாகி இரவில் தரிசனம் அளிக்கக் கடவர்' என்று மனத்தால் ஆலோசித்தேன். ராஜஸ்ரேஷ்டனே! பிறகு, பாணங்களால் காயப்படுத்தப்பட்ட நான், 'இந்தஸமயத்தில், விடியற்காலத்தில், வலப்பக்கமாக (ப்படுத்து) நித்திரைசெய்தேன். மஹாராஜனே! பிறகு, தேரிலிருந்தும் விழுந்த என்னைத் தூக்கித்தாங்கிக்கொண்டு, 'பயப்படாதே' என்று ஸமாதானம்செய்த அந்தச்சிறந்த வேதியர்களே கனவில் காட்சிதந்து சூழ்ந்துகொண்டு ஒருவார்த்தை சொன்னார்கள். குருஸ்ரேஷ்டனே! அதைக் கேள். 'கங்காபுத்திரனே! எழுந்திரு. உனக்கு ஒருபயமுமில்லை. கௌரவ! நாங்கள் உன்னைக் காக்கிறோம். நீயோ எங்களுக்குச் சொந்தமானசரீரம். ஜமதக்னியின் புத்திரரான ராமர் உன்னை எவ்விதத்தாலும் சண்டையில் ஜயிக்கமாட்டார். பரதஸ்ரேஷ்டனே! நீயே யுத்தத்தில் ராமரை வெல்வாய். பாரத! நீ ப்ரம்மாவைத் தேவதையாகவுடையதும் எல்லாவற்றையும் ஸாதிப்பதும் பிரஸ்வாபமென்று பெயர்கொண்டதும் மிகவும் விரும்பப்பட்டதுமான இந்த அஸ்திரத்தை நினைத்துக்கொள்வாய். இது முந்தினஜன்மத்தில் உனக்கும் அறியப்பட்டதாயுள்ளதே. இதனை ராமரும் அறியார்; பாருலகில் ஓரிடத்திலும் ஒரு மனிதனும் அறியான். ஓ! புஜபலமமைந்தவனே! இதை நினைக்கக் கடவாய். மிகநன்றாகப் பிரயோகமும்செய். ஓ! ராஜஸ்ரேஷ்டனே! குற்றமற்றவனே! கௌரவனே! எதனால் பெரியவீர்யத்தை உடையவர்களான எல்லாரையும் சிக்ஷிப்பாயோ அது உன்னை வலிய அடையப்போகிறது. அரசனே! அந்த அஸ்திரத்தினாலே ராமரும் நாசத்தைஅடையமாட்டார். கௌரவத்தை அளிப்பவனே! பாவத்தின் ஸம்பந்தத்தையும் நீ ஒருபொழுதும் அடையமாட்டாய். இந்தப் பரசுராமர் உன்னுடைய பாணத்தினால் மிகப்பீடிக்கப்பட்டு நித்திரை செய்வார். பீஷ்மா! யுத்தத்தில் விரும்பப்பட்ட இந்தஅஸ்திரத்தினால் இவரை ஜயித்துவிட்டு, பிறகு, நீயே திரும்ப ஞாபகத்தை உண்டுபண்ணி எழுப்புவாய். கௌரவனே! விடியற்காலத்தில் தேரிலேறிக்கொண்டு இவ்விதம் செய். நாங்கள் தூங்கினவனையும் மரித்தவனையும் ஸமமாகவே நினைக்கிறோம். அரசனே! ஒருபொழுதும் ராமரும் மரிக்கமாட்டார். ஆகையால், நன்கு தோன்றினதான இந்த

ப்ரஸ்வாபாஸ்திரத்தைப் பிரயோகம்செய்' என்றார்கள். அரசனே! ஸமமானரூபத்தையுடையவர்களும் எல்லாரும் காந்திபொருந்திய வடிவமுடையவர்களும் பிராம்மணஶ்ரேஷ்டர்களுமான எட்டுப் பேர்களும் இவ்விதம் சொல்லிவிட்டு எல்லாருமே மறைந்தார்கள்.

---

நூற்றெண்பத்துநான்காவது அத்யாயம்.

## அம்போபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(பரசுராமருக்கும் பீஷ்மருக்கும் யுத்தமும், பீஷ்மருக்கு ப்ரஸ்வாபனாஸ்திரம் நினைவுக்கு வந்ததும்.)

பாரத! ராத்திரியானது சென்றபிறகு, விழித்துக்கொண்டேன். பிறகு, கனவை ஆலோசித்து மிக்கஸந்தோஷத்தை அடைந்தேன். பாரத! பிறகு, எனக்கும் அவருக்கும் நெருக்கமும் எல்லாப்பிராணிகளுக்கும் மயிர்சிலிர்த்தலையுண்டுபண்ணுவதும் ஆச்சரியமுமான யுத்தம் நேரிட்டது. பிறகு, பார்க்கவர் என்மேல் பாணமயமானமழையைப் பெய்தார். பாரத! நானும் அதனைச் சரங்களின் கூட்டத்தினால் தடுத்தேன். பிறகு, மிக்கதவத்தையுடையவரான அவர், மறுபடியுமே, அதிககோபத்தையடைந்து முதல்நாளுண்டான கோபத்தால் என்மேல் இந்திரனுடைய வஜ்ராயுதத்திற்கு நிகராகத் தாக்குவதும் யமனுடையதண்டத்திற்குச் சமமான காந்தியுடையதும் யுத்தத்தில் அக்னிபோல் ஜ்வலிப்பதும் நான்குபக்கங்களையும் விழுங்குவதுமானசக்தியை ஏவினார். பரதஶ்ரேஷ்ட! கௌரவர்களைத் தாங்குபவனே! அது ஆகாயத்தை அடைந்த நக்ஷத்திரம்போல என்னுடைய கழுத்திற்கும் கக்ஷத்திற்கும் மத்தியில் வேகமாக அடித்தது. ஓ! புஜபலமுள்ளவனே! இரத்தம்போன்ற கண்களையுடையவனே! ராமரால் அறுக்கப்பட்டவனான என்னிடமிருந்தும், பர்வதத்திலிருந்து செந்தாதுவினால் செந்நிறமானநீர் பெருகுவதுபோல, மிகவும் கோரமாக உதிரமானது பெருகிற்று. பிறகு, நான் மிக்ககோபத்துடன் பரசுராமர்மேல் யமன் போன்றதும் ஸர்ப்பத்தின் விஷத்தை ஒத்ததுமான பாணத்தை விடுத்தேன். மஹாராஜனே! வீரரும் பிராம்மணஶ்ரேஷ்டருமான அவர், அந்தப்பாணத்தினால் நெற்றியிலடிக்கப்பட்டவராகிக் கொடுமுடியுடன் கூடிய மலைபோல விளங்கினார். அவர், கோபங்கொண்டு திரும்பி, பிரளயகாலத்து அந்தகன்போன்றதும் கொடியதும் பகைவரைஅழிப்பதுமான சரத்தைப் பலமாக இழுத்

துத் தொடுத்தார். கொடியதும் பாம்புபோலச் சீறுகிறதுமான அந் தப்பாணமானது மார்பில் விழுந்தது. அரசனே! அதனால், நானும் இரத்தத்தால் நனைக்கப்பட்டவனாகிப் பூமியில்விழுந்தேன்; மறுபடி யும், அறிவையடைந்து புத்திமானான பார்க்கவர்மேல் பளபளப்பான தும் இடிபோல் விளங்குகிறதுமான சக்தியை ஏவினேன். அது பிராம்மணஶ்ரேஷ்டரான அவருடைய மார்பில் விழுந்தது. அரசனே! அவரும் சோர்வை அடைந்தார். அவருக்கு நடுக்கமுமுண்டாயிற்று. பிறகு, அவருக்கு நண்பரும் வேதியரும் பெரியதவத்தையுடையவரு மான அகிருதவ்ரணர், அவரைத்தழுவிக்கொண்டு, நல்லவார்த்தை களாலே பலவிதமாகக் களைதெளியச்செய்தார். களைதெளிவிக்கப் பட்டவரும் பெரியவிரதமுடையவருமான ராமர், பிறகு, கோபத் தோடும் பொறுமையோடும், அப்பொழுது, சிறந்ததான பிரம்மாஸ் திரத்தை வெளிப்படுத்தினார். பின்னர், அதைத்தடுப்பதற்காகச் சிறந்ததான பிரம்மாஸ்திரமே என்னால் பிரயோகிக்கப்பட்டு, யுத்தத் தின் முடிவைக் காண்பிப்பதுபோல் ஜ்வலித்தது. பாரதர்களில் சிறந்த வனே! அந்தப்பிரம்மாஸ்திரங்கள் ராமரையும் என்னையும் அடையா மலே இடையில் சந்தித்தன. அதனால், ஆகாயத்திலே ஒரே காந்தி யானது உண்டாயிற்று. அரசனே! எல்லாப்பிராணிகளுமே பீடையை அடைந்தன. பாரத! ரிஷிகளும் கந்தருவர்களும் தேவதைகளுமே அஸ்திரங்களுடைய தேஜஸினால் எங்கும் பீடிக் கப்பட்டவர்களாகி மிக்க தாபத்தை அடைந்தார்கள். பின்பு, பூமி யானது மலைகளோடும் காடுகளோடும் மரங்களோடும் சலித்தது. பிராணிகளும் மிக்க தாபத்தை அடைந்தவைகளாகி மிக்க வருத் தத்தையடைந்தன. அரசனே! ஆகாயமானது பற்றியெரிந்தது. பத்துத்திக்குக்களும் புகையால் நிறைந்தன. அப்பொழுது, ஆகா யத்தையடைந்தவர்கள் ஆகாயத்திலிருப்பதற்கு முடியவில்லை. பின்பு, தேவர்களோடும் அஸுரர்களோடும்கூட உலகமானது கூக்குரலிட, வேதமோதுகின்றவர்களான பிராம்மணர்களுடைய வார்த்தையி னால் விரைபவனாகி, 'இது தான் தக்க ஸமயம்' என்றே பிரஸ்வா பாஸ்திரத்தைவிட விருப்பமுள்ளவனாயிருந்தேன். அப்பொழுது, அந்த அஸ்திரமானது நினைக்கப்பட்டு என்மனத்தில் தோன்றி விட்டது.

---

## நூற்றெண்பத்தைந்தாவது அத்யாயம்.

# அம்போபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர் ப்ரஸ்வாபனாஸ்திரத்தைப் பரசுராமர்மீது விட விரும்பியதும், நாரதர் அதனைத் தடுத்ததும், திவ்யபுருஷர்களின் சொற்படி பீஷ்மர் அஸ்திரத்தைத் திருப்பி அழைத்ததும், தாம் தோற்றதாகப் பரசுராமர் சொன்னதும், நாரதர் சொற்படி யுத்தம் நின்றதும்.)

அரசனே! கௌரவ நந்தன! பிறகு, ஆகாயத்தில், 'பீஷ்ம! ப்ரஸ்வாபனாஸ்திரத்தை விடாதே' என்று பெரிதான கூக்குரலானது உண்டாயிற்று. நானோ அந்த அஸ்திரத்தைப் பார்க்கவர் மேல் தொடுக்கவே செய்தேன். ப்ரஸ்வாபனாஸ்திரத்தைப் பிரயோகிக்கிறவனான என்னை நோக்கி நாரதர், 'ஓ! கௌரவ்ய! இதோ, ஆகாயத்தில் ஸ்வர்க்கவாஸிகளான தேவக்கூட்டத்தார்கள் இருக்கிறார்கள். அவர்கள் இப்பொழுது உன்னைத் தடுக்கின்றனர். பிரஸ்வாபனாஸ்திரத்தைப் பிரயோகம் செய்யாதே. ராமர் தவமுடையவரும் பிராம்மணர்களுக்கு நன்மைசெய்பவரும் பிராம்மணரும் உனக்குக்குருவுமாயிருப்பவர். ஓ! கௌரவ்ய! எவ்விதத்தாலும் அவருக்கு அவமானத்தைச் செய்யாதே' என்கிற வார்த்தையைச் சொன்னார். பிறகு, நான் ஆகாயத்திலிருப்பவர்களான அந்த எட்டு ப்ரம்மவாதிகளையும் பார்த்தேன். ராஜஸ்ரேஷ்ட! அவர்களோ, சிரித்துக்கொண்டு, என்னை நோக்கி, 'பரதஸ்ரேஷ்டனே! நாரதர் சொல்லுகிறதை அப்படியே செய். இதுவே உலகங்களுக்குச் சிறந்த நன்மை' என்று மெதுவாகச் சொன்னார்கள். அப்பால், நான் பெரிதான அந்த ஸ்வாபனாஸ்திரத்தைத் திருப்பியழைத்து அந்த யுத்தத்தில் விதிப்படி பிரம்மாஸ்திரத்தை ஜ்வலிக்கச்செய்தேன். ராஜஸ்ரேஷ்டனே! பின்பு, ராமர், அந்த அஸ்திரம் திருப்பியழைக்கப்பட்டதைப் பார்த்து மகிழ்ச்சி அடைந்தவராகி, 'மிக்க மந்தமான புத்தியுள்ள நான் பீஷ்மனால் ஜயிக்கப்பட்டேன்' என்றே விரைவாக வார்த்தையைச் சொன்னார்.

பிறகு, அவர் தம்முடைய பிதாவையும் பூஜ்யரான பிதாமகரையும் பார்த்தார். அவர்கள் அவ்விடத்தில் அவரைச் சூழ்ந்துகொண்டிருந்தார்கள். அப்பொழுது, அவரைநோக்கி இன்சொல்லை முன்னிட்டுச் சொல்லவும் செய்தார்கள். 'குழந்தாய்! மறுபடியும் எவ்விதத்தாலும் இத்தகைய ஸாஹஸத்தைச் செய்யாதே. முக்கிய

மாக, க்ஷத்திரியனான பீஷ்மனோடு யுத்தத்தைஅடைய ஸாஹஸத்தைச் செய்யாதே. பிருகுநந்தன! யுத்தமென்பது க்ஷத்திரியனுக்குரிய தர்மம். பிராம்மணனுக்குத் தன்வேதத்தின் அத்தியயனமும் விரதானுஷ்டானமும் சிறந்த தனம். மிகவும் கொடிதான ஆயுதம் பிடித்தலென்னும் இது முன்பு எங்களால் ஒரு நிமித்தத்தை முன்னிட்டுச் சொல்லப்பட்டது. செய்யத்தகாததான அதுவும் உன்னால் செய்யப்பட்டது. குழந்தாய்! உனக்குப் பீஷ்மனோடு யுத்தத்தில் எதிர்த்தலானது இவ்வளவு போதும். சிறந்தகைகளையுடையவனே! இந்த யுத்தத்திலிருந்தும் விலகு. உனக்கு க்ஷேமமுண்டாகட்டும். நீ இந்தவில்லைப்பிடித்தது போதும். வெல்லமுடியாதவனே! இதை விட்டெறி. பார்க்கவ! தவத்தைச் செய். சந்தனுவின் புத்திரனை இந்தப்பீஷ்மனை எல்லாத்தேவர்களும், 'கௌரவஸ்ரேஷ்டனே! இந்தயுத்தத்திலிருந்தும் ஒழிவடை. குருவான ராமருடன் யுத்தம் செய்யாதே' என்றும், 'நீ யுத்தத்தில் ராமரை ஜயிப்பது உசிதமில்லை. கங்காபுத்திரனே! யுத்தகளத்தில் பிராம்மணனுக்குக் கௌரவத்தைச்செய்' என்றுமே அடிக்கடி சொல்லித் தயைவரச் செய்து தடுத்தார்கள். நாங்களோ உன்னுடைய குருக்கள். ஆகையால், உன்னைத் தடுக்கின்றோம். பீஷ்மன் வஸுக்களிலொருவன். புத்திர! பாக்கியத்தால் ஜீவிக்கிறாய். பார்க்கவ! கங்காபுத்திரனும் சந்தனுவின் புத்திரனும் வஸுவும் பெரியபுகழையுடையவனுமான இவன் உன்னால் எப்படி ஜயிக்கக்கூடியவனாவான்? இந்த யுத்தத்தில் ஓய்வை அடை. பாண்டவர்களில் சிறந்தவனும் இந்திரனுடைய புத்திரனும் பலசாலியும் நரனென்கிற ஸ்ருஷ்டிகர்த்தனும் வீரனும் ஸநாதனனும் பூர்வதேவனும் ஸவ்யஸாசியென்று மூவுலகங்களிலும் கியாதியடைந்தவனும் வீர்யமுடையவனுமான அர்ஜுனனானவன் (முடிவுக்) காலத்தையடுத்துப் பீஷ்மனுக்கு மிருத்யுவாகப் பிரம்மாவினால் படைக்கப்பட்டிருக்கிறான்' என்றார்கள். பிதிருக்களாலே இவ்விதம் சொல்லக்கேட்டவரான அவர், அவர்களைநோக்கி, 'ஓ! பிதிருபிதாமஹர்களே! 'நான் யுத்தத்திலிருந்தும் திரும்பேன்' என்று என்னால் விரதமானது கொள்ளப்பட்டது. இதற்குமுன் ஒருகாலத்திலும் யுத்தமுனையிலிருந்து திரும்பினதில்லை. கங்காபுத்திரனை இஷ்டப்படி யுத்தத்தினின்று ஓயச்செய்யுங்கள். நான் எவ்விதத்தினாலும் இந்தயுத்தத்திலிருந்தும் நிவிருத்தி அடையேன்' என்றார். அரசனே! பிறகு, ரிசீகர் முதலான அந்த முனிவர்கள், அப்பொழுதே, நாரதருடன்கூடவே வந்து, (என்னைநோக்கி)

'ஐயா! இந்தயுத்தத்தினின்றும் ஒழிவடை. பிராம்மணோத்தமனைக் கௌரவி' என்று சொன்னார்கள். நானும், அவர்களை நோக்கி, 'க்ஷத்திரிய தர்மத்தை நோக்கி உலகத்தில் எனக்கு இந்த விரதம் ஏற்பட்டிருக்கிறது. '[1] நான், பின்புறத்தில் சரங்களால் அடிக்கப்பட்டு, ஒருபொழுதும் யுத்தத்திலிருந்தும் பராமுகனாகத் திரும்பேன். நான் லோபத்தினாலும் ஏழைத்தன்மையினாலும் பயத்தினாலும் பொருள் நிமித்தத்தினாலும் சாஸ்வதமான தர்மத்தை விடேன்' என்று என்னுடைய புத்தியானது உறுதிசெய்யப்பட்டிருக்கிறது' என்று சொன்னேன்.

அரசனே! பிறகு, நாரதர் முதலான அந்த எல்லா ரிஷிகளும் என்னுடைய மாதாவான பாகிரதியும் யுத்தகளத்தின் நடுவில் வந்து நின்றார்கள். நான், வில்லையுடையவனும் சஸ்திரத்தை எடுத்தவனும் உறுதியான நிச்சயத்தை உடையவனுமாகி யுத்தகளத்தில் போர் செய்வதற்கு இருந்தேன். பிறகு, அவர்கள் சேர்ந்தவர்களாகி மறுபடியும்சென்று யுத்தத்தில் பிருகுநந்தனரான ராமரை நோக்கி, 'பார்க்கவ! வேதியர்களுடைய மனம் வெண்ணெய் போன்றதன்றோ? சமனத்தையடை. ராம! ராம! அந்தணர் தலைவ! இந்த யுத்தத்திலிருந்தும் நிவிருத்தியடை. பார்க்கவ! பீஷ்மன் உன்னால் கொல்லப்பட இயலான். நீயும் பீஷ்மனால் கொல்லப்பட இயலாய்' என்று சொன்னார்கள். அந்தப் பிதிருக்களெல்லாரும் இவ்விதம் சொல்லுகிறவர்களாகி, யுத்தகளத்தை வளைந்துகொண்டு, பிருகுநந்தனரைச் சஸ்திரத்தை வைக்கும்படி செய்தார்கள். பிறகு, நான், மறுபடியுமே, பிரம்ம வாதிகளும் எட்டுக்கிரகங்கள் உதித்ததுபோல ஜ்வலிக்கிறவர்களுமான அந்த எட்டுப் பேர்களையும் பார்த்தேன். அவர்கள், யுத்தநிமித்தமாயிருப்பவனான என்னைநோக்கி, 'ஓ! தோள்வலியமைந்தவனே! குருவானராமரை அடை. உலகத்திற்கு நன்மையைச்செய்' என்கிற வார்த்தையை அன்போடு சொன்னார்கள். நானும் நண்பர்களுடைய அந்த வார்த்தையினால் ராமர் ஓய்ந்ததைப் பார்த்துவிட்டு, உலகங்களுக்கு நன்மையைச் செய்கிறவனாகி, அந்தச்சொல்லை ஏற்றுக்கொண்டேன். பிறகு, பாணத்தால் மிகவும் புண்பட்டவனான நான் ராமரையடைந்து நமஸ்காரம் செய்தேன். மிக்க தவமுள்ள ராமரும் சிரித்துக்கொண்டு என்னை நோக்கி, அன்போடு, 'பீஷ்ம!

---

1 'நான் முதுகுகாட்டிக்கொண்டு யுத்தத்திலிருந்து ஒருபொழுதும் திரும்பவும் மாட்டேன்; முதுகில் பாணம்படுதலைப் பொறுக்கவும் மாட்டேன்' என்பது ஆங்கிலமொழிபெயர்ப்பின் கருத்து.

இந்த உலகத்தில் பூமியில் ஸஞ்சரிப்பவனும் உனக்கு ஒப்பானவனு மான க்ஷத்திரியனில்லை; போகலாம். நான் இந்த யுத்தத்தில் உன்னால் நன்கு மகிழ்விக்கப்பட்டேன்' என்றார். பார்க்கவர் என்னுடைய எதிரிலே அந்த மகாத்மாக்களுடைய மத்தியில் அந்தக் கன்னி கையை அழைத்துத் தீனமான வார்த்தையினால் சொல்லலானார்.

---

நூற்றெண்பத்தாறுவது அத்யாயம்.

## அம்போபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(அம்பை பரசுராமரிடம் விடைபெற்றுத் தபோவனம்சென்று கடுந்தவம் செய்தது.)

ராமர் சொல்லுகிறார்: 'பெண்ணே! என்னால் சக்தியுள்ள வரையில் யுத்தம் செய்யப்பட்டது. மேலான முயற்சியும் செய்யப் பட்டது. இப்படியிருந்தும், நான் மிகவும் உத்தமமான அஸ்திரங்களைக் காண்பித்தும், வில்லாளிகளில் சிறந்தவனான பீஷ்மனை மிஞ்சுவதற்கு வல்லவனாகவில்லை யென்பது எல்லா உலகங்களுக்குமே பிரத்தியக்ஷம். இது என்னுடைய பெரியசக்தி. இது என்னுடைய பெரியபலம். கல்யாணி! நீ இஷ்டப்படி போகலாம். நான் உனக்கு வேறு எதைச் செய்வேன்? பீஷ்மனையே அடை. உனக்கு வேறுகதி யில்லை. பெரிய அஸ்திரங்களை விடுகிறவனான பீஷ்மனால் ஜயிக்கப்பட்டேன்' என்றார்.

இவ்விதம் சொல்லிவிட்டு, பிறகு, பெரியமனத்தையுடையவரான ராமர் பெருமூச்சுவிட்டுக்கொண்டு மௌனமாயிருந்தார். பிறகு, கன்னிகையானவள் பிருகுநந்தனரை நோக்கி, 'ஓ! பகவானே! இஃது உண்மையே. பகவானான நீர் எப்படிச் சொன்னீரோ அப் படியேதான். சிறந்த புத்தியையுடைய இந்தப்பீஷ்மன் யுத்தத்தில் தேவர்களாலும் வெல்லமுடியாதவன். உம்மாலே என்னுடைய கார்ய மானது, சக்திக்கும் உத்ஸாஹத்திற்கும் தக்கபடி செய்யப்பட்டது. யுத்தத்தில் தடுக்கமுடியாததான வீர்யமும் செலுத்தப்பட்டது. தடுக்க முடியாத பலவித அஸ்திரங்களும் பிரயோகிக்கப்பட்டன. கடைசியாக, யுத்தத்தில் மிஞ்சுவதற்கு முடியவேயில்லை. நான் எவ் விதத்தாலும் மறுபடியும் இந்தப் பீஷ்மனை அடையேன். ஓ! தவத் தையே தனமாகவுடையவரே! பார்க்கவஸ்ரேஷ்டரே! எந்த இடத் தில் யுத்தத்தில் நானே பீஷ்மனை விழச்செய்வேனோ (=விழச் செய்யும் சக்தியை அடைவேனோ) அந்தவிடத்திற்குப் போவேன்' என்றாள். இவ்விதம் சொல்லிவிட்டு அந்தக் கன்னிகை கோபத்

தால் கலங்கிய கண்களையுடையவளும் தவம் செய்வதில் ஸங்கற்பத்தைச் செய்தவளுமாகி என்னுடைய வதத்தைக் கருதிக்கொண்டு சென்றாள். பாரத! பிறகு, அந்தப் பார்க்கவஸ்ரேஷ்டர் என்னிடம் சொல்லிக்கொண்டு முனிவர்களோடு வந்தபடியே மஹேந்திர பர்வதம் சென்றார். மஹாராஜனே! பிறகு, நான் தேரிலேறிக்கொண்டு பிராம்மணர்களால் துதிக்கப்பட்டு நகரத்தில் பிரவேசித்து, மாதாவான ஸத்தியவதியினிடம் நடந்தபடி தெரிவித்தேன். அவளும் என்னைக்குறித்து ஸந்தோஷித்தாள். அந்தக்கன்னிகையின் பிரவிருத்தியை அறிவதற்காக அறிவிற்சிறந்தவர்களான மனிதர்களையும் கட்டளையிட்டேன். என்னால் ஏவப்பட்டவர்களும் எப்பொழுதும் விரும்பினநன்மையைச்செய்பவர்களுமான அவர்கள், தினந்தோறும், அவளுடைய போக்கையும் பேச்சையும் செய்கையையும் எனக்குத் தெரிவித்துக்கொண்டுவந்தார்கள். அந்தக்கன்னிகை தவத்தில் உறுதிகொண்டு வனத்தையடைந்தபொழுதே, நான் மனோவியாதியடைந்தவனும் தீனனுமாகி அறிவிழந்தவன்போலானேன். ஐயா! தவத்தினால் கடுமையான நயுடைய பிரம்மவித்தான பரசுராமரைத்தவிர, என்னை ல் வீர்யத்தினால் ஒரு க்ஷத்திரியனும் வென்றதில்லை. அரசனே! தவிரவும், நான் நாரதரிடத்திலும், அப்படியே, வியாஸரிடத்திலுமே இந்தச் செயலைத் தெரிவித்தேன். அவர்களிருவரும், என்னை நோக்கி, 'பீஷ்ம! காசிராஜன்புத்திரியைக்குறித்து நீ வருத்தப்பட வேண்டாம். எவன் முயற்சியினால் தெய்வத்தை விலக்கத்துணிவான்?' என்று சொன்னார்கள். மஹாராஜனே! அந்தக் கன்னிகையோ யமுனையின் தீரத்தை அடுத்து அங்குள்ள ஆஸ்ரமங்களின் மண்டலத்தில் புகுந்து மனிதர்களால் செய்தற்கரிய தவத்தைச் செய்தாள். தவத்தையே செல்வமாகவுடைய அவள், ஆறுமாதம் ஆகாரமற்றவளும் இளைத்தவளும் சரீரத்தில் மென்மையில்லாதவளும் சடைகளுள்ளவளும் அழுக்காகிற சேறுபூசினவளுமாகிக் காற்றைப்புஜித்துக்கொண்டு கட்டைபோலானாள். பிறகு, அந்தப்பெண்பால் ஒருவருஷம் யமுனையின் ஜலத்தைஅடுத்து ஜலத்தில் வஸித்துக்கொண்டு ஆகாரமில்லாமல் போக்கினாள். கடுமையானகோபமுள்ள அவள், மற்றொரு வருஷம், காற்கட்டைவிரல்நுனியால் நின்றுகொண்டும் கீழேவிழுந்த ஓர் இலையை அருந்திக்கொண்டும் போக்கினாள். இவ்விதம், பன்னிரண்டு வருஷம் பூமியையும் ஆகாயத்தையும் தவிக்கச்செய்தாள். அவள், ஞாதிகளாலே தடுக்கப்பட்டும் திருப்பமுடியாதவளானாள். பின்பு, ஸித்தர்களாலும் சாரணர்களாலும் அடையப்பட்டதான வத்ஸபூமியில்

புண்ணியத்தையே சீலமாகக்கொண்டவர்களும் மஹாத்மாக்களுமான தவசிகளுடைய ஆஸ்ரமத்தை அடைந்தாள். அந்தக் காசிராஜன்மகள் அவ்விடத்திலுள்ள புண்யதீர்த்தங்களில்பகலுமிரவும் ஸ்நானம்செய்து கொண்டு இஷ்டப்படி ஸஞ்சரித்தாள். பிரஜைகளுக்குத் தலைவனே! அரசனே! மஹாராஜனே! கௌரவனே! நந்தாஸ்ரமம், சுபமான உலூகருடைய ஆஸ்ரமம், ச்யவனருடைய ஆஸ்ரமம், பிரம்மாவி னுடையஸ்தானம், பிரயாகை, தேவயஜனம், தேவாரண்யங்கள், போகவதி, கௌசிகருடைய ஆஸ்ரமம், மாண்டவ்யருடைய ஆஸ்ரமம், திலீபருடைய ஆஸ்ரமம், ராமஹ்ரதம், [1]பைலருடைய ஆஸ்ரமம்,கர்க் கருடைய ஆஸ்ரமம் இந்தத் தீர்த்தங்களில் அப்பொழுது காசிராஜன் கன்னிகையானவள் செய்யமுடியாத விரதத்தைமேற்கொண்டு ஸ்நா னம் செய்தாள். கௌரவனே! என்னுடைய மாதாவானவள்,ஜலத்தி லிருந்துகொண்டு அவளைநோக்கி, 'கல்யாணி! எதற்காகத்துன்பத்தை அடைகிறாய்? என்னிடம் உண்மையையே சொல்லு' என்று கேட் டாள். அரசனே! பிறகு, குற்றமற்றவளான அவள், இவளை நோக்கி அஞ்சலிசெய்துகொண்டு, 'அழகியகண்களையுடையவளே! ராமர் பீஷ்மனாலே யுத்தத்தில் ஜயிக்கப்பட்டார். பாணத்தை எடுத்தவனான அவனை வேறு எந்தஅரசன் ஜயிப்பதற்கு உத்ஸாஹத்தையடைவான்? அப்படிப்பட்ட நான் பீஷ்மனுடைய நாசத்திற்காக மிக்ககடுமையான தவத்தைச் செய்கிறேன். ஓ! தேவி! நான் அந்த அரசனைக் கொல் வதற்காகப் பூமியில் ஸஞ்சரிக்கிறேன். ஓ! தேவி! இது விரதத்தின் பயன். இந்த விஷயத்தின்மேல் எனக்கு எப்படியாகுமோ?' என்றாள்.

பிறகு, நதியானவள், 'பெண்ணே! கோணலாக நடக்கிறாய். குற்ற மற்ற அங்கங்களையுடையவளே! பெண்ணே! இந்த இஷ்டமானது உன்னால் அடையமுடியாதது. காசிராஜன் பெண்ணே! நற்குணமுள்ள வளே! பீஷ்மனுடைய நாசத்திற்காக விரதத்தை அநுஷ்டிக்கிறா யானால், விரதத்திலிருப்பவளான நீ சரீரத்தைவிட்டாலும் கோண லானதும் மழையிலுண்டான ஜலத்தையுடையதும்(அடையமுடியாத) கெட்ட துறைகளையுடையதுமான நதியாக ஆகிவிடுவாய்; (மனிதர்க ளால்) அறியக்கூடியவளாகமாட்டாய். மழைக்காலத்திலுண்டானவ ளும் எட்டுமாதம் இல்லாதவளும் பயங்கரமான முதலைகளோடு கூடின வளும் கோரமானவளும் எல்லாப் பிராணிகளுக்கும் பயத்தைச் செய்கிறவளுமாகிவிடுவாய்' என்றாள். அரசனே! இவ்விதம் காசிரா

---

1 'பைல கர்க்கஸ்யாஸ்ரமே' என்பது மூலம்; 'பைலகர்க்கருடைய ஆஸ்ரமம்' என்பது ஆங்கில மொழிபெயர்ப்பு.

ஜன்கன்னிகையை நோக்கிச் சொல்லிவிட்டு, பிறகு, மஹாபாக்கிய வதியும் பெண்பாலுமான என்னுடைய மாதாவானவள் புன்னகை செய்துகொண்டு திரும்பிவிட்டாள். மறுபடியும், சிறந்த நிறத்தை யுடைய அந்தக் கன்னிகை, ஒரு ஸமயம் எட்டாவது மாஸம் வரை யிலும், ஒரு ஸமயம் பத்தாவது மாஸம் வரையிலும், தீர்த்தத்தை யும் பானம் செய்யவில்லை. கௌரவனே! அந்தக் காசிராஜனுடைய கன்னிகை தீர்த்தத்தில் ஆசையினாலே அங்கங்கு விரைந்து ஓடி மறு படியும் வத்ஸபூமியில் வந்து விழுந்தாள். பாரத! அந்தக் கன்னிகை யானவள், வத்ஸபூமியில் மாரிக்காலத்திலுள்ளதும் முதலைகளுள்ள தும் கெட்ட ஜலமுள்ளதும் வீணாகச் செல்லுவதுமான அம்பை யென்று பேருள்ள நதியாக ப்ரஸித்தியடைந்தாள். அவள் அந்தத் தவத்தால் பாதிச் சரீரத்தால் வத்ஸதேசத்தில் நதியாகவும் (மற்றப் பாதிச் சரீரத்தால்) பெண்ணாகவும் ஆனாள்.

## நூற்றெண்பத்தேழாவது அத்யாயம்.

# அம்போபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(மஹாதேவர் அம்பைக்கு எதிரில் தோன்றியதும், அவர் அவளுக்கு மறுஜன்மத்தில் பீஷ்மரைக் கொல்லும்படியான வரத்தை அளித்ததும், அவள் தீயில் பாய்ந்ததும்.)

ஐயா! பிறகு, அந்தத் தவசிகளெல்லாரும் தவத்தில் நிச்ச யத்தை வைத்தவளான அவளைப் பார்த்துத் திருப்பினார்கள்; 'என்ன காரியம்?' என்றும் கேட்டார்கள். பின்பு, அவள், உடனே தவத் தில் சிறந்தவர்களான அவர்களை நோக்கி, 'ஓ! தபோதனர்களே! பீஷ்மனால் நிராகரிக்கப்பட்டவளும் பதியின் தர்மத்திலிருந்தும் நழு வும்படி செய்யப்பட்டவளுமாயிருக்கிறேன். அவனுடைய வதத் திற்காக எனக்குத் தீக்ஷை; உலகத்திற்காக இல்லை. பீஷ்மனைக் கொன்றுவிட்டுச் சாந்தியை அடைவேனென்பதே (என்னுடைய) நிச்சயம். ஓ! தபோதனர்களே! எவன் நிமித்தமாகச் சாச்வத மான இந்தத் துக்கத்தை அடைந்தவளாயிருக்கிறேனோ, இவ்வுல கில் பதிலோகமற்றவளும் ஸ்திரீயாகாதவளும் புருஷனாகாதவளு மானேனோ அந்தக் கங்காபுத்திரனை யுத்தத்தில் கொல்லாமல் திரும்

பேன். என்னால் சொல்லப்பட்ட இது என் மனத்திலுள்ள ஸங்கற்பம். பெண்தன்மையில் வெறுப்படைந்தவளும் ஆண்தன்மையின் நிமித்தம் நிச்சயம் செய்தவளுமாகிப் பீஷ்மன்விஷயத்தில் பிரதி செய்ய விரும்புகிறேன். நான் மறுபடியும் தடுக்கத்தக்கவளல்லேன்' என்றாள்.

சூலபாணியும் உமாபதியுமான தேவர், அந்தத் தவசிக்கு அந்த மஹரிஷிகளுடைய மத்தியில், தம்ரூபத்தோடு காட்சியளித்தார். பிறகு, அவள், வரத்தினால் மகிழ்விக்கப்பட்டவளாகி, என்னுடைய அபஜயத்தைப் பிரார்த்தித்தாள். மனவுறுதியுள்ளவளான அவளை நோக்கி, தேவரானவர், 'கொல்லப்போகிறாய்' என்று மறுமொழி உரைத்தார். பிறகு, அந்தக் கன்னிகை, திரும்பவும் ருத்திரரை நோக்கி, 'ஓ! தேவரே! ஸ்திரீயான எனக்கு யுத்தத்தில் எப்படி வெற்றி உண்டாகும்? ஓ! உமாபதியே! பெண்தன்மையினால் என்னுடைய மனமானது சிறிதும் சௌர்யமும் தைர்யமும் இல்லாததாயிருக்கிறது. ஓ! பூதேசரே! உம்மால் பீஷ்மனுடைய தோல்வியானது உறுதிகூறவும்பட்டது. ஓ! விருஷபத்வஜரே! அது உண்மையாகும்படி செய்யும். யுத்தத்தில் சந்தனுவின் புத்திரனான பீஷ்மனை எதிர்த்துக் கொல்லும்படி செய்யும்' என்று சொன்னாள். விருஷபத்துவஜத்தையுடைய மஹாதேவர், அந்தக் கன்னிகையைநோக்கி, 'கல்யாணி! என்னுடைய வாக்கானது பொய்யைச்சொல்லாது; மெய்யே ஆகும். யுத்தத்தில் பீஷ்மனைக் கொல்லுவாய். ஆண்தன்மையையும் அடைவாய். வேறு தேகத்தை அடைந்து அதை எல்லாம் நினைக்கவும் போகிறாய். துருபதனுடைய குலத்தில் பிறந்தவளாகி மஹாரதனாவாய். வேகமுள்ள அஸ்திரங்களையுடையவனும் பலவிதமாக யுத்தம் செய்கிறவனும் மிகவும் ஒப்புக்கொள்ளப்பட்டவனுமாவாய். கல்யாணி! இவையெல்லாம் சொன்னபடியே ஆகும். பிறகு, ஒரு காலவித்தியாசத்தால் ஆண்பிள்ளையுமாவாய்' என்று சொன்னார். இவ்விதம் சொல்லிவிட்டு, ஜடாமகுடதாரியும் விருஷபக்கொடியையுடையவருமான மஹாதேவர், ரிஷிகள் பார்த்திருக்கும்பொழுதே, அங்கேயே மறைந்தார். அரசனே! பிறகு, காசிராஜனுடைய மூத்தபுத்திரியும் சிறந்த நிறமுடையவளும் குற்றம் சொல்லப்படாதவளுமான அவள், அவர்கள் பார்த்திருக்கும் பொழுது, அந்த வனத்திலிருந்தும் விறகுகளைச் சேகரித்து மிகப் பெரிதான சிதையைச் செய்து நெருப்பைவைத்து, அக்னியானது நன்கு மூண்டெரிந்தபொழுது, கோபத்தால் ஜ்வலித்தமனத்துடன்

[1] யமுனாநதியின் பக்கத்தில், 'பீஷ்மனைக் கொல்லுவதற்கு' என்று சொல்லிக்கொண்டு அக்னியில் பிரவேசித்தாள்' என்றார்.

---

நூற்றெண்பத்தெட்டாவது அத்யாயம்.

## அம்போபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(த்ருபதன் தனக்குப் பிள்ளையை விரும்பி மஹாதேவரைக் குறித்துத் தவம் செய்ததும், அவர் முதலில் பெண்ணாகப்பிறந்து பிறகு ஆணாகும் பிள்ளை உண்டாகுமென்று வரமளித்ததும், த்ருபதன்மனைவி பெண்பிறந்ததை மறைத்து ஆணெனச்சொல்லி ஜாதகர்ம முதலியனசெய்வித்துச் சிகண்டி யென்று பேரிட்டதும்.)

துர்யோதனன், 'ஓ! கங்கையின் புத்திரரே! யுத்தத்தில் சிறந்தவரே! பிதாமஹரே! அப்பொழுது, [2] சிகண்டியானவன் முதலில் கன்னிகையாகி எப்படிப் புருஷனானன் என்பதை எனக்குச் சொல்லும்' என்றான். பீஷ்மர் சொல்லுகின்றார்: 'ராஜஶ்ரேஷ்டனே! பிரஜைகளுக்குப் பதியே! அந்தத் துருபதராஜனுடைய மனைவியோ, அன்பிற்குரிய மஹிஷியும் புத்திரனில்லாதவளுமாயிருந்தாள். மஹாராஜனே! அந்தச் சமயத்திலே, துருபதராஜன், நம்மை வதம் செய்வதற்காக நிச்சயம்செய்து கடுமையான தவத்திலிருந்து கொண்டு, 'ஓ! மஹாதேவரே! கன்னிகையாயில்லாமல் எனக்குப் புத்திரனுண்டாகட்டும்' என்று சொல்லிப் புத்திரனுக்காகச்சங்கரரை மகிழ்வித்தான். 'ஓ! பகவானே! பீஷ்மனுக்குப் பிரதிசெய்ய விருப்பமுள்ளவனாகிப் புத்திரனை விரும்புகிறேன்' என்றான். தேவ தேவரான சங்கரர், 'உனக்குப் பெண்ணாகவும் ஆணாகவுமுள்ளவன் உண்டாவான்' என்று சொல்லினர். 'அரசனே! தவத்திலிருந்தும் ஒழிவடை. இது ஒருபொழுதும் வேறுவிதமாகாது' என்றும் கூறினர். அவனோ, நகரத்தையடைந்து மனைவியை நோக்கி, 'முயற்சியைச் செய்தேன். மஹாதேவரை நான் தவத்தினால் ஆராதித்தேன். சம்பு

---

1 'யமுநாம் அபித꞉' என்பது மூலம்; 'யமுனையின் தீவில்' என்பது ஆங்கில மொழிபெயர்ப்பு.

2 இங்கே, சிகண்டி, சில விடத்தில் ஆண்பாலாகவும் சில விடத்தில் பெண்பாலாகவும் மூலத்தில் வழங்கப்பட்டிருத்தலால், மொழிபெயர்ப்பும் அங்ஙனமே செய்யப்பட்டிருக்கிறது.

வானவர், 'கன்னிகை உண்டாகி, பிறகு, ஆண்பிள்ளை ஆவாள்' என்றும் சொன்னார். சங்கரர், அடிக்கடி வேண்டப்பட்டும், 'விதி' என்று சொல்லிவிட்டார். அது மாறாகாது. அது அப்படியே ஆகுமன்றோ?' என்றான்.

பிறகு, நல்ல மனத்தையுடையவளான அந்தத் துருபதனுடைய பத்தினியானவள், நியமத்துடனிருந்துகொண்டு, ருதுகாலத்தில் துருபதனிடம் சென்றாள். அரசனே! நாரதர் என்னிடம் சொன்னபடி, விதிகளில் சொல்லப்பட்ட கர்மாவைச்செய்து துருபதனிடமிருந்தும் குறித்தகாலத்தில் கர்ப்பத்தையடைந்தாள். பிறகு, தாமரைமலர்கள் போன்ற கண்களையுடைய அந்த ராஜஸ்திரீ கர்ப்பத்தைத்தரித்தாள். குருநந்தன! அப்பொழுது, சிறந்த கைகளையுடைய அந்தத்துருபதன் மகனை அடைவதிலுள்ள ஆசையினாலே பிரியமான அந்த மனைவிக்கு இனிய உபசாரங்களைச் செய்தான். கௌரவ! மனைவியானவள் விரும்பினவற்றையெல்லாம் அடைந்தாள். மஹாராஜனே! பூபதியான துருபதராஜன் புத்திரனில்லாமலிருக்கும்பொழுது அவனுடைய பட்டமகிஷியான அந்தத் தேவியானவள் காலக்கிரமமாக மிகவும் சிறந்த ரூபத்தையுடைய கன்னிகையைப் பெற்றாள். ராஜஶ்ரேஷ்ட! மனோதைர்யமுள்ளவளான அவள், புத்திரனில்லாதவனான துருபதராஜனிடம், 'என்னுடைய இந்தக் குழந்தை புத்திரன்' என்று வெளியிட்டாள். அரசனே! பிறகு, அந்தத் துருபதராஜன், மறைக்கப்பட்ட பெண்குழந்தைக்கு, புத்திரனுக்குச் செய்வதுபோல, புத்திரகார்யங்களனைத்தையும் செய்வித்தான். மேலும், துருபதனுடைய தேவியான அவள் புத்திரனென்று சொல்லிக்கொண்டு(ரகஸ்யமான) ஆலோசனையை முழு முயற்சியாலும் காத்தாள். பட்டணத்தில், துருபதனைத் தவிர, ஒருவரும் அந்தக் (குழந்தையைக்) கன்னிகை என்று அறியவில்லை. அந்தத் துருபதன் குறைவுபடாத சக்தியுள்ள மஹாதேவருடைய அந்த வார்த்தையை நம்பி, அந்தக் கன்னிகையை மறைத்து வைத்தான்; புத்திரனென்றும் சொன்னான். அரசன், ஆண்குழந்தைக்குச் செய்வதுபோல விதியுடன் ஜாதகர்ம முதலான அனைத்தையும் செய்வித்தான். அந்தக் கன்னிகையை ஜனங்கள் சிகண்டி என்று அறிந்தார்கள். நானொருவனே, ஒற்றனாலும் நாரதரின் சொல்லாலும் தேவருடைய சொல்லாலும் அப்படியே அம்பையினுடைய தவத்தினாலும் அறிந்தேன்.

## நூற்றெண்பத்தொன்பதாவது அத்யாயம்.

# அம்போபாக்யான பர்வம். (தொடர்ச்சி.)

(புருஷவேஷத்துடன் வந்த சிகண்டி துரோணரிடம் வில்வித்தை கற்றதும், அவனுக்குத் தசார்ணதேசத்து அரசன்மகளை மணம் செய்வித்ததும், அந்த ராஜகுமாரி சிகண்டி பெண் என்பதைத் தன்தகப்பனுக்குத் தெரிவித்ததும், தசார்ண ராஜன் தன்னை மோசம் செய்ததற்காகத் துருபதனைச் சுற்றத்துடன் கொல்வதாக அவனுக்குத் தூதனுப்பியதும்.)

பகைவரை வாட்டுபவனே! பிறகு, துருபதன் தன் பெண்ணுக்குச் சித்திரம் முதலானவைகளிலும் அப்படியே சில்ப வேலைகளிலும் எல்லாத் தொழில்களிலும் பயிற்சியுண்டாகும்படி முயற்சியைச் செய்தான். ராஜஸ்ரேஷ்டனே! சிகண்டி பாணத்திலும் அஸ்திரத்திலும் துரோணருக்குச் சிஷ்யனானான். மஹாராஜனே! அவனுடைய சிறந்த நிறத்தையுடையவளான தாயானவள் அப்பொழுது புத்திரனுக்கு (மனைவிதேடுவது) போலக் கன்னிகைக்கு மனைவி தேடும் நிமித்தமாக அரசனை ஏவினாள். பிறகு, துருபதன் யௌவனத்தை அடைந்தவளான அந்தக் கன்னிகையைப் பார்த்துப் பெண்ணென்று கருதி, பிறகு, மனைவியுடன் கவலையையடைந்தான். அவன், 'என்னுடைய இந்தக் கன்னிகை யௌவனத்தை அடைந்து துயரத்தை வளர்க்கிறவளானாள்; என்னால் சூலபாணியினுடைய வார்த்தையினால் மறைக்கவும் பட்டாள்' என்றான். (அப்பொழுது,) மனைவியானவள், 'ஓ! மஹாராஜனே! அது எவ்விதத்தாலும் பொய்யாகாது. மூவுலகத்திற்கும் கர்த்தாவான சங்கரர் இந்த விஷயத்தில் என்வீணான சொல்லைச் சொல்லக் கூடியவராவார்? ஓ! அரசரே! உமக்கு விருப்பமிருந்தால் சொல்லுகிறேன். என்னுடைய வார்த்தையைக் கேளும். ஓ! பிருஷதபுத்திரரே! இப்பொழுது, (என் வார்த்தையைக்) கேட்டபிறகு, உம்முடைய புத்தியைச் செலுத்தும். இவனுக்கு விதிப்படி விவாகத்தை முயன்று செய்யவேண்டும். அந்த ஈஸ்வரருடைய வார்த்தையானது சத்தியமே ஆகும் என்பது என்னுடைய உறுதியான எண்ணம்' என்றாள்.

பிறகு, அந்தத் தம்பதிகள் அந்தக் கார்யத்தில் உடனே உறுதியைச்செய்து தசார்ணதேசாதிபதியின் புத்திரியான கன்னிகையை வரித்தார்கள். பிறகு, ராஜஸ்ரேஷ்டனான துருபதராஜன்,

குலத்தைப்பற்றி எல்லா அரசர்களிடமும் விசாரித்துத் தசார்ண தேசத்தரசனுடைய புத்திரியைச் சிகண்டிக்கு மனைவியாக வரித்தான். ஹிரண்யவர்மன் என்று சொல்லப்பட்ட தசார்ணதேசத்தரசனை அவனும் அந்தச் சிகண்டிக்குக் கன்னிகையை அளித்தான். ஹிரண்யவர்மனென்கிற அந்த அரசனும், தசார்ண தேசத்தில் மகானும் மிகவும் வெல்லமுடியாதவனும் நெருங்க முடியாதவனும் பெரிய சேனையையுடையவனும் பெரிய மனமுடையவனுமாயிருந்தான். ராஜஸ்ரேஷ்டனே! அப்பொழுது, விவாஹம் செய்யப்பட்டபின், அந்தக் கன்னிகை யௌவனத்தை அடைந்தாள். சிகண்டினி என்கிற இந்தக் கன்னிகையும் யௌவனத்தை அடைந்தாள். சிகண்டியும் பாணிக்ரகணம் செய்துகொண்டு, மறுபடியும், [1] காம்பில்ய தேசத்தை அடைந்தான். ஹிரண்யவர்மன்மகளான அவளும் சிறிதுகாலம் சிகண்டியான அந்தக் கன்னிகையை ஸ்திரீயென்று அறியவில்லை. எப்பொழுது அந்த ராஜகன்னிகை இவளை ஸ்திரீயாகவே அறிந்தாளோ அப்பொழுது லஜ்ஜையடைந்து பாஞ்சாலராஜனுடைய புத்திரியான சிகண்டினியென்கிற அந்தக் கன்னிகையைப் பற்றித் தன் வளர்ப்புத் தாய்களுக்கும் தோழிகளுக்கும் தெரிவித்தாள். ராஜஸ்ரேஷ்டனே! பிறகு, தசார்ணதேசத்தவர்களான அந்தச் செவிலித்தாய்கள் அப்பொழுதே மிக்க துன்பத்தையடைந்தார்கள்; வேலைக்காரிகளையும் அனுப்பினார்கள். பின்பு, தூதிகளெல்லாரும் தசார்ணதேசாதிபதியினிடம் நடந்தபடி (துருபதனுடைய) வஞ்சனையைத் தெரிவித்தார்கள். அந்த அரசனும் சினங்கொண்டான். மஹாராஜனே! அப்பொழுது, சிகண்டியும் ராஜகிருஹத்தில் பெண் தன்மையில் சிறிதும் ருசியில்லாமலே புருஷன்போல மகிழ்ச்சியுடன் விளையாடினான். பாரதஸ்ரேஷ்டனே! ராஜஸ்ரேஷ்ட! பிறகு, ஹிரண்யவர்மன் சிலநாளில் அதைக்கேட்டுக் கோபத்தால் வருத்தமடைந்தான். பிறகு, அவன் கடுங்கோபத்துடன் துருபதனுடைய வீட்டுக்குத் தூதனை அனுப்பினான். பிறகு, ஹிரண்யவர்மனுடைய தூதன், துருபதனையடைந்து, ஒருவனாக ஏகாந்தத்தில் அழைத்துக்கொண்டு போய், ரகஸ்யத்தில் ஒருவார்த்தை சொல்லலானான். 'அரசரே! குற்றமற்றவரே! தசார்ணதேசத்தரசர், உம்மால் ஏமாற்றப்பட்டு, அவமானத்தால் மிக்க கோபங்கொண்டவராகி, உம்மைநோக்கி இந்த வார்த்தையை உரைக்கலானார். என்னவென்றால் :—'அரசனே! என்னை அவமானம் செய்கிறாய். உன்னால் கெட்ட ஆலோசனைசெய்யப்பட்டது;

[1] தக்ஷிணபாஞ்சாலம்; துருபதனுடையஆளுகைக் குட்பட்டது.

நிச்சயம். கெடுமதியுள்ளவனே! அறிவின்மையால், உன்னுடைய கன்னிகைக்காக என்னுடைய கன்னிகையை யாசித்தபடியால், இப்பொழுது, அந்த வஞ்சனைக்குரிய பயனை அடையக்கடவாய். இதோ நான் உன்னை உறவினர்களோடும் மந்திரிகளோடும் கொல்லுகிறேன்; உறுதியாயிரு. என்னுடைய வீர்யத்தையும் குலத்தையும் நல்ல நடையையும் அவமதித்து, நீ, மனிதர்களில் முன்பு எவரும் செய்திராத வஞ்சனையைச் செய்தாய். எல்லாக் காரியங்களையும் செய்துகொள்ளு. சிறந்த போகங்களை அனுபவித்துக் கொள்ளு. உன்னைச் சுற்றத்துடன் கொல்லுவதற்காக விரைவில் படையெடுக்கப்போகிறேன்' என்றார்' என்று சொன்னான்.

நூற்றுத்தொண்ணூறுவது அத்யாயம்.

## அம்போபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(தசார்ண ராஜன் மீண்டும் துருபதனுக்குத் தூதனுப்பியதும், துருபதன் தன் மனைவியோடு ஆலோசனை செய்ததும்.)

அரசனே! அப்பொழுது, இவ்விதம் தூதன் சொல்லியதைக் கேட்டதும், துருபதனுடைய வாக்கானது, பிடிக்கப்பட்ட திருடனுடைய வாக்குப்போல் ஒன்றும் சொல்ல எழவில்லை. அவன், ஸம்பந்தியைச் சமாதானம் செய்வதற்கு, இனிமையாகப் பேசுகின்ற தூதர்களை அனுப்பி, 'அப்படியில்லை' என்று சொல்லிக்கொண்டு, தீவ்ரமானமுயற்சியைச் செய்தான். பிறகு, அந்த ஹிரண்யவர்மன், மறுபடியுமே, பாஞ்சாலன்புத்திரியைக் கன்னிகையென்று உண்மையாக அறிந்தான்; அறிந்து, உடனே, விரைவுடன் வெளிக்கிளம்பி வந்தான். பிறகு, செவிலித்தாய்களுடையசொல்லினாலே, புத்திரியை அவ்விதம் வஞ்சித்ததை,அளவற்ற பராக்கிரமத்தை யுடையவர்களான மித்திரர்களுக்கு, அப்பொழுதே, சொல்லியனுப்பினான். பாரத! பின்பு, ராஜஶ்ரேஷ்டனான அவன் சேனைகளுடைய கூட்டத்தைச் சேர்த்துக்கொண்டு துருபதனைக்குறித்துப் போருக்குப் புறப்படுவதில் எண்ணம் வைத்தான். ராஜஶ்ரேஷ்டனே! பிறகு, ஹிரண்யவர்மனென்கிற அந்த அரசன், மந்திரிகளுடன் பாஞ்சால ராஜனைக்குறித்து நன்றாக ஆலோசனை செய்தான். அந்த ஆலோசனையில், மிக்கவலிமையுள்ளவர்களான அந்த அரசர்கள், 'அரசனே! சிகண்டி கன்னிகையென்பது உண்மையாயிருக்கும்பக்ஷத்தில், வேறு அரசனைப் பாஞ்

சால தேசத்தில் அரசனாக வைத்துவிட்டுப் பாஞ்சால ராஜனைக் கட்டி நமது வீட்டுக்குக் கொண்டுவருவோம். சிகண்டியுடன் பாஞ்சால ராஜனைக் கொல்லுவோம்' என்று நிச்சயித்தார்கள். அப்பொழுது, அந்த அரசன், மறுபடியும், 'உன்னைக் கொல்லுவேன் ; உறுதியாயிரு' என்று பாஞ்சாலனுக்குச் சொல்லும்படி கட்டளையிட்டுத் தூதர்களை விரைவாக அனுப்பினான்.

ஜனங்களுக்குப் பதியும் இயற்கையில் பய்ந்தவனும் குற்ற முடையவனுமான அந்த த்ருபதராஜனோ, மிக்க பயத்தை அடைந் தான். அவன் தசார்ணனிடத்தில் தூதர்களை அனுப்பிவிட்டுச் சோகத்தால் மூர்ச்சை அடைந்து, மனைவியிடம் சென்று, தனி மையில் ஒரு வார்த்தை சொல்லலானான். மனத்தில் பெரிய பயத்துடன் கூடினவனும் சோகத்தால் அடிக்கப்பட்டவனுமான பாஞ்சாலராஜன், சிகண்டியின் தாயான தனது நாயகியை நோக்கி, 'ஸம்பந்தியும் மிகப் பெரிய பலத்தையுடையவனுமான ஹிரண்ய வர்மனென்கிற அரசன் கோபத்தால் சேனையைத் திரட்டிக்கொண்டு என்னை எதிர்க்கப் போகிறான். இந்தக் கன்னிகையின் விஷயத்தில் மூடத்தன்மையை அடைந்தவர்களான நாம் இப்பொழுது என்ன செய்வோம்? சிகண்டி என்கிற உன்னுடைய புத்திரன் கன்னிகை யென்று சங்கிக்கப்பட்டான். (ஹிரண்யவர்மன்) இவ்விதம் ஆலோ சித்து, முயற்சியுடன், மித்திரர்களோடும் சேனையோடும் வேலைக் காரர்களோடும், 'வஞ்சிக்கப்பட்டேன்' என்று எண்ணிக்கொண்டு என்னைக் கொல்லுவதற்கு விரும்புகிறான். கல்யாணி! இதில் உண்மை என்ன? பொய்யை ஏன் சொல்லுகிறாய்? நான் உன்னிடமிருந்து சுப மான வார்த்தையைக்கேட்டுத் தக்க ஏற்பாடு செய்வேன். நானோ ஜீவிப்பேனோஇல்லையோவென்கிறசந்தேகத்தை அடைந்துவிட்டேன். இந்தச் சிகண்டினியோ சிறுமி. சிறந்த வர்ணத்தை யுடையவளே! நீயும் பெரிய கஷ்டத்தை அடைந்துவிட்டாய். அப்படிப்பட்ட நீ எல்லாவற்றையும் நிவ்ருத்திப்பதன்பொருட்டு, கேட்கிறவனான என் னிடம் உண்மையைச்சொல். மங்களகரமான இடையையுடையவளே! சுத்தமான புன்சிரிப்புள்ளவளே! அவ்விதமாகக் காரியத்தைச் சீக் கிரம் செய்வேன். சிகண்டினி! நீயும் பயப்படாதே. சிறந்த இடையை யுடையவளே! அந்த விஷயத்தில் புத்திரதர்மத்தால் வஞ்சிக்கப்பட்ட வனான நான் தயையுடன் உண்மையான ஏற்பாட்டைச்செய்வேன். என்னால் தசார்ணதேசாதிபதியான அந்த அரசன் வஞ்சிக்கப்பட் டான். மஹா பாக்கியமுடையவளே! அதைச் சொல். அதற்குரிய

நன்மையைச் செய்வேன்' என்றான். அறிந்தவனான அரசன், பிற னுக்கு [1] வெளியிடுதற்காக வெளிப்படையாகக் கேட்க, அரசன் மனைவி அரசனை நோக்கிச் சொல்லலானாள்.

---

நூற்றுத் தொண்ணூற்றோராவது அத்யாயம்.

## அம்பேர்பாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(சிகண்டி, தன் பெற்றோருக்குண்டான வருத்தத்தை அறிந்து வனம்
சென்று ஸ்தூணாகர்ணன் என்னும் யக்ஷன் வீட்டு வாயிலில்
[2] பாடு கிடந்ததும், அவன் கேட்க, சிகண்டி தன்
னுடைய பெண்தன்மையைச் சொல்லி
ஆண்மையை விரும்பியதும்.)

அரசனே! புஜபலமிக்கவனே! பிறகு, சிகண்டியினுடைய தாயானவள் பர்த்தாவினிடம் சிகண்டினியென்கிற கன்னிகையைக் குறித்து உண்மையைச் சொல்லலானாள். 'அரசரே! புத்திரனில்லா தவளான நான் சக்களத்திகளிடமுண்டான பயத்தினாலே இவ்விதம் கன்னிகையாகப் பிறந்த சிகண்டினியைப் புருஷனென்று தெரிவித் தேன். ஓ! ராஜரே! நீரும் என்னுடைய அந்தவார்த்தையைப்பற்றி விருப்புடன் ஸந்தோஷித்தீர். ஓ! ராஜச்ரேஷ்டரே! கன்னிகைக் குப் புத்திரனுக்குரிய கர்மாவும் செய்யப்பட்டது. அரசரே! உம்மாலே தசார்ண தேசாதிபதியின் புத்திரியானவள் (சிகண்டிக்கு) மனைவியாக விவாஹம் செய்யப்பட்டாள். நானும் மஹாதேவருடைய வார்த்தையின் அர்த்தத்தை நம்பிச் சொன்னேன். 'கன்னிகை யாகப் பிறந்து மறுபடி புருஷனாகிவிடுவான்' என்று நினைத்து, இந்த ஸ்திரீத்தன்மை உபேக்ஷிக்கப்பட்டது' என்றாள்.

அரசனே! யஜ்ஞஸேனனென்கிற துருபதராஜன், இதைக் கேட்டு, எல்லா உண்மையையும் மந்திரிகளிடம் தெரிவித்து, பிரஜை களைக் காப்பதில் உசிதமான ஆலோசனையைச் செய்தான். அரசனே! அந்தத் தசார்ணதேசத்தரசனிடம் உள்ளபடியே வஞ்சனையைச் செய் திருந்தாலும் ஸம்பந்தத்தை உண்மையென்று தெரிவிப்பதென்றே

1 தனக்குத்தெரியாதென்றும், புத்திரனில்லாதவளான தன்னுடைய மனைவியின் வார்த்தையைக் கேட்டுத் தான் அவ்விதம் செய்ததென்றும் வெளியிடுவது. 2 ஒருகாரிய நிமித்தம் நியமத்துடன், ஆகாரமின்றிப் படுத்திருத்தல்; இது பிராயோபவேச மெனப்படும்.

ஆலோசித்து உறுதியாக நிச்சயம் செய்தான். பாரத! ராஜஸ்ரேஷ்டனே! இயற்கையாகவே காவல்செய்யப்பட்டதும் எங்கும் அலங்கரிக்கப்பட்டதுமானநகரத்தை, ஆபத்துக்காலத்தில் (செய்யவேண்டியபடி) எங்கும் காவல்செய்தான். பரதஸ்ரேஷ்டனே! தசார்ண தேசாதிபதியுடன் விரோதம் நேரிட்டபொழுது, அரசன் பத்தினியுடன் பெரிய வருத்தத்தையும் அடைந்தான். 'எப்படி எனக்கு ஸம்பந்தியுடன் பெரிய யுத்தமானது நேராமலிருக்கும்?' என்று ஆலோசித்து, அப்பொழுது, தேவதையை மனத்தால் பூஜித்தான். அரசனே! அப்பொழுது, மனைவியான ராஜஸ்திரீயானவள், தெய்வத்தையே கதியாகவுடையவனும் பூஜையைச்செய்கிறவனுமான அவனைப்பார்த்து உடனே ஒருவார்த்தையைச் சொல்லலானாள். 'நல்ல நிலைமையிலிருப்பவனாலேயே தேவர்களுக்கும் பெரியோர்களுக்கும் பூஜையானது ஸத்தியமாகச் செய்யத்தக்கது. துக்கக்கடலையடைந்தவன் செய்வதற்குக் கேட்கவும் வேண்டுமா? ஆகையால், நீர் குருக்களைப் பூஜியும். தசார்ணனைத் தடுப்பதினிமித்தம் எல்லாத் தேவதைகளும் பூஜிக்கப்படவேண்டும். அதிகமான தக்ஷிணையுடன் அக்னிகள் ஹோமம் செய்யப்படவேண்டும். ஓ! பிரபுவே! யுத்தமில்லாமலே நிவிருத்தியை மனத்தினால் ஆலோசியும். தேவதைகளின் அருளால் இவையெல்லாம் ஆகும். அரசரே! அகன்ற கண்களையுடையவரே! நீர் இந்தப்பட்டணம் அழியாமலிருப்பதற்காக மந்திரிகளோடு ஆலோசித்தபடியே செய்யும். அரசரே! தெய்வமோ மனிதமுயற்சியுடன்கூடி நன்கு பயனையளிக்கின்றது. இவைகளில் ஒன்றேடொன்று மாறுபட்டாலோ, பயன் உண்டாவதில்லை. அரசரே! ஆகையினால், மந்திரிகளுடன் பட்டணத்திற்கு வேண்டிய ஏற்பாட்டைச்செய்து, இஷ்டப்படி, தேவதைகளைப் பூஜை செய்யும்' என்றாள்.

இவ்விதம் சொல்லிக்கொண்டு சோகத்தில் அழுந்தினவர்களான அவர்களைப் பார்த்து, அப்பொழுது, எளிமையுற்றவளான சிகண்டினி யென்கிற அந்தக் கன்னிகையானவள், வெட்கத்தையடைந்து, 'இந்த இருவரும் என்னிமித்தம் துக்கத்தையடைந்தனர்' என்று ஆலோசித்து, பிறகு, பிராணனை விடுவதில் எண்ணம் கொண்டாள். அரசனே! இவ்விதம் அவள் நிச்சயம்செய்து மிக்க துக்கத்தில் அழுந்தினவளாகி, வீட்டைவிட்டு, செல்லமுடியாததும் ஜனங்களற்றதும் செழிப்புள்ளதும் ஸ்தூணாகர்ணனென்கிற யக்ஷனால் காக்கப்பட்டதுமான வனத்தைக் குறித்துப் புறப்பட்டாள். யக்ஷனிடமிருந்தும் பயத்தினாலே மனிதர்கள் அந்த வனத்தை விட்டிருந்த

னர். அவ்விடத்தில் சுண்ணும்பு மண்ணுல் பூசப்பட்டதும் விலாமிச்சையைத் தெரிவிக்கிற புகையால் நிறைந்ததும் உயர்ந்த கோட்டையையும் தோரணவாசல்களையுமுடையதுமான ஸ்தூணுகர்ணனுடைய மாளிகையானது இருக்கிறது. அரசனே! துருபதனுடைய பெண்ணுன அந்தச் சிகண்டினி அதில் புகுந்து பலநாள் ஆகாரம் செய்யாமல் சரீரத்தை வற்றச் செய்தாள். அவளுக்கு ஸ்தூணனென்கிற யக்ஷனுனவன் மென்மைத் தன்மையுடன் காட்சியளித்தான். 'எதற்காக நீ இந்த முயற்சி செய்கிருய்? அதைச் செய்வேன்; சொல்லு. தாமதம் வேண்டாம்' என்ருன்.

அவள், யக்ஷனை நோக்கி, 'அது உன்னுல் ஆகக் கூடியதில்லை' என்று அடிக்கடி சொன்னுள். பிறகு, யக்ஷனுனவன், 'சீக்கிரம் செய்வேன்' என்றும், 'ராஜபுத்திரி! குபேரனுக்கு வேலைக்காரனுன நான் வரத்தை அளிப்பவனுயிருக்கிறேன். கொடுக்கத்தகாததையும் கொடுப்பேன். உனக்கு வேண்டியதைச் சொல்' என்றும் மறுமொழி கூறினுன். பாரத! பிறகு, சிகண்டினி யக்ஷர்களில் சிறந்தவனுன அந்த ஸ்தூணுகர்ணனிடம் அவற்றையெல்லாம் முழுமையும் தெரிவிக்கலானுள். 'ஓ! யக்ஷ! என்னுடைய பிதாவானவர் ஆபத்தை அடைந்தவராகிச் சீக்கிரம் நாசத்தை அடையப்போகிருர். தசார்ண தேசத்தரசன், என்நிமித்தத்தில் கோபத்துடன்கூடி மிக்க ஊக்கமுடையவனும் பொற்கவசம் பூண்டவனுமாகி, அவரிடம் யுத்தம் செய்யப் போகிருன். ஓ! யக்ஷ! ஆகையால், என்னையும் என்னுடைய தாய் தந்தையர்களையும் காக்கக்கடவாய். உன்னுலே என்னுடைய துக்க நிவர்த்தியானது பிரதிஜ்ஞை செய்யப்பட்டதில்லையா? ஓ! யக்ஷா! உனதருளால், குற்றம் சொல்லப்படாத ஆண்மகனுகக் கடவேன். பெரிய யக்ஷனே! அந்த அரசன் என்னுடைய பட்டணத்தை அடைவதற்குள்ளேயே அருளைச் செய்' என்ருள்.

## நூற்றுத் தொண்ணூற்றிரண்டாவது அத்யாயம்.

## அம்போபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(ஸ்தூணன் சிகண்டியின் பெண்மையைப் பெற்றுத் தன் ஆண் தன்மையை அவளுக்குக் கொடுத்ததும், தசார்ண ராஜன் சிகண்டியின் ஆண்தன்மையை உபாயத்தால் அறிந்ததும், குபேரன் ஸ்தூணன் பெண்தன்மையை அடைந்ததை அறிந்து சிகண்டி மரிக்கும் வரையில் பெண்ணாகவே இருக்கும்படி ஸ்தூணனைச் சபித்ததும், சிகண்டி உடன்பாட்டின்படி ஸ்தூணனிடம் சென்றதும், அவனுக்குக் குபேரனால் சாபம்நேர்ந்தது தெரிந்து மகிழ்ச்சியுடன் திரும்பியதும், பீஷ்மர் சிகண்டியுடன் யுத்தம் செய்யாமைக்குக் காரணம் கூறியதும்.)

பரதஸ்ரேஷ்டனே! சிகண்டியின் வார்த்தையைக் கேட்ட பிறகு, அந்த யக்ஷன், தெய்வத்தால் கெடுக்கப்பட்டவனாகி, மனத்தினால் ஆலோசித்துச் சொல்லலானான். கௌரவ! என்னுடைய துக்கத்தின்பொருட்டு, அது அவ்விதம் நேரிடவேண்டுமென்றோ! யக்ஷன், 'கல்யாணி! உன்னிஷ்டத்தைச்" செய்வேன். என்னுடைய ஸங்கேதத்தை அறியக் கடவாய். எனது ஆண்மையை உனக்குக் கொடுப்பேன். உன்னுடைய பெண்மையைத் தரிப்பேன். ஆனால், கொஞ்ச காலத்துக்கே, உனக்கு எனது இந்த ஆண்தன்மையைக் கொடுப்பேன். ஸமயம் வந்தவுடன், நீ வரவேண்டும். என்னிடம் உண்மையையே சொல்லு. நான் பிரபுவும் நினைத்ததைச் செய்வதில் சித்திபெற்றவனும் இஷ்டப்படி நடப்பவனும் ஆகாயத்தில் ஸஞ்சரிப்பவனுமாயிருக்கிறேன். என்னுடைய அருளால் பட்டணத்தையும் பந்துக்களையுமே காப்பாற்று. ராஜபுத்திரியே! உன்னுடைய இந்தப் பெண்அடையாளங்களைத் தரிப்பேன். என்னிடம் உண்மையாக உறுதிகூறக்கடவாய். உன்னுடைய பிரியத்தைச்செய்வேன்' என்றான். சிகண்டியானவள், 'ஓ! பகவானே! நல்ல விரதமுடையவனே! உன்னுடைய ஆண்அடையாளங்களைத் திரும்பக் கொடுத்துவிடுவேன். ஓ! நிசாசரனே! சிறிதுகாலம் இடையில் ஸ்திரீத்தன்மையைப் பொறுக்கக்கடவாய். ஸ்வர்ண கவசம்பூண்ட தசார்ண ராஜன் திரும்பிப்போனதன்பிறகு, கன்னிகையாகவே ஆகிவிடுவேன். நீ புருஷனாக ஆகிவிடுவாய்' என்றாள். அரசனே! இவ்விதம் சொல்லிக் கொண்டு, அவ்விருவரும் ஒருவரையொருவர் துரோகம் செய்யாம

விருப்பதில் பிரதிஜ்ஞை செய்துகொண்டார்கள். பிறகு, அவர்கள் அடையாளங்களை மாற்றிக்கொண்டார்கள். பாரத! பின்னர், ஸ்தூணனென்கிற யக்ஷன் பெண்ணடையாளத்தைத் தரித்தான். சிகண்டி ஜ்வலிக்கிறதான அந்தயக்ஷரூபத்தை அடைந்தாள். அரசனே! பாஞ்சாலபுத்திரனான சிகண்டி ஆண் தன்மையை அடைந்து, பிறகு ஸந்தோஷத்துடன் பட்டணத்தில் நுழைந்து, பிதாவையும் அடைந்தான். அரசனே! அப்பொழுதே, ஏகாந்தத்தில், துருபதனிடத்திலும் மாதாவினிடத்திலும் யக்ஷனாலுண்டான அந்த அனுக்கிரக மெல்லாவற்றையும் நடந்தபடி சொன்னான். துருபதன், பத்னியுடன் அவனுடைய அந்த வரலாற்றைக்கேட்டு மிக்க மகிழ்ச்சியை அடைந்தான்; அப்பொழுது, மஹேஶ்வரருடைய அந்தச் சொல்லையும் நினைத்தான். பிறகு, அரசன், தசார்ணராஜனைக் குறித்து, 'என்னுடைய இந்தப்புத்திரன் புருஷன். நீ நம்பவேண்டும்' என்று தூதனை

பிறகு, தசார்ணராஜன் துக்கத்தோடும் சோகத்தோடும் கூடி அப்பொழுதே பாஞ்சாலராஜனான துருபதனைக்குறித்து விரைந்து சென்றான். பிறகு, தசார்ணாதிபதியானவன் காம்பில்ய தேசத்தையடைந்து வேதவித்துக்களில் சிறந்தவரும் வேதியருமான ஒரு தூதரைப் பூஜித்து, 'ஓ! தூதரே! அரசர்களில் இழிவான அந்தப் பாஞ்சாலராஜனை நோக்கி, என் வசனத்தால், 'துஷ்டபுத்தியுடையவனே! உன்னுடைய கன்னிகைக்காக என்கன்னிகையை வரித்தபடியால், இப்பொழுது அந்தக் கர்வத்திற்குரிய பயனைப் பார்ப்பாய்; ஸந்தேகம் இல்லை' என்று சொல்லும்' என்றனுப்பினான். ராஜஶ்ரேஷ்டனே! அந்தத் தசார்ணராஜனால் இவ்விதம் சொல்லியனுப்பப்பட்ட அந்தப் பிராம்மணரான தூதரும் பாஞ்சாலனுடைய நகரத்தைக் குறித்துப் புறப்பட்டார். பிறகு, புரோகிதர் பட்டணத்தில் துருபதனை அடைந்தார். ராஜஶ்ரேஷ்டனே! பாஞ்சாலராஜன் அந்தச் சிகண்டியுடன் கூடி அவருக்கு மிக்க மரியாதையுடன் கோவையும் அர்க்கியத்தையும் அளித்தான். அவர் அந்தப் பூஜையை ஏற்றுக் கொள்ளாமல், வீரனும் ஸ்வர்ணகவசம் பூண்டவனுமான அந்தத்தசார்ணராஜனால் சொல்லப்பட்ட இந்த வார்த்தையைச் சொல்லலானார்.

'துர்ப்புத்தியுடையவனே! இழிவான நடையுள்ளவனே! நீ பெண்ணினால் என்னை வஞ்சித்ததான பாவத்தைச் செய்ததன் பயனை அடையக்கடவாய். அரசனே! இப்பொழுது, போர்முனையில் எனக்கு யுத்தத்தைக்கொடு. உடனே, உன்னை நான் மந்திரிகளோடும் புத்திரர்க

ளோடும் உறவினர்களோடும் கொல்லுவேன்' என்று சொன்னான்' என்னும் நிந்தையுடன் கூடின அந்த வார்த்தையைத் துருபதராஜனுக்குக் கூறினர். பரதஸ்ரேஷ்டனே! தசார்ணபதியினால் புரோகிதர் மூலமாய் மந்திரிகளின் மத்தியில் சொல்லப்பட்டதைக்கேட்ட துருபதன், ஸ்நேகத்துடன் வணங்கி, 'ஓ! பிராம்மணரே! நீர் என்னை நோக்கி ஸம்பந்தியின் சொல்லாகச் சொன்ன வார்த்தைக்கு மேலான மறுமொழியை எனது தூதர் அவரிடம் சொல்லுவார்' என்று சொல்லிவிட்டு, பிறகு, அந்தத் துருபதனும் ஹிரண்யவர்மாவினிடம் மஹாத்மாவும் வேதத்தின் கரையையடைந்தவருமான ஒருபிராம்மணரைத் தூதராக அனுப்பினான். அரசனே! அப்பொழுது, அவரோ தசார்ணாதிபதியான அந்த அரசனையடைந்து துருபதனால் சொல்லப்பட்ட வார்த்தையை எடுத்தார். (என்னவென்றால்) 'பரீக்ஷையைச் செய்யலாம். என்னுடைய இந்தப் பிள்ளை ஸந்தேகமில்லாமல் ஆண் பிள்ளையே. ,, எவனாலேயோ இந்தப் பொய் சொல்லப்பட்டது. இது நம்பத்தக்கதில்லை' என்றான்' என்றார்.

பிறகு, அந்த அரசன், துருபதனுடைய அந்த வார்த்தையைக் கேட்டு, ஆலோசனைசெய்து, சிகண்டியைப் பெண்ணா ஆணா வென்று அறிவதற்காக, சிறந்தவர்களும் மிக்க அழகான ரூபமுடையவர்களும் தருண வயதுள்ளவர்களுமான மங்கையரை அனுப்பினான். கௌரவஸ்ரேஷ்டனே! அனுப்பப்பட்ட அவர்களும் சிகண்டியைத் திறமைவாய்ந்த ஆண்பிள்ளையென்று உண்மையான தன்மையை அறிந்து பிரீதியுடன் தசார்ணராஜனிடம் அதெல்லாவற்றையும் சொன்னார்கள். பிறகோ, அந்த அரசன் பரீக்ஷையைச்செய்து உடனே ப்ரீதியுடன் ஸம்பந்தியோடு சேர்ந்து ஸந்தோஷத்தையடைந்தவனாகி அரண்மனையில் வாஸத்தைச்செய்தான். அவன், சந்தோஷத்தை அடைந்தவனாகி, சிகண்டிக்கும் தனத்தையும் யானைகளையும் குதிரைகளையும் பசுக்களையும் பலநூறு வேலைக்காரிகளையும் கொடுத்தான்; பூஜிக்கப்பட்டவனாகி, புத்திரியை அதட்டிவிட்டுத் திரும்பியும் சென்றான். ஹேமவர்மனென்கிற தசார்ணராஜன் மனக்கலக்கம் நீக்கப்பட்டு மகிழ்ச்சியுடன் திரும்பிச்சென்றபிறகு, சிகண்டினியானவள் மிக்க மகிழ்ச்சியடைந்தாள்.

பிறகு, ஒரு ஸமயம், நரனை வாகனமாகவுடைய குபேரன், உலகத்தில் யாத்திரை செய்துகொண்டு, ஸ்தூணனுடைய வீட்டுக்கு வந்தான். அந்தக் குபேரன் அந்தவீட்டுக்கு மேலே (ஆகாயத்திலே) இருந்துகொண்டு பார்த்தான். பலவிதமான மாலைகளால் அலங்கரிக்கப்

பட்டதும், பொரிகளாலும் கந்தங்களாலும் மேற்கட்டிகளாலும் விளங்குவதும், தூபத்திரவியங்களால் தூபம் போடப்பட்டதும், கொடிகளாலும் கொடிச்சீலைகளாலும் அலங்கரிக்கப்பட்டதும், பக்ஷணம் அன்னம் பானம் மாம்ஸம் இவைகளால் சந்தோஷத்தை அளிப்பதுமான ஸ்தூணனென்கிற யக்ஷனுடைய வீட்டினுள் சென்றான். எங்கும் நன்கு அலங்கரிக்கப்பட்டதும் மணிமாலைகளாலும் ரத்தினமாலைகளாலும் பொன்மாலைகளாலும் நான்கு பக்கத்திலும் நிரப்பப்பட்டதும் பலவிதமான புஷ்பங்களுடைய கந்தங்களால் நிறைந்ததும் ஜலம்தெளித்துச் சுத்தம்செய்யப்பட்டு விளங்குகின்றதுமான அவனுடைய அந்த ஸ்தானத்தைப்பார்த்து, பிறகு, குபேரன், அப்பொழுதே உடன்வந்தவர்களான அந்த யக்ஷர்களை நோக்கி, 'அளவற்ற பராக்கிரமத்தை உடையவர்களே! ஸ்தூணனுடைய இந்த மாளிகையானது நன்றாக அலங்கரிக்கப்பட்டிருக்கிறது. இப்பொழுது மந்தபுத்தியுடையவனான அவன் ஏன் என்னிடம் வரவே இல்லை? மந்தபுத்தியுடையவனான அவன் தெரிந்திருந்தும் என்னிடம் வராதபடியால், அவனுக்குப் பெரிய சிக்ஷையைச் செய்யவேண்டுமென்பது என்னுடைய எண்ணம்' என்றான்.

யக்ஷர்கள், 'அரசரே! துருபதராஜனுக்குச் சிகண்டினியென்று ஒரு புத்திரி உண்டானாள். (ஸ்தூணன்,) அவளுக்கு ஒரு நிமித்தத்திற்காகப் புருஷலக்ஷணத்தைக் கொடுத்தான்; பெண்களுடைய லக்ஷணத்தைத் தான் அடைந்தான்; ஸ்திரீயாகி வீட்டினுள் இருக்கிறான். அதனால், பெண்போன்ற ரூபத்தையுடைய இவன் வெட்கமுள்ளவனாகி ஸமீபத்தில் வரவில்லை. அரசரே! இந்தக் காரணத்தால் ஸ்தூணன் இப்பொழுது உம்மிடம் வரவில்லை. இதைக் கேட்டு நியாயப்படி செய்யும். விமானம் இங்கேயே இருக்கட்டும்' என்றார்கள். பிறகு, யக்ஷராஜன், 'ஸ்தூணனை அழைத்து வாருங்கள்' என்று சொன்னான். பூபதியே! மஹாராஜ! பெண்பால்போன்ற ரூபத்தையுடைய அவன் அழைக்கப்பட்டுக் குபேரனிடம்வந்து லஜ்ஜையுடன் நின்றான். குருநந்தன! பிறகு, குபேரன் மிக்க சினம் கொண்டு, 'யக்ஷர்களே! இந்தப்பாவிக்கு இப்பொழுதுண்டான பெண்தன்மையானது இப்படியே இருக்கட்டும்' என்று அவனைச் சபித்தான். பிறகு, மஹாத்மாவான யக்ஷராஜன், 'கெட்ட புத்தியுடையவனே! கெட்ட செய்கையுடையவனே! மிக்க துஷ்டபுத்தி கொண்டவனே! நீ இவ்விடத்தில் யக்ஷர்களை அவமதித்துச் சிகண்டிக்கு (உன்னுடைய) லக்ஷணத்தைக் கொடுத்துப் பெண்ணின் லக்ஷணத்தையும் ஏற்றுக்கொண்டு, (முன்) ஏற்படாத இந்தக் காரியத்தைச் செய்தபடியால் இதுமுதல் நீ பெண்

ணாகவும் அவள் ஆணாகவுமே இருக்கக்கடவீர்கள்' என்றான். பிறகு, யக்ஷர்கள், 'ஸ்தூணன்விஷயத்தில் சாபத்தின் முடிவைச் செய்யும்' என்று இரக்கமுண்டாகும்படி அடிக்கடி குபேரனுக்குச் சொன்னார்கள். ஐயா! பிறகு, மஹாத்மாவான யக்ஷராஜன், சாபத்தின் முடிவைச் செய்யும் விருப்பத்தால், பின் செல்பவர்களான எல்லா யக்ஷகணங்களையும் நோக்கி, 'யக்ஷர்களே! சிகண்டியானவன் கொல்லப்பட்டபொழுது, இவன் தன் ரூபத்தை அடைவான். பெரிய மனத்தையுடைய ஸ்தூணனென்கிற யக்ஷனானவன் வருத்தமில்லாதவனாயிருக்கட்டும்' என்று சொன்னான். பகவானும் தேவனுமான யக்ஷராஜன், இவ்விதம் சொல்லிவிட்டு, நன்கு பூஜிக்கப்பட்டவனாகி, நிமிஷத்திற்குள் ஸஞ்சரிப்பவர்களான எல்லாருடனும்கூடிச் சென்றுவிட்டான். ஸ்தூணனோ சாபத்தையடைந்து அப்பொழுது அங்கேயே வஸித்தான். சிகண்டியானவன் ஸமயம் வந்தபொழுது வேகமாக அந்த நிசாசரனை வந்தடைந்தான். அவன் வந்து, 'பகவானே! வந்துவிட்டேன்' என்கிற வார்த்தையைச் சொன்னான். பிறகு, ஸ்தூணன் அவனை நோக்கி 'பிரீதியடைந்தவனாகிறேன்' என்று அடிக்கடி சொல்லிவிட்டு, ஒழுங்காக வந்தவனும் ராஜபுத்திரனுமான சிகண்டியைப் பார்த்து, அவனிடம் எல்லாவற்றையுமே நடந்தபடி சொன்னான். யக்ஷன், 'ராஜபுத்திர! நான் உன்னிமித்தம் குபேரனால் சபிக்கப்பட்டேன். இப்பொழுது இஷ்டப்படி செல். ஸுகமாக உலகங்களில் ஸஞ்சாரம் செய். இங்கேயிருந்து நீ போனதும் குபேரன் கண்டதுமான இது முன்வினையென்று நினைக்கிறேன். இது மீறத்தக்கதில்லை' என்றான். பாரத! ஸ்தூணனென்னும் யக்ஷனால் இவ்விதம் சொல்லப்பட்ட சிகண்டியோ, பெருமகிழ்ச்சியுடன், நகரத்தைக்குறித்துத் திரும்பினான்; பலவித வாசனைப் பொருள்களாலும் மாலைகளாலும் மிக்க பொருள்களாலும் பிராம்மணர்களையும் தேவதைகளையும் பூஜித்தான். புண்ய விருக்ஷங்களையும் நாற்சந்திகளையும் அலங்கரித்தான். பாஞ்சாலராஜனான துருபதன், கார்யத்தின் ஸித்தியையடைந்த சிகண்டியென்கிற புத்திரனோடும் பந்துக்களோடும் மேலான ஸந்தோஷத்தை அடைந்தான்; குருச்ரேஷ்ட! மஹாராஜனே! பிறகு, முன் பெண்ணும் பிறகு ஆணுமான சிகண்டியைத் துரோணரிடத்தில் சிஷ்யனாகக் கொடுத்தான். ராஜபுத்திரனான சிகண்டியும் துருபதபுத்திரனான திருஷ்டத்யும்னனும், உங்களுடன், கிரகித்தல் தரித்தல் பிரயோகித்தல் மீட்டல் என்னும் நான்கு பாதங்களோடு கூடின வில்வித்தையை அடைந்தார்கள். குழந்தாய்!

துருபதனுடைய பட்டணத்தில் என்னால் விடப்பட்டவர்களும் மூடர்கள், குருடர்கள், செவிடர்கள் ஆகிய இவர்களின் வேஷங்கொண்டவர்களுமான சாரர்கள் இதை எனக்கு நடந்தபடி தெரிவித்தார்கள். மஹாராஜனே! குருஶ்ரேஷ்ட! இவ்விதம் இந்தத் துருபத புத்திரன் பெண்ணுயிருந்து ஆணானவன். இந்தச் சிகண்டி ரதிகர்களில் சிறந்தவனானன். பரதஶ்ரேஷ்டனே! அம்பையென்று பிரஸித்திபெற்ற காசிராஜனுடைய ஜ்யேஷ்டபுத்திரியானவள் துருபதனுடைய குலத்தில் சிகண்டியாய்ப் பிறந்தாள். நான், யுத்தம்செய்ய விருப்பம் கொண்டு கையில் விற்பிடித்து வந்தவனான இவனை ஒரு நிமிஷமும் பார்க்கவும் மாட்டேன்; அடிக்கவும் மாட்டேன். கௌரவநந்தன! நான் பெண்ணினிடத்திலும் முன் பெண்ணாயிருந்தவனிடத்திலும் பெண்பால் பெயரையுடையவனிடத்திலும் பெண்ணுக்கு நிகராயிருப்பவனிடத்திலும் பாணத்தை விடேனென்பது எப்பொழுதும் என்னுடைய விரதம். இது உலகிலும் பிரசித்தமானது. நான் இந்தக்காரணத்தினால் சிகண்டியை அடியேன். அப்பா! சிகண்டியினுடைய உண்மையான இந்தப் பிறப்பை நான் அறிவேன். ஆகையால், யுத்தங்களில் ஆயுதமெடுத்தானாயினும் இவனை நான் அடியேன். பீஷ்மன் ஸ்திரீயை அடிப்பானேயானால், ஸத்துக்கள் தூஷிப்பார்கள். ஆகையால், யுத்தத்தில் நிற்பதைப்பார்த்தாலும் இவனை நான் அடியேன்' என்றார். குருவம்சத்தில் பிறந்த அந்தத் துர்யோதனராஜன், இதைக்கேட்டு, அப்பொழுது ஒரு முகூர்த்தம்போல ஆலோசித்து, பீஷ்மரிடத்தில் (அதை) உசிதமாக நினைத்தான்.

### நூற்றுத் தொண்ணூற்றுமூன்றுவது அத்யாயம்.

## அம்போபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

**(துர்யோதனன் பீஷ்மர்முதலானவர்களைப் பார்த்துப் பகைவர் படையை எவ்வளவு காலத்தில் அழிப்பீர்களென்று கேட்டதும், அவர்கள் தனித்தனி விடைகூறியதும்.)**

இரவு விடிந்தவுடன், உம்முடைய புத்திரனானவன் எல்லாச் சேனையின் மத்தியிலும் பிதாமஹரை (ப்பார்த்து) மறுபடியும் வினவலானான். துர்யோதனன், 'ஓ! கங்காபுத்திரரே! மிக்க காந்தியுடையவரே! இதோ கிளம்பியிருக்கிறதும், மிகவும் அதிகமான யானை

குதிரை காலாள்களையுடையதும், பெரிய ரதங்களால் நிறைந்ததும், பெரிய வில்லையுடையவர்களும் மிக்க பலசாலிகளும் லோகபாலர்களுக்குச் சமமானவர்களும் திருஷ்டத்யும்னனை முன்னிட்டவர்களுமான பீமன் அர்ஜுனன் முதலியவர்களால் காக்கப்பட்டதும், வெல்ல முடியாததும், தடுக்கமுடியாததும், பொங்கும் கடல்போன்றதும், தேவர்களாலும் கலக்கமுடியாததுமான பாண்டவர்களுடைய இந்தச் சேனையாகிற கடலைப் பெரிதான யுத்தத்தில் எவ்வளவுகாலத்தில் நாசம் செய்வீர்? பெரியவில்லையுடைய ஆசார்யரோ, பலத்தையுடைய கிருபரோ, யுத்தத்தைக் கொண்டாடுகின்ற கர்ணனோ, பிராம்மணஶ்ரேஷ்டரான அஶ்வத்தாமாவோ எவ்வளவுகாலத்தில் கொல்லுவார்கள்? நீங்களெல்லாரும் என்னுடைய சேனையில் திவ்யாஸ்திரங்களை அறிந்தவர்களல்லரோ? இதனை நான் அறிய விரும்புகிறேன். ஓ! கைவன்மை அமைந்தவரே! என்னுடைய மனத்தில் எந்நாளும் பெரிய ஆவலிருப்பதால் இதனை எனக்குச் சொல்லக்கடவீர்' என்றான்.

பீஷ்மர், 'குருஶ்ரேஷ்டா! அரசனே! அந்தப் பகைவர்களுடைய பலாபலத்தை வினவுவது உனக்குத் தகுதியானதே. அரசனே! பெரிய தோள்களையுடையவனே! எனக்கு யுத்தத்தில் ஆயுதங்களுடைய வீர்யத்திலும் புஜபலத்திலும் ஏற்படக்கூடிய பெரிய சக்தியைக் கேள். மாயாவியானவன் மாயா யுத்தத்தினாலும் மற்றவர்கள் நேரான யுத்தத்தினாலும் யுத்தம் செய்யப்பட வேண்டுமென்பது தர்மத்திலுள்ள நிச்சயம். மிக்க பாக்கியமுடையவனே! பெரிய பராக்கிரமத்தையுடையவனே! பதினாயிரம் காலாட்களையும் ஆயிரம் தேராளிகளையும் ஒருபாகமாகச்செய்து (இவ்விதம்) பாண்டவர்களுடைய சேனையை நாள்தோறும் எனக்குச் சொந்தமான பங்குகளாகச்செய்து கொல்லுவேன். இது என்னுடைய பாகமாகக் கருதப்பட்டது. பாரத! நான் இந்த ஏற்பாட்டுடன் ஸன்னாஹம்செய்துகொண்டு எப்பொழுதும் கிளம்பி இந்தப்படி ஏற்பட்டகாலத்தில் பெரியபடையை நாசம்செய்வேன். பாரத! அல்லது, யுத்தத்தில் நின்றுகொண்டு லக்ஷம்பேர்களைக் கொல்லுகின்ற மஹாஸ்திரங்களை விடுவேனானால் ஒரு மாதத்தில் கொல்லுவேன்' என்றார். ஓ! ராஜஶ்ரேஷ்டரே! துர்யோதனராஜன் பீஷ்மருடைய அந்தவார்த்தையைக் கேட்டு, பிறகு, அங்கிரஸின் வம்சத்திலுண்டானவர்களில் சிறந்தவரான துரோணரை நோக்கி, 'ஓ! ஆசார்யரே! நீர் பாண்டுபுத்திரனுடைய சேனைகளை எவ்வளவு காலத்தில் கொல்லுவீர்?' என்று

கேட்டான். துரோணர், அவனைநோக்கிச் சிரித்துக்கொண்டு, 'ஓ! தோள்வலியமைந்தவனே! கிழவனாயிருக்கிறேன். சக்தியும் முயற்சியும் எனக்குக் குறைந்துவிட்டன. அம்புகளாகிற தீயினாலே பாண்டவர்களுடைய சேனைகளைச் சந்தனுவின் புத்திரரான பீஷ்மர்போல் ஒருமாதத்தில் எரிப்பேன் என்பது என் எண்ணம்; இதுதான் என் சக்தியின் அளவு. இதுதான் வலிமையின் அளவு' என்று மறுமொழி கூறினார். சரத்வானுடைய புத்திரரான கிருபரோ, 'இரண்டுமாதங்களில் (கொல்வேன்)' என்று சொன்னார். அஸ்வத்தாமாவோ, பத்துத் தினத்தில் (பாண்டவர்) சேனையை நாசம்செய்வதாகப் பிரதிஜ்ஞை செய்தார். மஹாஸ்திரங்களையறிந்தவனான கர்ணனோ, ஐந்து தினத்தில் சேனையைக் கொல்லுவதாகப் பிரதிஜ்ஞை செய்தான். கங்காபுத்திரர், ஸூதபுத்திரனுடைய அந்த வார்த்தையைக்கேட்டுச் சப்தத்துடன் சிரித்தார்; இந்தவார்த்தையையும் சொல்லலானார். 'ராதையின் புத்திர! யுத்தநிமித்தமாக அம்புகளையும் சங்கத்தையும் வில்லையும் தரித்துக்கொண்டு வாஸுதேவருடன் தேரிலேறிவருகின்ற தனஞ்சயனை யுத்தத்தில் நீ அடையாத வரையில், இவ்விதம் நினைப்பாய். உன்னாலே இவ்விதமும் இதற்குமேலும் இஷ்டப்படி சொல்லுவதற்கு முடியும்' என்றார்' என்று சொன்னான்.

---

நூற்றுத்தொண்ணூற்றுநான்காவது அத்யாயம்.

## அம்போபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரர், பீஷ்மர் முதலியோர் தத்தம்சக்தியை வெளியிட்டதைத் தூதர்மூலம் தெரிந்துகொண்டு அர்ஜுனன் சக்தியைக் கேட்டதும், அவன் தன்சக்தியைக் கூறியதும்,)

ஓ! பாரதஸ்ரேஷ்டரே! இதைக்கேட்டுக் குந்திபுத்திரரோ, தம்பிமார்களெல்லாரையும் இரகசியத்திலழைத்து இந்தவார்த்தையைச் சொல்லலானார். அவர், 'துர்யோதனனுடைய படைகளிலனுப்பப்பட்ட என்னுடைய ஒற்றர்களான மனிதர்கள் எனக்கு விடியற்காலத்தில் இந்த வார்த்தையைச் சொன்னார்கள். (என்னவென்றால்) துர்யோதனன் பெரிய விரதத்தையுடைய காங்கேயரைநோக்கி, 'ஓ! பிரபுவே! எவ்வளவுகாலத்தில் பாண்டவர்களுடைய சேனையைக் கொல்லுவீர்?' என்று கேட்டானும், அவர், மிக்க கெடுமதியையுடைய

வனை அவனைநோக்கி, 'ஒருமாதத்தில்' என்று சொன்னாராம். துரோணரும், 'அவ்வளவு காலத்திலேயே' என்று பிரதிஜ்ஞை செய்தாராம். கிருபர் (அதில்) இரண்டு மடங்குகாலத்தைச் சொன்னாரென்று நமக்குக்கேள்வி. மஹாஸ்திரங்களை அறிந்தவரான அஸ்வத்தாமாவோ பத்துத்தினத்தில் கொல்லுவதாகப் பிரதிஜ்ஞைசெய்தாராம். அப்படியே, திவ்யாஸ்திரங்களை அறிந்தவனான கர்ணன், கௌரவர்களுடைய ஸபையில் கேட்கப்பட்டபோது, ஐந்து தினங்களில் படைகளுடன் கொல்லுவதற்குப் பிரதிஜ்ஞைசெய்தானாம். ஆகையால், அர்ஜுன! பல்குனநக்ஷத்திரத்தில் பிறந்தவனே! நானும், 'நீ எவ்வளவுகாலத்தில் பகைவர்களை நாசம்செய்வாய்?' என்று உன்னுடையசொல்லைக் கேட்க விரும்புகிறேன்' என்றார்.

அரசரால் இவ்விதம் சொல்லப்பட்ட குடாகேசனான தனஞ்சயன், வாஸுதேவரைப்பார்த்து, இந்தச்சொல்லை மறுமொழியாகக் கூறலானான். 'ஓ! மஹாராஜரே! மகாத்மாக்களும் அஸ்திரங்களைப்பயின்றவர்களும் பலவிதமாக யுத்தம்செய்பவர்களுமான இவர்களெல்லாரும் கொல்லவேசெய்வார்கள்; ஸந்தேகமில்லை. உம்முடைய மனத்தின்தாபமானது போகட்டும். நான் ஸத்தியம்தவறுமல் சொல்லுகிறேன். நான் வாஸுதேவரை ஸஹாயமாகக்கொண்டு ஓரேரதத்துடனே தேவர்களோடுகூடிய மூவுலகங்களையும் எல்லாச் சராசரங்களையும் சென்றதையும் இருக்கிறதையும் இனி உண்டாவதையும் ஒரு நிமிஷத்திலே கொல்லுவேனென்பது என் எண்ணம். இந்த ஹரியானவர் எப்படி விரும்புகிறாரோ அப்படியே ஆகும்; வேறுவிதம் ஆகாது. பசுபதியானவர் கிராதவேஷங்கொண்டு துவந்துவயுத்தத்தில்எனக்கு அளித்ததும் கோரமும் பெரிதுமான பாசுபதாஸ்திரம் இதோ என்னிடமிருக்கிறது. ஓ! புருஷஶ்ரேஷ்டரே! பசுபதியானவர் யுகத்தின்முடிவில் எல்லாப்பிராணிகளையும் ஸம்ஹாரம்செய்கிறவராகிப் பிரயோகம்செய்கிறஅஸ்திரமானது இதோ என்னிடமிருக்கிறது; ஓ! அரசரே! அதனைப் பீஷ்மரும் அறியார்; துரோணரும் அறியார்; கிருபரும் அறியார்; அஶ்வத்தாமாவும் அறியார்; கர்ணன் எப்படி அறிவான்? யுத்தத்தில் திவ்யாஸ்திரங்களாலே ஸாமான்யமான மனிதர்களைக் கொல்லுவது உசிதமில்லை. நாம் கபடமில்லாத யுத்தத்தினாலேயே பகைவர்களை வெல்லுவோம். ஓ! அரசரே! அப்படியே, புருஷஶ்ரேஷ்டர்களான இவர்களும் உமக்கு ஸஹாயமாயிருக்கின்றார்கள். எல்லாரும் திவ்யமான அஸ்திரங்களில் பண்டிதர்களும் எல்லாரும் யுத்தத்தில் விருப்பமுள்ளவர்களும் எல்

லாரும் (தனுர்) [1] வேதத்தின் முடிவில் அவபிருதஸ்நானம் செய்தவர்களுமானவர்கள். ஓ! பாண்டவரே! ஒருவராலும் வெல்லப்படாதவர்களும், சிகண்டி, யுயுதானன், துருபதபுத்திரனான திருஷ்டத்யும்னன், பீமஸேனன், நகுல ஸஹதேவர்களிருவர், யுதாமன்யு, உத்தமௌஜஸ், யுத்தத்தில் பீஷ்மருக்கும் துரோணருக்கும் சமமான விராடதுருபதர்கள், மஹாபாகுவான சங்கன், மஹாபலசாலியான கடோத்கசன், இவனுக்குப் புத்திரனும் மிக்கபலமும் பராக்கிரமமுமுடையவனுமான அஞ்சனபர்வா, சிறந்த கைகளையுடையவனும் நண்பனும் யுத்தத்தில் ஸமர்த்தனுமான ஸாத்தியகி, பலசாலியான அபிமன்யு, திரௌபதியின் ஐந்துபுத்திரர்கள் ஆகிய இவர்கள் யுத்தத்தில் தேவர்களுடைய சேனையையும் கொல்லுவார்கள். நீரும் மூவுலகத்தையும் நாசம்செய்வதிலும் திறமையுள்ளவர். ஓ! இந்திரனுக்கு நிகரான பராக்கிரமத்தையுடையவரே! கௌரவரே! அப்படியே நீர் கோபத்தால் எந்த மனிதனைப் பார்ப்பீரோ அவன் சீக்கிரம் இல்லாமல்போய்விடுவானென்பது நிச்சயமென்று நான் உம்மை அறிகிறேன்' என்றான்.

## நூற்றுத் தொண்ணூற்றைந்தாவது அத்யாயம்.

# அம்போபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

---

**(துரியோதனன் தன்சேனையை மூன்றாகப்பிரித்து அனுப்பியதும், எல்லாரும் தம்தம் படைவீடுசேன்றதும்.)**

பிறகு, தெளிவாகவிடிந்தவுடன், அரசர்கள், திருதராஷ்டிரனின் புத்திரனான துர்யோதனனால் ஏவப்பட்டவர்களாகிப் பாண்டவர்களைக்குறித்துப் புறப்பட்டார்கள். எல்லோரும் ஸ்நானம் செய்து சுத்தர்களும் மலர்மாலைகளை அணிந்தவர்களும் வெள்ளைவஸ்திரம் உடுத்தவர்களும் ஆயுதங்களை ஏந்தியவர்களும் கொடியுடையவர்க

---

[1] 'வேதாந்தாவப்ருதஸ்நாதா:' என்பது மூலம். 'வேதாத்யயனம் செய்து முடித்தபிறகு, விவாகம் செய்துகொண்டு, யாகம்செய்தவர்கள்' என்பது பழையவுரை. விவாகமில்லாதவன் யாகம் செய்யலாகாமையின் விவாகம் செய்துகொண்டு என்பது வருவிக்கப்பட்டது. இதனால், 'எல்லாரும்இம்மையில் அடைவனவற்றை அடைந்துவிட்டமையால் மரணத்துக்கு அஞ்சமாட்டார்கள்' என்பது குறிப்பு.

ளும் ஸ்வஸ்திவாசனம் செய்வித்து அக்னிகளில் ஹோமம் செய்தவர் களும் எல்லாரும் ப்ரம்மத்தை அறிந்தவர்களும் சூரர்களும் எல்லா ரும் விரதங்களை நன்கு அனுஷ்டித்தவர்களும் எல்லாரும் பிறர்விரும் பியவற்றைச் செய்கிறவர்களும் எல்லாரும் போருக்குரியலக்ஷணங்கள் பொருந்தியவர்களும் யுத்தங்களில் [1] பகைவரைக் கொல்லவிரும்பு கிறவர்களும் மிக்க பலசாலிகளுமான அவந்தி தேசத்தரசர்களான விந்தானுவிந்தர்கள், கேகயர்கள், பாஹ்லிகர்கள், அஸ்வத்தாமா, பீஷ்மர், ஸிந்துதேசாதிபதியான ஜயத்ரதன் ஆகிய இந்த எல்லாரும் துரோணரை முன்னிட்டுக்கொண்டு ஒருவரிடத்தில் ஒருவர் நம்பிக்கை வைத்தவர்களும் மனத்தை ஒரே காரியத்தில் செலுத்தினவர்களு மாகிப் புறப்பட்டார்கள். தக்ஷிணதேசத்தரசர்கள், மேல்திசை அரசர் கள், மலைநாட்டரசர்கள், காந்தாரராஜனான சகுனி, கிழக்கிலும் வடக்கி லுமுள்ள எல்லா அரசர்கள், சகர்கள், கிராதர்கள், யவனர்கள், சிபிகள், வஸாதிகள் ஆகிய இந்த மஹாரதர்களெல்லாரும் தங்கள் தங்கள் சேனை களுடன் மஹாரதனான (தலைவனைச்) சூழ்ந்துகொண்டு இரண்டாவது சேனையில் புறப்பட்டார்கள். பிறகு, சேனையுடன் கூடின கிருதவர்மா, மஹாரதனான திரிகர்த்தன், பிராதாக்களால் சூழப்பட்ட அரசனான துரியோதனன், சலன், பூரிஸ்ரவஸ், சல்யன், கோஸல தேசாதிபதி யான பிருஹத்ரதன் ஆகிய இவர்கள் சென்றார்கள். இவர்கள், திருத ராஷ்டிர புத்ரர்களை முன்னிட்டவர்களாகிப் பின்னே தொடர்ந்து சென்றனர். மிக்கப்லசாலிகளான அந்தத் திருதராஷ்டிர புத்திரர்கள் நியாயப்படிசேர்ந்து குருக்ஷேத்திரத்தின் மேற்பாதியில் கவசம் பூண்டு நின்றார்கள். ஓ! பாரதரே! துர்யோதனனோ நன்கு அலங் கரிக்கப்பட்ட இரண்டாவது ஹஸ்தினபுரம்போலப் பாசறையைச் செய்வித்தான். ஓ! ராஜஸ்ரேஷ்டரே! ஸமர்த்தர்களான நகரவாசி களும், பட்டணத்திற்கும் பாசறைக்கும் வித்தியாஸத்தை அறிய வில்லை. குருகுலத்தவனான துரியோதனன் மற்ற அரசர்களுக்கும் அவ்விதமாகவே இருக்கின்ற படைவீடுகளை நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் செய்வித்தான். அரசரே! சேனைகள் தங்கு வதற்காக அந்தக் கூடாரங்கள் யுத்தகளத்தில் முழுதும் ஐந்து யோஜனை அளவுள்ள இடத்தில் அமைக்கப்பட்டன. அப்பொழுது, அவ்விடத்தில் அந்த அரசர்கள், உத்ஸாஹத்திற்கும் சேனைக்கும் தக்கபடி, திரவ்யங்களுடன் கூடினவைகளும் ஆயிரக்கணக்காயுள்ள

---

1 'பராங் லோகாங்' என்பது மூலம்; 'மேலான உலகங்களை அடைய விருப்பங்கொண்டு' என்றும் கொள்ளலாம்.

வைகளுமான பாசறைகளில் புகுந்தார்கள். துர்யோதன ராஜன், சேனைகளோடு கூடினவர்களும் மஹாத்மாக்களும் அதில் சேராத யானைகுதிரைகாலாட்களுடன் கூடினவர்களுமான அரசர்களுக்கும் அவர்களைச் சேர்ந்த மற்றவர்களுக்கும் சிறந்தவையான [1] பக்ஷ்யத்தை யும் போஜ்யத்தையும் அளிக்கும்படி கட்டளையிட்டான். கௌரவ ராஜன், சில்பத்தால் பிழைப்பவர்களும், அங்கே கூடவந்த ஸூதர்க ளும் மாகதர்களும் வந்திகளும் வியாபாரிகளும் கணிகையர்களும் சாரர்களும் பார்க்கவந்த ஜனங்களுமாகிய எல்லாரையும் விதிப்படி [2] உபச

## நூற்றுத் தொண்ணூற்றாறுவது அத்யாயம்.

## அம்போபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரர் தம் சேனையை மூன்றாகப் பிரித்து அனுப்பியது.)

ஓ! பாரதரே! அப்படியே, குந்தீபுத்திரரும் தர்மபுத்திரரும் அரசருமான யுதிஷ்டிரர், திருஷ்டத்யும்னன்முதலான வீரர்களை ஏவி னார். பிறகு, சேதி காசி கரூசதேசங்களுக்கு நாயகனும் மிக்க பராக்கிரமத்தையுடையவனும் சேனைகளுக்குப்பதியும் பகைவரைக் கொல்பவனுமான திருஷ்டகேதுவையும், விராடனையும், துருபதனை யும், யுயுதானனையும், சிகண்டியையும், பாஞ்சாலனுடைய புத்திரர் களும் பெரிய வில்லுடையவர்களுமான யுதாமன்யு உத்தமௌஜஸ் என்பவர்களையும் கட்டளையிட்டார். பலநிறமான கவசங்களையுடைய வர்களும் புடம்வைத்த பொன்மயமான குண்டலங்களைத் தரிப்பவர் களும் பெரிய வில்லையுடையவர்களுமான அந்தச் சூரர்கள், நெய் சொரியப்பட்டு வேதிகளில் ஜ்வலிக்கின்ற அக்னிகள்போலவும் நன்கு ஜ்வலிக்கின்ற (ஸூர்யன் முதலிய) கிரகங்கள் போலவும் விளங்கினார் கள். பிறகு, பூமிக்குப் பதியான அரசர், சேனையைத் தகுதிக்குத்தக்க படி பூஜித்துப் பிரயாணத்தின்பொருட்டு அவைகளை ஏவினார். யுதிஷ் டிரராஜர், மஹாத்மாக்களும் சேனைகளையுடையவர்களும் படைக்கு வெளிப்பட்ட ஜனங்களுடன் கூடினவர்களும் யானைகளுடனும் குதி ரைகளுடனும் காலாட்களுடனுங் கூடினவர்களுமான அவர்களுக்கும்

---

[1] ஸபாபர்வம் கூக-ம் பக்கம் குறிப்பிலும், சாந்திபர்வம் சுசஙு-ம் பக் கம் குறிப்பிலும் காண்க. [2] 'ப்ரத்யவைக்ஷத' என்பது மூலம்.

சில்பவேலையால் பிழைப்பவர்களுக்கும் மிகவும் சிறந்த பக்ஷ்யபோஜ்யங்களை அளித்தார். பாண்டுநந்தனர், அபிமன்யுவும் பிருஹந்தனும் திரௌபதியினுடைய எல்லாப் புத்திரர்களுமான இவர்களைத் திருஷ்டத்யும்னனை முதன்மையாக வைத்து அனுப்பினார். யுதிஷ்டிரர், பீமனையும் யுயுதானனையும் பாண்டவனான தனஞ்சயனையும் படையின் இரண்டாவது வகுப்பாக அனுப்பினார். அப்பொழுது, போர்க்கருவிகளை ஏற்றுகின்றவர்களும் ஸஞ்சரிக்கின்றவர்களும் ஓடுகின்றவர்களும் ஸந்தோஷத்தை அடைந்தவர்களுமான போர்வீரர்களுடைய சப்தமானது ஸ்வர்க்கத்தைத் தொட்டதுபோல இருந்தது. பிறகு, அரசர் தாமுமே, விராடனாலும் துருபதனாலும் பின்தொடரப்பட்டவராகி மற்ற அரசர்களுடன் புறப்பட்டார். பயங்கரமான விற்பிடித்த வீரர்களையுடையதும் நீண்டதும் திருஷ்டத்யும்னனால் காக்கப்பட்டதுமான சேனையானது, நிரம்பியதும் அமர்ந்து செல்வதுமான கங்கைபோலக் காணப்பட்டது. பிறகு, புத்திமானான அரசர், திருதராஷ்டிரரின்புத்திரர்களுடைய புத்தியின் நிச்சயத்தை மயங்கச் செய்கிறவராகி அந்தச் சேனைகளை மறுபடியும் ஏவினார்

பாண்டவரானவர், பெரிய விற்களையுடைய திரௌபதியின் புத்திரர்களையும், அபிமன்யுவையும், நகுலனையும் ஸஹதேவனையும், எல்லாப் பிரபத்திரகர்களையும், பதினாயிரம்குதிரைகளும் இரண்டாயிரம்யானைகளும் பதினாயிரம்காலாட்களும் ஐந்நூறுதேர்களுமான வெல்லமுடியாத முதற்சேனையையும் பீமஸேனனுக்குக் கொடுத்தார். பாண்டவரானவர், விராடனையும் ஜயத்ஸேனனையும், மஹாரதர்களும் வீர்யவான்களும் மஹாத்மாக்களும் கதையையும் வில்லையும் தரிப்பவர்களும் பாஞ்சாலனுடைய புத்திரர்களுமான யுதாமன்யு உத்தமௌஜஸ் என்பவர்களையும், சேனையின் நடுவில் செல்லும்படி கட்டளையிட்டார். அப்பொழுது, (இந்தச் சேனையின்)நடுவில், கிருஷ்ணார்ஜுனர்கள் தொடர்ந்து சென்றார்கள். அரசர்களும், இந்திரனை முன்னிட்டுக் கொண்டு ஆகாயத்தையடைந்த எல்லாத் தேவர்களும், அவர்களைப் பார்த்து நஷ்டமென்றே நினைத்தார்கள். யுத்தங்களில் தேர்ந்த வீரர்கள், மிக்க சினம்கொண்டவர்களானார்கள். அவர்களில் சூரர்கள், இருபதினாயிரம் குதிரைகளிலும் ஐயாயிரம் யானைகளிலும் தேர்களுடைய கூட்டங்களிலும் எங்கும் ஏறினார்கள். சூரர்களான காலாட்கள் வில்லையும் கத்தியையும் கதையையும் தரிப்பவர்களாகி முன்னும் பின்னும் ஆயிரமாயிரமாகச் சென்றார்கள். யுதிஷ்டிரர் தாமே நேரிலிருந்த சேனையாகிய கடலிலும், பல அரசர்கள் மிகுதியாகச் சூழ்ந்திருந்தார்கள்.

ஓ! பாரதரே! அவ்விடத்தில், ஆயிரம் யானைகளும் பதினாயிரம் குதிரைகளும், அப்படியே, ஆயிரம் தேர்களும் பதினாயிரம் காலாட்களும் இருந்தனர்.

ஓ! ராஜஸ்ரேஷ்டரே! பெரிதான தமது படையுடன் சேகிதானனும் சேதிநாட்டவர்களுக்கு நாயகனான திருஷ்டகேதுவென்கிற அரசனும் சென்றார்கள். பெரிய வில்லையுடையவனும் விருஷ்ணிகளில் மிகச் சிறந்த தேராளியும் பலசாலியுமான ஸாத்யகியும் நூறாயிரம் தேர்களால் சூழப்பட்டவனாகிச் சேனையை நடத்திக்கொண்டு சென்றான். புருஷஸ்ரேஷ்டர்களான (கிருஷ்ணார்ஜுனர்கள்) [1] க்ஷத்திரதேவதைபோலவும் பிரம்மதேவதைபோலவும் பின்பக்கத்தைக் காக்கிறவர்களாகிப் பின்தொடர்ந்து சென்றார்கள். அந்தப் பின்பாகத்தில் வண்டிகளும் கடைகளும் வேசிகளின் கூட்டமும் யுத்தத்திற்குத் தகுதியான வாஹனமும் ஸாதாரணமான வாகனமும் ஆயிரம் யானைகளும் பதினாயிரம் குதிரைகளும் எங்கும் தொடர்ந்தன. யுதிஷ்டிரர், பாலர் முதலியவர்களையும் பெண்பிள்ளைகளையும் இளைத்தவர்களையும் பலமற்றவர்களையும் பொக்கசத்தையும் தானிய முதலியவற்றையும் யானைப்படையோடு சேர்த்துக்கொண்டு மெதுவாகச் சென்றார். தவறாத தைர்யத்தையுடையவனும் சண்டையில் கெட்ட மதத்தையுடையவனுமான ஸௌசித்தியும் ஸ்ரேணிமானும் காசிராஜனுடைய புத்திரனான வஸுதானனும், அவரைப் பின்தொடர்ந்தார்கள். இருபதினாயிரம் தேர்களும், அவைகளுக்குப் பின்செல்லுகிறவர்களும், பெரியவைகளும் சலங்கைகள் பூண்டவைகளுமான பத்துக்கோடி குதிரைகளும், கலப்பைக்கால்கள்போன்ற கொம்புகளுள்ளவைகளும் போர் புரியக்கூடியவைகளும் நல்ல குலத்திலுண்டானவைகளும் கன்னத்தில் மதப்பெருக்குள்ளவைகளும் மேகங்கள்போலச் செல்லுகின்றவைகளுமான இருபதினாயிரம் யானைகளும் பின்தொடர்ந்தன. பொழிகின்ற மேகங்கள்போல மதம்பெருக்கும் கன்னத்தையும் முகத்தையுமுடையவைகளும் யுத்தத்தில் யுதிஷ்டிரருக்குச் சேனையாயிருந்தவைகளுமான வேறு எழுபதினாயிரம் யானைகள், சலிக்கின்ற மலைகள்போல, அரசரைப் பின்தொடர்ந்தன.

எந்தச் சேனையையடுத்துத் திருதராஷ்டிர புத்திரனான துர்யோதனனோடு யுத்தம் செய்தாரோ, குந்தி புத்திரரான யுதிஷ்டிரருடைய பயங்கரமான அந்தச் சேனையானது இவ்விதம் இருந்தது. மற்றும்

1 'க்ஷத்ரஹா' என்பதும், 'க்ஷத்ரதேவன்' என்பதும் ஆங்கில மொழி பெயர்ப்பின் பாடம்.

நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் பதினாயிரக்கணக்காகவுமுள்ள வேறு வீரர்களும் ஆயிரக்கணக்கான அவர்களுடைய சேனைகளும் கர்ஜித்துக்கொண்டு பின்தொடர்ந்தனர். அச்சேனையில் மிக்க ஸந்தோஷத்தை அடைந்தவர்களாகி ஆயிரக்கணக்காகவும் பதினாயிரக் கணக்காகவுமுள்ள மனிதர்கள், மிக்க களிப்புடன், ஆயிரக்கணக்கான பேரிகைகளையும் பதினாயிரக்கணக்கான சங்கங்களையும் முழக்கினார்கள்.

அம்போபாக்யானபர்வம் முற்றிற்று.

உத்யோகபர்வம் முற்றிற்று.

